கழக வெளியீடு: ௯௪௩

# இராபின்சன் குருசோ

## (ROBINSON CRUSOE)

தமிழாக்கம் :

திரு. கு. பரமசிவம், எம். ஏ.

புலவர், திரு. சொ. முருகேச முதலியார்

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை.

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# பதிப்புரை

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்" என்று பாரதியார் கூறியபடி நமது தமிழ்நாடு சில ஆண்டுகளாக மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிட்டு வருகின்றது. அம் முறையில் "இராபின்சன் குரூசோ" என்ற நூலும் மொழி பெயர்ப்பு நூலாக இந்நாள் வெளி வருகின்றது.

ஆதியில் ஓர் ஆங்கிலப் புலவர் ஆகிய டேனியல் டுபோவால் எழுதப்பட்டு இஞ்ஞான்று தமிழ்நாட்டுப் புலவர் இருவர் மொழிபெயர்த்துத் தர எமது கழகப் பதிப்பாக உலவத் தொடங்குகிறது. இவ்வரலாற்று நூல் போலப் பெருநூல் யாண்டும் யாவரும் இதுகாறும் கண்டும் கேட்டும் இரார் என்பது இதனைப் படித்தவர்க்கே விளங்கும். ஆங்கில நாட்டிற் பிறந்த "இராபின்சன் குரூசோ என்பவன் தன் வாழ்வின் நிகழ்ந்த வியத்தகு செயல்களைக் குறித்து வைத்துப்பின் தொகுத்துத் தானே எழுதி வெளிப்படுத்தினனோ? அல்லது ஆங்கிலப் புலவர் ஒருவரிடந் தன் குறிப்பைக் கொடுத்து எழுதி வெளியிடுவித்தனனோ? ஆங்கிலப் புலவர் ஒருவர் பெயர் முதலிய எல்லாம் தாமே படைத்துக் கற்பனைக் கதையாக வெளியிட்டனரோ? என்று கருதத்தக்க நிலையிற் புதுமையாக வரலாறு அமைந்துள்ளது. எவ்வாறு கருதினும் இந்நூல் மக்கள் வாழ்க்கைக்கு நல்வழி காட்டும் என்பது ஒருதலை.

ஆங்கிலமும் செந்தமிழும் ஆராய்ந்து கற்ற நல்லறிஞரால் மொழி பெயர்க்கப்பட்டதால் செந்தமிழ் உரைநடை ஆற்றொழுக்குப் போலத் தெளிவாய்ச் செல்கின்றது. தெற்றென யாவர்க்கும் பொருள் புலப்படுமாறு எளிமையும் இனிமையும் வாய்ந்த சொற்களைக் கோத்திருப்பது படிப்பவர்க்கு உணர்ச்சியை யூட்டி உள்ளத்தை ஒருவழிச் செலுத்தும் கருவியாகும். பண்டைக்காலத்திற் கடலிற் சென்று கப்பல் வாணிகஞ்

செய்தோர் பட்ட துன்பங்கள், அவற்றை நீக்கிவரும் சூழ்ச்சி கள், உயிரைப் பேணுது உழைக்கும் மனவுறுதி, உழைப்பின் வந்த ஊதியத்தை உண்டு களிக்கும் இன்பம், இடுக்கண் மேன் மேல் வரினும் பொறுக்கும் ஆற்றல், ஊக்கம் தளராது வாழ்ந்து ஆக்கம் பேணி வாழ்தல், தம்மைச் சார்ந்தவர் துயரம் நீக்கிக் காத்தல் இவற்றை இந்நூலில் யாண்டும் காணலாம். இவ் வர லாற்றைப் படித்தவர் தமது வாழ்க்கையில் வரும் துன்பங்களைப் பொறுக்கும் ஆற்றல் உள்ளவராகவும், தமக்குக் கிடைத்த பொருளைப் போதும் என எண்ணிப் போற்றுவோராகவும், அஞ்சா நெஞ்சமும் மனவீரமும் உள்ளவராகவும் வாழ விரும்பு வர் எனக் கூறவும் வேண்டுமோ? துன்பம் வந்தபோதெல்லாம் இராபின்சன் கடவுளைப் போற்றி வாழ்த்துவதுபோல் இதனைப் படித்தவரும் கடவுளைப் பணிந்தே தம் வாழ்நாளைக் கழிப்பர் என்றும் துணியலாம். நகை, அவலம், இழிப்பு, வியப்பு, வெகுளி, அச்சம், வீரம் ஆகிய சுவை ஏழும் அவற்றிற்குரிய மெய்ப் பாடுகளும் இந்நூலிற் கண்டோர் வியக்குமாறு பலவிடங்களில் தோன்ற உரைநடை யமைந்திருப்பதை ஊன்றி நோக்குவார் உணர்வார். காமச்சுவை ஒன்றே இந்நூலிற் காண இடமில்லை. ஆயினும் இறுதியில் இராபின்சன் குரூசோ மணமுடித்து மக்கட் பேறும் பெற்ருன் என்பதால் வாழ்க்கைப் பயன் முற்றியதாக வும் அறிகின்ருேம்.

இந்நூல் இருபது அதிகாரங்களை யுடையது. ஐந்நூற்றுக்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்டது. படிக்கப்படிக்க மேலும் மேலும் படிக்க வேண்டும் என்னும் ஆர்வமூட்டும் இனிமை யுடையது. தனிமனிதன் கானகத்தில் தன்முயற்சியால் பல ஆண்டுகள் உணவு உடை நாடித் தேடி வாழ்ந்ததை யுணர்த்து வது. மனிதன் இவ்வாறு வாழமுடியுமா? அருமையான வாழ்க்கை இது என்று ஆய்ந்து நோக்குவார்க்கு அருமை பெருமை தோற்றுவிப்பது. மக்களாற் செய்தற்கரிய செயல் பல செய்து கானகத்தில் மழை பனி வெயில் இவற்றைப் பொறுத்து உயிர் வாழ்ந்த இயற்கையை உணர்த்துவது. தமிழ் நாட்டில் இது போன்ற சிறந்த நடையமைந்த வரலாற்று நூல் இதுவரை வெளிவந்ததே யின்று என்று துணிவாகக் கூறலாம்.

இவ் வரலாற்றைப் பற்றி இரண்டு நூல்கள் முன்னமே வெளிவந்துளவேனும் இஃது அமைப்பாலும் நடை முதலிய சிறப்புக்களாலும் அவற்றின் வேறுபட்ட புதுமை வாய்ந்த தொன்றாகும். இதனை இத்துணைச் சீர்பெற மொழிபெயர்த்துத் தந்த ஆசிரியர் மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் திரு. கு. பரமசிவம், எம். ஏ. அவர்கட்கும், சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியர் புலவர் திரு. சொ. முருகேச முதலியார் அவர்கட்கும் கழகத்தார் நன்றியுரித்தாகுக.

எமது கழகத்தின் அரும் பெருமுயற்சியால் இம்மொழி பெயர்ப்பு நூல் வெளிவருகின்றது, 'ஆண்மையும், வீரமும் அஞ்சாநெஞ்சமும், ஊக்கமும், உழைப்பும், தன்னம்பிக்கையும், உறுதியும், ஆற்றலும் ஒருங்கே பொருந்தி வாழ்க்கையைச் செவ்வனே நடத்திப்பயன் அடைவதற்கு இந்நூல் இழுக்கலுடையுழி ஊற்றுக்கோல் போல உறுதுணையாகி உதவும் என்பது கூறாமலே விளங்கும். எனவே அனைவரும் வாங்கிப்படித்து இன்புற்று வாழ்விற் பயன்பெறுமாறு வேண்டுகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

கள் - பிரேஜில் நாட்டுத் துறைமுகமும் கிடைத்த முதற்பொருளும்-நண்பர் பழக்கமும் பயிர்த் தொழில் முயற்சியும்-மாலுமி வழியாய்ப் பொருள் வருவித்தல்-மாலுமி வாங்கிக் கொண்டுவந்த பொருள்கள் - எனக்குச் செல்வம் எவ்வாறு பெருகியது ?-பேரவாக் கொள்ளுதல் – வணிகரோடு பழகுதல் - கடற்பயணத்துக்கு என்னை வணிகர் தூண்டுதல் – என் நிலைமையை நினைத்தல் - கினியாவிற்குச் சென்றுவர ஒத்துக்கொள்ளுதல் - அறிவின்மையை நினைத்து வருந்துதல் - கினியாவுக்குக் கப்பல் புறப்பட்டது - புயல் காற்றால் விளைந்த தீமை-கரையை அடைய முயலுதல் - கப்பல் கரையில் தட்டியதால் வந்த துன்பங்கள் - வள்ளத்தில் ஏறி உயிர் தப்ப முயலுதல் - வள்ளம் கடலில் மூழ்குதல் – கடலில் விழுந்து வருந்துதல் – கடல் அலையோடு போராடுதல் – கரையில் ஏறிய பின் உண்டான மகிழ்ச்சி - கரையேறிய பின் மனக்கலக்கம் - இரவில் மரத்தில் ஏறிப் படுத்து உறங்குதல்.

**நாலாம் அதிகாரம்** 80—116

கப்பல் கண்ணுக்குப் புலப்பட்டது - கப்பலுக்குச் செல்ல முயலுதல் – கப்பலின் உள்ளே சென்று காணுதல் – பொருள்களை எடுத்துச் செல்ல ஓடம் கட்டுதல்-ஓடத்தில் பொருள்களை ஏற்றுதல் - வெடி மருந்து முதலிய பொருள்களை ஓடத்தில் ஏற்றுதல் - தெப்பத்தைக் கரை சேர்க்க முயலுதல் - தெப்பத்தில் ஏற்றிய பொருளைக் கரையிற் சேர்த்தல் – வாழத்தக்க இடம் பார்த்துத் திரிதல் - பறவையைச் சுட்டும் பயனொன்றும் இல்லை-வாழ்க்கைக் கேற்ற சிறு குடில் அமைத்தல்-இரண்டாம் முறை கப்பலுக்குச் செல்லுதல் - மறுபடியும் தெப்பத்தில் பொருள் கொண்டு போதல் - கரையிற் சேர்ந்தபின் செய்த வேலைகள் - நாணயங்களைக் கண்டு நகைத்து இகழ்ந்தது – கடுங்காற்று அடித்ததால் கலக்கமடைதல் - வாழும் இடத்தை வகைப்படுத்தி அமைத்தல்-வெடி மருந்தைப் பக்குவம்

தது - அடுப்புச் செய்து ரொட்டி சுட்ட வகை - விளைந்த கூலத்தைப் பாதுகாத்து வைத்தல்-வேண்டிய அளவுக்கு மட்டும் நிலத்திற் பயிரிடுதல் - கண்ணுக்கு எட்டிய நாட்டை அடைய விரும்புதல் - அந்நாட்டில் உண்டாகும் தீமையை நினைத்து வருந்துதல் - பழைய ஓடத்தைப் போய்ப் பார்த்தல் - ஓடத்தைக் கடலில் தள்ள முயலுதல் - புதிய ஓடம் செய்ய முயலுதல் - புதிய ஓடத்தைக் கடலில் இறக்குவது எப்படி? புதிய ஓடம் செய்த முறையும் காலமும் - செய்த ஓடத் தைக் கண்டு மகிழ்ச்சியடைதல் - ஓடத்தை நீரில் றக்கச் செய்த வேலைகள் - நான்காவது ஆண்டு நிறைவுவிழா - பற்று அற்ற மனப்பான்மை - வேண் டும் பொருள்களும் வேண்டாப் பொருள்களும்-போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து - இன்பத்தை நினைத்து மகிழ்ச்சி கொள்க - தம்மைவிடத் துன்பப்படு வோரை நினைத்து மகிழ்க - தீயோருடைய இணக்கம் தீமைதரும் - நான் கடவுளுக்கு ஏன் நன்றி செலுத்த வில்லை?—கடவுள் நம்பிக்கை தோன்றி வளர்ந்தது - கடவுள் எனக்குச் செய்த உதவிகள்-இன்பமும் துன்ப மும் நிறைந்த வாழ்க்கை - வாழ்க்கைப் பொருள்கள் வர வரக் குறைந்தன - துன்பங்களெல்லாம் குறிப் பிட்ட நாளில் நடைபெற்றன - சிக்கன வாழ்க்கை - உடைகள் தைத்தல் - தோலினால் உடைகள் தைத்தல் -தோலினால் குடையும் செய்தேன் - தனியே இருப் பதில் மகிழ்ச்சி - இரண்டாம் தடவை சிறிய ஓடம் செய்தேன்.



ஓடத்தில் ஏறித் தீவைச் சுற்றிவருதல் - தீவைச் சுற்றிவரும்போது நேர்ந்த இடையூறுகள் - ஓடம் நெடுங்கடலின் இடையில் அகப்பட்டது - கரையை நினைத்து மனம் கலங்கினேன் - நீர்ச்சுழி என் ஓடத் தைச் செலுத்த உதவி செய்தது - கரையில் இறங்கிச் செய்த வேலைகள் - நாட்டு மாளிகையை அடைந்தேன். கிளி என்னை வரவேற்றது - கடற்பயணம் செய்வதில்

தல் - கொடிய வேடருக்கு அஞ்சி மறைந்து வாழ்தல்- அச்சம் குறைந்தது - இருக்கும் நிலையே உயர்வு என்று எண்ணுதல் - சாராயம் இறக்க எண்ணுதல்-வேடரை வெல்லக் கருதுதல் - துப்பாக்கி வெடியினால் வேடரைக் கொல்ல நினைத்தல் - வேடர் செய்யும் கொலையைப்பற்றி ஆராய்தல் - வேடர்கள் குற்றவாளிகள் அல்லர் - வேடரைக் கொல்ல முயல்வதால் எனக்கே தீமை உண்டாகும் - நான் செய்யத்தக்கது யாது? எனக்கு நல்லறிவு பிறந்தது-ஓடத்தைப் பாதுகாத்தல்- அச்சத்தால் அடங்கியிருத்தல் - மறைமுகமான அறிவு உள்ளத்தில் தோன்றுதல் - கரி தேவைப்பட்ட காரணம் - முழைக்குழியில் இரண்டு கண்கள் தெரிந்தன - உயிர் நீங்கும் ஒருவனுடைய பெருமூச்சுக் கேட்டது - ஆட்டுக்கடா படுத்துக்கிடந்தது - ஒளி வீசும் மலை முழை - புதிய முழைக்குள் பொருள்களைச் சேர்த்தல்.

**பதின்மூன்றும் அதிகாரம்** 303—325

இருபத்து மூன்றுவது ஆண்டின் நிலைமை-ஒன்றை நினைக்கின் அஃது ஒழிந்திட்டு ஒன்றாகும்-வேடர் எரித்த நெருப்பின் காட்சி - கோட்டைக்குள் ஒளிந்து கொண்டது - அவர்கள் வரும் வேளை எது? வேடர் சென்ற பிறகு அவ்விடத்தைக் காணுதல் - வேடரைக்கொல்ல நினைத்தல் - அஞ்சி அஞ்சி வாழ்தல்-வேடருடன் போர் - கடலிற் பீரங்கி வெடி கேட்டது - கடலில் ஒரு கப்பல் காணப்பட்டது-பார்த்தொடர் தாக்கி கப்பல் பழுதுற்றது - கப்பல் உடைந்ததற்குக் காரணம் என்ன?- துன்பத்திலும் இன்பம் கொடுப்பவர் இறைவனே - உடைந்துபோன கப்பலில் இருந்தவர்கள் எங்கே?— துணை மனிதர் வேண்டும் என ஆவல் கொண்டேன் - சிறுவன் ஒருவனுடைய உடல் கடலில் மிதந்து வந்தது - உடைந்த கப்பலைப்பார்க்க ஓடமேறிச் சென்றேன் - ஓடத்தில் உணவுப் பொருள்களை ஏற்றுதல்- ஓடத்தைக் கடலிற் செலுத்துதல்-ஓடத்தைக் கரையிற் சேர்த்தேன் - மறுபடியும் ஓடம் செலுத்திக் கப்பலை

அடைந்தேன் - கப்பலில் இருந்த பொருள்கள் எவை? - கப்பலிலிருந்து நான் எடுத்துச் சென்ற பொருள்கள் - புதிய முறைக்குள் பொருள்களைச் சேர்த்தல் - பணத்தைப் பாதுகாப்பாய் வைத்திருத்தல் - மலைக் கோட்டையிற் சென்று தங்குதல்.

பதினான்காம் அதிகாரம் 326—351

தீவைவிட்டு வெளியேற வழி யாது? - பழைய நிலையை நினைந்து வருந்துதல் - இளைஞர் இயற்கை எது? - ஒருநாள் இரவு தூக்கம் இல்லை - மனத்தின் அமைதிக்கு இறைவன் அருள் துணை - தோன்றாத் துணையாய் இருப்பவன் இறைவனே - வேடரைப் போல ஓடமேறிச் செல்ல நினைத்தல் - ஓடம் ஏறிச் சென்றால் வேறு நாட்டை அடையலாம் - கனவு கண்டு வருந்துதல் - வேடன் ஒருவனைப் பிடிக்க விரும்புதல் - வேடர் வருகையை எதிர்பார்த்திருந்தேன் - நெடுநாள் காத்திருந்தும் வேடர் வரவில்லை - ஒருநாள் வேடர் வந்து களியாட்டம் புரிந்தனர் - மனிதன் ஒருவனைக்கொன்று சமைத்தனர் — வாய்க்காலைக் கடந்து ஓடி வந்தனர் - அவர்களில் ஒருவனைப் பிடிக்க முயன்றேன் — வேடர் மூவரில் ஒருவனைக் கொன்றேன் - மூன்றாவது வேடன் எனக்கு அடிமை ஆனான் - இரண்டாவது வேடனும் கொல்லப்பட்டான் - பிணங்களைப் புதைத்தல் - என்னுடைய அடிமை படுத்துத் தூங்கினான் - அடிமையின் உறுப்பு அமைப்புக்கள் எவ்வாறு இருந்தன? - அடிமைக்கு நற்பழக்கங்களைக் கற்பித்தேன் - பிணம் தின்ன விரும்பிய அடிமையின் கருத்தை மாற்றினேன் — காட்டு மனிதர் செய்த வேலைகள் - மனிதர் இறைச்சியை நெருப்பில் இட்டு அழித்தல் - அடிமை வேடனுக்கு உடைகள் அளித்தேன் - அடிமை வேடன் உறைவதற்கு இடம் அளித்தல் - அடிமை வேடனுடைய நல்ல பண்புகள் - வேடருக்கு இறைவன் நல்லறிவு தராதது ஏன்? - இறைவன் செயல் நாம் அறிய முடியாதது - அடிமை வேடனுக்கு வேலை செய்யவும் பேசவும் கற்பித்தேன்.

**பதினைந்தாம் அதிகாரம்** 352—381

துப்பாக்கி வெடி கண்டு அடிமை வேடன் திகைத்தான் - வெள்ளிக்கிழமை துப்பாக்கிக்கு வணக்கம் செய்தல் - உப்பு இட்ட உணவை உண்ண மறுத்தல் - இறைச்சியைப் பொரித்து உண்ணுதல் - ரொட்டி சுடவும் கற்றுக் கொடுத்தேன். வெள்ளிக்கிழமை மிகவும் வருந்தி யுழைத்தல் - அவனுடன் பேசுவதில் எனக்குற்ற இன்பம் - வெள்ளிக்கிழமையின் பழைய வரலாறு யாது?-கடலில் நீர் பெருகும் வேளை எது? தீவைச் சுற்றிய வெளிநாடுகளைத் தெரிந்து கொள்ளுதல் - தீவைக் கடந்து செல்வதில் நம்பிக்கை - கடவுளைப் பற்றிய கொள்கையை அவனுக்குப் புகட்டுதல்-குருமார் செய்யும் தவறுகள் - பேய்கள் செய்யும் குற்றங்கள் – வேடனுக்கு மறுமொழி புகலத் தெரியாதிருந்தேன் – இறைவன் செயலைப் பற்றிய வினவும் விடையும் - அரசன் அன்றே கொல்வான் இறைவன் நின்று கொல்வான் - சொல் வன்மை பெறுவதற்குக் கடவுளை வேண்டுதல் - நான் கடவுள் நெறி எடுத்துரைக்கும் ஆசிரியன் - மறைமொழி கற்பித்து நன்மை அடைந்தேன் - கிறித்துவ மறைநூல் சிறந்த, வழி காட்டியாகும் - வெள்ளிக்கிழமைக்குத் துப்பாக்கி சுடவும் கற்றுக் கொடுத்தேன் - வெள்ளிக்கிழமைக்கு மேலும் பல நிகழ்ச்சிகளைத் தெரிவித்தேன் - வெள்ளை மனிதர் வந்திறங்கிய ஓடம் – வேடர் உதவி பெற்று வெள்ளை மனிதர் வாழ்தல் - வெள்ளிக்கிழமை தன் நாட்டைக் கண்டு பெருமகிழ்வு உற்றான் – வெள்ளிக்கிழமை நன்றி மறப்பவனா? – வெள்ளிக்கிழமைக்குத் தன் நாடு அடையும் விருப்பம் உண்டா? – ஓடம் ஏறி வெள்ளிக்கிழமையின் ஊரை அடைய விரும்பினேன்.

**பதினாறும் அதிகாரம்** 382—412

வெள்ளிக்கிழமையின் விருப்பம் - புதிய ஓடம் செய்ய விரும்புதல் - பெரிய ஓடம் செய்து முடித்தல் - ஓடத்தில் துணைப்பொருள்கள் அமைத்தல் - வெள்ளிக்

கிழமைக்கு ஓடம் செலுத்தக் கற்பித்தேன் - இருபத் தாருவது ஆண்டு நிறைவுவிழா—புதிய ஓடத்தைப் பாது காத்தல் - காட்டு மனிதரின் ஓடங்களைக் கண்டு அஞ்சு தல் - ஓடத்தில் வந்தவர் எத்தனை பேர்?- வந்த வேட ரைக் கொல்ல எண்ணுதல் - அவர்களைக் கொல்வது முறையாகுமா? - மறைந்திருந்து அவர்கள் செயலைக் காணுதல் – வேடரைத் துப்பாக்கியால் சுடுதல் - வெள்ளை மனிதனை விடுதலை செய்தல் – வேடனுக்கும் வெள்ளை மனிதனுக்கும் போர் – வேடர்களோடு கடும் போர்-வெள்ளியின் தந்தையும் கட்டுண்டு கிடந்தான்- வெள்ளி தன் தந்தையைக் காணுதல்-வெள்ளிக்கிழமை தன் தந்தைக்கு உதவி செய்தல்-வேடர் ஓடம் புயலிற் பட்டது - வெள்ளிக்கிழமை தன் தந்தைக்கு மீண்டும் உதவி செய்தல் - வெள்ளை மனிதனுக்கு உதவி செய்தல் – புதிய விருந்தாளிகள் - விருந்தினர்க்குச் சிறு குடில் அமைத்தல் - நான் இத்தீவுக்கு அரசன் - விருந்தினர்க்கு உணவு அளித்தல் - பிணங்களை அடக் கம் செய்தல் - விருந்தினருடன் உரையாடல்.



ஸ்பானியனுடன் உரையாடல்-ஸ்பானியன் பயண வரலாறு - ஸ்பானியரை விடுவிக்கும் சூழ்ச்சிகள்-ஸ்பா னியன் கூறிய உறுதி மொழிகள் - அதிக நிலங்களைப் பயிரிடும் முயற்சி - புதிய ஓடம் செய்ய முயலுதல் - வேறு உணவுப் பொருள்கள் – விளைந்த கூலத்தை அறுவடை செய்தல் - ஸ்பானியன் தன் துணைவரை அழைத்து வரச் செல்லுதல் - ஆங்கிலக் கப்பலும் ஓடமும் கண்டேன் – ஆங்கிலக் கப்பல் இங்கு வந்தது ஏன்? - துன்பம் வருவதை ஆராய வேண்டும் - கப்பலில் வந்தவர்கள் யாவர்? - வெள்ளிக்கிழமை யுடன் உரையாடல் – வந்த ஆங்கிலேயர் என்ன செய்தார்கள்? – என்னுடைய பழைய நினைவு கள் - கடவுள் அருள் இருந்தால் எல்லாம் நன்மை யாகும் - அவர்கள் ஓடம் கரைதட்டி நின்றது - வந்த



இராபின்சன் குரூசோ வீட்டு வாழ்க்கையில்
ஒரு காட்சி.

# இராபின்சன் குரூசோ

## முதல் அதிகாரம்

### எனது பிறப்பு வரலாறும் வழிமுறை வரலாறும்

நான் 1632-ஆம் ஆண்டில் யார்க் நகரத்தில் சிறிது மேன்மையாக விளங்கிய ஒரு குடும்பத்தில் பிறந்தேன். அக்குடும்பத்தார் யார்க் நாட்டார் அல்லர். என் தந்தை பிறந்த நாடு ப்ரீமென். அவர் முதலில் அல் நகரத்திற்குப் போய் வாணிகஞ் செய்து மிகுந்த பொருள் தேடினர். பிறகு வாணிகத்தொழிலை விட்டுவிட்டு யார்க் நகரத்திற்குப் போய் அங்கே தங்கியிருந்தார். என் தந்தையின் பெயர் குரூட்ஸ்நேர். அங்கிருக்கையில் என் தந்தைக்கும் தாய்க்கும் திருமணம் நடைபெற்றது. என் தாயின் குடும்பத்திற்குப் பெயர் இராபின்சன். அது யார்க் ஷயர் என்னும் மாகாணத்தில் மிகுந்த சிறப்புடைய குடும்பம். அக்குடும்பப் பெயரும் என் தந்தையின் குடும்பப் பெயரும் ஒன்று சேர்ந்து என் பெயர் இராபின்சன் குருத்ஸ்நேர் என வழங்கியது. ஆங்கில மொழியில் ஒரு சொல் மற்றொரு சொல்லாய் மருவி வருவதுபோல், குருத்ஸ்நேர் என்பது நாளடைவில் குரூசோ என மருவியது. இப்பொழுது எங்கள் குடும்பத்தின் பெயர் குரூசோ என்றும், என் பெயர் இராபின்சன் குரூசோ என்றும் வழங்கி வருகின்றன.

### உடன்பிறந்தவர்கள்

என் தாய் தந்தையருக்கு மக்கள் மூவர், அம் மூவரில் நான் இளையவன். என் தமையனர் முன்பு சீர்த்திபெற்று விளங்கிய, கர்னல் லாக்கர்ட் அலுவல் பார்த்த ஆங்கிலேய

காலாட்படை ஒன்றிற் சேர்ந்து ஃப்ளான்டர்ஸ் நாட்டில் லெப்டினண்ட் கர்னல் அலுவல் பார்த்து வருகையில் டன்கர்க்கிற்கு அண்மையில், ஆங்கிலேயருக்கும் ஸ்பானிய ருக்கும் நடைபெற்ற போரிற் கொல்லப்பட்டார். என் இளைய தமையனுருக்கு நேர்ந்த நிலைமை என்னவென்று எனக்கு இதுவரையில் தெரியாது. அவ்வாறே எனக்கு நேர்ந்த நிலைமை, நன்மை தீமை முதலியவைகளைப் பற்றி என் தாய் தந்தையரும் அறியார்கள்.

**கல்வியும் கடற்பயணமும்**

இளைய மகனுகிய நான் ஏதாயினும் தொழில் பயிலா திருந்தபடியினுல், இளமைக் காலந் தொடங்கிப் பிற நாடுகளைப் போய்ப் பார்க்கவேண்டும் என்று எனக்கு அள வற்ற விருப்பம் உண்டாயிற்று. பழமையிற் பற்றுக் கொண்ட என் தந்தையார் எனக்குப் போதிய கல்வி அளித்தார். வீட்டுப் படிப்பும் நாட்டுப்புற அறத்துறைப் பள்ளிப் படிப்பும் போதியனதாமே! மேலும் காலம் வரும் பொழுது சட்ட நூல்களைக் கற்பிக்க எண்ணியிருந்தார். கப்பலேறிப் பிறநாடுகளுக்குப் போவதைத் தவிர வேறெந்த முயற்சியிலும் எனக்கு விருப்பமில்லை. இவ்விருப்பம் என் உள்ளத்தில் குடிகொண்டிருந்த படியினுல் நான் என் தந்தையாருடைய விருப்பத்திற்கு மாருக நடந்தேன்; அவர் சொல்லைக் கடந்தேன்; என் தாயும் மற்றும் உள்ள சுற்றத் தார்களும் கூறிய அறிவுரைகளைக் கேளாமல் இருந்தேன். இத்தகைய மாறுபாடான எண்ணம் எனக்கு உண்டாகி யிருந்தபடியினுல், கேடு வருமுன் மதிகெட்டுவரும் என்று தோன்றிற்று.

**தந்தையார் தடை**

நல்லறிவும் ஆழ்ந்த ஆராய்ச்சித் திறனும் உள்ள என் தந்தையார் என் நோக்கம் இத்தகையது என்று நாளடை வில் அறிந்துகொண்டார். அதைத் தடுக்கும் பொருட்டுப் பற்பல நல்லறிவுரைகளைச் சொல்லிக் கொண்டு வந்தார். சந்து வாதம் என்னும் நோய் கண்டு அவர் நடமாடுவதற்கு

இயலாமல் படுத்திருக்கையில் ஒருநாள் காலையில் என்னை அழைத்தார். என் எண்ணம் எவ்வகையிலும் தகாத தென்று பலவாறு நேர்மையான வழிகளை எடுத்துக் காட்டினர். மேலும் அவர், "மகனே! நீ உனது பிறந்த நாட்டில் இருந்து நன்முயற்சி செய்து விழிப்புடன் இருந்து நாள் கழிப்பாயானால் மேன்மேலும் சீருஞ் செல்வமும் பெற்றுக் கவலையற்று நலத்துடன் வாழ்ந்திருக்கலாமே, வேறு நாட்டிற்குப் போகவேண்டும் என்று வீணை அவாவை உறுதியாகப் பற்றிக்கொண்டு, வீட்டையும் பிறந்த நாட்டையும் விட்டு நீங்குவது அறிவுடைமையன்று. தம் நாட்டில் இடம் பொருள் ஏவல் முதலிய ஆதரவுகள் சிறிதும் இல்லாதவர் கடலோடி மலையேறித் தொலைநாடு களுக்குப் போய் வருந்தி உழைத்துப் பொருள் தேடுவதற்கு எண்ணுவார்கள். எவ்வகையிலும் குறைவில்லாத செல்வர்கள் பிறநாடுகளுக்குப் போய்த் தம்மைப்போன்ற செல்வர்களுக்குரிய பெரும்புகழான அருந்தொழில்களைச் செய்து சீர்த்திபெற நாடுவார்கள். நீ இடம் பொருள் ஏவல் சிறிதும் இல்லாத எளியவனும் அல்லன். பெருஞ் செல்வம் படைத்த செல்வனும் அல்லன். இவ்விருதிறத்தாருக்கும் இடைப்பட்ட நிலைமையில் இருக்கிறாய். நடுத்தரமான நிலைமையில் இருப்பவர்கள் தாம் மனக்கவலை இல்லாமல் நாள் கழிப்பதற்குப் பக்குவப் பட்டவர்கள்.

### நடுத்தர நிலையினர் வாழ்க்கைச் சிறப்பு

அவர்கள் எளியவர்களைப்போல் அன்றன்று வருந்தி உழைத்து உணவு உடை முதலியவைகளுக்குத் தகுந்த வருவாயில்லாமல் சிறுமைப்பட வேண்டுவதும் இல்லை. செல்வர்களைப் போலச் செல்வம் மிகுதியால் ஆணவங் கொண்டு பேரவா மிகுந்தவர்களாய்ப் பிறர் வாழ்வைக் குறித்துப் பொறாமை அடைய வேண்டுவதும் இல்லை. செல்வர் வறிஞர் ஆகிய இரு திறத்தாரும் நடுத்தரமான நிலையை விரும்புகிறார்கள். நடுத்தரமான நிலைமையில் இருப்பவர்கள் தாம் மன நிறைவு உள்ளவர்கள் என்பதற்கு இதுவே தகுதியான எடுத்துக்காட்டு என்பதை அறி.

வரும் தீமைகளுக்கு நான் ஆளாக மாட்டேன், உன் மூத்த அண்ணன் அடைந்த நிலையை நினைத்துப் பார். போர்ப் படையிற் சேர்ந்து போர்க்களத்திற்குப் போக வேண்டா மென்று இப்பொழுது உனக்குக் கூறியதுபோல எத்தனையோ காரணங்களை எடுத்துக் கூறி அவனைத் தடுத்தேன். அவன் கேட்கவில்லை; சிறு பருவத்தில் அவன் விரும்பியபடியே சென்று, படை வீரனாகச் சேர்ந்து போரில் இறந்தான். நான் எப்பொழுதும் உனக்காகக் கடவுளை வேண்டுவேன். ஆனால் என் சொல்லை மீறி நீ உன் விருப்பம் போல் நடப்பாயானால் கடவுள் உனக்கு அருள் செய்ய மாட்டார். 'என் தந்தை சொல்லை மந்திரம்போல் எண்ணி நடந்தேனில்லையே' என்று உனக்குத் துன்பம் வருங் காலத்தில் நினைத்து வருந்துவாய். அவ்வேளையில் உனக்கு உதவி செய்வார் ஒருவரும் இல்லாதிருப்பர்"

**தந்தையார் வருத்தம்**

என் தந்தையார் கடைசியில் கூறிய வாக்குத் தவறாமல் நடக்குமென்று அவர் நினைக்கவில்லை. ஆயினும் செயலளவில் தவறாமல் நிகழ்ந்தது. போர்க்களத்தில் இறந்த என் தமையனைக் குறித்துப் பேசியபொழுது அவர் இருகண்களிலுமிருந்து நீர் சுரந்து ததும்பி முகத்தில் வழிந்தது. பெரிய துன்பம் வருங்காலத்தில் நீ துணைவரின்றி வருந்துவாய் என்று என்னைக் குறித்துப் பேசியபொழுது அளவற்ற துயரத்தால் உண்டான அழுகையை அடக்குவதற்கு அவரால் முடியவில்லை. துயரம் தன் உள்ளத்தில் நிறைந்திருந்ததனால் இனிப் பேசக் கூடாது என்று அவர் அவ்வளவில் பேச்சை நிறுத்திவிட்டார்.

**வெளிநாடு செல்ல மறுபடியும் முயற்சி**

மேற்சொல்லிய வரலாற்று நிகழ்ச்சிகளைக் கேட்டு என் மனம் உருகிற்று. அவைகளைக் கேட்கும் எவர் மனம்தான் உருகாது. இனி வெளிநாடுகட்குச் செல்லாது தந்தையார் விருப்பப்படி பிறந்த நாட்டிலேயே வாழ்வது என முடிவு செய்தேன். ஆயினும்; அந்தோ! என் முடிவு சிலநாட்

களுக்குள் மாறிப் போயிற்று. பின்னும் தந்தையார் அறிவுரை கூறி என்னைத் தடுக்காதபடி சில கிழமைகள் கடந்தபின் நான் அவரை விட்டு விலக உறுதி செய்தேன். அவ்வாறு உறுதி செய்திருந்த போதிலும் பிறகு என் மனம் சற்று இளகிற்று. நான் திடீரென வீட்டைவிட்டுப் புறப்படவில்லை. என் தாய் சற்று மகிழ்ச்சியோடிருந்த சமயம் அறிந்து அவரிடஞ் சென்று "அன்னையே, நான் வெளிநாடுகட்குச் சென்று ஆங்காங்கு உள்ள சிறப்புக்களைக் காண விரும்பியுள்ளேன். இங்கிருந்து ஏதேனும் தொழில் பயிலக் கருதினல் அதில் தேர்ச்சி பெறும் வரையிலும் அதை விடாமற் பயிலக்கூடிய மனவுறுதி எனக்கில்லை. தந்தையார் தடை செய்யாமல் என் கருத்திற்கிசைந்து என் பயணத்திற்கு விடை கொடுப்பது நன்று. நான் இப்பொழுது பதினெட்டு ஆண்டு இளைஞனக இருக்கிறேன். இனித் தொழில் பயில்வதற்காவது வழக்கறிஞரிடத்தில் சட்ட நூல்களைக் கற்பதற்காவது என் மனம் ஈடுபடாது. தொழில் பயில அல்லது சட்ட நூல்களைக் கற்கப் புகுந்தால் அது முடிவு பெறும் வரையில் என் எண்ணம் உறுதியாய் நிலைத்திராது. இடையில் அதை விட்டு நீங்கிக் கப்பல் வேலையிற் சேர்ந்து விடுவேன். இஃது உண்மை. ஒருமுறை மட்டும் கப்பற் பயணம் சென்று வரத் தகப்பனரிடத்திற் பேசி எனக்கு ஒப்புதல் வாங்கிக் கொடுக்க விரும்புகிறேன். திரும்பி வரும்பொழுது கடற் செலவு சிறந்ததன்று எனத் தோன்றினல் அதன் பின்னர்ப் போகமாட்டேன். கப்பல் பயணத்தில் வீணுய காலக்கழிவுக்கு இருமடங்காய் மிக்க கருத்துடன் ஏதாயினும் ஒரு தொழில் பயில உறுதி மொழி அளிக்கின்றேன்" என்று கூறினேன்.

**தாயின் மறுப்புரை**

இதைக் கேட்டு, என் தாயாருக்கு மிகுந்த சினம் உண்டாயிற்று. அன்னை என்னைப் பார்த்து, "மைந்தனே, இச்செய்தி குறித்து உன் தந்தையிடம் பேசி ஆவது ஒன்றும் இல்லை. உனக்கு நன்மையுண்டாகத் தக்க வழி

எதுவென்பது அவருக்கு நன்கு தெரியும். தீமை தரத் தக்க உன் கருத்திற்கு அவர் உடன்பட மாட்டார். உன் தகப்பனார் உனக்குச் சொல்லிய பற்பல அறமுறைகளையும், அன்பும் உருக்கமுமான அறிவுரைகளையும், வேறு பல நன் மொழிகளையும் கேட்டிருந்தும் நீ கொண்ட கருத்தை விடாப் பிடியாக வற்புறுத்துகிறாயே. இஃது என்ன பிடிப்பு. உனக்கு நீயே அழிவு தேடிக் கொள்வாயானால் அதற்கு எதிர்ப்பு யாது? உன் எண்ணத்திற்கு யானும் உடன்படேன். உன் தந்தையும் இணங்கார். இதனை உறுதியாய் நினைத்துக்கொள். என்னைப் பொறுத்த வரையில் நான் உன் அழிவிற்கு எள்ளளவும் உடன் படேன். என் கருத்திற்குத் தந்தை ஒத்துவரவில்லை. தாயார்மட்டும் ஒத்துக்கொண்டார், என்று நீ இனிமேற் கூறுவதற்கு நான் இடந்தருவேனோ?" என்றார்.

### தந்தையார் கருத்தும் வருத்தமும்

நான் வேண்டிக் கொண்டபடி என் எண்ணத்தைத் தகப்பனாருக்குச் சொல்லத் தாயார் உடன்படாதிருந்தும் எனக்கும் தமக்கும் நடந்த உரையாடலை அவர் தந்தை யார்க்குத் தெரிவித்ததாகவும், தந்தை கேட்டுத் தமக்குண் டான மிகுந்த மனவருத்தத்தை வெளியிட்டுப் பெருமூச் செறிந்து "நம் சிறுவன் வீட்டிலேயே ஒழுங்கா யிருப்பா னாயின் நன்மையடைவான்; வெளிநாடு சென்றால் பெருந் துன்பங்கள் எய்தி வருந்துவான். அவன் வெளிநாடு செல் வதற்கு இணங்கமாட்டேன்" என்று கூறியதாகப் பின்னர்க் கேள்விப்பட்டேன்.

### கப்பல் பயணமும் புயற்காற்றும்

இதற்குப்பின் தாய்தந்தையர் சொல்லை மீறி, நான் வெளிப்படுதற்குக் கிட்டத்தட்ட ஓராண்டு சென்றது. அது வரையில் தொழில் பயில வேண்டுமென்று அவர்கள் கூறிய அறிவுரையை நான் ஒருபொழுதும் செவி கொடுத் துக்கேட்கவில்லை. எனது உறுதியான மனக்கருத்து இன்னதென்றறிந்தும் நீங்கள் இருவரும் ஒரு பிடியாய்

நின்று தடைசெய்தது தந்தியன்று என்று அடிக்கடி அவர்களுக்குக் கூறினேன். இவ்வாறு இருக்கும்போது ஒரு நாள் **ஹல்** நகரத்திற்குத் தற்செயலாய்ச் சென்றேன். அன்று நான் அவ்விடம் சென்றது வெளிநாட்டுக்கு ஓடிச் செல்ல வேண்டும் என்று நினைத்தன்று. அங்கே என்னோடு கூடிய கூட்டாளிகளில் ஒருவன் தன் தந்தையின் கப்பலில் ஏறி **இலண்டன்** நகரத்திற்குச் செல்ல முன்னேற்பாடு செய்துகொண்டிருந்தான். அவர்கள் தங்களுடன் கப்பற் செலவின்றி என்னையும் வருமாறு கூறினார்கள். கப்பற்காரர் இப்படிப்பட்ட ஆசை வார்த்தை கூறிச் சிறுவரைக் கப்பலில் ஏற்றிச் செல்வது வழக்கம். அவர்கள் என்னை அழைத்தவுடனே நான் தாய் தந்தையரிடம் ஒப்புதல் கேட்கவுமில்லை. அவர்களுக்குச் செய்தி தெரிவிக்கவும் இல்லை. தெரிவிப்பது இன்றியமையாதது என்று எண்ணவுமில்லை. என் செயல் வெற்றி பெறுமாறு இறைவனை வேண்டிக் கொள்ளாமலும்; தகப்பனாரிடம் வாழ்த்து மொழிகளைப் பெருமலும், என் செயலின் நன்மை தீமைகளை நினைக்காமலும், அந்தக் கூட்டாளிகளுடன் சேர்ந்து செல்ல முடிவுசெய்துகொண்டு 1651-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் முதல் நாள் **இலண்டன்** நகரத்திற்குப் புறப்படுங் கப்பலில் ஏறினேன். 'எண்ணித் துணிக கருமம்' என்பதற்கேற்றபடி ஆராயாது இறங்கத் தகாத துறையில் இறங்கினேன். அத்தகைய ஒரு செயலைச் செய்யும் இளைஞரில் எவர்க்காவது துன்பநிலை எனக்கு வந்ததுபோல அத்துணை விரைவில் வந்ததுமில்லை, பலநாட்கள் நீங்காதிருந்ததும் இல்லை.

கப்பல் **ஹம்பர்** ஆற்றுக் கடற்கலப்புத் துறையைக் கடந்தவுடனே கடுங்காற்றுத் தோன்றியது. கடல் பொங்கியது. அதனைக் கண்டு கலக்கமுற்றேன். முன்பு கப்பல் ஏறிப் பயின்றிராத எனக்கு அவ்வேளையில் உண்டான வாய்க்குமட்டலும் தலைச்சுழற்சியும், கலக்கமும் இவ்வளவென்று சொல்ல என்னால் இயலாது. பெற்றோர் சொற்கேளாமல் அறிவு கெட்டு நான் கப்பலேறியதை எண்ணி

வருந்தினேன். பெற்றோருடைய வீட்டினின்றும் நீங்கிக் கடமையைக் கைவிட்ட தவறான செயலால் கடவுள் தண்டனை என்னைத் தொடர்ந்தது முறையே என்றெண்ணி னேன். தாய்தந்தையர் கூறிய அறிவுரை, தந்தையார் விட்ட கண்ணீர், மாறுபாடான எண்ணத்தைக் கைவிடச் சொல்லித் தாயார் பரிந்து கூறிய நல்லுரை இவையனைத் தும் கண்ணுக்கெதிரே கண்டு கேட்ட நிலைபோல என் நெஞ்சில் அப்பொழுது தோற்றமளித்தன. "பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்" என்பது பழமொழி. அதற் கேற்ப என் மனம் வரவர நெகிழ்ச்சியின்றிக் கல்லாயிற்று. மறைமொழியைப் போன்ற தந்தை சொல்லைப் பொருட் படுத்தாது தள்ளி, கடவுளுக்கும், தந்தைக்கும் செய்யத் தரும் கடமைகளைக் கைவிட்டதைப்பற்றி, அப்பொழுது முழுதும் கல்லாகாத என் நெஞ்சே என்னை வருத் தியது.

### புயலின் கொடுமையும் மனமாற்றமும்

வர வரப் புயல் அதிகரித்தது. கடல் மேலும் அதிக மாய்ப் புரண்டு கொந்தளித்தது. பின்னர் பலமுறை நான் கண்ட கடல் அலைப் புரட்சிக்கும், கேட்ட பேரொலிக்கும் அது ஒப்பாகாது. எறும்பிற்குக் கிண்ணத்தின் தண்ணீர் பெருங்கடல் என்பர். கடலோடிப் பயிலாத இளைஞனாகிய எனக்கு இப்புயலால் வந்த கலக்கத்திற்கு இணை இல்லை. அடுத்தடுத்துப் புரண்டு வந்த திரைக்குள் அமிழ்ந்து விடுவேனென்றும், மலைபோலெழுந்த அலைமுகட்டில் ஏறிய கப்பல் அலைப்பெயர்ச்சியாலுண்டான ஆழ்ந்த பிளப்பில் விழுந்த பொழுதெல்லாம் இனிப் பெருங்கடலின் அடித் தரையே நமது முடிவிடம் என்றும் எண்ணிக் கலங் கினேன்.

என் மனம் இவ்வாறு துன்பப்படும்போது, இந்தப் பயணத்தில் இறைவன் திருவருளால் உயிர் தப்பிப் பிழைத்துக் கரைசேர இடம் பெறுவேனானால், அங்கிங்கு நின்று வீண்பொழுது போக்காமல் அந்த இமைப்பொழு

திரேபிய விட்டுக்குச் சென்று தந்தையைக் காண்பேன்; அதற்குப் பின்னர் இவ்வுடலைவிட்டு உயிர் நீங்குமளவும் நான் கப்பலேறத்துணியேன்; இவ்வாருகிய தீய நிலைகளை வலியத்தொடர்ந்து வருவித்துக்கொள்ளாமல் தந்தை சொல்லைத் தலைமேற்கொண்டு நடப்பேன் என்று பற்பல திட்டங்களை முடிவு செய்துகொண்டு அவற்றை நிறை வேற்றுவதாகவும் மனவுறுதி செய்துகொண்டேன். செல்வர் வறிஞர் ஆகிய இவ்விரு வகையிலும் சேராத நடுத்தர நிலைமையோரை என் தகப்பனர் புகழ்ந்து கூறிய சொல்லின் நயம் எனக்கு விளக்கமாகத் தெரிந்தது. பிறந்த நாள் முதல் இதுவரையில் என் தந்தையாருக்கு மனக் கவலை இல்லை; அச்சம் இல்லை; அவர் கடலிற் கடுங்காற்று மழைக்கு அகப்பட்டதும் இல்லை; தரையில் மனக்கவலைக்கு ஆளானதும் இல்லை என்பவற்றைக் கண்கூடாகக் கண்டேன். என் உள்ளத்தில் உண்டான எண்ணங்களை ஒவ்வொன்ருகச் சொல்லிற் பெருகும். கூடா நட்பினருடன் கூடி, ஆரவாரமாய் நாட்கழித்துப் பொருளை வீண் செலவு செய்து அழித்துவிட்டு வருந்தும் மைந்தனைப்போலத் தந்தை விட்டுக்குப்போக முடிவு செய்தேன்.

## புயல் நீக்கமும் தீய பழக்கமும்

புயற்காற்று அடித்து ஓய்கிறவரையிலும், ஓய்ந்த பின் சற்று நேரமளவும் என் அறிவு தெளிந்து எனக்கு இவ்வித நல்லுணர்ச்சியுண்டாகியிருந்தது. மறுநாள் காற்றடங்கி, கடல் அடங்கவே எனக்கு அச்சம் நீங்கியது. தலைச் சுழற்சியும் வாய்க்குமட்டலும் முற்றிலும் மாறவில்லை. அன்று பகல் முழுவதும் ஊக்கமில்லாதவனுயிருந்தேன். மாலை நேரம் வந்ததும் மப்பு மந்தாரம் நீங்கிக் காற்று முழு வதும் அடங்கி மாலை வெய்யில் தோன்றிற்று. மறுநாட் காலையிலும் பொழுது புலர்ந்தபோது வானம் தெளிவாக இருந்தது. காற்று அடங்கியபின், அலைக்கிளர்ச்சியின்றி வெயில் ஒளியில் விரிகடல் பளிங்குபோல் ஒளி வீசிக் காட்சி யளித்தது. கண்டு மகிழ்ந்தேன்.

இரவு முழுதும் மெய்ம்மறந்து தூங்கினேன். தலைச் சுழற்சியும் வாய்க்குமட்டலும் அறவே நீங்கின. முதல்நாள் பெருமுழக்கஞ் செய்து அச்சுறுத்திய கடல் இத்துணை விரைவில் அடங்கிக் கண்ணுக்கழகாய்த் தோன்றுவது எவ்வளவு வியப்பு என்றெண்ணினேன். இவ்வாறிருக்கையில் நான் செய்த முடிவுகளுக்கு இடையூறாக, முன்பு எனக்குத் தீய அறிவுரைகளைக் கூறி நயவஞ்சனையாய் என்னை அழைத்துவந்த தோழன் என்னிடத்திற்கு வந்து, முதுகில் தட்டிக்கொடுத்து, "நல்லது இராபின், உன் அச்சந்தெளிந்ததா? இரவு வீசியகாற்று ஒரு குடத்தில் விட்டு அடைக்கவும் போதாதே. அதற்கு நீ மிகவும் அச்சமுற்றிருந்தாயல்லவா?" என்றான். நான், "என்ன கூறினாய்? எவர்க்கும் அச்சந்தரும் கடும்புயலைக் குடத்தில் விட்டடைக்கக்கூடிய காற்றென்று சொல்வது பொருந்துமா?" என்றேன். அதற்கு அவன் "நன்றாயிருக்கிறது! பித்தனுக்குத் தன் குணமே சிறந்ததென்று தோன்றும். இது தானா கடும்புயல்! சொல்லக்கேள். வளமான கப்பலேறி, கரைக்குத் தொலையிற் பார். களம் முதலிய தடையில்லாத ஆழ்ந்த பெருங்கடலிற் போவோமானால் நேற்றடித்த காற்று எங்களுக்கு அவ்வளவு பெரிதன்று. உனக்குப் பழக்கமேது? ஓடமேறி ஆற்றைக்கடக்கவும், கரைத் தோணியிற் போகவும் வரவும் உன்னால் இயலும். இனி, வா, உன் அச்சந்தீரும்படி ஒரு கிண்ணம் சாராயம் குடிப்போம். மப்பு மந்தாரமின்றி வெயில் காய்வது மிக இன்பமாயிருக்கிறதல்லவா?" என்று கூறினான். அதன் பின் நடந்த துன்ப நிகழ்ச்சிகளைக் கூறின் விரியும். கடலோடிகளின் வழக்கப்படி சாராயம் குடித்தோம், எனக்குச் சற்று வெறியுண்டாயிற்று. மது உண்டபின், என் அறிவு கெட்ட தீயொழுக்கத்தைக் குறித்து எனக்கேற்பட்ட மனவருத்தமும், நல்லுணர்ச்சிகளும், இனிமேற் சீர்ப்படுவதற்கு நான் செய்த உறுதி முடிவுகளும் வெயிலைக் கண்ட பனிபோலப் பற்றற ஒழிந்துபோயின.

பெரு முழக்கமிட்ட வன்மைகொண்ட கடற்காற்று அடங்கின உடனே கொடுமை நீங்கி அமைதியுண்டானது

போல, எனக்குண்டான தடுமாற்றமும், பெருங்கடல் அமிழ்த்து மென்றெண்ணியதனுல் என்னைப் பிடித்த கலக்கமும் நீங்கினவுடன் முன்பு என்னுள்ளத்திற் குடி கொண்ட அவாக்கள் மீண்டும் வந்தன. துன்பக்காலத்தில் நான் செய்த முடிவுகள், உறுதிகள் எல்லாவற்றையும் மறந்தேன். இடையிடையே எனக்கு நல்ல நினைவு உண் டானபொழுது நான் அவைகளை உடலைவருத்தும் பிணிக்கு ஒப்பாய் எண்ணி ஒழித்துவிட்டு, மறுபடியும் உண்டா காதபடி தோழருடன் கூடிக் குடித்து மகிழ்ந்தேன். இத் தவறு தகாதென்று என்னுள்ளம் எனக்குணர்த்தி என்னை வருத்திற்று. ஆயினும் நான் உறுதியாய் நின்று ஐந்தாறு நாட்களில் அவ்வுள்ளத்தை வயப்படுத்திக்கொண்டேன். என்னைப் பிடித்த துன்பம் இதனோடு விட்டு நீங்கவில்லை. மக்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு முன் கடவுள் அவர்களைப் பலவாறு ஆராய்வது வழக்கம். முன்பு உண் டான பேரிடரைக் காட்டிலும் மிக்க இடர் எனக்கு உண்டா யிற்று. அதற்கும் இறைவனருளால் ஒரு படி தப்பிப் பிழைத்தேன். கல்நெஞ்சுள்ள பாவியும் அத்தகைய உயி ரிழப்புத் துன்பத்திற்குத் தப்பிப் பிழைத்திருப்பானுகில், ஒப்பற்ற கருணையுள்ள இறைவனை வழிபட்டு நல் வழிப் படுவான்.

### மறுபடியும் புயலின் கொடுமை

கப்பலில் ஏறிய ஆறும்நாள் யார்மௌத் துறை அடைந்தோம். காற்றடித்து விட்டபின் வளமான நற்காற் றின்றி எதிர்காற்று வீசியதனுல் கப்பல் நெடுந்தூரம் ஓட வில்லை. ஆகையினுல் அந்தத் துறையில் நங்கூரம் பாய்ச்சி நின்றோம். அன்று முதல் ஏழெட்டு நாள் வரையிலும் தென் மேற்குத் திசையினின்று எதிர் காற்றடித்த வண்ணமாயிருந்தது. வளமான நற்காற்றை நோக்கி ஆற்றில் இறங்குவதற்கு யார்மௌத் துறை வாய்ப்பான துறையாதலால், நியூகாஸில் என்னுமிடத்தினின்று புறப் பட்ட வேறு பல கலங்களும் அங்கே வந்து சேர்ந்தன.

காற்று வர வர வன்மையுற்று, நான்கைந்து நாட்களில் மிகவும் கொடுமையாக வீசியதனால், கப்பலை ஆற்றிற் செலுத்தி ஒதுக்க இயலவில்லை. ஆயினும் துறைவளமாயும், நங்கூரம் பாய்ச்சுமிடம் வசதியாயும், நங்கூரத் துணைக் கருவிகள் வன்மையாயுமிருந்ததனால், மாலுமி முதலானவர்கள் பேரிடர் ஏதும் இல்லையென்று அச்சமற்றிருந்து, அவரவர் விருப்பம்போல் களிப்போடு நாட்கழித்தார்கள். எட்டாம் நாட் காலையில் காற்று மேலும் வலுவுற்றது. அதனால் கப்பல் தடுமாறிக் குலுங்காமல் உறுதியாய் நிற்கும்படி, எல்லோரும் ஒன்று சேர்ந்து மேற் பாய்மரங்களை இறக்கி மற்றுமுள்ள தடைகளையும் நீக்கினோம். நடுப்பகலளவிற் கடலலை எழுந்து புரண்டது. கப்பலின் முன்னணிப்பாகம் சற்று நீரிலமிழ்ந்தது. மாறி மாறித் திரை மோதிக் கப்பலைத் தத்தளிக்கச் செய்தது. கப்பல் தடுமாறியது கண்டு, நங்கூரம் நிலைபெயர்ந்து கிளம்பிற்றென்று நினைத்தோம். உடனே மீகாமன் பெரு நங்கூரம் போடுவித்தார். ஆகவே கப்பலின் முற்புறத்தில் இரண்டு நங்கூரம் இடப்பட்டன. நங்கூரக் கயிறு காற்றிற் கேற்றபடி திரும்பிற்று.

இவ்வளவு பாதுகாப்பும் செய்வதற்குள் கொடும்புயற் காற்று அடிக்கத் தொடங்கியது. கடலோடிகளே அஞ்சிக் கலங்கி அறிவழிந்திருந்தார்கள் என்றால் என்னைப்பற்றிக் கூறுவானேன்? மாலுமி உற்ற வேளையில் கப்பலைக்காக்கும் முயற்சிகளை விழிப்போடிருந்து செய்வித்தார். அவர் கப்பல் அறைக்குட் போகும்பொழுதும், அங்கிருந்து வெளிப்படும் பொழுதும் "கருணைக்கடலே! அலந்தோர்க்கருள்வோய்! ஏழை பங்காளா! அருள் சுரந்து எங்களைக் காத்தருள வேண்டும். எங்கட்கு வேறு துணையில்லை. இறப்பே எங்கள் நிலை!" என ஒருமுறையன்று, பலமுறை மெதுவாய் வேண்டிய ஒலி எனக்கு ஒருவாறு கேட்டது. தொடக்கத்தில் எல்லோரும் விரைந்து பேரிடரினின்று விலகுவதற் கேற்ற முயற்சியில் ஈடுபட்டிருந்த வேளையில், நான் கப்பலின் முற்பக்கத்து அறையிற் கவலையின்றிப்

தேன். முன்பு காற்றடித்தபொழுது என் தீய அறிவினைக் குறித்து என்னுள்ளத்தில் தோன்றிய நல்லெண்ணங்களை நான் வேண்டாதனவாய் எண்ணித் தள்ளிவிட்டதனால் என் மனம் கல்லினும் வன்மை பெற்றது. இனி அந் நினைவுகள் வருந்தியழைத்தாலும் வருமோ? சாக்காட்டின் அச்சமும் அதனால் வரும் துன்பமும் இவ்வளவோடு ஒழிந்தன என்றும், முன் அடித்த புயல்போன்றே இதுவும் ஒன்று மற்றுப் போகும் என்றும் எண்ணினேன். மீகாமன் என் அருகில் உலாவும் பொழுது 'நமக்கு இனி உய்வு இல்லை' யென்று கூறிய ஒலி என் செவியிற் புக்கவுடன் எனக்கு அளவிறந்த துன்பமுண்டாயிற்று. துடித்துப் பதைத்தெழுந்து கடலை எட்டிப்பார்த்தேன், யான் கண்ட துன்பக்காட்சி கண்ணுக்குப் பொறுக்கவில்லை. அலைத் திரள் மலையுயரத்திற்கு வளர்ந்து மூன்றுநான்கு விநாடிக்கு ஒருமுறை கப்பலில் வேகமாய் மோதி அதிர்ச்சியோடு உடைந்தது. கண்முன் காணப்பட்டவையெல்லாம் கடுந் துயரளித்தன.

**கப்பல்கள் புயலில் அலைதல்**

எங்கள் கலத்திற்கு அருகில் நங்கூரமிட்டிருந்த இரண்டு கலங்களில் மிகுந்த பொருள் ஏற்றியிருந்ததனால், கப்பலில் உள்ளோர் அடியோடு பாய்மரங்களைத் தறித்து விட்டார்கள். எங்களுக்கு முன்னால் ஒரு கல் தொலைவில் நின்ற கலம் ஒன்று முழுகிப்போயிற்றென்று எங்கள் கலத்தி லிருந்தவர்கள் வருந்திக் கூக்குரலிட்டார்கள். வேறிரண்டு கலங்கள் நங்கூர வடமறுந்து, பாய்மரம் ஒன்றும் இன்றித் துறையைவிட்டுப் பெயர்ந்து, கடலில் உள் நோக்கி ஓடி விட்டன. அளவோடு பொருளேற்றிய கலங்களுக்கு மட்டும் அதிக ஆட்டமுமில்லை. கெடுதியுமில்லை. அக்கலங்கள் காற்றோட்டத்துக்குத் தக்கவாறு பாய்விரித்து ஓடி, எங்கள் கலத்தின் அருகில் வந்தன. ஞாயிறு மறையும் மாலைக் காலத்தில் துணை மாலுமியும், தலைமை நாவிகனும் முன் பாய்மரத்தை வெட்டி விழ்த்தும்படி கூறியபோது முதலில் மீகாமன் ஒப்புக்கொள்ளவில்லை. தலைமை நாவிகன் கப்பல்

முழுகிப்போம் என்று வற்புறுத்திச் சொல்லியபின், மீகாமன் உடன்பட்டார். முன்னணிப் பாய்மரம் தறிக்கப்பட்ட பின், அடிப் பாய்மரம் உறுதியற்று நெகிழ்ந்ததனால் கப்பல் மிகக் குலுங்கியது; அதுகண்டு அடிப்பாய் மரத்தையும் தறித்தார்கள். அதன்பின் மேற்றட்டில் இடையூறு ஒன்றும் இல்லை.

**கப்பலில் நீர்புகுதல்**

கடலோடிப் பயின்றிராத இளைஞனும், முன்பு காற்றடிக்கத் தொடங்கிய பொழுதே பதறி உதறி வருந்தியவனுமாகிய என்னுடைய மனம் அவ்வேளையில் என்னபாடு பட்டிராது! அவ் வேளையில் எனக்குண்டான மனத்துன்பத்தை இவ்வளவு காலம் சென்றபின் உள்ளவாறுரைப்பது இயலாது. ஒருவாறு உரைப்பின், முன் புயலடித்தபொழுது எனக்குண்டான நடுக்கத்தினும் பதின்மடங்கு நடுக்கமேற்பட்டது எனலாம். இடையிலெழுந்த நல்லெண்ணங்களை விடுத்து, முதலில் என் தீய அறிவினால் கொண்ட முடிவுகளையே மேற்கொண்டு உயிரிழப்புப் போன்ற துன்பத்தையடைந்தேன் என்று வருந்தினேன். அதனோடு காற்றின் விரைவுகண்டு அச்சமுற்றது. இவ்விதம் என்று சொல்ல நா எழவில்லை. எங்கள் துன்பம் இவ்வளவோடு முடிந்துவிடவில்லை. புயல் மேலும் முரட்டுத் தன்மையோடு அடித்தது. இத்தகைய கடுங்காற்று இதற்குமுன் அடித்தது யாங்கள் அறியோம் என்று கடலோடிகளும் கூறினர். எங்கள் கலத்தில் பழுது ஒன்றும் உண்டாகவில்லை. நிறையச் சுமையேற்றியதனால் அது நிலையற்றுத் தளும்பித் தள்ளாடிற்று. கடலோடிகள் இனிக் கப்பலுக்கு மீட்சி இல்லை; முழுகிப்போம் என்று அடிக்கடி வருந்திக் கூறினார்கள். முழுகிப்போம் என்று அவர்கள் கூறியது எனக்குப் புலப்படவில்லை. பின்பு அஃது இன்னதென்று அவர்களைக் கேட்டறிந்து துயரமுற்றேன். புயல் வரவர உரம் பெற்றது. மீகாமனும் சற்று அறிவுள்ள வேறு சிலரும் கருணைக் கடலாகிய இறைவனை வேண்டினர்; கப்பல் பட்ட பாட்டைக் கண்டு அது விரைவில் அமிழ்ந்து விடுமென்று

ஏக்கமுற்றனர். பெரும்பாலும் அவர்கள் இறை வழிபாடு செய்வதில்லை. நடுஇரவில் யாவரும் வருந்திக் கிடக்கும் வேளையில் கப்பலின் அடியில் வெள்ளம் வந்ததை அறிவதற்காக இறங்கிய ஒருவன் கப்பலில் ஒழுக்கு ஏற்பட்டு விட்டதென்று கூவினான். உடனே மற்றொருவன் "நான்கடி ஆழத்திற்கு நீரேறியது" என்றனன். அந்த நொடிப் பொழுதிலேயே நீரிறைக்கும் கருவியால் தண்ணீரை இறைத்து வெளிப்படுத்த எல்லோரையும் அழைத்தார்கள். அது கேட்டவுடன் நான் உள்ளங்குன்றி, உணர்வழிந்து பிணம் போலானேன்; உட்கார்ந்தபடியே, படுக்கையில் மூர்ச்சித்து விழுந்தேன். இரண்டொருவர் வந்து என்னைத் தட்டியெழுப்பி, "உனக்கு ஒன்றும் தெரியாதா? இப்பொழுது தண்ணீர் இறைக்க வாயினும் வன்மையில்லையா? வா" என்றழைத்தனர். நான் துடிதுடித்தெழுந்து இயந்திரத்தால் நீரை மூச்சுவிடாமல் இறைத்துக் கொண்டிருந்தேன்.

இவ்வாறிருக்கும்போது, சுமை யேற்றாத நிலக்கரிக் கலங்கள் சில காற்றுக்கு ஆற்றாமல் நங்கூரந் தூக்கிக் கடலில் விரைந்தோடின. கண்ட மீகாமன் அவைகளை நமக்கு உதவியாய் அழைக்கும்படி துன்பத்தின் அறிகுறியாகப் பெருவெடி வெடிக்கச் சொன்னார். அவர் கூறியது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. கப்பலுடைந்ததோ, ஏதும் பெரிய உயிரிழப்புத் துன்பம் நேர்ந்ததோ என்று கலக்கமுற்று மூர்ச்சித்து விழுந்தேன். பேரிடர் வந்தபோது எவனும் தன்னுயிரை எண்ணுவதேயன்றிப் பிறரைக் குறித்து நினைப்பது இயற்கையல்லவே. என் நிலையை எவரும் எண்ணவில்லை. நான் விழுந்தவுடன் வேறொருவன் நீரிறைக்க வந்து, என்னைப் பிணமென்று காலால் தட்டி ஒதுக்கி விட்டான். எனக்கு மயக்கந் தெளிய நெடுநேரஞ் சென்றது.

**கப்பல் மூழ்குதல்**

நாங்கள் கருவியைப் பிடித்தகை விடாமல் நீரை இறைத்தவண்ணமாயிருந்தோம்; இறைக்க இறைக்கக்

தண்ணீர் ஏறியது. கப்பல் முழுகிப்போகும் என்று தோன்றிற்று. புயல் ஒருவாறு தணிந்தது. கப்பல் ஒரு துறையில் போய்ச்சேருமளவும் நிலைத்து நிற்கத் தகுதியற்றது என்றறிந்து, மாலுமி பின்னும் உயிர்பிழைப்புக் குறிப்புடன் பெருவெடி வெடிக்கச் செய்தார். எங்கள் கப்பலுக்குச் சற்று முந்தி நங்கூரம் பாய்ச்சி நின்ற வேறுங் கப்பலில் இருந்தவர்கள் இக்கட்டினைப் பொருட்படுத்தாமல் உயிர்த்துணையாக ஓர் ஓடத்தை அனுப்பினார்கள். அது எங்கள் கப்பலருகில் வர மிகவும் துன்பமுற்றது. அவ்வோடத்தில் நாங்கள் ஏறுவதும், அது கப்பலின் அருகில் வந்து நிற்பதும் இயலாததாயிருந்தது. ஓட்டக்காரர் உயிர்போயினும் எங்களைப் பாதுகாக்கக் கருதி, மிகச் சலிக்கத் தண்டு வலித்துக் கொண்டு வந்தார்கள். ஒரு கயிற்றில் மிதப்புக் கட்டி பின்னணியில் நின்று, ஓடத்திலிருந்தவர்களுக்கு எட்டும்படி வீசினோம். அவர்கள் பெருந் துன்பமுற்று அதை ஒரு வகையாய்ப் பிடித்துக்கொள்ள, பின்னணியை யடுத்து வரும்படி அவர்களை யிழுத்து, எல்லோரும் ஓடத்திலேறித் தப்பினோம். ஓட மேறியபின், அதை அவர்கள கப்பலுக்குத் திருப்பிச் செலுத்திக்கொண்டு போக ஒரு வகையிலும் முடியவில்லை. அதனால் காற்றின்வழிச் செல்லவிட்டுக் கூடிய வரையிற் கரைக்கு நேரே தள்ளிக்கொண்டு சென்றோம். ஓடம் கரை முட்டி உடைந்து போனால் அவர்களுடைய கப்பல் மாலுமிக்கு அதற் கீடான பொருள் கொடுப்பதாக எங்கள் மீகாமன் உறுதிமொழி கூறினர். பின் பாதி வழிக்குத் தண்டு வலித்தும், பாதிவழிக்குச் செலுத்தியும் ஓடம் வடதிசைநாடிச் சென்று வின்டர்டன் நேஸ் என்னும் துறைக்கு அருகிற் கரைசார்ந்தோடிற்று.

கப்பலை விட்டிறங்கி ஒரு நாழிகை நேரஞ் செல்லுமுன் அது கடலுள் முழுகியதைக் கண்டோம். கடலிற் கப்பல் முழுகிற்றென்று சொல்வார்களே, அது இன்னதென்று அப்பொழுதுதான் அறிந்தேன். கப்பல் முழுகிப் போகிறதென்று கடலோடிகள் கூறியபொழுது, நான் எட்டிப் பார்த்தும் என் கண்ணுக்கு ஒன்றும் தெரியவில்லை.

அவர்கள் என்னை ஓடத்தில் விட்ட நேரந் தொடங்கி அச்சத்திஞலும், அளவு கடந்த மனத்துன்பத்தாலும், இன்னும் என்னென்ன துன்பங்கள் நேருமோ என்று ஏங்கிக் கலங்கியமையாலும் என்னுயிர் என்னுள் இல்லை யென்னுமாறு சோர்ந்து போனேன்.

**கப்பலில் இருந்தோர் தப்பிப் பிழைத்தல்**

கரையை நெருங்கி வரும்படி கை சலிக்காமல் தண்டு வலித்துக் கொண்டு வந்தார்கள். ஓடம் புரண்டெழுந்த அலையின்மீது ஏறும்பொழுது கரை காணப்பட்டது. திரளான மக்கள் நாங்கள் கரையேறும் பொழுது எங்களுக்குதவி செய்ய முன்னேற்பாடாய் நின்ருர்கள். வள்ளம் விரைந்து செல்லவில்லை. வின்டர்டன் கலங்கரை விளக்கத்தைத் தாண்டிச் சற்றுத் தொலைவில் **க்ரோமர்** என்னுமிடத்தில் மிக வருத்தப்பட்டு ஒருவகையாய்க் கரையிலிறங்கிஞெம். அவ்விடத்தில் தரை மேற்கு முகமாய்க் கடலுக்குள் ஒற்றி வந்திருப்பதனுல் காற்றின் கடுமை சற்றே தணிந்தது. பின்பு **யார்மத்** நகரத்திற் போய்ச் சேர்ந்தோம். அங்கிருந்த தலைமை அதிகாரியும், மற்ற அதிகாரிகளும், வணிகர்களும், கப்பற்காரர்களும் எங்களைக் கண்டவுடனே கடலில் துன்பமுற்று உயிர் தப்பி வந்தவர்களென்று வருந்தி இருக்க இடங்கொடுத்து ஆதரித்தார்கள். எங்கள் விருப்பப்படி **இலண்டன்** நகரத்திறகாவது, மீண்டும் **ஹல்** நகரத்திறகாவது செல்ல வழிச்செலவிற்குப் பணவுதவி செய்தார்கள்.

இவ்வேளையில் எள்ளளவேனும் எனக்கு அறிவு இருந்திருக்குமாயின் நான் **ஹல்** நகரத்திற்குத் திரும்பி, நேரே வீட்டுக்குச் சென்றிருப்பேன். நான் ஏறிய கப்பல் **யார்மத்** துறையில் முழுகிப் போயிற்றென்றும், நான் இறந்து விட்டேன் என்றும் செய்தி கேட்டு வருந்திக் கிடந்த என் தந்தை மீண்டும் என்னைக் காணும்பொழுது, இறந்த மகன் வந்தானென்று மகிழ்ச்சி மீக்கூர்ந்து என்னைத் தழுவிக் கொண்டாடுவா ரன்றே? நான் பிழைத்திருக்கும் செய்தி நெடுநாள் வரையில் அவருக்குத் தெரியாது.

என்னைப் போலும் நற்பேறு இல்லாதவர்களுக்கு நல்லறிவு வருமா? என் தீய அறிவு என்னை விரைவாகத் தீய வழியிற் செலுத்திக் கொண்டு சென்றது. அவ்வப்பொழுது அடங்கியிருந்து என் நிலைமையைக் குறித்து நீண்ட ஆராய்ச்சி செய்யும்பொழுது, என் அறிவு தெளிந்து இடித்திடித்து நல்வழி காட்டும் நண்பனைப்போல் என்னைத் தூண்டியது. அறிவின் வழியே செல்வதற்கு என்னால் இயலவில்லை. இனிமேல் எனக்கு என்னென்ன கொடிய துன்பங்கள் நேருமோ; எவ்வெவ்விடங்கட்குப் போய்த் துன்பப்படுவேனோ என்றெண்ணி ஏக்கமுற்றிருந்தேன். அவ்வாறிருந்தும் கண்ணெதிரே தோன்றும் உயிரிழப்புத் துன்பத்திற்கு அஞ்சாமற் செல்லும் பித்தனைப் போலவும், தற்காப்புக்காகக் கைக்கொண்ட கூராயுதத்தாற் கழுத்தறுத்து இறக்கும் அறிவிலியைப் போலவும் சிறந்த அறிவினைக் கொண்ட கொள்கையைக் கைவிடாதிருந்தேன். இவ்வாறு அறிவுக்கும் சூழ்ச்சிக்கும் மாறுபாடாய் என்னைத் தீயவழியிற் செலுத்திக் கொண்டு சென்றது எது? உள்ளத்தாலும் உரையாலும் நினைப்பதற்கும் சொல்லுவதற்கும் அரிய இறைவன் எண்ணமோ என்றையுற்றேன். ஆம், பயணத்தின் தொடக்கத்திலேயே அடுத்தடுத்து இரண்டு முறை நேர்ந்த உயிரிழப்புக்குத் தப்பிப் பிழைக்கும்படி கடவுள் அருள்புரிந்தும், உய்யும்வழியிற் செல்வதற்கு என்னுள்ளம் உடன்படாததனால், எனக்கிந்த மாறுபாட்டெண்ணம் உண்டாயதும் இறையின் எண்ணமென்றே சொல்ல வேண்டும்.

**நண்பர் கைவிட்டுக் கடிந்து பேசுதல்**

முன் ஹல் நகரத்தில் எனக்கு மகிழ்ச்சியுரை கூறி என்னைக் கப்பலேற உடன்படுத்திய தோழன் மீகாமனின் மைந்தன் ஆவன். இப்பொழுது யார்மத் நகரத்தில் சேர்ந்த பின் நான் அவனை இரண்டு மூன்று நாள் வரையிற் காணவில்லை. வெவ்வேறிடங்களில் நாங்கள் தங்கினோம். ஒரு நாள் இருவரும் எதிர்ப்பட்ட பொழுது, அவன் என்னை முன்போலச் சீராட்டவில்லை. சற்று விலகியிருந்து ஒப்

புக்கு 'நலமோ' என்று கேட்டான். அவனுள்ளத்தில் என்னைக் குறித்து ஏதோ வேறு எண்ணம் தோன்றியிருந்தது. என் பெயர் ஊர் வரலாறுகளையும், காட்சிகளைக் காணும் எண்ணத்தோடு நாடு கடந்து செல்ல நான் கப்பலேறியதையும் தன் தந்தையாகிய மீகாமனுக்குக் கூறினான். அவர் உடனே சிறிது துணுக்குற்று என்னைப் பார்த்து "தம்பி, இனி நீ ஒரு பொழுதும் கடற் பயணம் செல்லாதே. கடலோடுந் தொழிலுக்கு நீ தகுதியானவன் அல்லன்; இதனை நீ கண்கூடாகக் கண்டாயே" என்றார். அவர் கூறியது எனக்குப் பெரிதும் வியப்பாயிருந்தது. நான், "ஏன் அப்படிக் கூறுகின்றீர்; நீர் இனிக் கடற்பயணம் செய்யமாட்டீரா?" என்று வினவினேன்.

மீகாமன் "அப்படியா? எனக்கும் உனக்கும் வேற்றுமையில்லையா? கடற்பயணம் செய்வதுதான் நான் பயின்ற தொழில். அதைக் கொண்டே நான் வாழ்வு நடத்தவேண்டும். உன் தொழில் அதுவன்று; கடற்பயணம் எவ்வாறிருக்குமென்று அறிய வந்தாய்? உனக்கும் கடலோடும் தொழிலுக்கும் பொருத்தமில்லை என்று கடவுள் மூலமாய்ச் சான்று பிறந்தது. இதனை மறந்து விடாப்பிடியாய் இருப்பாயானல் இன்னும் உனக்குப் பெரிய இடையூறுகள் வரக்கூடும். இஃது உண்மையென்றறி. இறைவன் கட்டளைக்கு மாறுபாடாய் தர்ஷிஷ் என்ற கப்பலில் ஏறிப் பயணம் செய்த ஜோனுவின் பொருட்டுப் பெருங்காற்றினல் அக்கப்பலில் இருந்த எல்லோருக்கும் துன்பம் நேர்ந்தது போல, எங்களுக்கு உன்னல் இத்துன்பம் வந்திருப்பினும் இருக்கும். நன்று ; நீ யார் ? உன் பெயரென்ன ? ஊர் எது ? பெற்றோர் உற்றோர் யாவர் ? நீ கடற்பயணம் செய்யும் நோக்கம் யாது ?" என என் வரலாறுகளைக் கேட்டார். உடனே நான் என் வரலாறுகளை உள்ளவாறு கூறினேன். அது கேட்டவுடன் அவர் சீறிச் சினந்து, இருவிழியுஞ் சிவக்க, "இந்தப் பாவி என் கப்பலில் ஏறுவதற்கு நான் என்ன கொடுவினை செய்தேன்; இறைவனுக்கு நான் எப்படித் தவறு செய்தேன். நூறாயிரம் வராகன் கொடுப்பினும்

நீ போகும் கப்பலில் நான் கனவிலும் அடிவைக்கமாட்டேன்,'' என்று பதறிக் கூறினர். இவ்வளவு சினம் அவருக்குண்டானதற்குக் காரணம் கப்பல் கடலில் மூழ்கிய ஆறுத் துயரத்தைக் குறித்தன்றி, முழுவதும் என் பொருட்டன்று. அவர் மனம் புண்ணுயிருந்ததனுல் சற்று வரம்பு கடந்து பேசினுர். வர வரச் சினம் தணிந்தபின், அவர் சற்று அச்சமும் அன்புமுடையவராய்ப் பேசி, "தம்பி, நீ கடவுள் பழியை வலியத் தேடி அழிந்து போகாதே. உன் தகப்பனுரிடத்திற்குப் போய் நலமாய் வாழ்ந்திரு. உன் மனம் போனபடி போதல் உனக்குச் சிறிதும் நன்ருகாது. செவ்வையான நல்வழியில் திரும்ப வேண்டுமென்று கடவுள் உன் கண்ணுக்கெதிரே தோன்றித் தமது திருக்கரத்தை நீட்டி உன்னைத் தடுப்பதாய் எண்ணிக்கொள். இளைஞனே, ஒன்று கேள், உறுதிமொழி சொல்லுகின்றேன். நீ வீட்டுக்குப் போகாமல் வேறு எவ்விடத்திற்குச் சென்ருலும், அவ்விடங்கள்தோறும் உனக்கு இடையூறுகளும், துன்பங்களும் வரும். உன் முயற்சி யொன்றும் பயன் படாது. உன் செயலெல்லாம் சிதறிப்போகும். நாளடைவில் உன் அரிய தந்தை கூறிய சொல் தவருமல் பயன் தரும்,'' என்று எனக்கு நல்லுரை புகன்ருர்.

நான் ஒன்றும் கூருமற் போய்விட்டேன். பின் நான் அவரைக் காணவும் இல்லை. அவர் சென்றவழி யாதென்று அறியவுமில்லை. வழிச்செலவுக்கு என் கையிற் பணம் சிறிது இருந்தது. கரை வழியாக இலண்டன் நகரத்திற்குச் சென்றேன். செல்லும்பொழுது வழியிலும், சென்று சேர்ந்த பின் அந்நகரத்திலும் வீட்டுக்கு மறுபடியும் செல்வதோ? கடற்பயணஞ் செய்வதோ? எது சிறந்ததென்று என் நெஞ்சத்தில் கவலை யுண்டாயிற்று.

**மீண்டும் வீட்டுக்குச் செல்லாதது ஏன்?**

நேரே வீட்டுக்குச் செல்வதற்கு எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. தாய் தந்தையர் சொல்லைத்தட்டி வெளிநாடு செல்ல வீட்டைவிட்டு நீங்கிய பின்னர், பெற்ருேர்

நகைக்க, உற்ருர் பழிக்க, உறவினர் எள்ளி நகையாட, ஊரார் வெறுக்க, மானமழிந்து, நாணங்கெட்டு, இன்னும் வீட்டுக்குச் செல்வதா? என்று என் உள்ளத்தில் உணர்ச்சி யுண்டாயிற்று. இப்படிச் செய்வதைக் காட்டிலும் தற்கொலை புரிந்து கொள்வதே சிறந்தது என்று எண்ணினேன். இத்தகைய எண்ணமுடையேனய் அங்கிருந்தேன். அப்போது அங்கு உள்ள மக்களிற் பெரும்பாலும் இளமைப் பருவமுடையோர் அறிவு மயங்கி, அறநெறி மறநெறிகட்கும், நன்மை தீமைக்கும், தாழ்வுக்கும் சிறப்புக்கும் வேறுபாடு காணுமல் அறத்தை விலக்கி, மறத்தைக் கைக்கொண்டு, நன்மை செய்ய நாணித் தீமை செய்வதில் பெருவிருப்பங்கொண்டு, அதுவே தமக்கு மேன்மை யென்று நினைத்துத் தலைகீழ் மாறுபாடாய் நடப்பதைக் கண்டேன்.

சிறிது காலம் வரையிலும் இன்னது செய்ய வேண்டும் என்றும், இன்ன வழியில் நாட் கழிக்க வேண்டுமென்றும், நான் உறுதிசெய்யாமல் இருந்தேன். வீட்டுக்குச் செல்வதற்கு எனக்குச் சற்றும் விருப்பமில்லை. எனக்குண்டான துன்பங்கள் எல்லாவற்றையும் வரவர மறந்து விட்டேன். அவ்வாறு மறந்து விடவே வீட்டுக்குத் திரும்பும் நினைவும் நீங்கியது. கடற் பயணம் செய்ய வளமான காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

**ஆப்பிரிக்காக் கண்டத்தை அடைதல்**

என்னைப் பிடித்த தீய அறிவினல் எனக்கு நேர்ந்த கேடு ஒன்ருே? முதலில் அறிவுகெட்டுத் தாய் தந்தையர் வீட்டினின்றும் புறப்பட்டேன். முதற்பொருளான செல்வமும், அறிவு ஆராய்ச்சித் திறமையுமின்றித் திரைகடலோடிச் செல்வந்திரட்ட நினைத்து, தடைக்கு அஞ்சாத நஞ்சுடைய பாம்பைப் போன்று, அறத்தின் உருவமாகிய தந்தைகூறிய அறிவுரைகளையும், அன்புடன் கூறிய அன்னையின் நல்லுரைகளையும் தள்ளினேன். அவைகள் எனக்குச் செவிடன் காதில் ஊதிய **மறைமொழி** போல் ஆயின. என்னுடைய

திய அறிவு இவ்வளவோடு ஒழிந்து போகவில்லை; எவ்விதத்திலும் நிறைவேறாத கருத்துக்களையும், பெருந்துன்பந்தரத்தக்க சூழ்ச்சிகளையும் என் உள்ளத்தில் தோற்றுவித்தது. ஆப்பிரிக்காக் கண்டத்திற்குப் புறப்பட்ட கப்பலில் ஏறிச் சென்றேன். கப்பற்காரர்கள் தங்கள் வழக்கத்தில் ஆப்பிரிக்காக் கண்டத்தை கினியா என்று உரைப்பார்கள்.

**கப்பலில் பணியாளாக ஏன் அமரவில்லை ?**

இப்பயணங்களில் ஒன்றிலாயினும் நான் வேலையாளாய் அமரவில்லை. கடலோடிகள் வகுப்பிற் சேர்ந்து பணியாளாய் அமர்ந்திருப்பேனாயின், சற்று வருந்தி யுழைக்க ஒப்புக்கொண்டிருப்பினும், அணியத்துப் பாய்மரம் ஏற்றவும் இறக்கவும், பாய் தூக்கவும் விரிக்கவும் தணிக்கவும், நன்றாய்ப் பயின்றிருப்பேன். நாளடைவில் மீகாமன் தொழில் செய்யும் தகுதி எனக்கு வாராதிருப்பினும், துணை மாலுமித் தொழிலுக்காயினும் தகுதியுடையவனாகி யிருப்பேன். " வருந்தி யழைத்தாலும் வாராத வாரா," "உவர் நிலத்தில் நல் விதைவித்திடினும், அது முளைத்து விளையாது" என்பவற்றிற் கேற்ப ஏதேனும் தொழில் பயின்று தன் மதிப்போடு காலங் கழிக்கும் முயற்சி எனக்கிருக்குமாயின், வீட்டிலிருக்கும்பொழுதே என் மனம் நல்வழியில் திரும்பாதா ? கையில் நான்கு காசும் மெய்யில் நல்லுடைகளும் இருந்ததனால், நான் தொழில் செய்ய வேண்டுவதில்லை என்று செல்வர்போல் நடக்கத் தலைப்பட்டேன். ஆகவே கப்பலில் எனக்கு வேலை ஒன்றும் இல்லை. நான் எதனையும் செய்யப் பயிலவுமில்லை.

# இரண்டாம் அதிகாரம்

## வாணிகத்தால் பொருளீட்டல்

பெரியோர் சொற்கேளாமல் தங்கள் அறிவின்மையால் நன்னெறியினின்றும் நீங்கித் தீநெறிப்பட்டுத் திரியும் இளைஞர்க்குப் பெரும்பாலும் நல்லோர் தொடர்பு உண்டாகாது. அவர்கள் தொடக்கத்திலேயே தீயோர் கேண்மையை விரும்பித் தீச்செயல் செய்து அழிவைத் தேடிக்கொள்வார்கள். எனக்கு ஒருவகையில் நற்காலம் இருந்ததனால் இலண்டன் நகரத்தில் இருக்கும்போது நல்லொழுக்கமுடையோரிடம் தோழமை கொள்ளும் வாய்ப்புப் பெற்றேன். கினியா கரைக்குப் பயணம்செய்து வந்த கப்பல் மீகாமன் ஒருவருக்கும் எனக்கும் முதலில் அறிமுகம் உண்டாயிற்று. முதற்பயணத்தில் அவர் அதிக ஊதியம் பெற்றதனால், பின்னும் ஒருமுறை அவ்விடத்திற்குப் பயணம் செய்ய எண்ணங் கொண்டிருந்தார். என் பேச்சு அவருக்குச் சற்று விருப்பமுடையதா யிருந்தது. நாடு கடந்து சென்று ஆங்காங்குள்ள சிறப்புக்களைக் கண்டு மகிழ விரும்புகிறேன் என்று நான் சொல்லக் கேட்டு, மீகாமன்: "நீ பயணக் கூலி கொடுக்க வேண்டாம்...; என் கப்பலில் ஏறிவா; நான் உன்னை என் நண்பனு யெண்ணி, கண்மணி போற் பாதுகாப்பேன்; உணவு முதலிய துய்த்தற் பொருள்களெல்லாம் எனக்குக் கிடைப்பதுபோல் உனக்கும் கிடைக்கும்படி செய்வேன்; ஏதேனும் வாணிகப் பொருள் கொண்டு வருவாயாயின், நீ அதை விற்று, வரும் ஊதியம் முழுவதும் எடுத்துக் கொள். பயணச் செலவைப்பற்றி நீ எண்ண வேண்டா. ஒருவேளை உனக்கு நற்காலம் வந்து அதிக ஊதியம் கிடைப்பினும் கிடைக்கும்," என அன்பு கூர்ந்து கூறினர்.

அவர் கூறிய இன்மொழிகளை மனங்குளிரக் கேட்டுக் கப்பலில் ஏற உடன்பட்டேன்; கரவில்லா உள்ளத்தா ராகிய

மீகாமனும் யானும் உயிர் நண்பரானேம். இது நிற்க, நான் சுற்றத்தார் சிலருக்குக் கடிதம் எழுதி, அவர்கள் மொழி வன்மையால் என் தகப்பனுரிடத்திலோ, தாயாரிடத்திலோ முதற்பயணத்துக்கு வாங்கி அனுப்பிய பணம் நாற்பது பவுன் என்னிடமிருந்தன. இந்தச் சிறு தொகைக்கு மீகாமன் கூறிய சூழ்ச்சியின்படி சிறுவர் விளையாட்டுப் பொருள் முதலிய சில்லறைப் பொருள்கள் வாங்கிக் கப்பலில் ஏற்றிக்கொண்டு சென்றேன். தன் நலத்தைப் பெரிதென்று எண்ணுமல் என்னிடத்தில் உறவு பாராட்டி எனக்குற்ற துணை செய்த நேர்மையுள்ள மீகாமனின் உதவியால் இப்பொருள்களை விற்று மிகுந்த ஊதியம் பெற்றேன்.

**மாலுமியின் உதவிகள்**

இதுவன்றி மற்றெந்தப் பயணமும் எனக்கு நன்மை தரவில்லை. இந்த ஊதியம் உண்மை தவறுத உயர்பண்புடைய மீகாமனின் உதவியால் உண்டாயிற்றன்றி வேறன்று. அவர் வழியாய் எனக்குண்டான பயன் இது மட்டுமோ? கணிதக் கலையிலும், மாலுமி நூல் விதிகளிலும் செயல் திறத்துக்கு வேண்டுமளவு அவர் எனக்குக் கற்பித்தார். கப்பல் செல்லும் வழியைக் கண்காணிக்கக் கற்பித்தார்; அவ்வப்பொழுது கப்பல் நிற்கும் இடத்தின் எல்லையை விண்மீன்கள் மூலம் ஒழுங்கு செய்யக் கற்பித்தார். கடலோடிகளுக்கு இன்றியமையாத கலைகள் எல்லாவற்றிலும் எனக்கு ஒருவாறு பயிற்சியை உண்டாக்கினுர். கற்பிக்கும் விருப்பம் அவருக்கும் கற்கும் விருப்பம் எனக்கும் இருந்ததனுல் எனக்கு இவ்வளவு கல்வி வளர்ந்தது. சுருங்கக் கூறின் இந்தப் பயணத்தால் நான் கப்பலோட்டும் தகுதியும் வாணிகஞ் செய்யும் திறமையும் உடையவனுனேன். இந்தப் பயணத்தில் பொருள்விற்றுத் தேறிய பணத்திற்கு நான் வாங்கிய மாற்றுப் பொருள் பொற்பொடி ஐந்து இராத்தல் ஒன்பது அவுன்ஸ் ஆகும். இதை ஏற்றிக்கொண்டுபோய் இலண்டன் நகரத்தில் விற்றுத் தேறிய பணம் மொத்தம் முந்நூறு பவுன். இவ்வளவு செல்வம் இத்துணை விரைவில் எளிதிற் சிக்கியதனுல், "அடாது

செய்தவர் படாது படுவர்" என்பதற்கும், "திரண்ட ஊதியம் பார்வையைக் கெடுக்கும்" என்பதற்கும் ஏற்ப என் தந்தை எனக்குத் தெரியாமல், எட்டாத முயற்சிகளில் ஈடுபட்டு, பிற்காலத்தில் சொல்வதற்கரிய துன்பங்களடைந்து வருந்தினேன்.

### பயணத்தில் துன்பம்

மேற்கூறிய பயணத்தை மிகவும் புகழ்ந்தேனாயினும் அதிலும் எனக்குத் துன்பம் வாராதிருக்கவில்லை. அளவு கடந்த வெப்பத்தால் பித்தக் காய்ச்சல் கண்டு ஒழிவின்றி வருந்தினேன். நாங்கள் சென்று வாணிகஞ் செய்தது பதினைந்தாவது வடக்குக் கோட்டிற்கும் நடுக்கோட்டிற்கும் இடையில் உள்ள கரை சேர்ந்த மிகுந்த வெப்ப நிலமாகும்.

இப்பயணத்தின் பழக்கத்தால் கினியாவில் வாணிகம் செய்யும் வன்மையும் துணிவும் எனக்குண்டாயின. என் உயிர் நண்பராகிய மீகாமனின் வழியாக எனக்கின்னும் பெரும் பேறுண்டாகுமென் றெண்ணி இன்புற்றிருந்தேன். இலண்டன் கரை சேர்ந்த பின் சில நாட்களில் அவர் இறந்துவிட்டார். அவர் இறந்த பின்னரும் என் உள்ளம் தளரவில்லை.

### கடற்சூறை யாடுவோரால் சிறைப்பிடிக்கப்படல்

முன் பயணத்தில் துணை மாலுமித் தொழில் செய்தவர் இப்பொழுது அக்கப்பலின் மீகாமனானார். நான் அவருடன் அக்கப்பலில் பயணப்பட்டேன். இடையில் ஒன்று சொல்ல மறந்துபோனேன். இறந்த மீகாமனின் மனைவி உண்மை யுடையவள். அவள் என்னைப் பொறுத்தவரையில் எள்ளளவும் மாறுபாடு நினைக்கவில்லை. அதனால் நான் எனது கையிருப்பில் இருந்த பணத்தில் இருநூறு பவுனை அச்சமின்றி அவளிடம் ஒப்புவித்துவிட்டு நூறு பவுனுக்குப் பொருள் வாங்கி ஏற்றிக்கொண்டு சென்றேன். இந்த இரண்டாவது பயணத்தில் நான் அடைந்த பொரு

விழப்பும் துன்பமும் போல, எக்காலத்திலும் எவரும் அடைந்ததில்லை.

எங்கள் கப்பல் கானரி தீவு கூட்டத்திற்கும், ஆப்பிரிக்கக் கரைக்கும் இடையிற் செல்லும்போது, ஸல்லி ஆற்றிலுள்ள கடற்கொள்ளையாடும் முகமதியர் கப்பலொன்று பொழுது விடிவதற்கு முன் அதிகாலையிற் பாய்விரித்து எங்களைத் தொடர்ந்து, மிக்க விரைவோடு வருவது கண்டு, நாங்கள் பாய்மரமும், கிளைக் கொம்புகளும், தாங்கத் தக்க அளவும் பாய்விரித்து, மிகவிரைவாய்க் கப்பலைச் செலுத்தி, எட்டாத் தொலைவில் ஓடித் தப்பித்துக்கொள்ள வகை பார்த்தோம். எங்கள் எண்ணம் நிறைவேறவில்லை. கடற்கொள்ளையாடுங் கப்பல் நெருங்கி வந்துவிட்டது. பின்னும் சில நாழிகைமட்டும் கப்பலைச் செலுத்திக்கொண்டு போவோமானல், கள்வர் கப்பல் எங்களைப் பிடித்துக்கொள்ளும் என்பதற்கையமில்லை என்பதை எண்ணிக் கப்பலை நிறுத்திப் போரிட முயன்றோம். எங்கள் கப்பலில் இருந்த பீரங்கி பன்னிரண்டு. கள்வர் கப்பலில் இருந்தவை பதினெட்டு. பிற்பகல் மூன்று மணிக்குச் சூறைக்கப்பல் நெருங்கி எங்கள் கப்பலின் பின்னணியைச் சார வந்தது. அந்தப் பக்கத்தில் நாங்கள் எட்டுப் பீரங்கிகளை நிறுத்தி ஒரே வேளையிற் குண்டுகளைச் செலுத்தினோம். கள்வர் எதிர்க்குண்டுகளைச் செலுத்தினர்கள். பின்பு அக்கப்பலில் இருந்த இருநூறு பெயரும் துப்பாக்கிக் குண்டுகளைச் செலுத்திக் கப்பலை நெருங்கினர்கள். எங்களில் எவர்மேலும் குண்டு பாயவில்லை. எல்லோரும் நீக்கமின்றி, நெருங்கி நின்றோம். அவர்கள் மீண்டும் குண்டுமாரி பொழிய முயன்றது கண்டு தப்பித்துக் கொள்ள நாங்கள் வழிதேடினோம். இந்த முறை கப்பலின் எதிர்ப்பக்கத்தில் நாங்கள் நெருங்கி நிற்கும்படி அவர்கள் சூழ்ச்சிசெய்து, எங்கள் மேற்றட்டில் அறுபது பெயர் ஏறி, தட்டுப் பலகைகளையும், பாய் மரக்கயிறு முதலியவைகளையும் விரைவாய் வெட்டித் தள்ளினர்கள். நாங்கள் சித்தஞ்சலித்து நிற்காமல் விரைந்து அவர்கள் மேல் துப்பாக்கிக் குண்டு செலுத்தினோம்; குறுஞ் சூலங்

களாற் குத்தினேம். மருந்து இருப்பாணி முதலியவை கெட்டிக்கப்பட்ட பெட்டிப் பீரங்கி வெடி தீர்த்தோம். இப்படிச் செய்து இரண்டு முறை அவர்களை எங்கள் உருவினின்று விலக்கினேம். வயிறெரிந்து பதைக்கத் தக்க எங்கள் கதையைச் சொல்லிற் பெருகும். எங்கள் கப்பல் கயிறு முதலிய உறுப்புக்கள் அறுந்து பழுதுபட்டமையாலும், எங்களில் மூன்று பெயர் இறந்து, எட்டுப் பெயர் காயம்பட்டதனாலும் யாங்கள் வன்மையற்றவர்களாய்க் கள்வரால் பிடிக்கப்பட்டோம். அவர்கள் எங்களைக் கைப்பற்றி ஸல்லி என்னும் தங்கள் துறையிற் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

**கொள்ளையரிடத்தில் அடிமை வேலை**

கள்வர் என்னைக் கைப்பற்றியவுடன் எனக்கு என்ன என்ன துன்பங்கள் செய்வார்களோ என்று நினைத்து ஏங்கினேன். எனக்கு அவர்கள் எவ்விதக் கொடுமையும் செய்யவில்லை. என்னைத் தவிர மற்றெல்லாரும் அந்நாட்டுப் பெருமன்னர் முன்னிலையிற் கொண்டு செல்லப்பட்டார்கள். சூறைக்கப்பல் மாலுமி, இளைஞனும், உடல் சிறுத்து இறுகி விரைந்த நடையுடையவனும், வேலை செய்யத் திறமுள்ளவனுமாயிருந்த என்னைத் தன் பங்காய் நிறுத்தித் தனக்கு அடிமையாய் வைத்துக்கொண்டான். **"முன்னேரம் கப்பற்காரன் பின்னேரம் பிச்சைக்காரன்"** என்பதுபோல அதிகாலையில் அச்சமற்ற வணிகனயிருந்த யான் மாலை நேரத்திற்குள் நற்பேறு அற்ற அடிமையாய்ப் போன துன்பத்தை நினைத்து வியந்து வருத்தக் கடலில் மூழ்கினேன். "இனிமேல் துன்பம் வருங்காலத்தில் நான்சொன்ன புத்திமதிகளை நினைத்து வருந்துவாய்; அவ்வேளையில் உனக்கு உதவி செய்வார் ஒருவரும் இல்லாதிருப்பர்" என என் தந்தையார் எதிர்கால நோக்கோடு கூறிய வார்த்தைகளை நினைத்து, அவை எழுத்தெழுத்தாய் நிறைவேறியது கண்டு, இதனைக் காட்டிலும் மிக்க கேடு வேறு என்ன வரப்போகிறது; தெய்வ தண்டனைக் குள்ளானேன்; இனி எனக்கு மீட்சி இல்லை; என்று வருந்தினேன். பின்வரும்

நிகழ்ச்சிகளை முன்னால் அறியும் திறம் எனக்குண்டானால், எனக்கு இந்தப் பேரிடர் ஒரு பொருட்டாகத் தோன்றி யிராது. நான் இவ்வளவு வருந்தியு மிரேன். எனக்கு வந்த துன்பத்திற்கும் பொருளிழப்பிற்கும் நானடைந்த சிறு மைக்கும் இதுவே தொடக்கமானது என்பதனைப் பின் வரும் நிகழ்ச்சிகளால் அறியலாம்.

என்னைச் சிறைப்பிடித்து வீட்டில் வைத்திருந்த மாலுமி மீண்டும் கடற்பயணம் செல்லும்பொழுது என்னை யும் ஏற்றிக்கொண்டு போவானென்றும், அவனை ஸ்பானி யப் போர்க்கப்பலாவது, போர்த்துகீசியப் போர்க்கப்ப லாவது கைப்பற்றிக்கொண்டால் அப்போது எனக்குச் சிறைமீட்சியுண்டாமென்றும் எண்ணி எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என் எண்ணம் சிதறியது. மாலுமி மறுதடவை கப்பலேறியபொழுது, என்னை வீட்டிலிருந்து தோட்ட வேலை செய்யவும், வழக்கமாய் அடிமைகள் செய் தற்குரிய சிறிய தொண்டுகள் செய்யவும் கட்டளையிட்டுச் சென்றான். அவன் கொள்ளைத்தொழில் செய்யப்போய்த் திரும்பி வந்தபின், துறையில் நின்ற தன்னுருவிற்குக் காவலாக என்னை அதில் இருக்கச் சொன்னான்.

### தப்பிப்பிழைக்க எண்ணுதல்

அங்கிருக்கும்போது, அந்தத் தீயோனிடத்தினின்றும் விலகும் பொருட்டு நான் செய்யத்தக்க செயல் என்ன வென்று இரவும் பகலும் ஒரே நினைவோடிருந்தேன். என் எண்ணத்தில் ஆகும் வகை யொன்றும் தோன்றவில்லை. இனி எனக்குச் சிறை மீட்சியுண்டாம் என்று எண்ணுவது பைத்தியம்போலிருந்தது. என் கருத்தை வெளியிட்டு, எனக்குத் துணையாய்ச் சேர்த்துக்கொண்டு போவதற்கு இம்மாலுமியினிடத்தில் என்னைத் தவிர வேறு ஆங்கிலேய னாவது, அயர்லாந்தனாவது, ஸ்காட்டியனாவது அடிமைத் தொழில் செய்யவில்லை. ஆதலினால் இவ் வெண்ணம் இரண்டு ஆண்டுவரையில் என்னுள்ளத்தில் உருப்பெற்

றிருந்ததே யொழிய, எண்ணியவாறு செய்வதற்கு எள்ளள வும் வாய்ப்புக் கிடைக்கவில்லை.

ஏறத்தாழ இரண்டு ஆண்டுகள் சென்ற பின்னர் என் கருத்துக்குப் பொருந்திய வாறும் வியக்கத்தக்கவாறும் ஒரு வாய்ப்பு நேர்ந்தது. என் தலைவன் கடலிற் சூறை யாடப் போவதற்குக் கப்பலை ஒழுங்குபடுத்தி ஏற்பாடு செய்யாமல் நாட்படவிட்டிருந்தான். கையிற் பணமில்லா மையால் அவன் கடலோடவில்லை என்ற செய்தி பிறந்தது. கிழமைக்கு இரண்டொரு முறையும் காற்று மழையில்லா திருந்தால் நாலைந்து முறையும் அவன் இக்கப்பலைச்சேர்ந்த ஓடத்திலேறி மீன் பிடிக்கப் போவதுண்டு. போகும்பொழுது தண்டு வலிக்கும்படி என்னையும், மரஸ்கோ சிறுவன் ஒரு வனையும் அவன் ஏற்றிக்கொண்டு போவான். எங்கள் மூல மாய் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. மீன் பிடிக்கும் தொழிலில் என் கைத்திறத்தை, அவன் பலகாற் கண்டு பாராட்டியதனால், சில வேளை என்னையும், முகமதி யனைய தன் சுற்றத்தாரில் ஒருவனையும், மரஸ்கோ சிறு வனையும் குடும்ப உணவிற்கு மீன் பிடிக்க அனுப்புவான். ஒருநாட் காலையில் காற்று அடங்கிக் கடல் அமைதியாய் இருந்தபொழுது, நாங்கள் ஓடமேறி, மீன் பிடிக்கச் சென் றோம். கடலில் மூன்று கல் தொலைவு போவதற்குள் மூடு பனிப்படலம் சூழ்ந்துகொண்டது. கரை சிறிதும் தெரிய வில்லை. திசை தெரியாது ஒருவாறு அன்று பகல் முழு வதும், அடுத்த இரா முழுவதும் கை சலிக்கத் தண்டு வலித்துக்கொண்டு சென்றோம். மறுநாட் காலையில் பனிப் படலம் நீங்கியபொழுது, கரைக்கும் ஓடம் நின்றவிடத் துக்கும் ஆறு கல் தொலைவு இருந்தது. பகலும் இரவும் நாங்கள் தண்டு வலித்துச் சென்றது கரைக்கன்று; கரைக்கு நேர் எதிர்முகமாய் என்று எங்கள் தவற்றை அப் பொழுதே அறிந்தோம்; காலையிற் புறப்பட்டுக் கடும்பசியி னால் துன்பமுற்றுக் கரைசேர்ந்தோம்.

"சூடுகண்ட பூனை அடுக்களையிற் சேராது" என்னும் முதுரை பொய்க்குமா? எங்கள் தலைவன் இனித்தான் இவ்

வோடத்தில் மீன் பிடிக்கப்போவதுமில்லை, ஒரு பகலும் இரவும் பட்ட இவ்வித அச்சத்தையும் துன்பங்களையும் வலியத் தேடிக்கொள்வதுமில்லை என்றும், முன்பு எங்கள் உருவினின்று கொண்டுவந்த நெடுவள்ளத்தில் திசை காட்டுங் கருவியும், உணவுப்பொருளும் ஏற்றிக்கொண்டு போக வேண்டுமென்றும், சூளுரைத்தான். தனது உருவில் தச்சு வேலை செய்த ஆங்கிலேய அடிமை ஒருவனை யழைத்து, மேற்கூறிய நெடுவள்ளத்தில் இடையில் உருவுக்கு ஒப்பாக அழகான கீழறையொன்றும், அதன் பிற்பாகத்தில் சுக்கான் நிற்கவும், அடிக் கம்பத்தின் பாயை இழுத்துக்கட்டவும் தக்க தட்டு ஒன்றும், முற்பாகத்தில் இரண்டொருவர் நின்று பாய் தூக்கவும், தணிக்கவும், சுருக்கவும் வசதியான அறையொன்றும சமைக்கும்படி கட்டளையிட்டான். அவ்வள்ளம் முக்கோண வடிவமான பாய்விரித்துச் செலுத்தப்படுவது. தச்சன் சமைத்த கீழறை சற்றுத்தாழ்ந்து அடக்கமாயிருந்தது. அது மாலுமியும் இரண்டொரு அடிமைகளும் தாராளமாய்ப் படுத்திருக்கவும், பந்தியுணவுக்கு மேசை வைக்கவும் தக்கதாக இடமகன்றிருந்தது. அன்றியும் ரொட்டி, அரிசி, காப்பிக் கொட்டை முதலிய உணவுப் பொருள்களும், சாராயப் புட்டிகளும் வைக்கும்படி பூட்டுச் சாவியுள்ள சிற்றறைகளும் வகுக்கப்பட்டிருந்தன.

பெரும்பாலும் இவ்வள்ளத்திலேறி மீன் பிடிக்கச் செல்வது வழக்கம். மீன் பிடிக்கும் வல்லமையில் எனக்கு ஒப்பானவர் ஒருவரும் இல்லை. அதனால் மாலுமி எப்பொழுதும் என்னை அழைத்துக்கொண்டு செல்வான். ஒரு நாள் சற்று மேன்மையுள்ள மதிக்கத்தக்க முகமதியர் இரண்டு மூன்று பெயர் மீன் பிடிக்கவோ, மகிழ்ச்சிப் பொழுது போக்கவோ மாலுமியுடன் வள்ளத்திற்போக இருந்தார்கள். அவர்கள் பொருட்டாகச் சிறந்த உணவுப் பொருள்களைத் திரட்டி, மாலுமி முன்னரே இரவில் வள்ளத்திற்கனுப்பினர். மேலும் உருவிலிருந்த குருவிக் குழாய்த் துப்பாக்கி மூன்றை எடுத்துத் துடைத்து, மினுக்கி,

மருந்துக் குண்டுகளுடன் வள்ளத்திற் கொண்டுபோய் வைத்திருக்கப் பணித்தான். மாலுமியும் நண்பரும் மீன் பிடித்தற்கேயன்றிப் பறவை குருவி முதலியன சுட்டு வேட்டையாடுதற்கும் நாட்டமாயிருந்தார்கள்.

"உடையவன் சொற்படி கழுகடிகளைப் பறி" என்பது போல, மாலுமி இட்ட கட்டளையைச் சட்டமாய் நிறை வேற்றி, மறுநாள் அதிகாலையில் வள்ளத்தைக் கழுவித் தூய்மை செய்து, பின்னணிக் கொடிச்சிலையும், பாய்மர உச் சிக்கொடிச் சீலையும் ஏற்றி, விருந்தினர்க்குள்ள ஏற்பாடுக ளெல்லாம் செய்து, அவர்கள் வருகையை எதிர்பார்த் திருந்தேன். சற்று நேரஞ் சென்றபின் மாலுமிமட்டும் வந்து, இன்று விருந்தினர் வர இயலவில்லை. நீ இங்குள்ள ஆடவன், இளைஞன் ஆகிய இருவருடனும், வள்ளத்திற் போய், மீன் பிடித்து, நேரே வீட்டிற்குக் கொண்டுவா. இன்றிரவு என் நண்பர்கள் விருந்துண்ணவருவார்கள் என்று சொன்னான். அவன் சொற்படி செய்ய முயன்றேன்.

பயணத்திற்குரிய துணைப்பொருள்கள் குறைவின்றிச் சேர்த்து வைத்திருந்த சிற்றுருவொன்றை மாலுமி என் னிடம் ஒப்புவித்துக், கடலில் மீன் பிடித்துவரக் கட்டளை யிட்டது சிறை மீட்சி பெறுதற்கு என்னுள்ளத்தில் முன்பு உண்டான விருப்பத்தை எளிதில் நிறைவேற்றிக்கொள்ள நல்ல வாய்ப்பு என எண்ணினேன். கறந்த பாலில் கனிந்த பழம் நழுவி விழுந்ததுபோல எனக்கு மிக நன்மையா யிருந்தது. தலைவன் சென்றபின், மீன் பிடிக்க அன்றிப் பயணம் செல்லவேண்டிய துணைப்பொருள்களைத் திரட்டிச் சேர்க்க முயன்றேன். போகும் இடம் இத்தகையது என்று நான் முடிவு செய்யவில்லை. இவ்விடத்தினின்று மட்டும் நீங்கிக் கண்ணுக்கெட்டாத தொலைவில் எவ்விடத்திற்குப் போயினும் எனக்கு ஒன்றுதான்.

**துணைப் பொருள் சேர்த்துவைத்தல்**

மேலும் உணவுப் பொருள்கள் சேர்க்க முதலில் எளிய சூழ்ச்சியொன்று செய்தேன். வள்ளத்திலிருந்த முகமதி

யனைப் பார்த்துத், தலைவன் தமக்கும் நண்பருக்கும் வாங்கி வைத்த உணவுப் பொருள்களை நாம் உண்பது முறை யன்று; நமக்கு ஏதேனும் எளிய உணவு கொண்டுபோக வேண்டும்" என்றேன். மெய்தானென்று அவன் என் சொல்லை ஒப்புக்கொண்டு, ஒரு பெருங்கூடை நிறைய ஒரு வகைக் கோதுமை ரொட்டியும், மூன்று சாடிகளில் தூய நீரும் வள்ளத்திற் கொண்டுவந்து வைத்தான். அவன் தண்ணீர் குடிக்கக் கரைக்குச் சென்றவுடன் ஆங்கிலேயக் கப்பல் ஒன்றில் கொள்ளையடித்துத் தனது கப்பலில் மாலுமி வைத்திருந்த சாராயப்புட்டிப் பெட்டி யொன்றை விரைந்து எடுத்துக்கொண்டுபோய் வள்ளத்தில் வைத் தேன். அது கப்பலில் இருந்ததென்றும், வள்ளத்தி லிருந்ததென்றும் முகமதியனுக்குத் தெரியாது. அன்றியும் தேன் மெழுகு அறுபத்தாறு இராத்தலும், முறுக்கு நூல் ஒரு பந்தும், கைக்கோடரி, கருக்குவாள், சம்மட்டி ஆகியவை வகைக்கொன்றும் வள்ளத்தில் வைத்தேன். இவைகளெல்லாம் பின்னாளில் எங்கட்குப் பெரிதும் பயன் பட்டன. முதன்மையாகத் தேன் மெழுகு, வர்த்தி செய்வ தற்குப் பயன்பட்டது. பின்னும் ஒரு சூழ்ச்சி செய்து அம் முகம்மதியனை உடன்படுத்தினேன். அது சூழ்ச்சி என்று அவனறியான். அவன் பெயர் **இஸ்மெயில்**, அவனை அழைக்க மக்கள் வழங்கும் பெயர் **மோலி**. நான் அவனைப் பார்த்து: "கூறக்கேள் மோலி! வள்ளத்தில் தலைவன் துப் பாக்கிகள் இருக்கின்றன. மருந்து ரவை இல்லை. கடலில் உள்ளான் பறவைகளைக் கண்டால், நம் உணவிற்குச் சுடலாம்; கப்பலில் மருந்து ரவை முதலிய துப்பாக்கித் துணைப் பொருள்கள் உண்டு. சிறிதளவு எடுத்துக் கொண்டு வருவாயா?" என்று கேட்டேன். அவன் மனம் ஒப்பிப்போய், பெருந்தோற்பை நிறைய மருந்தும், மற்றொன்றில் ரவையும், சில சிறிய குண்டுகளும் கொண்டு வந்து வைத்தான். மருந்து ஒன்றரை இராத்தல், சிறு குண்டுகள் ஐந்தும் ஆறு இராத்தல் வரையிலு மிருந்தன. கப்பலின் பெரிய அறைக்குள் வெடி மருந் திருந்தது. சாராயப் புட்டி ஒன்றைத் திறந்து, சாராயத்தை

மற்றொன்றில் ஊற்றி, வெறும் புட்டி நிறைய அம்மருந்தை யிட்டு வள்ளத்தில் வைத்தேன். பயணத்திற்கு இன்றியமை யாத் துணைப் பொருள்களனைத்தும் இவ்வண்ணம் சேர்த்த பின்னர், மீன் பிடிக்கத் துறையைவிட்டுப் புறப்பட்டோம். துறைக்காவற் சேவகன் எங்களை இன்னாரென்று அறிந்த தனால் ஒன்றும் கேட்கவில்லை. ஒரு கல் தொலைவு ஓடிய பின், பாயிறக்கி வள்ளத்தை நிறுத்தி மீன் பிடிக்கத் தொடங்கினோம். வடகீழ் மூலையில் இருந்து வீசிய காற்று என் உட்கிடைக்குமாறாய் அமைந்தது. தெற்கிலிருந்து வீசிற்றாயின் ஸ்பானியக்கரைக்காவது, அது தப்பினால் காடிஸ் குடாவிற்காவது காற்றோட்டத்தில் ஐயமின்றி எளிதிற் போய்ச் சேரலாம். நேர் காற்று வீசினும், எதிர்காற்று வீசினும், எவ்விதத்திலும் இந்தப் பாழுஞ் சிறையினின்று நீங்கி, ஏதாயினும் ஒரு துறை சேர வேண்டுமென்று முடிவு செய்திருந்தேன். வழியில் வரும் இடையூறுகட்கு இறைவன் துணை இருக்குமென்று எண்ணினேன்.

### கள்வனிடமிருந்து தப்பியோடுதல்

தூண்டிலை வீசியபொழுதெல்லாம் மீன் அகப்பட்டது. அதை முகமதியன் காணாதிருக்க வேண்டும் என எண்ணி னேன். அதனால் நான் தூண்டிலை இழுக்காமல் மீன் அகப் படவில்லை யென்று அரைமணி நேரம் வரையில் தூண்டிலைப் பிடித்தவண்ணமாய் நின்று, அவனைப் பார்த்து: "நாம் இவ்வாறு பொழுது தாழ்த்தினால் தலைவ னுக்குச் சினமுண்டாகும். இவ்விடத்தில் மீன் அகப் படாது. இன்னும் சற்றுத் தொலைவு சென்றால் வேண்டு மட்டும் பிடித்துக்கொண்டு நேரஞ் செல்லுமுன் வீடு மீள லாம்" என்றேன். என் சொல்லில் சிறிதும் வஞ்சனை இல்லை என்றெண்ணிய மோலி உடன்பட்டுப் பாயைத் தூக்கினான். சுக்கான் பிடித்த நான் ஓடத்தைப் பின்னும் மூன்று கல் தொலைவு செலுத்தி, மீன் பிடிக்கக் கருது பவன் போல நிறுத்தியபின் சிறுவனைச் சுக்கான் பிடிக்கச் சொல்லிவிட்டு, மோலியை அணுகி அவன் பக்கத்தில்

ஏதோ ஒன்றை எடுப்பவன்போலக் குனிந்து, கோழிக் குஞ்சைப் பருந்து விரைவில் விழுந்தடித்துக்கொண்டு போவதுபோல, விழித்த கண்ணிமைக்கு முன் மோலியைச் செங்குத்தாய்த் தூக்கிக் கடலில் வீசி யெறிந்தேன். பின்னர் ஓடத்தை விரைந்து செலுத்திக் கொண்டு சென்றேன்.

மோலி முழுகிப் போகவில்லை; மிக விரைவாய் நீந்தி ஓடத்தைத் தொடர்ந்து, "இவ்வுலகில் நீ எவ்விடத்திற்குப் போனாலும் உன்னுடன் வருவேன்; என்னை இப்படி நடுக் கடலிற் கைவிடாமல் ஓடத்தில் ஏற்றிக்கொள்" என்று ஆவலாய்க் கேட்டான். காற்றுத் தணிந்து போனதனால் ஓடம் விரைந்தோடவில்லை. மோலி வேகமாய் நீந்தி நெருங்கி வந்தது கண்டு நான் கீழறையிலிருந்த துப்பாக்கியொன்றை நொடிக்குள்ளெடுத்து, அவன் தலைக்கு நேரிலக்காய்ப் பிடித்து, "மோலி, நான் உனக்குத் தீங்கொன்றும் செய்ய வில்லை. பேசாதிருப்பாயானால் இனிச் செய்வதுமில்லை. நீ இங்கிருந்து நீந்திப்போய்க் கரை சேர முடியும், அலைக் கிளர்ச்சியின்றிக் கடல் அமைதியா யிருக்கின்றது. நேரம் தாழ்த்தலின்றி விரைவாய் நீந்திப்போ; தீங்கொன்றும் செய்யேன்; நான் தப்பியோடி விடுதலை பெற உறுதி கொண்டிருக்கிறேன். அறிவுகெட்டு ஓடத்திற்கு அருகில் வருவாயானால், உன் தலையைத் துளைக்கும்படி ஒரு குண்டு செலுத்தி இக்கடலில் உன்னைப் பிணமாக வீழ்த்துவேன். உயிர் தப்பித்துக்கொள்ள வகை பார்" என்று அச்சங் காட்டி வற்புறுத்தினேன். உடனே அவன் உள்ளத் துணிவிழந்து, திரும்பி, கரைக்கு நேர்முகமாய் நீந்திச் சென்றான். நீந்துவதில் அருந்திறமுடையவனாதலால், அவன் நலமே கரை சேர்ந்திருப்பான் என்பதற்கு ஐயமில்லை.

**சிறுவனைப்பற்றிய கருத்து**

சிறுவனைக் கடலில் தூக்கி எறிந்துவிட்டு, மோலியை எனக்குத் துணையாகக் கொண்டு போக நினைத்தும், அவனிடத்தில் எனக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. ஏதேனும்

இடையூறு செய்வானென்று எண்ணியே இப்படிச் செய்தேன். சிறுவன் பெயர் சூரி. பின் நான் அவனை நோக்கி: "சூரி, இங்கே வா! நீ எனக்கு நம்பிக்கைக் கேடு செய்யாதிருப்பாயானால், நான் உன்னை அன்பாய் ஆதரித்து, நன்கு பெயர் மதிக்கத்தக்க பெரிய மனிதனாக்குவேன். எனக்குக் கேடு நினைக்காதிருப்பாயானால், உன் முகத்தை வருடி முகமது பெயரால் உறுதி மொழி கூறு. அப்படி உறுதிமொழி கூறுவிட்டால் மோலிக்கு வந்த நிலைதான் உனக்கும் வருமென்றெண்ணிக் கொள்." என வற்புறுத்திக் கூறினேன். அதுகேட்ட சிறுவன் முகத்திற் குறுநகை தோன்ற, தினையளவும் தீங்கு நினையாதவன் போன்று, என்னை நோக்கி, "எனக்குத் தாயும் நீர்; தந்தையும் நீர்: யான் துணையற்றவன்; உம்மைத் தவிர எனக்கு வேறு துணையில்லை. நீர் செல்லும் எந்நாட்டிற்கும் உம்முடன் வருவேன்," என்று உறுதி மொழி கூறினான். எனக்கு அவனிடத்தில் எள்ளளவும் ஐயமோ, மாறுபாட்டு எண்ணமோ உண்டாகவில்லை.

**கண்காணு இடம் நோக்கிச் செல்லுதல்**

மோலி தலைக் கறுப்பு மறையவில்லை. அவன் கரைக்கு நீந்திப் போவது கண்டு, ஓடத்தை நெடுங்கடலுக்கு நேர் முகமாய்த் திருப்பி, நீர்ச்சுழற்சியை நாடிச் சென்றேன் என்று மாலுமி முதலானவர்கள் எண்ணத் தக்கவாறு சற்றே காற்றுப் போக்கிற் செலுத்தினேன். அறிவு தெளிந்த எவனும் அப்படித்தான் எண்ணுவான். வள்ளத்தில் வந்து நம்மை வதைக்கத்தக்க திரளான மிலேச்சராகிய நீகிரோவர் வாழும் கரைக்குத் தெற்கு முகமாய் ஓடத்தைச் செலுத்திக் கொண்டு சென்றேனென்று அறிவும் ஆராய்ச்சியுமுள்ள எவரும் எண்ணமாட்டார். அன்றியும் கரையிலிறங்கின நொடிப்பொழுதிலேயே, கொடிய விலங்குகள் தின்றுவிடும். அது தவறினும் கருணையுள்ளம் சிறிதும் இல்லாத விலங்குகளோடு ஒத்த வேடருக்கு உணவாவோம்; ஆகையினால் தென்றிசை

முகமாய் எங்கள் ஓடம் சென்றதென்று எவரேனும் கனவிலும் நினையார்.

பகற்பொழுது நீங்கிற்று; மாலை இருள் சேர்ந்தது; உடனே நான் ஓடத்தைத் திருப்பிக் கரைநெருங்குவதற்குத் தென் கீழ்த்திசையை நாடி நேரே செலுத்தினேன். நேர் காற்று நன்றாய் வீசியதனாலும், ஏரி நீர்போல எறிதிரை யின்றிக் கடல் அமைதியாய் இருந்ததனாலும், ஓடம் விரைவாய்ப் பறந்தது. மறுநாள் மாலை மூன்றுமணிக்குக் கரை காணப்பட்டது. அவ்விடத்திற்கும் ஸல்லி துறைக்கும் நூற்றைம்பது கல்லுக்குமேல் தொலைவு உண்டென்று என் மதிப்பில் தோன்றிற்று. மேலும் அவ்விடம் மொராக்கோ பெருமன்னருடைய ஆணைக்கு உட்பட்ட எல்லையைச் சேர்ந்ததுமன்று; மற்றெந்த அரசனுடைய ஆணைக்குட்பட்டது மன்று என்றெண்ணினேன். கரையில் மனிதர் ஒருவரையும் காணவில்லை.

நான் முகம்மதியருக்கு மிகவும் அஞ்சியதனாலும் ஒருவேளை என்னைத் தொடர்ந்து பிடித்து விடுவார்கள் என்று ஏக்கமுற்றதனாலும், ஓடத்தை நிறுத்தவாயினும், கரையிலிறங்கவாயினும் நங்கூரம் இட்டு நிறுத்தவாயினும் என் மனம் உடன்படவில்லை; வளக்காற்று விடாமல் வீசிக்கொண்டிருந்தமையால், ஐந்துநாள் வரையில் எனது சிற்றுருவைச் செலுத்திக்கொண்டு சென்றேன். ஐந்தாம் நாள் முடிவில் காற்றுத் தெற்கே திரும்பியது. ஆகையினால் முகமதிய உருக்கள் என்னைத் தொடர்ந்து வந்திருப்பினும் இனி என்னைப் பிடிக்க முடியாது என்றெண்ணித் திரும்பி விடுமென்று உறுதியாய் நம்பினேன். அத்துணிவு கைவிடாமல் ஓடத்தைக் கரை நெருங்கத் திருப்பிவிட்டுச் சிற்றாறு ஒன்றின் கடற்கலப்புத் துறையில் நங்கூரம் இட வளமான இடம் எது என்று பார்த்து நின்றேன். அவ்வாற்றின் பெயர், அவ்விடக்குறிப்பு, அந்நாட்டின் பெயர், அங்கிருக்கும் மக்கள் நிலை ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. நான் எவரையுங் காணவுமில்லை. காணக் கருதவுமில்லை. முதன்மையாய் எனக்குப் பருகும்நீர் வேண்டி

யிருந்தது. மாலை நேரத்தில் மேற்கூறிய ஆற்றுத்துறையின் ஒதுக்கில் நாங்கள் சேர்ந்தோம் ; மாலை ஒளி அகன்றவுடன் நீந்திக் கரை சேர்ந்து உலாவிப் பார்த்து நீர்நிலை கண்டு தண்ணீர் முகக்க எண்ணி யிருந்தோம்.

இப்படியிருக்கும்போது, இருட்டின உடனே கொடிய விலங்குகள் குரைப்பதும், பெருமுழக்கஞ் செய்வதும், ஊளையிடுவதும், செவியதிரக் கேட்டுத் திடுக்கிட்டுத் திகைத்தோம். அவை எவ்வித விலங்குகளென்றும் எங்களுக்குத் தெரியவில்லை. சிறுவனுகிய சூரி அச்சத்தாற் சோர்ந்து செயலழிந்து, விடியுமட்டும் ஓடத்தை விட்டிறங்காதிருக்க என்னை வேண்டிக்கொண்டான். அது கேட்டு "ஆகட்டும், சூரி, நான் இறங்கவில்லை; பொழுது விடிந்தபின் கரையேறுவோமானுல், முழக்கம் செய்யும் விலங்கு வேந்தனுகிய அரிமாவினும் கொடிய துன்பம் செய்யத்தக்க மனிதர் எதிர்ப்படுவார்களே; அதற்கு யாது செய்யலாம்?" என்று கேட்டேன். உடனே சூரி கைகொட்டி நகைத்து, "வேறு வழி என்ன, துப்பாக்கி எடுத்து ஒரு வெடி வெடிப்போமானுல், குலை குலைந்து, பதறி நடுங்கி நொடிப் பொழுதில் ஓடித் தப்பி விடுவார்கள்." என்று களிப்போடு கூறினன். ஆங்கில மொழியில் அவனுக்கு நன்ருய்ப் பேசும் வன்மையில்லை. மாலுமிக்கு அடிமைத் தொழில் செய்த எங்கள் மொழிகளை நாள்தோறும் கேட்டுப் பயின்றதனுல், அவனுக்கு ஒருவாறு மதலை மொழி வந்தது. அவன் களிப்பைக் கண்டு மகிழ் கூர்ந்து, மேலும் அவனுக்கு ஊக்கம் பிறக்கும்படி கொஞ்சம் சாராயம் குடிக்கக் கொடுத்தேன். இளைஞன் கூறினுலும் நல்ல அறிவுரையைத் தள்ளிவிடக் கூடாது. இரவு நேரத்தில் கரையேறினுல் ஏதேனும் துன்பம் நேரிடுமென்று சூரி கூறியது உண்மையென்று எண்ணி, பொழுது விடியும் வரையிலும் நங்கூரம் இட்டு அடங்கியிருந்தோம். சிறிதும் உறக்கம் வரவில்லை. இரண்டு மூன்று மணி நேரஞ் சென்றவுடன் மிகப் பெரிய பல வகை விலங்குகள் திரண்டு நெருங்கி நீரில் இறங்கி முழுகிக் குளித்து வெப்பந் தணியுமாறு நீந்தி விளையாடின. அன்றி

யும் ஊளையிட்டு முழக்கஞ் செய்து கொண்டும் இருந்தன. பிறந்த நாள்முதல் அதுவரையில் நான் அத்துணை அஞ்சத் தக்க முழக்கொலி கேட்டதில்லை.

இடியொலி கேட்ட பாம்புபோல, சூரி அளவு கடந்த கலக்கமடைந்து நினைவு இழந்து இருந்தான்; என் நிலையும் அதுவே. இப்படி இருக்கும்போது வியக்கத்தக்க வன்மையுள்ள அரக்க வடிவமான விலங்கு ஒன்று எங்கள் ஓடத்தை நெருங்கி நீந்தி வந்தது. அந்த ஒலி கேட்டுப் பின்னும் அச்சத்தால் நாங்கள் நெஞ்சு உலைந்து நிலைகுலைந்தோம். விலங்கை நாங்கள் கண்ணுற்றுக் காணவில்லை. அதன் முழக்கம் இடி முழக்கத்திற்கு ஒப்பாய் இருந்ததனால், அது பெரிய உரமுள்ள கொடிய விலங்கென்று எண்ணினோம். அஃது அரிமா எனச் சூரி கூறினன். அஃது அரிமாவாய் இருப்பினும் இருக்கலாம். சூரிக்குண்டான தடுமாற்றம் இவ்வளவு என்றில்லை. நங்கூரம் தூக்கித் தண்டு வலித்து ஓடிவிடலாமென்று சூரி அழுது அழுது கூற நான் அதை மறுத்தேன். பின்பு நான் அவனை நோக்கி நங்கூரக் கயிற்றின் முனையில் மிதப்புக்கட்டி, அவ்விடத்திற் குறிப்பாய்க் கயிற்றைப் போட்டுவிட்டு, ஓடத்தைத் திருப்பிச் சற்று விலகி ஓடுவோம், இவ்விலங்குகள் அவ்வளவு தொலைவு நம்மைத் தொடரத்தக்கவை யல்ல என்று கூறினேன். அதற்குள் அந்த விலங்கு ஓடத்தை நெருங்கி, வருதலைக் கண்டு சற்றுத் திடுக்கிட்டேன்; துணிவு கைவிடாமல் மருந்து நிரப்பியிருந்த துப்பாக்கியை எடுத்து ஒரு வெடி வெடித்தேன். உடனே விலங்கு புறங்காட்டிக் கரைக்கு நீந்திச் சென்றது.

வெடியதிர்ச்சி கேட்டவுடன் கடற்கரையிலும், நடுக்காட்டிலும் இருந்த கொடிய விலங்குக்கூட்டங்கள் திறம்பாத ஆண்மையுள்ள ஆடவரும் மனம் கலங்கும்படி பிளிறிக் குரைத்துக் கூவி முழக்கஞ் செய்தன. அதன் பெருமையை எடுத்துரைப்பது இயலாதது. இதற்குமுன் அவைகள் இத்துணை ஒலியோடு ஊளையிட்டதில்லை என்று எண்ணுகிறேன். இராக்காலத்திற் கரைக்குச் செல்வது

உயிர்ழப்பாகுமென்று கடவுளருளால் புலனாயிற்று. பகலிற் கரைக்குச் செல்வதும் தவறென்றே தோன்றிற்று. இரவிற் கரையிலிறங்கி அரிமா, புலி, கரடி முதலிய கொடிய விலங்குகட்கு இரையாவதும், பகலில் விலங்கினும் கொடிய கொலைஞராகிய அறிவிலாக் கீழ்மக்களிடம் அகப்படுவதும் ஒன்றேயன்றோ? இருவகையிலும் உயிர்த்துன்பம் உண்டாதும் என்று நாங்கள் உறுதியாய் எண்ணினோம்.

எவ்வளவு துன்பம் நேரினும், ஓடத்தில் ஒருதுளி, தண்ணீரும் இல்லாததனால், தண்ணீர் முகக்கவேனும் கரையில் இறங்க வேண்டியிருந்தது. "நீங்கள் ஒப்பினால் நான் கரைக்குச் சென்று, ஏரி, குளம், குட்டை, ஆறு, துரவு முதலிய நீர்நிலைகளைத் தேடிப் பார்த்துத் தண்ணீர் முகந்து கொண்டு வருகிறேன்" என்று சூரி கூறினான். அதற்கு நான், "நீ போகவேண்டா; இங்கு இரு. நான் போய்க் கொண்டு வருகிறேன்" என்று கருத்து அறிவதற்காகக் கேட்டேன். அதற்கு அவன் "நன்றி மறப்பது நன்றன்று; நீர் எனக்குச் செய்த உதவி என் உயிர் உள்ளளவும் மறக்கத்தக்கதன்று. எனக்கு ஒரு தீங்கு வரினும் உம்மைப் பாதுகாப்பது என் கடமை. காட்டுள் வாழ்வோராகிய வேடர் எதிர்ப்படின் நான் அவர்கட்கு இரையாகிவிடினும் நீர் தப்பிப் பிழைத்தல் நன்றன்றோ? ஆதலால் நானே கரைக்குச் செல்வது நன்று" என்றான். அவன் சொல் என் செவிக்கு மிகுந்த இனிதாயிருந்தது. அதனைக் கேட்டவுடன் என் மனம் அன்பினால் உருகி மகிழ்கூர்ந்தது. அன்றுமுதல் நான் அவனை என் கண்மணி போலப் பாதுகாத்து அன்பு பாராட்டி வந்தேன். பின்பு நான், "நாம் இருவரும் கரைக்குச் செல்வோம். காட்டில் வாழும் கொடிய மக்களைக் கண்டால் அவர்களை அழித்து இருவரும் தப்பித்துக்கொள்வோம்." என்று அவனுக்குத் தேறுதல் கூறினேன். ஒரு ரொட்டியும், ஒரு கிண்ணம் சாராயமும் அவனுக்குக் கொடுத்தபின் ஓடத்தைக் கரை ஓரம் செலுத்தித் துப்பாக்கி முதலிய படைக்கலங்களும், தண்ணீர் முகக்கக் கலங்கள் இரண்டும் எடுத்துக்கொண்டு இறங்கிக் கரையில் நடந்து சென்றோம்.

ஆற்றில் ஒருகால் கொடுமக்களாகிய வேடர் ஓடம் செலுத்தி வருவார்களோ என்று ஐயங்கொண்டு, எங்கள் ஓடம் மறையும் தொலைவிற்கு நான் செல்லத் துணியவில்லை. ஒரு கல் தொலைவில் பள்ளமான தரை யிருப்பது கண்டு சூரி அவ்விடத்திற்குச்சென்று, சற்று நாழிகை சென்று வேகமாய் ஓடி வந்தான். வேடர் தொடர்வதனாலோ, கொடிய விலங்கைக் கண்டு அச்சமுற்றோ ஓடிவருவதாக நினைத்து, நான் அவனுக்கு உதவி செய்ய விரைந்து சென் றேன். இருவரும் நெருங்கியபின் துப்பாக்கியாற் சுட்டு வீழ்த்திய ஏதோ ஒரு விலங்கை அவன் தோளில் சுமந்து கொண்டு வருவதைக் கண்டேன். அது முயலின் சாயல் உள்ளது; நிறம் வேறு; கால்கள் சற்று நீண்டிருந்தன. அவன் களிப்போடு விரைந்தோடி வந்து, அவ்விடத்தில் கொடிய வேடர் இல்லை என்றும், தூய்மையான நீர் இருக் கிறதென்றும் கூறினான். அவன் கொண்டு வந்த விலங்கின் இறைச்சி மிக்க சுவையாய் இருந்தது.

கடற்பெருக்கு வேலை கழிந்தபின், கரைக்குச் சற்றுத் தொலைவில் ஆற்றுநீர் முத்துப்போலத் தெளிந்து, சிறிதும் உவர்ப்பின்றிப் பருகுவதற்கு நன்றாயிருந்தது. அதனைக் கண்டு இனிச் சூரி சென்ற அவ்வளவு தொலைக்குப் போக வேண்டுவதில்லை என்றறிந்தோம். ஆற்றில் நீர் முகந்து, இறைச்சியைச் சமைத்து உண்டபின் அச்சமின்றி வழி நடக்கத் தொடங்கினோம். நாங்கள் இறங்கின இடத்தில் மனிதர் அடிச்சுவடு ஒன்றும் காணப்படவில்லை.

அந்தக் கரைக்கு நான் முன்னொருமுறை பயணம் செய் திருந்ததனால், **காளரிஸ்** தீவுகளும் **கேப்டிவெர்ட்** தீவுகளும் அருகிலிருப்பதை அறிவேன். நாங்கள் நின்ற இடத்தை இன்னதென்று வரையறுக்கும் கருவிகள் கொண்டுவராமை யால் அவ்விடத்தின் விவரம் ஐயந்திரிபற எனக்குத் தோன்றவில்லை. மேற்கூறிய தீவுகளின் இருப்பிடம் எனக்குத் திட்டமாய்த் தெரியாமையாலும், அவைகளுக்கு நேர்முகமாய்ச் செல்வதற்கு ஓடத்தை விரிகடலில் திருப்பி விடும் காலக்குறிப்பு விளங்காமையாலும், இத்தீவுகளில்

சிலவற்றைக்கூட எளிதிற் காணமுடியவில்லை. ஆங்கி லேயர் வாணிகம் செய்யும் துறை நெருங்கும் வரையிலும் கரை ஓரமாய் ஓடத்தைச் செலுத்திக்கொண்டு சென்ருல், வணிகர் உருக்களைக் காணலாம் என்றும், அவர்கள் எங்களைத் தங்கள் உருவில் ஏற்றி உதவி புரிவார்கள் என்றும் எண்ணினேன்.

**மொராக்கோ** பெருமன்னர் எல்லைக்கும், **நீகிரோவர்** நாட் டின் எல்லைக்கும் இடையில் ஒரு நிலப்பகுதி இருக்கின்றது; அதுதான் நாங்கள் இப்பொழுது நின்ற கலரயை அடுத்த நாடு என்பது நினைத்துப் பார்த்தபோதுதான் புலப்பட்டது. இந்த நிலப்பகுதி கொடிய விலங்குகள் வாழும் காடு; மனித நடமாட்டம் இல்லாத முற்காலத்தில் இங்கிருந்த நீகிரோ வர்கள் முகமதியருக்கு அஞ்சிக் குடிபெயர்ந்து தெற்கே நெடுந்தொலைவுக்கு அப்பால் சென்று விட்டார்கள். நிலம், பயிரிடுதற்கேற்ற வளம் இல்லாதது. செழுமை சிறிதும் இல்லாதது. அதனல் முகமதியர் இந் நிலப்பகுதியில் குடி யேற விரும்பவில்லை. இருதிறத்தாரும் இப்பகுதியைக் கைவிட்டதற்கு மற்ருெரு முதன்மையான காரணம் அரிமா, வேங்கை, செம்புலி முதலிய கொடிய காட்டு விலங்குகள் இங்கு அளவு கடந்து வாழ்கின்றன என்பதேயாம். சில வேளைகளில் முகமதியர் இரண்டாயிரம் மூவாயிரம் பெயர் ஒன்ருய்ச் சேர்ந்து, படைக்கலங் கொண்டு இக்காட்டில் வேட்டையாட வருவதுண்டு. கடற்கரை சார்ந்த இந்நாடு நூறு கல் தொலைவுவரையிலும் மனிதரற்ற பாழ்ந்தரையா யிருந்தது. பகலிற் பார்த்த இடமெல்லாம் பாழ்நிலமும், இரவிற்கேட்ட ஒலி எல்லாம் கொடிய விலங்குகளின் பெரு முழக்கங்களுமேயாம்.

**கானரிஸ்** தீவில் உள்ள **தெனரிஃப்** மலையின் உயர்ந்த கொடுமுடி பகற்காலத்தில் இரண்டொருமுறை என் கண் ணுக்குத் தோன்றியது போல் இருந்தது. அத்தீவை அடைவதற்கு ஆழ்ந்த கடலில் ஓடத்தைத் திருப்பிச் செலுத்தத் துணிந்தேன். எதிர்காற்று அடித்ததனலும், குமுறிக் கொந்தளித்த பெருங் கடலில் எனது சிறிய ஓடம்

செல்லும் தகுதியற்றது ஆதலாலும் மீண்டும் திரும்பி னேன். முன் எண்ணியபடி ஆங்கிலேய வணிகர் உருக்கள் எதிர்ப்படுமென்று கரையை ஒட்டியே ஓடத்தைச் செலுத்தினேன்.

மேற்குறித்த கடற்குடாவினின்று பெயர்ந்த பிறகு, தண்ணீர் முகக்க அங்கங்கே பலதடவை கரையில் இறங்கி னேம். ஒருநாள் அதிகாலையில் மேட்டுத்தரை கடலிற் சிறிது நீண்டு வந்திருக்கும் ஒதுக்கில் நங்கூரம் இட முயன் றேம். கடற் பெருக்கு வேளையாயிருந்ததனால் சிறிது நேரஞ் சென்றபின் கரையை நெருங்கிப் போகலாம் என்று பொறுத்திருந்தோம். பெரும்பாலும் தன் உயிரைக் காத் துக்கொள்வதில் கண்ணுயிருந்த சூரி மெதுவாய் என்னைக் கூப்பிட்டு, "நாம் கரை தெரியாமல் கடலுக்குள் ஓடத்தைத் திருப்பி விடுவது நன்று. அதோ பாரும். அம்மலைச்சாரலில் அஞ்சாத நெஞ்சுடையோரையும் அடிவயிறு கலங்கித் துணுக்குறச் செய்யும் மிகப் பெரிய விலங்கு ஒன்று படுத்து அயர்ந்து தூங்குகின்றது." என்று கூறினன். நான் அவன் குறிப்பிட்ட இடத்தைக் கண்டேன். அங்கு அஞ் சத்தக்க பெரிய கொடிய அரிமா ஒன்று கடற்கரைப் பக்கம் சற்றுப் புடைத்துக் கவிந்திருந்த மலைக்குவட்டு நிழலிற் படுத்திருந்தது. "சூரி, நீ சென்று அவ்விலங்கைச் சுட்டு வீழ்த்து" என்று கூறினேன். சூரி அஞ்சித் தடுமாறி, அவ் விலங்கைச் சுட்டு வீழ்த்துவதா, நானு? ஒரே வாயில் அது என் உடல் முழுவதையும் விழுங்கிவிடுமே" என்றான். பின்பு நான் அவனைப் பேசாமல் படுத்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, பெருங் குழாய்த் துப்பாக்கியை எடுத்து பெரிய இரட்டைக் குண்டும் மருந்தும் இட்டுக் கெட்டித்து வைத்துவிட்டு, வேருெரு துப்பாக்கியில் இரண்டு குண்டும், பின்னும் ஒரு துப்பாக்கியில் சிறு குண்டு ஐந்தும் கெட் டித்து வைத்தேன். பெருந்துப்பாக்கியை அவ்விலங்கின் தலைக்குத் தவருது குறி வைத்து வெடித்தேன். அந்தக் கொடிய விலங்கு தன் மூக்குக்குச் சற்று மேல் காலை அழுந்த வைத்துக்கொண்டு படுத்திருந்ததனல், குண்டு

கள் தலையைத் துளைக்காமல் முழந்தாளின் கீழ்ப்பட்டு, காலெலும்பு ஒடிந்துபோயிற்று. உடனே அரிமா பெருஞ் சினங்கொண்டு சீறி, உறுமிக்கொண்டெழுந்தது; உறுதி யாய் நிற்க முடியாமல் பொத்தென்று விழுந்தது. பின்பு மூன்று காலில் எழுந்து நின்று, கேட்போர் திடுக்குற்று விழும்படி உரத்துமுழங்கியது. அதுபோன்ற அதிரச்செய்யும் முழக்கத்தை நான் என்றும் கேட்டதில்லை. நான் செலுத் திய குண்டு அரிமாவின் தலையில் பாயாமற்போனது வியப் புத்தான். காயம்பட்ட அந்து அவ்விடத்தை விட்டுப் பெய ரத்தொடங்கியது. நான் மற்றொரு துப்பாக்கியை எடுத்து வெடித்தேன். குண்டு தலையிற் பாயவே விலங்கரசு அடி யற்ற மரம்போல அயர்ந்து விழுந்து, கழுத்தறுந்த கோழி துடிப்பதுபோலச் சுழன்று பதறிப் பதைத்தது; அப் பொழுதுதான் சூரி அச்சந்தெளிந்து மனந்தேறிக் கரைக்குப் போக விடை கேட்டான். நான் விடை கொடுத்தேன். அவன் கடலில் குதித்து, ஒரு கையில் துப்பாக்கிகொண்டு, ஒரு கை வீச்சால் நீந்திக் கரைசேர்ந்து, இறக்குந் தறு வாயிலிருந்த அரிமாவின் அருகே சென்று, துப்பாக்கிக் குழாய் வாயை அதன் செவித்துளையோடு அழுந்தவைத் துப், பின்னும் ஒரு குண்டு பாய்ச்சினான். அவ்வளவோடு அதன் எஞ்சிய உயிரும் நீங்கிற்று.

'அரிமாவைச் சுட்டு வீழ்த்தியது நமக்குக் களிப்பாய் இருந்தது. அதன் இறைச்சி உணவிற் குதவாதே; வீணாக மூன்று வெடிமருந்துக் குண்டுகளைப் போக்கடித்தோமே' என வருந்தினேன். சூரி அதன் தலையைத் தறித்துக் கொண்டு வரக்கருதி, ஓடத்திற்கு நீந்தி வந்து, கோடரி கேட்டு வாங்கிக்கொண்டு போய்த் தறிக்கப்பார்த்தான். கோடரி வாய் அதன் தலையில் சிறிதும் ஏறவில்லை. ஒரு காலை மட்டும் தறித்துக்கொண்டு வந்தான். அது மிகவும் அகன்றிருந்தது. அரிமாவின் தோல் எங்கட்குப் பயன்படு மென்றெண்ணிச் சூரியும் நானும் போய் உரித்தோம். சூரி பதறாமல் உரித்தான். எனக்குக் கை ஓடவில்லை. தோல் உரிக்க அன்று பகல் முழுவதும் சென்றது. மாலை நேரம்

வருமுன் பழுதின்றித் தோலை நன்முறையில் உரித்து, ஓடத்தின் அறை விட்டு முகட்டில் உலரும்படி விரித்து வைத்தேதாம். இரண்டு நாள் வெயிலில் அஃது ஈரம் உலர்ந்து நன்றாய்க் காய்ந்தது. பிறகு அஃது எனக்குப் படுத்து உறங்க உதவிற்று.

# மூன்றும் அதிகாரம்

## கடற்பயணத்தில் நீகிரோவரைக் காணுதல்

பின்பு நங்கூரம் தூக்கிப் பத்துப் பன்னிரண்டு நாள் வரையில் ஓரிடத்திலும் நிற்காமல் ஓடத்தை நேர் தெற்கே செலுத்திக்கொண்டு சென்றோம். எங்களிடம் இருந்த உணவுப் பொருள்கள் வர வரக் குறைந்து வந்ததனால் நாளுக்கு நாள் மிகக் குறைத்துச் சிறிது அளவாய் உண்டு வந்தோம். தூய நீர் வேண்டும்பொழுது மட்டும் கரையில் இறங்கினோம். தெற்கு முகமாய்ச் சென்றால், **கேப்டிவெர்ட்** நாட்டுக்கு அருகில் **கேம்பியா** என்னும் ஆறாவது **செனிகல்** என்னும் ஆறாவது எதிர்ப்படுமென்றும், அங்கேஏதாயினும் ஒரு கப்பலைக் காணலாமென்றும் எண்ணினேன். அவ்வாறு காணாதிருக்க நேர்ந்தால், பிறகு என்ன செய்வது என்று எனக்குத் தோன்றவில்லை. தீவைத் தேடிப் போய்ப் பிழைத்தாலும் பிழைக்கலாம்; அங்கிருக்கும் நீகிரோவர் வயப்பட்டு இறந்தாலும் இறக்கலாம் என்று நினைத்தேன். ஐரோப்பாவினின்று **கினியா** கரைக்காவது, **பிரேஜி லுக்**காவது, கிழக்கிந்தியத் தீவுகளுக்காவது பயணப்படும் கப்பல்கள் அனைத்தும் **டிவெர்ட்** முனையையோ **கானரிஸ்** தீவுகளையோ அடைந்தே செல்லும் என்பதனை அறிவேன்: விரித்துச் சொல்ல வேண்டுவதென்ன? சீமைக் கப்பலைக் காண்பேனாகில் அச்சமில்லை. அஃது என் பேறுதான்; காணாதுபோனால், நான் இறக்க வேண்டுவதன்றி வேறு நிலை இல்லை என்று உறுதியா

இவ்வெண்ணத்தைக் கொண்டு மேலும் பத்து நாள் வரையிலும் ஓடத்தைச் செலுத்தினேன். எங்கள் ஓடம் சென்ற கரையை அடுத்த நிலப்பகுதி மக்கள் வாழும் இடம் என்று தெரிந்துகொண்டோம். இரண்டு மூன்று இடங்களில் மனிதர் கூடிக் கடற்கரையில் எங்களைப் பார்த்துக்

கொண்டு நின்றார்கள். அவர்கள் ஆடையில்லாதவர்கள், அவர்கள் உடல் காரிருள் போலக் கறுத்திருந்தது. இறங்கிக் கரைக்குப்போய், அவர்களைக் கண்டு பேச எண்ணினேன்; இளைஞனாயினும் சூரிக்கு இருந்த அறிவு எனக்குண்டாகவில்லை. அவன் "கரையிலிறங்க வேண்டா, இறங்க வேண்டா" என்று வற்புறுத்திக் கூறினான். இறங்காதிருப்பினும் அவர்களோடு பேசும் பொருட்டு, ஓடத்தைக் கரையை ஒட்டிச் செலுத்தினேன்; ஓடம் செல்லச் செல்ல, அவர்களும் கரையோரமாய் நெடுந் தொலைவு ஓடி வந்தார்கள். அவர்கள் கையில் படைக் கலங்கள் இல்லை. ஒருவன் மட்டும் நெடுங்கோல் ஒன்று வைத்திருந்தான். அக்கோல் ஈட்டியென்றும், குறித்த இலக்கில் அணுவும் தப்பாமல் தைக்கும்படி, நெடுந்தொலைவினின்றும் எறிதலில் அவர்கள் வல்லவர்களென்றும் சூரி கூறினான்; ஆகையினால் நான் ஓடத்தைச் சற்றுத் தொலைவில் விட்டுக் கூடியவரையிற் செய்கைகளால் அவர்களுடன் பேசினேன். முதன்மையாய் உணவிற்கு ஏதேனும் வேண்டுமென்று குறிப்பிட்டேன். என் குறிப்பறிந்து அவர்கள் ஓடத்தை நிறுத்தினால், உணவுப் பொருள் கொண்டுவந்து கொடுப்பதாய்ச் செய்கைகளாலேயே தெரிவித்தார்கள். உடனே மேற்பாயைத் தணித்து, ஓடத்தை நிறுத்தினேன். அது கண்டு இருவர் தங்கள் சிற்றூருக்குட் சென்று ஒரு நாழிகை நேரத்தில் இறைச்சி வற்றல் இரண்டு துண்டும், அவர்கள் நாட்டில் விளையும் கூலம் சிறிதளவும் கொண்டு வந்தார்கள். அப்பொருள்களை வாங்க விரும்பினேம்; வாங்குவதற்கு வகை தெரியவில்லை. கரை இறங்கிப்போய் வாங்க எனக்குத் துணிவு பிறக்கவில்லை. எங்களிடம் நெருங்கிவர அவர்களுக்கும் அச்சமாய் இருந்தது. பின்னர் இருதிறத்தாருக்கும் துன்பமில்லாத ஒருவழியை அவர்கள் பின்பற்றினார்கள். மேற்கூறிய பொருள்களைக் கரையோரத்திற் கொண்டு வந்து வைத்துவிட்டு, நெடுந் தொலைவிற் சென்று நின்றார்கள். நாங்கள் இறங்கி அப்பொருள்களை எடுத்துக்கொண்டு மீண்டும் ஓடமேறியபின் கரையருகே வந்தார்கள்.

## பெரிய செம்புலியைக் கொல்லல்

உற்ற காலத்திற் செய்த இந்நன்றிக்குக் கைம்மாறு செய்ய எங்களிடம் ஒன்றும் இல்லாததனால், நாங்கள் தலையசைத்தும், கை உயர்த்தியும் வணக்கம் தெரிவித்தோம். ஆயினும் அவர்கள் செய்த உதவிக்குப் பதின் மடங்கு மிகுதியான பேருதவி செய்யும்படி இமைப்பொழுதில் நேரிட்டது. நாங்கள் கரையோரம் ஓடத்தை நிறுத்திக் கொண்டிருக்கும்போது, மிகப் பெரிய விலங்குகள் இரண்டு மலைப் பகுதியினின்று கடற்கரைக்குச் சொல்லுதற்கரிய சினத்தோடு ஓடி வந்தன. ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்று வந்தது. அவை ஆணும் பெண்ணுமோ? அல்லது இன்பப்பொழுது போக்காய் விளையாடிக்கொண்டு வந்தனவோ? சினத்துடன் போரிட்டு வந்தனவோ? அவை இவ்வாறு வருவது வழக்கமோ? இல்லையோ? எங்கட்குத் தெரியாது. இருப்பினும் "ஒன்றைக்கொண்டு மற்றொன்றையுணர்தல்" என்னும் பொருள் அளவையால் ஒன்றை உறுதியாக அறிந்தோம். கொடிய காட்டு விலங்குகள் இராக் காலத்திலன்றிப் பட்டப்பகலில் வெளியில் வருவதில்லை. அன்றியும் கரையிற் கூடி நின்ற மக்கள் முதன்மையாய்ப் பெண்கள், அவ்விலங்குகளைக் கண்டவுடன் மனங் கலங்கினார்கள்; ஆதலால் இத்தகைய கொடிய விலங்குகள் பகற்காலத்தில் அளையைவிட்டுப் பெயர்ந்து, கடற்கரைக்கு வருவது வழக்கமில்லையென்று எண்ணினேன். ஈட்டிவைத்திருந்த ஒருவன் தவிர மற்றெல்லோரும் அஞ்சி ஓடினார்கள். அவ்விலங்குகள் நேரே கடலில் இறங்க ஓடிவரும்போது, எதிர்ப்பட்ட நீகிரோவர்களில் எவரையாவது பாய்ந்து அடிக்க நினைக்காமல், கடலில் இறங்கி முழுகி, நீந்தி விளையாடிப் பொழுதுபோக்கின. சற்று நாழிகை சென்றபின் ஒன்று ஓடத்தின் அருகே நெருங்கி வந்தது. அவ்வளவு அருகில் வருமென்று நான் தொடக்கத்தில் எண்ணவில்லை. அவ்வாறிருந்தும் தீங்கு ஒன்றும் இல்லை. கூடிய விரைவில் ஒரு துப்பாக்கியிற் குண்டு மருந்து கெட்டித்து, ஒரு கை பார்க்கலாம் என்று துணிந்து வெடி வெடிக்க ஆயத்தமாய்

இருந்தேன். அன்றியும் மற்றிரண்டு துப்பாக்கிகளையு மருந்திட்டு வைக்கும்படி சூரியிடம் கூறினேன். குண் பாயும் தொலைவில் நெருங்கியவுடன் ஒரு வெடி வெடி தேன். குறி தவருமற் குண்டு தலையிற் பாய்ந்ததனுல், அ விலங்கு உடனே நீரில் அமிழ்ந்திப் பிறகு அடுத்தடுத் நீரில் மிதப்பதும் தாழ்வதுமாய் இருந்தது. இவ்வாறு அ பெருந்துன்பம் அடைந்து கரைக்குத் திரும்பிக் கரையே ஓர் அடி தொலைவு இருக்கும்போது இறந்து போயிற்று உயிரிழப்புக்குரிய புண்பட்டதனுலும், தண்ணீர் குடித்து தடுமாறியதனுலும், அதற்கு அவ்வளவு விரைவில் உயி நீங்கியது.

**நீகிரோவர் பெற்ற உதவியும், செய்த உதவியும் :**

வெடி அதிர்ச்சி கேட்டும், துப்பாக்கி மருந்து நெருப் புப்பற்றிய ஒளியைக் கண்டும், அறிவிலிகளாகிய அக் காட்டு மக்களுக்கு உண்டாகிய வியப்பு இவ்வளவென்று சொல்வதற்கு என்றுல் இயலாது. சிலர் அச்சத்தால் அறிவு கலங்கி விழுந்து, பிணம்போல் கிடந்தார்கள் குண்டு பட்ட விலங்கு இறந்து நீரில் முழுகியதையும், அச்ச மின்றிக் கரைக்கு வரும்படி நான் கை காட்டித் தெரிவித்த தையும் கண்டபொழுது அவர்கள் அறிவு தெளிந்து, மனம் தேறி எழுந்து கரையில் வந்து நீரில் அழுந்திய விலங்கைத் தேடிப் பார்த்தார்கள். விலங்கு அழுந்தி மூழ்கிய இடத்தில் நீர் குருதி மயமாய் இருந்ததனுல், இடக் குறிப்பறிந்து நான் ஒரு கயிற்றை வீசி, அவ்விலங்கைச் சுருக்கில் மாட்டி, அக்கயிற்றைக் கரையில் எறிந்தேன். நீகிரோவர் அக்கயிற் றைப் பிடித்து விலங்கை இழுத்துக் கரையேற்றினுர்கள். அஃது அழகிய புள்ளியும், பளபளப்பான உடலுமுள்ள வியக்கத்தக்க செம்புலி. நான் அதைக் கொன்ற அரிய படைக்கலத்தைக் குறித்து நீகிரோவர் உள்ளத்தில் அடங்காத வியப்பு உடையவர்களாய்த் தங்கள் கைகளை உயர்த்தி மரம்போல் விறைத்து நின்றுர்கள்.

இறந்த விலங்கின் துணையாயது துப்பாக்கி வெடி அதிர்ச்சியையும், பளிச்சென்று மருந்து பற்றியதையும்

காது அதிரக் கேட்டும், பார்த்த கண் பஞ்சடையக்கண்டும், கலங்கி விரைந்து நீந்திக் கரையேறி, நேரே மலைப்பகுதிக்கு ஓடிப்போயிற்று, அஃது என்ன இனத்து விலங்கு என்று அவ்வளவு தொலைவில் எனக்குப் புலப்படவில்லை. இறந்த செம்புலியின் இறைச்சியை அக்காட்டுள் வாழும் நீகிரோவர் உடனே உண்ண விரும்பினார்கள். அது கண்டு எடுத்துக்கொள்ளும்படி அவர்களுக்குக் கை அசைப்புமூலம் தெரிவித்தேன். அதன்பொருட்டு எனக்கு வணக்கம்சொல்லும் குறி அவர்கள் முகத்தில் விளங்கிற்று. அந்நொடிப் பொழுதிலேயே அவர்கள் கூரிய குச்சு ஒன்றினால் புலியின் தோலை மிக எளிதாய் உரித்தார்கள். கத்தி முதலிய கருவிகள் அவர்களிடம் இல்லை. நாங்கள் கத்தியினாலும் அவர்களைப்போல அவ்வளவு விரைவில் அவ்விலங்கின் தோலை உரிப்பது இயலாது. உரித்தபின் அதன் ஒரு தொடையைப் பிய்த்து எனக்குக் கொடுக்க வந்தார்கள். நான் அதை மறுத்து, அவர்களையே எடுத்துக்கொள்ளச் சொல்லித் தோலைமட்டும் எனக்குத் தரும்படி குறிப்பித்தேன். அதை அவர்கள் மகிழ்ச்சியோடும், மனநிறைவோடும் கொடுத்தது அன்றி, மேலும் உணவுப்பொருள்கள் மிகுதியாய்க்கொண்டு வந்து கொடுத்தார்கள். பொருள்களின் தன்மை அறியாதிருந்தும் கொடுத்ததை வாங்கிக்கொண்டேன். பிறகு வெறும் கலம் ஒன்றை எடுத்துக் கவிழ்த்துப் பிடித்து, அதில் தூய நீர் இல்லையென்றும், அது நிறைய நீர் வேண்டுமென்றும் அவர்களுக்குக் குறிப்பினால் தெரிவித்தேன். உடனே அவர்கள் ஊருக்குள் சென்று, இரண்டு பெண்களிடம் தண்ணீர் கொடுத்தனுப்பினார்கள். இவர்கள் ஒரு பெரிய மட்பாண்டத்தில் தண்ணீர் கொண்டுவந்து கரையில் வைத்துவிட்டு, முன்போலச் சற்றுத் தொலைவிற் சென்று நின்றார்கள். அம் மட்பாண்டம் வனைந்தவுடன் சூளையில் வைத்துச் சுட்டது அன்று; வெயிலில் உலர்ந்து இறுகியதென்று எண்ணினேன்; என் மூன்று கலங்களையும் சூரியிடத்திற் கொடுத்தனுப்ப, அவன் பாண்டத்திலுள்ள தண்ணீரைக் கலங்களில் விட்டு நிறைத்து, ஓடத்திற் கொண்டுவந்து சேர்த்தான்.

பேசக் கூடிய தொலைவில் நெருங்கியபின் அவர்கள் எனது பெயர், ஊர் முதலிய வரலாறுகளை முதலிற் போர்த்துக்கீசிய மொழியிற் கேட்டார்கள். அஃது எனக்குத் தெரியாது. பின்பு ஸ்பானிய மொழியிற் கேட்டார்கள். அதுவும் நான் அறியேன், மூன்றாவது முறை பிரெஞ்சு மொழியில் வினவினார்கள்; அதில் ஒரு சொல்லும் எனக்குப் புலப்படவில்லை. அதன்மேல் அக்கப்பலில் இருந்த ஸ்காட்லாந்தியன் ஒருவன் என்னைக் கூப்பிட்டு: "நீ யார்? உன் ஊர் எது? எங்கே போகிறாய்?" என்று கேட்டான். "நான் ஆங்கிலேயன், ஸல்லி துறையில் மூர் மதியன் ஒருவன் என்னைச் சிறைபிடித்து வைத்திருந்தான். அவனுக்குத் தெரியாமல் ஒளித்தோடி வருகிறேன்" என்று விடை பகர்ந்தேன். இச்செய்தி கேட்டவுடன் அவர்கள் என்னையும், சிறுவனையும் உருவில் ஏற்றிக் கொண்டார்கள். என் பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்து உருவில் வைக்க இடம் கொடுத்தார்கள்.

**மாலுமி செய்த நல்லுதவிகள்**

தஞ்சம் இன்றி நெஞ்சு கலங்கி, வலுக்கட்டாயமான நிலையில் வருந்திக் கிடந்த எனக்கு அவ்வேளையில் உண்டான மகிழ்ச்சி இவ்வளவென்று சொல்ல வேண்டுமா? சொல்ல முடியுமா? என்னை இவ்வாறு ஏற்றுக்கொண்டு பாதுகாத்த பேருதவிக்கு ஈடாக என் சொத்து முழுவதையும் ஏற்றுக் கொள்ளும்படி மாலுமியிடம் வேண்டினேன். பெருந்தன்மையுள்ள அவர் அதற்கு உடன்படவில்லை. பிரேஜில் கரையிற் சேரும்பொழுது, ஒன்றும் குறையாமல் என் சொத்து முழுவதும் என்னிடம் ஒப்புவிக்கப்படு மென்று கூறினார். மேலும் "ஏதேனும் கைம்மாறு பெறக் கருதி உயிர்வருந்தித் துன்பப்படும் உம்மை நான் பாதுகாத்ததாக எண்ணாதீர்; உம்மைப் போல நான் நடுக்கடலில் ஆதரவின்றித் துன்பப்பட நேர்ந்தால், எதிர்ப்படும் உருவில் இருப்பவர்கள் என்னைத் தம் உருவில் ஏற்றிக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டுமென்று விரும்புவேனல்லவா? அவ்வண்ணம் உம்மை என் உருவில் ஏற்றிக்

கரையேற்றும் மகிழ்ச்சிதான் எனக்குப் பதிலுதவியாகும். எனக்கு இவ்விதத் துன்பநிலை வருவதற்கு நாட்படுமா? அது நிற்க. நீர் பிறந்த நாட்டிற்கும், பிரேஜில் நாட்டிற்கும் மிக்க தொலைவு. அத்தகைய நீண்டதொலைவில் உம்மைக் கொண்டுபோய் விட்டபின், உமது சொத்தை வாங்கிக் கொள்வேனாகில், பசி பட்டினியால் இறப்பதொழிய, உமக்கு வேறு என்ன நிலை இருக்கின்றது? கரைகாணாப் பெருங்கடலில் உயிர் தப்பிப் பிழைக்க வருந்திக்கிடக்கும் உம்மைக் கண்டு, உமக்கு உயிர் கொடுத்துக் கரை சேர்த்த பின், உமது உயிர்த்துணையான சொத்தைக் கவர்ந்து கொள்வேனானால், கொடுத்த உயிரை மீண்டும் வாங்கிக் கொள்ளும் பாவியாவேனே. இல்லை, இல்லை. இப்பாவத்திற்கு நான் ஒருபொழுதும் ஆளாகமாட்டேன். நான் உம்மை அறத்தின் பொருட்டு, எனது உருவில் ஏற்றிக் கொண்டுபோய்க் கரை சேர்ப்பேன். இந்தச் சொத்துக்கள் உம்மிடத்தில் இருக்குமானால், வெளிநாட்டிலிருக்கும் உமக்கு உயிர் வாழத் துணை செய்யும்; பிறந்தநாட்டிற்குச் செல்லும்போது வழிச்செலவுக்கும் உதவும்."

அந்த அறச்செயலாளராகிய மாலுமி சொல்லிய மொழி தவறாமல் நிறைவேற்றினார். என் சொத்தை எவரும் தீண்டக்கூடாதென்று அவர் கப்பலில் இருந்தவர்களுக்கு உறுதியாய்க் கூறியதன்றி, எல்லாவற்றையும் தமது பொறுப்பில் ஒப்புக்கொண்டு, அவற்றிற்கு விவரங் குறித்துப் பற்றுச் சீட்டு எழுதிக்கொடுத்தார். தூய நீர் வைத்திருந்த மண்கலங்கள் முதல் அனைத்தும் கணக்கில் பதிவு செய்யப்பட்டன.

என் ஓடம் மிகச் சிறந்தது. அது மாலுமிக்கும் தெரியும். தமது கப்பலுக்கு உதவியாய் அதை விலை கொடுத்து வாங்க விருப்பமிருக்கிறதென்று வெளியிட்டு, அவர் ஓடத்திற்கு என்ன விலை கூறுகின்றீர் என்று கேட்டார். அதற்கு நான், பலவாறு பேருதவிகள் செய்து என்னைப் பாதுகாத்த உமக்கு நான் விலை சொல்ல மாட்டேன். உமது மதிப்பில் என்ன விலை கொடுக்கலாம்

என்று தோன்றுகிறதோ, அதுவே எனக்கும் ஒத்ததாகும் என்றேன். அது கேட்டு மாலுமி பிரேஜில் கரையிற் சேரும்பொழுது ஓடத்திற்கு விலை பத்துப் பவுன் கொடுப்பதாகக் கடன் முறி எழுதிக் கொடுக்கிறேன். அங்குப் போய்ச் சேர்ந்தபின், எவராவது அவ்விலைக்கு அதிகம் கேட்டால், அதை நானே சேர்த்துக் கொடுப்பேன் என்றார். அன்றியும், சூரிக்கு விலை ஏழு பவுன் கொடுப்பதாகச் சொன்னார். சூரியை விற்க எனக்கு விருப்பமில்லை. அவனை மாலுமிக்கு விற்கக்கூடாது என்பது என் கருத்தன்று; நான் சிறை மீளும்படி எனக்கு வஞ்சனையின்றி உதவி செய்த தனியனாகிய அச்சிறுவன் உரிமையின்றிப் பிறரிடம் அடிமையாய் இருப்பதற்கு நான் விரும்பவில்லை. அதனால் அவனை விற்பது முறையன்று எனக் கருதினேன். இந்த எண்ணத்தை மாலுமிக்கு விளங்கக் கூறினேன். அவர் அதைச் சரியென்று ஒப்புக்கொண்டு; "நன்று, வாழ்நாள் முழுதும் அவன் என்னிடத்தில் சிறையிருக்க வேண்டுவதில்லை. கிறித்துவ நெறியை மேற்கொள்வானாகில், பத்து ஆண்டு முடிவில் அவனை விடுதலை செய்வதாக உடன்படிக்கை எழுதிக் கொடுப்பேன்." என்றார். அவர் சொல் எனக்கும் சரி என்றே தோன்றிற்று. அவரிடத்தில் ஏவல் செய்யச் சூரிக்கும் விருப்பம் இருந்தது. ஆதலினால் அவனை அவருக்கு விற்க உடன்பட்டேன்.

### பிரேஜில் நாட்டுத் துறைமுகமும், கிடைத்த முதற்பொருளும்

பின்பு இருபத்திரண்டு நாட்களில் பிரேஜில் துறையாகிய **ஆல் ஸெயின்ட்ஸ் பே** என்னும் குடாவில் மணப் பயணம் போல விரைவில் சென்று சேர்ந்தோம். இவ்வாறு அளவு கடந்த கட்டுப்பாட்டினின்று மீண்டும் ஒருமுறை கடைத்தேறினேன். இனி நடக்கவேண்டிய முறை யாது என யான் எண்ணத் தொடங்கினேன்.

உற்றவிடத்து உதவிய நல்லோராகிய மாலுமி செய்த உதவிக்கு இணையில்லை. அது இவ்வளவென்று மதிப்பிடுவதற்கு என்னால் இயலாது. அவர் என்னிடத்தில் பயணக்கூலி வாங்க உடன்படவில்லை. நான் ஓடத்தில்

வைத்திருந்த செம்புலித் தோலுக்கு மூன்று பவுனும் அரிமாவின் தோலுக்கு ஆறு பவுனும் விலைகொடுத்து வாங்கினார்; என் பொருள்கள் எல்லாவற்றையும் ஒன்றும் தவறாமல் என்னிடம் ஒப்புவித்தார்; புட்டிகள் வைக்கப்பட்டிருந்த பெட்டி ஒன்று, துப்பாக்கி இரண்டு, தேன்மெழுகுக் கட்டி ஒன்று இவைகளையும் இன்னும் சில எளிய பொருள்களையும் என் கருத்தறிந்து அவர் விலை கொடுத்து வாங்கிக் கொண்டார். பொருள் விற்றுத் தேறின தொகை இருபத்தாறு பவுன். நான் பிரேஜில் கரையில் இறங்கினபொழுது என்னிடம் இவ்வளவு முதல் இருந்தது.

## நண்பர் பழக்கமும் பயிர்த்தொழில் முயற்சியும்

சில நாட்கள் சென்றபின், மாலுமி தம்மைப் போல நற்பண்பும் நேர்மையுமுள்ள ஒருவருக்கு என்னைக் குறித்து வியந்து எழுதியனுப்பினார். அவர் கரும்பு பயிரிடுவித்து, ஆலையில் சர்க்கரை செய்வித்து விற்கும் வணிகர். நான் சிறிது காலம் அவருடன் கூடி வாழ்ந்து கரும்பு பயிரிடும் முறைகளையும், சாறு காய்ச்சித் தூய்மை செய்யும் வகையையும் பயின்றேன். அன்றியும் அங்குள்ள வணிகர் செல்வாக்கோடு வாழ்வதையும், விரைவில் பெருஞ் செல்வராவதையும் கண்டு, அந்நாட்டில் நல்வாழ்வுக் குடிமகனாக இருக்கும் உரிமை பெறக்கூடுமானால், கரும்பு பயிரிட்டு வாணிகஞ் செய்ய நினைத்தேன். அது தொடங்குமுன் இலண்டன் நகரத்தில் மீகாமனின் மனைவி யிடத்தில் நம்பிக்கையாக ஒப்புவித்திருந்த பணத்தை வரவழைக்கும்படி ஏதேனும் ஒருவழி தேட நினைத்தேன். பின்னர் அந்த நாட்டில் வாழும் குடிமகனாக உரிமை பெற்றேன். அப்பொழுது என் கையிலிருந்த பணத்திற்குப் பண்படாத நிலம் வாங்கிப் பயிர் செய்விப்பதற்கு முயன்றேன். இங்கிலாந்தினின்று தருவிக்கக் கருதிய செல்வத்திற்குத் தக்க கரும்புத் தோட்டம் வாங்கிப் பயிரிட முயன்றேன்.

நான் வாங்கிய தோட்டத்திற்கு அயலில் உள்ள தோட்டக்காரன் போர்த்துக்கீசியத் தலைநகராகிய லிஸ்பன்

கொத்திரிவாறு வந்த வெல்ஸ் என்பவர். அவர் தாய்த் தந்தையர் ஆங்கிலேயர். எனக்கும் அவருக்கும் நாளடைவில் மிகுந்த பழக்கம் உண்டாயிற்று. என்னைப்போல் அவருக் கும் வாசித்தல் அதிகம் இல்லை.

> "சேவித்துஞ் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
> பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
> பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
> நாழி அரிசிக்கே நாம்"

என்பது போல, இரண்டு ஆண்டுகள் வரையில் எங்கள் தோட்டத்தில் பயன் உணவிற்கு மட்டுமே கிடைத்து வந்தது. அதன்மேல் நிலத்திற்கு உரம் ஏற ஏற அதன் விளைவு உணவு உடை முதலியவற்றிற்கு மேலும் மிஞ்சியது. அதனால் எங்கள் கையில் பணம் தங்கியது. மூன்றாம் ஆண்டு புகையிலைத் தோட்டம் வைத்தோம். வரும் ஆண் டில் கரும்பு பயிரிடுவதற்கு ஏற்பாடு. இருவரும் சற்று விரி வாகப் பார்த்து இடத்தைப் பண்படுத்தினோம். கையுதவிக்கு ஆள் இல்லாததனால், இருவரும் மெய்வருந்தி உழைத் தோம். என் கையாளாகிய கூலியை விலைக்கு விற்றது தவ றென்று அப்பொழுது எனக்குப் புலப்பட்டது.

> "பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
> பேதை வினைமேற் கொளின்"

கைநுட்ப திறம் தெரிந்து செவ்வையாகச் செய்யும் பழக் கம் இல்லாத நான் செய்வதெல்லாம் பிழைபடுவது இயற்கைதானே; வியப்பன்று. தாய் தந்தையரை நினைத்து வருந்துதல்: என் அறிவின்மையால் வந்த இடுக்கணுக்கு அயல் வெளிநாட்டில் விடுதலை ஏது? தந்தை கூறிய நற் புத்தியைக் கேளாமல் நான் பிறந்த நாட்டைவிட்டு, நான் நாடிவந்த தொழில் ஒன்று; பிரேஜில் நாட்டில் அமர்ந்த தொழில் ஒன்று. அதற்கும் இதற்கும் எள்ளளவும் தொடர்பு இல்லை. இது எனக்கு வன்மையான தொழிலும் அன்று. வேலை மிகுந்த செல்வர் வாழ்வுக்கும், துன்பம் மிகுந்த வறிஞர் வாழ்வுக்கும் இடைப்பட்ட இன்ப நிலையுள்ள

கரைத்தர நிலைமையே வேண்டற்பாலது என்று என் தந்தை எனக்கு இடித்துக்கூறினர். "தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை" என்பதை எண்ணுமல் வந்த எனக்கு இத்துன்ப நிலை வந்தது. இந்த நன்முறையில் என் ஊரிலேயே நாள் கழிக்க நினைத்திருப்பேனுயின், கடல் கடந்து, காடு நீங்கி இவ்வளவு துன்பப்படுவதற்கு வழியில்லையே. வீட்டிலிருந்து, பெற்றேர் உற்ருர் ஊராருடன் கலந்து, செல்வந்தனுக இன்புற்று வாழலாமே. இப்பொழுது நான் ஊரையும் நாட்டையும் விட்டு ஐயாயிரம் கல் தொலைவில் முகம் அறியாதவர்களுடனும், கீழ் மக்களோடும் வாழும்படி நேர்ந்தது. இவ்வுலகத்தில் என்னை அறிந்த எவரிடத்தினின்றும் ஒரு செய்தி வரப்பெறுதற்கியலாத தொலைநாட்டில் வந்திருக்கின்றேனே என்று நினைத்துப் பெரும்பாலான நாட்களில் வருந்தினேன்.

இவ்வண்ணம் என் நிலையை நினைத்து நினைத்து ஆருத் துயரில் அழுந்தினேன். மேற்கூறிய வெல்ஸ் ஒருவர் தவிர, என் வருத்தத்தைச் சொல்லி ஆற்றுவதற்கு எனக்குத் துணை வேறு ஒருவரும் இல்லை. எப்பொழுதும் மெய்வருந்தி உழைப்ப தொழிய, வேறு வேலை இல்லை. மக்களில்லாத பாழ்ந்தீவில் கடல் அலையால் தள்ளப்பட்டு, ஒதுங்கித் தனியே இருந்து, தடுமாறித் தத்தளிக்கும் வாழ்நிலையற்றவனுக்கு ஒப்பாயிருக்கின்றேனே என்று எண்ணி வருந்தினேன். பிரேஜில் நாட்டில் என் நிலைமை அவ்வளவு கட்டுப்பாடு உடையதன்று. நான் பொறுத்திருந்து பதைப்பின்றி என் கைமுதலை அறிவின் துணை கொண்டு செலவு செய்து வாணிகம் செய்வேனுகில், நாளடைவில் திரண்ட செல்வமும், இன்பமும் பெற்று வாழ்வேன் என்பதற்கு ஐயமில்லை. மனிதரிற் சிலர் தமக்குள்ள இன்பத்தை மறந்து, துன்பத்தைப்பாராட்டித் தம்மிலும் இழிந்த நிலையில் இருப்பவர்களோடு தம்மை ஒப்பாக நினைத்துத், தமக்கு வீணுய் மிகுந்த மனவருத்தத்தை வருவித்துக் கொள்ளுகின்றனர். அப்பொழுது, கடவுள், காரணமின்றி அவர்கள் கொள்ளும் மனக்குறையைக் கண்டு அவர்களைப் பின்னும்

வந்து சேர்வதும் சேராததும் பார்ப்போம். உமக்கு நற்கால மிருந்து கெடுதியின்றி அது வந்து சேருமானால், பின் னர் அச்சமின்றி, மிகுந்த தொகையையும் அவ்வாறே தரு வித்துக் கொள்ளலாம். வந்து சேராது போயினும் பெருங்கேடு இல்லை. மற்றை நூறு பவுனாயினும் உமக்கு உதவும் வண்ணம் செல்வியிடம் எஞ்சியிருக்குமே." என மாலுமி எனக்கு நல்வழி கூறினார்.

எவரேனும் கேடுவரும் தீய அறிவுரை கூறினால், அதைப் பொருத்து ஆராயவேண்டும். மாலுமி கூறிய இனிய மொழிகள் என்னை மேன்மையடையச் செய்யும் நன் மொழிகள். ஆதலினால், அவர் கூறியவாறே செய்வது நன்று என்று, ஐயமின்றி எண்ணி, மேற்கூறிய செல்விக்கு விளக்கமாய்க் கடிதம் எழுதினேன். மேலும் போர்த்துக் கீசிய மாலுமிக்கு, அவர் கூறியபடி ஆட்சிமுறியும் எழுதிக் கொடுத்தேன்.

அக்கடிதத்தில் என் பயண வரலாறு, நான் சிறை பிடிக்கப்பட்டது, சூழ்ச்சியால் ஒளிந்தோடி வந்து சிறை மீண்டது, கடலிற் போர்த்துக்கீசிய மாலுமி என்னைக் கண்டதும் தடையின்றிக் கப்பலில் ஏற்றிக் கரைசேர்ப் பித்தது; எண்ணுதற்கரிய பேருதவிகள் பல அவர் செய் தது; என் தற்கால நிலை; என் தொகையை இன்ன வடி வத்தில் அனுப்பவேண்டுமென்பது ஆகிய இவை எல்லா வற்றையும் விளக்கமாகக் குறிப்பிட்டு எழுதிக் கொடுத் தேன். நெறி தவறாத நேர்மையுள்ள இம்மாலுமி **லிஸ்பன்** நகரத்திற் சேர்ந்த பின்னர், அங்கிருக்கும் ஆங்கில வணிகர் சிலர் வழியாய் **இலண்டன்** நகரத்து வணிகர் ஒருவருக்கு நான் எழுதிக்கொடுத்த பணச்சீட்டையும், என் வரலாறு களை விளக்கிய கடிதம் ஒன்றையும் அனுப்பினார். அவ் வணிகர் மேற்கூறிய செல்விக்கு தொடக்கம் முதல் இறுதி வரை நடந்தவைகளை விளக்கமாய்த் தெரிவித்தார். அச் செல்வி பணத்தைக் கொடுத்ததும் அன்றி, அறநெறியின ராகிய மாலுமி எனக்குச் செய்த உதவியின் பொருட்டு, அவருக்குச் சிறந்த நன்கொடைகளும் கொடுத்தனுப்பினாள்.

**மாலுமி வாங்கிக்கொண்டுவந்த பொருள்கள் :**

மேலே குறிப்பிட்ட **இலண்டன்** வணிகர் செல்வியிடம் வாங்கிய நூறு பவுனுக்கு மாலுமியின் கடிதத்திற் கண்ட பொருள்களை **இலண்டன்** நகரத்தில் வாங்கி, **லிஸ்பன்** நகரத்தில் மாலுமியிடத்திற் சேரும்படி அனுப்பினர். அப்பொருள்களை மாலுமி **பிரேஜில்** துறையிற் கொண்டுவந்து என்னிடம் சேர்ப்பித்தார். அன்றியும் அவர் எனது தோட்டத்திற்குப் பயன்படத்தக்க பலவகைக் கருவிகள், இரும்பு யந்திரங்கள், வேறு துணைக் கருவிகள் யாவும் வாங்கிக்கொண்டு வந்து சேர்ப்பித்தார். இக்கருவி முதலியவைகள் எனக்கு உதவுமென்று நான் முதலில் எண்ணவும் இல்லை. தோட்ட முயற்சியில் பழக்கம் முதிருமுன் இத்தகைய நுண் அறிவு எனக்கு வருமா?

மேற்கூறிய பொருள்கள் வந்து சேர்ந்தபொழுது, எனக்கு அளவற்ற மகிழ்ச்சியுண்டாயிற்று. எனக்கு நற்காலம் வந்துவிட்டது என எண்ணினேன். பயன்கருதாது எனக்கு உதவி செய்த மாலுமிக்கு **இலண்டன்** நகரத்திலிருக்கும் செல்வி அனுப்பிய நன்கொடை ஐந்து பவுன் அப்பெரியார் ஆறு ஆண்டுகளுக்குத் தொண்டு செய்ய உடன்படிக்கை முறி எழுதிவாங்கி அந்தத் தொகைக்கு எனக்கு ஒரு கையாளை அமர்த்திக் கொண்டுவந்து கொடுத்தார். அவர் தேடிக்கொடுத்த வேலைக்காரனுக்கு என்னிடத்தில் விலை வாங்க மறுத்துவிட்டார். என் நிலத்தில் விளைந்த புகையிலைமட்டும் சிறிது ஏற்றுக்கொண்டார்.

**எனக்குச் செல்வம் எவ்வாறு பெருகியது?**

மாலுமி எனக்குச் செய்த உதவி இவ்வளவுமட்டும் அன்று. எனக்கு அவர் வாங்கிவந்த பலவகை ஆடை முதலிய பொருள்கள் மென்மையான சீமைப் பொருள்களாதலால், **பிரேஜில்** நாட்டார் அவற்றை விரும்பிப் பணத்தைப் பெரிதெனப் பாராட்டாது என்ன விலை கூறினும் கொடுத்து வாங்கினார்கள். நான் அவைகளை எளிதில் விற்றுத் திரண்ட ஊதியம் பெற்றேன். விற்றுத்தேறின

ஊதியம் வாங்கின விலையைவிட நான்கு மடங்கு அதிகம். இந்த ஊதியம் பெற்ற பின், எனக்கும் பக்கத்துத் தோட்டப் பயிர் செய்த நண்பருக்கும் தோட்டப் பயிர் முறையில் மிகுந்த வேறுபாடு உண்டாயிற்று. மாலுமி லிஸ்பன் நகரத்தினின்று எனக்குக் கொண்டுவந்து சேர்ப்பித்த வேலைக்காரன் ஒருவனுடன் நானும் ஐரோப்பியப் பணியாள் ஒருவனைச் சேர்த்துக்கொண்டேன். அன்றியும் நீகிரோவன் ஒருவனை விலை கொடுத்து அடிமையாக வாங்கினேன். ஆகவே எனது கையாட்கள் மூன்று பேர் இருந்தனர்.

"அஃகமும் காசும் சிக்கெனத் தேடு" என்பது நீதி மொழி. சிலர் இதனை மறந்து, கையிற் கிடைத்த பொருளைக் கண்போலக் காத்து மேலும் மேலும் வளரச்செய்யாமல், தமக்குப் பொருத்தமில்லாத துறைகளில் முயன்று வீண் செலவு செய்கின்றார்கள். அதனால் அவர்கள் பெரும்பாலும் வறுமை அடைந்து வருந்துவார்கள் என்பதை என் பழக்கத்தால் அறிந்தேன். அடுத்த ஆண்டில் எனது தோட்டப் பயிர் நன்றாக விளைந்தது. நான் அறுத்த புகையிலையில் உணவு உடை முதலியன வாங்குவதற்கு அயலார்க்கு விற்றது போக பக்குவஞ் செய்யத் தகுந்ததாகத் தேறியது ஐம்பது கட்டு. கட்டு ஒன்று நூற்றுப்பன்னிரண்டு இராத்தல் உடையது. இந்தப் புகையிலை முழுவதையும் பக்குவமாய்ப் பதஞ்செய்து, லிஸ்பன் நகரத்தினின்று கப்பல் வருமளவும் அடுக்கிவைத்திருந்தேன். வாணிகம் வளர்ந்து செல்வம் பெருகப் பெருக என் தகுதிக்கு ஏலாத எண்ணங்கள் என்னுள்ளத்தில் தோன்றின. நூறுபிரம் பவுன் முதல் வைத்து வாணிகம் செய்பவர்களும் மேலும் வளர முயற்சிக்கும் பொழுது தவறான துறைகளில் இறங்கி வறுமையடைவதை நாம் காணலாம்.

**பேராசைக் கொள்ளுதல் :**

பிரேஜில் நாட்டில் என் நிலைமை எப்படியிருந்ததோ அதுவே முன்பு தந்தையார் கனிந்து கூறிய சிறந்த பொருத்தமான நடுநிலைமை. அதைவிட்டு நீங்காதிருக்

இருப்பின், வர வர வளர்ச்சியடைந்து, சொல்வதற்கரிய இன்ப வாழ்வு உடையவனாய் இருப்பேன் என்பதற்கு ஐயமில்லை. ஆயினும் என்னுடைய நெஞ்சம் உறுதிப்படவில்லை. பலவாறு நினைத்துக் கவலையுற்றுத் தடுமாறிற்று. எனக்கு வந்த தீமைகள் அனைத்தையும் நானே வலிய வருவித்துக்கொண்டேன். என்னுடைய அறிவு ஆராய்ச்சியாளர்களுக்கும், இம்மைக்குரிய முழு இன்ப வாழ்வுக்கும், என் இயற்கை முறைக்கும், இறைவன் திருவுள்ளச் செயலுக்கும் ஏற்கும் தொழில் எது என்று என் வாழ்க்கைப் பழக்கத்தால், உள்ளங்கை நெல்லிக்கனிபோல அறிந்திருந்தேன். அவ்வாறு அறிந்திருந்தும் இந்த நடுத்தர வாழ்வைக் கைவிட்டு வெளி நாடு செல்லவேண்டும் என்னும் அவா என் அறிவுக் கேட்டால் நிலைத்து வளர்ந்தது. தமது தீய அறிவினால் துன்ப நிலை எய்தி வருந்துவோர்க்கு அத்தீய அறிவின் கொடுமை அப்பொழுது தோன்றாது. வருந்தும்பொழுது தோன்றிப் பின்னும் அவர்களை வருத்தும். என் வாழ்விலும் இவ்வாறே நேர்ந்தது.

பெற்றவர்களையும், நான் பிறந்து வளர்ந்த நாட்டையும் விட்டு நீங்கும்படி என்னைத் தூண்டியது, எனது நிலைமைக்கும் இயற்கைக்கும் பொருந்தாத பேரவா. எளிதிற் பெருமை அடைந்து வாழலாம் என்னும் வீணான துணிவு. இந்த வீண் அவாவும், துணிவும் பிரேஜில் நாட்டிற்சேர்ந்து, இறைவன் திருவருளால் ஒருவாறு நலம்பெற்ற பின்னாவது என்னைவிட்டு நீங்கினவா? இல்லை; இல்லை. நான் இன்னும் வீண் அவாவின் வசப்பட்டு, எனது இன்பத்தையும் பொருளையும் மறந்து எவரும் அடையாத பெருந்துன்பம் என்னும் ஆழ்ந்த கடலில் வேண்டுமென்று குதித்து மூழ்கினேன்.

**வணிகரோடு பழகுதல்**

என் துன்ப நிகழ்ச்சிகளை வரிசையாய்க் கூறுவேன் : பிரேஜில் நாட்டிற்சேர்ந்து நான்கு ஆண்டுகளுக்குள் எனது தோட்டம் வர வர மேன்மையுற்று மிகுந்த நல்ல

வில் பொருள்களைக் கொடுத்தது. அந்நாட்டவர்கள் பேசிய மொழியை நாளடைவில் கற்றுக்கொண்டேன். மற்றத் தோட்டக்காரருக்கும் எனக்கும் நட்பு உண்டா யிற்று. தூயஸெல்வேடோர் துறையை அடுத்த அவ்விடத்தி லுள்ள பெரிய வணிகருடன் நட்புச் செய்து கொண்டேன். அவ் வேலைகளில் அவர்களுடன் கலந்து பேசிக்கொண் டிருக்கும்போது, கினியா கரைக்கு நான் இரண்டு தடவை பயணம் சென்ற வரலாறுகளையும், நீகிரோவருடன் வாணிகம் செய்யும் விதத்தையும் கூறினேன். பளிங்குமணி, விளையாட்டுக் கருவிகள்; கத்திவகை, கத்திரிக்கோல், கைக் கோடரி, கண்ணாடித் துண்டு முதலிய எளிய பொருள்கள் கொடுத்து, நீகிரோவரிடத்திற் பொற்பொடி, கூலவகைகள், யானைத் தந்தம் முதலிய விலையுயர்ந்த பொருள்களையும், பிரேஜில் நாட்டில் வேலை செய்வதற்குத் திரளான நீகிரோவர் களையும் எளிதில் வாங்கிக்கொள்ளலாம் என்றும் கூறி னேன்.

இச் செய்திகளைப்பற்றிக் கூறும்பொழுதெல்லாம் அவர்கள் கருத்துடன் கேட்டார்கள். நீகிரோவரை விலைக்கு வாங்குவதைப்பற்றி நான் கூறியது கேட்டு, அவர்களுக்கு மிகுந்த அவா உண்டாயிற்று. அக்காலத்தில் நீகிரோவர் அடிமை வாணிகம் மிக அதிகமாய் நடைபெறவில்லை. அவ் வாணிகம் செய்தவர் சிலரே. அவர்கள் ஸ்பானிய போர்த் துக்கீசிய அரசர்களின் ஆணை பெற்றே வாணிகம் செய் தார்கள். மேலும் ஒருவர் இருவர் நீகிரோவர்களை மொத்த விலைக்கு வாங்கி, மிகுந்த ஊதியம் வைத்துச் சில்லறையாய் விற்றார்கள். அதனால் இவ் வாணிகம் விரிவாய் நடை பெறவில்லை.

## கடற் பயணத்துக்கு என்னை வணிகர் தூண்டுதல்

ஒருநாள் இரவு நானும், எனக்குப் பழக்கமான சில வணிகரும் தோட்டக்காரரும் கூடியிருந்தபோது இவ்வாணி கத்தைப்பற்றிச் சற்று மனம் விரும்பிப் பேசினோம். மறு நாள் விடியற்காலையில் அவர்களில் மூன்று பேர் என்னிடம்

இருந்தும் எஞ்சிய தொகை நூறு பவுனைத் தருவித்து, அதனாலும் நிலம் வாங்கி, இன்னும் மூன்று நான்கு ஆண்டுகள் வரையில் பயிர்த்தொழில் செய்து வருவேனாயின், மூவாயிரம் நாலாயிரம் பவுன் வரையிற் சேரும் என்பதற்கு ஐயமில்லை. அவ்வளவு செல்வந்தனாகும் பொழுது எனக்குக் குறை என்ன? கையிலுள்ள பணம்போல இவ்வளவு திரண்ட ஊதியம் கைக்கு எட்டிய தொலைவில் என் கண்ணுக்கு எதிரே இருக்கும்போது, இதை வெறுத்து வணிகர் சொல்லை ஒப்புக்கொண்டு, கினியாவிற்குப் போக உடன்படுவேன் ஆனால், என்னைப்போன்ற அறிவிலியும் உண்டோ?

**கினியாவிற்குச் சென்று வர ஒத்துக் கொள்ளுதல்**

"விளையும் பயிர் முளையிலே தெரியும்" முன்னேறும் நல்லறிவு எனக்கு இருக்குமாயின், இளமையில் அறநெறியினரும், பெருந்தன்மையுள்ளவரும் ஆகிய என் தந்தை கூறிய நல்லறிவுரைகளைக் கேளாது பிறந்த நாட்டைவிட்டு வெளியேறி வருவேனா? அறிவின்மையைத் தலைமேற்கொண்டு, கேட்டை வருவித்துக் கொள்ளும் தவறே உருவமாய் வந்த எனக்குப் பிழைக்கும் நல்லறிவு எவ்வாறேனும் வருமா? நான் திரும்பிவரும் வரையிலும் என் தோட்டத்தை உங்கள் பொருளைப்போலப் பழுதின்றிப் பாதுகாத்து வரவேண்டும். வழியில் கடவுள் செயலாய் என் உயிருக்கு ஏதேனும் இடையூறு நேருமாயின் என் சொத்தை விற்று நான் குறிப்பிடும் மக்களுக்கு ஒழுங்காய் ஒப்புவிக்க வேண்டும். இவை இரண்டையும் செய்ய நீங்கள் உடன்பட்டால் உங்கள் சொற்படி முழு மனத்தோடு கினியாவிற்குப் பயணம் செய்து வருகிறேன் என்று வணிகருக்குக் கூறினேன். இவ்வண்ணம் தவறின்றிச் செய்ய ஒத்துக்கொண்டு, அவர்கள் உடன்படிக்கை முறி எழுதிக் கொடுத்தார்கள். நடுக்கடலில் என்னைக் கண்டு பாதுகாத்துக் கரை சேர்த்த மாலுமியை என் சொத்துக்கு முழு உரிமை உடைய செயலாளராய் ஏற்பாடு செய்து நான் முறைமையான இறுதி முறி ஒன்று எழுதி வைத்தேன்.

பிழைக்கும் அறிவு கைவிட்டு, அவர்கள் முன்னிலையி
னின்று விலகி அன்று முழுமையாய் எட்டு வருடங்கள்
ஆயின.

**கினியாவுக்குக் கப்பல் புறப்பட்டது**

நான் ஏறிய கப்பல் நூற்றிருபது டன் நிறைபொருள்
ஏற்றும் அளவு உள்ளது. அதில் ஏற்றிய பீரங்கிகள் ஆறு.
கடற் பயணத்தார் பதினான்கு பேர். அன்றியும் என்னோடு
மாலுமியும் அவர் கையாளும் சேர்ந்து உருவில் இருந்த
மக்கள் பதினேழு பேர். விலை உயர்ந்த பொருள் ஒன்றும்
நாங்கள் ஏற்றவில்லை. ஏற்றப்பட்டவைகள் நீகிரோவருடன்
வாணிகம் செய்தற்குரிய பளிங்குமணி, கண்ணாடித்துண்டு
கிளிஞ்சல், சிறிய முகக்கண்ணாடி, கத்தி, கத்தரிக்கோல்
முதலிய உதவாத அற்பப் பொருள்களே. கப்பல் ஏறின
அன்றே பாய் விரித்து எங்கள் கரைக்குத் தொலைவில்
வடக்கு முகமாய்ச் சென்றோம். பத்தாவது பன்னிரண்
டாவது வடக்குக்கோட்டில் செல்லும்பொழுது, ஆப்பிரிக்கக்
கரைக்கு நேர்முகமாய்த் திருப்பிச் செலுத்த நினைத்தோம்.
அக்காலத்தில் கடற் பயணத்தார் செல்லும் வழி இது
தான். **பிரேஜில்** கரை மறையும் தொலைவு அளவும் நேர்
காற்று வீசியது. **தூய ஆகஸ்டினோ முனை** காணும் அளவும்
வெப்பம்மட்டும் மிக அதிகமாய் இருந்தது. அம்முனை
கண்டு, கப்பலை ஆழ்ந்த கடலிற் செலுத்திக்கொண்டு
போகப் போக, கரை மறைந்தது. அதன் பிறகு **பெர்னாண்டி
நோரோன்ஹா** என்னும் கப்பலைச் சற்று வடக்கு நோக்கிச்
செலுத்த எண்ணி, வடகீழ்த்திசை முகமாய்த் திருப்பி
விட்டோம். செல்லும்பொழுது அத்தீவுகள் கப்பலுக்குக்
கிழக்கே தோன்றின. அவ்வாறு சென்று பன்னிரண்டு
நாட்களுக்குள் நில நடுக்கோட்டைத் தாண்டினோம். இறுதி
யாய்ப் பார்த்தபொழுது, கப்பல் நிலவடக்குக் கோட்டுக்கு
ஏழாவது பிரிவு இருபத்திரண்டு புள்ளி மட்டத்தில் நின்றது.
அவ்விடத்திற் செல்லும்பொழுது, விரைவிற் கடுங்காற்றுத்
தோன்றி மோதி அடித்தது. அவ்வளவு விரைவில் கடுங்
காற்றுத் தோன்றி வீசுமென்று நாங்கள் நினைக்கவில்லை.

தூரம் பார்த்து, கரிபி தீவுகள் கிட்டும் அளவும் போய் அடைவதற்குள் மனிதர் வாழும் நாடு இடையில் இல்லை என்று அறிந்து **பார்பெடோஸ்** தீவின் இலக்கை மதிப்பில் வைத்து, கப்பலைத் திருப்பி, நேரே செலுத்த முடிவு செய்தோம். **மெக்ஸிகோ** வளை குடாவின் அலைப் பெருக்கால் கரையில் ஒதுங்காதபடி கப்பலைக் கடலில் ஏறவிட்டுச் செலுத்தினால், ஏறத்தாழப் பதினைந்து நாளில் அது **பார்பெடோஸ்** தீவுக்கரையில் நலமாய்ப் போய்ச் சேருமென்று நம்பினோம். ஆனால் இடையில் உதவி பெறாமல் ஆப்பிரிக்கக் கரைக்குக் கப்பலைக் கொண்டு செல்வதற்கு ஒரு விதத்திலும் இசையவில்லை.

**கரையை அடைய முயலுதல்**

ஆதலால் கப்பலைத் திருப்பி, ஆங்கிலேயருடைய அதிகாரத்தில் உள்ள தீவுகளுள் ஒன்றின் கரையில் அடைந்தால், உதவி பெறுவோம் என்று எண்ணி, மேற்குத் திசையைச் சார்ந்து வடமேற்கு முகமாய்ச் செலுத்திக்கொண்டு சென்றோம். நாங்கள் கருதிச் சென்ற துறை ஒன்று. இறுதியில் கப்பல் அடைந்த துறை ஒன்றாய் முடிந்தது. நிலக்கோட்டின் பிரிவு பன்னிரண்டு, புள்ளி பதினெட்டில் சென்றபோது மீண்டும் புயற்காற்று அடித்து, மிக்க வேகத்துடன் கப்பலை மேற்குத் திசையை நோக்கித் தள்ளிக்கொண்டு சென்று மனிதர் ஒருவரும் இல்லாததும், போக்குவரவு சிறிதும் இல்லாததும் ஆகிய இடத்தில் ஒதுக்கிவிட்டது. நாங்கள் அனைவரும் கடலில் உண்டான தொல்லைகளினின்று நீங்கி உயிர் பிழைத்துக் கொண்டாலும், அவ்விடத்தில் கொடிய காட்டு மக்களால் உண்ணப்படுவது ஒழிய, எங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்லவே இயலாது.

காற்று வன்மையாய் அடித்துக்கொண்டே யிருந்தது. எங்கள் துன்பம் நீங்கவில்லை. இப்படி யிருக்கும்போது, ஒருநாள் அதிகாலையில் கப்பலில் இருந்த ஒருவன், "கரை தெரிகிறது!" என்று கூவினான். அது கேட்டு அறைக்குள்

...யில் எங்களுக்கு ஆறுதல் உண்டாயிற்று. அஃது ...று ஒழிய எங்களுக்கு வேறு இன்பம் இல்லை.

காற்றுச் சற்றுக் குறைந்ததைக் கண்டும், கப்பல் ...ற்களத்தில் தட்டி நின்று சற்றும் அசையாதிருந்த ...ால், எங்கள் நிலை அஞ்சி இரங்கத்தக்கதாய் இருந்தது. ...வரும் தங்கள் உயிரைக்காக்க வகை தேடுவதொழிய, ...ற்றொன்றிலும் எவர் கருத்தும் செல்லவில்லை. காற்று அடிக்கத் தொடங்கு முன் பின்அணியில் வைத்திருந்த ...ள்ளம் ஒன்று சுக்கானில் முட்டி வெடித்து, அதன் பிறகு ...றுசிறு துண்டமாய் உடைந்து போயிற்று. அது கடலில் ...மூழ்கியதோ? அல்லது அலையினால் தள்ளுண்டு ஒதுங்கி ...தோ அறியோம். ஆதலால் அவ்வள்ளம் நமக்கு உதவும் ...ன்னும் எண்ணம் அவ்வளவோடு ஒழிந்தது. மற்றொரு ...ள்ளம் கப்பலில் இருந்தது. அதைக் கடலில் இறக்க ...கை தெரியாமல் மயங்கினோம். மயங்கினும் பேசிக்கொண் ...ருப்பதற்கு அது சமயமா? நொடிக்குள்ளே கப்பல் ...டைந்து உருக்குலைந்து போகுமென்று ஏக்கமுற்றிருந் ...தோம். அஃது உடைந்து போயிற்றென்று சிலர் கூறி ...னார்கள்.

**வள்ளத்தில் ஏறி உயிர்தப்பமுயலுதல்**

இப்படி யாவரும் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் போது, துணை மாலுமி வள்ளத்தைப் பெயர்க்க, மற்றவர் ...ளும் போய்த்தூக்கி, கப்பலின் பக்கத்தில் இறக்கிவிட்டு, அதில் இறங்கினோம். பெருமுழக்கம் செய்யும் இப்பெருங் கடலில் நமக்கு இறைவன் திருவருளே துணையென்று நினைத்து வள்ளத்தைச் சென்ற திசையில் விட்டோம். அதில் இறங்கியவர் பதினொரு பெயர். காற்று முன் அடித்ததைவிட மிகவும் தணிந்திருந்தும், கடல் அலை பொங்கி யெழுந்து கரையில் மோதிற்று. புயல் அடிக்கும்பொழுது இவ்வண்ணம் பொங்கிப் புரளும் கடலை டச்சுக்காரர்கள் ...கொண்ட கடல் என்று கூறுவார்கள்.

ராய் வரும் திரை ஒன்றைக் கண்டு, இனி இதற்குத் தப்பிப் பிழைத்தல் இயலாது என்று எண்ணிக் கலங்கினோம். இவ்வாறு எண்ணி மருண்டு இருக்கும்போது ஒரு நொடிக்குள் அத்திரை நெருங்கிப் புரண்டதனால், வள்ளம் கவிழ்ந்து முழுகிற்று. "இறைவனே!" என்று ஒரு சொல் லாவது சொல்ல எங்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. கை நொடி நேரத்திற்குள் எல்லோரும் ஆளுக்கொரு திசை யாய்ச் சிதறி முழுகினோம்.

**கடலில் விழுந்து வருந்துதல்**

கடல் நீரில் முழுகியபொழுது, என் உள்ளந் தடு மாறியது, இவ்வண்ணம் என்று என் வாயினால் கூறுவ தற்கு முடியாது. நான் நன்றாய் நீந்தப் பயின்றிருந்தேன். ஆயினும் புரளுகின்ற அலைக்கு மேலே தலை நிமிர்த்தி மூச்சு வாங்குவதற்கு என்னால் முடியவில்லை. திரை என்னை நன்றாய் அடித்துக்கொண்டுபோய் நெடுந்தூரத்தில் வெறுந் தரையில் விட்டபின், விரைவு குறைந்து மடங்கிப் பின் னிட்டது. அவ்வேளையில் நான் குடித்த தண்ணீரால் வயிறு உப்பி, குற்றுயிராய்ச் சோர்ந்து போனேன். இன் னும் சற்றுத்துணிவும் மூச்சுவன்மையும் இருந்ததனாலும், கரை அருகில் இருந்ததனாலும் திடீரென்றெழுந்து மறு அலை வந்து மூடிக்கொள்ளு முன், இயன்றமட்டில் கரைக்கு விரைந்து ஓடினேன். ஓடும்பொழுது பகைவர் படை யெடுத்து வருவதுபோல மற்றொரு அலை சினம்கொண்டு மலைபோன்று பொங்கிப் புரண்டு வந்தது. அது வருவது கண்டு, இனி என்னால் ஆற்றாது என்றெண்ணி, மூச்சு அடக்கி மிதந்து நீந்தி மூச்சுவாங்க வேண்டும் என்றும், இவ்வாறு கரை அடுத்துப் போகவேண்டும் என்றும், என் உள்ளத்தில் உறுதி செய்தேன். அன்றியும் வன்மையோடு வரும் அலை என்னைக் கரை நெருங்கத் தள்ளிக்கொண்டு போய், விரைவு குன்றி மடங்கிப் பின்னிடும்பொழுது, அஃது என்னை மீண்டும் கடலுக்குள் அடித்துக்கொண்டு போகாத படி பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற கவலையோ டிருந்தேன்.

அலை மோதும் இடத்திற்குச் சற்றுத் தொலைவிற்போய், புல்லுள்ள பசுந்தரையில் அச்சந் தெளிந்து உட்கார்ந்து களைப்பாறினேன்.

**கரையில் ஏறிய பின் உண்டான மகிழ்ச்சி**

இவ்வாறு உயிர் பெற்று நலத்துடன் கரையேறிய பின், கால் நாழிகைக்கு முன் எனக்கு உண்டான உயிர்த் துன்பத்தினின்று என்னை வியக்கத்தக்க விதமாய்த் தப்புவித்துக் கரைசேர்த்த கருணையுள்ள கடவுளுக்கு வணக்கஞ் செய்தேன். இறந்துபோவது உறுதி என்று முடிவு செய்யப்பட்டுக் கைவிடப்பட்ட ஒருவன் மரணத் துன்பத்தினின்று தப்பிப் பிழைப்பானாகில் அவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சிப் பெருக்கு இத்தன்மையதென்று உள்ளபடி எடுத்துக் கூற முடியுமோ? எனக்கு உண்டான மகிழ்ச்சியும் மெய்ம்மறந்த இன்பமும் அவ்வண்ணமே இருந்தன. கொலை செய்து தூக்குத் தண்டனை தீர்ப்புப்பெற்ற ஒருவன் தூக்கு மரத்தில் ஏறி, அவன் கழுத்தில் கயிறு இட்டு இறுக்கி அடிப்பலகை தட்டுவதற்கு இருக்கும் அந்த நேரத்தில் அவனை உயிர்த் தண்டனையினின்று விலக்கிவிடும்படி ஆணை பிறந்துள்ளது என்ற செய்தி அவன் காதில் கேட்கும்பொழுது துன்பக் கடலில் மூழ்கிய அவன் அந்த மகிழ்ச்சியைத் தாங்கிக்கொண்டு பிழைத்திருக்கமாட்டான். அதனால் அன்றே அந்த நேரமே அவன் உடம்பினின்று சிறிது அளவு குருதியைக் குத்தி எடுக்கும்படி வைத்தியனை அனுப்புகின்றார்கள். இஃது வியப்பு அன்று. எதிர்பாராத நிலையில் விரைந்து உண்டாகும் துன்பத்தைப் போல் இன்பமும் தொடக்கத்தில் மனந்தடுமாறித் துளுக்குறச் செய்யும்.

எனக்கு நேரிட்ட பேரிடருக்கு நான் வியக்கத்தக்கவாறு தப்பிப் பிழைத்துக் கரையேறியதைப்பற்றிய நினைவில் மெய்ம்மறந்து மூழ்கி, கைகளை ஏற்றி, கரையில் உலாவி, என் புன்னனை நெஞ்சில் எழுந்த எண்ணங்களுக்கேற்பப் பலவகை உடற்கோணங்கள் செய்தேன். அவைகளை விரித்

[illegible] கூட எனக்குத் தெரியவில்லை. என் கூட்டாளிகள் எல்லாரும் [illegible] இறந்து போனதையும், நான் ஒருவன் [illegible] உயிர் தப்பியதையும் எண்ணி வியந்தேன். [illegible] அவர்களை நான் காணாததால் இறந்து [illegible] செய்தேன். அவர்கள் அணிந்திருந்த [illegible] தொப்பி ஒன்றும், இரண்டு [illegible] ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாதவைகள் இரண்டு [illegible] அடையாளத்தையும் நான் காண வில்லை.

[illegible] அடிபட்டதால் தங்கிய உரு தெரிகின்றதா [illegible] பார்த்தேன். எதிரையும், சிதறிய [illegible] பெருங்கடல் போன்றிருந்ததனால், [illegible] கப்பல் எனக்குத் தோன்றவில்லை. என் [illegible] இறைவனே! நான் எவ்வாறு கரையேறி னேன் என்று வியப்பு அடைந்தேன்.

**கரையேறிய பின் மனக்கலக்கம்**

நான் மெய் கூறியபடி பெற்ற நன்மையை எண்ணி மகிழ்ந்த பின், அவ்விடம் எத்தன்மையதென்று நான்கு திசையும் பார்த்து ஆராயத் தொடங்கினேன். இனிச் செய்வது என்ன என்று நினைத்து மனம் வருந்தினேன். பெருந்துன்பம் நீங்கியும் அச்சந் தணியவில்லை. உடுத்தி யிருந்த ஆடை நனைந்து, உடல் மரம்போல விறைத்துப் போயிற்று; அதைக் களைந்தால் உடுத்துக்கொள்வதற்கு மாற்று ஆடை இல்லை. உணவு உண்டு நீர் பருகிப் பசிக்களை ஆற்றுவதற்கு ஒன்றும் இல்லை. பட்டினியால் இறந்து போவதும் அது தப்பினால் கொடிய விலங்குக்கு இரையாவதும் ஒழிய வேறு ஒரு வழியும் தோன்றவில்லை. உணவிற்குரிய விலங்கு பறவை முதலியவற்றைக் கொன்று தின்று பிழைக்கவாயினும், என்னைக் கொன்று உண்ண நினைக்கும் கொடிய விலங்குகளை அழித்து, எனது உயிரைக் காக்கவாயினும் ஏற்ற படைக்கலங்கள் ஒன்றும் இல்லை. இதை நினைக்க நினைக்க, என் மன வருத்தம் மேலும்

அதிகப்பட்டது. கத்தி ஒன்று, சுங்கான் ஒன்று ஒரு [illegible]ல் புகையிலை சிறிது அளவு இவைகள் தவிர வேறொன்றும் என்னிடம் இல்லை. அதனால் பித்தங் கொண்டவன்போல மனத்துன்பத்தால் அறிவு மயங்கித் திரிந்தேன். மாலை நேரம் நெருங்கவே என்மனம் குன்றியது. இரவு நேரத்தில் கொடிய விலங்குகள் வெளிப்பட்டு இரை தேடி வருமாயின், நான் அவைகளுக்குத் தப்பிப்பிழைக்கும் வகை என்னவென்று எண்ணிக் கவலையுற்றேன்.

**இரவில் மரத்தில் ஏறிப் படுத்து உறங்குதல்**

விண்ணுலகத்து மரம்போலக் கிளைகள் அடர்ந்து, பருத்த முள்உள்ள மரம் ஒன்று பக்கத்தில் நின்றது கண்டு, அன்று இரா முழுதும் அதில் ஏறியிருக்க முடிவு செய்தேன். பிழைக்கும் வகை ஒன்றும் என் அறிவுக்கு எட்டாததனால், மறுநாள் எம்முறையில் சாவு நேரினும் ஏற்றுக்கொள்ளலாம் என்று கருதினேன். நாவறட்சியாய் இருந்ததனால் நீர் நிலை தேடிச் சென்று, கடற்கரைக்கு ஒரு பர்லாங் தொலைவில் கண்டு, நீர் முகந்து பருகிப் பசி எடாது இருக்கும்படி ஒருதுண்டு புகையிலையை வாய்க்குள் இட்டுக்கொண்டு, மீண்டும் மரத்தில் ஏறிக்கொண்டேன். கைக்கு உதவியாகக் குறுந்தடி ஒன்று வெட்டி வைத்துக் கொண்டு, தூக்கத்தில் விழுந்து போகாமற் பக்குவமாய்ப் படுத்திருந்தேன். துன்ப முற்றவர்களுக்குத் தூக்கம் வர நாழிகை செல்லுமா? இரவு முழுதும் அயர்ந்து நன்றாகத் தூங்கினேன். என் நிலையில் இருக்கும் எவருக்கும் அச்சம் தெளிந்து தூக்கம் வரும் என்று நான் நினைக்கவில்லை.

## நாலாம் அதிகாரம்

### கப்பல் கண்ணுக்குப் புலப்பட்டது

தூக்கந்தெளிந்து நான் எழுந்திருக்கும்போது ஞாயிறு தோன்றி நெடுநேரஞ் சென்றிருந்தது; வானத்தில் மப்பு மந்தாரம் இல்லை; அடித்த காற்று ஓய்ந்தது. கடல் முன் போலப் பொங்கிப் பெருமுழக்கம் செய்யவில்லை. மணற் குன்றில் தட்டி நின்ற மரக்கலம் இரவு கடற் பெருக்கு வேளையில் அலை வீச்சினால் அவ்விடத்தினின்று பெயர்ந்து, முதல் நாள் விசையில் முட்டி என்னைக் காயப்படுத்தின பாறையருகில் வந்து நின்றது. அது கண்டு நான் மிகவும் வியப்புக்கொண்டேன். நான் இருந்த இடத்துக்கும் கப்பல் நின்ற இடத்திற்கும் இடையில் ஒரு கல் தொலைவுக்கு உள்ளாகவே இருந்தது. கப்பல் ஆட்டமின்றி நிமிர்ந்து எனக்கு இன்றியமையாது பயன்படத்தக்க சில பொருள்களையாவது எடுத்து வருவதற்குக் கப்பலுக்குப் போய் வருதல் கூடுமானால் அஃது எனக்கு நற்பேறாகும் என்று எண்ணினேன்.

மரத்தில் வாழும் விலங்கைப்போல நான் படுத்திருந்த மரத்தினின்று இறங்கி, நான்கு திசையிலும் பார்த்தேன். முதலில் என் கண்ணுக்கு எதிர்ப்பட்ட பொருள் காற்றும் அலையும் அடித்துக்கொண்டு வந்து கரையில் ஒதுக்கி விட்ட படகேயாகும். அஃது எனக்கு வலப்புறத்தில் ஏறத்தாழ இரண்டு கல் தொலைவில் இருந்தது. அதைப் பார்ப்பதற்காகக் கரையோரமாய்ச் சற்றுத் தொலைவு சென்றேன். எனக்கும் படகு இருந்த இடத்திற்கும் இடையில் அரைக் கல் தொலைவு அகன்ற ஒரு குடா இருந்தது. அதனால், அப்பொழுது படகிற்குப் போக இசையாது என்று திரும்பினேன். அன்றியும் என்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டு, ஏதாயினும் கண்டு எடுத்து வருவதற்காகக்

கப்பலுக்குப் போகவேண்டும் என்றே முதன்மையாய்க் கருதினேன்.

### கப்பலுக்குச் செல்ல முயலுதல்

உச்சிப்பொழுது நீங்கிய சற்று நேரத்தில் கடல் அலை கிளர்ச்சியின்றி அமைதியுற்று, வற்று வேளையாய் இருந்தது. கப்பலுக்கு மிக நெருங்கிய தொலைவுமட்டும் நான் நடந்து சென்றேன். போகும்போது ஆறின புண்ணில் கோலிட்டதுபோல, அடங்கிய மனக்கவலை மீண்டும் என் நெஞ்சில் தோன்றியது. கப்பலை விட்டு இறங்காதிருந்திருப்போமானால், நாங்கள் அனைவரும் தப்பிப் பிழைத்து நலத்தோடு கரையேறியிருப்போம். மனிதர் துணை இன்றி நான் தனியனாய் இப்படித் துன்பப்பட நேரிட்டிராது என்பதாகச் சற்று ஆழ்ந்து நினைத்தேன். அதனால் என் நெஞ்சு கலங்கிக் கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. அழுது பயனென்ன? இயலுமானால் கப்பலுக்குப் போகவேண்டும் என்று முடிவு செய்து, வெயில் அதிக வெப்பமாய்க் காய்ந்ததனால், மேல் சட்டை முதலிய உடைகளைக் களைந்து வைத்துவிட்டுக் கடலில் இறங்கி நீந்திச் சென்றேன். கப்பல் தரையில் தாக்கி, நீர் மட்டத்துக்கு மேல் மிகவும் உயரமாய் இருந்தது. நான் தாவிப்பிடித்து அதன்மேல் ஏறுவதற்கு ஒன்றும் அகப்படவில்லை. இரண்டு முறை கப்பலைச்சுற்றி நீந்தி வந்தேன். இரண்டாம் தடவை நீந்திவரும்போது கப்பலின் முன் அணியில் ஒரு சிறு கயிறு நான் தாவிப் பிடிக்கத்தக்க உயரத்தில் தொங்கியிருப்பது கண்டேன். அது முதல் முறையில் என் கண்ணுக்குப் புலப்படாமல் தப்பியது வியப்புத்தான். இனி என் துன்பம் தீர்ந்ததென்று கயிற்றை எட்டிப் பிடித்து ஏறி முன் அணியிற் சேர்ந்தேன்.

### கப்பலின் உள்ளே சென்று காணுதல்

கப்பலின் அடிப்பலகை பிரிந்து, கீழறையில் நீர் ஊறி வெள்ளம்போல் நின்றது. உறுதிவாய்ந்த மணற்குன்றின் முனையில் கப்பலின் ஒரு பக்கம் தட்டிப் பின்னர் அந்த

அலைமேல் நன்கு உயர்ந்து இருந்தது. ஆனால் நீர் மட்டம் அளவிறந்து ஏறாது இருந்தது. இந்த நிலையில் இருந்ததால், அதன்மேல் கட்டிய பின் அணியில் கெடுதி ஒன்றும் நேரவில்லை. அங்கிருந்த பொருள்கள் எல்லாம் தண்ணீரில் நனைந்து பழுதாகாது இருந்தன. பழுதுபட்ட பொருள்கள் இவை என்றும், பழுது படாதவைகள் இவை என்றும் விருப்பத்தோடு ஆராய்ந்ததுதான் நான் முதலிற் செய்த வேலை. உணவுப் பொருள்கள் யாவும் கடல் நீருக்குத் தப்பிப் பதம் கெடாதிருந்தன. ரொட்டி அறைக்குள் சென்று, கையும் சாரமும் உள்ள ரொட்டிகளை எடுத்துச் சட்டைப்பை நிறைய இட்டுத் தின்றுகொண்டே வேறு பொருள்களைப் பார்வையிட்டேன். ஆர அமர இருந்து உண்பதற்கு ஓய்வு ஏது? பெரிய அறையில் நிறைந்த சாராயம் இருந்தது. அதனைக் கண்டு, இன்னும் என்னென்ன கேடுகள் வருமோ என்றெண்ணி, உடல் களைக்காதிருப்பதற்கும், ஊக்கம் உண்டாவதற்கும் தக்கபடி தேவைப்பட்ட அளவு முழுவதும் குடித்தேன். என் வாழ்க்கைப் பாதுகாப்புக்கு வேண்டிய பொருள்கள் பல இருந்தன. அவைகளை மிக்க பொறுப்புடன் இறக்கிக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஓர் ஓடம் இல்லாத குறையன்றி, அவ்வேளையில் எனக்கு வேறு ஒரு குறையும் இல்லை.

**பொருள்களை எடுத்துச் செல்ல ஓடம் கட்டுதல்**

செயல் செய்யாதிருந்து எட்டாத பொருளை விரும்பினால் அது கிடைக்குமா? உற்ற நேரத்தில் முழுமூடனுக்கும் சூழ்ச்சி தோன்றும் என்பதுபோல வேலைக்கேற்ற நல்வழி ஒன்று எனக்குத் தோன்றிற்று. கப்பலில் வேலைக்கு உதவுமென்று பாய் தாங்கும் கொம்புகள் சிலவும் பெருமரங்கள் இரண்டு மூன்றும் மேற் பாய்மரம் இரண்டொன்றும் வைத்திருந்தோம். தடையின்றி அவற்றில் நான் தூக்கத்தக்கவைகளை எடுத்து, ஒவ்வொன்றிலும் கயிறு தொடுத்துக் கடலிற் போட்டேன். பின்பு நான் இறங்கிக் கப்பலின் பக்கத்தில் நின்று, அந்தக் கொம்புகளில் நான்கை

இருந்து வரிசையாய் அடுத்தடுத்து வைத்து, இரு முனைகளிலும் கயிற்றால் இசைத்து இறுக்கி ஒரு தெப்பம் கட்டினேன். அதன் பிறகு குறுகிய பலகைத் துண்டுகள் இரண்டு மூன்றைக் குறுக்கே வைத்தேன். பின் நான் தெப்பத்தின் மேலேறினேன். அது கேடு இன்றி நான் நடமாடக் கூடிய வகையில் இருந்தது. பலகைத் துண்டுகள் மெத்தென்று நொய்மையாய் இருந்ததனால் அதிக எடையைத் தாங்கும் உறுதி வாய்ந்தவைகள் அல்ல. அதற்குமொரு வழி செய்தேன். கையிருப்பாய் வைத்திருந்த மேற்பாய்மரம் ஒன்றை வாளால் மூன்று துண்டாய் அறுத்து வருந்தி முயன்று அத்துண்டுகளையும் தெப்பத்தில் இசைத்து, ஒருவாறு கட்டினேன். ஆயினும் வேண்டிய பொருளனைத்தையும் பெறலாம் என்னும் நம்பிக்கையே மற்றவேலையில் உழைப்பதினும் அந்நேரத்தில் நான் அதிகமாய் உழைக்கத் தூண்டிற்று.

**தெப்பத்தில் பொருள்களை ஏற்றுதல்**

நான் கட்டிய தெப்பம் தகுந்த அளவிற்கு ஏற்றும் எந்தச் சுமையையும் தாங்கும் வன்மையுடையதாய் இருந்தது. இனி, அதில் எப்பொருள்களை ஏற்றவேண்டும் என்றும், ஏற்றும் பொருள் அலை நீர்பட்டு நனைந்து போகாதபடி என்ன பாதுகாப்புச் செய்யவேண்டும் என்றும் நெடுநேரம் நினைத்து, ஒரு வகை செய்தேன். முதலில் அகப்பட்ட பலகைகள் எல்லாவற்றையும் தெப்பத்தில் இறக்கி வைத்து, எனக்கு இன்றியமையாது வேண்டிய பொருள்கள் இவை யிவை என்று நீண்டநேரம் நினைத்த பிறகு, கடற் பயணத்தாருடைய பெட்டிகளில் மூன்றைத் திறந்து, உள்ளிருந்த பொருளை வெளிப்படுத்தி, அம் மூன்று வெறும் பெட்டிகளையும் தெப்பத்தில் இறக்கி வைத்தேன். அதன்மேல் ஒரு பெட்டிக்குள் ரொட்டி, அரிசி, உலர்ந்த பாலடைக் கட்டி மூன்று, கப்பலில் இருந்த போது எங்களுக்கு உணவாய்ப் பயன்பட்ட வெள்ளாட்டு இறைச்சிவற்றல் ஐந்து பெருந்துண்டு முதலிய உணவுப் பொருள்களை அடுக்கினேன். அன்றியும் கப்பலில் ஏற்றிய

சில கோழிகளுக்கு இரையாகக் கொண்டுவந்த ஐரோப்பியக் கூலம் சிறிது அளவு மிருந்திருந்தது. அக்கோழிகளை நாங்கள் முன்னமே கொன்று தின்றுவிட்டோம். அவைகள் தின்று எஞ்சிய கூலத்தையும் அந்தப் பெட்டிக்குள் வைத்தேன். வாற் கோதுமையும், கோதுமையும் கப்பலில் இருந்தன. அவற்றை நினைவிற் கொண்டு தேடிப் பார்த்தேன். பாதியை எலிகள் உண்டு விட்டன; எஞ்சிய பாதியையும் பாழாக்கிவிட்டன. பல பெட்டிகளில் சாராயப் புட்டிகள் இருந்தன. அவை முழுவதும் மாலுமிகளுடையவை. சில புட்டிகளில் மனத்திற்குக் களிப்பையுண்டாக்கும் இன்சுவைச் சாறு இருந்தது. சாராயம் ஐந்து ஆறு காலனுக்குமேல் இருந்தது. இவை யெல்லாவற்றையும் எடுத்துத் தெப்பத்தில் தனியாக அடுக்கினேன். அவற்றைப் பெட்டிக்குள் அடுக்கவேண்டியதில்லை. அடுக்கினும் அவை பெட்டிக்குள் அடங்கா. இவைகளை அடுக்கிக்கொண்டிருக்கும்போது, கடல் பெருகும் வேளையாயிற்று. அலைக்கிளர்ச்சியில்லை. மணற்பரப்பினில் நான் களைந்து வைத்த மேல் சட்டையும், உள் சட்டையும், மார்புச்சட்டையும் அலையில் அகப்பட்டு மிதந்தோடுவது கண்டு கவலையுற்றேன். முழந்தாள் வரையில் இட்டிருந்த குறுங்காற் சட்டை கம்பளி நூலால் செய்யப்பட்டது ஆதலால், நீர் வெருது என்று அதனையும், கால் உறைகளையும் முன்பு நான் கரையிற் களைந்துவைக்கவில்லை. அவைகளை அணிந்தபடியே நீந்திவந்தேன். இனி உடைக்கு வழி என்ன வென்று எண்ணி, கப்பலில் எவருடைய உடையேனும் இருக்குமோ என எண்ணித் தேடிப்பார்த்தேன். என்னைப்போல் இன்னும் நான்கு பேர் உடுத்துதற்குரிய உடைகள் இருந்தன. முதன்மையாய் என் கண்ணுக்குப் புலப்பட்ட பொருள்கள் மேலும் பல இருந்ததனால், அப்பொழுதைக்கு வேண்டிய உடைகளை மட்டும் எடுத்தேன். கரையில் இறங்கிய பின் தச்சு வேலை செய்தற்குரிய கருவிகள் எனக்கு இன்றியமையாது வேண்டும். சிறிது நேரம் அவாவுடன் தேடிப் பார்த்தபோது, அக்கருவிகள் வைத்திருக்கும் பெட்டி ஒன்றைக் கண்டேன். அதைப்போல்

எனக்குக் கிடைத்த பேறு வேறு ஒன்றும் இல்லை. அவ் வேளையில் கப்பல் நிறையப் பொன் கொடுத்தாலும் அது அந்தக் கருவி நிறைந்த பெட்டிக்கு இணையாகாது. அதன் உள்ளிருந்த கருவி வகைகளின் பெயர்களையும் பயன் படுத்தும் முறைகளையும் நான் நன்கு அறிவேன். ஆதலால் திறந்து பார்த்து வீண் பொழுது போக்காமல் பெட்டியை இறக்கிப் புணையில் வைத்தேன்.

### வெடி மருந்து முதலிய பொருள்களை ஓடத்தில் ஏற்றுதல்

அதன் பிறகு குண்டு, மருந்து முதலிய துப்பாக்கியின் துணைப்பொருள்களும், துப்பாக்கி முதலிய படைக்கலங் களும் வேண்டும் என்று எனக்கு எண்ணம் உண்டா யிற்று. கப்பலின் பெரிய கீழறையில் முதன்மையான குரு விக் குழாய்த் துப்பாக்கிகள் இரண்டும், கைத் துப் பாக்கிகள் இரண்டும் இருந்தன. முதலில் அவைகளையும் சில வெடி மருந்துக் கொம்புகளையும், ரவை இட்ட பை ஒன் றையும், தேய்ந்து துருப்பிடித்திருந்த கத்திகள் இரண் டையும் மிகப் பாதுகாப்பாய் எடுத்துக்கொண்டுபோய் வைத்தேன். கப்பலில் மூன்று மருந்துப் பீப்பாய் இருந்தது தெரியும். துப்பாக்கிப் படைக்கல அதிகாரி அவைகளை வைத்த இடம் எது என்று நான் அறியேன். நீண்ட நேரம் அங்கும் இங்கும் ஆராய்ந்து பார்த்துக் கொண்டு வரும்போது, அவைகள் என் கண்ணுக்கு எதிர்ப் பட்டன. இரண்டு பீப்பாய் மருந்து பழுதற்று இருந்தது. தண்ணீர் ஒரு துளியும் அதில் ஏறவில்லை. ஒரு பீப்பாய் மருந்து கரைந்து பழுதாய்ப் போயிற்று. அந்த இரண்டு பீப்பாய்களையும், துப்பாக்கி முதலியவைகளையும் தெப் பத்தில் கொண்டுபோய் வைத்தேன். இதற்கு மேலும் சுமையைத் தெப்பம் தாங்காதென்று நினைத்து, இவை களைக் கொண்டுபோய்க் கரையில் சேர்க்கவேண்டுமே; அதற்குச் சிறந்த வழி முறை யாது என எண்ணத் தொடங்கினேன். தெப்பத்திற்குப் பாய் இல்லை; தண்டு இல்லை; சுக்கான் கிடையாது. சிறிது அளவாவது காற்று

அடிக்குமாறும் தெப்பம் கவிழ்ந்து, சரக்குகள் எல்லாம் நழுவிப்போவது உறுதி.

## தெப்பத்தைக் கரைசேர்க்க முயலுதல்

அலைவேளையில் மூன்று வழிகளால் அச்சம் அற்று என் மனம் தேறிற்று. ஏரி நீர் போலக் கடல் ஒப்பரும் அமைதியுடையதாய் இருந்தது ஒன்று; நீர்ப்பெருக்குப் போகப்போக வேகம் தணிந்து, கரையை நோக்கிச் சென்றது, இரண்டு; காற்று வலிவாக வீசாமல் கரை நோக்கி வீசியது; மூன்று. ஆகிய இம்மூன்று நிலைமைகளினாலும் நான் அச்சம் நீங்கி மனம் தேறினேன். ஓடத்தைச் சேர்ந்த உடைந்த துண்டுகள் இரண்டு, மூன்றைக் கண்டெடுத்தேன். பெட்டிக்குள் இருந்த கருவிகளன்றி மேலும் மரம் அறுக்கும் வாள் இரண்டு, கோடரி ஒன்று, சம்மட்டி ஒன்று ஆகியவை அகப்பட்டன. இவைகளையும் ஏற்றிப் புணையைக் கரை நோக்கித் திருப்பிவிட்டேன். ஒரு கல் தொலைவு வரையில் புணை தடையின்றி விரைந்தோடிற்று. முன்பு நான் கரையேறிய இடத்திற்கு அன்றிச் சற்று விலகிச்சென்றது. அதனால் நீரோட்டமாயினும், ஆற்று முகத்து வழியாயினும் அருகில் இருக்கும் என்றும், இருந்தால் அதுவே என் பொருளுக்கு வளமான இறங்கு துறை ஆகுமென்றும் எண்ணினேன்.

எண்ணியவாறே முடிந்தது. தெப்பத்திற்கெதிரில் சிறு குடா ஒன்று இருப்பதும், அதற்கு நேர் வாட்டமாய் நீர் ஓடுவதும் கண்டு கூடும் அளவில் தெப்பத்தை அதன் நடுவிற் செலுத்திப் போகப் பார்த்தேன். இவ்விடத்தில் எனக்கு மறுபடியும் ஒரு முறை உயிர்த்துன்பம் நேர்ந்தது. இம்முறை எனது தெப்பம் கவிழ்ந்தாயினும் பிரிந்தாயினும் கேடு அடையுமானால் மனம் தளர்ந்து நிலை குலைவது ஒழிய அதனைப் பிறகு நான் கடைத்தேறுவது என்பது இயலாது. அந்தக் கரை இத்தன்மையுடையது என்பது எனக்குத் தெரியாது. தெப்பத்தின் ஒரு முனை விரைவில் களர்தட்டிப் பொருந்தி நின்றது. அவ்வதிர்ச்சியால் அங்கிருந்த

பொருள்கள் எல்லாம் நிலை பெயர்ந்து சரிந்து, எதிர்முனை வழியாய்க் கடலில் விழும் நிலை அடைந்தது. அவ்வாறு விழு முன், பெட்டிகளை மூச்சு அடக்கி ஒரு வகையாக என் முதுகினால் தாங்கிக்கொண்டேன். என் வலிமை முழுதும் செலுத்தித் தெப்பத்தைத் தள்ளினாலும், அது சிறிதும் கணம்விட்டுப் பெயராது. நின்ற நிலைவிட்டுப் பெயராமல் அரை மணி நேரம்வரையில் பெட்டிகளை முதுகினால் வன்மையோடு தாங்கிக்கொண்டிருந்தேன். அதற்குள் கடற் பெருக்குச் சற்று அதிகப்பட்டதனால், சரிந்த தெப்பத்தின் முனை அசைந்து இரு புறமும் ஒருவாறு சமமாய் இருந்தன. பின்னும் சிறிது நேரத்திற்குள் பெருக்கு அதிகப்படவே, தெப்பம் நிலை பெயர்ந்து நீந்திற்று. நான் தண்டினால் அதைக் கால்வாயில் திருப்பிவிட்டுச் சிறிது தூரம் செலுத்திக்கொண்டுபோய் ஒரு சிறு ஆற்றின் முகத்து வழியிற் சேர்ந்தேன். அதன் இரு கரைகளும் நெருங்கியிருந்தன. நீரோட்டம் நேர் வாட்டமாய் இருந்தது. எக்கரையிலாவது இறங்கலாம் என அதற்குத் தகுதியான இடம் பார்த்தேன். கரைக்கு அருகில் இருந்தால் நாளடைவில், கடலில் வரும் கப்பல்களைக் காணலாம் என்னும் விருப்பத்தினால் ஆற்றில் நெடுந்தூரம் செல்ல என் மனம் இசையவில்லை.

**தெப்பத்தில் ஏற்றிய பொருளைக் கரையிற் சேர்த்தல்**

இப்படி இருக்கும்போது, குடாவின் வலப்புறத்துக் கரையிற் சற்றுத் தொலைவில் ஒரு சிறு கோடி என் கண்ணுக்குத் தெரிந்தது. எவ்வளவோ துன்பப்பட்டு வருத்தத்தைப் பாராட்டாமல், தெப்பத்தை அக்கோடிக்கு நேரே திருப்பிக் கொண்டுபோய் அருகிற் சேர்ந்து, தரை தண்டுக்கு எட்டியதனால், தண்டு ஊன்றித் தெப்பத்தைக் கரையேற்ற எண்ணங்கொண்டு இருந்தேன். இவ்விடத்திலும் என் பொருள் முழுவதும் நீரில் முழுகிப் போகும்படியான இடர்ப்பாடு நேரிட்டது. கரை ஒப்பம் இன்றி இறக்கமாய் இருந்ததனால், தெப்பத்தை நிறுத்திப் பொருள்களை இறக்க வசப்படவில்லை. தெப்பத்தின் ஒரு முனை கரையில் ஏறினால், எதிர் முனை நீரில் செங்குத்தாய்ச் சரிந்து நிற்கும்.

அதனால் அதில் ஏறிய பொருள்கள் எல்லாம் கடலில் விழுந்து போம். ஆதலால் தண்டூன்றித் தெப்பத்தை நிறுத்தி, அதன் பக்கத்தை ஒப்பமாய் இருந்த ஓரிடத் திற்கு எதிரில் திருப்பிவிட்டுப் பெருக்கு ஏறும் அளவும் காத்து நின்றேன். என் தெப்பத்தின் உள்ளேயே ஓடி உயரமா நீர் புகுந்து விட்டது. வேண்டிய அளவுக்குப் பெருக்கு ஏறியதை உணர்ந்து நான் மேற்கூறிய ஒப்பமான தரையில் தெப்பத்தை ஏற்றி, முறிந்த தண்டுகள் இரண்டை அதன் இரு முனைகளிலும் அடித்துத் தரையிற் கடாவி நிறுத்தினேன். தண்ணீர் வடிகிற வரையில் இருந்து அதன் பிறகு தெப்பத்தை விட்டு இறங்கினேன். இவ்வாறு தெப்பமும், அதில் ஏறிய பொருள்களும் இடையூறின்றிக் கரை சேர்ந்தன.

**வாழத்தக்க இடம் பார்த்துத் திரிதல்**

அதன் பிறகு நாட்டில் உலாவி வாழ்க்கை நடத்து வதற்கும், என் பொருள்களை அச்சம் இன்றி நன்முறையில் வைத்துக் காப்பதற்கும் வாய்ப்பான இடம் பார்க்கவேண்டி யிருந்தது. நான் இறங்கிய கரை கண்டமோ, தீவோ, மனி தர் குடியேறிய நாடோ, அல்லது மனிதர் வாழ்வு அற்ற காடோ, கொடிய விலங்குகள் வாழும் இடமோ, அன்றி, எத்தன்மையுடையதென்று அப்பொழுது நான் அறியேன். நான் இறங்கிய கரைக்கு ஒரு கல் தொலைவிற்குள் செங் குத்தாய் உயர்ந்த ஒரு குன்று இருந்தது. அதன் கீழே வடக்குத் தெற்காய்த் தொடர்ந்த சிறு குன்றுகள் சில காணப்பட்டன. குருவிக் குழாய்த் துப்பாக்கி ஒன்று, கைத் துப்பாக்கி ஒன்று, வெடிமருந்துக் கொம்பு ஒன்று ஆக இம் மூன்று படைக்கலங்களும் எடுத்துக் கொண்டு, நிலவளம் பார்த்து வருதற்காகச் சென்றேன். அக்குன்றின் உச்சி வரையிலும் மிக வருத்தப்பட்டு ஏறினேன். உச்சியி னின்று பார்த்தபொழுது, நான்கு திசையிலும் கடல் சூழ்ந் திருந்தது. தரை காணப்படவில்லை. நெடுந்தொலைவிற் சில மலைகள் இருந்தன. மேற்கே ஏறத்தாழ ஒன்பது கல் தொலைவில் சிறிய தீவுகள் இரண்டு காணப்பட்டன.

இறுதியில் எனது முடிவு நிலை இவ்வாறு நேர்ந்ததா என்று நினைத்து வருந்தினேன்.

**பறவையைச் சுட்டும் பயனொன்றும் இல்லை**

மேலும் நான் அடைந்த தீவு பாழ் நிலமாயிருந்தது. அங்கே கொடிய விலங்குகளன்றி, மனிதர் பழக்கம் இல்லை என்பதற்குச் சான்றுகள் பல கண்டேன். கொடிய காட்டு விலங்குகள் என் கண்ணுக்கு எதிர்ப்படவில்லை. பறவை களைத் திரளாய்க் கண்டேன். அவைகளின் வகை முறைகளை நான் அறியேன். கொன்று வீழ்த்தினாலும் உணவிற்கு இது பயன்படும், இது பயன்படாது என் பதும் எனக்குத் தெரியாது. திரும்பி வரும்பொழுது மர மடர்ந்த ஒரு காட்டின் பக்கத்தில் பெரிய பறவை ஒன்று ஒரு மரத்தில் இருந்தது கண்டு சுட்டேன். இவ்வுலகப் படைப்பு நாள்முதல் அன்று வரையில் அந்தத் தீவில் துப்பாக்கியின் ஒலி சிறிதும் ஒலித்திராது என்று நினைக் கிறேன். துப்பாக்கி வெடி வெடித்த அந்த நேரமே காடு முழுவதிலும் இருந்த பறவைக் கூட்டம் முழுவதும் கிளை கிளையாய் எழுந்து, இனமுறைப்படி காது செவிடுபடக் கிளைகுரலைக் கூட்டிக்கொண்டு கூவிக் கத்தி மிரண்டு பறந் தன. நான் அறிந்த பறவை இனம் அவற்றுள் ஒன்று மினும் இல்லை. சுட்டு வீழ்த்திய பறவை நிறத்தினாலும், மூக்கின் வடிவத்தினாலும் ஒருவகைப் பருந்துபோல் இருந் தது. அதன் கால் நகங்கள் பருந்து நகம்போல் அன்றி வேறு ஏதோ ஒரு பறவையின் நகம் போல் இருந்தன. அதன் இறைச்சி பதம் கெட்டு ஒன்றுக்கும் உதவாமற் போயிற்று.

**வாழ்க்கைக்கேற்ற சிறு குடில் அமைத்தல்**

தீவின் உள்ளிடத்தையும் வளத்தையும் அறிந்த இவ்வளவோடு மன நிறைவு அடைந்து, தெப்பம் நின்ற விடத்துக்குத் திரும்பிவந்து, அதிலேற்றிய பொருள்களை இறக்கிக் கரையிற் சேர்க்கத் தொடங்கினேன். அவ்வேலை முடிய மாலை நேரம் வரை சென்றது. இரவு நேரத்தில்

என்ன செய்வதென்றும், எவ்விடத்தில் தங்குவதென்றும், எனக்குப் புலப்படவில்லை. ஏதாயினும் கொடிய காட்டு விலங்கு வந்து என்னைக் கொன்று தின்றாலும் தின்றுமே என நினைத்துத் தரையிற் படுத்திருக்க அஞ்சினேன். அந்தத்தீவில் கொடிய விலங்குகளால் கொடுந்துன்பம் உண்டாகும் என்று அறிதற்கு வழியில்லை என நாளடைவில் தான் தெரிந்து கொண்டேன்.

ஆயினும் காலத்திற்கும் ஏற்க ஒருவகை ஏற்பாடு செய்தேன். தெப்பத்திற் கொண்டு போன பெட்டிகளையும், பலகைகளையும் நான்கு பக்கத்திலும் வைத்து அடுக்கி, இரவில் தங்குவதற்கு ஒரு குடிசைபோல் அடைத்தேன். உணவிற்கு வழி தோன்றவில்லை. முன்பு பறவையைச் சுட்ட காட்டினின்று முயலைப் போன்ற சிற்றுயிர்கள் இரண்டு மூன்று வெளிப்பட்டு ஓடியதைக் கண்டேன். ஆதலால், அவைகள் ஒருவேளை எனக்கு உணவிற்குப் பயன்படுமென்று எண்ணினேன்.

## இரண்டாம் முறை கப்பலுக்குச் செல்லுதல்

எனக்குப் பயன்படக்கூடிய பொருள்கள் மேலும் பல கப்பலில் இருந்ததனால் அவைகளையும், மிகுதியாய் அங்கிருந்த கப்பற் கயிறுகள், பாய்கள், கரைக்குக் கொண்டு வரத்தக்க பொருள்கள் எல்லாவற்றையும் இன்னும் ஒரு முறை போய்த் தெப்பத்தில் ஏற்றி வர முடிவு செய்தேன். இனி அடிக்கும் புயலில், கப்பல் உடைந்து துண்டுகளாகிச் சிதறுவது உண்மையென்றும் அறிந்து, கூடிய வரையில் எனக்கு வேண்டும் பொருள் எல்லாவற்றையும் கப்பலிலிருந்து வெளிப்படுத்திக் கரை சேர்க்குமுன் வேறு எந்த முயற்சியும் செய்வதில்லை என்றும் எனக்குள் உறுதி செய்து கொண்டேன். அதன் பிறகு நான் சிறிது நேரம் என் நினைவை ஒரு வழிப்படுத்தி, தெப்பத்தைக் கப்பலிடத்துக்குத் திருப்பிக் கொண்டுபோவது நன்று, அன்று என ஆழ்ந்து நினைத்த பிறகு, அதனைக் கொண்டு போவது முடியாது என்று முடிவு செய்தேன். கடல் நீர் வற்றும்

நேரம் பார்த்து, முன்போலக் கால் நடையாய்ச் செல்ல முடிவு செய்து, உடுத்திய உடைகளில் இறுக்கமான உள் சட்டையும், கம்பளி நூல் காற்சட்டையும், காலணிகளும் தவிர மற்றவைகளைக் களைந்து குடிசைக்குள் வைத்து விட்டுச் சென்றேன்.

**மறுபடியும் தெப்பத்தில் பொருள் கொண்டு போதல்**

தொங்கிய கயிற்றைத் தாவிப் பிடித்துக் கப்பலில் ஏறி, வேறு ஒரு தெப்பம் கட்டினேன். முதல்முறை பட்ட பாடுகளை எண்ணித் தெப்பத்தைக் கூடியவரையில் அடக்கமாய்க் கட்டி அதிகப் பொருள் ஏற்றாமல் அளவாய் ஏற்றினேன். குறைந்த அளவாயினும் எனக்குப் பயன் படத் தக்க பொருள்கள் பல ஏற்றி வந்தேன். தச்சருடைய பொருள் இருக்குமிடத்தில் இருப்பாணி, மர ஆணிப்பை இரண்டு மூன்று; சுமைப் பொருளைப் பெயர்க்கும் பெரிய கருவி ஒன்று; கைக் கோடரி இருபது இருபத்து நான்கு, எனக்கு இன்றியமையாது பயன்படத்தக்க சக்கரச் சாணைக் கல் ஒன்று இவைகளையும், துப்பாக்கித் துணைக்கருவிகளில் கடப்பாரை இரண்டு மூன்று, துப்பாக்கிக் குண்டுப் பீப்பா இரண்டு மூன்று, துப்பாக்கி ஏழு, குருவிக்குழாய்த் துப் பாக்கி ஒன்று, சிறிது அளவு மருந்து, சிறு சன்னப்பை ஒன்று இவை எல்லாவற்றையும் கண்டு எடுத்து வைத் தேன். காரீயப் பெருஞ்சுருள் ஒன்று அதிக எடையுடைய தாய் இருந்ததனால், அதைப் பெயர்த்துத் தூக்கி மிதவை யில் இறக்கி வைக்க முடியாதென்று விட்டுவிட்டேன்.

இந்தப் பொருள்களன்றி, என் கண்ணுக்கு எதிர்ப் பட்ட கடற்பயணத்தார் உடைகள் எல்லாவற்றையும், தேவைக்கு உதவும்படி வைத்திருந்த மேற்பாய் ஒன்றையும், தூங்கு மஞ்சம் ஒன்றையும், படுக்கும் மெத்தைகள் சில வற்றையும் எடுத்துத் தெப்பத்தில் ஏற்றி, இம்முறை இடையூறின்றி என் பொருள் எல்லாவற்றையும் நலத் துடன் கரையிற் கொண்டுபோய்ச் சேர்த்தேன்.

## கரையிற் சேர்த்தபின் செய்த வேலைகள்

நான் கப்பலுக்குச் சென்றிருந்த வேளையில், கரையில் வைத்த உணவுப் பொருள்களை ஒருவேளை எவரேனும் வந்து உண்டு விடுவரோ என அச்சமுற்றிருந்தேன். கரைக்கு வந்து பார்த்தபோது, அவைகளனைத்தும் ஒருவரும் தொடாதிருந்தன. காட்டுப்பூனையைப் போன்ற ஒரு விலங்கு மட்டும் அங்கிருந்த பெட்டி ஒன்றில் உட்கார்ந்திருந்தது. நான் நெருங்கிப் போனவுடன் அது சற்றுத் தூரம் ஓடி ஒரு நிலையாய் நின்று, அச்சமின்றி என் முகத்தை ஏறிட்டுப் பார்த்தது. என்னுடன் பழக அதற்கு இச்சையுண்டாய் இருந்ததாக அதன் முகக்குறியாற் கண்டேன். அதனை வெருட்டுவது போலக் காட்டித் துப்பாக்கியை எடுத்து அதற்கு இலக்காய்ப் பிடித்தேன். குறிப் படாததனால் அது பதறாமல் நின்றது. ஒரு ரொட்டித் துண்டை எடுத்து அதற்கு எட்டும்படி எறிந்தேன். என்னிடம் இருந்த ரொட்டி அதிகம் அல்ல. ஆதலினால் நான் அதிகமாக அதற்குப் போடவில்லை. போட்ட துண்டைக் கண்டவுடன் அருகேபோய் மோந்து பார்த்துத் தின்றது. பின்பு மனம் நிறைவு அடைந்து பின்னும் போடுவேன் என்று முகத்தைப் பார்த்த வண்ணமாய் இருந்தது. இனிக் கொடுப்பதற்கு இசையாததனால் நான் அதைப் பாராமல் இருந்தேன். அது போய்விட்டது.

இரண்டாம் முறை ஏறிவந்த பொருள்களைக் கரை சேர்த்தபின் வெடி மருந்துப் பீப்பாக்கள் பெரியவைகளான தனால், அவைகளை உடைத்து மருந்தைச் சிறிய மூட்டைகளாய்க் கட்டிக்கொண்டு போவதற்கு எண்ணினேன். முதலில் என்னிடம் இருந்த பாய்களினாலும், நான் தறித்த கொம்புகளினாலும், அடக்கமாய் ஒரு கூடாரம் அமைக்கத் தொடங்கினேன். அமைத்து முடிந்தபின், மழையிலாவது வெயிலினாலாவது கெட்டுப் போகத்தக்க பொருள்கள் எல்லாவற்றையும் கூடாரத்துக்குள் கொண்டுபோய்ச் சேர்த்து, மனிதராயினும் விலங்குகளாயினும் விரைவில் வந்து, என் கூடாரத்தை அழிவு செய்யாதபடி கோட்டை மதில் போல

அதற்கு நான்கு புறத்திலும் வெறும் பெட்டிகளையும் பீப்பாக்களையும் ஒழுங்குபெற அடுக்கினேன்.

இவ்வேலை முடிந்தபின், கூடாரத்து வாசலின் உட்புறத்திற் சில பலகைகள் வைத்தடைத்து, புறத்தில் வெறும் பெட்டி ஒன்றை நிறுத்தி வைத்து, தரையில் ஒரு மெத்தைப் பாயை விரித்து, தலைமாட்டில் இரண்டு கைத்துப்பாக்கிகளும், ஒரு பக்கத்தில் பெருந்துப்பாக்கி யொன்றும் வைத்துப் படுத்திருந்தேன். பகல் முழுதும் உழைத்து இளைப்புற்றிருந்ததனாலும், முதல்நாள் இரவு கண்ணோடு கண் மூடாததனாலும் அன்றிரவு அயர்ந்து தூங்கினேன்.

மனிதர் துணையின்றித் தனியே இருக்கும் எவனாவது என்னைப்போல் இத்துணை மிகுதியாய்ப் பண்டங்களைச் சேர்த்து வைக்கமாட்டான். இன்னும் என் மனம் நிறைவு அடையவில்லை. களம் தட்டி நிமிர்ந்து நின்ற கப்பல் காற்றடித்துக் கவிழ்ந்தாயினும் உடைந்தாயினும் அதிலிருந்த பொருள்கள் வீணாய்க் கெட்டுப் போகுமுன் ஆகும் வகை அனைத்துஞ் செய்து, நான் அவைகளை எடுத்துக்கொண்டு வந்து சேர்க்கக் கருதினேன்; நாள்தோறும் பெருக்கு இல்லாத வேளை பார்த்துப் போய் அப்போதப்போது என் மனத்திற்கு விருப்பமானவைகளை எடுத்துக்கொண்டு வந்தேன். மூன்றாம் முறை கப்பலின் வடங்களையும், சிறு கயிறுகளையும், முறுக்குக் கயிறுகளையும், பாய் கிழிந்தால் வெட்டித் தைப்பதற்கு ஏற்ப வைத்திருந்த இரட்டுத் துணிச்சுருள் ஒன்றையும் எடுத்துக்கொண்டு வந்தேன். கப்பற்பாய்களில் ஒன்றையாவது நான் விடவில்லை. அப்போதப்போது நான் கொண்டுவரத்தக்க அளவு கிழித்துச் சுருட்டிக்கொண்டு வந்து சேர்த்தேன். கிழித்துத் துண்டு படுத்தியதனாற் கெடுதி ஒன்றும் இல்லை. எனக்கு வேண்டுவது இரட்டுத் துணிதானே. அதனைப் பெரிதாக முழு வடிவத்தில் வைத்திருந்து எனக்கு ஆவது என்ன?

ஐந்து ஆறு தடவை சென்று அகப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும் கரையிற் கொண்டுவந்து சேர்த்த

ளை; இனி எனக்கு உதவும் பொருள் கப்பலில் இல்லை
என்று கருதி, மீண்டும் ஒருமுறை மனவிருப்பமின்றிச்
சென்றேன். அப்பொழுது, ஒரு பெரும் பீப்பாய் நிறைய
ரொட்டியும், மூன்று பீப்பாய் சாராயமும், ஒரு பெட்டி சர்க்
கரையும், ஒரு பீப்பாய் கோதுமை மாவும் இருந்தது கண்டு
மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன். பீப்பாயை
உடைத்து ரொட்டியைப் பாய்த்துண்டுகளில் வைத்து,
இறுகப் பொட்டலங்களாய்க்கட்டி, எல்லாவற்றையும் பழுதின்றிப்
பாதுகாப்புடன் கரையிற் சேர்த்தேன்.

மறுநாளும் ஒருமுறை போய்ப் பின்னும் கப்பலில்
இருந்த பொருள்களுள் எடுத்துக்கொண்டு வரத்தக்கவை
களை எடுத்துவைத்த பின், கம்பிகளைக் கையாடிப் பெரிய
கம்பியைப் பெயர்த்து எடுக்கத்தக்க துண்டுகளாகத்
துணித்தேன். இவ்வாறு கரையிற் சேர்ப்பதற்கு ஏற்றபடி
நான் துண்டு செய்தவை பெரிய கம்பிகள் இரண்டு; சிறி
யது ஒன்று. என் கைக்கு எட்டிய இருப்புக்கருவி முதலான
வைகள் எல்லாவற்றையும் எடுத்துவைத்தேன். முன் பாய்
மரக் கொம்பையும், பின் பாய்மரக் கொம்பையும், பின்னும்
தறிப்பதற்குத் தகுதியான எல்லாக் கொம்புகளையும்
தறித்து இடம் அகன்ற தெப்பம் ஒன்று கட்டி, மேற்கூறிய
பளுவான பொருள்கள் எல்லாவற்றையும் அதில் ஏற்றிக்
கொண்டு கரைக்குப் புறப்பட்டேன். இதுவரையில் நான்
அடைந்த நன்மை இம்முறை என்னைவிட்டு நீங்கத் தொடங்
கிற்று. இந்தத் தெப்பம் எளிதில் திருப்பவாயினும்
செலுத்தவாயினும் முடியாதபடி மிகப் பெரிதாயும், அள
விற்கதிகச் சுமை ஏறியதாயும் இருந்ததனால், நான் முன்பு
கரைசேற்றின கோடியிற் சேர்ந்தபோது அது கவிழ்ந்து
போயிற்று. பொருள்கள் எல்லாம் நீரில் அமிழ்ந்தின. கரை
நெருங்கியிருந்ததனால் எனக்குக் கேடு உண்டாகவில்லை.
பொருள்களிற் பல கெட்டுப்போயின. முதன்மையாய்
எனக்குப் பெரும்பாலும் பயன்படத்தக்க இரும்பும் நீரில்
அமிழ்ந்தது. அவ்வாறு விழுந்த பின்னரும் முயற்சியைக்
கைவிடாது இருந்தேன். கடற்பெருக்கு ஒழிந்த பின்
கம்பிகளைத் தறித்த துண்டுகளிற் பலவற்றையும், மிகவும்

துச் சிறிது அளவு இரும்பையும் தள்ளிக்கொண்டு போய்க் கரையிற் சேர்த்தேன். இரும்பைத் தேடி யெடுப்பதற்குத் தண்ணீரில் மூழ்கி, மூச்சடக்கியிருந்ததனால் மிகவும் இளைப்புற்றேன்.

இதற்குப் பின் நாள்தோறும் கப்பலில் ஏறி அகப்பட்ட பொருள் ஒவ்வொன்றையும் எடுத்துக்கொண்டு வந்தேன். மேற்கூறிய தீவின் கரையில் நான் தெய்வச் செயலாய்ச் சேர்ந்து பதின்மூன்று நாட்கள் ஆவதற்குள் பதினொரு முறை கப்பலுக்குப்போய் வந்தேன். இப்பதினொரு முறைகளிலும் ஒருவன் தனிமையாய் எடுத்துவரத் தக்க பொருள் எவ்வளவோ அவ்வளவும் எடுத்துக் கரையிற் சேர்த்தேன். அடித்துவிட்ட காற்றுப் பின்னும் சிலநாள் வரையிற் றிரும்பவும் வாராதிருந்தால், பொருள்களைமட்டும் அன்றி, கப்பல் முழுவதையும் உறுப்பு உறுப்பாய்ப் பிரித்துக்கொண்டு போய்க் கரையிற் சேர்த்துவிடுவேன் என்று உறுதியாய் நம்பினேன். பன்னிரண்டாம் முறை கப்பலுக்குப் போய்வர முயற்சி செய்தபோது, தூங்கிய காற்று எழுந்துவீசத் தொடங்கியது. அதை நான் ஒருபொருட்டாய் எண்ணவில்லை. பெருக்கில்லாத வேளை பார்த்துக் கப்பலுக்குப்போய், அதன் அறையிற் சேர்ந்து, அங்குள்ள பயனுள்ள பொருள் அனைத்தும் முன்னரே எடுத்துக்கொண்டு சென்றுவிட்டதனால், இனி உதவக்கூடிய பொருள் எதுவும் இல்லையென்று எண்ணினேன். பின்பு, பூட்டவும் திறக்கவும் கூடிய ஒரு பெட்டியின் அறைக்குள் மழிக்கும் கத்திகள் இரண்டு மூன்றும், பெருங்கத்திரிக்கோல் இரண்டும், நல்ல விலை மதிக்கத்தக்க கத்திகள் முட்கள் பத்துப் பன்னிரண்டும் இருந்ததைக் கண்டேன். மற்றோரறைக்குள் முப்பத்தாறு பவுன் மதிப்புள்ள ஐரோப்பிய நாணயமும், பிரேஜிலிய நாணயமும் இங்கிலாந்தின் நாணயங்களில் வகைக்குச் சிறிதளவும் இருந்தன

**நாணயங்களைக் கண்டு நகைத்து இகழ்ந்தது**

பணத்தைக் கண்டவுடன் எனக்குக் குறுநகை உண்டாயிற்று. நான் அதைப் பார்த்து: "ஓ, துரும்பே, நீ எதற்கு

உருவமாய்க் கிடக்கும் உன்னால் ஆகத்தக்க பயன் ஒன்றும் இல்லை. உன்னைக் குனிந்து எடுத்துப் பார்ப்பினும் கை வலிப்பது அன்றிச் சிறிதும் பயனில்லை. அக்கத்திகளில் ஒன்றுக்கு இருக்கும் மதிப்பும் கிடையாது. உன்னைத் தொட்டு எனக்குப் பயன் ஒன்றும் இல்லை. நீ இருக்கும் இவ்விடத்திலேயே இன்னும் சிலகாலம் இருந்து உயிர் தப்பாது இறக்கும் சிறுவர்போல இக்கடலினுள் மூழ்கிப் போ" என்று உரத்த தொனியிட்டுக் கூறினேன். பிறகு எடுத்துக்கொண்டுபோக வைத்திருந்தால் எதற்காயினும் உதவு மென்று என எண்ணத்திற்பட்டதனால் நான் அப் பணத்தை எடுத்து, திரட்டித் துணிக்குள் வைத்து, அடக்கிச் சுருட்டி முடிந்தேன்.

## கடுங்காற்று அடித்ததால் கலக்கமடைதல்

மேலும் ஒரு தெப்பம் கட்ட நினைத்து முயன்று தொடங்கியபோது வானத்தில் மப்பு மந்தாரம் உண்டா யிற்று. கார்மேகம் கவிந்து கடுங்காற்றுமடித்தது. கால் மணி நேரம் ஆகு முன் கரையினின்று கடல் நோக்கி அடித்த புயல் உரமுற்றது. காற்று கடலுக்கு எதிராய் அடிப்பதனால், தெப்பங்கட்டி ஆகும் பயனில்லை. நீர்ப் பெருக்கு எடுக்கு முன் நான் கரைசேரவேண்டும். இப் பொழுதே சேராவிடில், பிறகு சேரமுடியும் என்று கனவி லும் எண்ண முடியாது என நினைத்துக் கடலில் இறங்கிக் கப்பல் நின்ற விடத்திற்கும் மணற்குன்றுக்கும் இடையி லுள்ள கால்வாய் வழியாய் மிக வருந்தி நீந்திச் சென்றேன். நான் வைத்திருந்த பொருள்களின் பளுவினாலும், காற்று உரக்க உரக்க அலை பொங்கியதனாலும் எனக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. பெருக்கு ஏறுமுன் கடும் புயற் காற்று அடித்தது.

நான் ஒரு வகையாய்க் கரையேறி, எனது சிறிய கூடா ரத்திற்குள் போய்ச் சேர்ந்தேன். என் உடைமைகள் எல்லா மும் அழிவு பழுதின்றியிருந்தன. இரவு முழுவதும் கடும் புயல் அடித்த வண்ணமாய் இருந்தது. மறுநாட் காலையில்

கடலில் கப்பலைக் காணவில்லை. அதைப்பற்றிச் சிறிது நேரம் என் உள்ளத்தில் மயக்கம் உண்டாயிற்று. ஆயினும் நேற்று சிறிதும் இன்றிக் கப்பலில், இருந்த பயன்படத்தக்க பொருள்கள் எல்லாவற்றையும் முன்னரே எடுத்துக் கொண்டு வந்துவிட்டேன். ஆதலால் இனி நேரம் இருப் பினும் எனக்கு உதவியான பொருள் ஒன்றையும் நான் விட்டுவிடவில்லையே என்றெண்ணி என்னுள்ளங்குளிர மயக்கம் தெளிந்து மனநிறைவு அடைந்தேன்.

அதன் பிறகு நான் கப்பலைக் குறித்தாவது, அதில் உள்ள எவ்விதப் பொருளையும் குறித்தாவது நினைவிற் கொண்டு வருந்தவில்லை. அஃது உடைந்தபின் அலை கொதுக்கும் பொருள் ஏதாயினும் கரையடைந்தாற் பார்க் கலாம என்றிருந்தேன். கப்பல் உடைந்த துண்டுப் பலகை கள் பல நான் எண்ணியவண்ணம் கரைசேர்ந்தன. ஆயி னும் அவை எனக்குத் தேவையில்லாதனவாக இருந்தன.

இத்தீவில் வேடரைக் கண்டால் அவர்களுக்கும், கொடிய காட்டு விலங்குகள் காணப்பட்டால் அவைகளுக் கும் தப்பிப்பிழைக்க வகை செய்யும் கவலையொன்றே அன்று முதல் என் உள்ளத்திற் குடிகொண்டது. அதன் பொருட்டு நிலத்தை அகழ்ந்து குகை உண்டாக்கி அதன் கண் வாழ்வதோ, கூடாரம் அடித்து அதில் உறைவதோ எது சிறந்ததென்று நீண்ட நேரம் நினைத்தபின், இவ்விரு வித முயற்சிகளையும் நிறைவேற்றுவது இன்றியமையாதது எனக் கண்டு செய்யத் தொடங்கினேன். அவற்றின் வரா லாறுகளைச் சுருக்கித் தெரிவிக்கின்றேன்.

### வாழும் இடத்தை வகைப்படுத்தி அமைத்தல்

நான் இறங்கின இடம் கடற்கரை அடுத்த நீர்க் கசி வுள்ள சதுப்புப் பள்ளத்தரை. அது நலத்துடன் வாழ் வதற்கு உதவாது. அன்றியும் அருகில் தூய நீர் இல்லை. ஆதலால் அவ்விடம் குடியிருக்க ஏற்றது அன்று எனக் கண்டு நல்வாழ்வுக்குரிய ஓரிடத்தைத் தேடிக் காண முடிவு செய்தேன்.

பின்வரும் நான்கு இயல்புகளும் பொருந்திய இடம் என் கண்ணுக்குத் தெரியுமானால் அதுவே சிறந்த வாழ்க்கைக்குரிய இடமாகக் கொள்ளத்தகும் என்று எண்ணினேன். முதலாவது தூய நீர்வளம்; இரண்டாவது வெயில் வெப்பத்துக்குக் காவலான நிழல்வளம்; மூன்றாவது கொடிய மக்களாலாவது காட்டு விலங்குகளாலாவது கேடு உண்டாகாதிருக்கும்படியான அரண்வளம்; நான்காவது இறைவன் செயல் உதவியால் எந்தக் கப்பலாயினும் இத் தீவின் கரையை அடுத்து ஓடுமானால், நான் அதில் ஏறி இச் சிறையினின்று நீங்கும் பொருட்டு அஃது என் கண்ணுக்குத் தோன்றும்படியான வெளிவளம். எப்பொழுதாயினும் எனக்கு மீட்சி உண்டாம் என்று நான் துவளாமல் எண்ணங் கொண்டிருந்தேன். அவ்வெண்ணம் வீண் என்று அப்பொழுது என் மனம் இசையவில்லை.

வாழ்க்கை நடத்துவதற்கு வளமான இடம் பார்த்துக் கொண்டு போகும்பொழுது, ஓர் உயர்ந்த மலைச்சாரலில் சிறிய வெளி ஒன்று இருந்தது. அம்மலை சாய்ந்த வீட்டுக் கூரைக்கு ஒப்பாகச் செங்குத்தாய்ச் சரிந்து இருந்தது. அதனால், மலைச்சிகரத்தினின்று எவராயினும், எவ்வித விலங்காயினும் வெளியின்கண் இறங்கி வருவதற்கு இசையாதிருந்தது. வெளியிடத்திற்கு எதிரான மலைப்பக்கத்தில் குகை வாயில் போலச் சற்றுக் குழிந்த ஓரிடம் இருந்தது. அது குகையும் அன்று; மலைக்குள் செல்லும் வழியும் அன்று.

இம்மலையின் குழிந்த இடத்திற்கு எதிரில் உள்ள பசும்புல் அடர்ந்த வெளி நிலத்திற் கூடாரம் அடித்துக் குடியிருக்க முடிவு செய்தேன். இதன் அகலம் ஏறத்தாழ முந்நூறு அடி. நீளம் அறுநூறு அடி. மேற்கூறிய குகை வாயிலுக்கு எதிரேயுள்ள பசுமையான இந்நிலம் மூன்று பக்கத்திலும் வர வரச் சாய்ந்து கடற்கரையை அடுத்த பள்ளத்தரையில் பொருந்தியிருந்தது. அந்த வெளிநிலம் மலையின் வடமேற்குச் சாரலில் இருந்ததனால், கதிரோன் சற்றுத் தென்திசையை நாடி மேற்றிசையில்

வரும் அளவும், அது வெயிலுக்கு ஒதுங்கியிருந்தது. மேற்குறித்த திசையிற் கதிரோன் சேரும்பொழுதே அந்நாடுகளில் பகற்பொழுது முடிவது வழக்கம்.

கூடாரம் அமைக்குமுன் மலைக்குழிவுக்கு எதிரில் அரை வட்ட வடிவமாய்த் தரையிற் கோடிட்டேன். அதன் தூரம் மலை அடியினின்று முப்பது அடி நீளம் இருந்தது. ஆகவே விட்டத்தின் நீளம் அறுபது அடி. அரை வட்டத்தின் வடிவாய்க் குறிப்பிட்ட எல்லையில் ஒன்றுக்கொன்று அரை அடித் தொலைவில் வலிவான இரண்டு நிரைக் கொம்புகளைத் தரையில் நாட்டி உறுதிப்படுத்தினேன். அக்கொம்புகள் தரைக்கு மேல் ஐந்தரை அடி மட்டத்திற்கு உயர்ந்து, முனையிற் கூர்மையாய் இருந்தன.

பின்பு துண்டு துண்டாய்த் தறித்து வைத்த கம்பிகளை மேற்கூறிய இரண்டு நிரைக் கொம்புகளிடையில் ஒன்றின்மேல் ஒன்று கொம்பு முனை மட்டத்திற்கு நெருக்கி அடுக்கி, உள் நிரைக் கொம்புகளுக்கு உறுதியாகத் தரைக்குமேல் இரண்டரை அடி உயரத்தில் தூண் தாங்கும் தறிகள் போன்ற வேறு கொம்புகளைச் சார்பாய் வைத்து முட்டுக் கொடுத்தேன். நான் அடைத்த இவ்வேலிக்கு அதிக வன்மை யுண்டாயிற்று. மனிதராவது, விலங்குகளாவது அதை முறித்துக்கொண்டு உட்செல்வதும், அதைத் தாண்டி வருவதும் முடியாத செயலாகும். இவ்வேலையை முடிப்பதற்கு நீண்ட நேரம் வருந்தி உழைத்தேன். முதன்மையாய்க் காட்டுக் கொம்பு வெட்டிச் சுமந்து வந்து தரையில் நாட்டுவதற்குச் சென்ற காலமும், நான் பட்ட துன்பமும் அதிகம்.

இவ்வடைப்புக்குள் செல்வதற்கு நான் வாயில் வைக்கவில்லை. குறுகிய ஏணி ஒன்று அடைப்பின் வெளிப்புறத்தில் வேலியிற் சார்த்தி ஏறிஉட்சென்றேன். அடைப்புக்குள் இருக்கும்பொழுது, நான் ஏணியை எடுத்து உள்ளே வைத்துக்கொள்வது வழக்கம். இவ்வாறு அரணைக் கோட்டைக்கு ஒப்பான அடைப்புக்குள் அச்சமின்றி

இருந்ததால், இராக் காலத்தில் எனக்குக் கேடு சிறிதும் இல்லையென்று கவலையறத் தூங்கினேன். வருத்தப்பட்டு இந்தப் பாதுகாப்பைச் செய்தது [illegible] கண்ணிமையைப் பொருத்தாயினும் எனக்கு உறக்கம் வருமோ? இவ்வளவு அமைதியோடு இருப்பதற்கும் இயலாது. எனக்குக் கேடு செய்யத்தக்க வேடராவது, காட்டு விலங்குகளாவது அத்தீவில் இல்லையென்று நாளடைவில் தெரிந்துகொண்டேன்.

இந்தக் கோட்டைக்குள் மேற்கூறிய உணவுப்பொருள்கள், படைக்கலங்கள், தொழிற் கருவிகள், துணைக்கருவிகள் முதலிய என் உடைமைகள் எல்லாவற்றையும் கொண்டுபோய்ச் சேர்த்தேன். எனது தீவில் ஆண்டுதோறும் [illegible] இங்கள் விடாமழை பெய்வது வழக்கம். அதுபற்றி, நான் கோட்டைக்குள் ஒன்றினுள் ஒன்றாக இரண்டு கூடாரங்களை அமைத்துப் புறக்கூடாரத்திற்குக் கப்பலினின்று கொண்டுவந்த கீல்பூசிய கித்தானால் மேலுறை இட்டேன். இந்த இரட்டை உறை போடப்பட்ட கூடாரம் மழைக்கு ஒதுங்கியிருப்பதற்குச் சிறந்த உறைவிடமாயிற்று.

நான் கப்பலில் இருந்து எடுத்துவந்த மெத்தையிற் சிலநாள் வரையிற் படுக்கவில்லை. துணை மாலுமியினுடைய தூங்கு மஞ்சம் ஒன்று கொண்டு வந்ததாக முன் குறித்தேன். மிக நன்றாயிருந்த அம்மஞ்சத்தில் படுத்துத் தூங்கினேன்.

இந்தக் கூடாரத்திற்குள் என்னுடைய உணவுப் பொருள்களையும், மழையில் நனைந்து பழுதாகத் தக்க எல்லாப் பொருள்களையும் கொண்டு போய் வைத்து அடுக்கிப் பாதுகாவல் செய்தபின், அவைகளைக் கொண்டு வருவதற்காகத் திறந்து விட்ட வாசலை அடைத்துவிட்டு, மேற் சொல்லியவாறு ஏணி வைத்து ஏறிப் போய்வரும் வழக்கத்தை மேற்கொண்டேன்.

கோட்டைக்குப் புறத்திலுள்ள வேலைகள் முடிந்த பின், மலையைக் குடைந்து அகழ்ந்த மண்ணையும் கல்லையும் எனது கூடாரத்தின் வழியாய் எடுத்துக்கொண்டு போய், அதிலுட் போட்டு, ஒன்றரை அடி உயரத்திற்கு ஒரு மேடை கட்டினேன். கூடாரத்தின் பின்புறத்தில் மலையில் அகழ்ந்த குகை எனது வீட்டிற்கு நிலவறை ஆயிற்று.

இவ்வேலைகளெல்லாம் நிறைவேறுவதற்கு பலநாட்கள் சென்றன; அதனால் மிக வருத்தப்பட்டேன். இடையில் சேர்ந்து, எனக்கு மனக் கவலை உண்டாக்கிய சில நிகழ்ச்சிகளைக் கூறுகின்றேன். கூடாரம் அடிப்பதற்கும், குகை அகழ்வதற்கும் ஆழ்ந்த சூழ்ச்சி செய்து முடிந்தபின், மேகம் கறுத்து நெருங்கி, பெரு மழையாகப் பொழிந்து, திரையில் பளிச்சென்று மின்னியது. அதற்குப் பின் மிகுந்த இடிமுழக்கம் உண்டாயிற்று. மேகம் மின்னியதைப் பற்றி எனக்கு அவ்வளவு அச்சமில்லை. வெடி மருந்தைப் பற்றிய நினைவு மின்னைப்போல விரைந்து என் உள்ளத்தில் உண்டாகவே அச்சமுற்று அறிவு அழிந்தேன். என்னை உயிர்த்துன்பமின்றிக் காக்கும் துணைப் பொருள்களும், உணவு தேடிச் சேர்ப்பதற்கு ஆதாரவாகிய என் மருந்து முழுதும் ஒரே முறையில் அழிந்து போகுமே என நினைத்தவுடன் என் மனம் மயங்கிச் சோர்ந்தது. மருந்தில் ஒளிபட்டு நெருப்புப் பற்ற நேர்ந்தால் ஒரு நொடிக்குள் நான் எரிந்து சாம்பலாவதற்கு ஐயமில்லை. இப்படியிருந்தும், மருந்தைப் பற்றி எனக்குண்டான கவலையில் நூறுயிரத்தில் ஒரு பங்காவது எனக்கு வரும் உயிர்த் துன்பத்தைக் குறித்து உண்டாகவில்லை.

**வெடி மருந்தைப் பக்குவம் செய்து வைத்தல்**

நான் இவ்வாறு மனக்குழப்பம் அடைந்திருந்ததனால் மழை விட்டபின் கட்டு வேலைகள் அனைத்தையும் நிறுத்திப் பையாய்க் குள்ளிருந்த மருந்தைச் சிறிது சிறிதாகச் சிப்பஞ் செய்து வைப்பதற்குக் காலம் தாழ்க்காமல் பை தைக்கவும், பெட்டி செய்யவும் தொடங்கினேன். அவை முடிந்தபின்

யைக் கையாண்டு சுட்டு விழுத்தினேன். அவைகள் மலை யில் நிற்கும்பொழுது பள்ளத் தரையில் என்னைக் கண்டால், கண்ட அக்கொடிப் பொழுதிலேயே மனங் கலங்கி விரைந்து ஓடிவிடும். பள்ளத் தரையிற் புல் மேயும்பொழுது, மலை யில் நான் நின்றால், என்னைப் பாராமல் தங்கள் விருப்பம் போல் மேய்ந்துகொண்டு நிற்கும். இந்த இயற்கையை நான் நாளடைவில் தெரிந்து கொண்டேன். இடவேறு பாட்டால் அவைகளுக்குக் கீழ்ப் பார்வை யன்றி, மேற் பார்வை அத்துணை தெளிவாய் இல்லை என்றும் அறிந்து கொண்டேன்; அதனால் நான் முதலில் மலை ஏறிப் பள்ளத் தரையிற் புல் மேயும் ஆடுகளைப் பெரும் பாலும் இலக்குத் தப்பாமல் சுட்டு விழுத்தினேன். முதலில் நான் சுட்டது ஒரு பெண் ஆடு. அவ்வேளையில் அது தன் சிறு குட்டிக்குப் பால் கொடுத்து நின்றது கண்டு, என் உள்ளம் பதைத்தது. தாய் ஆடு கீழே விழுந்ததும் குட்டி அதன் பக்கத்தில் மரம் போல் விறைத்து நின்றது. நான் இறங்கிப் போய் விழுந்த ஆட்டை எடுத்துத் தோளில் ஏற்றிச் சுமந்து கொண்டு வீட்டுக்குச் சென்றபோது குட்டி என்னைத் தொடர்ந்தது. அது கண்டு தாய் ஆட்டை மதில் அடைப்புக்குள் போட்டுவிட்டு, குட்டியை வளர்த்து வசப்படுத்த நினைத்து, எடுத்துக் கொண்டு ஏணி வழியாய் மதிலேறி உட்சென்றேன். நான் கொடுத்த இரை ஒன்றை யும் தின்னாமல் அது வரவர மெலிவுற்றதனால் வேறு வழி யின்றிப் பின்பு ஒருநாள் அதை அடித்து உணவுக்குச் சேர்த்துக்கொண்டேன். தாய், குட்டி இவ்விரண்டின் இறைச்சியும் பல நாட்கள் என் உணவுக்குப் பயன்பட்டன. இறைச்சியையும், ரொட்டி முதலிய உணவுப் பொருள்களை யும் நான் கூடிய வரையில் அளவோடு உண்டு வந்ததனால், நீண்டநாள் அளவும் உணவுக்குத் துன்பப் படாதிருந்தேன்.

**தீவில் நான் செய்துகொண்ட அமைப்புக்கள்**

நக வாய்ப்பான கட்டிடம் அமைத்துக் கொண்டபின், நெருப்பு மூட்ட ஓரிடத்துக்கும், எரிக்க விற குக்கும் ஏதேனும் வழிவகை செய்யவேண்டுவது இன்றி

மையாய் ஒருநாள் துப்பாக்கி எடுத்துக்கொண்டு கடற்கரை வழியாய்ச் சென்றபோது, என்னுடைய நிலையைக் குறித்து மனம் அழுந்தச் சிந்தித்தேன். அவ்வேளையில் எனக்குள் அறிவு பிறந்து முதலில் நான் நினைத்த எண்ணத்தைக் கண்டித்தது:—"நீ துணையின்றியிருப்பது உண்மைதான்; ஒன்றை நினைத்துப்பார்; உன்னுடன் கப்பலேறினவர்கள் எங்கே? நீங்கள் பதினொருவர் அல்லவா கப்பல் ஏறினீர்கள். பத்துப் பெயரும் எங்கே? அவர்கள் தப்பிப்பிழைக்காதிருக்க, நீ மட்டும் பிழைத்திருக்கக் காரணம் என்ன? இத்தீவிற் பிழைத்திருப்பதா? இதோ உள்ள கடலில் முழுகி இறந்துபோவதா? எது நலம்?" உடனே நான் கடலை ஏறிட்டுப் பார்த்தேன். எவனும்தான் அடைந்துள்ள தீமைகளை எண்ணும்பொழுது, அவற்றிலுள்ள நன்மைகளையும், அவற்றினும் கொடிய தீமைகளையும் உடன்கூட்டி நினைக்கவேண்டும்.

**மேலும் மேலும் நான் நினைத்த நினைவுகள்:**

மேலும் என்னுள்ளத்தில் தோன்றிய நினைவுகளாவன:—எனக்கு உணவு உடை முதலியவற்றிற் குறை ஒன்றும் இல்லை. மணற் குன்று தட்டிப் பொறுத்து நின்ற கப்பல் நிலைபெயர்ந்து கரையை அடுத்து நெருங்கி வந்து நிற்க, அதில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளும் உரிமையைப் பெற்றேன். என்னைப்போல இந்தப் பேறு அடைந்தவர் நூறாயிரத்தில் ஒருவரேனும் உண்டோ? நன்று, கப்பல் வியக்கத்தக்கவாறு கரைக்கு அருகில் வந்து நிற்காதிருக்குமானால் என் நிலை என்னவாகும்? முதலில் நான் கரையை அடைந்தபொழுது, உணவு உடை முதலியவைகளாயினும், அவைகளைச் சேர்த்து வைத்தற்குரிய துணைக்கருவிகளாயினும் ஒரு சிறிதும் இல்லாதிருந்தேன். இதுவரையில் அவைகள் எனக்குக் கிடைக்காதிருந்தால், எவ்வளவு துன்பப்படுவேன்? பின்பு நான் உரத்த குரலில், "துப்பாக்கி வெடி மருந்து குண்டு முதலிய துணைப்பொருள்கள், தொழிற்கருவிகள், உடுக்க ஆடை, படுக்க மெத்தை, உறைவதற்குக் கூடாரம்,

திருக்கும் காலத்தில் காலக்கணக்குத் தவறும் என்றும், ஓய்வு நாள் இஃது உழைத்தற்குரிய நாட்கள் இவை என்றும் பிரித்து அறியும் அறிவை இழந்து போவேன் என்



பின்னும் சில புத்தகங்களையும் எனது பொருள் மூட்டை களிற் கட்டிவைத்திருந்தேன். இரண்டு மூன்று ரோமன் கேதியாருடைய மறைமொழி உருவேற்றும் புத்தகங்களும் இருந்தன. இம்மூட்டையும் எனக்கு அகப்பட்டது. ஒன்று சொல்ல மறந்து விட்டேன். எங்கள் கப்பலில் நாய் ஒன் றும் பூனைகள் இரண்டும் இருந்தன. அறிவுள்ள அந்த உயிர்களின் வரலாறுகளைப் பின்னர்க் கூறுவேன். பூனை கள் இரண்டையும் நான் கப்பலிலிருந்து பிடித்துக் கொண்டு சென்றேன். நாயைக் கொண்டுபோக வில்லை. முதல்முறை நான் உருவிலிருந்து பொருள்களை எடுத்துக் கொண்டு கரைக்குச் சென்ற மறுநாள் அது கடலில் தானகப் பாய்ந்து நீந்திக் கரைக்கு வந்து பல ஆண்டுகள் வரையிலும் எனக்கு உண்மையான தொண்டனய் இருந் தது. அதனல் செய்யத்தக்க உதவி ஒன்றும் அஃது எனக்குச் செய்யாதிருக்கவில்லை. அஃது என்னுடன் பேசாத குறை ஒன்றன்றி, மற்றையவற்றில் எல்லாவகை யாலும் எனக்குத் தோழனகவே இருந்தது. எனக்குக் கிடைத்த இறகையும், மையையும், எழுதும் தாளையும் வீண் செலவு செய்யாமல், மிக அளவாய் வைத்துப் பயன்படுத்தி னேன். மை இருந்த வரையில் எவ்வரலாறுகளையும் நுட்ப மாய் எழுதி வைத்தேன். அது செலவானபின் எழுது தற்கு இசையவில்லை. புதிதாக மை சேர்த்துப் பயன் படுத்த நான் செய்த முயற்சிகளெல்லாம் வீணயின.

**மேலும் பல பொருள்கள் வேண்டியிருந்தன**

இவ்வளவு மிகுதியாய்ப் பொருள் சேர்த்திருந்தும், எனக்கு வேண்டும் பொருள் மேலும் பல உள்ளன என்று அறிந்தேன். அவற்றுள் ஒன்று மை. அன்றியும் நிலம் அகழ்வதற்கும், மண் எடுப்பதற்கும் பாரை, ஒருதலைக் குந்தாலி, சோழியப் பாரை, ஊசி, மண்வெட்டி, குண்டூசி, நூல் இவைகளும் வேண்டியிருந்தன. சணல் நூல் துணி யில்லாத குறை எனக்கு விரைவில் மிக எளிதாய்ப் புலனயிற்று.

போல, என் உள்ளத்தில் நிகழும் துன்பமான நிகழ்ச்சிகளைக் கடிதத்தில் எழுதி வெளிப்படுத்தினேன். மேலும் என்னிடம் அறிவு தோன்றி, என் மனத்தளர்ச்சியை மேற்கொண்டதனால் நான் தேறித் தெளிந்து, என் நிலைமைக்கும், என்னிலும் அதிக சிறுமை அடைந்தோர் நிலைமைக்கும், வேறுபாடு தெரியும் பொருட்டு எனக்குவந்த நன்மைகளை ஒரு வரிசையிலும், தீமைகளை ஒரு வரிசையிலும் இரண்டு பிரிவுகளாய் எழுதிவைக்கத் தொடங்கினேன். கொடுக்கல் வாங்கல் கணக்கு எழுதுவதுபோல நான் அடைந்த நன்மைகளை வரவுக் கணக்கு வரிசையிலும், துயரங்களை செலவுக் கணக்கு வரிசையிலும் பிழை சிறிதும் இன்றி நடுவு நிலைமையாய் உள்ளபடி எழுதி வைத்தேன். அது வருமாறு :

| தீமை | நன்மை |
| --- | --- |
| (1) நீங்கிச் செல்லும் வழி சிறிதும் இன்றிக் கொடுமையான பாழ்ந்தீவில் ஒதுக்கிவிடப் பட்டேன். | என்னுடன் கப்பலில் ஏறினவர்களைப் போல நான் கடலில் மூழ்கி இறந்துபோகாமல் பிழைத்திருக்கிறேன். |
| (2) இம் மண்ணுலகில் வாழும் பலகோடி மக்களுள் எனக்கு மட்டும் இந்தத் துன்பநிலை வந்து சேர்ந்தது. | கப்பலில் ஏறிய மனிதர் எல்லோருள்ளும் நான் ஒருவன் மட்டும் உயிரோடு இருக்கப் பெற்றேன்; என்னை இறந்து போகாமல் விலக்கிக் காத்த கருணைக்கடவுள் இந்நிலைமையினின்றும் விடுதலை செய்வதற்கும் வல்லவர். |
| (3) மக்கள் கூட்டத்தினின்று விலக்கித் தனியாய் இவ்விடத்தில் விடப்பட்டிருக்கிறேன். | உணவுப் பொருள் ஒன்றும் இல்லாத பாலைவனத்தில் நான் பட்டினி இருந்து இறக்கவில்லை. |
| (4) எனக்கு உடுக்க உடை இல்லை. | நான் இருப்பது சூடான நிலப்பகுதி [illegible] |

| | |
|---|---|
| (5) கொடுமை செய்யும் மனி தருக்கும் தீங்கு செய்யும் விலங்குகளுக்கும் தப்பிப் பிழைக்க வகை இல்லாத வனாய் இருக்கிறேன். | ஆப்பிரிக்கக் கரையில் கண்ட கொடிய காட்டு விலங்குகளை நான் இருக்கும் இத் தீவில் காணவில்லை. கப்பல் பழுது பட்டு அக்கரையில் அடைந் திருப்பேனானால் எனது நிலை எப்படி இருக்கும். |
| (6) என்னுடைய குறையைச் சொல்லி ஆறுதலாயி னும் நன்மொழிகள் சொல்லி என்னை ஆற்று வதற்காயினும் இங்கு எவரும் இல்லை. | அருட் கடலாகிய கடவுள் கப்பலை வியக்கும்படி கரையிற் சேர்த்து என் குறை தீர்க்கும் பொருட்டுப் பல பொருள்களை நான் எடுத்துக் கொள்வதற் கும் என் வாழ்நாள் முழுதும் உணவுப்பொருள்களைத் தேடிக் கொள்வதற்கும் எனக்கு வழி வகை செய்தருளி இருக் கின்றார். |

சுருக்கிக் கூறின், எவ்வளவு இக்கட்டான நிலைமையில் இருப்பவர்க்கும் அந்நிலைமையில் உண்மையான நன்மையும் உண்டு, தீமையும் உண்டு என்பதற்கு நான் எழுதிய இக்கணக்கையே தவறாத சான்றாகக் கண்டேன். எந்த நிலைமையில் இருப்பவர்களும் தமது மனநோய் ஆற்றித் தம்மைத் தேற்றத் தக்க நன்மை நிலைகளைக் கண்டு அவ் விரண்டையும் வரவுக்கணக்கு வரிசையில் எழுதுவார்கள். இது முடிவில்லாத வலுக்கட்டாயமான நிலையில் அழுந்தி வருந்திய என்னுடைய பழக்கத்தால் பிறந்த முடிவு என்று யாவரும் அறிந்து கொள்வாராக.

இவ்வாறு நான் துன்பத்தை மறந்து, என்னுடைய இந்த நிலை இன்பம் உடையதென்று கண்டு, கடலில் ஏதா வினும் கப்பலைக் காணலாம் என்று பார்த்துக்கொண்டிருப் பதை விட்டு, என்னுடைய நிலைக்குத் தக்க வாழ்க்கை இன் பங்களைத் தேட முயன்றேன்.

மலையோரத்தில் கூடார வீடு கட்டி அதைச்சுற்றிக் கொம் பினாலும் கப்பலின் பெருங்கயிற்றாலும் வலிவுள்ள வேலி அமைத்ததைக் குறித்து விளக்கமாய் முன்பு கூறினேன்.

அதன் புறத்தில் இரண்டடி அகலம் வேலி மட்டத்திற்கு அடுத்துப் புல் கற்றை அடுக்கி மதில் எழுப்பினேன். அதனும், அது வேலி அன்று மதில் என்று சொல்லத்தக்கபடி இருந்தது. பின்னும் ஒன்றரை ஆண்டு சென்றபின், மதில் உச்சியினின்று மலைபுறத்தில் வரிசையாய்க் கைமரம் வைத்துத் தாழ்வாரம் இறக்கி மழைநீர் உள் செல்லாதபடி, தழை, குழை, கொம்பு முதலியவற்றால் வேய்ந்தேன். நான் இருந்தத் தீவில் ஆண்டுதோறும் சில திங்கள் முழுவதும் மழை வலுத்து விடா மழையாகப் பொழிவது வழக்கம்.

**குகையைப் பின்னும் விரிவாக்குதல்**

என் உரிமைப்பொருள்கள் எல்லாவற்றையும் வேலி அடைப்புக்குள்ளும் கூடாரத்தின் பின்புறத்தில் அகழ்ந்த குகைக்குள்ளும் கொண்டு போய்ச் சேர்த்ததாகக் கூறினேனே, அவைகளை நான் முதலில் தாறுமாறாய் அங்கும் இங்கும் வைத்ததனால், எனக்கு இருக்க, படுக்க, உலாவ இடம் மிஞ்சவில்லை. ஆதலால், குகையைப் பின்னும் விரிவாக்கித் தரையைச் சற்று ஆழமாய்த் தோண்டினேன். அம்மலை மணற்பாங்கு உடையது; அதை அகழ்வது எளிது; கொடிய காட்டு விலங்குகளால் எனக்கு உயிர்க் கேடு உண்டாகாது என்று கண்டு, எனது வலப்புறத்தில் மலையைப் பக்கவாட்டமாய்க் குடைந்து, என் கோட்டைமதிலுக்கு அப்புறம் வெளிப்படுவதற்குத் தரையில் வாயில் வைத்தேன்.

தரையின்கீழ் அகழ்ந்த இவ்வழி கூடாரத்திற்கும், எனது களஞ்சியத்திற்கும் போகவரப் புறக்கடை வாயிலாய் இருந்ததுமன்றி, என் பொருள்களை வைக்கவும் உதவிற்று.

இவ்வேலை முடிந்தபின், எனக்கு மிகவும் இன்றியமையாத சிறு பொருள்களைச் செய்யத் தொடங்கினேன். முதலில் நான் செய்தவை நாற்காலி ஒன்று, மேசை ஒன்று, இவ்வுலகத்தார் அடையும் இன்பங்கள் பலவற்றுள் நான் அடைந்தவை மிகச் சில. அச்சில இன்பமும்

நாடகங்களும் செய்யும் இன்றி எனக்கு வந்து பயன்படுவது இல்லாது. வேலையின்றி எழுதுவதும், உணவு உண்ணுவதும், மற்றும் பல வேலைகள் செய்வதும் இப்பொழுதுதில் என்ன இன்பம் இருக்கிறது?

பயிற்சி இன்றியும் கைத்தொழில் புரிதல்

ஆகவே, காலம் தாழ்த்தலின்றி வேலையைத் தொடங்கினேன்; இவ்விடத்தில் ஒன்றைக் குறிப்பிடவேண்டும். பகுத்தறிவே கணிதக் கல்வியின் சாரமும் அடிப்படையுமாய் இருப்பதனால், ஒவ்வொன்றையும் பகுத்தறிவினால் அளந்து மதித்து, அவற்றை செயல் வகைகளை நுட்பமாய்ப் பகுத்தும் வரும் காலத்தில் எவ்வகைக் கைத்தொழிலையும் பயின்று கைதேர்ந்தவனாவான். நான் இது வரையில் தொழிற் கருவி ஒன்றையாவது எடுத்து அறியேன். அதில் எனக்குப் பழக்கமில்லை. இல்லாதிருப்பினும், நாளடைவில் முயற்சி செய்து வழக்கப்படுத்திக்கொண்டேன். அறிவைச் செலுத்தி உழைத்ததனால், தகுதியான கருவிகள் இல்லாதிருந்தும் எனக்கு வேண்டிய எல்லாச் சிறு பொருள்களையும் நன்றாகச் செய்யும் திறம் உடையவன் ஆனேன். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அன்றோ?' வாச்சியும் கோடரியும் கொண்டு எவரும் செய்தற்கரிய வேலைகளை நான் செய்து முடித்தேன். எவ்வகைக் கருவியும் இல்லாமல் நான் செய்த வேலைகள் மிகப் பலவாகும். எனக்குப் பலகை வேண்டும்பொழுது முதலில் மரத்தைத் தறித்து வீழ்த்தி. அதை மேலும் கீழும் கோடரியாற் செதுக்கி, மட்டமாக்கி வைத்தேன். அது பலகை அளவு கனம் உள்ளதாய் வந்த பின், அதில் உள்ள மேடு பள்ளத்தை வாச்சியாற் செதுக்கி, மெருகு இடுவேன். இவ்விதமாக வெட்டினால் ஒரு மரத்தில் ஒரு பலகை மட்டுமே கிடைக்கும்; அதை மாற்றுவது எப்படி? எவ்வளவு வருத்தம் இருந்தாலும், காலம் சென்றாலும், அவைகளைப் பாராட்டாமல் வருந்தி உழைக்கத்தான் வேண்டும். ஒரு பலகை மேற்கூறியவாறு வெட்டி முடிக்கக் காலமும் உழைப்பும் அதிகம் சென்றன. அவ்வாறு சென்றாலும், அவை எனக்கு அன்றி

தற்பொழுதும் உபயோகப்படாதிருந்ததைற் பெரிதன்று. எந்த வேலை செய்யினும் எனக்கு ஒன்றுதான்.

எப்படியும் கப்பலில் இருந்து எடுத்துத் தெப்பத்தில் ஏற்றிக்கொண்டு வந்த பலகைத் துண்டுகளால் முதலில் ஒரு மேசையும், நாற்காலியும் செய்தேன். அதன் பிறகு மேற் கூறியவாறு மரந்தறித்து வெட்டிய பலகைகளை குகையின் பக்கத்தில் உள்ள அணை சுவரில் அடுக்குத் தட்டுகளாய் இசைத்து, அத்தட்டுகளில் எனது தொழிற் கருவிகள், ஆணிகள், இருப்பாயுதங்கள் முதலியவைகளை வேண்டும்பொழுது எளிதில் எடுக்கத் தக்கபடி, தனியே வைத்தேன். இத்தட்டும் பலகைகளின் அகலம் ஒன்றரை அடி. மேலும், குடைந்தமலை வழிச்சுவரில் மர ஆணிகள் அடித்து, அவற்றிற் கயிறுகட்டி, தூக்கத்தக்க துப்பாக்கி முதலிய எல்லாக் கருவிகளையும் அதன்மேல் வைத்தேன்.

ஆகவே, எனது குகையைப் பார்ப்பவர்களுக்கு அஃது இன்றியமையாத பொருளனைத்தும் தொகுத்துவைக்கப் பட்ட பண்டகசாலையாகத் தோன்றும்: என் பொருள்களெல்லாம் எளிதில் எடுக்க வைக்கத்தக்கனவாய் ஒழுங்காய் வகுத்து வைக்கப்பட்டிருப்பதையும், வேண்டும் பொருள் யாவும் திரளாய் இருப்பதையும், பார்த்து மகிழ்ச்சி அடைந்தேன்.

### நாட் குறிப்பு எழுதிய முறை

இவ்வேலை முடிந்த பின்புதான் நான் அன்றன்று செய்த வேலைகளைப்பற்றி நாட் குறிப்பு ஒன்று எழுதிவைக்க முடிவு செய்தேன். இதற்கு முன் நான் நடுங்கும் மனம் உடையவனாய் எதையும் ஒழுங்கின்றிப் பதைப்புடன் செய்ததனால், அவற்றை ஒழுங்குபடுத்தி எழுதுவதற்கு இசையாதிருந்தது. அவ்வாறு எழுதினும், பின்வருமாறு செய்திகள் நயமின்றிச் சுவையற்று இருக்கும்—செப்டம்பர்த் திங்கள் 30-ஆம் நாள் கடலில் முழுகி இறந்து போகாமல் திருவுள்ளத்தின் செயலாற் கரையேறிய பின் என்னைப் பாதுகாத்த கடவுளை நினைத்து, நான், அவருக்கு வணக்கம்

சொருத்தவில்லை. கடலில் விளையாடக் குதித்த உடம்பு கிடைக்காமல் கசிந்தேன். களைப்பு மிகுந்த பின் வருத்தத்தோடு என்கோரி ஒரு மெசக்கு. தலையிலும் வாயிலும் அடித்துக்கொண்டு பித்தம் பிடித்தவன் போல, இலக்கு அற்றுக் கடற்கரையில் ஓடி; என் கைகளை நெரித்துப் பறை பறைத்துக் கூவி; "ஐயோ! கெட்டேன். உய்யும் வகையின்றிக் கெட்டேனே" என்று புலம்பி, இப்படியே விழுந்து நிலை தடுமாறிக் கிடந்தேன். கொடிய விலங்குகள் என்னைக் கொன்றுவிடுமென்னும் அச்சத்தால் எனக்குத் தூக்கம் வரவில்லை.

சில நாட்கள் சென்றபின் நான் கப்பலுக்குப் போய்க் கொண்டுவந்த பொருள்களை எல்லாவற்றையும் விருப்பத்தோடு எடுத்துக்கொண்டு வந்து சேர்த்த பின்னும் என் பதைப்புத் தீரவில்லை. கடலில் ஏதாவது கப்பல் வருவது தெரியும் என்று அக்குன்றின் சிறு மலை உச்சியிலேறி நின்று பார்த்தேன். நெடுந்தூரத்திற்கப்பால் பாய் ஒன்று தோன்றுவதுபோல் இருந்தது. சற்று நேரம் சென்றால் நெருங்கிவரும் என்று என்னுள்ளத்தில் உவந்து உற்றுப் பார்த்த வண்ணமாய் நின்றேன். நெடு நேரம் சென்றது. பார்த்த கண் இரண்டும் பூத்துப்போயின. எனக்கு ஒன்றும் தெரியவில்லை. உட்கார்ந்திருந்து சூழ்ச்சியறியாத இளங்குழந்தையைப்போல மார்பு நனையக் கண்ணீர் வடித்து அழுது, அதிபாசமயினால் என் நெஞ்சைப் பின்னும் வருத்தினேன்.

இப்படி வருத்தமுற்றவாறு தீர்ந்து, குடியிருக்க வீடு கட்டி, என் பொருள்களை அங்கங்கே ஒழுங்காய் வைத்து, ஒரு மர மேசையும் நாற்காலியும் செய்து எல்லாவற்றையும் ஒழுங்கு அமைத்த பின் நாட் குறிப்பு எழுதத் தொடங்கினேன். அதில் மேற்குறித்த செய்திகளெல்லாம் கால ஒழுங்குப்படி எழுதப்பட்டுள்ளன. நான் வைத்திருந்த மை செலவாய்ப் போகவே, வேறு மை தேட வழியின்றி நாட் குறிப்பு எழுதுவதை அவ்வளவோடு நிறுத்திவைத்தேன்.

# ஐந்தாம் அதிகாரம்

## திருத்தமான முறையில் நாட் குறிப்பு எழுதுதல்

## நாட்குறிப்புச் சுவடி

1959-ஆம் ஆண்டு, செப்டம்பர்த்திங்கள்
30-ஆம் நாள்.

**தீவில் முதல் நாளைக் கழித்தல்**

இராபின்சன் குரூசோ என்னும் ஏழையும் துன்பத்தில் கட்டுண்டு கிடப்பவனுமாகிய நான், ஆழ்ந்த கடலில் கொடுமையோடு வலிந்து அடித்த புயலினால் கப்பல் பழுதுபட்டதனால் இன்று இந்தத் தீவில் கரையேறினேன். இது மக்கள் அடையும் இன்ப வாழ்வுப் பொருள் சிறிதும் இல்லாத பாழ்ந்தீவு. ஆதலால் நான் இதற்குத் துன்பத்திற்கு உறைவிடமான தீவு என்று பெயரிட்டேன். என்னுடன் கப்பலில் ஏறிய கடற்பயணத்தார் அனைவரும் கடலில் மூழ்கி இறந்துபோக, நான் மட்டும் குறையுயிரோடு கரை அடைந்தேன்.

எனக்கு உண்பதற்கு உணவாவது, குடியிருக்க வீடாவது, உடுக்க ஆடையாவது, கையுதவிக்குக் கருவிகளாவது, ஓடி யொதுங்கப் புகலிடமாவது, வேறெவ்வித உதவிகளாவது இல்லையென்று கண்டு ஏங்கித் துயரடைந்தேன். கொடிய விலங்குகளாற் கொன்று தின்னப்பட்டாயினும், கொடுந்தொழில்புரியும் காட்டு மனிதராற் கொலை செய்யப்பட்டாயினும், உணவிற்கு வழியின்றிப் பட்டினியால் மெலிவுற்று வருந்தியாயினும் இறப்பதொழிய வேறு நிலையொன்றும் எனக்குத் தோன்றவில்லை. இந்தத் துன்ப நிலையை எண்ணி எண்ணி, அன்று முழுவதும் வேதனையடைந்தேன். பொழுது சாய்ந்தவுடன் காட்டு விலங்குகள் வரும் என்று அஞ்சி, ஒரு மரத்தில், ஏறி, இரவு முழுதும் மழை பெய்தும், என் நினைவு இன்றித் தூங்கினேன.

## உடைந்த கப்பலில் பொருள் எடுத்து வந்தது

அக்டோபர்த் திங்கள் 1-ந்தேதி மணற்குன்று தட்டிப் பொருந்து நிலையாக் கப்பல் கடற்பெருக்கு வேளையில் நிலை பெயர்ந்து, அலையால் தள்ளுண்டு, காலையிற் கரைநெருங்கி வந்து நின்றது கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டேன். அது சிறு துண்டுகளாய் உடைந்துபோகாமல் உருக்குலையா திருந்ததனால், காற்றுத் தணியும்பொழுது நான் அதில் ஏறி அங்கிருந்த உணவுப்பொருள்களையும், பின்னும் எனக்கு உதவியான பொருள்களையும் எடுத்துவர இயலும் என்றெண்ணி, மனந்தேறினேன். அவ்வாறு மனந்தேறியும் என் கூட்டாளிகள் கப்பலை விட்டிறங்காதிருந்தால், எல்லாரும் கூடிய முயற்சி செய்து, அதைப் பழுதின்றிக் காத்துக் கொள்ளக்கூடுமே; அது முடியாவிடினும் அவர்கள் முழுதும் இறந்துபோகாமல் இருப்பார்களே: உடையும் கப்பலின் துண்டுப் பலகைகளால் சிறிய படகு ஒன்று செய்து, அதில் ஏறி மனிதர் வாழும் எந்தக் கரையிலாவது எல்லோரும் மனம்போல விரைந்து செல்வோமே; என்று நினைக்க முறை தப்பிய வழியால் அவர்கள் இறந்ததைப் பற்றி முன்பு ஆறின துயரம் மீண்டும் வளர்ந்தது. இன்று பகல் நெடுநேரமளவும் பெயர்த்துப் பெயர்த்து இவைகளை நினைத்துக் கலக்கமுற்றிருந்தபோது, கடற்பெருக்கு வற்றிக் கப்பலின் பெரும்பாகம் நீர் மட்டத்துக்குமேல் வெளிப்பட்டிருந்தது கண்டேன். நான் கூடியவரையில் கால் நடையாய்ச் சென்று நெருங்கிப் பின்பு நீந்திக் கப்பலில் ஏறினேன். அன்று பகலும் மழை ஓயாமற் பெய்தது. காற்றுச் சிறிதளவும் இல்லை.

அக்டோபர்த் திங்கள் 1-முதல் 24-வரையில்— இந்த நாட்களில் நான் பல தடவை கப்பலுக்குப்போய்க் கிடைத்த பொருள் அனைத்தையும் எடுத்துத் தெப்பத்தில் ஏற்றிப் பெருக்கு வேளையிற் கரையிற்கொண்டு வந்துசேர்த்தேன். இத்தனை நாளும் மழை நன்றாய் அடித்துப் பெய்வதும் இடைக்கிடைவிட்டு ஆகாயத்தில் வெளுப்பேறு

வதுமாய் இருந்தது; இது மழைக்காலம் என்று எண்ணு ேன்.

அக்டோபர்த்திங்கள் 20ஆ-எனது தெப்பம் கவிழ்ந்து, அதில் ஏற்றிய பொருள்களெல்லாம் முழுகிப்போயின; ஆயினும் நீர் வற்றியபின் பொருள்கள் பளுவாயும், அவை முழுகிய இடம் களமாயும் இருந்ததனால் அவற்றிற் பல அகப்பட்டன.

அக்டோபர்த்திங்கள் 25ஆ- பகலும் இரவும் அடைமழை பெய்தது. இடையிடையே காற்று வன்மையாய் வீசிற்று. அதனால் கப்பல் உடைந்து துண்டு துண்டாய்ச் சிதறுண்டு போயிற்று. அதன் அடித்தட்டுமட்டும் வற்று வேளையிற் காணப்பட்டது. மற்ற உறுப்புக்களில் ஒன்றும் என் கண்ணுக்கு எதிர்ப்படவில்லை. இன்றும் மழையில் நனைந்து கெட்டுப்போகாமல் என் பொருள்களை மூடிவைத்துப் பாதுகாப்புச் செய்தேன்.

அக்டோபர்த்திங்கள் 26ஆ—இராக்காலத்தில் கொடிய விலங்குகளாலாவது, மனிதராலாவது துன்பம் நேரிடாதவாறு வாய்ப்பான இடத்தில் வாழ்வது இன்றியமையாதது என்று எண்ணி, இன்று பகற்பொழுது முழுதும் கரையையொட்டி அங்கங்கே சுற்றித்திரிந்து இடம் பார்த்தேன். பொழுது சாயச் சற்று முன் மலைச்சாரலில் உள்ள வெளியிலேயே குடியிருப்புக்கு வளமான இடம் என்று குறித்துக் கூடாரம் அடிப்பதற்கு அரை வட்ட வடிவமாய் எல்லைக்கோடு வரைந்தேன். அவ்வெல்லையில் இரண்டு நிரைக்கொம்பு நாட்டி, இடையிற் கப்பல் கம்பிகளைப் பொருத்தி, வெளியில் புல்கற்றை அடுக்கி மதில் எழுப்ப முடிவு செய்தேன்.

26ஆ முதல் 30ஆ வரையில்—பொருள்கள் எல்லாவற்றையும் புது வீட்டிற்குட் கொண்டுபோய் வைக்க அரும்பாடுபட்டேன். இடையே சில வேளை மழை மிக உரத்துப் பெய்தும் நான் வருத்தத்தைப் பாராமல் என் வேலையிற் கண்ணுயிருந்தேன்.

31உ—விடியற்காலையில் உணவிற்குரிய உயிர்ப்பொருளைக் கண்டாற் சுடவும் நாட்டுவளம் காணவும் துப்பாக்கி கொண்டு தீவில் சுற்றி வந்தேன். ஒரு வெள்ளாட்டு மறியைச்சுட்டு எடுத்துக்கொண்டுவர, அதன் குட்டி என்னைத் தொடர்ந்து வீட்டுக்கு வந்தது. நான் அதைப் பிடித்து வளர்க்க நினைத்தும் கொடுத்த இரையைத் தின்னாததனால், அதனையும் பின்பு அடித்துக்கொன்றேன்.

நவம்பர் 1உ—மலைப்புறத்திற் கூடியவரையில் அதிக இடங்கொள்ளத்தக்க கூடாரம் அடித்து அதற்குள் வலிவான கொம்புகள் நட்டு, எனது மஞ்சத்தைத்தூக்கி முதன் முதலில் இன்றிரவுதான் கூடாரத்தில் தூங்கினேன்.

நவம்பர் 2உ—மதில் எழுப்பக் குறித்த எல்லைக்குச் சற்று உள்ளிட்டு என் பெட்டிகள், பலகைகள், தெப்பங் கட்டிய நெடும் பலகைகள் எல்லாவற்றையும் அடுக்கி என்னைச் சுற்றி ஒரு வேலி அடைத்தேன்.

நவம்பர் 3உ—துப்பாக்கி எடுத்துக்கொண்டுபோய் குள்ளவாத்தின் சாயலான பறவைகள் இரண்டு சுட்டுக் கொண்டு வந்து தின்றேன். அவற்றின் இறைச்சி மிக்க சுவையுடையதாய் இருந்தது. மாலையில் ஒரு மேசையை உருவாக்கும் வேலையில் ஈடுபட்டேன்.

நவம்பர் 4உ—இன்று காலையில் வேலை செய்வதற்கும், துப்பாக்கிகொண்டு வெளியே போவதற்கும், தூங்குவதற்கும், பொழுது போக்குக்கும் தகுந்தபடி கால அட்டவணை குறித்தேன். அது வருமாறு:—நாள்தோறும் காலையில் மழை இல்லாதிருக்கும் பொழுது இரண்டு மூன்று மணி நேரம் மட்டும் துப்பாக்கி எடுத்துக்கொண்டு வெளியில் உலாவுவேன்; பின்பு பதினொரு மணிவரையில் வேலை செய்வேன்; அதன்மேல் உள்ள உணவை உண்பேன். அதன் பிறகு பன்னிரண்டு மணி தொடங்கி இரண்டு மணிவரையில் வெப்பம் மிகக் கொடுமையாய் இருந்ததனால், படுத்து நித்திரை செய்வேன்; இரண்டு மணிக்கு எழுந்து, பொழுது சாயும் அளவும் வேலை செய்வேன். நவம்பர் நான்கு ஐந்தாம்

நாட்களில் வேலைக்குக் குறித்த காலம் முழுதும் மேசையே செய்துகொண்டிருந்தேன். தச்சு வேலையில் நான் கை தேர்ந்தவன் அல்லன். ஆதலால் இவ்வளவு காலம் சென்றது. எனக்கு வேண்டிய தட்டு முட்டுக்களை நானே செய்யக் கடமைப்பட்டவன் ஆதலால், நாளடைவில் கைதிருந்திக் கைத்தொழிற் கல்வியில் பயிற்றுவார் உதவி பெறுத் திறமையாளன் ஆனேன். எனது நிலையில் உள்ள எவரும் என்னைப்போலக் கைத்தொழில் திறமை உடையவர் ஆவார் என்று நம்புகிறேன்.

நவம்பர் 5உ—இன்று துப்பாக்கிகொண்டு வெளியிற் சென்று, ஒரு காட்டுப்பூனை சுட்டேன். எனது நாயும் என்னுடன் வந்தது; அந்தப் பூனைத்தோல் சற்று மிருதுவாயிருந்ததாயினும், இறைச்சி ஒன்றுக்கும் உதவாதது. நான் சுட்டு வீழ்த்திய விலங்கு வகைகள் எல்லாவற்றின் தோலையும் உரித்துப் பாதுகாப்பாய் வைத்தேன். கடற்கரை வழியாய்த் திரும்பி வரும்பொழுது பல வகையான கடற் பறவைகளைக் கண்டேன். அவை இன்ன இனத்தைச் சேர்ந்தவை என்று அறியேன். இரண்டு மூன்று நீர் நாய்களைக் கண்டு, வியப்புக்கொண்டு அச்சமுற்று, அவை என்ன விலங்கினத்தைச் சேர்ந்தவை என்று தெளிவாய் அறியாமல் உற்றுப்பார்த்துக்கொண்டு நிற்கையில், அவை கடலுக்குள் ஓடி மறைந்தன. அதன் பிறகு அவை காணப் படவில்லை.

நவம்பர் 6உ—காலையில் உலாவி வந்தபின் குறை வேலையாய் இருந்த மேசையைச் செய்து முடித்தேன். அதன் வேலைப்பாடு என் விருப்பம்போல் அமையவில்லை. நெடு நாட் செல்லுமுன் நான் அதில் உள்ள குற்றங் குறைகளைக் கண்டு திருத்தப் பயின்றேன்.

நவம்பர் 7உ—மழை காலம் ஒழிந்து வேனிற்காலம் தொடங்கியது. 7உ, 8உ, 9உ, 10உ இந்த நான்கு நாளும் 12உயிற் பாதி நாளும் வேறு வேலைகளில் தலையிடாமல் நாற்காலி யொன்று செய்து மிக வருத்தப்பட்டு முடித்தேன்.

அவ்வாறு முடித்தும் அஃது என் மனத்திற்குப் பிடித்ததா யிருக்கவில்லை. செய்யும்பொழுது எத்தனையோ தடவை அதை உறுப்புறுப்பாய்க் குலைத்து மாற்றியமைத்தேன். 11உ ஞாயிற்றுக்கிழமையானதால் அன்று நான் ஒரு வேலை யுஞ் செய்யவில்லை. பின்பு நாளடைவில் ஓய்வு நாள் கைக் கொள்வதை விட்டு விட்டேன். ஏனெனில் நாள் குறிக்கும் தூணில் ஓய்வு நாட்களில் புள்ளியிடத் தவறியதனால் நாள் வகை முறை குழம்பலாயின.

நவம்பர் 13உ—இன்று நிலம் குளிரமழை பெய்ததனால் எனக்குப் புத்துணர்ச்சி ஏற்பட்டது. மழை பெய்த பொழுது மேகம் மிகவும் கொடுமையாய் இடி இடித்து முழங்கி மின்னியதனால், வெடி மருந்து எரிந்து போகு மென்று அளவுகடந்த கலக்கமடைந்தேன். மழை விட்ட வுடன் இனிமேல் மருந்துக்கு ஏதும் கெடுதிவராமல், அதைப் பல சிறு சிப்பங்களாய்க் கட்டி வெவ்வேறிடத்தில் வைக்க முடிவு செய்தேன்.

நவம்பர் 14,15,16உ— இம்மூன்று நாளும் இரண்டோர் இராத்தல் கொள்ளத்தக்க நாற்கோண வடிவமான சிறிய பெட்டிகள் செய்வதிற் கழிந்தன; அப் பெட்டிகளில் வெடி மருந்தைக் கொட்டி அவைகளை ஒன்றுக்கொன்று தொலை வாய்ப் பக்குவமான இடம் பார்த்து வைத்தேன். மேற்கூறிய மூன்று நாட்களில் ஒரு நாள் ஒரு பெரிய பறவையைச் சுட்டு வீழ்த்தி, அதன் இறைச்சியைத் தின்றேன். அதன் பெயர் அறியேன். இறைச்சி சுவையாய் இருந்தது.

நவம்பர் 17உ— பொருள்களை வைக்க மேலும் இடம் கிடைக்கும் பொருட்டுக் கூடாரத்தின் பின்புறத்தில் மலைக் குள் நிலத்தை அகழத் தொடங்கினேன். ஒருதலைக் குந் தாலி ஒன்று, சோழியப்பாரை ஒன்று, தனி உருளை வண்டி அல்லது கூடை ஒன்று இம்மூன்று கருவிகளும் மலையை அகழ்வதற்கு எனக்கு மிகத் தேவையாய் இருந்தன. அத னல் வேலை தொடங்காமல் இந்தக் குறையை எவ்வாறு தீர்ப்பதென்று நினைத்தேன். பின்பு மனத்தில் தோன்றிய

படி கருவிகள் செய்யவும் தொடங்கினேன். நான் வைத்திருந்த கடப்பாரைகள் சற்றுப் பளுவாய் இருந்தாலும், குறித்த வேலைக்குரியவைகளானதால், ஒருதலைக் குந்தாலிக்கு ஈடாய் உதவின. இனி எனக்கு வேண்டுவது மண்வெட்டி. மண்வெட்டி இல்லாதிருந்தால் வேலை செய்ய முடியாது. எவ்வகை மண்வெட்டி செய்ய வேண்டுமென்று விளங்காமல் மயங்கியிருந்தேன்.

நவம்பர் 18உ— மறுநாள் வளமான மரம் பார்த்துத் தறிக்கக் காட்டுக்குப் போயிருந்தபோது, பாலை மரத்திற்கு ஒப்பான ஒரு மரத்தைக் கண்டேன். இம்மரம் அதிக உறுதியாய் இருத்தலால் இதை பிரேஜில் நாட்டார் இரும்பு மரம் என்பார்கள். இதில் ஒரு துண்டு தறித்துக்கொண்டு போகப்பார்த்தேன். கோடரி முனை வெட்ட வெட்ட மடிந்ததேயன்றிச் சற்றும் ஏறவில்லை. வருந்தித் தறித்து ஒரு துண்டு விழுத்தினேன். எடுத்துக்கொண்டு வீடு சேர்க்கவும் பெரும்பாடாயிற்று. ஏனெனில் அது மிகவும் பளுவாய் இருந்தது.

மண்வெட்டிக்கு வேறு வழியில்லாது இருந்ததனால் கெட்டியான இம்மரத்தை யறுத்து மண்வெட்டியாக்குவதற்கு அதிக காலம் சென்றது. சிறிது சிறிதாய் வெட்டி, ஒருவாறு உருவாக்கினேன். ஆங்கிலேய மண்வெட்டிகளின் கைப்பிடியைப்போல அமைப்பான கைப்பிடி செய்தேன். அகன்ற அடிக்கு இருப்புத் தகடு பதிக்கவில்லை. அதனால் நாட்பட இராது; ஆயினும் என் வேலைக்கு உதவிற்று. இதற்குமுன் இந்த வடிவமான மண்வெட்டியைக் கண்டதும் இல்லை; செய்வதற்கு இவ்வளவு காலம் சென்றதும் இல்லை.

**தனி உருளை வண்டி செய்தது**

இவ்வளவோடு என் குறை தீரவில்லை. ஒரு கூடையாவது தனி உருளை வண்டியாவது எனக்கு வேண்டியிருந்தது; பிரம்புபோல் வளையத்தக்க வளார் அகப்படாததனால் கூடை பின்னுவதற்கு ஒரு வழியும் ஏற்படவில்லை. தனி

உருளை வண்டி செய்வதாயின், உருளை நீங்க மற்ற உறுப்புக்கள் அனைத்தும் என்னால் செய்ய முடியும் என்று நினைத்தேன். உருளை செய்யும் வகை எனக்குப் புலப்படவில்லை. அன்றியும் அச்சு நுழையும் இருப்புக் குடங்கள் செய்வது எவ்விதத்திலும் இயலாதென்று தோன்றிற்று. ஆதலால் அகழ்ந்த மண்ணை அள்ளிக்கொண்டு போவதற்குக், கட்டடத் தொழிலில் சிற்றாள் வேலை செய்வோர் சாந்துகொண்டு போய்க் கொடுக்கும் பத்தலுக்கு ஒப்பானது கருவி ஒன்று செய்தேன்.

எனக்கு இவ்வேலை மண்வெட்டி செய்வதுபோல அவ்வளவு அருமையாய் இல்லை. ஆயினும் இதனையும் மண்வெட்டியையும் செய்வதற்கும், வீணாய்த் தனி உருளை வண்டி செய்ய முயலுவதற்கும் சரியாய் நான்கு நாட்கள் சென்றன. நாள்தோறும் காலையில் துப்பாக்கிகொண்டு வெளியில் உலாவும் வழக்கத்தை நான் விட்டுவிடவில்லை. உணவுக்குப் பறவை முதலிய உயிர்ப்பொருள் ஏதேனும் சுட்டுக்கொண்டு வராதிருக்கவும் இல்லை.

நவம்பர் 23உ— மேற்கூறிய கருவிகளைச் செய்து முடிக்கிறவரையில் குகை அகழ்வதை நிறுத்திவிட்டேன். முடித்தபின், என் பொருள்களை ஒழுங்குப்படி வைப்பதற்குக் குகையை ஆழமாய் அகழ்ந்து கூடியமட்டும் அகலப்படுத்துவதற்குப் பதினெட்டு நாட்கள் சென்றன. ஒவ்வொரு நாளும் எனது ஓய்வு நேரத்துக்கும், உடல் வலிமைக்கும் தக்கபடி உழைத்தேன்.

குறிப்பு:—இப்பதினெட்டு நாளும் நான் அகழ்ந்து அகலம் ஆக்கிய குகை எனக்குப் பொருள் வைப்பிடம் ஆனது மட்டும் அன்றி, மடைப்பள்ளியும், உணவு உண்ணும் இடமும், நிலவறையும் ஆயிற்று. என் உறைவிடம் கூடாரம். மாரிகாலத்தில் மழை உரத்துப் பெய்யும் பொழுது, கூடாரத்தின் சுற்றுப்புறம் நனைந்ததனால், மலைப் பக்கத்துடன் அடுத்து மதில் உச்சியில் கைமரங்கள் வைத்துத் தாழ்வாரம் இறக்கிக் கோரைப் புல்லினாலும் தழை குழைகளாலும் வேய்ந்தேன்.

டிசம்பர் 10உ—மலை அடிப்பாகத்தில் முழைஞ்சு அகழும் வேலை நன்றாய் நிறைவேறிற்றென்று எண்ணி மகிழ்ச்சியோடு இருந்தபோது, விரைவில் முழைஞ்சின் முகட்டிலும், ஒரு பக்கத்திலும் உள்ள மண் கண்டம் இடிந்து படை படையாய் விழுந்தது கண்டு, அச்சம் கொண்டு ஏங்கினேன். எனக்குக் காரணமின்றி வருத்தம் உண்டாகவில்லை. மண் இடிந்து விழுந்தபொழுது நான் முழைஞ்சுக்குள் இருந்தேனானால், என்னுடலைப் புதைப்ப தற்கு எவரும் குழிதோண்ட வேண்டுவதில்லை. முழைஞ்சை அளவிறகதிகமாய் விரிவாய் அகழ்ந்தது தவறு. இந்த இடர்ப்பாடு நேர்ந்ததனால், நான் திரும்பவும் வருந்தி யுழைக்கவேண்டி இருந்தது. இடிந்து விழுந்த மண்ணை வெளிப்படுத்துவது மட்டும் அன்றி முழைஞ்சின் இரு புறத்து அணையையும், முகட்டையும் திரும்ப இடிந்து விழா மல் அணை கொடுத்து வலுப்படுத்துவதும் என் கடமை ஆயிற்று.

டிசம்பர் 11உ—இன்று வேலை தொடங்கினேன். தாங் கும் தூண் இரண்டு நிறுத்தி, அவற்றின் உச்சியில் மூன்ற டுப்பலகை இரண்டு குறுக்காய் வைத்து, முழைஞ்சின் முகட்டைத் தாங்கி நிற்கச் செய்தேன். இவ்வேலை மறு நாள் முடிந்தது. இவ்வாறே வேறு தூண்களும் நிறுத்தி, இனி முகட்டிற்கு அச்சமில்லை என்று கூறுமாறு ஒரு வாரத்திற்குள் அதை வலுப்படுத்தினேன். தூண்கள் எல்லாம் நிரை நிரையாய் நாட்டப்பட்டிருந்ததனால், நந் நான்கு தூண்களின் இடை வெளியை அறைகளாய் வகுத் தேன்.

டிசம்பர் 17உ—இன்று தொடங்கி 20உ வரையில் அடுக்குத் தட்டுப் பலகைகள் இசைத்து, தூக்கத்தூக்க கருவி முதலானவைகளைக் கட்டித் தூக்குமாறு தூண் களில் ஆணி அறைந்தேன். இவையெல்லாம் நிறைவேறிய பின் என் வீட்டின் உள்ளிடத்தில் யாவும் ஒழுங்காய் இ—

டிசம்பர் 20உ—எல்லாப் பொருள்களையும் முழைஞ்சுக்குள் எடுத்துக்கொண்டுபோய், அவ்வவற்றிற்குரிய இடத்தில் வைத்து, உணவுப் பொருள்கள் வைத்துப் பாதுகாக்கும் தட்டு ஒன்றைப் பலகைகளால் மூட்டினேன். அன்றியும் வேறொரு மேசையும் மரத்தால் செய்தேன். அதனால் என்னிடமிருந்த பலகைகள் எல்லாம் செலவழிந்து போயின.

டிசம்பர் 24உ—இராப்பகல் முழுதும் விடாமல் மழை பெய்தது; நான் வீட்டை விட்டு வெளியே புறப்படவில்லை.

டிசம்பர் 25உ—பகல் முழுவதும் மழை பொழிந்தது.

டிசம்பர் 26உ—மழை இல்லை. நிலம் முன்னிலும் அதிகமாய்க் குளிர்ந்து, பயிர் பச்சைகள் கண்ணுக்குப் பசுமையாய்த் தோன்றின.

டிசம்பர் 27உ—வெள்ளாட்டுக்குட்டி ஒன்று சுட்டு வீழ்த்தினேன். மற்றொன்றை முடமாக்கிப் பிடித்துக் கழுத்தில் கயிறிட்டு, வீட்டுக்குக் கொண்டுவந்தேன். வீடு சேர்ந்த பின் ஒடிந்த காலைப் பற்றுவைத்துக் கட்டினேன். இம்முட ஆட்டைக் கருத்தாய்ப் பாதுகாத்து வந்ததனால், அது பிழைத்ததுமன்றி ஒடிந்த எலும்புங்கூடி, கால் முன் போல் உறுதியாயிற்று. நாளுக்கு நாள் கைத்தீனி கொடுத்து வளர்த்ததனால் அஃது என்னுடன் பழகி எனது வாயிலுக்கு எதிர் வெளியில் பசும்புல் மேய்ந்து என்னைவிட்டுப் பிரியாதிருந்தது. வெடி மருந்தும் ரவையும் செலவழிந்த பின், எனக்கு உணவிற்காக ஆடு முதலிய உயிர்ப் பொருள்களைப் பிடித்து வளர்த்துப் பயிற்றக்கூடும் என்று இதனால் அறிந்தேன்.

டிசம்பர் 28, 29, 30உ—இம் மூன்று நாளும் வெப்பம் அதிகம். காற்றுச் சிறிதும் இல்லை. அதனால் பகல் முழுதும் வீட்டினுள் அடங்கியிருந்து, மாலைப்பொழுதில் உணவுப்பொருள் தேடுவதற்கு வெளியிற் சென்றேன். வீட்டில் இருக்கும்பொழுது, என்னுடைய பொருள்களை அங்கங்கே அடுக்கி ஒழுங்குபடுத்தினேன்.

சனவரி 1உ—வெப்பம் இன்னும் தணியவில்லை. காலை மாலை இரு பொழுதும் துப்பாக்கி கொண்டு வெளியிற் சென்று, உலாவிவந்தேன். நடுப்பகலில் வீட்டில் இருந்தேன். இன்று மாலைப்பொழுதில் தீவின் நடுப்பகுதியில் உள்ள பள்ளத்தரையிற் சற்று நெடுந்தொலைவு சென்ற பொழுது, வெள்ளாடுகளைத் திரளாய்க் கண்டேன். அவைகள் என்னைக் கண்டு மிரண்டு ஓடின. அவைகளை ஓடிப் பிடிப்பது அருமை எப்படியேனும் இனி வரும்பொழுது எனது நாயைக் கொண்டுவந்து விட்டுக் கூடுமானால் துரத்திப்பிடிக்க முடிவு செய்தேன்.

சனவரி 2உ—முடிவு செய்தபடி மறுநாள் நாயைக் கொண்டுபோய், அதற்கு வெள்ளாடுகளைக் காட்டி ஏவிவிட்டேன். நாய் துணிந்து நெருங்கி, அவைகளை மறிக்க முடியும் என்று நான் எண்ணியது தவறாயிற்று. ஆடுகளெல்லாம் எதிர்த்து நின்று, நாய்மேற் பாயத்தொடங்கின. தனக்குக் கேடு வரும் என்று அஞ்சி, நாய் நெருங்கிப் போகத் துணியாமற் பின்னிட்டது.

சனவரி 3உ—எவராவது இடித்து உட்செல்லக்கூடும் என்றெண்ணி, என் மதிலைப் பின்னும் அதிகப்பருமனும் உறுதியும் உடையதாய்க் கட்டத்தொடங்கினேன்.

இம்மதிலைப்பற்றிய வரலாறுகளை எனது நாட் குறிப்புச் சுவடியில் இதற்கு முன் கூறியுள்ளதால், மறுபடியும் கூறுவது தேவையற்றது என எண்ணி விட்டுவிடுகிறேன். ஒன்றுமட்டும் கூறுகிறேன். மதில் அரை வட்ட வடிவுடையது. அஃது இரு மூலைகளும் மலை அடியிற் பொருந்தியிருந்தன. மதிலின் நீளம் எழுபத்திரண்டு அடி. மதிலின் மூலைகட்கிடையேயுள்ள தொலைவு மலையையொட்டி இருபத்து நான்கு அடி, முழைஞ்சின் வாயில் மதிலின் பின்புறத்து மலையின் நடுவில் வைக்கப்பட்டிருந்தது. இம்மதிலை மேற் கூறியவாறு அகலத்தில் அதிகப்பருமனும் உறுதியும் உடையதாக்கி முடிக்க சனவரி 3உ தொடங்கி, ஏப்பிரல் 14உ வரையிற் சென்றது.

**வேலி அடைக்கத் தூண் வெட்டி வந்தது**

மேற்கூறிய கால எல்லையில் மிக வருத்தப்பட்டு உழைத்தேன். சில வேலை பல நாள் வரையிலும், இரண்டு மூன்று கிழமைகள் வரையிலும், அடை மழை பெய்ததனால் வேலையை நிறுத்திவிடும்படி நேரிட்டது. என்ன தடை நேரிட்டாலும், தொடங்கின வேலையை முடிக்கிறவரையில் நான் அச்சமற்றுக் கேடின்றி இருப்பது முடியாது என் றெண்ணினேன்; நான் செய்த வேலைகளை மிக்க வருத்தத் துடன் செய்து முடித்தேன். எனது உழைப்பை உள்ளபடி கூறினால் கேட்டவர்கள் எளிதில் நம்பமாட்டார்கள். முதன் மையாய் நான் காட்டில் வெட்டிச் சுமந்துவந்த தூண்கள் மிகப் பருத்தவைகள். அவ்வளவு பெரிய தூணுக்குச் செலவில்லை. அவைகளைக் காட்டிலிருந்து கொண்டுவந்து தரையில் நாட்டி உறுதிப்படுத்த மிக்க இடர்ப்பட்டேன். இம்மதில் வேலை முடிந்து, இதன் புறத்தில் இரண்டடுக்குப் புல்கற்றை அணைச்சுவர் வைத்தெழுப்பிய பின், இனி எவ ராவது கரையில் இவ்விடத்துக்கு அருகில் வர நேரினும் மனிதர் குடியிருக்கும் வீட்டுக் குறிப்பு அவர்களுக்குப் புலப் படாது. இவ்வளவு பாடுபட்டு நான் எழுப்பிய மதிலின் அரும்பயன் ஒரு நிகழ்ச்சியால் விளங்கிற்று. அதை இனி மேற் கூறுவேன்.

**காட்டுப் புறுக்களைக் கண்டது**

இக்காலத்தில் மழையில்லாதிருக்கும்பொழுது, ஒவ் வொருநாளும் வேட்டையாடுவதற்குக் காட்டுக்குப்போய் வந்தேன். போம்பொழுது ஏதாயினும் எனக்கு உதவியான உயிர்ப்பொருள்களை அவ்வப்பொழுது கண்டு பிடித்து வந் தது உண்டு. நான் கண்டவற்றுள் சிறப்பானவை ஒரு வகைக் காட்டுப்புறுக்கள். அவை காட்டுப்புறுக்களைப்போல மரத்திலன்றி வீட்டுப் புறுக்களைப்போல மலைப் பொந்து களிற் கூடு கட்டியிருந்தன. ஒருநாள் கூட்டில் இருந்த சில குஞ்சுகளைப் பிடித்துக்கொண்டு வந்து வளர்த்துப் பழக்கப் படுத்த முயன்றேன். இறகு முளைத்து வளர்ந்த பின் அவை

பறந்தோடிவிட்டன. இரை கொடுக்க என்னிடம் ஒன்றும் இல்லாததனால், அவை பறந்துபோயின என்று எண்ணு கின்றேன். பெரும்பாலும் நான் புருக் கூடுகளில் உள்ள குஞ்சுகளைப் பிடித்து வந்து அடித்து உண்டேன். புருவின் இறைச்சி நாவிற்கு மிக்க சுவையாய் இருந்தது.

### பீப்பாய் மூட்ட முயன்று பார்த்தல்

இனி வீட்டு வேலைகளைத் தவறாமல் செய்வதற்குத் தேவையான கைப்பழக்கத்திற்குரிய ஏனங்களும் சிறு பொருள்களும் பல என்னிடம் இல்லாதிருந்தன. அவை களைச் செய்ய என்னால் இயலாது என்று எண்ணினேன். எத்தனையோ முயற்சிகள் செய்தும் ஒரு பீப்பாய் மூட்டுவ தற்கு எவ்வகையிலும் என்னால் முடியவில்லை. சிறிய பீப் பாய்கள் இரண்டொன்று என்னிடம் இருந்தன. அவை களை மாதிரியாய்க்கொண்டு ஒரு பெரும் பீப்பாய் செய்வதற் குப் பல கிழமைகள் உழைத்தேன். உழைத்தும் எனக்கு மூட்டும் வழி தெரியவில்லை. பீப்பாயின் இரு பக்கங்களை இசைப்பதற்கும், தண்ணீர் கசியாமற் பலகைகளை நன் றாய்ப் பொருத்தி மூட்டுவதற்கும் எனக்குத் தெரியாததனால் இவ்வேலை என்னால் முடியாதென்று விட்டு விட்டேன்.

### விளக்கு ஏற்ற வகை கண்டு பிடித்தல்

விளக்கேற்றுவதற்கு மெழுகுவர்த்திக்கும் வழி இல்லை. ஆதலால், ஏழு மணி அளவில் கதிரவன் மறைந்து இருட் டானவுடன் நான் பெரும்பாலும் படுத்துத் தூங்கினேன். நான் ஆப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தபொழுது, தேன் மெழுகுவர்த்தி செய்து விளக்கெரித்ததை மறந்து போக வில்லை. இவ்விடத்தில் நான் தேன் மெழுகு வைத்திருக்க வில்லை. இதற்கு நான் ஒரு வழி செய்தேன், வெள்ளாடு அடித்தபொழுது எடுத்து வைத்திருந்த நிணத்தை உருக் கினேன்; களிமண்ணினாற் செய்து வெய்யிலிற் காயவைத்த தகழியில் அந்நிணத்தை ஊற்றிப் பழங்கயிற்றுப் புரியி லிருந்து குலைத்துத் திரித்த திரியிட்டு விளக்கெரித்தேன். இவ்விளக்கின் ஒளி மெழுகு வர்த்தியைப்போல விளக்க

மாக இல்லாதிருப்பினும் என் செயல்களுக்கு உதவியாய் இருந்தது.

என் வேலைகள் நடந்தேறி வரும் காலத்தில், ஒருநாள் என் பண்டங்களைப் பிரித்துப் பார்த்தபொழுது, கோழி வாத்து முதலியவைகளுக்கு உணவாகிய கூலம் வைக்கப் பட்டிருந்த ஒரு சிறு பையைக் கண்டேன். அதில் அந்தக் கூலம் வைக்கப்பட்டது இந்தப் பயணத்தில் அன்று; கப்பல் **லிஸ்பன்** துறையினின்று பயணமாகப் புறப்பட்ட பொழுது என்று நினைக்கின்றேன். செலவழிந்ததுபோக எஞ்சியிருந்த சிறிது அளவு கூலத்தை எலிகள் தின்றன என்று ஓர் இடத்தில் கூறியிருந்தேன். பைக்குள் வெற்றுமியும் மண்ணும் இருந்தன. மேகத்தில் மின்னல் உண்டானபொழுது வெடி மருந்து எரிந்து போகாதபடி அதை வெவ்வேறு பைகளிலும் பெட்டிகளிலும் பிரித்துவைத்தேன் என்று கூறினேன் அன்றோ? மருந்து இட்டு வைப்பதற்கோ, வேறு எதற்கோ நான் அந்தப் பையை எடுத்து அதற்குள் இருந்த உமியையும் மண்ணையும் என் கோட்டை மதிலின் ஒரு பக்கத்தில் உதறிக் கொட்டினேன்.

**கூலப் பயிரின் கதிர்களைக் காணுதல்**

நான் அதை உதறிக்கொட்டியது மேற் கூறிய பெருமழைவரச் சில நாட்களுக்கு முன் நிகழ்ந்தது. கொட்டப் பட்டதை நான் நினைவிற் கொள்ளாது மறந்திருந்தேன். ஒரு திங்கள் சென்ற பின் ஏதோ பசுமையான பயிர் தரையில் முளைத்து வளர்ந்திருக்கக் கண்டு, எப்படி முளைத்தது என்று ஆராயாமலும் இருந்தேன். பின்னும் சில நாட்கள் சென்ற பின் பத்துப் பன்னிரண்டு பைங்கதிர்களைக் கண்டு மிகவும் வியப்புக்கொண்டேன். நான் கண்டது ஐரோப்பாவில் குறிப்பாய் இங்கிலாந்தில் விளையும் வாற்கோதுமை என்ற கூல வகையாகும்.

**பயிர்முளைக்க இறைவன் அருளே காரணம் என நினைத்தல்**

அவ்வேலையில் எனக்கு உண்டான, வியப்பும், மலைப்பும் இவ்வளவென்று கூற முடியாது. நான் இதுவரையில்

மேலுலகத்துக்குரிய எண்ணங்களைக் கொள்ளவில்லை. கடவுள் அருளை இப்படிப்பட்டது என்று நான் நினைத்து ஆராயவும் இல்லை. எனக்கு வரும் நன்மை தீமைகள் தற்செயலாயாவது, மனிதர் நினைப்பின்றிச் சொல்வதுபோலத் திருவுள்ளத்தின் செயலாயாவது வருகின்றன என்று எண்ணியிருந்தேன். கடவுள் மனிதருக்கு நன்மை தீமைகளை வருவிக்கும் காரணம் இன்னது என்றாயினும், இவ்வுலகத்தைத் தமது கருத்திற்கிசைய நடத்தும் ஒழுங்கு முறை இப்படிப்பட்டது என்றாயினும் நான் ஆராய்ச்சி செய்ததில்லை. பிற நாட்டில் விளையும் வாற்கோதுமை அத்தீவில் தன் நிலம்போல முளைத்துச் செழித்து விளைந்ததைக் கண்டு, அது எவர் வழியாய்த் தோன்றியதென்று வழிவகை தெரியாமல் மயங்கினபின், இக்காட்டில் மனிதர் முகம் காணாமல் துன்பப்படும் ஏழையாகிய என் மீது இரங்கி, அருட்கடலாகிய கடவுள் என் வாழ்க்கை நலத்தின் பொருட்டு அதை விச்சின்றியே விளைவு செய்தார் என்று நினைத்தேன்.

**நெற்பயிரைக் கண்டு மகிழ்ந்தது**

இவ்வாறு நினைத்து, உள்ளம் உருகிக் கண்ணீர் விட்டு அழுதேன். எளிய புழுவிற்கு ஒப்பான என்னைப் பாதுகாக்கும் பொருட்டு, எல்லா வல்லமையும் உடைய ஒப்பரிய கடவுள் எனக்கு இவ்வளவு உதவி செய்தது என் பேறுதான் என்று மகிழ்ச்சியடைந்தேன். அன்றியும், வாற்கோதுமைக்கு அருகில் பாறைச் சார்பில் நெற்பயிர் வளர்ந்து மதர்த்திருக்கக் கண்டு, மேலும் மேலும் வியப்புற்றேன். நான் ஆப்பிரிக்கக் கரையில் இறங்கியபொழுது வளரும் நெற்பயிரைப் பார்த்திருந்ததனால், இந்தப் பயிரைக் கண்டவுடன் நெற்பயிர் என்று அறிந்தேன்.

**கடவுள் அருளை நினைத்து நன்றி பாராட்டுதல்**

என்னுடைய வாழ்க்கை வளத்துக்காக இந்தக் கூல வகைகள் இறைவன் அருளால் தோன்றின என்று நான் எண்ணியதுமன்றி, தீவில் மேலும் பயிர்வகை இருக்கும்

எனத் துணிந்து நான் முன் உலாவிய இடங்கட்குப் பின்னும் சென்று கோடிகள் குடாக்கள், மலைச்சார்பு நிலம் முதலிய எல்லா விடங்களையும் கண்டேன். பயிர் என் கண்ணுக்கு எதிர்ப்பட வில்லை. பிறகு ஒருநாள் கோழிக்குஞ்சுகளுக்குக் கூலம் இரையாக வைத்திருந்த கோணிப்பையை உதறிய நினைவு எனக்கு வந்தது. அதனால் மயக்கம் தெளிந்தது. அதனுடன் கடவுள் எனக்குச் சிறப்பாய்ச் செய்த நன்றியையும் மறந்து, இஃதெல்லாம் உலக இயற்கைதான் என்று எண்ணினேன். நினையாதிருக்கும் வேளையில் வியக்கத் தக்க முறையில் எனக்கு உணவுக்கு உதவும் விளைபயிர் தோன்றியதைப் பற்றி, நான் இறைவனுக்கு வணக்கம் செலுத்துவதல்லவா முறைமை. எலி அரித்துப் பழுதாக்கிய உமிக்குள் பத்துப் பன்னிரண்டு கூலம பழுதற்று இருக்கவும், உயரமான பாறையின் நிழல் படியுமிடத்தில் நான் அதை உதறிவிடவும், அது உடனே முளைத்து வளர்ந்து விளையவும், செய்தது தெய்வச் செயலன்றி வேறு என்ன? வெற்றுமிக்குள் பத்துப் பன்னிரண்டு கூலம் ஒட்டியிருந்தது தரையில் உதறிக் கொட்டிவிடப் பட்டாலும் என்ன? வானத்தினின்றும் இறைவனருளால் விழுந்தாலும் என்ன? இரு விதமும் வியப்புத்தானே. மேலும் நான் உதறிய கூலமணிகள் நிழல் ஒதுக்கு இல்லாத இடத்தில் விழுந்திருக்குமானால், அஃது எரிந்து அழிந்து போயிருக்குமே.

### கதிரை அறுத்துப் பக்குவம் செய்து விதைக்கு வைத்தல்

அறுக்கும் பருவம் அறிந்து, சூன் திங்கள் முடிவில் நான் கதிர் அறுத்து, ஒருமணியையும் போக்கடிக்காமல் பாதுகாப்பாய் வைத்திருந்து விதைக்கும் பருவத்தில் விதைத்தால், நாளடைவில் என் உணவுச் செலவுக்கு வேண்டுமட்டும் கூலம் விளையுமென்று எண்ணியிருந்தேன். விதைப்புக் காலம் எது என்று அறியாமல், வேனிற் காலம் தொடங்கச் சற்றுமுன் கூலமணிகளை விதைத்தேன். அவை நன்றாய் முளைத்து வளரவில்லை. இப்படி மூன்று ஆண்டுகள் வரையில் விளைந்த கூல விதைமணிக்கு உத-

வியதன்றி, எனக்கு உணவுக்கு மிஞ்சவில்லை. நான்காம் ஆண்டு விளைச்சலில் மட்டும் சிறிது மிஞ்சியது. அதுவும் புசியடங்க உண்ணுதற்குப் போதாது. அதை வைத்திருந்து அளவாய் உண்டு நாட்கழித்தேன். இவ்வரலாறு களை முறைமையான விடத்திற் கூறுவேன்.

வாற்கோதுமையன்றி, நான் முதலிற் கண்ட நெல் மூடு இருபது முப்பது. விளைந்த நெல்லை யறுத்து விதை மணிக்கு வைத்திருந்து, மேற்கூறியவாறு ஆண்டுதோறும் விதைத்தேன். அதுவும் எனக்கு உணவிற்கு உதவிற்று. முதலிற் சிறிதுகாலம் ரொட்டி சுட்டுத் தின்றேன். அதன் பிறகு சோறு சமைக்கும் முறை தெரியவந்தது. இனி விட்ட குறையினின்று நாட் குறிப்பு எழுதவேண்டும்.

இந்த மூன்று நான்கு திங்கள் வரையில் ஓய்வின்றி உழைத்தேன். இது குடியிருக்கும் வீடென்று புறத்தில் ஏதும் அடையாளம் தோன்ருவண்ணம் ஏப்பிரல் 14உ. நான் மதிலின் வாயிலை அடைத்து, ஏணி வைத்தேறி உட் செல்வதும் வெளியில் வருவதுமா யிருந்தேன்.

ஏப்பிரல் 16உ இன்றைக்கு ஏணி வேலை முடிந்தது. மதிற் புறத்தில் ஏணியைச் சார்த்தி ஏறியபின், அதைத் தூக்கி மதிலின் உட்புறத்தில் சார்த்தி இறங்கினேன். மதிலில் எங்கும் வாசல் இல்லை. அதனுள் எனக்கு இருக்க, படுக்க, உலாவ, வேலை செய்ய இடம் மிக அகன்று பரந்து இருந்தது. மதில் ஏறினாலன்றி, எம்மனிதராயினும், எந்த விலங்காயினும் புறத்தினின்று உட்செல்ல முடியாது.

**நிலநடுக்கத்தால் மலை முகடு இடிதல்**

மதில் வேலை முடிந்த மறுநாள் நான்பட்ட பாடெல்லாம் வீணாகியது. எனக்கும் உயிர்த்துன்பம் நெருங்கியது. நேர்ந்த துன்பம் யாது? கூடாரத்தின் புறக்கடையில், முழைஞ்சின் வாயிலில் நான் எனது வேலைப்பாட்டில் இருக்கும்பொழுது எனக்கு மிகுந்த மனநடுக்கமும் வியப்பும் உண்டாகத் தக்கதாக, மதில் முகட்டு மண்கண்டம் விரை

வில் இடிந்து விழுந்தது. மலை உச்சியின் ஓரத்தினின்றும் மண்ணிடிந்து என் தலைக்கு நேரே விழுந்தது. முழைஞ்சுக்குள் நிறுத்தின தூண்கள் வெடித்துச் சிதறின. உடனே என் உள்ளம் கலங்கித் திகைத்தது. முன் ஒரு முறை நேர்ந்தது போல முழைஞ்சு முகடு முடிந்து விழுந்ததன்றி, வேறு ஏதும் காரணம் இருக்கும் என்று நான் எண்ணவில்லை. இடிந்த மண்கண்டத்தில் அகப்பட்டு இறந்து போகாதபடி, ஏணி சார்த்தியிருக்குமிடத்திற்கு விரைந்தோடினேன். அங்கே நின்றாலும் மலை இடிந்து என் தலைமேற் சரிந்து விழும் என்று அஞ்சி, மதில் ஏறினேன். மதிற்புறத்தரையில் இறங்கினவுடன் தரை மிகவும் அதிர்ச்சியாய் நடுங்கியது. மிக்க வலிவான கட்டடமும் நிலைபெயர்ந்து விழத்தக்க அதிர்ச்சியுடன் எட்டு நிமிடங்கட்கு ஒருமுறை மூன்று தடவை நடுங்கியது. கடற்கரையை யடுத்து அரைக்கல் தொலைவில் இருந்த ஒரு மலையின் முடி இடிந்து விழுந்தது. காது செவிடு படத்தக்க அவ்வளவு அஞ்சும் தரமுள்ள பெரு முழக்கத்தை நான் பிறந்தநாள் முதல் இதுவரையிற் கேட்டறியேன். நிலநடுக்கத்தால் கடலும் நிலையற்றுக் கலங்கித் தேங்கிற்று. தீவின் தரைக்கீழ் நடுக்கத்தை விட, கடலின் அடித்தரைக் கீழ் நடுக்கம் அதிகம் என்று நம்புகிறேன்.

**நில நடுக்கமும் மலை இடிந்து விழுதலும்**

முன் ஒரு பொழுதும் நில நடுக்கம் உண்டானதை நான் அறியாததனாலும், அறிந்தவர்கள் சொல்லக் கேட்டிராததனாலும், அவ் வேளையில் நான் கலங்கி நடுங்கி, அறிவு அழிந்து, பிணத்திற்கு ஒப்பானேன். கடலில் அலைக் கிளர்ச்சியினால் கப்பல் நிலையற்றுத் தத்தளிக்கும்பொழுது, அதில் இருப்பவர்களுக்கு எப்படி யிருக்குமோ அவ்வாறே எனக்கும் நிலநடுக்கத்தால் குடல் புரண்டு, வாய்க்குமட்டல் உண்டாயிற்று. தூங்குபவன் விரைவில் ஏதாவது ஒலி கேட்டு விழிப்பது போல, திகைத்து மயங்கியிருந்த நான், மலை சரிந்து விழுந்த பேரொலி கேட்டுத் திடுக்கிட்டு நடுங்கினேன். என் கூடாரத்தின்மேல் மலை விழ, அதுவும்,

அதற்குள்ளிருந்த வீட்டுத் தட்டுமுட்டுகள் முதலிய பொருள்கள் அனைத்தும் முழுகிப்போம் என்னும் நினைவு தவிர, என் மனம், வேறு ஒன்றையும் எண்ணவில்லை. இவ்வாறு இந்த இரண்டாம் முறையும் என்மனம் சோர்ந்து குன்றிப் போயிற்று.

**நில அதிர்ச்சியும் மனத்தளர்ச்சியும்**

மூன்றுமுறை நிலம் நடுங்கியதற்குப் பிறகு சற்றுநேரம் மட்டும் அதிர்ச்சி யுண்டாகாததனால், நான் சற்று மனம் தேறினேன். அவ்வாறு தேறினும், உடலோடு புதையுண்டு இறந்து போவேன் என்று பயந்து மதில் ஏறி உட்செல்ல எனக்குத் துணிவு வரவில்லை. மனத்தளர்ச்சியடைந்து கலக்கமுற்று என்ன செய்வதென்று அறியாமல் தரையில் உட்கார்ந்தபடி இருந்தேன். இவ்வளவு உயிர்த்துன்பம் ஏற்பட்டபொழுது, இயற்கையாய் எவரும் நினைப்பது போல், "இறைவனே என்மீது இரங்கி யருளும்" என்னும் நினைவு ஒன்றொழிய வேறு மேல் உலகத்துக்குரிய எண்ணம் சிறிதும் எனக்கு உண்டாக வில்லை. வந்த பேரிடர் நீங்கவே அந்த நினைவும் அகன்றது.

**அச்சந்தரும் பெரும்புயல் வீசியது**

நான் உட்கார்ந்தபடியே இருந்தபோது, வானத்தில் மேகம் நெருங்கிக் கறுத்து மழைக்கோலம் உண்டாயிற்று. அடுத்துக் காற்றுத் தொடங்கி வரவர உரம் பெற்று, அரைமணி நேரத்திற்குள் பேரச்சந்தரும் புயல் அடித்தது. விரைவிற் கடல் பெருமுழக்கம் செய்து நுரைசிதற அலை புரண்டு கரையடுத்த தரையிற் பெருகிற்று. மரங்கள் வேர் தறிந்து விழுந்தன. அடித்த புயல் மிக்க அச்சம் தந்தது. மூன்றுமணி நேரம் சென்றபின், அதன் சினம் தணிந்து பின்பு இரண்டு மணி நேரம் சென்று காற்று முழுவதும் அடங்கிற்று. பெருமழை விடா மழையாகப் பெய்தது.

**மழைக்கு அஞ்சி முழைக்குள் சென்று தங்குதல்**

இவ்வளவு நேரமும் நான் அஞ்சி ஒடுங்கி, நிலத்தில் உட்கார்ந்தபடியிருந்தேன். அவ்வாறிருந்தபொழுது நில

நடுக்கத்தால் காற்றடித்து மழை பொழிந்தது, இனி நிலம் நடுங்கும் என்று அஞ்சவேண்டுவதில்லை. மதிலேறி முழைக்குள் போகலாமென விரைவில் எண்ணினேன். மனத்தில் தளர்ச்சி நீங்கித் துணிவு பிறந்தது. என் எண்ணத்துக்கு மழையும் துணை செய்ததனால் நான் உட் சென்று கூடாரத்தினுள் இருந்தேன். அப்பொழுது மறு படியும் மழை வந்தது. கூடாரத்தைத் தரைமட்டமாய் அடித்து வீழ்த்துவது போன்று அவ்வளவு உரத்து மழை பெய்தது. அதனால் முழைஞ்சு இடிந்து தலைமேல் விழும் என்று மிகவும் அஞ்சி மனக் கவலையுடனேயே முழைக்குள் சென்று ஒதுங்கினேன். அதைவிட வேறு புகலிடம் இல்லையே.

இவ்வாறு உரத்துப் பெருமழை பெய்ததனால், வர வர அதிகரித்த வெள்ளத்தில் முழை முழுகிப் போகாமல் நீர் வெளியில் ஓடி வற்றும்படி மதில் அடியைத் துளைத்துக் கால்வாய் வைக்க வேண்டியிருந்தது. சற்று நேரம் முழைக் குள்ளிருந்து, அதன்பிறகு நில நடுக்கம் இல்லை யென்று துணிந்து அச்சந் தெளிந்து மனம் தேறினேன். எனக்குச் சோர்வு நீங்கி மனக்கிளர்ச்சி உண்டாகும்படி பண்டசாலைக் குப்போய், ஒருமடக்குச் சாராயம் குடித்தேன். கைக்குக் கிட்டின சாராயம் செலவானபிறகு மேலும் கிடையாதென்று எண்ணி, நான் குடிக்கும்பொழுதெல்லாம் சிறிது அளவிற் குடிப்பது வழக்கம்.

அன்று இரவு முழுவதும் அன்றி, மறுநாட் பகலும் உச்சிப்பொழுது நீங்கிச் சற்று நேரம் செல்கின்ற வரை யிலும் மழை ஓயாமல் பெய்தது. நான் வெளியிற் செல் வதற்கு முடியவில்லை. வரவரக் கவலை நீங்கியதனால், இனி என்ன செய்யலாம் என நினைக்கத் தொடங்கினேன். இத் தீவில் அவ்வப்பொழுது நிலம் நடுங்குவது இயல்பானல் இந்த முழையில் தங்கி வாழ்வது என் உயிருக்குக் கேடாய் முடியும்; என்றைக்கேனும் ஒருநாள் நான் புதையுண்டு இறப்பதற்கு ஐயமில்லை. ஆதலால், எங்கே யாயினும் ஒரு வெளியிற் குடிசை கட்டியிருந்து, அதைச் சுற்றிலும் இம்

மதிலுக்கொப்பான அரணாக மதில் எழுப்பிக் கொடிய வேடரால்வரும் அச்சமும், கொடிய விலங்குகளைப்பற்றிய அச்சமும் இல்லாதிருக்க வேண்டும் என்று நினைத்தேன்.

## கூடாரத்தைப் பெயர்த்துக்கொண்டு போக நினைத்தல்

இவ்வாறு நினைத்துச் செங்குத்தாய் வளர்ந்து கவிந்திருந்த மலையோரத்தின் அடித் தரையில் நான் அமைத்த கூடாரத்தை வேறு இடத்திற்குப் பெயர்த்துக்கொண்டு போக முடிவு செய்தேன். இன்னும் ஒருமுறை நிலநடுக்கம் உண்டாகுமானால் அம்மலை என் கூடாரத்தின் மேல் விழுவது உறுதி. மறுநாள் ஏப்பிரல் 19ஆ அன்றும் அடுத்த நாளும், கூடாரத்தைப் பெயர்த்துக்கொண்டு போகும் வகையைக் குறித்தும் இட அமைப்பைக் குறித்தும் நினைத்துச் சீர்தூக்கிப் பார்த்தேன்.

துடித்துப் பதைக்க நிலத்திற்குள் புதையுண்டு போவேன் என்று அஞ்சி யிருந்ததனால், எனக்கு அயர்ந்த தூக்கம் வரவே இல்லை. அடைப்பு இல்லாத வெளியில் இருப்பதும் கேடாய் முடியும் என்று ஏக்கமுற்றிருந்தேன். ஆயினும் எனது வாழ்விடத்தைச் சுற்றிப் பார்த்து, என் பொருள்கள் எல்லாம் அங்கங்கே ஒழுங்காய் வகுத்து வைக்கப்பட்டிருந்தது கண்டு, நான் மதிலடைப்புக்குள் கவலையற்றிருந்ததை எண்ணியபொழுது, கூடாரத்தைப் பெயர்த்துக் கொண்டு போக எனக்கு மனம் வரவில்லை.

இப்படி யிருக்கும்போது, எனக்கு ஓர் எண்ணம் பிறந்தது. கூடாரத்தைப் பெயர்த்துக்கொண்டுபோய் அடித்து மதில் எழுப்புதற்கு நெடுநாட் செல்லும். இவ்விடத்திலேயே இன்னும் இருந்துகொண்டு, மற்றோரிடத்திற் கூடாரம் அடித்து, மதில்வளைத்து முடிந்தபின், அக்கூடாரத்திற்போய் வாழலாம் என்று நினைத்தேன். மனக்கலக்கமின்றிக் கூடிய விரைவில் பக்குவமான இடம் பார்த்து, வட்ட வடிவமாய் இரண்டு நிரைக் கொம்பு நாட்டிக் கப்பலின் பெருங்கம்பி பொதிந்து மதில்கட்டிப்

பலப்படுத்த வேண்டும். அதன்பின்னர் அதிற் கூடாரம் அடிக்க வேண்டும் என்று நினைத்து முடிவு செய்தேன். நான் இவ்வாறு நினைத்தது 21உ.

**சாணை பிடிக்கும் பொறி செய்து முடித்தல்**

ஏப்பிரல் 22உ—காலையில் எனது முடிவை நிறைவேற்றுதற்குரிய வழிகளை நினைக்கத் தொடங்கினேன். கருவிகள் இல்லை. பெருங்கோடரிகள் மூன்றும் இந்தியருக்கு விற்கக் கொண்டுபோன கைக்கோடரிகள் திரளானவைகளும் இருந்தன. பெரும்பாலும் கணுவும் உறுதியும் உள்ள மரம் முதலியவைகளைத் தறித்துக் கொம்பு வெட்டியதனால், கைக்கோடரிகளின் கூர்மழுங்கி, வாய்த்தாரைகள் இடையிடையே மடிந்து போயின. சாணைக்கல் ஒன்றிருந்தது. அதை இயக்கி ஆயுதங்களுக்குச் சாணை பிடிக்க இசையவில்லை. அரசியல் அறிஞர் இன்றியமையாத அரசியற் செய்திகளைக் குறித்துச் சூழ்வது போலவும், நீதி மன்றத் தலைவர்கள் ஒருவனுடைய வாழ்வையும், இறப்பையும் பற்றிய வழக்கை முடிவு செய்ய ஆராய்ச்சி செய்வது போலவும் நான் சாணைக்கல்லைப் பயன்படுத்தும் வகையைக் குறித்து மேலும் மேலும் ஆழ்ந்து நினைத்தேன். அவ்வாறு நினைத்தபோது, ஓர் உருளையிற் கயிறு சுற்றி, அக்கயிற்றின் முனையைக் காலில் மாட்டி இழுத்தால், உருளை சுழலும் என்றும், சுழலும் கல்லில் இருகையினாலும் ஆயுதங்களைச் சாணை பிடிக்கலாம் என்றும் புதிய நல்லவழி ஒன்று கண்டு பிடித்தேன்.

**(குறிப்பு)** இது போன்ற பொறியை நான் இங்கிலாந்தில் முன் ஒரு பொழுதும் பார்க்கவும் இல்லை. ஒரு வேளை பார்த்திருப்பினும் அதன் வேலைப்பாட்டை உற்றுப் பார்க்கவும் இல்லை. சீமையில் அது மிகவும் எளிய பழக்கத்திலுள்ள பொறி என்று பிறகு அறிந்தேன். எனது சாணைக்கல் மிகப் பெரிதும் பளுவுமாய் இருந்தது. இந்தப் பொறியைச் செய்து முடிக்கச் சரியாய் ஒரு கிழமை சென்றது.

ஏப்பிரல் 28உ., 29உ.—இந்த இரண்டு நாள் முழுதும் என்னுடைய ஆயுதங்களைச் சாணை பிடித்தேன். சாணைக்கல் இயக்கும் பொறி தடையின்றிப் பயன்பட்டது.

ஏப்பிரல் 30உ.—ரொட்டி வரவரச் செலவாய்ப் போனது அறிந்து, இன்னும் எவ்வளவு இருக்கிறது என்று பார்த்து, எனது உண்டியைச் சுருக்கி, நாளுக்கு ஒரு ரொட்டி மட்டும் உண்ணத் தொடங்கினேன். இதனால் எனக்கு மிகுந்த மனக்கவலை உண்டாயிற்று.

# ஆறும் அதிகாரம்

## எங்கள் கப்பல் புயலாற் றள்ளப்பட்டுக் கரையில் கிடத்தல்

மேமீ 1௳—இன்று காலையில் கடற்கரையைப் பார்த்தேன். அப்பொழுது பெருக்கு வேளையன்று. கண்ணுக்குப் பொலிவான ஏதோ ஒரு பொருள் கரையில் இருந்தது; அஃது ஒரு பீப்பாயைப் போலக் காணப்பட்டது. நெருங்கிச் சென்று பார்த்தேன். சிறிய பீப்பாய் ஒன்றும், அண்மையில் அடித்த புயலால் கரையில் ஒதுங்கிய உடைந்த கப்பற் பலகைத் துண்டுகள் இரண்டு மூன்றும் இருந்தன. அக் கப்பல் மணற் குன்று தட்டி நின்ற எங்கள் கப்பல். உடைந்த அக்கப்பல் நின்ற இடத்தைப் பார்த்தேன். அது முன்னினும் அதிகமாய் நீர் மட்டத்திற்கு மேல் கிளம்பியதாகத் தோன்றிற்று. பீப்பாயைத் தரையில் உருட்டிக் கொண்டு வந்து ஆராய்ந்து பார்த்தேன். அது வெடி மருந்துப் பீப்பாய். அதற்குள் நீர் ஏறிச் சுவறியதனால், மருந்து நனைந்து இறுகிக் கற்போல் உரத்திருந்தது. ஆயினும் பெரிதன்று என எண்ணி, பீப்பாயைப் பின்னும் சற்றுத் தொலைவு உருட்டிக் கொண்டு வந்துவிட்ட பின், பழுதுபட்ட கப்பலில் இன்னும் பீப்பாய் இருக்குமோ என்று பார்ப்பதற்காக மணல்மேற் போகக் கூடியவரையிற் சென்றேன். நெருங்கிச் சென்று பார்த்து, அது நிலை பெயர்ந்திருக்கக் கண்டு வியப்புற்றேன். முன்பு மணலிற் புதைந்திருந்த முன் அணி ஆறு அடி வரையில் மேலே வெளிப்பட்டிருந்தது. நான் பல தடவை சென்று பொருள்களை எடுத்துக்கொண்டு வந்தபின், மோதும் அலையின் அதிர்ச்சியால் துண்டு துண்டாய் உடைந்து உருக்குலைந்த பின் அணி மேலே எற்றுண்டு சாய்ந்து கிடந்தது. பின்னணிக்கு அடுத்த பக்கத்தில் மண் அடைந்து அணை போல் வளர்ந்திருந்தது. முன்பு நான் கப்பலுக்குப் போகும் பொழுதெல்லாம், கால் கல் அளவு நீந்திச் செல்லுமாறு

நீர் ஆழமாய் இருந்ததென்று கூறினேன். இப்பொழுது வற்று வேளையில் தாராளமாய் நடந்து போகக் கூடியதாய் மணலினை வளர்ந்திருக்கக் கண்டு, முதலில் இஃது என்ன வியப்பு என்று எண்ணினேன். பிறகு நிலநடுக்கத்தால் இப்படியாயிற்றென்று நினைத்து முடிவு செய்தேன். மேலும் உருக்குலையாதிருந்த கப்பலின் உறுப்புக்கள் நிலநடுக்கத்தால் பின்னர் உடைந்து போயின என்றும், நிலை பெயர்ந்த துண்டு முதலானவைகளை அலையும் காற்றும் அடித்து, நாளுக்குநாள் கரையில் ஒதுக்கி விட்டன என்றும் நினைத்தேன்.

### கப்பலின் உறுப்புக்களைப் பெயர்த்தெடுக்க முயலுதல்

என்னுடைய கூடாரத்தைப் பெயர்த்து வேறிடத்தில் அடிக்க வேண்டும் என்று எண்ணிய எண்ணத்தை இச் செய்திகளால் மறந்துவிட்டேன். கப்பலுக்குள் போக முடியுமோ என்று அன்று முழுவதும் என்னால் ஆகத் தக்க வழிவகைகள் எல்லாம் செய்து பார்த்தேன். கப்பலின் உள் இடம் முழுதும் மண் ஏறி யிருந்ததனால், அதற்குள் போகக் கருதுவது வீண் வேலை என்று முடிவு செய்தேன். வரும் பெருந் துன்பங்கள் எல்லாவற்றையும் தாங்கி மனம் தளராதிருக்கப் பயின்றதனால், அக்கப்பலில் எனக்கு அகப் படும் பொருள் எல்லாம் எதற்காயினும் உதவும் என் றெண்ணிப் பிரித்தெடுக்கத் தக்கவைகளை எடுக்க முடிவு செய்தேன்.

மேமீ 3வ— வாள்கொண்டுபோய் உத்திரம் ஒன்றை முழுவதும் அறுத்தேன். அதில் கப்பலின் மேற்பாகத்திற் சில உறுப்புக்கள் இசைக்கப்பட்டிருந்தன என்று எண்ணி னேன். உத்திரம் அறுத்து முடிந்தபின், உயர்ந்திருந்த கப்பற் பக்கத்தின் உள் இடத்தில் அடைந்த மணலை என்னால் முடிந்த அளவிற்குத் தோண்டி வெளியில் தள்ளி னேன். நீர்ப்பெருக்கு உண்டாகவே, மறுநாள் வந்து பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டு விட்டேன்.

மேமீ 4உ—இன்று மீன் பிடிக்கச் சென்றேன். உணவிற்குப் பயன்படும் ஒரு மீனாவது நெடு நேரம் வரையில் அகப்படவில்லை. அலுப்புற்றுக் கைசலித்துத் திரும்பிப் போக இருந்த சமயத்தில் ஒரு கடற்பன்றிக்குட்டி அகப் பட்டது. பெருங் கயிற்றின் புரியினால் தூண்டிற் கயிறு திரித்து வைத்திருந்தேன். தூண்டில் முள் கிடைக்கவில்லை. எப்படியேனும் என் உணவிற்கு வேண்டிய அளவு பெரும் பாலும் அந்தக் கயிற்றால் ஒரு வகையாய் மீன் பிடித்தேன். பிடித்த மீன் எல்லாவற்றையும் வெயிலிற் காய வைத்துக் கருவாடாக்கி உண்டேன்.

மேமீ 5உ—கப்பலுக்குச் சென்று ஓர் உத்திரத்தைக் குறுக்கே அறுத்து, அடித்தட்டினின்று பெரிய தேவ தாருப் பலகைகள் மூன்றைப் பிரித்து எடுத்து, ஒன்றாய்த் தொடுத்துக் கடலில் விட்டேன். நீர் பெருகியபொழுது, அவை ஓடிக் கரையில் ஒதுங்கின.

மேமீ 6உ—இன்றும் கப்பலுக்குச் சென்று இரும் பினால் ஆகிய திருகாணி முதலியவைகளை மிக்க பாடு பட்டுக் கழற்றி எடுத்தேன். அதனால் மிகவும் துன்ப முற்றுச் சோர்வு அடைந்தேன். இனி, இந்த உழைப்பு வேண்டாம் என்று திரும்பி வீடுவந்து சேர்ந்தேன்.

மேமீ 7உ—இன்றும் கப்பலுக்குச் சென்றேன். வருந்தி உழைக்கும் கருத்து இன்று இல்லை. கப்பல் பளுவினால் பிரிந்துபோய் இருந்தது. உத்திரங்கள் அறுக் கப்படவே, கப்பற் பலகை முதலிய உறுப்புக்கள் பல நிலை பெயர்ந்து குலைந்து போயிருந்தன. கப்பலின் உள்ளிடம் என் கண்ணுக்கு நன்றாய்த் தெரிந்தது. அதன் பெரும் பகுதியில் நீர் ஏறி மண் அடைந்திருந்தது.

மேமீ 8உ—தண்ணீரும் மண்ணும் இன்றி வெளியில் இருந்த கப்பலின் மேல் தட்டுப் பலகைகளை நெகிழ்த்துப் பிரித்து எடுத்து வருவதற்காகக் கடப்பாரை கொண்டு போய், இரண்டு பலகைகளைப் பிரித்து எடுத்து, பெருக்கு வேளையிற் கரையிற் கொண்டு வந்து சேர்த்தேன். மறுநாள்

வேலைக்கு வேண்டுமென்று கடப்பாரையைக் கப்பலில் வைத்துவிட்டு வந்தேன்.

மேமீ 9உ—கப்பலுக்குச் சென்று, கடப்பாரையை அதற்குள் புகுத்தியபோது பல பீப்பாய்கள் தட்டுப் பட்டன. அதனால் பீப்பாய்களை நெகிழ்த்தேன். உடைத்து எடுக்க முடியவில்லை. அன்றியும் ஆங்கிலேய காரீயத் தகட்டுச் சுருளும் தட்டுப்பட்டது. பளுவாய இருந்ததனால், அதைப் பெயர்த்துத் தள்ளுவதற்கு என்னால் முடியவில்லை.

மேமீ 10, 11, 12, 13, 14—இவ் வைந்து நாளும் கப்பலுக்குச் சென்றேன். பல துண்டு மரங்கள், பலகைகள், பளுவுள்ள பலகைகள், இருநூறு முந்நூறு அந்தர் எடையுள்ள இரும்பு ஆகியவை அகப்பட்டன.

மேமீ 15உ— ஒரு கைக் கோடரியின் வாயைக் காரீயத் தகட்டுச் சுருள்மேல் வைத்து, மற்றொரு கோடரி யின் பின் பகுதியினால் அடித்து, ஒரு துண்டுத் தகடு வெட்டலாம் என்று கைக் கோடரிகள் இரண்டு கொண்டு போனேன். தகட்டுச் சுருள் தண்ணீருக்குள் ஒன்றரை அடி ஆழத்தில் இருந்தது. அதனால் கோடரியின் வாய்த் தாரை தகட்டிற் பொருந்துமாறு அடிக்க இயலவில்லை.

மேமீ 16உ—முன்னிரவு கடும்புயல் அடித்தது. கப்பலின் எஞ்சிய பாகம் நீர் மோதிப் பின்னும் உடைந்த தாய்ப் புலப்பட்டது. நான் புறாச் சுடக் காட்டுக்குச் சென்று நாழிகை சென்றதனால் கப்பலுக்குப் போவதற்குமுன் நீர்ப் பெருக்கு வேலையாயிற்று. இன்று போகவில்லை.

மேமீ 17உ—எனக்கு இரண்டு கல்தொலைவில் உடைந்த கப்பலின் உறுப்புக்கள் சில கரையில் ஒதுங்கி யிருக்கக் கண்டு போய்ப் பார்த்தேன். முன் அணிமுனை உறுப்பு ஒன்று இருந்தது. அதிக பளுவாய் இருந்த தனால் நான் அதை எடுத்துக்கொண்டு வரவில்லை.

மேமீ 24உ—18உ முதல் 24உ வரையில் நாள் தோறும் நான் கப்பலுக்குப் போய் மிகுந்த பாடுபட்டு,

கடப்பாரையில் சில பீப்பாய்களையும். கடற் பயணத்தார் பெட்டி இரண்டையும் நிலைவிட்டுப் பெயர்த்தேன். நீர்ப் பெருக்குத் தொடங்கவே, அவை மிதந்தன. கரையி னின்று எதிர் காற்றடித்ததனால் அன்று கரையிற் சேர்க்க முடியவில்லை. சில மரத்துண்டுகளும், பிரேஜிலிய பன்றி இறைச்சிப் பீப்பாய் ஒன்றும் மாத்திரம் கரை அடைந்தன. உவர் நீர் சுவறி மண் அடைந்து இறைச்சி பழுதாய்ப் போயிற்று.

அன்று முதல் சூன் 15உ வரையில் நாள்தோறும், நீர்ப் பெருக்கு வேளையில் உணவிற்காகக் காட்டில் பறவை முத லியவற்றைச் சுட்டுக் கொண்டுவந்து, நீர் வற்றத் தொடங் கும் வேளை பார்த்துக் கப்பலுக்குப் போய், எடுக்கக்கூடிய வைகளை எடுத்து வந்தேன். சூன் 15உக்குள் வலிவான சிறு படகு செய்யப் போதுமான மரமும், பலகையும், இரும் பும் அகப்பட்டன. படகு செய்யத் தெரியாத குறை ஒன்று தவிரத், துணைப் பொருள்களில் ஒரு குறையும் இல்லை. அன்றியும், அவ்வப்பொழுது துண்டு துண்டாய் எனக்கு அகப்பட்ட காரீயத் தகடு நூற்றுப் பன்னிரண்டு இராத்தல் வரையில் இருந்தது.

சூன் 16உ— கடற்கரைக்குப் போய், பெரிய ஆமை ஒன்றைக் கண்டேன்; அவ்விடத்தில் ஆமைகளுக்குக் குறைவில்லை. அதற்குமுன் அவை என் கண்ணுக்கு எதிர்ப்படாதது எனது பேறின்மையால் ஆகும். தீவின் எதிர்க்கரையில் இருப்பேன் ஆயின், ஒவ்வொரு நாளும் ஆமைகளை நூற்றுக்கணக்காய்க் காணலாம் என்று பிறகு கண்கூடாய்க் கண்டேன். அவைகளைக் கண்டது எனக்கே வினையாய் முடிந்தது.

சூன் 17உ—இன்று முழுதும் அந்த ஆமையை அறுத்துப் பக்குவமாய்ச் சமைப்பதில் கழிந்தது. அதன் வயிற்றில் அறுபது முட்டைகள் இருந்தன. இந்தக் கொடுமையான தீவிற் சேர்ந்தபின், வெள்ளாட்டு இறைச் சியும் பறவை இறைச்சியும் அன்றி வேறு இறைச்சி வகை

ஒன்றும் தின்று அறியாத என் வாய்க்கு ஆமை இறைச்சி மிக நன்ருகவும் இன்பமாயும் இருந்தது. அவ்வளவு சுவையுள்ள இறைச்சி நான் என்றும் தின்றதில்லை.

ஜூன் 18உ—பகல் முழுதும் மழை பெய்ததனல், நான் வெளியிற் செல்லவில்லை. என் உடல் குளிரால் விறைத்தது. இந் நாட்டில் குளிர் உண்டாக வழி இல்லையே, இஃது என்ன மாறுபாடு என்று எண்ணினேன்.

ஜூன் 19உ—நோய் கொண்டு படுத்திருந்தேன். மிகக் குளிர் காலத்தில் உண்டாவதுபோல உடல் விறைத்து நடுக்கங் கொண்டது.

ஜூன் 20உ—இரவு முழுதும் கண்ணோடு கண் மூடவே இல்லை. காய்ச்சல் கண்டு, தலைவலி பொறுக்க முடியாததாய் இருந்தது.

ஜூன் 21உ—எனக்கு மிகுந்த உடல்நோய் இருந்தது. நோயினல் வருந்தும் பொழுது எனக்கு உதவி செய்வார் ஒருவரும் இல்லையே என்று எண்ணி, ஏக்கங் கொண்டு, அறிவழிந்து பிணம்போல் ஆகிக் கடவுளைத் துதித்தேன். ஹல் துறையிற் புயல் அடித்ததற்குப் பின் இதுவரையில் நான் இறை வழிபாடு செய்ததே இல்லை. நான் செய்த வேண்டுகோள் இன்னதென்ருயினும், எதற்காக வேண்டுகோள் செய்தேன் என்ருயினும் எனக்குத் தெரியாது. என் மனம் நடுங்கி மயங்கி இருந்தது.

ஜூன் 22உ—முன் இருந்ததை விடச் சற்று உடல் நலம். நோய்க்கு அஞ்சும் அச்சம் மிகுந்தது.

ஜூன் 23உ—நோய் மறுபடியும் திரும்பியது. குளிரும் நடுக்கமும் உண்டாயின. தலைவலி தாங்கமுடியாததாய் [illegible]

ஜூன் 24உ—உடல் நலம் மிக நன்று.

ஜூன் 25உ—குளிர்காய்ச்சல் கடுமை. ஏழு மணி நேரம் வரையில் நெருப்புப்போலக், காய்ச்சல் காய்ந்து உடல்

நடுங்கிற்று. அதன்பிறகு, நினைவுதவறி உடல் முழுதும் வியர்த்தது.

சூன் 26௳—உடல் நலம் உற்றேன். உணவிற்கு ஒன்றும் இல்லாததனால், துப்பாக்கிகொண்டு வேட்டைக்குச் சென்றேன். வலிவின்மையால் கைகால் வேலை செய்ய முடியவில்லை. ஆயினும் ஒருவகையாக வெள்ளாட்டு மறி ஒன்று சுட்டு வீட்டுக்குக் கொண்டுவந்து, அதன் இறைச்சியிற் சிறிது அளவை எடுத்து வேகவைத்து உண்டேன். சிறிது அளவு எடுத்து வறுக்கவும், ஒரு குழம்பு வைக்கவும் விரும்பினேன். அதற்கு வேண்டிய ஏனம் இல்லை.

சூன் 27௳—குளிர்காய்ச்சல் மீண்டும் அதிகரித்தது. படுத்த படுக்கையினின்று பகல் முழுதும் எழுந்திருக்கவும் இல்லை. சோறும் நீரும் இல்லை. வாய் வறண்டு மிக்கவிடாய் எடுத்தது. எழுந்து நிற்கவாயினும், தண்ணீர் மொண்டு வரவாயினும், உடல் வலிவு இன்றி யிருந்தேன். திரும்பவும் இறைவனை வாழ்த்தி வேண்டினேன். என் நினைவு மயக்கம் உற்றிருந்தது. மயக்கம் தெளிந்திருக்கும்பொழுது, நான் அறிவிலியாதலால் கடவுளை வழிபடும் முறை எனக்குத் தெரியவில்லை. படுத்த படுக்கையில், "கடவுளே, என்னை உம் அருளாற் காத்திடுவீர், இறைவனே என் இரங்கத் தக்கநிலையைப் பார்த்தருளும், ஆண்டவனே என்மீது இரக்கங் கொள்க" என்று வாய்க்கு வந்தபடி குழறு மொழி பேசினேன். இரண்டு மூன்று மணி நேரம் அளவும் இவ்வாறு கூறிக்கொண்டிருந்து, காய்ச்சல் விட்டவுடன் அயர்ந்து தூங்கி, நடு இரவில் விழித்தேன். விழிக்கும் பொழுது எனக்குச் சற்று உடல் நலமாய் இருந்தது. ஆயினும் உடல் வலி குன்றி, நீர்வேட்கை மேலிட்டது. வீட்டிலே நீர் இல்லாததனால், பொழுது விடியுமட்டும் பதைப்பின்றிப் படுத்திருந்து, திரும்பவும் தூங்கினேன். இரண்டாவது தடவை தூங்கியபொழுது பின்வரும் அச்சுறுத்தும் கனவு கண்டேன்.

நிலநடுக்கம் உண்டான பின் புயல் அடித்தபொழுது, நான் இருந்த மதிற்புறத்து நிலத்திலேயே உட்கார்ந்திருந்த

தாகவும், கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு வடிவுள்ள ஒருவர் பரந்த கார்மேகத்தினின்று இறங்கித் தரையில் வந்து நின்றதாகவும் கண்டேன். அவர் உடம்பு முழுதும் நெருப்புக் கொழுந்து வடிவமாய் இருந்தது. அவரை உற்றுப் பார்க்க என் இருகண்களும் கூசின. அவர் முகத்தில் விளங்கிய சினக்குறிப்பை நான் நாவினால் எடுத்துக் கூற இயலாது. அவர் அடி பெயர்ந்து நடந்த போது முன்பு அதிர்ந்தது போல நிலம் கிடுகிடென நடுங் கிற்று. ஏக்கமுற்றிருந்த என் கண்ணுக்கு வானம் முழுதும் பளிச்சென்று மின்னுவது போலத் தோன்றியது.

அவர் தரையில் இறங்கிய அந்த நொடிப் பொழுதி லேயே நீண்ட வேலைக் கைக்கொண்டு என்னைக் கொல்ல நெருங்கி வந்தார். சற்றுத் தொலைவில் அவர் திடல் நிலத்திற் சேர்ந்தபொழுது, என்னுடன் பேசத் தொடங் கினர். அவர் பேசிய ஒலி கேட்டு எனக்கு மிகுந்த அச்சம் உண்டாயிற்று. அஃது இப்படிப் பட்டதென்று கூறமுடி யாது. அவர் கூறிய சொற்களில் எனக்குப் புலப்பட்டவை இவை, "இவை எல்லாவற்றையும் கண்டும் நீ மனம் திருந்தாததனால், இனி இறந்து போகக் கடவாய்" இவ் வார்த்தைகளைக் கூறி, அவர் என்னைக் கொல்லுவதற்குக் கைக்கொண்ட வேலை ஓங்கியதுபோல் இருந்தது.

இதனைப் படிக்கும் எவரும் இக் கனவுகண்டபொழுது எனக்கு உண்டான அளவுகடந்த அச்சத்தை என்னால் விளக்கிக் கூற முடியும் என்று எண்ணமாட்டார்கள். கனவு காணும்பொழுதே என் உள்ளம் பதை பதைத்தது. தூக்கந்தெளிந்து, நான் கண்டது கனவுதான் என்று அறிந்தபொழுதும் என் மனம் மாறவில்லை. என் துன்பம் இவ்வளவு என்று கூற முடியாது.

அறிவு உணர்ச்சி சிறிதும் இல்லாத ஏழையானேன்! என் தந்தை புகட்டிய நல்லறிவுரைகளால் எனக்குண்டான அறிவு உணர்ச்சி, எட்டு ஆண்டுக் காலமாகத் தீ நெறி யாளரும், என்னைப்போல அறநெறி கெட்டவராய் உலகியல்

துன்பங்களில் உழல்வோருமாகிய கடற்பயணத்தாருடன் கூடிய நட்புறவால் அடியோடு அழிந்து போயிற்று. நான் கடவுளைக் குறித்தாயினும், என் நிலைமையைக் குறித்தாயினும் கனவிலும் நினைக்கவில்லை. என் உள்ளம் உணர்வழிந்து நன்மையை விரும்பாமலும், தீமைக்கு அஞ்சாமலும் இருந்தது. நினைவு இன்றி அளவுமீறி நடக்கும் கன்னெஞ்சராகிய கீழ்மக்களைப் போலப், பேரிடர் வரும் காலத்துச் சிறிதாயினும் கடவுளிடம் அச்சமில்லாதவனாயும், வந்த துன்பம் நீங்கும்பொழுது கடவுளுக்கு நன்றி கலந்த வணக்கம் செலுத்தாதவனாகவும் இருந்தேன்.

இதற்கு முன் கூறிய என் வரலாற்றில் எவரும் எளிதில் நம்பத் தகுந்தது இது ;—இன்று வரையில் ஒன்றன்பின் ஒன்றொன்றாய்ப் பலவித இடர்களும், துன்பங்களும் என்னைச் சூழ்ந்தும் மறைமொழிபோன்ற சிறப்புடைய தந்தையின் சொல்லைக் கேளாமற் பலவாறு எல்லை கடந்து நடந்ததனால், இவை அனைத்தும் கடவுள் மூலமாய் எனக்கு விதிக்கப்பட்ட முறையான தண்டனைகள் என்று நான் எள்ளளவும் எண்ணவில்லை. ஆப்பிரிக்காவின் பாலைவனத்தை அடுத்த கரைக்கு வீண் அவாவின் வசப்பட்டு, நான் வாணிகம் செய்வதற்காகப் போயிருந்தபொழுது: எனக்கு வரும் பிற்கால நிலையைக் குறித்து எண்ணவும் இல்லை. எனக்கு வழிகாட்டி, தகுதியான இடத்தில் என்னை நலத்துடன் கொண்டு போய்ச் சேர்க்கும்படியாவது, நான்கு திசையிலும் சூழ்ந்திருந்த பறவைகளுக்கும், காட்டு விலங்குகளுக்கும், கொடிய பண்பு உள்ள வேடருக்கும் என்னைத் தப்புவித்துக் காக்கும்படியாவது நான் கடவுளை வேண்டிக் கொள்ளவும் இல்லை. கடவுள் ஒருவர் உண்டு என்றாயினும், அவர் கட்டளைப்படி இவ்வுலகம் நடந்து வருகிறதென்றாயினும், நான் நினைக்கவே யில்லை. ஆடு மாடு முதலிய விலங்குகளைப் போல இயற்கை யறிவோடுமட்டும் நடந்து வந்தேன். மனிதர் அனைவருக்கும் இருக்கவேண்டிய எளிய அறிவையேனும் நான் கடைப்பிடியாய்க் கொள்ளவில்லை.

கடலில் தத்தளித்தபோது போர்த்துக்கீசிய மாலுமி என்னைக் கண்டு, தன் கப்பலில் ஏற்றிப் பாதுகாத்து, உதவிகள் செய்து, மேலும் பல நன்மைகள் செய்தாரன்றோ? அவர் செய்த பேருதவியைக் குறித்தாயினும் எனக்கு நினைவு உண்டாகவில்லை.

நான் ஏறிய கப்பல் மணற்குன்று தட்டித் துன்பப் பட்டதனால் நான் படகில் இறங்கி இத்தீவின் கரைக்கு அருகில் முழுகி, இறத்தற்குரிய பேரிடர் உற்றேன். அப்போதும், இவையெல்லாம் என்னுடைய அளவு மீறிய தவறுகளால் விளைந்த துன்பம் என்று நினைக்கவேயில்லை. நாயினும் கடையனாய்ப் பிறந்த எனக்கு வரும் துன்பம் இவ்வளவு மட்டுமோ? இறக்குமளவும் எண்ணிறந்த துன்பங்கள் உண்டாம் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டேன்.

ஒன்றுமட்டும் உண்மை. நான் முதலில் இக்கரை அடைந்து தப்பிப் பிழைத்திருக்க, என்னுடன் கப்பல் ஏறிய கடற் பயணத்தார் யாவரும் கடலில் அமிழ்ந்து இறந்ததை நினைத்தவுடன் என்னை மறந்து மிக்க மகிழ்ச்சி யுற்றேன். அவ்வேளையில் தெய்வத்தின் திருவருள் துணை கிட்டியிருந்தால் கடவுள் செய்த அந்நன்றியை முழு மனத்தோடு வெளியிட்டு மறவாதிருந்திருப்பேனே. உயிர்தப்பிப் பிழைத்ததைப்பற்றி எனக்குண்டான மகிழ்ச்சி எளிய மகிழ்ச்சியாய் அவ்வளவில் ஒழிந்து போயிற்று. மற்றவர்கள் இறந்து போக, என்னைமட்டும் பாதுகாத்துக் கரையேறச் செய்த சிறந்த கடவுள் செயலைப்பற்றி என் உள்ளத்தில் சிறிதாயினும் நன்றியுணர்வு ஏற்படவில்லை. கடவுள் அருள் கூர்ந்து என்னை இவ்வாறு பாதுகாத்த நோக்கம் என்ன என்று நான் ஆராய்ந்து நினைக்கவும் இல்லை. கடற் பயணத்தார் தாம் ஏறிய கப்பல் கடலில் முழுகியவுடன், எவ்வாறு வது தப்பிப் பிழைப்பார்கள். அவர்கள் கரை சேர்ந்தவுடன் தாம் தப்பிப் பிழைத்ததைப்பற்றி அளவு கடந்த மகிழ்ச்சி கொள்வார்கள்; ஒரு கிண்ணம் சாராயம் குடித்தவுடன்

 மகிழ்ச்சியைப்பற்றிய நினைவை மறந்து போவார்கள்.

அஃது இயற்கை. அதுபோலவே என் இயற்கையும் வாழ் நாள் முடிவு வரையிலும் இருந்தது.

பிறகு நீண்டநேரம் நினைத்து நினைத்து, எனது நிலைமை இன்னதென்று கண்டு, மனிதருக்கு எட்டாத தொலைவில் எவர் உதவியும் இன்றி, இறக்கும் வரையிலும் இந்தப் பாழ்ந்தீவில் அச்சங்கொண்டிருந்து துன்பப்படும் துணையற்றவனாய்ப் பிறந்தேனே என்று எண்ணிப் பரிதவித்தேன். அப்பொழுதே பசியாறிக் காலம் கழித்தற்குரிய வாய்ப்பு உண்டு என்றும் நினைத்தேன். நினைத்தவுடனே என் மனத்துன்பம் நீங்கியது. நான் மனம் ஆறித்தேறுதல் கொண்டு உயிர் வாழ்க்கைப் பொருளைத் தேடி உழைத்தேன். நான் செய்த பெருந் தவறுக்காகக் கடவுள் என்னை இந்த நிலைமையிற் கொண்டுவந்து கண்முன்னாலேயே தண்டிக்கிறார் என்று கனவிலும் நினைக்கவில்லை.

நாட்குறிப்புத் தாளிற் சொல்லியபடி வாற்கோதுமையும் நெல்லும், வியக்கும்படி முளைத்து வளர்ந்தது கண்ட பொழுது, தொடக்கத்தில் அச்சமும் அன்புமுடைய எண்ணங்கள் எனக்கு உண்டாயது உண்மை. அவை முளைத்தது அருள் நிகழ்ச்சியால் அன்று என்றும், அவ்விடத்தில் வித்து விழுந்தது எதனால் என்றும் என் எண்ணத்தில் தோன்றவே, அந்நினைவுகள் குடத்தின் வெளியில் விழும் நீர்த்துளிகள் போல நிலையற்று என் உள்ளத்தினின்றும் நீங்கின.

நிலநடுக்கத்தைப் போல மக்களை அச்சுறுத்துவதும், உருவமற்ற கடவுளை நினைக்கும்படி மனிதரைத் தூண்டித் திருப்புவதும் வேறு ஒன்று இல்லை. இப்படிப்பட்ட அச்சந்தரும் நிலநடுக்கத்தைக் கண்டும், அப்பொழுது உண்டான நடுக்கமும் அச்சமும் பின்பு தீர்ந்தன. அதனால் கடவுளிடத்தில் கொண்ட அச்சம் அன்பு இவைகளும் நீங்கின. அதன் பிறகு நான் கடவுளைக் குறித்து நினைக்கவுமில்லை; கடவுள் தண்டனைக்கு அஞ்சவுமில்லை. நான் செய்த வினையின் பயனால் விளைந்த இக்கெட்ட நிலையைத் துன்பம்

என்று உணரவும் இல்லை. என் நிலைமைக்கும், இன்புற்றுக் கிடக்கும் செல்வர் வாழ்வுக்கும் வேறுபாடு தோன்றாமல் இருந்தது.

அதன் பிறகு எனக்கு நோய் உண்டாகிச் சாக்காட்டுத் துன்பங்கள் என் கண்முன்னால் தோன்றுவது போலக் காட்சியளித்தன. காய்ச்சல் துன்பத்தால் நான் துணிவு இழந்து, மெலிவுற்றேன். இவ்வாறிருக்கும்போது என் உள்ளம் உறக்கம் ஒழிந்து என்னைக் கண்டிக்கத் தொடங்கிற்று. நினைத்தற்கரிய தீமைகள் செய்து எல்லை கடந்து நடந்ததனால் தெய்வத் திருவருளை இழந்தேன். எனக்கு இக்கொடிய தண்டனைகளைக் கடவுள் விதித்தது முறைதான். தெய்வத்தின் சினம் என்னை நெருங்குமாறு நான் பல கொடிய நம்பிக்கைக் கேடுகள் செய்தேனே என்று நான் என்னைக் கண்டித்தேன்.

காய்ச்சல் கண்ட இரண்டாம் நாள் மூன்றாம் நாள் தொடங்கி இந்த எண்ணங்களால் என் மனம் வருந்திற்று. காய்ச்சல் வரவர மிகுந்து வருத்தியது. நான் செய்த தீவினைகளைக் குறித்து என் நெஞ்சம் என்னைக் கண்டித்து வருத்தியது. அதனால் இறைவனைத் துதிப்பது போன்ற வார்த்தைகள் சில என் வாயினின்று பிறந்தன. நான் முழு மனத்துடன் தெய்வத் திருவருளை விரும்பி வேண்டினேன் அல்லன்; என்னை வருத்திய அச்சத்தினாலும், துன்பத்தாலும் அவ்வார்த்தைகள் என் வாயினின்று பிறந்தன. என் மனம் மலைத்தது. நினைவுகள் கலைந்தன. நான் செய்தவை எல்லாம் வஞ்சனை என்று எண்ணி வருந்தினேன். இந்த இரங்கத் தக்க நிலையிலிருந்து துன்பமுற்று இறந்து விடுவேன் என்று எனக்கு அளவு கடந்த நடுக்கம் உண்டாயிற்று. இத்துன்பத்தினால் மயக்கமான நினைவுகள் எனக்குத் தோன்றின. இவ்வாறு என் மனம் கலங்கி அறிவிழந்திருந்ததால் என் சொல்லி வாழ்த்துவது என்றும் அறியாது இருந்தேன். கடவுளே! என்னைப் போலும் துன்பத்தில் உழலுவோர் உண்டா? நான் நோய்கொண்டு வருந்தினால் உதவியற்று இறந்து போவேனே! இறந்தபின்

எனக்கு என்ன வருமோ ?" என இத்தகைய இரக்கந்தரத் தக்க சொற்களைப் பதைத்துச் சொல்லி யிருப்பேன். இப்படிக் கூறியபோது, என் கண்கள் கலங்கி நீர் சொரிந்தன. அழுகையை என்னால் அடக்க முடியவில்லை. அதன் பிறகு சற்று நேரம் வரையிலும் பேசுவதற்கு நா எழாமல் அடங்கிக் கிடந்தேன்.

இந்த நேரத்தில் என் தந்தை கூறிய அறிவுரைகள் நினைவுக்கு வந்தன. "அறிவு கெட்டு உன் விருப்பப்படி நடப்பாயானால், கடவுள் உனக்கு அருள் செய்ய மாட்டார்; தந்தை சொல்லை மந்திரம்போல் எண்ணி, நடந்தே னில்லையே என்று இனிமேல் பேரிடர் வருங்காலத்தில் நினைத்து வருந்துவாய்; அவ்வேளையில் உனக்கு உதவி செய்வார் எவருமின்றித் தனியே இருப்பாய்" எனக் கூறிய மொழிகள் என் நினைவுக்கு வந்தன. அதனால், நான் வாய் விட்டு அலறி, "என்னுடைய அரிய தகப்பனார் கூறிய வார்த்தைகள் உண்மையாக நடக்கின்றன; கடவுள் என்னை முறைப்படி ஒறுக்கின்றார். எனக்கு உதவி செய்வோர் இவ் விடத்தில் ஒருவரும் இல்லை. என் இரங்கு நிலையைச் சொல்லின் கேட்பவரும் இல்லை. கடவுள் என்மீது இரங்கி, இன்பத்துடன் வாழத்தக்க நிலையில் என்னை வைத்தார். அதை எண்ணிப் பாராமல் தள்ளிவிட்டேன். அந்த நடுத் தரநிலையின் மேன்மையை நான் ஆராய்ந்தறிய நினைக்கவும் இல்லை. அவ்வின்பத்தைப்பற்றித் தாய் தந்தையர் கற்பித்த அறிவுரைகளால் தெளியவும் இல்லை. அவர்கள் என் னுடைய அறிவின்மையை நினைத்து வருந்திப் புலம்ப, அறிவு கெட்டு நடந்ததனால் விளைந்த துன்பத்தில் அழுந்தி நானும் புலம்பும்படி ஆயிற்று. அவர் என்னை இம்மண் ணுலகில் சிறந்த ஆளாக்கி, எனக்கு எல்லாவகையான இன்பங்களும் உண்டாகும்படி உதவி புரிதற்கும், உடன் பட்டு என்னை வருந்திக் கேட்டார்கள். அவர்கள் சொல்லைப் பொருள் செய்யாமல் தள்ளினேன். அதனால் இப்பொழுது எவரும்படாத அரும்பாடுபட்டு வருந்துகிறேன். இவை மனிதர் தாங்கத்தக்க துன்பங்கள் அல்ல. எனக்கு உதவி

செய்வார் இல்லை; துணையாவார் இல்லை; என்னைத் தேற்று வார் இல்லை. எனக்கு அறிவுரை கூறுவார் இல்லை. துணை யற்றவர்க்குத் துணையாகும் இறைவனே! எனக்கு உதவி செய்தருளும், தாங்குதற்கரிய துன்பக்கடலில் மூழ்கி இடர்ப்படுகிறேன்." என்று பதைத்துக் கூவினேன்.

இதனை வேண்டுகோள் என்று சொல்வது பொருந்து மானால், நாடு கடந்து சென்றபின் நான் செய்த முதல் வேண்டுகோள் இதுதான். இனி விட்ட குறையினின்று நாட்குறிப்பைத் தொடங்கிக் கூறுகின்றேன்.

சூன் 28௳—அயர்ந்து தூங்கி உடல் நலம் உற்று, காய்ச்சல் தெளிந்து எழுந்திருந்தேன். கனவைப்பற்றி உண்டான அச்சம் மேலிட்டிருந்தும், அதைப் பாராட் டாமல், மறுநாள் குளிர்காய்ச்சல் வரும் என்று எண்ணி, அதைத் தாங்குவதற்கு ஏற்ப ஏதாயினும் தின்று பசி யாறுவதற்கு இதுதான் வேளை என்று முயற்சி செய்தேன். முதலில் நாற்பட்டை வடிவமுள்ள உறையோடு கூடிய பெரும்புட்டி ஒன்றில் தண்ணீர் நிறைத்து, மஞ்சத்திற் படுத்திருந்து எட்டி எடுக்கத் தக்க தொலைவில் மேசையின் மேல் வைத்தேன். தண்ணீரால் குளிர்காய்ச்சல் பெருகாம லிருக்கும் பொருட்டுக் கால் **பைன்ட்** ரம் சாராயம் அதற்குள் விட்டுக் கலந்தேன். பின்பு வெள்ளாட்டு இறைச்சி ஒரு துண்டு அறுத்துச் சுட்டுத் தின்றேன். வாய்க்குச் சுவை யாய் இராததனால், அதிகம் செல்லவில்லை. அப்புறம் சற்று உலாவினேன். எனக்கு உடல் நலிவு மிகுந்திருந்தது. மறுநாள் காய்ச்சல் வருத்தும் என்று எண்ணி அச்ச முற்று இருந்ததனால் என் மனம் தூங்கும்போதும் துன்பப் பட்டது. இரவு ஆமை முட்டைகளில் மூன்றை அடுப்புச் சுடுசாம்பலுக்குள் புதைத்து, வெந்த பின் எடுத்துத் தட்டி உடைத்து, ஓட்டோடு வைத்திருந்து, கடவுள் வழிபாடு செய்து உண்டேன். நான் பிறந்த நாள் முதல் இதுவரையில் ஒருநாளாவது உணவு உண்ணத் தொடங்கு முன், இறைவனருள் பெறும்பொருட்டு வழிபாடு செய்த

உணவு உண்டபின், வழக்கப்படி துப்பாக்கி எடுத்துக் கொண்டு வெளியில் உலாவப் போனேன். உடல் வலி யின்மையால், துப்பாக்கிப் பளுவைத் தாங்க என்னுல் முடியவில்லை. சிறிது தொலைவு சென்றபின் கடலுக்கெதிரே தரையில் உட்கார்ந்தேன். அலைக்கிளர்ச்சியின்றிக் கடல் மிக அமைதியாக இருந்தது. உட்கார்ந்திருக்கும்போது, அடியில் வரும் நினைவுகள் என் உள்ளத்தில் உண்டாயின.

நான் இவ்வளவு நாள் கண்டறிந்து பழகிய கடல் சூழ்ந்த இந்நிலவுலகம் என்பது என்ன? அஃது எங்கிருந்து உண்டாயிற்று? நான் யாவன்? மற்ற மனிதர், வனவிலங்கு, மனிதருடன் பழகும் ஊர்விலங்கு முதலிய உயிர்த்தொகை கள் எத்தன்மையன? மனிதர் தோற்றத்துக்குக் காரணம் என்ன?

எல்லா வல்லமையும் உடைய மறை பொருளான பரம் பொருளால் நாம் அனைவரும் படைக்கப்பட்டோம். அவரே நிலத்தையும், அதைச் சூழ்ந்த கடலையும், வானத்தையும், அதில் உலாவும் காற்றையும் தோற்றுவித்தார். அவர் யாவர்?

அதன் பிறகு என் மனத்தில் இந்த அறிவு தோன்றி யது:—எல்லாப் பொருள்களையும் படைத்தவர் கடவுள், அதன்மேல் எனக்குண்டான மாறுபாடான எண்ணமா வது: நன்று, கடவுள் எல்லாவற்றையும் படைத்தது உண் மையாலுல், அவரே அவைகளையும் அவைகளுக்குரிய எல்லாவற்றையும் ஆண்டு நடத்திக்கொண்டு வருகிறுர். எல்லாப் பொருள்களையும் படைக்க வல்லவருக்கு அவை களை ஆண்டு நடத்தும் வல்லமை இருக்க வேண்டுமே.

அவ்வாருனல், அவர் படைத்த எண்ணிறந்த உயிர்த் தொகைகளுக்கும் மற்றவைகளுக்கும், அவர் அறியாமலும் விதிக்காமலும் ஒன்றும் நடவாது; ஒரு துரும்பும் அசையாது.

அவர் அறியாமல் ஏதும் நடவாதாயின், நான் இந்த நிலையில் இருந்து தடுமாறி வருந்துவதும் அவருக்குத்

தெரியும். அவர் விதிக்காமல் ஒன்றும் நடவாதாயின், நான்பட்ட இடர்களும், உயிர்த் துன்பங்களும் அவரால் விதிக்கப்பட்டன.

இந்த ஆராய்ச்சி எண்ணங்களுக்கு மாருய் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அதனுல், இந்தத் துன்பங்க ளெல்லாம் இறைவன் கட்டளைப்படி எனக்கு உண்டாயின என்றும், அவர் நினைவின்படியே எனக்கு இந்நிலைக்கேடு வந்தது என்றும், எனக்கேயன்றி, இம்மண்ணுலகில் எவர்க்கும் உண்டாகும் இன்ப துன்பங்களை வருவிக்கும் நிறைந்த வன்மை அவர் ஒருவருக்கே உண்டென்றும் என் நெஞ்சில் உறுதியாய்ப் பதிந்தது. அதனுல் பின்வருமாறு ஆராயத் தொடங்கினேன்.

கடவுள் எனக்கு இத்துன்ப நிலையை வருவிக்கக் காரணம் என்ன? நான் என்ன வஞ்சனை செய்தேன்?

அந்த நேரத்திலேயே என் நெஞ்சு பதைத்தது, இவ்வாறு கடவுளை இகழ்வது தகாதென்று என்னைத் தடுத்துப் பின்வரும் சொற்களை எனக்கு வான்மொழி கூறியது போல் இருந்தது. "பாவியே, நீ செய்த வஞ்சனை என்ன என்று கேட்க உனக்குத் துணிவு வந்ததா?" நீ தவருகக் கழித்த காலத்தில் செய்த ஒழுங்கற்ற செயல்களை நினைத்துப் பின்பு நீ என்ன வஞ்சனை செய்தாய் என்று கேள். நெடுங்காலத்துக்கு முன் நீ வீணே அழிந்துபோகாமல் இன்றுவரையில் பிழைத்திருப்பதற்குக் காரணம் என்ன? யார்மவுத் துறையில் நீ மூழ்கி இறந்துபோகாதது ஏன்? ஸல்லி துறைச் சூறைக்கப்பற்காரர் உங்கள் கப்பலைக் கொள்ளை அடித்தபோது, உண்டான சண்டையில் அவர்கள் உன்னைக் கொல்லாத காரணம் என்ன? ஆப்பிரிக்கக் கரையில் கொடிய காட்டு விலங்குகள் உன்னை ஏன் கொன்று உண்ணவில்லை? இந்தத் துறையில் உன்னுடன் வந்த யாவரும் நீரில் முழுகி இறந்துபோக, நீ ஒருவன் மட்டும் தப்பிப் பிழைத்திருப்பது ஏன் என்று கேள். என்ன வஞ்சனை செய்தாய் என்று நீயா கேட்கத் துணிந்தாய்?"

இந்த நினைவுகள் உண்டாகவே, நான் கலக்கமுற்று ஏக்கம் பிடித்து இருந்தேன். விடை கூறுவதற்கு ஒன்றும் அறியாதிருந்தேன். என்ன விடை கூறலாம்? துயரத்தால் மனம் சோர்ந்து, எழுந்து, எனது இருப்பிடத்திற்குப்போய், மதிலேறி உட்சென்று, படுத்து நித்திரை செய்யப் போனேன். கவலையால் தூக்கம் வரவில்லை. வரவர இருண்டதனால், விளக்கேற்றி விட்டு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். காய்ச்சல் வரும் என்றெண்ணி அஞ்சியிருந்த போது, **பிரேஜில்** நாட்டுமக்கள் எவ்வகை நோய்க்கும், புகையிலை ஒன்றையே மருந்தாகப் பயன்படுத்துவது வழக்கம் என்று என் நினைவிற்கு வந்தது. என் பெட்டிகளில் ஒன்றில் பதஞ்செய்த புகையிலைச் சுருள் ஒன்றும், நன்றாய்ப் பதஞ் செய்யப்படாத பசும் புகையிலைச் சுருள்கள் சிலவும் இருந்தன.

நான் எழுந்துபோய் அந்தப் பெட்டியைத் திறந்து பார்த்தபொழுது, அதற்குள் என் உடல் நோய்க்குமட்டும் அன்றி, உயிர்நோய்க்கும் ஏற்ற மருந்துகளைக் கண்டேன். அதனால், கடவுள் தாமே பெட்டியைத் திறந்து பார்க்கும் படி என்னை ஏவி விட்டார் என்பதற்கு ஐயம் இல்லை. நான் பெட்டியைத் திறந்து, புகையிலைச் சுருளையும், என் கண்ணுக்கு எதிர்ப்பட்ட புத்தகங்கள் சிலவற்றுள் கிறிஸ்தவ மறை நூல் ஒன்றையும் எடுத்து, மேசைக்கு அருகில் கொண்டு போனேன். பெட்டிக்குள் மறைநூல்கள் வைத்திருந்த செய்தி முன்பே கூறியிருக்கின்றேன். இன்றுவரையில் அப்புத்தகத்தைத் திறந்து பார்க்க எனக்கு ஓய்வு நேரம் கிடைக்கவில்லை; எடுத்துப் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாகவும் இல்லை.

என் நோய்க்குப் புகையிலையை எந்த முறையில் மருந்தாகப் பக்குவம் செய்வதென்பது புலப்படவில்லை. அதனால் நோய் தீரும் தீராதென்றும் அறியேன். ஆயினும் ஏதாயினும் ஒரு விதத்தில் அது நோயைக் கண்டிக்கும் என்றெண்ணி, நான்கைந்து விதங்களில் பரிசோதனை முறையிற் பயன்படுத்தினேன். முதலில் ஒரு துண்டுப் புகையிலையை

வாய்க்குட் போட்டு மென்றேன். அது காரமுள்ள பசும் புகையிலையானதனுலும், நான் புகையிலை மென்று பயின்றிராததனுலும், எனக்குச் சற்று மயக்கம் உண்டாயிற்று. பின்பு சிறிது அளவு புகையிலையை இரண்டொரு மணி நேரம் ரம் சாராயத்தில் ஊறவைத்துப் படுத்துக்கொள்ளும் பொழுது இறுத்து, அந்தச் சாற்றில் சிறிது குடித்தேன். கடைசியாய் ஒரு துண்டு இலையை எரிதழலிற் பிடித்து, அது நெருப்புப் பற்றிப் புகைந்தபொழுது, அப்புகை மூக்குத்துளை வழியாய் ஏறி எனக்குப் போதுமென்ற அளவும் மூக்கிற் கெதிரே பிடித்துக் கொண்டிருந்தேன். உடம்பிற் சூடு ஏறுவதற்கும், அதன் சாரம் உட்செல்வதற்கும் இப்படிச் செய்தேன்.

இந்தச் சோதனை செய்து கொண்டிருந்தபோது, மறை நூலை எடுத்துச் சற்றுநேரம் படிக்கத் தொடங்கினேன். புகையிலைக் காரமேறித்தலை கிறுகிறு என்று சுற்றுவதுபோல் இருந்ததனுல், அவ்வேளையில் படிக்க என்னுல் இயலவில்லை. புத்தகத்தைத் திறந்தவுடன் "இடர்வந்த வேளையில் என்னை நோக்கிக் கூப்பிடு; நான் உன்னை விடுவிப்பேன்; நீ என் பெருமையை விளக்கம் அடையச் செய்வாயாக" என்னும் வாக்கியம் முதலில் தற்செயலாய் என் கண்ணெதிர்ப்பட்டது.

என் நிலைமைக்குப் பொருந்திய இந்த அருள்மொழிகளைப் படித்தபோது, அவை என் மனத்தில் சற்று அழுந்தின; ஆயினும், 'உன்னை விடுவிப்பேன்' என்னும் உறுதிமொழி எனக்குப் பயன்படாது என்று எண்ணியதனுல், அந்த மொழி சிறிதுகாலம் சென்றபின் என் உள்ளத்திற் பதிந்ததுபோல, அந்த வேளையிற் பதியவில்லை. நான் விடுதலை பெறுவது முடியாது என்றும், அண்மைக் காலத்தில் எனக்கு மீட்சி இல்லையென்றும் நினைத்து, உணவுக்கு இறைச்சி தருவதாக இஸ்ரவேலருக்குக் கடவுள் உறுதிமொழி அளித்தபொழுது, அவர்கள் "தேவன் காட்டிலே நமக்கு உணவைப் பக்குவம் செய்து எவ்வாறு தரமுடியும்?" என்று கூறியதுபோலக் "கடவுள் தாமே வெளிப்

பட்டு என்னை இங்கிருந்து விடுதலை செய்வாரா ?" எனச் சொல்லத் தொடங்கினேன். பல ஆண்டுகள் வரையில் எனக்கு மீட்சியுண்டாமென்று தோன்ருததனுல், அடிக்கடி இந்த ஐயப்பாடு என் நெஞ்சில் தலைப்பட்டது. அவ்வாறு தலைப்பட்டிருந்தும், மேற்கூறிய அருள் மொழிகள் வரவர என் நெஞ்சில் அழுந்தியது பற்றி, நான் அடிக்கடி அவைகளை ஊன்றி நினைத்தேன். இரவு நெடுநேரஞ் சென்றது. புகையிலைப் புகை உட் சென்றதனுல், தலை கிறு கிறுத்துத் தூக்கம் வந்தது. இரவில் ஏதும் வேண்டுமாளுல் எளிதில் எடுக்கும் பொருட்டு விளக்கை அவிக்காமல் முழைஞ்சினுள் வைத்தபின், தூங்கும் பொருட்டு மஞ்சத்திற்குப் போய்ப் படுக்குமுன் நான் முழந்தாள் மடக்கி நின்று, 'இடர் வந்த காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிட்டால், நான் உன்னை விடுவிப்பேன்" என்று சொல்லிய உறுதிமொழியை நிறைவேற்றும்படி கடவுளை வேண்டினேன். தூங்கப் போகும்பொழுது, இதற்குமுன் நான் வணக்கத்துடன் வேண்டுகோள் செய்ததில்லை. சிறுவர் மழலை போலத் தொடர்ச்சியற்றுக் குறை குற்றமுள்ள தாய் இருந்த இவ் விண்ணப்பத்தைச் செய்தபின், புகையிலைக் காரம் ஏறிய சாராயச் சாற்றைக் குடித்தேன். காரம் மிகுந்திருந்ததனுல், சாறு என் தொண்டைக்குள் எளிதில் இறங்கவில்லை. ஒருவாறு மூச்சு அடக்கிக் குடித்தவுடன் படுத்திருந்தேன். புகையிலைக் காரம் தலைக்கு ஏறிற்று. மறுநாட் பகல் உச்சிப் பொழுது திரும்பி மூன்று மணியளவும் அயர்ந்து தூங்கினேன். மறுநாட் பகல் முழுதும், இரவும் அடுத்தநாட் பகல் பிற்பொழுது மூன்று மணிவரையிலும் விழித்து எழுந்திருக்கவில்லை என்று நினைக்கிறேன். அப்படித்தான் இருக்கும். அப்படியில்லாவிடில் சில வருடம் சென்றபின் கிழமையின் நாட் கணக்கில் ஒருநாள் தவறிற்று என்று நான் கண்டதற்குக் காரணம் இல்லை. கணக்கு வரைக்குத் திரும்பத் திரும்ப இரண்டு தரம் குறுக்குவரை இட்டதனுல் இந்தப் பிழை நேரிட்டது என்று கொள்ளின், ஒருநாள் அன்றிப் பல நாள் பிழைபட வேண்டும். என் கணக்கில் ஒருநாள்

பிழைபட்டது உண்மை. எவ்வாறு தவறிற்ரூே அறி யேன்.

கணக்குத் தவறு வந்த வகை ஏதாயிருப்பினும் இருக் கட்டும், பெரிதன்று; தூக்கம் தெளிந்தபொழுது எனக்கு மிகவும் உடல் நலமாய் இருந்தது. கிளர்ச்சியும் மகிழ்ச்சி யும் உடையவன் ஆனேன். முதல் நாள் இருந்த வலி வின்மை நீங்கியது. வயிறு நன்ருயிருந்தது. பசி எடுத் தது; மறுநாள் காய்ச்சல் வரவில்லை. முன்னிலும் அதிக நலம் உற்றேன். இது சூன் 29௳ நிகழ்ந்தது.

சூன் 30௳—முழுநலம் அடைந்ததனுல், துப்பாக்கி எடுத்துக்கொண்டு அண்மையிற் போய்க் காட்டு வாத்தின் சாயலான இரண்டொரு கடற் பறவைகளைச் சுட்டுக் கொண்டு வந்தேன். இப்பறவைகளின் இறைச்சியில் எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. நாவிற்குச் சுவை யாய் இருந்த ஆமை முட்டைகளில் பின்னும் இரண் டொன்று தின்றேன். புகையிலைச் சாற்றில் நன்மை யிருக்கிறதென்று கண்டதனுல் இன்று மாலைப் பொழுதி லும் சிறிது அளவு சாறு இறுத்துக் குடித்தேன். புகை யிலையை வாயிலிட்டு மெல்லவும் இல்லை. புகை வேது பிடிக்கவும் இல்லை. மறுநாள் சூலை 1௳ சிறிது குளிர் காய்ச்சல் கண்டதனுல், நான் எண்ணியிருந்தபடி, எனக்கு முழு உடல்நலம் இல்லை.

சூலை 2௳—இன்று மேற்கூறிய மூன்றுவகை மருத்து வமும் செய்தேன். முதலிற் சற்று மயக்கம் உண்டாயிற்று. புகையிலைச் சாறு முன் குடித்ததற்கு இரட்டிப்பு மடங்கு குடித்தேன.

சூலை 3௳—இன்றைக்கு எனக்கு குளிர் காய்ச்சல் சிறிதும் இல்லாதிருந்தும், முன் உள்ள உடல் வலிமை உண்டாதற்கு இரண்டு மூன்று கிழமைகள் சென்றன, வலிமை ஏற ஏற "நான் உன்னை விடுவிப்பேன்" என்னும் மறை மொழியை ஓயாமல் நினைத்து, எனக்கு விடுதலை உண்டாவது இயலாது என்று எண்ணினேன். எண்ண

எண்ண என் மனம் தளர்ந்தது. இப்படி இருக்கும் போது, எனது முதன்மையான துன்ப நிலையினின்று விடு தலை பெறுவதைப் பற்றி மனம் அழுந்த நினைத்து, நான் பெற்ற விடுதலையைப் பற்றி நினையாதிருந்தேன் என்று எனது நினைவில் தோன்றிற்று. தோன்றவே, பின்வரும் கேள்விகளைக் கேட்டேன்:— எனக்கு உண்டான நோய்த் துன்பத்தினின்று நான் வியப்படையும்படி விடுதலை பெற வில்லையா? அஞ்சி ஏங்கி இரங்கத்தக்க மிக்க துன்பமுள்ள நிலையினின்று நான் விடுதலை பெறவில்லையா? இந்த நன் றியை நான் மறவாதபடி என்ன செய்தேன்? நான் செய்ய வேண்டுவதைச் செய்தேனா? கடவுள் என்னை விடு வித்தார். நான் அவரைப் பெருமைப் படுத்தவில்லை யென் றால், நான் இவ்விடுதலையை அறிக்கை செய்து, உள்ளத் தில் இருத்தி, அவருக்கு வாழ்த்துரை கூறவில்லை; இதனி னும் பெரிய துன்பத்தினின்று அவர் என்னை விடுவிப்பா ரென்று நான் எண்ணுவதற்கு அருகதை என்ன?

இந்த நினைவுகள் என் நெஞ்சை வருத்த, உடனே நான் முழந்தாளில் நின்று, எனக்கு வந்த பிணியை நீக்கி நன்மை உறச் செய்ததற்காக வாழ்த்துக் கூறிக் கடவுளை வணங்கினேன்.

ஜூலை 4உ—காலையில் மறை நூலை எடுத்துப் புது ஏற் பாட்டின் தொடக்கத்தினின்று காலை மாலை இருபொழுதும் மனம் கொண்ட மட்டும் ஒழுங்காய்ப் படித்துவர வேண்டும் என்று முடிவு செய்து, அதிக வணக்கத்தோடும், அச்சத் துடனும் அன்புடனும் சிலநாள் வரையில் படித்துக் கொண்டு வந்தேன். அப்பொழுது நான் செய்த எல்லை மீறிய கொடுஞ் செயலைக் குறித்து என் நெஞ்சிற் பாரமான நினைவுகள் உண்டாயின. எனது கனவைப் பற்றிய நினைவு வந்தது. "இவ்வை எல்லாவற்றையும் கண்டும், நீ மனம் திரும்பவில்லை." என்னும் சொற்கள் என் உள்ளத்தில் அழுந்தி உறைத்தன. என் மனத்தைத் திருப்பவேண்டும் என்று மனமும் மொழியும் ஒத்துக் கடவுளை வருந்திக் கேட்டேன். கேட்ட அன்றே மறை நூல் படித்துக்கொண்

டிருந்தபோது, "மனம் திரும்புதலையும், பாவ மன்னிப்பையும் கொடுப்பதற்கு அவர் அரசனாகவும், பாதுகாப்பாளராகவும் உயர்த்தப்பட்டார்" என்னும் சொற்றொடர்கள் தெய்வச் செயலாய் வந்தன. அந்த இமைப் பொழுதிலேயே நான் புத்தகத்தை வைத்துவிட்டு, மகிழ்ச்சிப் பெருக்கு அடைந்து, வானத்தை நோக்கி, என் இரு கைகளையும் உயர்த்திக், கடவுள் திருவடிகள் எனது இதயத் தாமரையிற் பொருந்த், "இயேசுவே, தாவீதின் மைந்தனே! இயேசுவே, உயர்த்தப்பட்ட அரசரே! பாதுகாவலரே, மனம் திரும்புதலை எனக்கு ஈந்தருளும்!" என்று ஓலமிட்டேன்.

நான் பிறந்த நாள் முதல் இது வரையிற் செய்த வேண்டுகோள்களில் இதுதான் வேண்டுகோள் என்னும் பெயருக்கு ஏற்றது. என் நிலைமையை நினைத்து, அருள் மொழியின் சிறந்த பகுதியை என் மனம் தேறுவதற்கு ஆதாரமாய்க் கொண்டு, அதிற் கண்டபடி எனக்கு வேண்டுவது இன்னதென்றறிந்து, இந்த வேண்டுகோள் வழிபாட்டைச் செய்தேன். இது முதல் எனது விண்ணப்பம் கடவுள் திருச் செவிகளில் ஏறுமென்று நம்பி, என் மனம் தேறத் தொடங்கியது.

"என்னை நோக்கிக் கூப்பிடு, நான் உன்னை விடுவிப்பேன்" என்னும் மொழிகளுக்கு இது வரையிற் கண்ட பொருள் அன்றி வேறு பொருள் காணத் தொடங்கினேன். எனது சிறையிருப்பினின்று நீங்குவது தான் விடுதலை என்று எண்ணியிருந்தேன். மற்றப்படி விடுதலை என்பது என்ன என்று எனக்குப் புலப்படாமல் இருந்தது. நான் இத்தீவில் கட்டுப்பாடு இன்றி என் விருப்பப்படி உலாவித் திரிய இடம் பெற்றிருந்தும், இஃது எனக்குத் துன்பக் கட்டுப்பாடு உடைய சிறைச்சாலையாய் இருந்தது. விடுதலை என்பதற்கும் பொருள் இஃது அன்று; வேறு பொருள் உண்டென்று இப்பொழுது கண்டறிந்தேன். நான் செய்த கொடுஞ் செயல்களை நினைத்து அச்சங் கொண்டேன். என் தீவினைகள் அஞ்சத் தக்கவைகளாய்

எனக்குத் தோன்றின. என் மீது அழுந்தி, என் இன்பத்தை அழிக்கின்ற பாவச்சுமையை இறக்கி, என்னை விடுவிப்பது ஒன்றே எனக்கு வேண்டும் என்று முழு மனத்தோடு கடவுளை வேண்டினேன். தனியே இருப்பது எனக்குச் சுமையாய்த் தோன்றவில்லை. இந்த நிலையினின்று என்னை விடுவிக்க வேண்டும் என்று நான் விண்ணப்பம் செய்யவும் இல்லை. அதைக் குறித்து நினைக்கவும் இல்லை. என் பாவச்சுமைக்கு அஃது எவ்வளவு? நிகழ்ச்சிகளின் பொருளை உள்ளபடி காண்பவர்க்கு உடல் நோயிலிருந்து விடுதலை பெறுவதைக் காட்டிலும், பாவத்தினின்று விடுதலை பெறுவது மிகவும் மேலானதாய்த் தோன்றும் என்று இதைப் படிப்பவர்களுக்கு உணர்த்தும் பொருட்டு இந்தக் கருத்தைக் கூறினேன்.

இனி, இதைவிட்டு, நாட்குறிப்பை எழுதுகிறேன். முன்போல் இன்னும் கட்டுப்பட்டு, துன்பத்தோடே நாள் கழித்து வந்தும், எனது நிலையைக் குறித்து என் மனம் வருந்தாதொழிந்தது. மறை நூலை விட்டு விடாமல் ஒழுங்காய்ப் படித்ததனாலும், வேண்டுகோள் வணக்கம் செய்ததனாலும் நான் மேலான அறிவுக் கருத்துரைகளில் நினைவு வைத்து மிகுந்த மன மகிழ்ச்சியுற்றேன். இதற்கு முன் என் மனம் இன்பம் அறியாதிருந்தது. மேலும் உடல் வளமுற்று வன்மை பெருகவே எனக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் முயற்சியுடன் உழைத்துத் தேடித் தடுமாற்றம் இன்றி ஒழுங்காய் நாள் கழிக்க வகை செய்தேன்.

ஜூலை 4உ முதல் 14உ வரையில்—நோய்கண்டு எனது உடல் மிகவும் மெலிந்து ஒடுங்கியது பற்றி, நான் இந்த நாட்களில் முதன்மையாய்த் துப்பாக்கிகொண்டு, அவ்வப்போது சற்றுத் தொலைவு அங்கங்கே உலாவி வந்தேன். குளிர்காய்ச்சலுக்கு நான் செய்த மருத்துவம் புதிய முறை. இதை ஒரு வேளை எவரும் முன் பயன்படுத்தி இருக்கமாட்டார்கள். இதை எவராவது மருந்தாய்க் கொள்ளத்தகும் என்று நான் கூறமாட்டேன். இம்மருந்து காய்ச்சலை நீக்கியும், உடலை மெலிவித்தது. சிறிது காலம் வரையில் எனக்

குக் குருதி நரம்புகளிலும், கை கால் முதலிய உறுப்புக் களிலும் அடிக்கடி வலி கண்டது.

மேலும், முதன்மையாய்க் கடுங்காற்றடித்து விடாப் பெரு மழை பெய்யும்பொழுது, வெளியில் உலாவித்திரிவது உடல் நலத்திற்குக் கேடுபயக்கும் என்று பழக்கத்தினுல் நன்கு கண்டறிந்தேன். செப்டம்பர், அக்டோபர்த்திங்கள் களில் பொழியும் மழையிற் குற்றம் இல்லை. அப்பொழுது பெரும்பாலும் புயல் அடியாது. வேனிற்காலத்து மழை பெரும்பாலும் கடுங்காற்றுடன் கூடிவரும். அது மிகவும் துன்பம் தரத்தக்கது.

நான் இநதத துனபத தீவில் வந்தடைந்து பத்துத் திங்களுக்குச் சற்று அதிகம் சென்றது. எவ்விதத்திலும் இந்த நிலையினின்று எனக்கு மீட்சியில்லை என்று புலனு யிற்று. எனக்கு முன் இவ்விடத்தில் மனிதர் அடிவைத்த தில்லை என்று உறுதியாய் நம்பினேன். நான் குடியிருக்கு மிடத்தை என் மனத்திற்கு நிறைவு உண்டாகும் வரையில் அரணுக்கி முடித்ததனுல், தீவு எங்கும் உலாவிப்பார்த்து, அதில் என்ன என்ன விளை பொருள்கள் உண்டென்று அறிவதற்கு விரும்பினேன். விளைபொருள் பற்றிய செய்தி ஒன்றும் இதுவரையில் எனக்குத் தெரியவில்லை.

# ஏழாம் அதிகாரம்

### தீவின் வளத்தை உற்றுப்பார்த்து அறிதல்

நான் தீவில் உலாவி, அதன் வளத்தை விளக்கமாய்க் கண்டறியத் தொடங்கியது ஜூலைத்திங்கள் 15வ முன்பு ஓடத்தைச் செலுத்திக் கரைசேர்த்த நீரோடையிருக்கும் இடத்திற்கு முதலிற் சென்றேன். அதில் இரண்டு கல் தொலைவுமட்டும் நீர் ஓடியது. அப்பால் நீர்ப்பெருக்கு இல்லை. அஃது ஒரு சிற்றாறு. நீர் உவர்ப்புச் சிறிதும் இன்றி நன்றாயிருந்தது. வேனிற்கால மாதலாற் சில இடங்களில் நீர் தங்கியிருந்தது. அஃதன்றி ஓடுவதற்குப் போதிய நீர் இல்லை.

இவ் வாற்றங்கரையில் கண்ணுக்குக் குளிர்ச்சியான பல புல்வெளிகளைக் கண்டேன். பசும்புல் அடர்ந்த தரை ஒப்பமாய் இருந்தது. ஆறு பெருகும்பொழுது வெள்ளம் ஏறாத மேட்டு நிலத்தின் சார்பில் புகையிலைச்செடி திரளாய் வளர்ந்து பருத்துப் பசுமையாய் இருந்தது. நான் அறியாத வேறு பல பயிர் வகைகளையும் கண்டேன். அவற்றின் தன்மைகள் பயன் முதலியவற்றை நான் அறியேன்.

ஆப்பிரிக்காவிலும் மேற்கு இந்தியத் தீவுகளிலும் வாழும் இந்தியர்கள் மா அரைத்து ரொட்டி சுடுகிற கசாவா என்னுங் கிழங்கு இத்தீவில் இருக்குமென்று தேடியும் காணவில்லை. பெருந்தாழைகளைக் கண்டேன். அவற்றின் பயன் எனக்குத் தெரியவில்லை. கரும்பு தானே முளைத்து வளர்ந்திருந்தது. நிலத்தைப் பண்படுத்தி முறைப்படி பயிர் செய்யப்படாததால் அது நன்கு வளரவில்லை. இன்றைக்கு இவ்வளவு கண்டது போதும் என்று மன நிறைவு அடைந்து, வீட்டுக்குத் திரும்பி வரும்போது சில நினைவுகள் என் உள்ளத்தில் தோன்றின. நான் காணும் கனி வகை, பயிர் செடி வகைகளின் நன்மை தீமைகளையும்,

பயனையும் அறிந்து நிச்சயம் செய்வதற்குச் செய்யத்தகும் செயல் யாது என்று எண்ணத் தொடங்கினேன். செய்வது யாது என்றும் எனக்குத் தோன்றவில்லை. காரணம் இதுதான். பிரேஜில் நாட்டில் இருந்தபொழுது எதையும் கருத்தாய்ப் பார்த்து ஆராயாததனால் பயிர் செடி வகைகளைப்பற்றி ஒன்றும் அறியாது இருந்தேன். இடர் வரும் காலத்தில் எனக்கு உதவத்தக்க கனி, காய், கிழங்கு முதலியவற்றின் சிறப்புச் சிறிதும் அறியாதிருந்தேன்.

மறுநாள் ஜூலைத்திங்கள் 16உ—அந்த வழியாய்ப் பின்னும் சற்றுத் தொலைவு சென்றேன். அதற்கப்பால் ஆறும் இல்லை, புல்வெளியும் இல்லை. வரவரக் காடு அடர்ந்திருந்தது. அவ்விடத்திற் காய் கனிகளுக்குக் குறைவில்லை. நிலத்திற் கொம்மட்டிக் காய்களும், மரங்களில் திராட்சைப் பழக் குலைகளும் திரளாய் இருந்தன. திராட்சைக்கொடி மரங்களிற் படர்ந்து, பழக்குலைகள் கனிந்து வளமுள்ளவைகளாய் இருந்தன. வியப்பாய் என் கண்ணுக்கு எதிர்ப்பட்ட திராட்சைப் பழத்தைக் கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்தேன். நான் பார்பரிக் கரையில் இறங்கியிருந்தபொழுது, அங்கே அடிமைத் தொழில் செய்த ஆங்கிலேயர் சிலர் விலாப் புடைக்கக் கொடிமுந்திரிப் பழம் தின்று, வயிற்றுப் போக்கும் காய்ச்சலும் கண்டு, இறந்ததை நினைத்து, இப்பொழுது அளவோடு பறித்துத்தின்றேன். அன்றியும், அவைகளைப் பறித்து, வெயிலில் உலர்த்தி, வற்றலாக்கி வைத்திருந்தால், கொடி முந்திரிப் பழக்காலம் கழிந்த பின், அவைகள் எனக்கு உதவும் என்று அறிந்தேன். கொடி முந்திரிப் பழவற்றல் நாவிற்கு இனிமையும், உடல் நலத்திற்கு ஏற்றதும் ஆகும் என்று நான் அப்பொழுது எண்ணியவாறே வரவர எனக்குப் பழக்கத்தில் நன்மை அளித்தது.

மாலைப் பொழுதில் வீட்டுக்குப் போகாமல், அன்றிரவு அவ்விடத்திலேயே தங்கினேன். அதற்கு முன் இரவு நேரத்தில் நான் வீட்டைவிட்டு நீங்கி வெளியிற்படுத்ததில்லை. இருண்ட பின் படுத்துத் தூங்குவதற்கு வகை

என்ன என்று நினைத்து, ஒரு மரத்தில் ஏறிப்படுத்திருந்து, நன்றாய்த் தூங்கினேன். மறுநாட் காலையில் எழுந்து இறங்கிப் பள்ளத்தரை வழியாய் ஏறத்தாழ நான்கு கல் தொலைவு வரையிலும் நேர் வடக்கு முகமாய்ச் சென்றேன். எனக்கு வடக்கு, தெற்கு இரு திசையிலும் மலைத்தொடர் இருந்தது.

நான்கு கல் தொலைவு சென்ற பின், ஒரு திறந்த வெளியிற் சேர்ந்தேன். அங்கிருந்து மேற்கே போகப் போக நிலம் சரிவாய் இருந்தது. எனக்கு அண்மையிலுள்ள மலைச்சாரலிற் சிற்றாறு ஒன்று தோன்றி, நேர் கிழக்காய் ஓடிற்று. அந்த நிலப்பகுதி செழுமையும் பசுமையுமான செடி கொடி வகைகள் திரளாய் உள்ள பூங்காவுக்கு ஒப்பாகச் சிறந்து தோன்றியது.

இவ்வின்பமான பள்ளத்தரையின் பக்கத்தில் இறங்கிக் கண்ணும் மனமும் குளிர நான்கு திசையிலும் பார்த்து இவையெல்லாம் என் சொத்து, இந்நாட்டிற்கு நானே வேந்தன் ஆவேன். இதை என்னிடத்தினின்று எவரும் பிடுங்கிக்கொள்ள முடியாது. முழு உரிமையும் என்னுடையதேயாகும். இதற்கு முறி எழுதக் கூடுமானால், ஆங்கிலச் செல்வர்களின் உரிமைபெற்ற சிற்றூர்களைப்போல, இஃது என்றும் என் மரபினரைவிட்டு நீங்காதிருக்கும் என நினைத்துக் களிகூர்ந்தேன். வேறு துன்ப நினைவுகளும ஒரு பக்கத்தில் உண்டாயின. கோக்கோ, கிச்சிலி, எலுமிச்சை, நாரத்தை முதலிய மரங்களும் செடிகளும் மிகுதியாய் இருந்தன. கனி அதிகம் இல்லை. எலுமிச்சம் பிஞ்சுகளைக் கண்டு பறித்துத் தின்றேன். அவை சுவையும் இன்பமும் கொடுக்கத்தக்கவை. பின்பு தண்ணீரில் சாற்றைப் பிழிந்து குடித்தேன். இந்தச் சுவை நீர் உடல் நலத்திற்கும், வெப்ப நீக்கத்திற்கும், உடற் செழுமைக்கும், ஏற்ற மருந்து. மழைக் காலம் வருமுன் கொடி முந்திரிப் பழம், எலுமிச்சங்காய், நாரத்தங்காய் முதலியவைகளைப் பறித்துக் கொண்டுபோய். வீட்டிற் பாதுகாப்பாய் வைத்திருந்தால்,

அவை எனக்கு உதவும் என்றெண்ணிப் பறிக்கத் தொடங்கினேன்.

ஓரிடத்தில் கொடி முந்திரிக் குலைகளைப் பறித்துப் பெரிய குவியலாய்ப் போட்டு வைத்தேன். மற்றோரிடத்தி லும் சிறிய அளவில் குவித்துவைத்தேன். வேறோரிடத்தில் எலுமிச்சங்காயும், நாரத்தங்காயும் பறித்துத் திரளாய்ச் சேர்த்து வைத்தேன். பின்பு வகைக்குச் சிறிது அளவு எடுத்துக்கொண்டு வீட்டுக்குப்போய், ஒரு கூடையாவது, பையாவது, மற்றேதும் கொள்கலமாவது, கொண்டுவந்து, மற்றவைகளையும் எடுத்துக்கொண்டு போக முடிவு செய தேன்.

மேற்கூறியவாறு இந்தப் பயணத்தில் மூன்று நாட் கழிந்த பின் வீடு சேர்ந்தேன். வீடென்பது கூடாரமும், குகையும். வீட்டிற்போய்ச் சேருமுன் கொடிமுந்திரிப் பழங் கள் கெட்டுப்போயின. அதிகச்சாறு, ஏறி வளமாய் இருந் ததனல், அவை வெடித்துச் சாறுவழிந்து, ஒன்றுக்கும் உதவாமறபோயின. எலுமிச்சம்பழம் பழுதாகவில்லை; கொண்டுவர முடிந்தது சிறிது அளவுதான்.

மறுநாள் 19உ—பறித்து வைத்த பழங்களை எடுத்து வரும் பொருட்டுச் சிறிய பை இரண்டு கொண்டுபோனேன். போனபொழுது, நான் குவித்துவைத்த வளமான சிறந்த கொடிமுந்திரிப் பழங்கள் எங்கும் சிதறுண்டு, காலால் மிதி பட்டு, அலங்கோலமாய் இருந்தன. திரளான பழங்களை ஏதோ உண்டுவிட்டுச் சென்றிருந்தது. இந்த மாறுபாட் டைக் கண்டு, அண்மையில் காட்டு விலங்குகள் உண்டென் றும், அவைகள் தாம் இப்படிச் செய்தன வென்றும், நான் முடிவாகக் கருதினேன். அவ்விலங்குகளை யான் அறியேன்.

இனிக் கொடிமுந்திரிப் பழங்களை ஓரிடத்தில் குவித்து வைத்தால், காட்டு விலங்குகள் அவற்றை உண்டு அழிவு செய்யுமென்றும், பையிலிட்டுச் சுமந்துகொண்டு போனல், அடிப்படையிலுள்ளவைகளெல்லாம் தகர்ந்து, சாறு வடிந்து பழுதாய்ப்போகுமென்றும் கண்கூடாய்க் கண்டு,

என் மனங்கொண்டமட்டும் குலைகளைப்பறித்து, மரங்களின் வெளிக்கிளைகளில் தொங்கவிட்டேன். வெயிலில் உலர்ந்து வற்றற் பதத்திற்கு வருமாறு செய்தேன். எலுமிச்சம் பழங்களையும், நாரத்தம் பழங்களையும் நான் சுமக்கத்தக்க அளவு பையிலிட்டுக் கொண்டுபோனேன்.

வீடு சேர்ந்த பின் அப்பள்ளத்தரையின் செழுமையையும், இடவளத்தையும், ஆற்றுக்கப்புறம் புயலினால் கேடு உண்டாகாதிருப்பதையும், காடு நெருங்கியிருப்பதையும், நினைத்துக் களிகூர்ந்து, நான் வீடு கட்டியிருக்கும் இடம் சிறிதாயினும் உதவக்கூடியது அல்ல என்று கண்டு, இன்பமும் செழுமையுமான பள்ளத்தரையில் நான் இப்பொழுது இருக்குமிடத்திற்கு ஒப்பான ஒதுக்கிடம்பார்த்து இக்கூடாரத்தைப் பெயர்த்து அவ்விடத்திற் கொண்டு போய் அடித்துத் தங்குவது சிறப்பு என என் உள்ளம் நினைத்தது.

மேற்கூறிய பள்ளத்தரையின் அழகையும் செழுமையையுங் கண்டு மயங்கியதனால், இந்த நினைவு சிறிது நாள் வரையில் என் உள்ளத்தைவிட்டு நீங்கவில்லை. இதனைப் பற்றி நீண்ட நேரம் நினைத்துப் பார்த்த அளவில் எனது கருத்துத் தவறானதென்று கண்டேன். என் எண்ணங்கள் வேறு வழிச் சென்றன. நான் இப்பொழுது வாழும் இடம் கடற்கரையை அடுத்துள்ளது. இங்கே எனக்கு எவ்வாறாயினும் எதிர்பாராத நன்மை விளையவும் கூடும். என்னைப் போலும் கெடுநிலை அடைந்தோர் எவராவது துன்பம் அடைந்து, இவ்விடம் சேர்ந்து, எனக்குத் துணைவர் ஆயினும் ஆவர். இவ்வித நன்மைகள் ஏதாயினும் உண்டாகலாம் என்று எண்ணுவதற்கு இடமில்லாதிருந்தாலும், இவ்விடத்தை விட்டு நீங்கித் தீவின் நடுவில் குன்றுகளுக்கிடையில், காடு அடர்ந்த இடத்திற்போனால் நான் சிறை மீளுவதற்கு வழி என்ன? எப்பொழுதும் நான் இந்தச் சிறையிலிருந்து வருந்தவேண்டுமே. அதனால், என் கருத்துத் தவறானது. எவ்விதத்திலும் நான் இவ்விடத்தை விட்டுப் பெயரக்கூடாதென்று முடிவு செய்தேன்.

எப்படியும், பள்ளத்தரையின் அழகைக் கண்டு மயங்கியதனால், ஜூலைத்திங்கள் முடியுமளவும் பெரும்பாலும் அவ்விடத்திலேயே சுற்றித்திரிந்தேன். மலை முழையையும், கூடாரத்தையும் விட்டு வேறிடத்திற் குடியிருப்பதில்லை என்று உறுதி செய்திருந்தும், சிறு வீடு ஒன்று கட்டிச் சற்றுத் தொலைவில் அதைச் சூழ இரண்டு நிரைக்கொம்புகள் நாட்டி, இரட்டை வேலி அடைத்து, அவற்றின் இடையில் மரக்கிளைகளை அடர்த்தியாய் வைத்துப் பொதிந்து பலப்படுத்தினேன். சில வேளை மலை வீட்டுக்குப் போகாமல், தொடர்ந்து இரண்டு மூன்று இரவு இவ்விடத்திற்றனே அச்சமின்றித் தங்கியிருந்ததுமுண்டு. ஏணிவைத்து வேலி ஏறி உட்செல்வதும் வெளிவருவதுமாய் இருந்தேன். ஆகவே, எனக்குக் கடற்கரை சார்ந்தவிடத்தில் இருந்த வீடு ஒன்றுடன் நாட்டுப்புறத்திலும் இந்தச் சிறு வீடு இருந்தது. இவ்வேலை முடிய ஆகஸ்ட்டுத் திங்கள் பிறந்தது.

வேலி அடைத்து முடித்து, நான் மெய்வருந்தி உழைத்ததனால் பெற்ற இன்பத்தை மேற்கொள்ளத் தொடங்கியதும், மழைக்காலம் வந்தது. அதனால் முன் இருந்த வீட்டுக்குப்போய், அதைவிட்டு நீங்காதிருந்தேன். பள்ளத்தரையில் அமைத்த வீடும், இரட்டுத் துணியால் மூடிய கூடாரமேயானாலும், காற்று மழைக்கு அச்சமற்றிருப்பதற்கு அங்கே மலைச்சாரல் இல்லை. பெருமழை வரும்பொழுது, புகலடைவதற்குப் புறக்கடையில் முழையும் இல்லை.

மேற்கூறியபடி ஆகஸ்ட்டுத்திங்கள் தொடக்கத்தில் நாட்டுப்புறத்திற் கட்டிய வீட்டு வேலை முடித்து, அதில் மகிழ்ச்சியோடு உறையத் தொடங்கினேன். மரக்கிளைகளில் எடுத்துக் கட்டிவைத்த கொடிமுந்திரிப் பழங்கள் ஆகஸ்ட்டு மீ அளவில் வெயிலில் நன்றாய் உலர்ந்து மிக உயர்ந்த வற்றல் ஆயின. ஆதலால் நான் அவைகளை அவிழ்த்து இறக்கிவைத்தேன். சற்று விழிப்பின்றி இருந்திருப்பேனானால், அவைகள் மழையில் நனைந்து ஒன்றுக்கும் உதவாமற் போயிருக்கும். மழைக்காலத்திற்கு நான் சேர்த்துவைத்த

உணவுப் பொருள்களுள் முதன்மையானது இவ்வற்றல் தானே. உலர்த்திய கொடிமுந்திரிப் பழம் பெருங்குலை இரு நூற்றுக்கு மேலும் உண்டு. நான் அவைகளை இறக்கி, அவற்றிற் பெரும் பகுதியை முழை வீட்டிற்குள் கொண்டு போய்ச் சேர்த்தவுடன் மழை பெய்யத் தொடங்கிற்று. அன்று தொடங்கி (ஆகஸ்ட்டு 14உ) அக்டோபர்த்திங்கள் 15உ வரையில், மிகுதியும் குறைவுமாக ஒவ்வொருநாளும் மழை பெய்தது. முழையினின்று வெளியிற் புறப்பட முடியாதபடி நான்கைந்து நாள் வரையில் அடைத்துப் பெய்ததும் உண்டு.

இம் மழைக்காலத்தில் என் குடும்பத்தின் வளர்ச்சியைக் கண்டு வியந்தேன். நான் வளர்த்த பூனைகளில் ஒன்று என்னை விட்டு ஓடிக்காணுமற் போனமைபற்றி, அஃது இறந்து போயிற்று என்று எண்ணி, மிகவும் கவலையுற்றுக் கொண்டிருந்தேன். அதைப்பற்றி எனக்குச் செய்தி ஒன்றும் கிடைக்கவில்லை. இப்படியிருக்கும்போது, ஆகஸ்ட்டுத் திங்கள் முடிவில் அந்தப்பூனை மூன்று குட்டிகளுடன் என் வீட்டுக்கு வந்து சேர்ந்ததைக் கண்டு, கவலையை மறந்து மிகுந்த வியப்புக்கொண்டேன். நான் வளர்த்த பூனை இரண்டும் சீமைப் பெண் பூனைகள். ஆண் பூனை இல்லை. தீவில் பூனைகள் இருக்குமாறுல், அவை சீமைச் சாதியாய் இருக்கமாட்டா. காட்டுப் பூனைகளேயிருக்கும். முன்பு ஒருநாள் காட்டுப் பூனை ஒன்றைக்கண்டு துப்பாக்கியினுற் சுட்டுக்கொன்றேன் அல்லவா? இப்பொழுது வந்த குட்டிகள் தாயைப்போல வீட்டுப் களின் சாயலாய் இருந்தன. அதனுல், எனது பூனை இனக்குட்டி போட்ட வகை எவ்வாறு என்றெண்ணிப் பின்னும் வியப்பு அடைந்தேன். இது நிற்க. இந்த மூன்று பூனைகள் நாளடைவில் மிகுதிப்பட்டு என் வீடெங்கும் பூனைமயமாய் இருந்தது. பின்பு இப்பூனைகள் எனக்கு வருவித்த துன்பங்கள் பொறுக்க முடியாமற் போயின. அதனுல் எலி, புழு, காட்டு விலங்கு முதலியவைகளைக் கொல்வது போல, நான் அவைகளிற் பலவற்றை அடித்துக் கொன்றேன். பலவற்றை வெருட்டித் துரத்திவிட்டேன்.

ஆகஸ்ட்டுத் திங்கள் 14உ—தொடங்கி, 24உ— வரையில் அடைமழை பெய்ததனால் மழையில் நனைந்தால் காய்ச்சல் உண்டாகுமென்று நான் எங்கும் வெளியிற் புறப்படாமல் வீட்டினுள் இருந்து, உணவிற்குச் சற்றுத் துன்பப்பட்டேன். பசி வருத்தத்தால் மழையைப் பாராட்டாமல் இரண்டு முறை வெளியிற் சென்று, ஒரு நாள் ஒரு வெள்ளாடு சுட்டுக் கொண்டு வந்தேன்.

ஆகஸ்ட்டுத்திங்கள் 26உ—மிகப் பெரிய ஆமை ஒன்று அகப்பட்டது. அதன் இறைச்சி எனக்குப் பெரிய விருந்துக்கு ஒப்பாய் இருந்தது. பகலும் இரவும் நான் உண்ட உணவின் வகை யாவை? காலை உணவு கொடி முந்திரிப் பழவற்றல் ஒரு குலை; பகல் உணவு ஆட்டு இறைச்சியாவது, ஆமை இறைச்சியாவது அதை வறுத்தாயினும் முதிர வேகவைத்தாயினும் பாகம் செய்தற்குப் பாண்டம் இல்லாததனால், சுட்டுத் தின்றேன். இரவு உணவு ஆமை முட்டை இரண்டு மூன்று.

அடைமழை பிடித்து ஓய்கிற வரையில் நான் எனது புகலிடத்தில் ஒதுங்கியிருந்து, நாள்தோறும் இரண்டு மூன்று மணிநேரம் வரையில் முழையைப் பின்னும் அகழ்ந்து பெரிதாக்கினேன். ஒரே பக்கத்தைச் சார்ந்து அகழ்ந்து கொண்டு போனதனால், குன்றின் மறுமுனை விரைவில் வெளிப்பட்டது. அது வேலிக்கு வெளிப்புறத்திலிருந்தது. ஆதலால் மதிலேறுமற் குகைக்குள்ளே போகவும், அங்கிருந்து வெளியிற் செல்லவும் இந்தத் துளை புறக்கடை வாயிலாகப் பயன்பட்டது. முன்பு என் வீட்டினுள் எவரும் வராதபடி அரணான மதிற் காவல் வைத்திருந்தேன். இப்பொழுது மதில் ஏறுமல் மேற்சொல்லிய புறக்கடை வாயில் வழியாய் எவராவது உட்செல்லக்கூடும் என்று எண்ணிச், சற்று மனம் தடுமாறினேன்; ஆயினும் வெள்ளாட்டினும் பெரிய விலங்கு ஒன்றையும் இத் தீவில் நான் கண்டிராததனால், காட்டு விலங்குகளால் தீங்கு உண்டாகும் என்று அஞ்சிப் பதைக்க வேண்டியதில்லை என்று எண்ணினேன்.

செப்டம்பர்த் திங்கள் 30உ—நான் இத்தீவில் இறங்கிய தியநாள் தொடங்கி நாளது வரையிற் சரியாய் ஒரு ஆண்டு ஆயிற்று. நாட்குறிப்புத் தூணில் இட்டிருந்த நாள் புள்ளிக் கணக்கைக் கூட்டிப் பார்த்தபொழுது குறையாமல் முந்நூற்றறுபத்தைந்து நாள் கணக்கு ஆயிற்று. இன்று பகல் முழுதும் உண்ணாமலிருந்து, கடவுள் நினைப்போடு, மிகுந்த மனத்தாழ்மையுடன் எனது குற்றங்குறைகளைக் கடவுளிடம் தெரிவித்து, நான் செய்த பாவத்திற்காக அவர் எனக்கு விதித்த தண்டனைகள் முறையானவை என்று தெரிவித்து, இயேசு கிறித்துவின் வழியாக என்மீது இரங்கவேண்டினேன். காலைமுதல் பன்னிரண்டுமணி வரையில் ஒன்றும் உண்ணாதிருந்து, இருண்டபின், ரொட்டித் துண்டு ஒன்றும், ஒரு குலை கொடி முந்திரிப் பழமும் தின்று பசியாறிப் படுத்துத் தூங்கினேன். இன்று பகலில் நான் எந்த வேலையும் செய்யவில்லை.

இதுவரையில் நான் ஓய்வு நாளைத் தூய்மையாய் நடத்தி அறியேன். அதற்குக் காரணம் இது:—தொடக்கத்தில் எனக்குச் சமய உணர்வு சிறிதும் இல்லை. ஆதலால், நீண்ட புள்ளியிட்டு ஓய்வு நாளுக்கும், மற்ற நாட்களுக்கும் வேறுபாடு கண்டு பிரித்தறியும் வழக்கத்தை விட்டுவிட்டேன். ஆகவே புள்ளிகளைக் கொண்டு, நாட்பெயர் அறிய முடியாமற் போயிற்று. இப்பொழுது புள்ளிக் கணக்கைக் கூட்டித் தொகை கண்டு நான் இந்தத் தீவிற்கு வந்து ஓர் ஆண்டு ஆயிற்று என்று அறிந்ததனால், இந்த ஆண்டை ஐம்பத்திரண்டு கிழமைகளாகப் பிரித்துத், தொடக்கம் முதல் நாள் புள்ளிகளை எண்ணி, ஏழாம் இடத்துப் புள்ளிகள் எல்லாவற்றையும் ஓய்வு நாள் என்று வைத்துக்கொண்டேன். கணக்கு முடிவில் இரண்டொரு நாட்கள் பிழையுற்றன.

பின்னும் சிலநாட் சென்றபின் எழுதும் மை குறைந்து வருவது கண்டு, முன்போல நாட்குறிப்பை விரிவாய் எழுதாமல், இன்றியமையாத செய்திகளை மட்டும் சுருக்கி எழுதிக் கொண்டு வந்தேன்.

மாரி காலம் இது, கோடைகாலம் இது என்று இப் பொழுது நான் வகை கண்டு அறியவும், அவற்றுக்கு வேண்டும் முன்னேற்பாடுகளைச் சரியான வேளையில் விழிப் போடு இருந்து செய்யவும் பொறுப்புள்ளவன் ஆனேன். "பட்டால் அறிவன் சண்டாளன், மழை பெய்தால் அறிவன் வேளாளன்" என்பது போல நான் அறிந்ததெல்லாம் பட்ட துன்பங்களின் மூலமாய் அறிந்தது ஒழிய வேறு வகையா லன்று. எனக்கு மிகுந்த மனத்தளர்ச்சி உண்டாதற்கு ஏற்றதாய் முடிந்த ஆராய்ச்சி ஒன்றை இவ்விடத்தில் சுருக்கிக் கூறுகின்றேன். வாற்கோதுமையும் நெல்லும் புதுமையாய் முளைத்து வளர்ந்து விளைந்ததைக் கண்டதும், அவை வலிய முளைத்தன என்று நான் எண்ணியதும், அவற்றின் கதிர்களை விதைக்கு வேண்டுமென்று வைத் திருந்ததும் ஆகிய வரலாறுகளை முன் ஓரிடத்தில் கூறி னேன் அன்றோ? முளைத்து வளர்ந்த வாற்கோதுமை மூடு இருபது; நெல் மூடு முப்பது. கதிரவன் தென்றிசையிற் சென்றதனால், மழைக்காலம் நீங்கியபின் விதைக்கும் காலம் ஆகும் என்று நினைத்தேன்.

இவ்வாறு நினைத்துப், பாரையினால் ஒரு துண்டு நிலத்தைக் கூடிய வரையில் அகழ்ந்து புரட்டி ஒப்பமாக்கி, இரண்டு தளைகளாய்ப் பிரித்து, வரம்பு கட்டியபின், விதையை விதைத்தேன். விதைக்கும்பொழுது விதைப் புக்கால நிலை ஐயந்திரிபு அற விளங்காததனால் விதை முழு தையும் விதைக்கக்கூடாது என்று எண்ணினேன். விதைத்த விதை போக எஞ்சியதை வைத்திருந்தேன். விதைத்தது இரண்டு பங்கு; எஞ்சியது ஒரு பங்கு. எஞ்சிய விதை, வகைக்கு ஒரு கை நிறையும் அளவிற்கு உண்டு

ஆராய்ந்து இவ்வாறு செய்தது நன்மையே என்று நாளடைவிற் கண்டு, மனம் தேறினேன். விதைத்த மணி ஒன்றாவது முளைக்கவில்லை. வேனிற் காலத்தில் மழை இல்லாததனால், உலர்ந்த நிலத்தில் வேர் பற்றாதிருந்தது மீண்டும் மழைக்காலந் தொடங்கியவுடன், அப்பொழுது விதைத்தது மணிபோல முளைத்துப் பயிர் ஏறி வளர்ந்தது.

முதலில் விதைத்த மணிகள் முளைக்காதது கண்டு, வேனிற் காலமாதலால், அது முளைக்கவில்லை என்றெண்ணினேன். தீவின் நடுவிற் கட்டிய புதுவீட்டுக்கு அண்மையில் ஈரநிலம் பார்த்து, அதைப் பாரையாற் கிண்டி வசந்த விஷுவுக்குச் சற்று முன்பு பெப்ருவரித் திங்களில் எஞ்சிய காலத்தை ஆராய்ந்து உண்மை காண விதைத்தேன். அடுத்த மார்ச்சு ஏப்பிரில் இரண்டு திங்களும் மழை பொழியும் காலம் ஆதலால் விதைத்த விதைகள் தன் நிலம்போல முளைத்துச், செழித்து வளர்ந்து நல்விளைச்சல் கண்டது. வைத்திருந்த விதைமணிகள் சிறிது அளவே யாதலாலும், அதிலும் சிறிது அளவைப் பின்னும் பிடித்து வைத்திருந்ததனாலும், விளைந்தது வகைக்கு அரைமரக்காலுக்கு அதிகம் இல்லை.

இந்த ஆராய்ச்சியினால் வேளாண்மைத் தொழில் வளம் அறிந்த திறமையாளன் ஆனேன். வளமான விதைப்புக் காலம் இன்னது என்றும், ஆண்டு ஒன்றில் விதைக்கும் காலம் இரண்டு, அறுக்கும் காலம் இரண்டு என்றும் திட்டமாய் அறிந்தேன்;

இந்தப் பயிர் வளரும்பொழுது, நான்கண்டறிந்த ஒரு எளிய கருத்து எனக்குப் பின்பு பயன்பட்டது. நவம்பர்த் திங்களில் மழைவிட்டு மாரிகாலம் ஒழிந்தவுடன் நாட்டுப் புறத்தில் எனது உறைவிடத்திற்குச் சென்றேன். இரண்டு மூன்று திங்கள் வரையில் நான் போய் அவ்விடத்தைப் பார்க்காதிருந்தும், முன்பு நான் கண்டபடியாவும் பழுதின்றி அணி குலையாதிருந்தன. வட்ட வடிவமாய் நான் அடைத்த இரண்டடுக்கு வேலி உரத்து உருக்குலையாதிருந்தது. அன்றியும், அண்மையில் நின்ற மரங்களில் வெட்டி நட்ட கொம்புகளெல்லாம் தளிர்த்துத் தழைத்துக் கிளையோடியிருந்தன. மொட்டையாய்க் கிளை தறிக்கப்பட்ட அலரிச் செடி ஓர் ஆண்டில் தழைத்துக் கிளைவிட்டு அடர்ந்திருக்கும் அளவிற்குப் படர்ந்து அடர்ந்திருந்தது. மேற்கூறிய கொம்புகள் தறிக்கப்பட்ட மரத்தின் பெயர் எனக்குத் தெரியாது. அவை ஓங்கி வளர்ந்து செழித்திருக்கக்கண்டு,

வியப்பும் களிப்பும் அடைந்தேன். அவற்றின் பக்கக் கிளைகளை நறுக்கி, ஒன்றுக் கொன்று ஒப்பாய் ஓங்கி வளர விட்டேன். மூன்று ஆண்டுகளுக்குள் வளர்ந்து செழித்திருந்த அக்கொம்புகளின் அழகு பார்த்த எனக்கு அன்றி, மற்றவர்களுக்குச் சொல்லித் தெரிவிக்கத் தக்கதன்று. வட்டவடிவமான வேலியின் விட்டம் ஏறத்தாழ எழுபத்தைந்து அடி நீளமாய் இருந்தும் கிளையோடிப் படர்ந்து பெருமரங்களான கொம்புகள் கூடாரம்போல வேலியின் உள்ளிடத்தைக் கிளைகளால் மூடி நிழலிட்டு இருந்தன. வேனிற்காலம் முழுதும் வெயிலுக்கு ஒதுங்குவதற்கு வேலியின் உள்ளிடம் மிக வாய்ப்பாய் இருந்தது.

இதைக்கண்டு, பின்னும் சில கொம்புகள் வெட்டி, கடற்கரையடுத்த எனது வீட்டைச் சூழ்ந்த மதிலின் புறத்தில் இருபத்துநான்கடித் தொலைவில் அரை வட்டமாக, இவ்வேலிக்கு ஒப்பான இரண்டு அடுக்கு வேலி அடைத்தேன். அவ்வேலிக் கொம்புகள் தடையின்றி வளர்ந்து கிளை நீண்டு என் வீட்டுக்குச் சிறந்த ஒதுக்காய் இருந்ததும் அன்றி, பின்பு துணைக்காவல் அரணும் ஆயின. இதைக் குறித்து ஒழுங்காகப் பின் ஓரிடத்திற் சொல்வேன்.

ஐரோப்பாவில், இருப்பவர்களுக்குப் பெரும்பாலும் ஓராண்டிற் கோடைகாலம், மாரிகாலம் எனப் பருவம் இரண்டு. நான் இருந்த இத்தீவில் அப்படியன்று;மாரிகாலம் இரண்டு, கோடைகாலம் இரண்டு என நான்கு பருவம் உண்டென்று அறிந்தேன். அவற்றின் வகைகள் வருமாறு:—

(1) பெப்ருவரித் திங்களிற் பிற்பாதி, மார்ச்சு, ஏப்பிரல் முற்பாதி — மழைக்காலம்: கதிரவன் நிற்குமிடம் கிட்டத்தட்ட நில நடுக்கோடு.

(2) ஏப்பிரல் பிற்பாதி, மே, சூன், சூலை, ஆகஸ்ட்டு முற்பாதி — வேனிற்காலம்: கதிரவன் நிற்கும் இடம் நிலநடுக் கோட்டுக்கு வடக்கு.

(3) ஆகஸ்ட்டு பிற்பாதி, செப்டம்பர், அக்டோபர் முற்பாதி — மழைக்காலம்: கதிரவன் நடுக்கோட்டுக்கு மீளுதல்.

| | |
|---|---|
| (4) அக்டோபர் பிற்பாதி, நவம்பர், டிசம்பர், சனவரி பெப்ருவரி முற்பாதி | வேனிற்காலம்: கதிரவன் நிலை நிலநடுக் கோட்டுக்குத் தெற்கு. |

காற்றடிக்கும் கால அளவின்படி மழைக்காலம் நீடிப்பதும் குறுகுவதும் உண்டு. வழக்கத்தில் நான் கண்டறிந்தது மேற்கூறிய முறையே. மழையில் நனைந்து திரிவதனால் விளையும் துன்பத்தைப் பழகியறிந்தபின், மழைக்காலத்தில் வெளியிற் செல்லவேண்டிய வேலை இல்லாதபடி எனக்கு வேண்டும் உணவுப் பொருள்களை முன்னரே ஆராய்ந்தறிந்து சேர்த்து வைத்துக் கூடிய வரையில் வீட்டைவிட்டு வெளியிற் செல்லாதிருந்தேன். மழைக்கு ஒதுங்கியிருக்கும் இக்காலத்தில் அடுத்து முயன்று வருந்தி உழைப்பதனால் அன்றி வேறு வழிகளால் தேடுதற்கரிய இன்றியமையாத பல பொருள்களையும் கைப்பழக்கத்திற்கு வேண்டிய சிறு பொருள்களையும் செய்தேன். வீட்டில் அடங்கி யிருக்கும்பொழுது, இவ்வேலை என் மனத்திற்கு ஏற்ற வேலையாய் இருந்தது. முதலில் ஒரு கூடை பின்னுவதற்குப் பலவாறு முயற்சிகள் செய்தேன். என் கைக்கு எட்டிய வளார்கள் எல்லாம் எளிதில் ஒடியத் தக்க நொய்யவைகளாய் இருந்தன. அதனால் அவை பயன்படவில்லை. நான் சிறுவனாய் இருந்தபொழுது, எங்கள் ஊரிற் கூடை பின்னி விற்று வாழும் ஒருவன் வீட்டுக்குப் போய், ஏனைச் சிறுவரைப் போலவே நானும் அவன் வேலை செய்வதைக் கருத்தாய்ப் பார்த்து, அவனுக்குதவப் பெரிதும் விரும்பி, இடையிடையே அவனுக்கு அவ்வேலையிற் கையுதவியும் செய்து, கூடை பின்னப் பயின்றிருந்தது எனக்கு மிக உதவியாய் இருந்தது. துவளத்தக்க வளார் இல்லாத குறை ஒழிய இப்பொழுது கூடை பின்னுவதற்கு வேறு தடை இல்லை. நான் கொம்பு வெட்டின மரத்தின் வளார் இங்கிலாந்திற் கூடை பின்னும் அலரிச் செடிவகையின் வளாரைப்போல், ஒடியாமல் எளிதில் வளையும் தன்மையுள்ளதாய் இருக்குமென்று நினைத்துத் தேர்ந்து பார்க்கத் தொடங்கினேன்.

மறுநாள் எனது நாட்டுப்புற வீட்டுக்குப் போய்ச் சிறு வளார் வெட்டி, வளைத்துப் பின்னிப் பார்த்த அளவில், அவை எனது செயலுக்கு உதவுமென்று கண்டு களிப்படைந்து, கடற்கரை அடுத்த கூடாரத்திற்குத் திரும்பினேன். பிறகு ஒருநாள் கைக்கோடரி கொண்டுபோய்த் திரளாய் இருந்த வளாரில் எனக்கு வேண்டுமட்டும் வெட்டி, மதிலுக்குள் உலரப்போட்டு, அவை பின்னுவதற்குப் பதமாய் உலர்ந்தபின் அவைகளை எனது குகைக்கு எடுத்துக்கொண்டுபோய் வைத்திருந்தேன். மறுதடவை மழைக்காலம் வந்தபொழுது, மண் எடுத்துக்கொண்டு போவதற்கும், மற்றும் ஏதாயினும் வைப்பதற்கும், வைத்து எடுத்துக்கொண்டு போவதற்கும் வளமான கூடைகள் பல முடைந்தேன். முடைந்த கூடைகளின் வேலைப்பாடு நன்றாய் இருக்கவில்லை; ஆயினும் என் செயலுக்கு அவைகள் முழுவதும் உதவின. அதன்மேல் பழங்கூடைகள் தேயத் தேய, வேறு புதுக்கூடைகளை வேளைக்கேற்ப ஓய்வு நேர்ந்த போது பின்னினேன். கூடைகள் குறைவின்றி நிறைய இருந்தன. முதன்மையாய்க் கூலம் அதிகம் விளைந்தால் அதை வைத்துக் கொள்வதற்குக் கோணிப்பை உதவாதென்று நினைத்து வன்மையுள்ள பெருங்கூடையில் பின்னி வைத்தேன்.

வளமான வளார் இன்னதென்று கண்டு, பக்குவமாய்க் கூடை பின்னப் பயின்று, கூடை இல்லாத குறையை நீக்க நெடுநாள் சென்றது. இக்குறை தீர்ந்தபின் மேலும் இரண்டு குறைகள் இருந்தன. அவை நீர் நிறைத்து வைக்கும் கலம் இல்லாத குறையும், சுங்கான் இல்லாத குறையும்தாம். சிறிய பீப்பாய்கள் இரண்டும், குறைந்த அளவுள்ள சில பீங்கான் புட்டிகளும், தண்ணீர், சாராயம் முதலியன வைத்திருக்கும் உறையிட்ட சில நாற்பட்டைப் புட்டிகளும் தவிர, நீர்ப்பொருள்கள் வைப்பதற்கு வேறு பாண்டங்கள் என்னிடத்தில் இல்லை. உணவு சமைப்பதற்கு வகையான பாண்டம் ஒன்றும் கிடையாது. கப்பலில் இருந்து எடுத்துக்கொண்டு வந்த பெருங் கொப்பரை

ஒன்று இருந்தது. அது குழம்பு வைக்கவாயினும், இறைச்சி சமைக்கவாயினும், கைக்கு அடக்கமான பாண்டம் அன்று. இது நிற்க, புகையிலை இட்டுப் புகை பிடிப்பதற்குப் பக்குவமான சுங்கான் ஒன்று வேண்டும் என்று விரும்பியும், அது செய்வதற்கு இயலாமையால், கடைசியாக அதற்கும் ஒரு வழி தேடினேன்.

மதிற்புறத்தில் புதிதாய் இரண்டு அடுக்கு வேலி அடைத்து முடிக்கவும், வளாரால் கூடை பின்னி முடிக்கவும், வேனிற்காலம் முழுதும் சென்றது. பின்னர் மற்றொரு வேலையில் அதிக காலம் சென்றது. அவ்வளவு காலத்தை அதில் கழித்தது எனது ஓய்வுக் காலத்தின் அளவிற்குப் பொருந்தாது என்று எண்ணுகிறேன்.

## எட்டாம் அதிகாரம்

### தீவின் வளத்தை அறிவதற்கு இரண்டாவது முறை பயணம்

எங்கும் உலாவிப் பார்த்துத் தீவின் வளத்தைக் கண்டு அறிவதற்கு எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாகி யிருந்ததையும், சிற்ருற்றங்கரை வழியாய்ச் சென்று, அதற் குச் சற்று அப்புறத்தில் புதிதாய் ஒரு ஓலை வீடு அமைத் ததையும், அங்கிருந்து தீவின் எதிர்முனை வரையிலும் எட்டிய பெரிய வெளிநிலத்தைக் கண்டதையும் முன்பே கூறியிருக்கின்றேன். அந்த வெளி நிலத்தை ஊடறுத்துச் சென்று, கடற்கரை வரையிற் போய்ப் பார்க்க நினைத்து முடிவுசெய்து, துப்பாக்கியும் கைக்கோடரியும், அதிக வெடி மருந்தும், குண்டும், வழியில் உண்பதற்கு ரொட்டி இரண் டும், அங்கி உறையிலிடும் தோற்பைக்குள் பெரிய கொடி முந்திரிப் பழக்குலை ஒன்றும் எடுத்துக்கொண்டு, எனது நாயையும் என்னுடன் இட்டுக்கொண்டு பயணம் செய்யத் தொடங்கினேன். மேற்கூறிய புதுவீடு கட்டிய பள்ளத் தரையைத் தாண்டிச் சென்றபின், மேற்குக் கடற்கரை தெரிந்தது. வானத்தில் மப்பு மந்தாரம் இன்றி வெளுப் பேறி யிருந்ததனால், கடலின் மறுகரை எனக்குத் தெளி வாய்த் தோன்றிற்று. அது தீவோ, கண்டமோ விவரம் தெரியவில்லை. அது வெகுதூரத்தில் மேற்கேயிருந்து தென்மேற்குத் திசையில் சற்று மேற்குச் சார்பாய் விரிந்து பரந்து மிகவும் உயர்ந்திருந்தது. குறிப்பாகக் கூறின், அதன் தொலைவு ஐம்பது அறுபது கல்லுக்குக் குறை யாது.

### மேற்குக் கரையிற் கண்ட தீவு

அஃது அமெரிக்காவின் ஒரு பாகமாய் இருக்க வேண் டும் என்று நினைத்தேன். அல்லாவிடில் அஃது எந்த நாடு என்று நான் அறியமுடியவில்லை, நான் கண்ட பல காட்சிப்

பொருள்களால் அந்த நாடு ஸ்பானியக் குடியேற்றங்களுக்கு அண்மையில் இருக்குமென்றும், அது கொடிய வேடர் வாழும் நாடு என்றும் நினைத்தேன். இத்தீவின் கரையில் இறைவன் அருளால் சேராமல், அந்நாட்டிற்கு சேர்ந்திருப் பேனாயின், எனது நிலைமை மேலும் கொடுமை யுடையதாய் இருக்குமேயென்று உறுதியாய் எண்ணி, திருவுள்ளத்தின் செயல் எதுவோ அதுவே எனது பேறு என்றும், கடவுள் வழியாய் வரும் துன்பங்கள் அனைத்தும், கடைசியில் இன்பமாகவே முடியும் என்றும் முழு மனத்தோடு நம்பி, அந்த நாட்டிற் சேர வேண்டுமென்று வீணாய் விரும்பி என் நெஞ்சை வருத்திப் புண்ணாக்காமல், இந்த நிலைமையே எனக்கு இன்பமான நிலைமை என்று மன நிறைவு கொண் டேன்.

மேலும், இந்நாட்டைப்பற்றிச் சிறிது சீர்தூக்கிப் பார்த்தபின், நான் காணும் நாடு ஸ்பானியர் ஆட்சிபுரியும் கடற்கரையடுத்த நாடாகுமானால், எப்பொழுதாயினும் அந்நாட்டுக்குப் போக்குவரவு செய்யும் கப்பல்களைக் கடலில் ஐயமின்றிக் காண்பேன் என்றும், அது ஸ்பானிய ஆட்சிக் குட்படாத நாடாய் இருக்குமானால் அவர்கள் நாட்டுக்கும், பிரேஜில் நாட்டுக்கும் இடையில், அகப்படும் மனிதரை அழித்து உண்ணும் மிகக் கொடிய வேடர் வாழும் நாடு என்றும் நான் எண்ணத் தொடங்கினேன்.

### கிளியைப் பிடித்து வளர்த்தது

இந்த எண்ணங்கள் என் உள்ளத்தில் குடிகொண் டிருக்க, விரைவு இன்றி மெதுவாக நடந்து போனேன். போகப்போக நான் வீடு கட்டி வாழ்ந்த இடங்களைவிட அவ்விடம் மிகவும் இன்பமாக இருந்தது. சிறந்த மலர் களும், பசும்புல்லும், அழகிய சிறு மரங்கள் அடர்ந்த காடும் திரளாய் உள்ள அந்தப் பெருவெளி கண்ணுக்கு அழகாய் இருந்தது. நான் கண்ட கிளிகளுக்குக் கணக்கு இல்லை. வைத்து வளர்த்து வசப்படுத்தி என்னுடன் பேசப்

பழக்கும் பொருட்டு, எவ்விதத்திலாயினும் ஒரு கிளி பிடிக்க விரும்பினேன். மரக்கிளையிலிருந்த கிளிக்குஞ்சு ஒன்றை ஒரு கொம்பினால் தட்டி வீழ்த்தி ஒரு வகையாய்ப் பிடித்து, வீட்டுக்குக் கொண்டு சென்றேன். அதற்கு நான் பேச்சுப் பழக்கச் சில ஆண்டுகள் பிடித்தன. கடைசியில் அது தன் இனமொழி பேசுவது போலத் தடையற என்னைப் பெயர் சொல்லி அழைக்கப் பயின்றது. பின்பு அதற்கு நேர்ந்த துன்ப வரலாறு சிறிதாயிருப்பினும், செய்தித் தொடர்ச்சி ஒழுங்கில் வேடிக்கையாய் இருக்குமாதலால் அதை அவ்விடத்திற் கூறுவேன்.

**விலங்குகளைக் கொன்றேன்**

இந்தப் பயணத்தில் கண்டனவெல்லாம் எனக்கு வேடிக்கையாகவும் புதுமையாகவும் இருந்தன. பள்ளத் தரையில் முயல்களையும் குழிநரிகளையும் மிகுதியாய்க் கண்டேன். நான் முன் அறிந்த அந்த இனவிலங்குகளின் சாயலுக்கும் இவைகளின் சாயலுக்கும் அதிக வேறுபாடு உண்டு. இவ்விலங்குகளில் பல வற்றைக் கொன்றேன். இவற்றின் இறைச்சியை உண்ணுவதற்கு என் மனம் ஒப்பவில்லை. வந்தது வரட்டும் என்று துணிந்து உண்ணத் தேவையில்லை. ஏனெனில் எனக்கு உணவுக் குக் குறைவில்லை. நான் உண்டதெல்லாம் நல்ல உணவு. குறிப்பாய் இறைச்சி வகை மூன்று. அவை வெள்ளாட்டிறைச்சி, புறு இறைச்சி, ஆமை இறைச்சி, இவற்றுடன் கனிவகை ஒன்று, கொடி முந்திரிப்பழம். இங்கிலாந்தில் நானாவித பண்டங்களும் விற்கப்படும் பெயர் பெற்ற கடை **லெடன்ஹால் மார்க்கெட்** என்பது. எனது உணவு வகைகளிலும் மிகச் சிறந்தவைகள் யாருக்காயினும் அந்தக் கடையிலும் அகப்படா. பொதுவாய் எனது நிலை இரங்கத் தக்கதாய் இருப்பினும், உண்விற்குச் சிறிதும் துன்பமின்றி வயிறு நிறைய உண்ணவும், மிகச் சுவையுள்ளவற்றைத் தின்று மகிழ்ந்திருக்கவும் வாய்ப்புப் பெற்றேன். இந்த நன்றியை மறவாமல் இதற்காகக் கடவுளுக்குப் புகழ்பாடுவது முறையாகும்.

**இரவில் தங்கித் தூங்கும் முறை**

நான் இந்தப் பயணத்தில் நாள் ஒன்றுக்கு இரண்டு கல்லுக்கு அதிகம் போகவில்லை. புதுமைகளைக் கண்டு நாட்டின் வளத்தினை அறியும் பொருட்டு, ஒருகாற் சென்ற வழியிற் பலகாற் சென்று, கால்சலித்து இளைப்புற்றுச் சோருமிடத்தில் இராத்தங்க நினைத்து, மரத்தில் ஏறித் தூங்குவேன். அல்லது ஒரு மரத்தினின்று மற்றொருமரம் வரையிற் கொம்புகளை நிறுத்தியாவது, அரவமின்றிக் காட்டு விலங்குகள் என்மேல் வந்து விழாதபடி வேறு எவ் விதமாய் வைத்தாவது அடைப்புண்டாக்கி, அதற்குள் படுத்துத் தூங்குவேன்.

**ஆமைகளையும் வெள்ளாடுகளையும் காணல்**

நான் கடற்கரையிற் சேர்ந்து எண்ணிறந்த ஆமை களைக் கண்டவுடன், இதுவரையில் இக்கரையைக் காணு மல் நான் இறங்கிய கரையில் தங்கி வாழ்ந்த தீவினைப் பயனை எண்ணி வியந்து வருந்தினேன். நான் இறங்கிய கரையில் ஆமைகள் மிக மிகக் குறைவு. ஒன்றரை ஆண் டில் என் கண்ணுக்கு எதிர்ப்பட்டவைகள் மூன்று தாம் இக்கரையிலோ ஆமைகளேயன்றி பலவகைப் பறவைகளும் எண்ணிறந்தவைகளாய் இருந்தன. அவற்றுள் சிலவகை களை நான் முன்பு கண்டதில்லை. உணவுக்குத் தகுதியா னவை பல இருந்தன. சிறகைப் புள் ஒன்று தவிர மற்றப் பறவைகளின் பெயர் விவரம் எனக்குத் தெரியாது.

சுடவேண்டுமானுல் எத்தனை பறவைகளும் சுடலாம். மருந்தும் ரவையும் செலவழிந்து போம் என்று நான் பற வைகளைச் சுடவில்லை. பறவை இறைச்சியைக் காட்டிலும், பெண் ஆட்டின் இறைச்சி பல நாளைக்கு உணவாகும் ஆத லால், கூடிய முயற்சி செய்து, ஒரு பெண் ஆடு சுடக் கருத் துக்கொண்டேன். தீவின் அக்கரையைக் காட்டிலும் இக் கரையில் வாழும் ஆடுகள் மிகப் பல. நிலம் மேடு பள்ள மின்றி எங்கும் சமமாய் இருந்ததனுல், ஆடுகள் தொலைவில் என்னைக் கண்டவுடன் ஓட்டம் பிடித்தன. அவைகளிடத்

திற்கு நெருங்கிப்போவது மிக அருமையாய் இருந்தது. வெள்ளாட்டிற்கு மேற்பார்வை அதிகம் இல்லாததனால், மலைமுகட்டில் ஏறி எளிதில் சுட்டேன் என்று முன்பு கூறினேன். இக்கரையில் மலை ஒதுக்கு இல்லாததனால் எளிதில் சுட்டு விழுத்த முடியாமல் இருந்தது.

**நினைவுக் குறியாக எல்லைத் தூண் நடுதல்**

தீவின் இந்தப் பாகம் நான் உறைந்த இடத்தைப் பார்க்கிலும் அதிக இன்பமாய் இருந்தது உண்மையே. ஆயினும் நான் குடிபெயர்ந்து இங்கே வந்திருக்கச் சிறிதும் நினைக்கவில்லை. அவ்விடத்திற் குடியேறி நாட்பட்டதனால் அதுவே எனது பிறப்பிடம் போலாயிற்று. இக்கரையில் வந்திருக்கிறவரையில் வீடுவிட்டுத் தொலை நாட்டுக்குப் பயணம் சென்றிருப்பவனைப்போல எனக்கு வீட்டின்மேல் விருப்பம் அதிகப்பட்டது. அவ்வாறு இருந்தும், கடற்கரை வழியாய்க் கிழக்கு முகமாகப் பன்னிரண்டு கல் தொலைவு வரையில் போய், அவ்விடத்தில் எல்லைத் தூண் ஒன்று நாட்டி, வீட்டுக்குத் திரும்பிப்போகவும், மறுதடவை பயணப்பட்டு வரும்பொழுது என் வீட்டுக்குக் கிழக்கே தீவின் எதிர்ப்பக்கத்தில் கடற்கரை வழியாய் இந்தத் தூண் நிற்குமிடத்திற்கு வரவும் முடிவு செய்தேன். அந்தப் பயணத்தைக் குறித்துச் செய்தித் தொடர்ச்சி வரும் பொழுது கூறுவேன்.

**வழி தவறித் தடுமாறுதல்**

முன்பு வந்த வழியை விட்டு வேறு வழியாய் வீட்டுக்குத் திரும்பினால், தீவு முழுதையும் நாளடைவிற் கண்டறியலாம் என்றும், தீவு முழுதையும் சுற்றி வருவதால், முதலில் நான் குடியிருந்த வீட்டுக்கு வரும் வழியைத் தப்பவிட்டுத் திகைக்கமாட்டேன் என்றும் நினைத்துப் புது வழி பிடித்துப் போனேன். எனது எண்ணம் தவறாயிற்று. இரண்டு மூன்று கல் தொலைவு சென்றபின், மிகப் பரந்த பள்ளத்தரை வந்தது. அதன் நான்கு திசையிலும் மலைகள்

அடர்ந்திருந்தன. அம்மலைகளிற் காடு செறிந்திருந்தது. அதனால் செல்லவேண்டிய வழி எது என்று எனக்குத் தெரியவில்லை. பகலில் இத்தனை மணிக்குக் கதிரவன் இன்ன இடத்தில் இருக்கும் என்று மதிப்பாயறிந்து, எனது வீட்டுக்கு வழி பிடித்துப் போனால் போகலாமே தவிர, மற்றை எவ்விதத்திலும் செல்வது முடியாததாய் இருந்தது.

### எல்லைத் தூணைக்கொண்டு வழி யறிதல்

"ஆவீன மழைபொழிய இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாவ,
மாவீரம் போகுதென்று விரைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ள
சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்
தள்ளாத விருந்துவரச் சர்ப்பந் தீண்ட
கோவேந்தர் தமதுரிமைப் பகுதி கேட்பக்
குருக்கள்வந்து தட்சிணைக்குக் குறுக்கிட் டாரே"

என்பதுபோல, மரம் அடர்ந்த மலைமதில் சூழ்ந்த பரந்த பள்ளத்தரையில் வழி தெரியாமல் மயங்கித் திகைத்து நின்று, கதிரவன் நிற்கும் நிலை அறிந்து போனாற் போகலாம் என்று எண்ணி, என் மனக்கவலையை ஒருவாறு ஆற்றிக்கொண்டு இருந்தேன். கதிரவன் ஒளி சிறிதும் தோன்றுதபடி மூன்று நான்கு நாள் வரையில் மூடு பனி பெய்து இடரின்மேல் இடர் வந்தது. இதற்கு நான் செய்யத்தக்க மாற்றுச் செயல் யாது? கோல் உதவியில்லாத குருடனைப்போல மனம் தளர்ந்து, துன்பம் முதிர்ந்து, மனம் போன போக்கில் இலக்கு இன்றித் திரிந்து, முடிவாகக் கடற்கரைக்குத் திரும்பிச் சென்றேன். எல்லைக் குறிப்பாய் முன்பு நாட்டிய தூணைக் கண்டு, முன் வந்த வழியாய்த் திரும்பினேன். வெயில் மிகக் கொடுமையாகக் காய்ந்தது. துப்பாக்கி, வெடி மருந்து, கைக்கோடரி, முதலிய பொருள்கள் மிகப் பளுவாய் இருந்ததனால் அங்கங்கே அடிக்கடி தங்கி மெதுவாய்ப் போனேன்.

## ஆட்டுக்குட்டியைப் பிடித்து வளர்த்தல்

போகும் வழியில் எனது நாய் விரைவில் ஒரு வெள்ளாட்டுக் குட்டியைக் கண்டு ஓடி, மறித்துப் பிடிக்க முயன்று கொண்டிருந்தபோது, நான் விரைந்தோடி, நாய் கடிக்கு முன் குட்டியைப் பிடித்துக் கொண்டேன். இரண்டொரு ஆட்டுக்குட்டிகளைப் பிடித்து வசப்படுத்தி வளர்த்தால் அவைகள் நாளடைவில் அதிகப்பட்டு, வெடி மருந்தும் ரவையும் செலவழிந்த பின், எனக்கு உணவுக்கு உதவும் என்று நான் பெரும்பாலும் எண்ணியிருந்த எண்ணத்திற்கேற்றபடி அகப்பட்ட இவ்வாட்டுக்குட்டியை வீட்டுக்குக் கொண்டுபோய், வளர்க்க ஆசைப்பட்டேன். இவ்விளங்குட்டிக்குக் கழுத்துப்பட்டை செய்து, கழுத்தில் இட்டு, நான் வைத்திருந்த கயிற்றுப்புரி நூலினால் மெல்லிய கயிறு திரித்துக் கட்டி, ஒருவாறு நடத்திக்கொண்டு போனேன். கொண்டு போய் ஓலைவிட்டைச் சூழ்ந்த அடைப்புக்குள்விட்டு வாசலை அடைத்தபின், முழை வீட்டைவிட்டு நீங்கி ஒரு திங்களுக்கு அதிகம் சென்றதனால், மிகுந்த விருப்பத்துடன் அவ்வீட்டுக்குப் போனேன்.

## முழை வீட்டினுள் மகிழ்ச்சியோ டிருத்தல்

என்னுடைய முழை வீடு முயலைவிட்டு வளர்க்கும் கூட்டுக்கு ஒப்பாய் இருப்பினும், அதனுள் நலமாய்ப் போய்ச் சேர்ந்து, அங்குள்ள தூங்கு மஞ்சத்திற்படுத்திருந்தபொழுது, எனக்கு உண்டான மகிழ்ச்சியை என்னென்று கூறுவேன். இந்தப் பயணத்தில் இலக்கின்றித் திரிந்து, இளைப்பாற வீடு வாசல் இல்லாமல் பல கவலைகளுக்கு ஆளாகிக் கடைசியில் எனது இருப்பிடத்திற்கு வந்ததனால், இங்கே எனக்கு மனிதர் துணை இல்லாதிருந்தும், இக்குடிசை மக்கள் வளமுள்ள பெரிய ஊருக்கு ஒப்பாய் இருந்தது. அன்றியும் எனக்கு ஒருவிதத்திலும் குறையின்றி எல்லா இன்ப வகைகளும் இருந்ததனால், இந்தத் தீவில் இருக்கிறவரையில் நான் இனித் தொலைவுப் பயணம் செய்வதில்லை என்று உறுதி செய்துகொண்டேன்.

### கிளிக்கூடு செய்ததும் ஆட்டை வளர்த்ததும்

பயணக் காலத்தில் உண்டான களைப்புத் தீர்ந்து, மனக்கவலை ஆறுவதற்கு ஒரு கிழமைக்காலம் இங்கே இருந்தேன். இந்தக் கிழமையில் எனது கிளிக்குக் கூடு கட்டும் முதன்மையான வேலையில் நான்கைந்து நாள் சென்றன. அஃது இதற்குள் என்னுடன் நன்றாய்ப் பழகி விட்டைவிட்டு நீங்காதிருந்தது. பின்பு மற்ற வீட்டைச் சூழ்ந்த அடைப்புக்குள் விட்ட ஆட்டுக்குட்டியை இங்கே கொண்டுவந்து, இரை கொடுக்க வேண்டுமென்று போய்ப் பார்த்தேன். விட்ட இடத்தில் இரை இல்லாததனால் அது மெலிந்து நின்றது. தழைகளும் கண்ணுக்கெதிர்ப்பட்ட செடிகளின் கிளைகளும் வெட்டி அடைப்புக்குள் போட்டு, அது தின்றபின், முன்போலக் கயிறு கட்டிப் பிடித்துக் கொண்டு போனேன். பசியினால் மெலிந்து மிரட்சி அடங்கி, வசப்பட்டது கண்டு, கட்டவிழ்த்து விட்டேன். வளர்த்த நாய் தொடர்வது போல, அஃது என்னைத் தொடர்ந்து வந்தது. அன்று தொடங்கி எப்பொழுதும், நான் அதற்கு இரை கொடுத்து வளர்த்ததனால், வரவரச் சாதுவாகி என் மேற் பற்று வைத்து, என்னைச் சார்ந்து கிளியைப்போல் அதுவும் என் குடும்பத்தின் ஓர் உறுப்பாயிற்று. பின்பு அஃது ஒரு பொழுதும் என்னைவிட்டு நீங்கவில்லை.

### தீவில் இறங்கியபின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழா

சரத்விஷுவில் மழைக்காலம் தொடங்கியது. செப்டம்பர்த் திங்கள் 30-ஆம் நாள் நான் இத்தீவில் இறங்கிய இரண்டாவது ஆண்டு நிறைவு விழாக் கொண்டாடினேன். இரண்டு வருடங்கள் முழுவதும் சென்றும், முதலில் இறங்கின அன்று இருந்தது போலவே, இன்றளவும் எனது மீட்சிக்கு ஏதும் வகை தோன்றாதிருந்தது. நான் இந்த நாள் முழுவதும் அடங்கி யிருந்து, தனி மனிதனாய் இவ்விடத்தில் நாட்கழிக்கும் என்னைச் சொல்வதற்கரிய துன்பத்திற்கும், இடருக்கும் ஆளாக்காமல், என்மீது

இறங்கி, எனக்குப் பற்பலவிதமான வியக்கத்தக்க ஆதரவு கள் செய்து, என்னைப் பாதுகாத்த கடவுளை மனத்தினுல் நினைத்து வணங்கினேன்; அவர் திருப்பெயரை இசைப் பாடலாக அமைத்தும் பாடினேன். நான் துணை மனித ருடன் கூடியிருந்து, இம்மைக்குரிய இன்பப் பேறுகள் எல்லாவற்றையும் அடைவதற்கு இடம் பெற்ருல், எனக்கு உண்டாகத் தக்க மகிழ்ச்சியினும் அதிக மகிழ்ச்சியை மனிதர் துணை இல்லாத இந்தத் தீவில் கடவுள் எனக்கு உண்டாக்கித் தருவார் என்றும், அவர் தாமே என்னுடன் இருந்து, இம்மையில் எனக்கு உதவி செய்வாரென்றும் உறுதியாய் நம்பிக்கவலையற்றிருந்தேன். மேலும் மறுமை யில் தமது திருமுன் என்னைச் சேர்த்துக் கொள்வார் எனவும் எண்ணினேன். இவற்றை நினைத்து என் நெஞ் சைத் தேற்றி உறுதி யடையச் செய்தேன். மனிதர் துணை யற்றதனுல் எனக்கு உண்டாகும் குறைகள் அனைத்தையும் முழுவதும் நீக்கவல்லவர் என்று நினைத்துக் கடவுளை நான் மிகத் தாழ்ந்து பணிந்து புகழ்ந்தேன்.

**உலகப் பொருள்களில் பற்றுக்குறையத் தொடங்குதல்**

இளம்பருவத்தில் நான் அளவு கடந்து, நெறி தவறி, இவன் பெரிய கொடுமையுடையவன் என்று எல்லோரும் பழிக்கும்படி நடந்தபொழுது எனக்கு உண்டாயிருந்த நிலைமையைவிட, இப்பொழுது பற்பல கொடுந் துன்பங் களுக்கு ஆளாகியிருந்தும் என் நிலை மிகுந்த நன்மை யுடையதென்று இப்பொழுதுதான் விளக்கமாய்த் தெரிந்து கொண்டேன். மேற்கூறியவாறு நான் என் இன்ப துன்பங் களை மாற்றி நினைக்கவே, எனது விருப்பங்கள் முன்பு சென்ற துறையை விட்டு, விலகி வேறு வழிப்பட்டன. என்மனம் முன்பு பற்றிய பொருள்களை விட்டு, வேறு பொருள்களிற் படிந்தது. நான் இத் தீவில் இறங்கிய நாள்முதல் சென்ற இரண்டு ஆண்டுகளாக எனக்கு இன்பமாய் இருந்த வைகள் இப்பொழுது வெறுப்பாக மாறின. வேறு பொருள்கள் எனக்கு உவப்பைத் தந்தன.

னைச் சொல்வதற்கரிய என் துன்பநிலையை நினைத்துத்
துயரடைந்திருந்தபோது வியக்கத்தக்க விதமாக இத் திரு
மொழி என் கண்ணுக்கு எதிர்ப்பட்டதனால், இது கடவுள்
தாமே வெளிப்பட்டு எனக்குச் சொல்லிய மொழிகள் என
அப்பொழுதே நினைத்தேன். "நன்று, கடவுள் என்னைக்
கைவிடாது இருந்தால், மனிதர் அனைவரும் கைவிடினும்
என்ன? என்ன தீங்கு விளையும்? ஆயினும் நிலவுலகம்
முழுவதையும கை வசப்படுத்தி, இறைவன் திருவருளையும்
அவர் வாழ்த்தையும் பெறுதிருப்பேறுனால் எனக்கு வரும்
பேறு மிகுதியன்றோ?" என்று சொன்னேன்.

**இறைவனை வாழ்த்த நினைத்தல்**

இம்மண்ணுலகில், நான் எவ்வகைச் சிறிய நல்ல நிலை
யில் இருப்பினும் எனக்கு உண்டாகத்தக்க அறிவு விளக்
கத்தைக் காட்டிலும், துணையற்றுத் தனியே இருக்கும்,
இந்தக் கெட்டு நிலையில் மிகுந்த அறிவு விளக்கம் உண்டா
தலும் உண்டாகக்கூடும் என்று அந்த நேரம் முதலாக
என் மனத்தில் எண்ணங்கொண்டு, இவ்விடத்திற்கு
என்னை வருவித்த நன்றியை நினைத்துக் கடவுளுக்கு
வாழ்த்தும் வணக்கமும் செலுத்தச் சென்றேன்.

**மறைநூல் கிடைத்ததற்காக மனமகிழ்ச்சி கொள்ளுதல்**

கடவுளை வாழ்த்தத் தொடங்கியபோது, ஏதோ ஒன்று
என் உள்ளம் நடுங்குமபடி முழங்கியது. நான் வழிபாடு
செய்யத் துணியவில்லை. "வஞ்சகனே! வந்ததற்கு என்ன
செய்வேன் என்று மனந்தேறி ஒருவாறு நீ மனம் நிறைந்
திருப்பது உண்மைதான். ஆயினும் இத் துன்ப நிலையி
னின்று உன்னை விலக்கிப் பாதுகாக்க வேண்டும் என்று
ஒரு மனத்தொடு நீ இறைவனை வேண்டிக் கொள்வாய்
அன்றோ? இதை எண்ணுமல், இந்த நிலையில் உன்னை
வைத்ததற்காக நீ கடவுளுக்கு வணக்கம் செலுத்த முயன்
றது என்ன அறியாமை" என்பதாக நான் வாய் திறந்து
எனக்குக் கூறிக் கொண்டேன். அதனால் வழிபாட்டை
அவ்வளவோடு நிறுத்தி வைத்தேன். ஆயினும் மேற்

கூறிய தீவிற்போய்ச் சேர்ந்து வாழ்ந்ததைப்பற்றி நான் கடவுளை வணங்கினேன் என்று கூறுவது பொருந்தாது. என் சீர்கெட்ட நிலைமையை அறிந்து கொள்ளவும், என்னுடைய தவறான செயலை நினைத்துப் புலம்பி மனந்திரும்பவும் தக்கதாக, எனக்கு எவ்வகைத் துன்பங்களை வருவித்தாயினும் என் மனக்கண்ணைத் திறந்தது பற்றி நான் மனமும் மொழியும் பொருந்தக் கடவுளை வாழ்த்தினேன். என் நண்பர் இங்கிலாந்தினின்று எனக்கு அனுப்பிய பொருள் மூட்டையில் மறை நூல் ஒன்று வைத்து அனுப்ப வேண்டும் என்று நான் கேட்கவில்லை. தானாய் ஒரு புத்தகத்தை அதற்குள் வைத்து அனுப்பும்படி கடவுள் அவர் எண்ணத்தில் தோற்றுவித்தார். அன்றியும், நான் ஏறிய கப்பல் உடைந்து பழுதானபின், அதற்குள் இருந்த பொருள்களில் அப்புத்தகத்தைக் கண்டு எடுத்து வைத்திருக்குமாறு எனக்கு உதவி புரிந்தார். இந்த நன்றியை நான் மறந்து போகவில்லை. படிப்பதற்காக வேத புத்தகத்தைத் திறக்கும் ஒவ்வொரு வேளையிலும், படித்த பின் மூடும் வேளை தோறும் என் உள்ளம் உருகி உவந்து கடவுளை வாழ்த்தாது இருந்ததில்லை.

## மூன்றாவது ஆண்டுத் தொடக்கம்

நான் இந்தத் தீவிற் சேர்ந்து இரண்டு ஆண்டுகள் நிறைவேறி, மூன்றாவது ஆண்டு நடக்கத் தொடங்கிய பொழுது என் எண்ணங்கள் இப்படி இருந்தன. முதல் ஆண்டில் நான் செய்த வேலை முதலியவைகளைக் குறித்து விளக்கமாக எழுதினேன். இரண்டாம் ஆண்டு வரலாறுகளை அவ்வளவு நுட்பமாக எழுதாதிருந்தும், நான் செயலற்றுச் சோம்பியிருந்து, அதை வீணாய்க் கழிக்கவில்லை என்று கூறுவேன். கால வரையறை செய்து நாள்தோறும் நான் செய்த வேலை முதலியவைகளின் விவரம் இது:— 1-ஆவது முறைமைப்படி, கடவுளைப் புகழ்வதும், காலை, உச்சிப்பொழுது, மாலை என்னும் மூன்று வேளையிலும் தவறாது நாள்தோறும் மறை நூலைப் படிப்பதும் வழக்கம். 2-ஆவது மழை இல்லாதிருக்கும்பொழுது காலை வேளையில்

மூன்று மணி நேரம் உணவுக்கு ஏதாவது சுட்டுக்கொண்டு வருவதற்காகத் துப்பாக்கி எடுத்துக்கொண்டு சென்று வெளியில் உலாவிவருவது. சுட்டுக் கொன்ற பறவை முதலியவைகளையும், பிடித்துக்கொண்டு வந்த விலங்குகளையும் அறுத்து உரித்து, இறைச்சிக்கு உப்பு இட்டு, அன்று உணவுக்கு வேண்டிய அளவுமட்டும் சமைத்து, எஞ்சியதை வற்றல் போட்டுவைப்பது. இவ்வேலைகளைச் செய்து முடிக்கப் பகலில் நெடுநேரம் செல்லும். அன்றியும் கதிரவன் வானத்தின் இடையில் தலைக்கு நேரே வரும்பொழுது, உச்சிப்பொழுதில் வெப்பம் மிக அதிகமாய் இருக்கும் ஆதலால், வேலை செய்வதற்கு வெளியிற் புறப்பட முடியாது. அதனால் அக்காலத்தில் மாலையில் நான்கு மணி நேரம் மட்டும் வேலை செய்வேன். சில வேளை வேலையின் கால ஒழுங்கை மாற்றி, காலையில் வேலை செய்து, மாலையில் வேட்டைக்குப் போவதும் உண்டு.

### நான் செய்த வேலைகளின் அருமை

மேற் சொல்லியபடி வேலைக்குக் குறித்த காலம் குறுகியதாய் இருந்தும், நான் செய்த வேலைகள் அருமையும் உழைப்பும் உடையவை. தகுதியான கருவிகளும் வகைத் துணையும் பயிற்சித் திறமும் இல்லாமையால், நான் செய்தவற்றைச் செய்து முடிக்கக் காலம் அதிகம் சென்றது. இதற்கு எடுத்துக்காட்டு:—மலை முழையில் ஒரு நீளமான பலகைத்தட்டு, செய்துவைக்க நாற்பத்திரண்டு நாட்கள் முழுவதும் சென்றன. தகுதியான வாள் முதலிய கருவிகளும், மரம் அறுக்கும் குழியும் இருக்குமானால், இரண்டு வாட்காரர் ஒரே மரத்தில் அந்தப் பலகையின் அளவுள்ள ஆறு பலகைகளை அரை நாளில் அறுத்து விடுவார்கள்.

### பலகை ஒன்று செய்ய நான் பட்ட பாடுகள்

என் வேலையின் தொல்லையைச் சற்று விளக்கமாய்க் கூறுகின்றேன். எனக்கு அகலப் பலகை வேண்டியிருந்தது. சிறு மரம் பயன்படாது. பெருமரம் தறிக்க

வேண்டியிருந்தது. தகுதியான மரம் பார்த்து, அதைத் தறித்து விழுத்த மூன்று நாளும், அதன் கிளைகளைக் களைந்து வெட்டிச் சீர்ப்படுத்த மேலும் இரண்டு நாளும் சென்றன. சொல்வதற்கரிய துன்பப்பட்டுக், கிளை வெட்டிக் கொத்திக் களைந்தபின், மரத்தின் இரு புறத்திலும் அதன் பருமனைச் சிம்பு சிம்பாய் வெட்டிக்குறைக்க, அஃது எளிதிற் பெயர்த்துக்கொண்டு போவதற்கேற்றபடி கூடிய மட்டும், மென்மை அடைந்தது. பின்பு நான் அதைப் புரட்டி, அதன் ஒரு பக்கத்தை அடி தொடங்கி நுனிவரையிற் பலகைபோல மட்டமாய் வெட்டி, மேடுபள்ளம் இன்றி ஒப்பாக்கினேன். அதன்மேல் அப்பக்கத்தைத் தரையில் அழுந்தப்புரட்டி, மற்றொரு பக்கத்தையும் மட்டமாய் வெட்டி ஒழுங்கு படுத்தினேன். முடிவில் அம்மரம் இரு புறமும் ஒப்பமும் மூன்று அங்குலப் பருமனும் உள்ள பலகையாயிற்று. இப்படிப்பட்ட துன்ப வேலையில் நான் எவ்வளவு கைவருந்தி உழைத்திருக்கவேண்டும் என்று இதைப் படிக்கும் எவரும் நன்கு அறிந்துகொள்வார்கள். ஆயினும், நான் மனம் பொறுத்து வருந்தி உழைத்த வேலை இஃது ஒன்று மட்டும் அன்று. மேலும் எத்தனையோ வேலைகள் உண்டு. இத்தகைய எளிய வேலைக்கும் நான் நீண்ட நாள் செலவழிக்க வேண்டியிருந்தது என்பதை அறிவிக்கும் பொருட்டு ஒன்றைமட்டும் எடுத்துக் காட்டாகக் கூறினேன். கையுதவியும் கருவிகளும் உள்ளவர்களுக்கு எளிய வேலை; உதவியும் கருவிகளும் இன்றி வெறுங்கையால் வருந்தி யுழைத்த எனக்குச் சுமையான வேலையாய் இருந்தது. அதைச் செய்து முடிக்கப் பல நாட்கள் சென்றன.

இவ்வாறே மேலும் பல வேலைகளைத் தவறின்றி மனம் பொறுத்து வருந்திச் செய்தேன். கட்டுப்பட்டுக்கிடந்த எனது நிலைமைக்குத் தேவையானவை எவையோ, அவையனைத்தையும் இவ்வாறே செய்து முடித்தேன். இது பின் வரும் நிகழ்ச்சிகளால் நன்கு தெரியும்.

### நான் விதைத்த பயிர்களைப் பாதுகாத்தல்

மேற்கூறிய வேலை செய்து முடித்த காலம் நவம்பர், டிசம்பர், திங்கள்களாகும். இக்காலத்தில் நான் விதைத்த வாற்கோதுமையும் நெல்லும் நன்றாய்ச் செழித்து வளர்ந்தன. நான் அகழ்ந்து புரட்டி உழுது எருவிட்டு அவ் விதைகளை விதைத்த நிலம் மிகச் சிறியதுதான். வேனிற் காலத்தில் விதைத்ததனால், விதைமணிக்கும் வழியின்றிப் பயிர் அழிந்துபோனதனால், நான் இம்முறை விதைத்த மணி முழுவதும் அரை மரக்கால் என்று முன்பே கூறியிருக்கின்றேன். நல்ல விளைச்சல் காணும் என்று நம்பியிருந்த போது பலவகைப் பகை உயிர்களால் அவ்விளைச்சல் முழுவதும் அழிந்து பாழ்பட்டுவிடும் என்று விரைவில் உணர்ந்தேன். அப்பகை உயிர்களை விலக்குவது எளிதில் முடியாத நிலையில் இருந்தது. தொடக்கத்தில் வெள்ளாடுகளும், முயல்போன்ற ஒருவகை விலங்கும் நான் விதைத்த கூலம் முளைத்து இளம் பயிரான பொழுது அதைத்தின்று சுவை கண்டதனால், இரவும் பகலும் கழனியை விட்டு நீங்காதிருந்து, பயிரைத் தேறவிடாமல் தரைமட்டமாய் மேய்ந்து அழிவு செய்து வந்தன.

### பயிருக்கு வேலி அடைத்துப் பாதுகாத்தது

இப்படி நாளடைவில் அவைகள் பயிரை அழித்துக் கொண்டு வருவது கண்டு, மிக விரைந்து என் கழனியைச் சுற்றி வேலி அடைத்தாலன்றி, இதற்குப் பாதுகாப்பு வேறு இல்லை என்று வருத்தத்தைப் பாராட்டாமல் மிகுந்த முயற்சியுடன் வேலியடைத்தேன். விதைத்த நிலம் மிகக் குறைவுதானே. இருபது நாட்களுக்குள் நன்றாய் வேலியடைத்து முடித்தேன். அன்றியும் பகல் நேரத்தில் அவ்விலங்குகளிற் சிலவற்றைத் துப்பாக்கியாற் சுட்டுக் கொன்றதும் அன்றி, இரவு நேரத்தில் காவல் காக்கும்படி அடைப்புக்குள் செல்லும் வாயிலில் எனது நாயையும் கட்டிவைத்தேன். அது தூங்காமல் நின்று, இரவு முழுவதும் குரைத்த வண்ணமாய் இருந்தது. ஆகவே சில

நாட்களுக்குள் அவ்விலங்குகள் தொலைந்து போயின. அதனால் பயிர் ஓங்கிச் செழித்து விரைவில் வளர்ந்தது.

**பறவைகள் கதிர்களை அழித்தல்**

இவ்வளவோடு என் துன்பம் நீங்கவில்லை. பயிரேறும் காலத்தில் விலங்கு இனங்கள் அதனை அழிக்கத் தொடங்கியதுபோல, கதிர் முதிர்ந்து விளையும் காலத்தில் பறவைக் கூட்டங்கள் அதனை உண்ணத் தொடங்கின. முதலில் இஃது எனக்கு எவ்வாறு தெரிந்தது என்று கூறுகிறேன். ஒருநாள் வயலைப் பார்க்கப்போன பொழுது பல இனப் பறவைகள் அவ்வயலைச் சூழ்ந்திருக்கக் கண்டேன். அவை நான் திரும்பும் அளவும் கதிரைத் தின்ன நேரம் பார்த்திருப்பனபோலக் காணப்பட்டன. அந்நொடிப் பொழுதிலேயே துப்பாக்கியால் ஒரு வெடி தீர்த்தேன். வீட்டினின்று வெளியிற் செல்லும்பொழுதெல்லாம் துப்பாக்கி கொண்டு போவது என் வழக்கம். வெடி ஒலி கேட்டவுடன் ஒரு பெருங் கூட்டமான பறவைகள் கழனிக்குள்ளிருந்து எழுந்து வானத்தில் சிறு முகிற் கூட்டம்போல அடர்ந்து பறந்தன. வேலிப்புறத்தில் இருந்த குருவிகளையன்றிக் கழனிக்குள் இருந்தவைகளை நான் முன்பு காணவேயில்லை.

இதைக் கண்டவுடன் என் மனம் பதறிற்று. இன்னும் சில நாட்களில் குருவிகளால் என் விளை பொருள் அழிந்து பாழாய்ப்போய் விடுமென்றும், பட்டினியால் வருந்துவதன்றி எனக்கு வேறு வழியில்லை யென்றும், இனிப் பயிர் செய்வதற்கு விதை மணி கிடையாதென்றும் நினைத்து வருந்தினேன். இதை நீக்க வழி என்ன என்று எனக்குப் புலப்படவில்லை. இரவும் பகலும் இளைக்காமல் நானே விளைச்சலைக் காக்கத் தொடங்க வேண்டுமென்று மன உறுதி செய்தேன். குருவிகளால் அழிந்த விளைச்சல் எவ்வளவு என்று தெரிந்துகொள்வதற்காகப் போய்ப் பார்த்தேன். பார்த்தபோது அதிக அளவில் கதிர்கள் அழிந்து இருப்பதை உணர்ந்தேன். கதிர் பழுப்பேறாமல் இன்னும் பசுமையாய் இருந்ததனால், அதைப் பழுதின்றிக்

காத்துக்கொண்டால் விளைவு குறையாதென்று புலப் பட்டது.

## பறவைகளைத் தடுக்க நான் செய்த சூழ்ச்சி

கழனிக்கரையில் நின்று, துப்பாக்கியில் மருந்து ரவை இட்டுக் கெட்டித்துத் திரும்பி வந்தபோது, நான் போய் விட்ட பிறகு கதிரை உண்ணக் கருதிய முறையில் பறவை கள் மரங்களிற் பதுங்கித் தங்கியிருந்தன. வீட்டுக்குத் திரும்பிப்போகிறவன் போல நான் பின்னும் சற்றுத் தொலைவு செல்லவே, என் தலை மறைந்தவுடன் அவைகள் ஒவ்வொன்றாய்ப் பறந்து மீண்டும் கழனியிற் புகுந்தன. அதைக் கண்டு எனக்கு உண்டானசினம் இவ்வளவென்று இல்லை. சற்றுச் சென்றால் பின்னும் பறவைகள் வந்து சேர்ந்து கூலங்களை உண்ணும். அவை உண்ணும் ஒவ் வொரு மணியும் நாளடைவில் எனக்கு ஒரு மரக்கால் கூலம் ஆகுமென்று எண்ணித் திரும்பிப்போய், வேலிக்குப் புறத் தில் நின்று, பின்னும் வெடி வெடித்தேன். மூன்று பறவை கள் விழுந்தன. நான் கருதியவாறு விழுந்ததனால், அவை களை எடுத்து இங்கிலாந்தில் கள்வருச்கு அச்சம் உண்டா கும்படி பெயர் பெற்ற கள்வரை விலங்கிட்டுத் தூக்கிற் போடுவது போலத் தூக்கினேன். என் கருத்துத் தவறுமற் பயன்பட்டது கண்டு, வியந்தேன். பறவைகள் அன்று தொடங்கிக் கழனிக்கு வராது ஒழிந்ததும் தவிர, அந்தத் திசையில் வாழ்வதையும் விட்டு வேறிடத்திற்குப் பறந்து போயின. நான் தூக்கி மாட்டிய குருவிகள் இருந்தவரை யில் அவ்விடத்திற்கு அருகில் குருவிகளை மருந்துக்கும் காணவில்லை.

## விளைந்த பொருளைச் சேர்த்துத் திரட்டி வைத்தல்

இதனால் எனக்கு உண்டான மகிழ்ச்சி இவ்வள வென்று கூறவேண்டுமா? இரண்டாம் அறுவடைக் கால மாய டிசம்பர்த் திங்கள் இறுதியில் அறுப்பு அறுத் தேன்.

விளைந்த கூலத்தை அறுப்பதற்கு நறுக்குவாளோ அரிவாளோ இல்லாத குறை பெருங்குறையாய் இருந்தது. ஆயினும் என்ன செய்யலாம். கப்பலில் இருந்த கருவி வகைகளுள் நான் எடுத்துவைத்த இரும்புக் கத்தி ஒன்றைக் கூடிய வரையில் அரிவாளாக உருவாக்கி, விளைந்த கூலத்தின் தாளைத் தரைமட்டமாய் அடியோடு அறுக்காமல் கதிரை மட்டும் கொய்து நான் முடைந்து வைத்திருந்த பெரிய கூடைக்குள் வைத்துக் கொண்டு போய், கையால் உதிர்த்து மணியாக்கினேன். விதைத்த மணிகள் மிகக் குறைவு ஆதலால், கதிர் கொய்வது எனக்குப் பெரிய வேலையாய் இருக்கவில்லை. இருவகைக் கூலமும் உதிர்த்து முடிந்தபின், நான் என் மதிப்பிற்கண்ட விளைச்சல், நெல் இரண்டு கலம், வாற்கோதுமை இரண்டரைக் கலம். வகைக்கு அரைக்கால் கலமே விதைத்திருந்தேன். மனத்தின் குறிப்பால் அளவு மதிப்புச் செய்வது அன்றிச் சரியான அளவு செய்ய மரக்கால் முதலிய கருவிகள் என்னிடத்தில் இல்லை.

**விளைந்த கூலத்தை என்ன செய்வது ?**

விளைந்த கூலம் சிறிதளவாயிருப்பினும், அது விதைத்ததற்கு மிக அதிகமாயிருந்ததனால், எனக்கு மிகுந்த உள்ளக் கிளர்ச்சி பிறந்தது. கடவுள் அருள் இருந்தால் நாளடைவில் எனக்கு உணவுக்குப் பஞ்சம் இராது என்று எண்ணி மனம் தேறினேன். எனினும் கூலத்தைக் குத்தி உமி நீக்குவதற்காயினும், அரைத்து அல்லது இடித்து மாவாக்குவதற்காயினும் வகை தெரியாமல் மேலும் தடுமாறினேன். மாவாக்கினாலும் அதைப் பிசைந்து ரொட்டி சுடுவதற்கு வழி அறியாதிருந்தேன். இந்தத் துன்பங்களுடன், கூடிய வரையில் விதைமணி அதிகம் வைத்திருந்து, ஆண்டுதோறும் விதைத்துத் திரளான கூலத்தைச் சேர்த்துக் கொள்ளும் விருப்பமும் எனக்குண்டாகியிருந்ததனால், இம்முறை விளைந்தவைகளை உணவுக்குச் சிறிதும் செலவழிக்காமல், மறுமுறை விதைப்பதற்காக வைத்திருக்க நினைத்தேன். விதைப்புக்காலம்

வருமுன் கூலம் விளைவிக்கவும், விளைந்த கூலத்தை மாவாக்கி ரொட்டி முதலிய உணவு வகை செய்வதற்கும் இயன்ற அளவு முயன்று தகுதியான கருவிகள் செய்ய முடிவு செய்தேன்.

**கருவிகள் இல்லாக் குறையை நினைத்து வருந்துதல்**

இக்காலத்தில்தான் நான் உண்ட சோற்றுக்கு வஞ்சனையின்றி யுழைத்தேன் என்று கூறக்கூடும். உணவின் பொருட்டுக் கூல விதை முதல் சேர்த்து, விதைத்து விளைவித்து, அறுத்து, மிதித்து அரிசிகுற்றி, மாவரைத்து, உணவு வகை செய்வதற்கு இன்றியமையாத பல கருவிகள் தேவையாய் இருப்பது எனக்கு வியப்பாய்த் தோன்றுகின்றது. பெரும்பாலும் மனிதருள் பலர் இதைக் குறித்து நினைப்பதில்லை.

மனிதர் துணையேனும், சீர்திருத்தமுள்ள நாட்டவர் பயன்படுத்தும் தொழிற் கருவிகளின் உதவியாயினும் இன்றித் தனியே பிறந்தகோலமாய் இருந்த நான் மேற்குறித்த குறையை நாள்தோறும் கண்டு. மனச்சோர்வு அடைந்தேன். முதலில் எதிர்பாராதபடி வியக்கத்தக்க விதமாய்க் கை நிறையக் கூல விதைமுதல் எனக்குக் கிடைத்திருந்தும், இக்குறைகள் இருத்தலைக் கண்டு மனம் தடுமாறினேன்.

முதலில் நிலம் உழுவதற்கு ஏர் இல்லை. அகழ்வதற்கு மண்வெட்டி இல்லை. மரத்தினால் ஒரு மண்வெட்டி செய்து இந்தக் குறையை நீக்கிக் கொண்டதாக முன்பே கூறினேன். ஆயினும் இரும்புக் கருவியாற் செய்ய வேண்டிய வேலையை அதனாலும், மரக்கருவியாற் செய்ய வேண்டிய வேலையை அதனாலும் செய்தாலன்றோ நன்றாயிருக்கும். ஆதலால், நான் மர மண்வெட்டியினால் நிலத்தை அகழ்ந்தது ஏர் உழுதது போல நன்கு பயன் பெறவில்லை. ஒரு மண்வெட்டி செய்து முடிக்கப் பலநாள் வரையில் கழித்தும் இரும்புமுனை இல்லாததனால், விரைவில் அது தேய்ந்து போயிற்று. அன்றியும், அதனால்

நிலத்தை அகழ்வது மிகத் துன்பமாய் இருந்தது. அதைக் கொண்டு செய்த வேலையும் அழகின்றி முடிந்தது.

இவ்வாறிருந்தும், என் மனம் சலிக்காமல் இதையும் தாங்கிற்று. நான் முழுமனத்தோடும் பொறுமையாயும் உழைத்தேன். வேலையில் நேர்ந்த பிழைகளையும் பெரிதல்லவென்று நினைத்து மனநிறைவு கொண்டிருந்தேன். கூலம் விதைத்தபின் நிலத்தை ஒப்பமாக்குவதற்குப் பரம்பு இல்லை. அதற்குப் பதிலாகப் பளுவான மரக்கிளை ஒன்றை நானே இழுத்துக்கொண்டு போனேன். அது மண் கட்டிகளைத் தகர்த்து, நிலத்தைச் சமமாக்கி, விதைத்த மணியை மண்ணுக்குள் மறைக்குமா? முள்ளாற் கீறுவது போல நிலத்தைக் கீறிற்று. வேறு வழி இல்லாததனால் இப்படிச் செய்தேன்.

**கருவிகள் இன்றியும் வேலைகள் முடிதல்**

விதைத்த விதை மணிகள் முளைத்து வளரும் பொழுதும், வளர்ந்து விளைந்த பின்னும் வேலி அடைப்பதற்கும், விளைச்சலைக் காப்பதற்கும், அறுப்பதற்கும், காயவைத்து வீட்டிற் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கும், போரடிப்பதற்கும், தூற்றி மணிவேறு பதர் வேறு ஆக்குவதற்கும், கூலத்தைப் பாதுகாப்பில் வைத்திருப்பதற்கும், எத்தனையோ கருவிகளும், துணைப் பொருள்களும் எனக்கில்லையென்று, முன்பே கூறியிருக்கின்றேன். மா அரைப்பதற்குத் திரிகை இல்லை. அரிப்பதற்குச் சல்லடை இல்லை. ரொட்டி சுடுவதற்கு உப்பும் புளித்த மாவும் இல்லை. மாவைவைத்துச் சுடுவதற்குச் சூட்டடுப்பு இல்லை. அவ்வாறிருந்தும், எப்படியோ ஒருவாறு மாவரைத்து, அரித்துப் பிரையிட்டு, உப்பிட்டுப் புளிப்பேற்றி ரொட்டி சுட்டேன். இதைக் குறித்துப் பின்பு சொல்வேன். இத்தனை குறைபாடுகள் இருந்தும், விளைந்த கூலம் என் நலத்திற்குரிய பெரும் பேறாகவும், பயனாகவும் இருந்தது. மேற்கூறிய கருவிகள் இல்லாததனால் இவ்வேலைகள் அனைத்தும் எனக்குத் துன்பமாகவும்,

விரைவில் முடியாதனவாகவும் இருந்தன என்றேன். ஆயினும் அதற்கு வழி என்ன? இவற்றால் என் நேரம் வீணாயிற்று என்று கூற வேண்டுவது இல்லை. நாள் தோறும் இன்னதற்கு இவ்வளவு காலம் என்று ஒழுங் காய் வரையறை செய்திருந்ததனால் இப்படிப்பட்ட வேலை கள் செய்வதற்கு அன்றன்று போதியமட்டும் நேரம் இருந்தது. மேலும் அதிகமாகக் கூலம் விளைகிற வரை யிலும் மேற்கூறிய குறைந்த அளவுள்ள கூலத்தை விதை மணிக்கு வைத்திருப்ப தொழிய, உணவுக்குச் செலவழிப்ப தில்லை என்று உறுதி செய்தேன். கூலம் விளைவிக்கப் பயன்படும் கருவிகளைச் செய்வதில் வரும் ஆறு திங்களை யும் செலவழிக்க முடிவு செய்தேன்.

**நிலத்தைப் பண்படுத்தி, வேலியைச் செப்பனிடுதல்**

முன்பு பயிரிட்ட நிலத்தைவிட அதிக நிலத்தைப் பண்படுத்த வேண்டி யிருந்தது. ஒரு ஏக்கருக்கு அதிக மான நிலத்தில் விதைக்கப் போதுமான விதை மணி இருந்தது. நிலத்தைப் பண்படுத்தத் தொடங்குமுன் ஒரு மண்வெட்டி செய்து முடிக்கக் குறைந்தது ஒரு கிழமை சென்றது. ஆயினும் அது சிறிதும் பயன்படுவதாய் இல்லை. அதிகப் பளுவாய் இருந்தது. அதைக்கொண்டு வேலை செய்ய இருமடங்கு உழைக்க வேண்டி யிருந்தது. படவேண்டிய துன்பங்கள் அனைத்தையும் பதறாமற்பட்டு, எனது வீட்டுக்குச் சற்று அருகில் பக்குவமான நிலம் பார்த்து, ஒப்பமும் பரப்பும் உள்ள இரண்டு துண்டு நிலங் களில் விதைத்தேன். முன்பு நான் நட்ட வேலிக்கொம்புகள் ஓராண்டிற்குள் நன்றாய்த் தழைத்து வளர்ந்து உரம் பெறு தலைக் கண்டதனால் இப்போதும் அவற்றாலேயே வேலி அமைத்தேன். மேற்கூறிய வேலைகள் மழைக்காலத்தில் செய்யப்பட்டதனால் சிறிது சிறிதாகச் செய்து முடிக்க மூன்று திங்கள் முற்றும் ஆயின.

**கிளியைப் பேச வைத்ததும், மட்கலம் வனைந்ததும்**

மழை பெய்த வேளைகளில் நான் வெளியிற் செல் லாமல் வீட்டிலிருந்து வேலை செய்தேன். இதன் அடியிற்

குறிக்கப்படும் காரணங்களால் எனக்குத் தகுதியான வேலைகள் இருந்தன என்பதை நன்கு அறியலாம். வீட்டில் இருந்து வேலை செய்தபொழுதெல்லாம் நான் வளர்த்த கிளிக்குப் பேச்சுக் கற்றுக் கொடுத்தேன். அஃது எனக்கு இன்பமான பொழுதுபோக்காய் இருந்தது. அதற்கு நான் இட்ட பெயர் **பால்.** இந்தப் **பால்** என்னும் பெயர் தன்னுடையதென்று அது தெரிந்து கொள்ளவும், பால் பால் என்று உரத்துச் சொல்வதற்கும் அதற்கு விரைவில் பயிற்சி அளித்தேன். அந்தத் தீவில் நான் போய்ச் சேர்ந்தபின், என் சொல் தவிர, வேறு எந்த உயிரினத்தின் வாயினின்றும் ஒரு சொல்லும் கேட்ட தில்லை. அந்தத் தீவில் நான் முதன் முதலிற் கேட்ட சொல் கிளியின் மொழிதான். கிளிக்குப் பேச்சுப் பயிற்றியதை நான் ஒரு வேலையாகக் கருதவில்லை. ஏன்? அஃது எனக்கு ஓர் இன்பப் பொழுது போக்காய் இருந்தது.

இம்மழைக்காலத்தில் சற்றுப் பெரிய தொழில் ஒன்றை மேற்கொண்டிருந்தேன். அஃது யாது? எனக்கு மட்கலம் இல்லாதது பெருங்குறையாக இருந்தது. அதனால் எந்த வழியை மேற்கொண்டாயினும் மட்கலம் வனைய முயன்றேன். அதற்கு வழிதுறை தெரியவில்லை. நாட்டில் வெயிலில் வெப்பம் மிகுந்திருந்ததனால், பக்குவ மான களிமண் அகப்படுமானால் அதைக்கொண்டு கையினால் முடிந்த அளவுக்குக் கலங்கள் வனைந்து, வெயிலிற் காயவைத்து, காய்ந்து இறுகி வலுவுற்றபின், கூலம் முதலிய நீர்ப்பிடிப்பு இல்லாத பொருள்களை அவை களில் இட்டு வைத்துக் கொள்ளலாம் என எண்ணினேன். கூலம், மாமுதலியவைகளைப் பக்குவம் செய்வதற்கு மட்கலம் இன்றியமையாது வேண்டியிருந்தது. ஆதலால் சாடிகளைப் போல நிறுத்திப் பண்டங்கள் இட்டு வைக்கத் தக்க பெரிய பாண்டங்கள் சிலவற்றையும் செய்ய முடிவு செய்தேன்.

# ஒன்பதாம் அதிகாரம்

## மட்பாண்டங்களை வனைந்தது

களிமண்ணைப் பதப்படுத்திப் பசையுள்ளதாக்குவதற்கு நான் மேற்கொண்ட பயனற்ற வழிகள் எத்தனை? வனைந்த கலங்கள் எவ்வளவு அழகின்மையும், உருவற்ற தன்மையும், உடையனவாய் இருந்தன? மண்ணில் தன் பளுவும் தாங்கத்தக்க பசைத் தன்மையில்லாததனால், வனைந்தவுடன் விண்டு விழுந்து உருவழிந்தவைகள் எத்தனை? நிழலில் இருந்து இறுகுமுன் அதிக வெப்பமான கடுவெய்யிலில் காயவைத்ததனால் காய்ந்து, முறுகி வெடித்தவைகள் எத்தனை? காயுமுன்னும், காய்ந்த பின்னும் எடுத்துக்கொண்டு போகும்பொழுதே விழுந்து உடைந்து சிதறியவை எத்தனை? சுருக்கிக் கூறினால் மிக வருந்திக் களிமண் இருக்குமிடம் கண்டு, அதை அகழ்ந்தெடுத்துப் பதப்படுத்தி, வீட்டுக்குக் கொண்டுவந்து, குழைத்துக் கலங்கள் வனைய முயன்றேன். இதற்கெல்லாம் இரண்டு திங்கள் சென்றன. அவ்வாறு வனைந்த கலங்களும் இரண்டே. அவை பருமனும் அழகின்றியும் இருந்தன. நான் அவைகளைச் சாடி என்று கூற விரும்பவில்லை. என் வெட்கக் கேட்டைக் கூறினால் கேட்பவர் என்னை இகழ்ந்து நகைப்பார்கள். அல்லது "பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப் பேதை வினைமேற் கொளின்"—என்று என்னைக் கண்டு இரக்கங்கொள்வார்கள்.

ஆயினும், ஒரு வகையாக அக்கலங்கள் இரண்டும் வெயிலில் நன்றாய்க் காய்ந்து இறுகிய பின், நான் அவைகளை மெதுவாய்த் தூக்கிக் கொடிகளால் முடைந்த இரண்டு பெருங் கூடைகளுக்குள் உடைந்துபோகாமல் வைத்துக் கலத்திற்கும் கூடைக்கும் இடையிலுள்ள வெற்றிடத்தில் நெல் வைக்கோலும், வாற்கோதுமை வைக்கோலும் பொதிந்தேன். இக்கலங்கள் எப்பொழுதும் நீர்ப்பிடிப்பு

இல்லாதிருக்குமாதலால், கூலமும் அரைக்கப்படும் மாவும் வைக்க உதவுமென்று நினைத்தேன்.

பெரும்பானைகள் வனைவதில் மேற்கூறியவாறு பிழை நேர்ந்ததேயன்றிச் சிறுகலங்கள் பல வனைவதில் நான் எள் அளவும் தவறவில்லை. பணிக்குப் பயன்படும் சிறு வட்டக் கலங்களும், தட்டைக் கிண்ணங்களும், குடங்களும், சிறு கலயங்களும், பின்னும் என் கைக்கு இயன்ற எத்தனையோ பாண்டங்களும், வனைந்தேன். அவை வியத்தகு முறையில் வெயிலிற் காய்ந்து கற்போல் இறுகின.

### மட்பாண்டங்களைச் சுட்டு எடுத்த முறை

நீர் முதலிய ஒழுகும் பொருள்களை அடுப்பில் வைத்துக்காய்ச்சுவதற்கேற்ற, தகுதியான மட்பாண்டம் ஒன்று எனக்கு மிகவும் இன்றியமையாததாய் வேண்டியிருந்தது. நான் செய்த கலங்களில் ஒன்றும் அதற்குப் பயன்படாது. அவை தண்ணீர் பட்டாற் கரைந்துபோம்; சூட்டடுப்பில் வைத்தால் வெடித்துப்போகும். சிலநாள் சென்றபின், ஒரு நாள் அடுப்பில் நெருப்பு மூட்டிச் சற்றுக் கொழுந்து விட்டு எரியும்படி வளர்த்து இறைச்சி சமைத்த பின் அந் நெருப்பை அவிக்கப்போனேன். போனபொழுது முன் உடைந்த கலத்தின் ஓடு ஒன்று நெருப்பினுள் பழுக்கக் காய்ந்து, கற்போல் இறுகித் தட்டோடுபோலச் சிவந்திருந் தது. அதைக் கண்டு வியந்து மகிழ்ந்தேன். உடைந்த மட்கலத்தின் ஓட்டை இப்படி நெருப்பில் சுடலாமானால், முழுக் கலங்களையும் பழுதின்றிச் சுடலாம் எனத் துணிந் தேன்.

இந்த உறுதியான எண்ணத்தைக்கொண்டு நான் வனையும் மட்கலங்களைச் சுடுவதற்குச் சூளை அமைப்பது எவ்வாறு என்று ஆராயத்தொடங்கினேன். குலாலர் மட் கலம் சுடும் சூளை எத்தகையதென்றேனும், அக்கலங்க ளுக்கு ஈயம் பூசி மினுக்கிடச் செய்வது எவ்வாறு என்றே னும் நான் அறியேன். என்னிடத்தில் காரியம் சிறிது

அளவு இருந்தது இருந்தும் பயன் என்ன? ஆயினும் ஒருவாறு கருதி, பெருங்கலங்கள் மூன்றும், பானைகள் இரண்டு மூன்றும் ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிவைத்துச் சுற்றிலும் விறகுக் கட்டைகளை நெருக்கமாய் அடுக்கி, அக் கட்டைகளின் கீழ் எரிதழல் இட்டு, விறகு எரிய எரியச் சுற்றுப்புறத்திலும் மேற்புறத்திலும் பின்னும் விறகு வைத்து, நெருப்பை வளர்த்து, நான் அடுக்கிய கலங்கள் அனைத்தும் முழுவதும் பழுக்கக் காய்கிறவரையில் எரித்தேன். அவைகள் சிறிதும் வெடிக்கவில்லை. எரிதழல் போலக் காய்ந்து சிவந்தபின், ஐந்து ஆறு மணி நேரம் அனலில் இருக்கச் செய்தேன். அக்காலங்களில் ஒன்று வெடிக்காமல் உருகித் தண்ணீர்போலப் பெருகிற்று. களி மண்ணுடன் மணல் கலந்திருந்ததனால் அஃது கடுமையான வெப்பத்தால் காரீயம்போல உருகியது. பின்னும் நெருப்பு வளர்த்துக்கொண்டிருப்பேனாகில் அஃது உருகிப் பெருகிக் கண்ணாடியாகும். ஆகையால், நான் நெருப்பை வரவரத் தணிக்கப் பாண்டங்களின் சிவந்த நிறம் சிறிது சிறிதாய் மங்கிற்று. நெருப்பு விரைவில் தணியாதபடி இரவு முழுதும் விழித்திருந்து அதற்கு வேண்டிய பக்குவங்கள் செய்தேன். காலையில் நன்றாக அமைந்த கலயங்கள் மூன்றும், வேறு இரண்டு பானைகளும் நன்றாய் வெந்து இறுகியிருந்தன. அக்கலயங்கள் அவ்வளவு சிறந்தவைகளல்ல. மணல் உருகிப் பெருகியதனால் பானைகளில் ஒன்றில் கண்ணாடி போல மினுக்கேறியிருந்தது.

## சுட்ட மட்கலங்களில் சமையல் செய்து பார்த்தல்

இவ்வாறு செய்த ஆராய்ச்சி கைகூடி வந்தபின் எனக்குப் பயன்படத் தக்க, மட்பாண்ட வகையனைத்தும் எளிதில் உண்டாக்கிச் சேர்த்தேன் என்று கூறவேண்டுமோ? நான் வனைந்த கலங்களின் உருவம் ஒழுங்காயமைய வில்லை. மண்ணிற் பணிகாரம் செய்யும் சிறு பிள்ளைகளைப் போலவும், மாவைப் பிசைந்து பசையாக்கும் வகை தெரியாமல் பணிகாரம் செய்யத் துணியும் பெண்டிரைப் போலவும் கைத் தேர்ச்சியில்லாமல் கலம் வனையத் தலைப்பட்ட

எனக்கு அவைகள் விதம் விதமான சிறந்த உருவுடைய வைகளாய் அமையுமா?

இவ்விதமான எளிய செயலைக் குறித்து என்னைப் போல் அதிக மகிழ்ச்சியடைந்தவர் எவரும் இல்லை. எரி நெருப்பைத் தாங்கத் தக்க மட்பாண்டம் வளமாய்ச் செய்ததை எண்ணி இன்பமடைந்தேன். வெந்த பாண்டங்கள் செவ்வையாய் ஆறும் முன்பே அவற்றில் ஒன்றில் தண்ணீர் விட்டு, அதை அடுப்பில் வைத்து இறைச்சி சமைத்துப் பார்த்தேன். சமையல் அப்பாண்டத்திற் பக்குவமாய் நிறைவேறிற்று. பின்னும் ஒரு துண்டு ஆட்டுக்குட்டி இறைச்சியில் சுவைமிக்க குழம்பு வைத்தேன். மிளகுப் பொடி முதலிய மணந்தரு பொருள் இருக்குமானால் அது மேலும் நன்றாயிருந்திருக்கும்.

**கல்லுரல் செய்ய முயற்சி**

அதன்மேல் நெல் குறுவதற்கு ஒரு கல்லுரல் வேண்டும் என்று எனக்குக் கவலை உண்டாயிற்று. திரிகையை நானொருவனே திறம்படச் செய்யக்கூடும் என்ற துணிவு பிறக்க வில்லை. கல்லுரல் தேடுவது எப்படி என்று எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. உலகத்தில் வழங்கிய கைத் தொழில் வகை பலவற்றுள் ஒன்றும் அறியாத எனக்குக் கல்தச்சர் செய்யும் வேலை எவ்வாறு தெரியும்? அதற்குரிய கருவிகள் எனக்கு ஏது? அது நிற்க, குழி அடித்து உரலாகப் பயன்படுத்தத்தக்க பெருங்கல் ஒன்று வேண்டும் என்று பலநாள் வரையில் மனம் சலிக்காமல் பார்த்துத் திரிந்தேன்; பாறை ஒழிய மற்றொன்றையும் நான் காணவில்லை. பாறையைப் பிளந்து வெட்டிக் கொண்டு வருவதற்காயினும், அகழ்ந்து எடுப்பதற்காயினும் வகையறியாது இருந்தேன். அறிந்தாலும் பயனில்லை. அத்தீவின் பாறை உறுதி யுடையதன்று. எளிதில் உதிரத்தக்க மணற்பாங்கான கல். அதிற் செய்யப்படும் உரல் பளுவான உலக்கையால் குத்தும்பொழுது அதிர்ச்சியைத் தாங்காமல் வெடித்து உதிர்ந்துபோம்.

வெடிக்காதிருப்பினும், குத்தும் அரிசியுடன் மணல் உதிர்ந்து கலக்கும். உறுதியான கல் தேடியும் நெடுநாள் வரையில் அகப்படவில்லை. அதனால் கல்லுரலைக் குறித்த நினைவைத் தள்ளிவிட்டேன்.

### மர உரல் செய்ய முயலுதல்

உறுதி வாய்ந்த மரம் ஒன்று தேடி உரல் செய்ய முடிவு செய்தேன். மர உரலுக்கு வளமான மரத்துண்டு எளிதில் அகப்பட்டது. நான் பெயர்த்துக் கொண்டுவரத் தக்க பருமன் உள்ள மரத்துண்டு ஒன்றை வெட்டியெடுத்து, எனது கோடரியினாலும், கைக் கோடரியினாலும், அதை உரலைப் போலச் செய்து, பிரேஜில் நாட்டு இந்தியர் சிற்றுடம் குடைவதுபோல, நெருப்பினால் சுட்டு மிக வருந்தி அவ்வுரலிற் குழி உண்டாக்கினேன். பிறகு பாலை மரத்திற் பருமனும் உறுதியுமுள்ள உலக்கை ஒன்று செய்து, அடுத்து வரும் காலத்தில் விளையும் கூலத்தைக் குத்தி இடித்து மாவாக்குதற்கு உதவுமென்று அவ்வுரலையும் உலக்கையையும் பாதுகாப்பில் வைத்திருந்தேன்.

### மா அரிப்பதற்குச் சல்லடை செய்தது

அதன் பிறகு உமியையும் தவிட்டையும் கொழித்துத் தள்ளி, மா அரிப்பதற்காக ஒரு சல்லடை எனக்கு மிகவும் இன்றியமையாது வேண்டியிருந்தது. சல்லடையின்றி உணவுக்கு ரொட்டி சுடுவது முடியாது என்று தெரிந்தது. ஆயினும், சல்லடை செய்வதற்கு எனக்குத் துணைக் கருவிகள் ஏது? அதைப்பற்றி நினைப்பதுகூட முடியாத நிலையில் இருந்தது. மா அரிப்பதற்கு வளமான மெல்லிய ரெட்டுத் துணியாவது, இழை நீக்கமான ஆட்டுமயிர் ஆடையாவது இல்லாமல், சல்லடை செய்வது எப்படி? இவ்வகைத் துணி என்னிடத்தில் சிறிதும் கிடையாது. அதனால் பல திங்கள் வரையில் நான் இச்செய்தியைக் கனவிலும் நினைக்கவில்லை; நினைப்பதும் வீணே. செய்வது இன்னதென்று எனக்குச் சிறிதும் புலப்படவில்லை. என்னிடம் இருந்த சணல் நூல் ஆடையெல்லாம் கிழிந்து கந்

தையாய்ப் போயின. ஆட்டுமயிர் வைத்திருந்தேன். அதைத் தூய்மை செய்து துணி நெய்யவும் நான் அறியேன். அறிந் திருப்பினும், அத்தொழிற்குரிய கருவிகள் இல்லை. இறுதி யில் ஒரு வழி செய்தேன். கப்பலில் நான் கண்டு எடுத்து வைத்திருந்த கடலோடிகள் ஆடைகளுள், கழுத்தில் அணி யும் குட்டைகள் சில இருந்ததாக நினைவு வந்தது. அம்மெல் லிய துணியால் மூன்று சல்லடைகள் செய்து சில ஆண்டுகள் வரையில் அவைகளைக் கொண்டு காலந்தள்ளி வந்தேன். அச்சல்லடைகள் நன்கு அமைந்தன அல்ல; என் செயலுக்கு உதவின.

## அடுப்புச் செய்து ரொட்டி சுட்ட வகை

சல்லடை செய்து முடி-த்தபின், ரொட்டி செய்வதும், சுடுவதும் எப்படி யென்று நினைக்கத் தொடங்கினேன். முதலிற் புளித்த மா தேடுவது மிக அரிதாக இருந்தது. ஆதலால் அதைக் குறித்துச் சிந்திக்காமல் விட்டு, அடுப் புச் செய்வதைப் பற்றி ஆழ்ந்து நினைத்தேன். அதற்கும் ஒரு வழி பிறந்தது. ஏறக்குறைய இரண்டடி குறுக்களவும் ஒன்பது அங்குலம் குழிவும் உள்ள வாய் அகன்ற தட்டைக் கலங்கள் சிலவற்றை வனைந்து சுட்டு வைத்தேன். அன்றியும், நான் செய்து சுட்டு வைத்திருந்த நான்கு மூலைத்தட்டு ஓடுகள் சிலவற்றைப் பதித்து ஒழுங்குபெறச்செய்த அடுப்பில் வேண்டும்பொழுது நெருப்பு மூட்டிப் பின் கூறப்படுவதுபோல ரொட்டி சுட்டேன். நான்கு மூலைத் தட்டு ஓடுகள் என்று நான் கூறி யவை திருத்தமான நான்கு மூலை உடையவைகள் அல்ல.

அடுப்பில் இட்ட விறகுக் கட்டை எரிந்து தணலான பின், அத்தணலை முன் அடுப்பிற் பெயர்த்து எங்கும் பரப்பி, அடுப்பில் அதிகச் சூடேறும் அளவும் அப்படியே இருக்கவிட்டேன். சூடேறிய பின் தணலைப் பெருக்கித் தள்ளிவிட்டு, ரொட்டிக்குப் பிசைந்த மாவை அடுப்பில் வைத்து, மேற்சொல்லிய கலத்தை அதன்மேற் கவிழ்த்து அழுத்தி, நெருப்பை அக்கலத்தின் வெளிப்பக்கத்தில்

எங்கும் பரப்பி, புறத்தினின்றும் ரொட்டியிற் சூடேறும்படி செய்தேன். இவ்வாறே கை பழகப் பழகச் சிற்றுண்டிவகை செய்வதிற் கைதேர்ந்தவன் ஆனேன். நான் செய்த வாற் கோதுமை ரொட்டிகள் மிகவும் நன்றாக இருந்தன. சில வேளை அரிசி மாவாலும் 'ரொட்டிகள்' செய்தேன்.

**விளைந்த கூலத்தைப் பாதுகாத்து வைத்தல்**

நான் இத்தீவில் இறங்கிய மூன்றாவது ஆண்டின் பெரும்பாகம் மேற்கூறிய வேலை முயற்சிகளில் செலவா யிற்று. அவ்வேலைகளுக்கு இவ்வளவு காலம் வேண்டுவது ஏன் என்று எவரும் வியப்படைவதற்குக் காரணம் இல்லை. இடையில் வயலை உழுது, விதைத்துக் காத்துக் கூலம் விளைந்தபின் அதை அறுத்து வீட்டுக்குக் கொண்டு போய்ப் பெருங் கூடைகளில் வைத்து, காலம் கிடைத்த போது அக்கதிர்களை உதிர்த்து மணியாக்கினேன். போர் அடிக்கக் களமாவது, கருவியாவது இல்லாததனால் வருந் திக் கதிரைக் கையினால் கசக்க வேண்டியதாயிற்று.

வரவர ஆண்டுதோறும் விளைவு அதிகரித்து வந்தது. விளைந்த கூலத்தை வைக்கக் களஞ்சியத்தைப் பெரிதாயக் கட்ட வேண்டி யிருந்தது. விளைந்த வாற்கோதுமை இருபது கலம். நெல் இருபது கலத்துக்கு மேலேயே விளைந்தது. நான் முன்வைத்திருந்த ரொட்டி செலவழிந்து நாட்பட்டதனால், இனி வயிற்றை வாயைக் கட்டாமல், தாராளமாய்க் கைகொண்டமட்டும் செலவுசெய்து சாப்பிட முடிவு செய்தேன். மேலும் ஆண்டுதோறும் எனது உணவுக்குச் செலவாகும் கூலம் இவ்வளவென்று திட்ட மாய் அறிந்து கொண்டுணரவும் ஓராண்டில் ஒரு தடவை மட்டும் பயிர் இடுவது என்றும் முடிவு கட்டினேன்.

**வேண்டிய அளவுக்குமட்டும் நிலத்திற் பயிரிடுதல்**

மேற்கூறிய நாற்பது கலம் வாற்கோதுமையும் நெல் லும், ஆண்டு முழுவதும் என் உணவுக்குக் கண்டு, எஞ்சும் என்று நாளடைவில் மதிப்பிட்டு, அறிந்தேன். அதனால்

இவ்வளவு கூலம் எனது உணவு முதலிய செலவுக்கெல்லாம் போதும் என்று எண்ணி, ஒவ்வோர் ஆண்டும் சென்ற ஆண்டு பயிர் செய்த அளவு நிலத்தில் மட்டுமே பயிரிட முடிவு செய்தேன்.

### கண்ணுக்கு எட்டிய நாட்டை அடைய விரும்புதல்

இவ்வேலைகளைச் செய்துகொண்டு வரும் காலத்தில், முன்பு இத்தீவின் எதிர்கரையில் நின்று பார்த்தபொழுது, கடலுக்கு அப்புறம் தோன்றிய நாட்டைக் குறித்துப் பெரும்பாலும் என் நினைவு ஓடிற்று. அந்த நாடு மனிதர் குடியேறிய பரந்த கண்டமாய் இருக்குமென்றும் நான் கடலைத் தாண்டி அக்கரை சேர்வேனாகில், நெடுந்தொலைவில் உள்ள என் நாட்டை அடைவதற்கு ஏதும் வழி தேடலாம் என்றும் நினைத்தேன். அதனால் இந்தத் துன்ப நிலையினின்று விடுதலை பெறலாம் என்றும் கருதினேன்.

### அந்நாட்டில் உண்டாகும் தீமையை நினைத்து வருந்துதல்

இவ்விருப்பம் என் உள்ளத்தில் தோன்றி வளர்ந்து வந்தபோது, அந்நாட்டுக்குப் போவதனால் நேரிடும் துன்பங்களைக் குறித்தும், ஆப்பிரிக்கக் கண்டத்து அரிமாவையும், வேங்கையையும் விடக் கொடிய தன்மையுள்ள வேடர் கையில் அகப்படுவேனாகில், அதைவிட்டு நீங்குவதற்கு வழி ஏது என்பதைப்பற்றியும் நான் நினைத்து வருத்தப்படவில்லை. நான் அவர்களிடம் அகப்படுவேனாகில் அவர்கள் தப்பாமல் என்னைக் கொன்று தின்றுவிடுவார்கள். **கரிபியன்** கரை நாட்டில் வாழ்பவர்கள் மக்களூன் தின்பவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நிலக்கோட்டுத் திட்டத்தைப் பார்த்து நான் போகக் கருதும் இடம் **கரிபியன்** கரைக்கு அண்மையில்தான் உளது என்று நிலக்கோடுகளால் அறிந்தேன். அவர்கள் மக்களூன் உண்ணுதவராய் இருப்பினும், என்னை அழித்துக் கொல்லுவார்கள் என்பதில் ஐயமில்லை. பத்து, இருபது பெயராகச் சேர்ந்து போய் அவர்கள் கையில் அகப்பட்ட பல ஐரோப்பியர்களைக் கொலை செய்த அந்தக் கொடிய வேடர்கள் அச்சமின்றித்

தப்பித்துக் கொள்ளத் திறமையில்லாத என்னைத் தனியே கண்டால் தடையின்றிக் கொல்வார்கள். இந்நினைவுகள் எல்லாம் என் உள்ளத்தில் பின்பே உண்டாயின. முதலில் நான் இவைகளை ஆழ்ந்து நினைக்கவும் இல்லை. நினைத்து வருந்தவும் இல்லை. கடல் கடந்து அக்கரை சேரவேண்டும் என்பதே இரவும் பகலும் என் நெஞ்சிற் குடிகொண்டிருந்த அவா.

## பழைய ஓடத்தைப் போய்ப் பார்த்தல்

இந்த வேளையில் அல்லவோ என் சிறுவன் சூரியும், ஆபிரிக்கக் கரையடுத்த நெடுங்கடலில் ஆயிரம் கல் தொலைவுக்கும் அதிகமாக நான் செலுத்திக்கொண்டு போன பெரிய ஓடமும் என்னிடத்தில் இருக்க வேண்டும் என்றெண்ணி மனப்பால் குடித்தேன். எட்டாத ஒன்று எண்ணியதனால் கிட்டுமா? முதலிற் புயல் அடித்துக், கப்பல் முழுகி நாங்கள் அவதிப்பட்டபொழுது, நெடுந்தூர மட்டும் அலையினால் தள்ளுண்டு, கரையில் ஒதுங்கிய ஓடத்தைப் போய்ப் பார்த்தேன். அது முன் இருந்த இடத்திற்குச் சற்று விலகி, மோதும் அலையின் அதிர்ச்சியாலும், காற்றின் வன்மையாலும் கடற்கரையில் அடர்ந்த பரு மணல் மேட்டில் கவிழ்ந்திருந்தது. அவ்விடத்தில் முன் போலத் தரை வறட்சியாய் இருந்தது. ஆயினும் கடல் நீர் இல்லை.

## ஓடத்தைக் கடலில் தள்ள முயலுதல்

ஓடத்திலுள்ள உடைவு, சிதைவு முதலிய பழுதுகளை நீக்கிப் பக்குவப்படுத்திக் கடலில் தள்ளி விடுவதற்கு எனக்குக் கையாள் உதவி கிடைக்குமானால், நான் அச்சமின்றி அதில் ஏறி, பிரேஜில் நாட்டுப் பகுதிக்கு எளிதிற் போய்ச் சேரக்கூடும். ஆயினும் உதவியற்ற என்னால் ஆகத் தக்கது என்ன? நான் இருந்த தீவை இடம் விட்டுப் பெயர்த்தாலும் பெயர்க்கலாம். கவிழ்ந்த அவ்வோடத்தைப் பெயர்க்கவும் நிமிர்த்தவும் என்னால் முடியாது. ஓடத்தை நிமிர்த்தி மணல் மேட்டினின்று

இறக்கக்கூடுமானால், அதிலுள்ள பழுதுகளைத் தொல்லை யின்றி நீக்கி, அதில் அச்சமின்றி ஏறிப் பயணம் செய்ய லாம் என்று எண்ணினேன். என்றால் ஆகும் முயற்சி களைச் செய்யக் கருதிக் காட்டுக்குப் போய் ஓடத்தை நெம்புவதற்கும், பெயர்த்துத் தள்ளுவதற்கும் உறுதி யுள்ள கோல்களும், உருளைகளும் வெட்டிக் கொண்டு வந்தேன்.

வெட்டிக் கொண்டுவந்து பக்குவம் செய்வதாகிய இந்த வீண்வேலையில் மூன்று நான்கு கிழமைகள் சென்றன. துரும்புபோல் இருக்கும் என்னுடைய குறைந்த வலிமை யால் அவ்வோடத்தைப் பெயர்த்து எடுக்க முடியுமோ? இறுதியில் என் உழைப்பெல்லாம் வீணாய் முடிந்தது. அதன் பிறகு மணல் மேட்டை அடியினின்று வெட்டிப் பெயர்த்து, ஓடத்தை வீழ்த்த நினைத்து, மணலை அகழ்ந் தேன். ஓடம் அங்கு இங்கு விலகாமல் நேரே விழும்படி மர முளைகளை அங்கங்கே அழுந்தக் கடாவினேன்.

ஒரு வகையாக மேட்டை வெட்டிப் பிரிக்கவே ஓடம் விழுந்தது. விழுந்தும், அதை நிமிர்த்திப் பெயர்க்க வேணும், அதன் கீழே போகவேணும் என்றால் முடிய வில்லை. ஆதலினால் அவ்வேலையை அவ்வளவில் நிறுத்தி விட்டேன். இப்படி ஓடத்தின் உதவியால் பயணம் செய்ய முடியும் என்னும் நம்பிக்கை ஒழிந்தும், கடலின் அக்கரையிற் கண்ட நாட்டிற்கு எவ்விதமாயினும் துணிந்து போவதற்கு வழி செய்யவேண்டும் என்று என் உள்ளத்திற் பிறந்த அவா தணியவில்லை; வரவர வளர்ந்தது. அவா வின் வழிச்செல்வதற்குரிய துணைப்பொருள்களோ இயலா தனவாக இருந்தன.

### புதிய ஓடம் செய்ய முயலுதல்

அந்த நாட்டுப் பக்கங்களில் வாழும் குடிகள் தொழிற் கருவிகள் இல்லாமலும், கையுதவியில்லாமலும், ஒருவிதப் பெருமரத்தைக் கோதி, வளமான சிற்றேடங்கள் செய்யும் வழக்கத்தை எண்ணி, அப்படிச் செய்ய என்றால் எளிதில் இயலும் என்று அறிந்தேன். அவ்வித ஓடம் செய்

வதற்கு நீகிரோவருக்காயினும், இந்தியருக்காயினும் எனக்குள்ள திறமை இல்லை என்று நினைத்து, ஓடம் செய்வதைப்பற்றி என் உள்ளம் மகிழ்ந்தது. பெருங்குறை ஒன்று மட்டும் இருந்தது. அதை நான் நினைத்துப் பார்க்கவில்லை. ஓடம் செய்து முடிந்தபின் அதைத் தள்ளிக் கொண்டு போய்க் கடலில் இறக்குவதற்கு ஆள்துணை இல்லாத குறைதான் அது. கருவி இல்லாத குறைக்கு இந்தியர் ஏதாயினும் வழிசெய்து தங்கள் செயலைச் சிதறவிடாதிருப்பர். ஆள் இல்லாத குறையை நீக்குவதோ முடியாத செயலாக இருந்தது. தகுதியான பெரிய மரம் பார்த்து வெட்டுவதும், கிளைகளை நறுக்கி, மரத்தை ஓடம் போல வெட்டுவதும், அதன் உள் இருக்கும் உறுதியான பகுதியை வெட்டியாவது சுட்டாவது எடுப்பதும் எனக்குச் சுமையாகத் தோன்றவில்லை. இவ்வேலைகள் செய்து முடிந்து, ஓடம் நன்றாக அமைந்த பின், அதை ஒரு மயிரிழை தள்ளுவதற்காயினும் என்னால் முடியுமா? இருந்த விடத்தில் இருக்க விடுவது ஒழியப் பெயர்த்துத் தள்ளிக் கடலில் இறக்கும் திறம் எனக்குச் சிறிதும் இல்லை.

## புதிய ஓடத்தைக் கடலில் இறக்குவது எப்படி?

இவ்வோடத்தை நான் செய்யுங் காலத்தில் எனது துன்ப நிலையை மறந்து, ஓடத்தைக் கடலில் இறக்கும் வகை யாது என்று எப்பொழுதும் என் உள்ளத்தில் நினைத்துக் கொண்டிருப்பேன் என்று எல்லோரும் நினைப்பார்கள். என் நினைப்பு அஃது அன்று. ஓடத்தைக் கடலில் இறக்கும் வகையைப் பற்றி நான் கனவிலும் நினைக்கவில்லை. ஓடத்தில் ஏறிப் பயணம் செய்வதைப் பற்றிய எண்ணமே என் உள்ளத்தைக் கவர்ந்தது. அவ்வோடம் இருந்த விடத்திற்கும் கடலுக்கும் இடையில் நாற்பத்தைந்து பாகம் தொலைவிருந்தது. கடலில் நாற்பத்தைந்து கல் தொலைவும் ஓடத்தைச் செலுத்திக்கொண்டு போவது எனக்கு அரிதன்று. நிலத்தில் நாற்பத்தைந்து பாகம் அளவு அவ்வோடத்தைப் பெயர்த்துத் தள்ளிக்கொண்டு போய்க் கடலில் இறக்குவதே பெருஞ்சுமையாய் இருந்தது.

அறிவு கெட்ட மூடனைப் போல் முன்பின் ஆராயாமல் நான் ஓடம் செய்யத்தொடங்கினேன். அதில் ஏறி நாடிய இடத்திற்போய்ச் சேரலாம் என்று நினைத்து மகிழ்ந்த தொழிய, ஓடம் ஏறு முன் செய்தற்குரியவைகள் அனைத்தையும் செய்ய என்னால் இயலுமோ என்று நான் நினைத்துப் பார்க்கவில்லை. ஓடத்தைக் கடலில் இறக்கும் துன்பத்தைப்பற்றிய நினைவு அடிக்கடி எனக்கு உண்டாகாது இருக்கவில்லை. உண்டாகும் பொழுதெல்லாம் "ஓடம் செய்து முடியவேண்டும்; முடிந்த பின் அதைப் பெயர்த்துக் கொண்டு போய்க் கடலில் இறக்குவதற்கு ஏதாயினும் ஒரு வழி தவறாமல் தோன்றும்" என்று என்னுள்ளே சொல்லிக்கொண்டு வந்தேன். அறிவில்லாதவர் கூறும் இச் சொல்லைக் கடைப் பிடியாய்க்கொண்டு, ஓடத்தை நீரில் இறக்குவதற்குரிய வழிகளை நினையாமல் இருந்தேன்.

## புதிய ஓடம் செய்த முறையும் காலமும்

அவாவுக்கு அடிமையாகி, இத்தவறான செயலை மேற்கொண்டு, ஓடம் செய்வதற்காகத் தேவதாரு மரம் ஒன்றைத் தறித்தேன். முற்காலத்தே ஜெருசலேமில் கோயில் கட்டுவதற்குச் **சாலமன்** அரசனுக்கும் அவ்வித உயர்ந்த மரம் அகப்பட்டிராது என்று எண்ணிக்கொண்டேன். அதன் அடியின் குறுக்களவு ஐந்து அடி பத்து அங்குலம். வரவரச் சிறுத்து, இருபத்திரண்டடி உயரத்தில் அதன் குறுக்களவு நான்கு அடி பதினொரு அங்குலம். அதன்மேல் சற்றுத் தொலைவுமட்டும் பின்னும் சிறுத்துக் கிளையோடியது. அதைத் தறிப்பதற்கு நான் பட்ட துன்பம் இவ்வளவென்று இல்லை. ஒருவாறு தறித்து வீழ்த்தி, அடியை மட்டமாய் வெட்டிச் செவ்வையாக்குவதற்கு இருபது நாட்கள் சென்றன. கொம்புகளையும் சிறிய கிளைகளையும், படர்ந்த நுனியையும் எனது கோடரியினாலும், கைக்கோடரியினாலும் சொல்வதற்கரிய வருத்தத்தோடு வெட்டிக் கொத்தி எடுக்க மேலும் பதினான்கு நாட்கள் சென்றன. பின்பு அதைத் தகுதியான அளவுக்கு வெட்டி, ஓடத்தின் உருவுடையதாக்கிக் கடலிற் கவிழாமல் நிமிர்ந்து நீந்தும்

படி அதன் அடிப்புறத்தைப் பக்குவப்படுத்த ஒரு திங்கள் சென்றது. அதன்மேல் அதன் உள்ளிடத்தைக் குடைந்து உருப்படுத்தக் கிட்டத்தட்ட மூன்று திங்கள் சென்றன. நான் அதை நெருப்பினுற் சுடாமல், உளியினுலும் கொட்டாப்புளியினுலும் அடித்து, வருந்தி உழைத்துப் பள்ளமாகத் தோண்டினேன். இவ்வேலை நிறைவேறிய பின் ஓடம் மிகச் சிறப்பாய் அமைந்தது. அஃது இருபத்தாறு ஆட்கள் ஏறத்தக்க அமைப்புள்ளதாயிற்று. ஆகவே எனக்கும் என் பொருள்களுக்கும் அதில் தாராளமாய் [illegible]ம் இருந்தது.

### செய்த ஓடத்தைக் கண்டு மகிழ்ச்சியடைதல்

ஓடம் செய்து முடிந்தபொழுது, நான் அதைப் பார்த்து, மகிழ்ச்சியடைந்தேன். தனி மரத்தில் அமைந்த அவ்வளவு பெரிய ஓடத்தை நான் எப்பொழுதும் கண்டதில்லை. நான் அதை வளமாய் உருவாக்கும் பொருட்டுப் பலநாள் வரையில் பட்ட வருத்தமும், மனக்கவலையும் இவ்வளவென்று சொல்ல வேண்டியதில்லை. இதைப் படிப்பவர் தாமே அறிவர். இனி அதைக் கடலில் இறக்குவதொழிய வேறு குறை வேலை ஒன்றுமில்லை. அதைக் கடலில் இறக்குவதற்கு இடம் பெற்றிருந்தேனுனல், நான் அதில் ஏறி, அறிவு ஆராய்ச்சியுள்ள எவரும் இதுவரையிற் கனவிலும் எண்ணுத வியக்கத்தக்க பயணம் செய்திருப்பேனென்பதற்கு ஐயமில்லை.

### ஓடத்தை நீரில் இறக்கச் செய்த வேலைகள்

ஆயினும், அளவற்ற துன்பப்பட்டு உழைத்தும் அதைக் கடலில் இறக்கிவிட என்னுல் முடியவில்லை. நான் செய்த வழிகள் அனைத்தும் மாறுபாடாய் முடிந்தன. அலைவாய்க் கரைக்கும் ஓடம் இருந்த இடத்திற்கும் உள்ள தொலைவு முந்நூறு அடிதான். அவ்விடத்தினின்றும் நீர்த்துறைக்குப் போகப்போகத் தரை மேடாக இருந்தது. இந்த முதலாம் இடையூற்றை நீக்குவதற்கு, அலைவாய்க் கரை வரையிலும் தரையை வரவரச்சரிவாய் அகழ்ந்து, அந்த வழி

யாய் ஓடத்தைத் தள்ளிக்கொண்டு போய்ச் சேர்க்க நினைத்து மிகுந்த தொல்லைப்பட்டேன். சிறைச்சாலையி லிருந்து துன்பப்படுபவன் தப்பியோட முயற்சி செய்வானு கில், அதன் பொருட்டுச் செய்யவேண்டிய எல்லாவகை முயற்சிகளையும், வழிகளையும் வருத்தம் பாராட்டாமல் மனக் கிளர்ச்சியோடு செய்வான் அன்றோ? அவ்வாறே நான் அலுப்பின்றித் தரையை அகழ்ந்து சரிவாக்கி, மேற்கூறிய தடையை நீக்கியபின் மற்றொரு தடை நேர்ந்தது. முன் குறித்த கப்பலின் ஓடத்தைப்போலவே இவ்வோடத்தையும் இருந்தவிடம் விட்டுப் பெயர்க்க எனக்கு வன்மை போதா திருந்தது.

ஓடத்தைத் தள்ளிக்கொண்டுபோய் நீரிற் சேர்க்க முடியாமையினுல், ஓடம் இருக்கும் இடத்திற்குக் கால்வாய் வெட்டி நீரைக் கொண்டுவரக் கருதினேன். தரையை அளந்து, கால்வாய் வெட்டத் தொலைவு நீளம் இவ்வள வென்று கணக்கிடலானேன். அதன் ஆழம் அகலம் இவ் வளவென்றும், மண்ணை அள்ளி வெளிப்படுத்தும் வகை இன்னதென்றும், நினைத்து ஆராய்ந்தேன். அப்பொழுது, எனக்குக் கையாள் உதவி இல்லாததனுல், இவ்வேலை முழுவதும் நான் எனது கையாற் செய்து முடிக்கப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் செல்லுமென்று கண்டேன். கடல் தரை போகப் போக உயர்ந்திருந்தது. மிக உயர்ந்த இடத்திற் கால்வாய் இருபதடி ஆழத்திற்கு வெட்ட வேண்டும். அரிதின் முயன்று செய்யத்தக்க இவ்வேலையின் அருமைப் பாட்டையும், தொல்லையையும் நினைத்து, என்ன செய்வதென்று புலப்படாமல் மன வருத்தத்தோடு இவ் வேலையை நிறுத்திவிட்டேன்.

இதனுல் என் மனம் மிகுந்த துயரத்தில் மூழ்கிற்று. எந்த வேலையையும் செய்யத் தொடங்குமுன், அதற்குச் செல்லும் செலவு எவ்வளவென்றும், அதை முழுவதும் முடிக்கச் செய்யத் தக்க வன்மை நமக்கு உண்டோ என்றும், நினைத்து ஆராய்ந்து முடிவு செய்வது முதன்மை யானது என்றும், இப்படி ஆராயாமல் தொடங்குவது

அறிவின்மை என்பதாகவும் இப்பொழுதுதான் கண்டேன். இந்த அறிவு எனக்குத் தக்க வேளையில் வாராமற் போயிற்று.

## நான்காவது ஆண்டு நிறைவு விழா

இவ்வேலையின் நடுவே, நான் இத்தீவை அடைந்து நான்காவது ஆண்டு முடிவு பெற்றதனால், முன்போல அன்போடும், அமைதியாகவும் ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடினேன். அருள் மொழியாகிய மறைநூலை நாள் தோறும் படித்து, இறைவன்மீது பற்றுக்கொண்டு மறைப் பொருளை நினைத்து அவ்வழிச் சென்றதனாலும், இறைவன் திருவருளாலும் எனக்கு முன் இருந்த அறிவு நீங்கப் புதிய அறிவு உண்டாயிற்று. நற்செயல் தீச்செயல்களைக் குறித்து நான் முன்பு நினைத்தது ஒருவகை; இப்பொழுது நினைப்பது ஒரு வகையாய் இருந்தது. இவ்வுலகம் எனக்கு நெருங்கிய தொடர்பு இல்லாததாகவும், அதற்கும் எனக்கும் உறவு இல்லை என்பதாகவும், அதை நான் விரும்ப வேண்டியதில்லை என்பதாகவும், சுருக்கிக் கூறின் இந்தக் காலத்திலாயினும் பிற்காலத்திலாயினும் உலகத்திற்கும் எனக்கும் தொடர்பு சிறிதும் இல்லை என்பதாகவும் நினைத்தேன். இறந்தவர்கள் இவ்வுலகத்தைக் கண்டால், இது தாம் இருந்த உலகம் என்றும், இப்பொழுது இதைவிட்டு நீங்கியதனால், இனி இதற்கும் தமக்கும் தொடர்பு இல்லை என்றும் எண்ணுவார்களன்றோ? அவ்வாறே இவ்வுலகத்தைப்பற்றிய என் எண்ணமும் இருந்தது. நன்றியுள்ளவர்களின் தந்தையாகிய ஆபிரகாம் நரகத்திற் சென்று துன்பமுற்ற செல்வந்தனைப் பார்த்து "எனக்கும் உனக்கும் இடையில் பெரும் பிளவு நிலைத்திருக்கிறது" என்று கூறியதுபோல நானும் உலகத்திற்குச் சொல்லத்தக்க எண்ணமுடையவனாய் இருந்தேன்.

## பற்று அற்ற மனப்பான்மை

முதலாவது இம்மைக்குரிய தீவினைச் செயல்கள் எல்லாவற்றோடும் தொடர்பின்றி நான் விலகியிருந்தேன்.

எனக்கு உடற்பசியோ காணும் வேட்கையோ வாழ்க்கைச் செருக்கோ இல்லை. நான் விரும்பித்தேடுதற்குரிய பொருள் ஒன்றும் இல்லை. அடையத்தக்க பேறுகள் எல்லாவற்றையும் பெற்றிருந்தேன். தீவு முழுவதும் எனது ஆட்சியில் இருந்தது. என் உரிமைப் பொருளா யிருந்த அந்த நிலப்பகுதிக்கு நானே பேரரசன் எனினும் பொருந்தும். எனக்குப் பகைவர் இல்லை. நான் அடைந்துள்ள அரசியற் பெருமைக்கும், அதிகாரத்துக்கும் எதிராகப் போர் தொடுக்கும் பங்காளிகளும் இல்லை. பல கப்பல்களில் ஏற்றத் தக்க திரளான கூலங்களை நான் விரும்பினால் விளைவித்திருக்கலாம். ஆயினும் எனக்கு அவ்வளவு கூலம் தேவையில்லை. செலவுக்கு வேண்டிய அளவுமட்டும் விளைவித்தேன். வேண்டுமெனில் எத்தனை ஆமைகள் எனினும கிடைக்கும். அப்பொழுதைக்கப்பொழுது எனக்கு ஒன்றுக்குமேல் வேண்டுவதில்லை. ஒரு கூட்டமான மரக்கலங்களைச் செய்வதற்குப் போதுமான மரங்கள் நிறைந்த காடும், அம்மரக்கலங்களில் ஏற்றுமதி செய்யப் போதுமான கொடிமுந்திரிச் சாறும், கொடிமுந்திரிவற்றலும் உண்டாக்கத்தக்க எண்ணிறந்த கொடிமுந்திரிக் குலைகளும் இருந்தன.

எவ்வளவு இருப்பினும், எனக்குப் பயன்படத் தக்கவைகளன்றி, மற்றையவைகள் எனக்குச் சிறு துரும்புக்கு ஒப்பாய் இருந்தன. ஒருவிதத்திலும் குறைவின்றி உண்ண உடுக்க வேண்டுமளவிற்கும் பொருள் உடையவனாய் இருந்தேன். இதற்குமேல் எவ்வளவு பொருள் இருப்பினும் அவை எனக்கு எதற்குப் பயன்படும்? நான் கொல்லும் விலங்கினுடைய இறைச்சியில் தின்று எஞ்சிய பகுதி நாயினாலும், எலி முதலியவற்றாலும் தின்னப்பட வேண்டும். உணவுக்கு வேண்டும் அளவுக்கு அதிகமாகக் கூலம் விளைந்தால் அது வீணாகக் கெட்டுப் போவதன்றி வேறு எதற்கும் பயன்படாது. நான் வெட்டின மரங்கள் நிலத்தில் வீணே கிடந்து நாளடைவில் உட்கிப் போயின. அவை எனக்கு விறகுக்கு அன்றி மற்றொன்றுக்கும்

உதவா. உணவு சமைப்பதற்கன்றி வேறு ஒன்றுக்கும் எனக்கு விறகு வேண்டுவதில்லை.

**வேண்டும் பொருள்களும் வேண்டாப் பொருள்களும்**

பொருள்களின் தன்மைகளையும், என் பழக்க வழக்கங்களையும்பற்றி நுணுக்கமாய் நினைந்து ஆராய்ந்து பார்த்தேன். இம்மையில் தேடிய பொருள்கள் எல்லாம் நமக்குப் பயன்படுவனவற்றுக்கு அதிகமாக எஞ்சி யிருப்பவை ஒன்றுக்கும் உதவா என்று அறிந்தேன். நாம் எவ்வளவு பொருள்களைத் தேடி ஈட்டி வைப்பினும் அவற்றுள் நம்மால் எவ்வளவு பயன்படுத்தப்படுகின்றனவோ அவ்வளவு மட்டுமே நம்முடையன என்று அறிந்தேன். எச்சிறகையாலும் காக்கை விரட்டாத கருமிகூட என் நிலையில் இருப்பானாயின் அவா என்னும் நோயினின்றும் அவன் விலகுவான். என் உரிமையாய் இருந்த பொருள்களுள் நான் பயன்படுத்தும் வகை தெரியாது இருந்தவை எண்ணிறந்தவை. என்னிடம் இல்லாத பொருள்களிற் சில மிகப் பயன்படத் தேவையாய் இருப்பினும் அவை எனக்குப் புன்மைப் பொருள்களா யிருந்தன. அவைகளையன்றி வேறு எந்தப் பொருளையும் அடையவேண்டும் என்னும் அவா என் உள்ளத்தில் எழவில்லை. முன்பு நான் கூறியபடி தங்க நாணயமும், வெள்ளி நாணயமும், ஆகியவை முப்பத்தாறு பவுன்வரையில் ஒரு சாக்கிற் கட்டிவைத்திருந்தேன். அஃது எதற்குப் பயன்படும்? பயனற்ற துரும்புபோன்ற அக்குப்பை எனக்கு எவ்வகையிலும் பயன்படவில்லை. நூறு நூற்றைம்பது சுங்கான்கள் அகப்படுமானால் அவற்றையாவது; மா அரைப்பதற்குத் திரிகை அகப்படுமானால் அதையாவது, இரு கை நிறைந்த பணம் கொடுத்தும் வாங்கலாமே யென்று எண்ணினேன். அன்றியும் ஆறு பென்னி விலை உள்ள இரண்டொரு சீமைக்கிழங்கு வகைகளாவது, ஒரு கை நிறைந்த பயறு அவரை வகைகளாவது, எழுதும் மை ஒரு புட்டியாவது கிடைக்குமானால் என்னிடத்திலிருந்த தொகை முழுவதையும் கொடுத்து விடுவேன். அந்த நாணயங்கள் எனக்கு ஒரு விதத்திலும் பயன்படாதிருந்தன. அவை

அறைக்குள் பாழாய்க்கிடந்து மழைக்காலத்தில் மலை முழு யில் சுவறிய ஈரத்தால் களிம்பேறிக்கிடந்தன. நான் அந்த அறை நிறைய வைரம் இரத்தினம் முதலிய மணிக் கற்களை வைத்திருப்பினும் அவையும் எனக்குப் பயன்படா ஆத லால், ஒன்றுக்கும் பயன்படாத சிறு துரும்புக்கு ஒப்பா கவே அவை இருக்கும்.

### போதும் என்ற மனமே பொன்செய்யும் மருந்து

வரவர நான் மிக எளிய வாழ்க்கை நடத்தி, நாட் கழிக் கப் பயின்றேன். எனது வாழ்க்கை உள்ளத்துக்கும் உட லுக்கும் இன்பந்தருவதாய் இருந்தது. பெரும்பாலும் உணவு உண்ணத் தொடங்கும்பொழுது, இறைவனுக்கு வணக்கம் செலுத்தி, இவ்வாறு காட்டில் எனக்கு உணவு தேடிக்கொடுத்தருளிய அவருடைய திருக்கைகளை வியந்து போற்றினேன். விண்ணில் உலாவும் நிலாவுக்குப் பக்கம் இரண்டு. அவ்வாறே யாவருடைய நிலைமைக்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று ஒளிப்பக்கம், மற்றொன்று இருட்பக்கம். அவரவர் அடையும் இன்பங்கள் அனைத் தும் ஒளிப்பக்கம். துன்பங்கள் அனைத்தும் இருட்பக்கம். நான் பெரும்பாலும் எனது நிலைமையின் இருட்பக்கத்தை யன்றி ஒளிப்பக்கத்தைப் பார்க்கவும், எனக்குப் பழக்கமில் லாத நன்மைகளையன்றிப் பழகி அறிந்தவைகளை நினைக்க வும் பயின்றேன். இப்படிப் பயின்றதனால் என் உள்ளம் மிக வும் தேறிக் களிகூர்ந்தது. அதனால் உண்டான மன நிறை வைத் திட்டமாய் என்னால் வெளியிட முடியாது. மக்களிற் சிலர் கடவுள் தமக்கு அருள் செய்யாத நன்மைகளை அடை வதற்கு அவாக்கொள்வதனால், தாம் பெற்ற நன்மைகளை மன நிறைவோடு துய்க்க வாய்ப்பு இல்லாதவர்களாய், எப் பொழுதும் மனக்குறைவடைந்து வருத்தப்படுவதும் உண்டு. அவர்களுக்கு நல்லறிவு பிறக்கவேண்டி, என் உள்ளக்கருத்தை இவ்வாறு குறிப்பிட்டேன். நாம் துய்க் கும் நன்மைகளைக் கடவுள் நமக்கு அருளினார்; அந்த நன் றியை மறப்பதனால்தான், நமக்கு விளையாத நன்மைகளைக்

குறித்து, மனக்குறை உண்டாகிறது. இதுவே பழக்கத்தால் நான் கண்ட முடிவான கருத்து.

## இன்பத்தை நினைத்து மகிழ்ச்சி கொள்ளுக

முதலில் நான் ஏறிய கப்பல் கருணை நிறைந்த கடவுள் அருளால், வியக்குமாறு கரைக்கு அருகில் வந்து நின்றதும், கடலில் மூழ்கித் துன்பமுற்றுக் கரை அடைந்து துணையற்றிருந்த நான், எளிதில் நீந்திப்போய், அக்கப்பலில் ஏறித், தொழில் செய்வதற்குக் கருவிகள், தற்காப்பிற்குரிய படைக்கலங்கள், உணவு தேடுவதற்கு வெடி மருந்து, குண்டு முதலிய துணைப்பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வந்து இன்பத்துடன் வாழத்தக்க வாய்ப்புப் பெறுதிருப்பேனுனல், எனது நிலை எவ்வளவு இரங்கத்தக்க துன்பமுடையதாக இருக்கும். அவ்விதம் அஞ்சத்தகும் துன்ப நிலைமைக்கும், எனது இக்கால நிலைமைக்கும் வேறுபாடுகளை மனம் என்னும் துலாக்கோலில் சீர்தூக்கிப் பார்த்து ஆராய்ந்தேன். இந்த ஆராய்ச்சி எனக்கு மிகவும் நன்மை அளித்தது. என்னைப்போலத் துன்பம் உறும் எவருக்கும் இவ்வாறு ஆராய்வது நன்மையளிக்கும் என்பதில் ஐயமில்லை.

மேற்கூறியவாறு கப்பலில் எனக்கு ஒன்றும் அகப்படாதிருக்குமானுல், நான் உயிர்வாழ்வதற்கு என்ன செய்வேன்? மீனும் ஆமையும் தவிர எனக்கு உணவு மற்றொன்றும் கிடையாதன்றோ? அவைகளையும் நான் கண்டு பிடிக்க நாட்பட்டதனுல், அதற்குள்ளே இறந்துபோயிருப்பேன். தப்பிப் பிழைத்திருப்பினும் நாகரிகமற்ற காட்டு வேடர் வாழ்வதுபோல சீர்கெட்ட நிலையில் இருப்பேன். ஏதாயினும் சூழ்ச்சி செய்து வெள்ளாடாவது, பறவையாவது கொல்வேனுகில் அவற்றைக் கீறித் தோல் உரிக்கவாயினும், தோல் வேறு, குடல் வேறு, இறைச்சி வேறாகப் பிரித்தெடுக்கவாயினும் வகையில்லாமல், காட்டு விலங்குகளைப் போல் பல்லால் கீறி, நகத்தாற் கிழித்துச் சிறுமைப்பட்டிருப்பேன். இவை எல்லாவற்றையும் ஒருநாளன்றிப் பல

நாள் வரையில் மிகத் தெளிவாக நீண்ட நேரம் ஆராய்ந்து பார்த்தேன்.

**தம்மை விடத் துன்பப்படுவோரை நினைத்து மகிழ்க**

இவ்வாறு நினைத்த அளவில், கடவுள் எனக்குச் செய்த நன்மையை நான், எனது உள்ளங்குளிரக் கண்டறிந்து, பல விதத் துன்பங்களும், பேரிடர்களும் உடைத்தாயிருப்பினும், எனது இப்பொழுதைய நிலையை நினைத்துக் கடவுளுக்கு வணக்கம் செலுத்தினேன். தாம் அடைந்துள்ள பேரிடரை எண்ணி, "எவர் படும் இடராவது எனது இடருக்கு ஈடாகுமா?" என மனம் வருந்தி அலறுவோர், மேற்கூறியவாறு நினைப்பார்களானால், பயன் உண்டென்று வற்புறுத்திச் சொல்லாமல் விடுவதற்கு என் மனம் இசையவில்லை. அப்படிப்பட்டவர்கள் தம்மினும் அதிக இக்கட்டுக்கு ஆளாயிருக்கும் சிலருடைய நிலைமையைக் குறித்து நினைக்கக்கடவர். இறைவன் கட்டளையால் தங்களுக்குப் பின்னும் மிகுதியான பேரிடர் வரநேர்ந்தால், தாங்கள் படும் துன்பம் மற்றவர் படும் துன்பத்தைவிட மிகக் குறைவு என்றே எண்ணக் கடவர்.

**தீயோருடைய இணக்கம் தீமை தரும்**

அன்றியும், எனது இக்கால நிலைக்கும், கொடியவனாகிய எனக்குத் துன்ப நீக்கம் செய்யும் கடவுள் முறைப்படி வருவித்து என்னைத் தண்டிக்கத் தகுந்த நிலை எதுவோ, அதற்குமுள்ள வேறுபாட்டை நினைத்துப் பார்த்தேன். அவ்வாறு பார்த்தபோது என் உள்ளத்தில் பிறந்த நல்ல எண்ணங்களால் எனக்கு நம்பிக்கையும், ஆறுதலும், உண்டாயின. நான் கடவுளை அறிந்து, அவர் திருவடிகளை வணங்காமலும், அவருக்கு அஞ்சாமலும் கொடியவனாய் இருந்தேன். என் தாய் தந்தையர் எனக்கு இளமையில் கல்வி கற்பித்திருந்தார்கள். அவர்கள் கடவுளை நினைத்து அன்பு பாராட்டி, மதித்து அஞ்சி வணங்கவேண்டும் என்று என் இளநெஞ்சில் அறிவு புகட்டாமல் இருக்கவில்லை. நான் செய்யத்தக்க செயல் இவை என்றும்,

என் இயற்கை வாழ்வு இப்படிப்பட்டது என்றும், நான் படைக்கப்பட்ட காரணங்கள் இவை என்றும் எனக்கு விளக்கிக் கூறியிருந்தார்கள். நான் செய்த நன்றி மறந்த செயலை என்னென்று கூறுவேன். இறைவனுடைய தண்டனைகளை விளக்கும் அடையாளங்களை எப்பொழுதும் கண்ணுக்கெதிரே கண்டும், கடவுளிடத்தில் அச்சம் சிறிதும் கொள்ளாதிருக்கின்ற கடலோடிகள் செய்யும் தீய செயலை இளமையில் மேற்கொண்டேன். இளம் பருவத்திலேயே கடற்பயணம் செய்யத் தொடங்கி, கடலோடிகள் கூட்டத்திற் சேர்ந்ததனால், இறைவனைப் பற்றி என் உள்ளத்தில் தோன்றியிருந்த சிறிது அளவு உணர்ச்சியும் மறைந்து விட்டது. கடவுளைப் பற்றிய உணர்ச்சி என்னிடம் இருப்பது கண்டு கடலோடிகள் நகைத்து ஏளனம் செய்ததனால் அவ்வுணர்ச்சி என்னிடம் அடியோடு அழிந்து போயிற்று. வரவர என் மனம் கல்லாகியது. வரும் பேரிடர்களை எண்ணாமலும், இறப்பைப் பற்றிய அச்சம் இல்லாமலும், அறிவு கெட்ட கீழ் மக்களுடன் அன்றி நன் மக்களோடு பழகாமலும் இருந்தேன். நற்செயல்களைச் செய்யாமலும், நன்மைக்கு அடிப்படையான நல்லுரைகளைக் கேளாமலும் வீண் பொழுது போக்கியதனால் கடவுள் உணர்ச்சி என்னிடம் சிறிதும் இல்லாமல் அழிந்துபோயிற்று.

### நான் கடவுளுக்கு ஏன் நன்றி செலுத்தவில்லை ?

எத்தகைய நற்பண்பும், நற்செயல்களும் என்னிடத்தில் சிறிதும் இன்றி ஒழிந்தன. எனது இப்பொழுதைய நிலையைக் குறித்தாயினும், பிற்கால நிலையைக் குறித்தாயினும் சிறிதும் நான் நினைத்துப் பார்க்கவில்லை. ஸல்லி துறையினின்று நான் தப்பியோட வாய்ப்புப் பெற்றதும், **போர்த்துகீசிய** மாலுமி என்னைக் கடல் வழியிற் கண்டு என்னைத் தன் கப்பலில் ஏற்றிக்கொண்டு சென்றதும்; **பிரேஜில்** நாட்டில் நான் இறங்கி வறுமையின்றி வாழப் பெற்றதும், **இங்கிலாந்தி**லிருந்து பொருள்களை நான் வரவழைத்ததும் ஆகிய எல்லாம் கடவுள் அருளால் பெற்றிருந்தும் அவைகளுக்காக நான் கடவுளுக்கு நன்றி செலுத்-

திராது இருந்தேன். எனக்கு உயிர் இழப்பு உண்டாகாது பாதுகாத்தும், பொருள்களைக் கொடுத்து உதவியும் எனக்கு நன்மை செய்த கடவுளுக்கு நன்றி செலுத்தும் எண்ணம் என் உள்ளத்திலும் உண்டாகவில்லை. எனக்கு மிகக் கொடிய துன்பங்கள் நேர்ந்த காலத்திலும், நான் கடவுளை வாழ்த்த நினைக்கவில்லை. "இறைவனே ! என் மீது இரங்கும்!" என இரண்டொரு சொல்லேனும் சொல்லவும் இல்லை. பயனற்ற ஆணை இடும்பொழுதும், கடவுளைப் பழிக்கும் பொழுதும் அன்றி மற்ற எந்த நேரத்திலும் கடவுள் திருப்பெயரை நான் கூறவில்லை.

### கடவுள் நம்பிக்கை தோன்றி வளர்ந்தது

இதற்குமுன் ஓரிடத்திற் கூறியபடி, நான் நினைவு அற்று ஒழுங்கு மீறி நடந்ததைப் பற்றிப் பல திங்கள் வரையில் நினைத்து மனம் கலங்கி இருந்தேன். இத்தீவில் வந்து சேர்ந்த பிறகு அவ்வப்பொழுது எனக்கு வந்த பேரிடரையும், கடவுள் எனக்குச் செய்த பேரருளையும், என் தீமைகட்குத் தக என்னைக் கடிது ஒறுக்காமல் இருப்பதையும், அவர் எனக்கு இன்றியமையாது வேண்டிய இன்ப வாழ்வு நிலைகளை முழுவதும் கொடுத்திருப்பதையும் நினைத்தேன். என் வருந்தத்தக்க நிலையைக் கண்டு கடவுள் மனம் இரங்கினார் என்றும், அவர் இன்னும் என்மீது இரங்கி, எனக்கு அருள் செய்வாரென்றும், இதனால் அறிந்து நம்பிக்கை கைவிடாது இருந்தேன்.

### கடவுள் எனக்குச் செய்த உதவிகள்

இவ்வாறு தோன்றிய நினைவுகளால் நான் என் உள்ளத்தைத் தேற்றி, இந்த நன்னிலையில் என்னை நிறுத்திய இறைவனுடைய விருப்பத்திற்கு மாறுபடாது அமைந்து நடக்கவும், இதற்காக அவருக்கு முழுமனத்தோடு வாழ்த்துக் கூறவும் முடிவு செய்தேன். அவர் நான் செய்த கொடுஞ் செயல்களுக்கு ஏற்றபடி என்னைக் கடிது ஒறுக்காமல், நான் உயிர்வாழச் செய்து, என் மீது இரங்கி இவ்விடத்திற் பெறுதற்கரிய பல நன்மை

தீனி எனக்குக் கொடுத்ததனுல், நான் மனக்குறை கொள்ளுதல் தக்கதன்று என்று கருதினேன். இனி, ஒரு பொழுதும் எனது நிலைமையைக் குறித்து வருந்தி ஏங்காமல், மகிழ்ச்சி கொண்டு, வியக்கத்தக்க விதமாக நாடோறும் கடவுள் எனக்கு உணவு கொடுத்து அருளுவதற்காக அன்றன்று நான் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றேன் என்றும், எலிஜா என்பவனைக் காக்கைகளாற் பாதுகாத்த வண்ணம் கடவுள் ஒரு விதத்தில் அன்றி அடுத்தடுத்துப் பல விதத்தில் என்னைப் பாதுகாத்து வருவதை நான் மறவாமல் இருக்கவேண்டும் என்றும் உறுதிசெய்து கொண்டேன். மேலும் மனிதர் இல்லாத இந்தத் தீவில் என்னைக்கொண்டு வந்து சேர்த்தது, ஒரு விதத்தில் எனக்குத் துன்பந்தான். எனினும், இங்கே கொடுமையுள்ள கோநாய், வேங்கை முதலிய கொடிய காட்டு விலங்குகள் இல்லை. அவை இருந்தால் என் உயிருக்குத் தீங்கு உண்டாகும். நஞ்சுள்ள பாம்பு முதலிய கொடிய உயிர்களாவது, நச்சுப் பூண்டுகளாவது இல்லை. இருந்தால் நான் அவைகளைத் தின்று இறந்து போயிருப்பேன். காட்டு வேடர் முதலிய கயவர் இல்லை. அவர்கள் இங்கு இருந்தால் என்னைக் கொன்று தின்று விடுவார்கள். ஆகவே, இத்தீவைப் போலும் எனக்குப் பயனுள்ள தீவு எங்கும் இல்லையென்று கண்கூடாகக் கண்டேன்.

### இன்பமும் துன்பமும் நிறைந்த வாழ்க்கை

சுருக்கிக் கூறின் ஒரு விதத்தில் என்னுடைய நிலைமை கவலை நிறைந்ததாகவும், மற்றொரு விதத்தில் கடவுள் அருளால் குறைவற்றதாகவும், இருந்தது. கடவுள் எனக்குச் செய்த நன்மைகளையும், இந்த நிலையில் அவர் என்னை இடையூறின்றிப் பாதுகாத்து வருதலையும் உணர்ந்து, அவ்வுணர்ச்சியினுலே, என் நெஞ்சைக் கவலையின்றித் தேற்றும் வன்மை எனக்கு இருக்குமானுல், இங்கிருந்து நான் இன்பத்தோடு வாழ்வதற்குத் தடையொன்றுமில்லை. மேற்கூறிய பற்பல எண்ணங்களைச் சீர்தூக்கிப் பார்த்து,

என் உள்ளத்தை ஒழுங்குபடுத்தியபின்பு, நான் துன்பத்தை மறந்து சோர்வு நீங்கி யிருந்தேன்.

நான் கடல் கடந்து சென்று அத்தீவை அடைந்து, ஆண்டுகள் சில சென்றதனால், எனக்குப் பயன்படும் என்று கப்பலினின்று எடுத்துச்சென்று கரைசேர்த்த பொருள்களிற் சில சிதைந்து கெட்டுப்போயின; சில தேய்ந்து உதவாமற் போயின. சில ஏறத்தாழச் செல வழிந்து போயின.

## வாழ்க்கைப் பொருள்கள் வரவரக் குறைந்தன

எழுதும் மை சிறிது காலத்துக்கு முன் செலவழிந்து போயிற்று என்று கூறினேன் அன்றோ? மிகச் சிறிது அளவு மட்டும் இருந்தது. அதில் அவ்வப்பொழுது நீர்விட்டுக் கலந்து எழுதிக் கொண்டு வந்தேன். வரவரக் கருமை நிறம் குறைந்தது. எழுதும் எழுத்துக் காகிதத்தில் விளக்கமாய்த் தெரியவில்லை. மை இருக்கிறவரையில் ஏதாயினும் சிறப்பான நிகழ்ச்சிகள் நடந்த நாள்களை மட்டும் குறித்து வைத்தேன். நான் எழுதிய நாள் கணக்குப் புத்தகத்தை ஒழுங்காய்ப் பார்வையிட்ட பொழுது, எனக்கு நேர்ந்த பற்பல பேரிடர் முதலியவை உண்டான நாட்கள் ஒன்றோடொன்று வியக்குமாறு ஒத்திருந்தன. மூட நம்பிக்கை உள்ளவர்களைப் போல நானும் நன்னாள் என்றும் கரிநாள் என்றும் எண்ணி நடப்பவனாய் இருப்பேனானால், மிகவும் வியப்படைவேன்.

## துன்பங்களெல்லாம் குறிப்பிட்ட நாளில நடைபெற்றன

முதலாவது என் தாய் தந்தையரையும், சுற்றத்தாரையும் விட்டுப் பிரிந்து, கப்பலேறி நாடு கடந்து ஹல் நகரத்திற்கு ஓடிய திங்கள் நாள் எதுவோ அடுத்த ஆண்டு அந்தத் திங்கள் அதே நாளிற்றான் ஸல்லி துறைப்போர்க் கப்பற்காரர் என்னைப் பிடித்து அடிமையாக்கினார்.

யார்மௌத் துறையிற் பழுதுபட்ட கப்பலினின்று நான் தப்பித்துக் கொண்ட திங்களும் நாளும் எவையோ

அடுத்த ஆண்டு, அந்தத் திங்கள் அந்த நாளிலேயே, ஸல்லி துறையினின்று ஓடமேறிச் சிறையினின்றும் தப்பி ஓடி வந்தேன்.

நான் பிறந்தநாள் செப்டம்பர்த் திங்கள் 30-ஆம் நாள். நான் பிறந்த இருபத்தாறும் ஆண்டு கடலில் முழுகி னேன்; என்னை இத்தீவின் கரையில் அலை ஒதுக்கிவிட்ட தனால், நான் கரை ஏறித் தப்பிப் பிழைத்ததும் செப்டம்பர் 30-ஆம் நாள் தான். ஆகவே, எனது தீ யொழுக்கத்தின் தொடக்க நாளும், நான் பிறந்த நாளும், இத்தீவில் நான் தனியே நாட்கழிக்கத் தொடங்கிய நாளும் ஒரே திங்கள் ஒரே நாள் ஆகும்.

**சிக்கன வாழ்க்கை**

வரவர மை செலவழிந்து போனது மட்டுமன்றிக், கப்ப லினின்று கொண்டுவந்த, ரொட்டியும் செலவழிந்து போயிற்று. நான் அதைக் கூடிய வரையில் மிகக் குறை வாகவே செலவு செய்தேன். ஓர் ஆண்டுக்கு மேலாக நாள் ஒன்றுக்கு ஒரு ரொட்டி விழுக்காடு தின்றேன். அது முழுதும் செலவழிந்த பின், நான் விதைத்த கூலம் விளைந்து என் உணவுக்குப் பயன்படுகிற வரையில் ஓர் ஆண்டு ரொட்டி இன்றி யிருந்தேன். கூலவிதை கிடைக்க வும், அதை விதைத்துப் பயிரிட்டுப் பயன் பெறவும் எனக்கு இடம் அளித்த இறைவனுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். முதலில் கூலம் விளைந்த வியத்தகு வரலாறு முழுதும் முன்பே கூறி யிருக்கின் றேன்.

ஆடைகளும் வர வரக் கிழிந்து போயின. சணல் நூல் ஆடை முழுவதும் இல்லை. மற்றக் கடலோடிகளுடைய பெட்டிகளிற் கண்டெடுத்த கட்டமிட்ட சில சட்டைகள் மட்டும் இருந்தன. அவைகளைப் பழுதாக்காமல் பாதுகாப் பாய்ச் சேர்த்து வைத்தேன். பெரும்பாலும் சட்டை ஒன்று தவிர, வேறு மேலங்கிகள் உடுப்பதற்கு இசையா. கட லோடிகளின் ஆடைகளுக்குள் இருந்த சட்டைகள் ஏறத்

தாழ முப்பத்தாறு. அவை எனக்கு மிகவும் உதவியாய் இருந்தன.

கடலோடிகள் காவல் செய்யும்பொழுது உடுத்துக் கொள்ளும் இரட்டு மேலங்கிகளும் சில இருந்தன. தீவின் கொடிய வெப்ப நிலைக்கு அவற்றை அணிதல் பொருந்தாது ஆகலின் நான் அவைகளை அணிந்து கொள்ளவில்லை. ஆடை வேண்டுவதே இல்லை. ஆடையின்றித் திரிவது எனக்கு வெட்கமா யிருந்தது. நான் தனியே இருந்ததனால், ஆடையின்றித் திரியினும் குறைகூறுவார் இல்லை. என் மனம் அவ்வாறு திரிதலை ஒத்துக்கொள்ளவில்லை.

நான் முழுதும் ஆடையின்றி இருத்தலும் இயலாது. ஏனெனில் ஆடையின்றி வெய்யிலின் வெப்பத்தை என் உடம்பு பொறுக்காது. பெரும்பாலும் வெப்பத்தினால் என் உடம்பு கொப்புளித்தது. சட்டை தரித்துக்கொண்டு உலாவும்பொழுது, காற்றும் உலாவிச் சட்டைக்குள்ளே சென்றதனால், பின்னும் ஒரு பங்கு அதிகக் குளிர்ச்சி உண்டாயிற்று. மேலும் குல்லாவாயினும், தொப்பியாயினும் அணியாமல் வெயிலில் உலாவுவதற்கு என்னால் இயலாது. அந்நாட்டில் தலைக்கு நேரே கதிரவன் வெப்பம் மிகச் சூடாய்ப் பாய்வதனால் வெறுந்தலையோடு வெளிப்படின் உடனே தலை நோவு உண்டாகும். குல்லா இட்டுக் கொள்ளின் வெப்பம் இராது.

**உடைகள் தைத்தல்**

இவற்றை என் மனத்தில் கொண்டு, என்னிடத்தில் உள்ள கந்தைகளை ஒருவாறு தைத்து, மூட்ட நினைத்தேன். எனது மேற்சட்டைகள் எல்லாம் கிழிந்து கந்தையாய்ப் போயின. அதனால், என்னிடமிருந்த பெரிய இரட்டு மேற் சட்டைகளையும், பின்னும் உள்ள ஆடைகளையும், அழித்து மார்ச்சட்டை தைக்கத் தொடங்கினேன். தையல் வேலையில் எனக்குப் பழக்கம் இல்லாமையால் எனக்குத் தோன்றியபடி ஒருவாறு தைத்தேன். தையல் நன்றாக அமையவில்லை. அவ்வாறே இரண்டு மூன்று மார்ச்சட்டை

கள் தைத்தேன். அவை எனக்கு நெடுங்காலம் உதவு மென்று எண்ணினேன். காற்சட்டைத் தையல் கெட்டுப் போயிற்று. கை திருந்தப் பலநாள் சென்றன.

**தோலினால் உடைகள் தைத்தல்**

நான் சுட்டுக்கொன்ற நாற்கால் விலங்குகள் எல்லா வற்றின் தோலையும் வெய்யிலிற் கொம்பு நாட்டி விரித்துப் பத்திரப்படுத்தி வைத்திருந்ததாகச் சொன்னேன் அன்றோ! அவைகளிற் சில முறுகக் காய்ந்து விறைத்துப் பயனற்றுப் போயின. சில மிகவும் பயனுள்ளவைகளாய்க் காணப்பட்டன. முதலில் தோலினால் தலைக்கு ஒரு பெருங் குல்லா செய்தேன். மழைத்துளி தெறித்துச் சிதறும்படியாக மயிர் அடர்ந்த பக்கம் குல்லாவின் வெளிப்பக்கத்தில் இருக்கும்படி அமைத்தேன். குல்லா வேலை நன்றாய் நிறை வேறியதனால், பின்பு அத்தோலினாலேயே சற்று நெகிழ்ச்சியான மார்ச்சட்டை ஒன்றும், காற்சட்டையும் செய்தேன். காற்சட்டை முழந்தாள் மட்டமாய் வெட்டித் தைக்கப் பட்டது. உடம்பிற் சூடு உண்டாகாமல், காற்று உலாவிக் குளிர் உண்டாகும்படி இப்படிச் செய்தேன். இந்தக் குல்லாவும் சட்டையும் அழகின்றி யிருந்தன. தச்சு வேலையில் திறமையில்லாதது போலவே, தையல் வேலை யிலும் சிறிதும் திறமையின்றி யிருந்தேன். இத்தோல் உடைகளை அணிந்துகொண்டு ஒருவாறு காலம் தள்ளினேன். நான் வெளியில் உலாவும்பொழுது மழை பெய்தால் குல்லாவின் புறத்திலும், மேற்சட்டையின் புறத்திலும் மயிர் அடர்ந்திருந்ததனால், தலையிலாவது உடம்பிலாவது ஈரம் சுவறவில்லை.

**தோலினால் குடையும் செய்தேன்**

இதற்குமேல் ஒரு குடை செய்வதற்கு அதிக காலமும் உழைப்பும் சென்றன. குடையில்லாத பெருங்குறையை நினைத்து, ஒன்று செய்ய வேண்டும் என்றிருந்தேன். வெப்பம் அதிகமான பிரேஜில் நாட்டார் குடை செய்த முறையைப் பார்த்திருக்கிறேன். அந்நாட்டில் குடைகள்

மிகுதியாகப் பயன்படுவன. அந்நாட்டைப்போல் இத் தீவிலும் வெய்யில் கடுமையாய் இருந்தது. நில நடுக்கோட் டுக்கு அருகில் இத்தீவு இருப்பதால் வெப்பம் மிகஅதிகமா யிருந்தது. அன்றியும், நான் பெரும்பாலும் வெளியில் போக்கு வரவு செய்ய நேரிட்டதனுல், வெயிலுக்கு மட்டு மன்றி, மழைக்கும் குடை பயன்படும். குடை செய்வதற்கு நான் பட்ட துன்பம் சிறிது அன்று. மாதிரியாகச் செய்து கெடுத்த குடைகள் பல. குடை செய்யும் முறை நன்முக எனக்குத் தெரிந்துவிட்டது என்று எண்ணி மன நிறைவு கொண்ட பின்பும் இரண்டு மூன்று குடைகள் பழுதாய்ப் போயின. இறுதியில் என் மனத்திற்கேற்ற வளமான குடை அமைந்தது. ஆயினும் அஃது அவ்வளவு அமைப் பானது அன்று. குடையைச் சுருக்குவதற்கு வழி செய் வது மிக வருத்தமாய் இருந்தது. அஃது எளிதில் விரிந்தது. சுருங்காமல் விரிந்தபடி இருக்குமானுல், எப்பொழுதும் அதைத் தலையின்மேல் பிடித்துக்கொண்டு போகலாமே யன்றிச் சுருக்கிக் கொண்டு போவதற்கு முடியாது. இறுதி யில் செய்த ஒன்று சுருக்கவும் விரிக்கவும் தக்கதாக அமைந்தது. மயிர் உள்ள பக்கம் வெளியில் நிற்கும்படி அந்தக் குடைக்குத் தோலுறையிட்டேன். ஆகையால், அதை விரித்துப் பிடித்துக்கொண்டு சென்றபோது மழை பெய்த வேளையிலும் பாதுகாப்பாய் இருந்தது. வீட்டுச் சுவரோடு இறக்கிய தாழ்வாரத்தில் விழும் மழை வழிந்து ஓடுவதுபோலக், குடையின்மீது, விழுந்த மழைத்துளி தோலிற் சுவருமல் மயிரில்பட்டுத் தெறித்து ஓடிற்று. அன்றியும், வெயிற்காலத்தில் குடை பிடித்துக்கொண்டு சென்முல், குளிர்காலத்தில் உள்ள இன்பத்தைக்காட்டி லும் இன்பம் தரும் நிழல் உண்டாயிற்று. குடை தேவை யில்லாதிருக்கும்பொழுது, நான் அதைச் சுருக்கிக் கக்கத் தில் வைத்துக்கொண்டு சென்றேன்.

### தனியே இருப்பதில் மகிழ்ச்சி

கடவுள் விருப்பத்திற்கேற்றபடி இணங்கி, மனம் தேறித் திருவுளச் செயலால் எது நேருமோ, அதுவே

எனக்கு நன்மையென்று முழுமனத்தோடு எண்ணி இன்புற்று வாழ்ந்தேன். மனிதருடன் கூடி வாழ்வதைவிட இப்படித் தனியேயிருப்பது எனக்கு இன்பமாய் இருந்தது. எனக்கு உள்ள குறை நிறை முதலியவைகளைப்பற்றி உரையாடுவதற்கு இங்கு எவரும் இல்லையே என்று எண்ணி, என் மனம் வருத்தப்பட்டதும் உண்டு. அவ்வேளைகளில் நானும், எனது நெஞ்சும் ஒத்த கருத்தோடு வஞ்சனையின்றி உரையாடுவதும், அடிக்கடி கடவுள் பெயரைச் சொல்லி வாழ்த்துவதனாலே கடவுளுடன் கலந்து உரையாடுவதும், இப்பூவுலகில் மனிதருடன் பழகுவதனால் உண்டாகத்தக்க இன்பத்தினும் அதிக உயர்வான நிறைந்த இன்பம் அல்லவா என எண்ணி மகிழ்ந்தேன்.

### இரண்டாம் தடவை சிறிய ஓடம் செய்தேன்

இதன் பின் ஐந்து ஆண்டுகள் வரையில் எனக்கு எவ்வகைப் பேரிடரும் வரவில்லை. யாதொரு மாறுதலும் இன்றி முன் இருந்த இடத்திலேயே அதே நிலையில் இருந்து நாட்களைக் கழித்து வந்தேன். ஆண்டுதோறும் வாற்கோதுமையும் நெல்லும் விதைத்து, விளைவித்து, ஆகாரத்துக்கு வேண்டும் அளவிற்குச் சேர்த்து வைத்துக் கொண்டும், கொடி முந்திரிப் பழங்களைப் பருவத்தில் அறுத்துச் செலவுக்கு வேண்டியமட்டும் வற்றல்போட்டு வைத்தும், ஒவ்வொரு நாளும் துப்பாக்கிகொண்டு வெளியில் உலாவிப் பறவை முதலியவைகளைச் சுட்டும் வாழ்ந்து வந்தேன். பின்னும் ஒரு முதன்மையான வேலை எனக்கு இருந்தது. அஃது ஓடம் ஒன்று செய்வதுதான். அவ்வேலையைத் தொடங்கிச் சலிப்பற்றுச் செய்து கடைசியில் ஒருவாறு நிறைவேற்றினேன். அதன் பிறகு ஆறடி அகலம், நாலடி ஆழமுள்ள கால்வாய் ஒன்றை அரைக்கல் தொலைவு மட்டும் வெட்டிக் கடலோடு சேர்த்து அதன் வழியாய் ஓடத்தைக் கடலில் இறக்கினேன். முதலிற் செய்த ஓடம் மிகப் பெரிதாய் இருந்தது. நான் அதனை ஆராயாமற் செய்து எவ்வாறுவது கடலில் இறக்க முயன்

றும் எனக்கு வல்லமை இல்லாமற் போனதனால், இனி எனக்கு நல்லறிவு பிறப்பிக்கும் நினைவுப் பொருளாக அதை அவ்விடத்திலேயே இருக்கச்செய்தேன். இரண்டாந் தடவை ஓடஞ் செய்யத் தொடங்கியபொழுதும், எனக்குத் தகுதியான மரம் அகப்படவில்லை. அரைக்கல் தொலைவுக்குக் கால்வாய் வெட்டாமல் ஓடத்தைக் கடலில் இறக்கவும் முடியவில்லை. எப்படியாயினும் இவ்வேலை, என்னால் செய்து முடிக்க இயலும் என்று கண்டதனால் நான் தொடங்கின வேலையைத் தளரவிடாமல், நேர்ந்த துன்பத்தைக் குறித்தும் மனம் இளைக்காமல், சென்ற கால நிகழ்ச்சிகளையும் நினைவிற்கொள்ளாமல், ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்குள் வளமான ஓடம் ஒன்று செய்து முடித்தேன்.

## பத்தாம் அதிகாரம்

### ஓடத்தில் ஏறித் தீவைச் சுற்றிவருதல்

நான் செய்யத் தொடங்கிய சிற்றோட வேலை முடிந்த பின், முதலிற் கருதியபடி, நாற்பது கல்வரையில் அகன்ற கடலின் கால்வாயைத் தாண்டி மறுகரையிற் சேர்வதற்கு அச்சிற்றோடம் உதவாது என்று கண்டு, அந்த எண்ணத்தைவிட்டு, அதில் ஏறித் தீவைச் சுற்றிவர நினைத்தேன். நான் முன்பு கரை வழியாய்ச் சென்று தீவின் ஒரு முடிவைக் கண்ட அளவில், அந்தப் பயணத்தில் தீவின் சில வளங்கள் எனக்குத் தெரிந்தன. அதனால் அத்தீவின் கரையையடுத்த மற்றப் பாகங்களையும் பார்த்துவர ஆவல் கொண்டேன். என்னிடத்திலுள்ள ஓடத்தில் ஏறித் தீவைச் சுற்றிவருவது நன்று. வேறு எவ்வகையாலும் தீவைச்சுற்றி வர இயலாது என்று முடிவு செய்தேன்.

எதனையும் நன்றாய் ஆராய்ந்து அறிவின் துணை கொண்டு செய்யவேண்டும் அன்றோ? ஆதலால் என் கருத்துக்கேற்றபடி ஓடத்திற்குச் சிறிய பாய்மரம் ஒன்று செய்து, முன்பு கப்பலினின்று திரளாய் எடுத்துவந்து வைத்திருந்த பாய்த்துண்டுகளிற் சிலவற்றை வெட்டி அளவான பாய் ஒன்று தைத்தேன்.

பின்பு ஓடத்தில் ஏறிப் பாய்மரம் நாட்டிப் பாய் தூக்கி விரித்து, ஆராய்வதற்காகச் சற்றுத் தொலைவு அதைச் செலுத்திப் பார்த்தேன். அது பக்குவமாய் ஓடிற்று. பிறகு உணவுப் பொருள் முதலிய உயிர் வாழ்க்கைக்கேற்ற இன்றியமையாத பொருள்களையும், படை வகை முதலிய வழித்துணைப் பொருள்களையும் அதனுள்கொண்டு செல்ல நினைத்தேன். அதற்கேற்றபடி மழையிலாவது, காற்றிற் சிதறித் தெறிக்கும் அலைத் திவலைகளிலாவது நனையாமல் பாதுகாப்பாய் வைப்பதற்கு ஓடத்தின் முன் பக்கத்திலும், பின் பக்கத்திலும் பூட்டுள்ள சிற்றறைகளும் பெட்டிகளும




செய்தேன். அன்றியும் ஓடத்தின் உட்பகுதியில் துப்பாக்கி வைப்பதற்காக நீண்டு ஒடுங்கிய குழாய் ஒன்று செய்து, அதில் தண்ணீர் தெறிக்காதபடி மறைவுத்திரைத் தொங் கல் கட்டினேன்.

மேல் பக்கத்தின் ஒரு படியில் எனது குடையை நிறுத்தி விரித்து, அதன் காம்பின் அடியைப் பாய்மரத்தின் அடிபோல் உறுதியாய் நிற்கும்படி இறுக்கினேன். இக்குடை எனது தலையில் வெய்யில்படாமல் காக்கும் மேற்கட்டிக்கு ஒப்பாய் இருந்தது. பிறகு அடிக்கடி நான் சற்றுத்தொலைவு சிறு பயணம் செய்து வந்தேன். கரைக்கு எட்டாத தொலைவிற் செல்லவில்லை. சிறிய துறைக்கு மிக்க தொலைவிற் செல்லவும் இல்லை. இப்படிச் சில காலம் பயணம் சென்று வந்த பின், கடல் சூழ்ந்த எனது சிறிய நாட்டின் சுற்றுப்புறத்தைப் பார்த்துவர விரும்பிப் பயணப்பட நினைத்துப், பின் சொல்லப்படும் உணவுப் பொருள் முதலியவைகளை ஓடத்தில் ஏற்றினேன்:—வாற்கோதுமை மாவிற் சுட்ட பணிகாரம் இருபத்து நான்கு; ஒரு மட்கலம் நிறைந்த நெற்பொரி—இஃது எவ்வளவு தின்றாலும் என் மனம் தெவிட்டாது; ரம் சாராயம் ஒரு புட்டி. இறைச்சி ஒரு வெள்ளாட்டிற் பாதி. பின்னும் வெள்ளாடு சுடுவதற்கு வெடி மருந்து ரவை; கடலோடிகளின் பெட்டிகளிற் கண்டெடுத்து வைத்திருந்த, காவற் சேவகர் பயன் படுத்தும் பெரிய மேலங்கிகளில் இரண்டு. அவற்றுள் ஒன்று படுத்துக்கொள்வதற்கும், மற்றொன்று இராக் காலத்தில் அணிந்துகொள்வதற்கும் பயன்படும்.

### தீவைச் சுற்றிவரும்போது நேர்ந்த இடையூறுகள்

நான் இவ்விதம் முன் ஏற்பாடுகள் செய்து பயணப்பட்டது எப்பொழுது? நான் இத்தீவில் ஆட்சி செலுத்தத் தொடங்கிய ஆறுவது ஆண்டு நவம்பர்த்திங்கள் 6-ஆம் நாள். வேண்டுமானால் சிறையிருக்கத் தொடங்கிய ஆறுவது ஆண்டில் என்று வைத்துக்கொள்ளுங்கள். பயணத்தில் அதிக காலம் சென்றது. அவ்வளவு செல்லுமென்று நான் முதலில் நினைக்கவில்லை. தீவு அத்துணை பெரிது அன்று. பயணம் நீடித்ததற்குக் காரணம் இதுவே: தீவின் கீழ்க்கரையில் பாறை வளர்ந்து கடலில் ஆறு கல் தொலைவு வரையிலும் தொடர்ச்சியாய் இருந்தது. அத்தொடர்களிற் சில நீர்மட்டத்துக்குமேல் வெளிப்பட்டும்,

சில நீருக்குள் மறைந்தும் இருந்தன. பாறைத்தொடருக்கு அப்புறம் ஒன்றரைக் கல் தொலைவுவரையில் நீர் மட்டத்துக்குமேல் மணற்களம் பரந்திருந்தது. அதனால், அதைச் சுற்றி வருவதற்காக நான் நெடுங்கடலில் நெடுந்தொலைவு ஓடத்தைச் செலுத்திக்கொண்டு போனேன்.

முதலில் நான் அவைகளைக் கண்டபொழுது மனம் ஓய்ந்து, அவைகள் நெடுங்கடலில் எவ்வளவு தொலைவு தொடர்ந்திருக்குமென்று அறியாததனாலும், திரும்பிவருவது தொல்லை என்று ஐயப்பட்டதனாலும், நான் செய்யத் தொடங்கிய செயலை அவ்வளவில் நிறுத்திவிட நினைத்து, கப்பலினின்று எடுத்து வந்த ஓர் உடைந்த நங்கூரத்துண்டினாற் செய்துவைத்திருந்த ஒருவித நங்கூரத்தை இறக்கி, ஓடத்தை நிறுத்தினேன்.

ஓடத்திற்கு நங்கூரம் போட்ட பின், துப்பாக்கி எடுத்துக்கொண்டு கரையில் இறங்கி, அங்கிருந்த உயரமான குன்றின் மேல் ஏறி நின்று பார்த்தேன். அப்பொழுது மேற் சொல்லிய களம் முழுவதும் எனக்குத் தெரிந்தது. ஆதலால் அச்சமின்றி ஓடம் ஏறிப்போக முடிவு செய்தேன்.

அந்தக் குன்றின்மேல் நின்று கடலைப் பார்த்தபொழுது, நீரோட்டம் மிகுந்த வேகமாய்க் கிழக்கு முகமாய் ஓடுவது கண்டேன். அஃது அம்முனையை நெருங்கியும் சென்றது. எனது ஓடம் அந்த நீரோட்டத்தில் அகப்படுமானால், அஃது ஓடத்தைப் பலமாய் அடித்துக்கொண்டுபோய் நெடுங்கடலில் தள்ளுமென்றும், அப்புறம் நான் இத்தீவுக்கு வந்து சேர்வது முடியாது என்றும், பின்வரும் பேரிடரை முன்னதாகக் கண்டதனால், மேற்கூறிய நீரோடடத்தைக் கூர்ந்து பார்த்தேன். ஓடத்தை நிறுத்தி, நான் இம்மலையில் ஏறு திருப்பேனாயின், மேற் கூறியவாறு நீரோட்டம் என்னையும் ஓடத்தையும் அடித்துக்கொண்டுபோயிருக்கும் என்று நம்புகிறேன். தீவின் எதிர்ப் பக்கத்திலும் அவ்விதமே நீர் பெருகி ஓடியது. அது சற்று நெடுந்தொலைவிற் சென்றது. மேலும் கரைக்கு அருகில் வலிவான நீர்ச்சுழியையும் கண்

டேன். ஆகவே, முதலாவது நீரோட்டத்தைத் தாண்டின வுடன் அந்தச் சுழியில் அகப்படுவேன் என்பதற்கு ஐய மில்லை.

தென்கீழ்த் திசையினின்று சற்றே கீழ்த்திசையைச் சார்ந்து மேற்கூறிய நீரோட்டத்துக்கு எதிராய்க் காற்று ஒருவாறு உரத்து அடித்ததனால், அவ்விடத்தில் அலை சினம்கொண்டு புரண்டு மடங்கிற்று. அதனால் கரை நெருங்கி ஓடம் செலுத்துவதும் தவறு. நீரோட்டத்துக்கு அஞ்சி கரைக்கு நெடுந்தொலைவிற் செல்வதும் தவறு. இவற்றைக் கருதி ஓடத்தை நிறுத்திய இடத்திலேயே இரண்டு நாள் வரையில் தங்கினேன்.

**ஓடம் நெடுங்கடலின் இடையில் அகப்பட்டது**

மூன்றும் நாட் காலையில் கடல் அமைதியுற்றது. காற்று விடியற்காலத்துக்கு முன்பே தணிந்தது. அது கண்டு நான் நங்கூரம் தூக்கி ஓடத்தைச் செலுத்திக் கொண்டு போனேன். எனக்கு நேரிட்ட கொடிய இடரை நினைக்கும்போது, என் மனம் திகைக்கின்றது. ஆராய்ச்சி இல்லாத மூடராகிய மாலுமிகளுக்கு நினைவு உண்டாகும்படி நானே ஒரு நினைவுக் குறி என்று சொல்லத்தகும். நான் மேற்குறித்த இடத்திற் சேர்ந்தவுடன், கரைக்கும் எனக்கு முள்ள தொலைவு, ஓடத்தின் நீளமளவாயினும், இல்லா திருக்கையில், எனது ஓடம் ஆழமான நீரில் இறங்கியது. இயந்திரத்தின் சக்கரத்தை இயக்கும் மடை திறந்த நீர் போல் அத்தனை வேகமாய்ப் பெருகி ஓடிய நீர், எனது ஓடத்தை அதி விரைவாய் அடித்துக்கொண்டு போயிற்று. அதை நிறுத்துவதற்கு நான் செய்த செயல்களில் ஒன் றும் பலிக்கவில்லை. எனக்கு இடப்பக்கத்திலிருந்த நீர்ச் சுழியினின்று ஓடம் வரவர விலகி, எட்டாக்கையில் ஓடிற்று. காற்று அடிக்குமானால் ஓடம் செல்லும் வேகம் சற்றுக் குறையும். காற்றுச் சிறிதாயினும் அசையவில்லை. ஓடத்தைத் திருப்புவதற்கு நான் கைசலிக்கத் தண்டுவலித் தும் அது சிறிதாயினும் திரும்பவில்லை. அதனால் நான்

தப்பிப்பிழைக்கும் வழி இல்லை என்று ஊக்கத்தைக் கை விட்டேன். தீவின் இரு பக்கங்களிலும் நீரோட்டம் இருந் ததனால், பின்னும் பத்துப் பதினைந்து கல் தொலைவு செல்லு முன், அவ்விரு நீரோட்டமும் சேருமிடத்திற்சேர்ந் தால், அதற்குப்பின் என் உயிர் தப்பும் வழியில்லை, எனறு அறிந்தேன். அதிற்சேராதபடி நீக்கும் வழி செய்வது அரி தாகத் தோன்றியது. கடல் மிகவும் அமைதியாய் இருந் தது. ஆதலால் ஓடம் கவிழ்ந்து அமிழ்ந்து விடுமென்று நான் அஞ்சவில்லை. பட்டினியாற் சோர்ந்து இறந்து போவேன் என்று எண்ணி வருந்தினேன். முன்பு கரையில் நான் தூக்கத்தக்க சிறிய கடலாமை ஒன்றைக் கண்டு பிடித்து, ஓடத்திற் போட்டுவைத்திருந்தேன். அன்றியும் எனது மட்கலங்களில் ஒன்று நிறையத் தூயநீர் இருந்தது. குறைந்தது மூவாயிரம் கல்வரையில் கரை காணதிருக்கும் பரந்த பெருங்கடலில் எனது ஓடம் சேருமானால், அந்த ஆமையும் ஒரு குடம் தண்ணீரும் எனது உயிர் வாழ்வுக்கு என்ன பயனைச் செய்யும் ?

**கரையை நினைத்து மனம் கலங்கினேன்**

மிகவும் தொல்லையான நிலைமையில் அகப்பட்டுக் கொண்டவரை மேலும் அதிகமாகத் துன்புறுத்துவது கடவுளுக்கு எவ்வளவு எளிதென்று கண்டேன். நான் தனியேயிருந்து நாட்கழித்த குடியில்லாத் தீவைத் திரும் பிப்பார்த்து, இதைப்போலும் இன்பமான இடம் இவ்வுல கில் இல்லை என்றும், இவ்விடத்தில் வந்து சேர இயலுமா னால் எனக்கு அதைவிட அதிக மகிழ்ச்சி இல்லை என்றும் எண்ணினேன். நான் மிகுந்த ஆவலுடன் கைகளை அத் தீவிற்கு நேரே நீட்டி: "மனமகிழ்ச்சிதரும் காட்டு நிலமே; இனி ஒருபொழுதாயினும் உன்னைக் காண்பேனோ? இல்லை. துன்பத்தினால் பிணிக்கப்பெற்றேன். நான் செல்லுமிடம் எவ்விடம் என்று அறியேன்;" என மனம் பதறி ஓலமிட் டேன். பின்பு நான் பெற்ற வாழ்க்கையிற் பயன்படுத்திய நன்மைகளை நினைத்து, கடவுளுக்கு வாழ்த்துக் கூறாத கொடுமையாளன் என்றும், தனியே யிருந்தபொழுது,

அதைக் குறித்து மனக்குறையடைந்தவன் என்றும் என்னையே கடிந்துகொண்டேன். இனி நான் அத்தீவின் கரை சேர்வதற்கு என்ன செய்யலாம்? எதைக் கொடுக்கலாம்? நமது நிலைமை இத்தன்மையதென்று, அதன் எதிர் நிலைமையைக் கண்டால் அன்றி. நமக்குத் திட்டமாய்த் தோன்றாது. அன்றியும் நாம் அடைந்துவரும் இன்பத்தை இழந்தாலன்றி, அவ்வின்பத்தின் அருமை நமக்குப் புலப்படாது. என்னுடைய துன்பக்காலத்தில் எனக்கு மிக்க விருப்பமுள்ளதாய் விளங்கிய தீவினின்று விலகிப் பெருங் கடலில் ஆறு கல் தொலைவிற் சேர்ந்து, இனி அத் தீவிற்குப் போவது முடியாது என்று கண்டு மன வருத்தம் அடைந்திருக்கும்போது, எனக்கு உண்டான மன நடுக்கம் இவ்வளவென்று நான் ஒருவன் அன்றி, மற்றவர்கள் அறிய முடியாது. ஆயினும் எனது வன்மை குறையும் வரையிலும் நான் இளைக்காமல் தண்டு வலித்துச் சுழியிருந்த நீரோட்டத்தின் பக்கத்தைச் சார்ந்து கூடியவரையில் வடக்கு முகமாய் ஓடத்தைச் செலுத்திக் கொண்டு போனேன். உச்சிப்பொழுது மாறிய வேளையில் தென்திசையை நாடித் தென்கிழக்கினின்று இளங்காற்றுத் தோன்றிச் சிறிது வீசியதுபோல் இருந்தது. துயர் அடைந்த என் உள்ளத்திற்கு இதனாற் சற்று ஆறுதல் உண்டாயிற்று. பின்னும் அரை மணி நேரம் சென்றபின், இளங்காற்றுச் சற்று அதிகமாய் வீசியதனால், ஒருவாறு மனம் தேறினேன். இதற்குள் ஓடம் தீவிற்கு வெகு தொலைவிற் சேர்ந்தது. கார்மேகமாவது, வானத்தில் மப்பாவது உண்டாக நேர்ந்தால், எனக்கு வேறு விதத்தில் பேரிடர் நேரிடும் என்பதற்கு ஐயம் இல்லை. நான் திசையறி கருவி கொண்டு போகவில்லை. அதனால், எனது கண்ணுக்குத் தீவு மறைந்தால், மறுபடி அதற்கு நேரே ஓடத்தைத் திருப்பிச் செலுத்துவதற்கு இசையாது. மப்பு மந்தாரம் இன்றி வானம் வெளுத்திருந்தது. பாய் மரத்தை நிறுத்திப் பாய் தூக்கிவிரித்து, நீரோட்டத்தினின்று விலகுவதற்காகக் கூடியவரையில் வடதிசையைச் சார்ந்து ஓடினேன்.

பாய் மரம் நிறுத்திப் பாய் தூக்கி, எனது சிற்றோடம் அகன்று விலகிச் செல்லும்பொழுது நீர் சற்றுத் தெளிவாய் இருந்ததனால், நீரோட்டத்தின் வேகம் தணிந்ததென்று அறிந்தேன். அது வேகமாய் ஓடும்பொழுது நீர் கலங்கி யிருந்தது. பிறகு சற்று நேரத்துக்குள், கிழக்கே அரைக்கல் தொலைவில் கடல் அலை சில பாறைகளில் தாக்கி, மறிந்தது கண்டேன். பாறையில் தாக்கியதனால் நீரோட்டம் பின்னும் இரண்டு கிளைகளாய்ப் பிரிந்தது. அப்பாறைகளிருந்தவிடம் வடகீழ்த் திசையாகும். வேகமாய் ஓடிய வெள்ளத்தின் பிரிவு தென்றிசையை நோக்கிச் சென்றது. மற்றக்கிளை பாறையின் மறுபுறம் திரும்பி வலிவான நீர்ச்சுழியாகி, மடங்கி, வடமேற்கு முகமாய் மிக விரைந்து ஓடிற்று.

## நீர்ச்சுழி என் ஓடத்தைச் செலுத்த உதவி செய்தது

நீர்ச்சுழியைக் கண்டபொழுது, எனக்கு உண்டான மகிழ்ச்சிப் பெருக்கையும், அதில் நான் ஓடத்தைச் செலுத்திய மகிழ்ச்சியையும் கூறிப் பயன் என்ன? அதை உள்ளபடியே அறியும் தன்மையர் யாவர்? தூக்குமரத்தில் உயிர்த் தண்டனை அடைவதற்குப் படியேறிய பின், தண்டனை விலக்கப்பட்டு விடுதலை பெற்றவர்களும், கொலை செய்வதற்கு முயலும் கள்வர்களால் பிடிக்கப்பட்டுத் தப்பியவர்களும், இவ்விதமான வேறு பேரிடர்களுக்கு ஆளாகி மீட்சி அடைந்தவர்களும் மட்டுமே எனக்கு உண்டான வியக்கத்தக்க மகிழ்ச்சியை, ஒருவாறு இத்தன்மையதென்று அறிவார்கள். இதனுடன் வளக்காற்றும் தோன்றியது. ஆதலால் பாயை வளமாய்த் தூக்கி, அந்த வன்மையான நீரோட்டம் சேர்ந்த சுழியிற் காற்றுவாட்டத்தில் ஓடத்தைச் செலுத்திக் கொண்டு சென்றேன்.

அந்த நீர்ச்சுழி, தீவிற்கு நேரே திரும்பிப் போகும் வழியில் மூன்று கல் தொலைவிற்கு ஓடத்தைச் செலுத்திக் கொண்டு போயிற்று. முதலில் ஓடத்தை அடித்துக்

கொண்டு போன நீர்ப்பெருக்கு இருந்த இடத்திற்கு வடக்கே ஆறு கல் தொலைவில் ஓடம் சேர்ந்தது. தீவின் கரைக்கு நெருங்கி வந்தபொழுது, எனக்கு எதிரே அதன் வடகரை கிட்டிற்று. வடகரை என்றால், நான் முன்பு பயணப்பட்ட இடத்திற்கு எதிர்ப்பக்கம் ஆகும்.

இந்த வேகமான நீரோட்டத்தின் உதவியால் மூன்று மூன்றரைக் கல் தொலைவு போனவுடன் ஓடும்நீர் விரைவு ஒழிந்தது. பிறகு அதனால் எனக்கு உதவியில்லை. தென்புறத்தில் எனது ஓடத்தை விரைவாய் நெடுந்தூரம் செலுத்திக்கொண்டு போன நீரோட்டத்துக்கும், எதிர்ப் பக்கத்தில் ஆறு கல் தொலைவில் உள்ள மற்ற நீரோட்டத் துக்கும் இடையில் தீவின் மேற்குத் திசையில் ஓடம் நின்றது. கடல் அமைதியாய் இருந்தது. எத்திசையிலும் நீரோட்டம் இல்லை. இளங்காற்று இன்னும் வளமாய் வீசியது. அதனால் தீவுக்கு நேரே ஓடத்தை ஓட்டிக் கொண்டு சென்றேன். முன்போல் அவ்வளவு விரைவில் செல்ல முடியவில்லை.

பிற்பகல் நான்கு மணி அளவில் ஓடம் சேர்ந்த இடத் திற்கும் தீவிற்கும் மூன்று கல் தொலைவு இருந்தது. இந்த வழியில் தெற்கு முகமாய்க் கடந்து செல்வதற்குத் தடை யாகப் பாறைமுனை நீண்டிருந்தது. அம்முனை நீரோட் டத்தை அதிகம் தெற்கை நாடி விலக்கிற்று. அதனால் வடக்கே மற்றொரு சுழி உண்டாயிற்று. அச்சுழி அடங் காத வேக முள்ளதாய் இருந்தது. நான் சென்ற திசை நேர் மேற்கு. அச்சுழி ஓடிய திசை வடக்கு. ஆதலினால், எனது வழியும், அச்சுழி ஓடும் வழியும் ஒத்திருக்கவில்லை. காற்றுத் தொடங்கியதனால், சுழிநீரை ஊடறுத்து, வட மேற்கைச் சார்ந்து ஓடத்தைச் செலுத்தினேன். ஒரு மணி நேரத்துக்குள் கரையை நெருங்கினேன். அதன் பிறகு கரைக்கு ஒரு மைல் தொலைவு இருந்தது. அலைக் கிளர்ச்சி இல்லாததனால் மிக விரைவில் கரை ஏறினேன்.

### கரையில் இறங்கிச் செய்த வேலைகள்

ஓடத்தைவிட்டு இறங்கிக் கரை சேர்ந்தபின் முழந்தாளிட்டு, நேர்ந்த பேரிடர் நீக்கி என்னைப் பாதுகாத்ததற்காகக் கடவுளுக்கு வணக்கமும் வாழ்த்தும் கூறினேன். இச்சிற்றோடத்தில் ஏறி, மனிதர் வாழும் எத்தேசத்திலாயினும் சேரமுடியும் என்னும் எண்ணத்தைக் கைவிட முடிவு செய்தேன். பின்பு நான் வைத்திருந்த உணவுப் பொருள்களைத் தின்று பசியாறி, ஓடத்தைக் கரை சேரத் தள்ளிச் சில மரங்களின் ஒதுக்கில் இருந்த சிறு கோடியில் நிறுத்திப், பயணத்திற்பட்ட பாடுகளால் உண்டான களைப்புத் தீரும்படி அதிற்படுத்துத் தூங்கினேன்.

### நாட்டு மாளிகையை அடைந்தேன்

இனி ஓடம் ஏறி எந்த வழியாய் வீடு சேர்வதென்று, எனக்குத் தெரியவில்லை. எனக்கு நேர்ந்த இடர்களையும் அவற்றின் காரணத்தையும் நினைத்து முன் சென்ற வழியாய்ப் போவதற்கு நான் துணியவில்லை. நான் இருந்த இடத்திற்கு எதிர்ப்பக்கமாகிய மேற்குப் பக்கத்தில் என்ன என்ன விளையுமென்று நான் அறியேன். இனிமேல் வந்தது வரட்டும் என்று துணிந்து செல்ல என் மனம் ஒப்பவில்லை. காலையில் எழுந்து கரை நெருங்க மேற்குமுகமாய் ஓடத்தைச் செலுத்திக்கொண்டு போக வேண்டும் என்றும், போகும்வழியில் ஏதாயினும் ஒதுக்கு, அல்லது நீரோடை எதிர்ப்பட்டால், அதில் எனது ஓடத்தைக் கட்டி வைத்து வேண்டும்பொழுது எளிதில் கைக்கொள்ளலாம் என்றும் நினைத்துச் சென்றேன். மூன்று கல் தொலைவு சென்றபின் ஒரு வளமான சிறிய குடா இருந்தது. அதன் நீளம் ஏறத்தாழ ஒரு கல். அது வரவர ஒடுங்கிச் சிற்றாறு ஆயிற்று. அதில் நான் ஓடத்தைக் கட்டிக்கரையில் இறங்கி, அவ்விடம் எவ்விடம் என்றும் எத்தகையதென்றும் உலாவிப் பார்த்தேன்.

அவ்வாறு பார்த்தபோது, முன்பு கால் நடையாய்ப் பயணம் செய்த கரைக்கு அவ்விடம் சற்றுத் தொலை வானது என்று கண்டேன். வெய்யில் அதிகக் கடுமை யாய்க் காய்ந்தது. ஆதலாற் குடையையும் துப்பாக்கியை யும் மட்டும் எடுத்துக்கொண்டு, நடந்து போனேன். கடலில் அலைந்து அலைந்து களைத்து வந்த எனக்கு அவ் வழி நடை சற்று இன்பமாய் இருந்தது. மாலை வேளையில் நான் எனது பழைய ஓலை வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். அது சிறிதும் சிதைவு இன்றி முன் உள்ளது போலவே இருந்தது. நான் அதை எனது நாட்டு மாளிகையாய் நினைத்து, ஒழுங்கு முறை சிறிதும் குறையாமல் மிக நன்ருய் வைத்திருந்ததாக முன்பே கூறியுள்ளேன்.

**கிளி என்னை வரவேற்றது**

வேலியைத்தாண்டி உட்சென்று, இளைப்பாறுவதற் காக நிழலிற்படுத்துத் தூங்கினேன். தூங்கும்பொழுது: **இராபின்! இராபின்! இராபின் குரூசோ! ஏழை இராபின் குரூசோ!** நீ எங்கே இருக்கிருய் **இராபின் குரூசோ!** நீ எங்கே இருக்கின்ருய்! எவ்விடத்திற்குப் போயிருந்தாய்?" என விரைவில் உண்டான ஒலி கேட்டுத் திடீரென விழித் தேன். அப்பொழுது என் பெயர் சொல்லி அழைத்த அவ் வொலியைக் கேட்டு நான் அடைந்த வியப்பும் மகிழ்ச்சியும் இவ்வளவென்று நான் கூற வேண்டுவதில்லை. இவ்வரலாற் றைப் படிப்பவர்கள் தாமே நினைத்து அறியலாம்.

முற்பகலில் கை வருந்தத் தண்டு வலித்தும், பிற் பகலில் வழி நடந்தும் கை மெய் அயர்ந்து தூங்கியதனுல், இந்த ஒலி கேட்டபொழுது எனக்குத் தூக்கம் தெளிய வில்லை. பாதி உறக்கமும் பாதி விழிப்புமான நிலைமையில் இருந்ததனுல் முதலில் அது கனு என்று நினைத்தேன். "**இராபின் குரூசோ! இராபின் குரூசோ**" என்று விடாமல் தொடர்ச்சியாக அந்த ஒலி கேட்டதனுல், எனக்குத் தூக்க மயக்கம் முழுவதும் தெளிந்தது. அளவுகடந்த மன நடுக்கம் கொண்டு, துடித்துப் பதைத்தெழுந்தேன். நான் விழித்

துப் பார்த்தவுடன் பால் என்னும் எனது கிளி வேலி மேல் இருந்தது கண்டு, மேற்கூறியவாறு பேசியது அஃது தான் என்று அறிந்தேன். இந்த இரங்கத்தக்க வார்த்தைகளைப் பேசும்படி நான் அதற்குப் பழக்கி யிருந்தேன். அது அச்சொற்களில் நன்றாய்ப் பழக்கப்பட்டு, எனது விரலில் உட்கார்ந்து, உதட்டை என் முகத்தோடு அழுந்த வைத்துக்கொண்டு, "ஏழை இராபின் குரூசோ! நீ இப்பொழுது எங்கே யிருக்கின்றாய்? நீ எங்கிருந்து வந்தவன்? இங்கே வந்த காரணம் என்ன?" என்னும் தொடர்களையும், நான் அதற்குப் பழக்கிய வேறு தொடர் மொழிகளையும் சொல்வது வழக்கமே யாகும்.

கிளி வாயிலிருந்து அன்றி, அச்சொற்களை வேறு வழியால் நான் கேட்கவில்லை என்று திட்டமாய் அறிந்தேன். ஆயினும் எனது அச்சம் நீங்குவதற்கு நீண்ட நேரம் சென்றது. அந்தக் கிளி இவ்விடத்திற்கு வந்த காரணம் யாது? வேறு இடங்களுக்குச் செல்லாமல் அஃது இவ்விடத்திலேயே உலாவித் திரிவதற்குக் காரணம் என்ன? என்று எண்ணி முதலில் திகைத்தேன். பிறகு அஃது என்னிடத்தில் அன்பு உள்ள கிளி அன்றி, வேறு எதுவும் அன்று என ஐயம் திரிபு அறக் கண்டு, திகைப்பு நீங்கி, என் கையை நீட்டிப் "**பால்**" என்று அதன் பெயரைச் சொல்லி அழைத்தேன். நட்பு நீங்காதிருந்த அந்தப் பறவை உடனே பறந்து வந்து வழக்கப்படி எனது பெருவிரலில் இருந்தது. "ஏழை இராபின் குரூசோ, நீ இங்கே வந்த காரணம் என்ன? நீ முன்பு எங்கிருந்தவன்?" என்று மறுபடியும் பேசியது. நான் திரும்பி வந்ததைக் குறித்து இவ்வாறு அதற்கு அடங்காத மகிழ்ச்சி யுண்டானதாகத் தோன்றியதனால், நான் அதை வீட்டுக்குக் கொண்டு போனேன்.

**கடற்பயணம் செய்வதில் அச்சம் கொண்டேன்.**

இம்முறை கடற்பயணம் செய்து நிலையற்று அலைந்து, பட்டபாடுகள் இவ்வளவோடு போதும். இனிச் சிறிது

காலம் கடற்பயணஞ் செய்வதைப் பற்றி நினைக்கக்கூடாது. எனக்கு நேரிட்ட இடர்களையும், நான் பட்ட துன்பங்களையும், ஓய்வாக இருந்து நினைத்துப் பார்ப்பினும் பலநாள் செல்லும். தீவின் இப்பக்கத்தில் எனது ஓடத்தைக் கொண்டு வந்து சேர்த்தேன் ஆனால், எனக்கு மனநிறைவு உண்டாகும். அதைக் கொண்டுவந்து சேர்க்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. நான் போய்வந்த தீவின் கிழக்குப் பக்கத்தில் இனி அச்சமின்றித் துணிந்து போக முடியாதென்று அறிந்தேன். அதை நினைத்தபோதெல்லாம், என் உள்ளம் சோர்ந்து உடல் விறைத்தது. தீவின் எதிர்ப்பக்கம் எப்படிப்பட்டது என்று நான் அறியேன். மேற்குப் பக்கத்தில் நீரோட்டம் தீவின் கரையில் நெருங்கி எவ்வளவு விரைவாய் ஓடிற்றோ, கிழக்குப் பக்கத்திலும் கரைக்கு நேர்முகமாய் அவ்வளவு விரைவாய் ஓடுவதாகக் கருதினாலும், தீவின் கரையை நெருங்கின் அஃது ஓடத்தை அடித்துக்கொண்டு போய் விடும். இந்தப் பெரிய இடருக்கும், தீவிற்கு நெடுந்தொலைவில் நீரோட்டத்தினால் தள்ளப்பட்டுச் சென்றேனன்றோ, அந்தப் பேரிடருக்கும், வேறுபாடு இல்லை. அதனால் இந்த நினைவுகளை நன்கு சீர்தூக்கிப் பார்த்து ஆராய்ந்து, எனக்கு ஓடமும் வேண்டா; துன்பமும் வேண்டா; என்ற முடிவுக்கு வந்தேன். அந்த ஓடத்தைச் செய்து முடிக்க எத்தனை திங்கள் சென்றன? அதனைக் கடலில் இறக்க எத்தனை திங்கள் சென்றன? ஆயினும் அதை நினைத்துப் பயன் என்ன?

### ஓய்வாக இருந்து கைத்தொழில் செய்தல்

இவ்வாறு எனது அவாவை அடக்கி, மனத்தை ஒடுக்கி, ஓராண்டு வரையில் ஓடி உலவி வெளியிற் சுற்றித் திரியாமல் அடங்கியிருந்தேன். எனது நிலைமையைக் குறித்து என் மனம் பதறவில்லை. திருவுள்ளத்தின் செயலால் எனக்கு வரும் நன்மைகளை அடைவதுபோலத் தீமைகளையும் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும் என என்னைத் தேற்றிக் கொண்டேன். மனிதர் பழக்கம் இல்

வழிந்து போனதனுலும், கண்ணி வைத்து வெள்ளாடுகளை உயிருடன் பிடிக்கும் வகை என்ன என்று ஆழ்ந்து நினைக்கத்தொடங்கினேன். முதன்மையாய் ஒரு சினை யாட்டைப் பிடிக்க விரும்பினேன்.

இதன் பொருட்டு ஆடு பிடிக்கக் கண்ணி செய்து, இரை போட்டு வைத்தேன். இரண்டொருமுறை ஆடுகள் அக் கண்ணியில் அகப்பட்டும், கண்ணிக் கயிறு வன்மை இல்லாததனுல், இரையைத் தின்றுவிட்டுக் கயிற்றை அறுத்துக்கொண்டு, தப்பி ஓடி விட்டன.

### பொய்க்குழி வெட்டி ஆடு பிடிக்க முயலுதல்

பின்பு, என் கருத்து நிறைவேறுவதற்குக் கண்ணி உதவாதென்று கண்டு, குழிவெட்டிப் பிடிக்கக் கருதி, ஆடுகள் மேய்ந்து கொண்டு நிற்கக் கண்ட இடங்களிற் பெருங்குழிகள் பல அகழ்ந்து அக்குழிகளின்மேல் நான் மறைப்புக் கூடைகள் சில முடைந்து கவிழ்த்து அவற்றின் மீது சுமை வைத்தேன். வாற்கோதுமைக் கதிரும், காய்ந்த நெல்லும் பலமுறை தூவினேன். பின்பு அடிச் சுவடு கண்டதனுல் ஆடுகள் உட்சென்று கூலங்களைத் தின்று விட்டன என்று எனக்குப் புலப்பட்டது. பிறகு ஒருநாள் இரவில் மூன்று பொறிகள் அமைத்து, இரை தூவி வைத்து, மறுநாட் காலையில் போய்ப் பார்த்தேன் அப்பொறிகள் எல்லாம் நான் வைத்தபடியே இருந்தன. இரையாகத் தூவிய கதிர்மணி முழுவதையும் ஆடுகள் தின்று விட்டிருந்தன. அதைக்கண்டு என் மனம் தளர்ந்தது. எனினும் வேறு இரண்டு பொறி ஏற்றிவைத்தேன். அவற்றை அமைத்த முறையைச் சொல்லின் விரியும். ஒருநாள் காலையில் பொறிகளைப் பார்க்கச் சென்றபொழுது, அவற்றில் ஒன்றில் பெரிய கிழ ஆட்டுக்கடா ஒன்றும், மற்றொன்றில் குட்டிகள் மூன்றும் அகப்பட்டு நின்றன. அக் குட்டிகளில் கடா ஒன்று, மறி இரண்டு.

### கிழ ஆட்டுக்கடாவைத் துரத்தி விட்டேன்

கிழக்கடாவை நெருங்கிப் பிடிக்க முடியவில்லை. அதனிடத்தில் மிகுந்த முரட்டுத்தனமும் காணப்பட்டதனால், நான் குழியில் இறங்கி அதைப் பிடித்துக் கொண்டுவர அஞ்சினேன். எளிதில் கொன்றுவிட என்னால் இயலும். என் கருத்து கொல்வது அன்று. கொன்றால் ஆடுகள் பெருகுவது எவ்வாறு? இதை நினைத்துத் தப்பி ஓடும்படி நான் கூட்டைத் திறந்து விட்டேன். அது நடுநடுங்கி அப்பொழுதே ஓடிப் பறந்தது. பசி வந்தபோது விலங்கரசனாகிய அரிமாவும் அடங்கி வயப்படும் என்பதனை நான் அப்பொழுது அறியவில்லை. பிறகு அறிந்தேன். மூன்று நான்கு நாள் வரையில் நான் அதைக் குழிக்குள்ளே நிற்க விட்டு இரை ஒன்றும் போடாமல், பிறகு சிறிதளவு தண்ணீர் காட்டி, இரையும் சிறிது இட்டால், அது கொழுப்பு அடங்கிக் குட்டிகளில் ஒன்றைப்போல அடங்கிவிடும். அன்போடு வளர்த்தால் ஆட்டு இனம் அதிக அறிவும், அமைதியோடு அடங்கி வாழும் தன்மையும் உடையதாகும்.

முதல் முறை ஆதலால், அகப்பட்ட அவ் ஆட்டுக் கடாவைப் பிடித்துக் கொண்டுவர வகை தெரியாமல் தப்பி ஓடும்படி திறந்துவிட்டுக், குட்டிகள் நின்ற குழியில் இறங்கி, அவற்றை ஒவ்வொன்றாய்ப் பிடித்து, மூன்றையும் ஒன்றாய்க் கட்டி, மிகுந்த பாடுபட்டு வீட்டிற் கொண்டுவந்து சேர்த்தேன்.

### ஆட்டுக்குட்டிகளை வளர்த்தல்

பலநாள் வரையில் அவைகள் ஒன்றும் தின்னவில்லை. நாள்தோறும் கூலமணிகளை அவைகளுக்கு முன் போட்டு வைத்ததனால், தின்று சுவைகண்டு என்னுடன் பழகின. சில ஆடுகளைப் பிடித்து வளர்த்தால், அவை வரவரப் பெருகி, என் வீட்டில் ஒரு மந்தை சேரும். மருந்து ஈயம் இல்லாதிருக்கும் காலத்தில் இந்தச் சூழ்ச்சி செய்வதனால் அன்றி, வேறு விதத்தால் எனக்கு ஆட்டு இறைச்சி கிடைக்கமாட்டாது என்று அறிந்தேன்.

பழகிய ஆடுகளைப் பழக்கப்படாதவைகளுடன் கலக்க விட்டால், பழக்கப்பட்டவைகள் வளர வளரத் தங்கள் இனத்துடன் சேர்ந்து ஓடிப்போய்விடும். ஆதலால், நான் பிடித்துப் பழக்கிய ஆடுகளைத் தனி இடத்தில் விட்டு வளர்க்க வேண்டுமென்று முடிவு செய்தேன். ஆதலால் வன்மையான வேலி அடைத்தாவது, வேறு தட்டி முதலிய தடுப்புக்கள் அடைத்தாவது, அவ்வடைப்புக்குள் எனது ஆடுகளை விடுவது இன்றியமையாததாய் இருந்தது. இப்படிச் செய்தால், வேலியை முறித்துக் கொண்டு, உள் இருப்பவை வெளியிற் செல்வதும், வெளியில் உள்ள வைகள் உள்ளே வருவதும் இயலாது.

### பெரிய வேலி அடைத்தல்

நான் ஒருவன் ஆள் உதவியின்றி என் கையாற் செய்து முடிக்க, இவ்வேலை சிறிய வேலையா? சிறியதாயி னும் பெரியதாயினும் இன்றியமையாத வேலையை எவ் வளவு துன்பப்பட்டேனும் செய்து தானே ஆகவேண்டும்? ஆதலால், வேலி அடைப்புச் செய்வதற்குரிய இடம் எது என்று தேட முற்பட்டேன். ஆடுகள் மேய்வதற்குப் புல்லும், குடிக்கத் தண்ணீரும், படுத்து இளைப்பாற நிழல் ஒதுக்கமும் உள்ள தகுதியான இடம் பார்த்தேன்.

பசும்புல் அடர்ந்த ஒரு வெளி நிலத்தில் தூய நீர் உள்ள சிற்ருறுகள் இரண்டு மூன்று இருந்தன. அதன் ஒரு பக்கம் மரங்கள் அடர்ந்த காடு மேற்கூறிய புல்வளம், நீர்வளம், நிழல்வளம் மூன்றும் அவ்வெளியிடத்தில் அமைந்ததனுல், நான் அதை வளைத்து அடைக்கத் தொடங்கினேன். நான் அடைக்கக் கருதிய இடத்தின் சுற்றளவு இரண்டு கல் தொலைவுக்குக் குறையாது. ஆடு மாடுகளைப் பிடித்து விட்டிருக்கும் அடைப்புகளின் தன் மையை அறிந்தவர்கள், எனது அறிவின்மையைக் கண்டு நகைப்பார்கள். வீண்காலம் செல்லும் என்பதைக் குறித்தோ எனின் அன்று. இரண்டு மைல் ஆயினும் சரி; பத்து மைல் ஆயினும் சரி. எனக்கு வேறு வேலை

என்ன? இரண்டு மைல் பரப்புள்ள அடைப்புக்குள் விட்டி ருக்கும் ஆடுகளை வேண்டும் பொழுது எளிதில் தொடர்ந்து சென்று பிடிக்க முடியுமா? இரண்டு மைல் சுற்றளவு அடைப்புக்குள் இருப்பதற்கும், அடைப்பு இன்றி இத் தீவில் எங்கும் உலாவுவதற்கும் வேறுபாடு இல்லை. இவ் வடைப்புக்கள் நிற்கும் ஆடுகள் மனிதர் கையில் அகப் படாத காட்டு ஆடுகளைப் போலவே இருக்கும். இதை எண்ணுமல் அறிவு இன்றி நான் வேலி அடைக்கத் தொடங் கியதைப்பற்றித்தான் அறிவுடையோர் குறை கூறுவர்; முன் அறிவு இல்லாத மூடன் என்றும் என்னைப் பற்றி எண்ணுவர்.

வேலை தொடங்கி நூற்றைம்பது அடி தொலைவுமட் டும் வேலி அடைத்தபின், இந்த எண்ணம் எனக்கு உண்டாயிற்று. உண்டான அப்பொழுதே நான் அதை நிறுத்தி முதலில் நானூற்றைம்பது அடி நீளமும், மூந்நூறு முழ அகலமும் உள்ள இடத்தை வளைத்து அடைத்தால், எனக்குத் தகுதியான கால வரையில், உண வுக்கு வேண்டும் ஆடுகளை அதற்குள் விட்டு வளர்க்கலாம் என்றும், மந்தை பெருகும்பொழுது பின்னும் அதிக இடத்தைச் சேர்க்கலாம் என்றும் முடிவு செய்தேன்.

### போதுமான அளவுக்கு வேலி அடைத்தல்

அறிவின் துணைகொண்டு செய்த இந்த முடிவுப்படி மன உறுதியுடன் வேலை தொடங்கினேன். மேற்கூறிய அளவு உள்ள இடத்தில் வேலி அடைக்க மூன்று திங்கள் சென்றன. வேலி அடைத்து முடிகிற வரையில் அந்நிலத் தில் வளமான இடம் பார்த்து, ஆட்டுக்குட்டிகள் மூன்றை யும் கயிற்றிற் கட்டி உலாவி மேய விட்டேன். அன்றியும், அவைகள் என்னுடன் எளிதில் பழகும் பொருட்டுக் கூடிய வரையில் எனக்கு அருகில் நின்று மேயும்படி செய்தேன். பெரும்பாலும் வாற்கோதுமைக் கதிரையாவது, நெல்லை யாவது நான் கொண்டுபோய்க் கொடுத்தபோது, அவை அச்சம் தெளிந்து நெருங்கி வந்து என் கையில் இருந்த

இரையைத் தின்றன. இப்படிப் பழகியதனுல், வேலி அடைத்து முடிந்தபின் நான் அவைகளைக் கட்டாமல் அடைப்புக்குள் விட்டிருந்தபோதும் என்னைக் காணும் பொழுதெல்லாம் கைத்தீனி வாங்கித் தின்னுவதற்காக அவைகள் ஆவலுடன் என்னைத் தொடர்ந்து ஓடிவந்தன.

### அடைப்புக்களில் ஆடுகள் மல்கின

என் கருத்துக்கு இவ்வடைப்பு மிகவும் பயன்பட்டது. ஒன்றரை ஆண்டுக்குள் இவ்வாடுகள் பெருகிக், குட்டிகளும் வளர்ந்தவைகளுமாகப் பன்னிரண்டு ஆயின. பின்னும் இரண்டு ஆண்டுகள் சென்றபின், நான் அவ்வப்பொழுது பிடித்து அடித்துத் தின்றவைகள் போக எஞ்சி நின்றவை நாற்பத்து மூன்று. அதற்குப் பிறகு அவைகள் மேய்வதற்கு ஐந்து அடைப்புக்கள் உண்டாக்கினேன். அந்தந்த அடைப்புக்குள் வேண்டும்பொழுது செலுத்தி விட்டுப் பிடித்துக் கொள்வதற்காகப் படல்களாற் சிறு பட்டிகள் அடைத்து வைத்தேன். ஓர் அடைப்பினின்று மற்றோர் அடைப்பிற்குப் போவதற்கு வாயில் விட்டுப் படல் கட்டியிருந்தேன்.

### பால் கறந்து பயன் படுத்தினேன்

இது மட்டும் அன்றி, விருப்பமானபொழுது உணவுக்கு ஆட்டு இறைச்சி மட்டுமன்றிப், பாலும் நிறையக் கிடைத்தது. முதலில் நான் இதைக் குறித்துக் கனவிலும் எண்ணவில்லை. பாலைப்பற்றிய எண்ணம் என் உள்ளத்திற் பிறந்தவுடன் நான் வியப்புற்று மகிழ்ந்தேன். பாலில் வெண்ணெய் எடுக்கவும், பாலடைக் கட்டி செய்யவும் தொடங்கினேன். சிலவேளை நாள் ஒன்றுக்கு நான் கறக்கும் பால் பத்துப் பன்னிரண்டு படி வரையில் இருக்கும். உயிர்த் தொகைகளுக்கு அதனதன் பண்புக்குரிய உணவுப் பொருள்களைக் கொடுத்துப் பாதுகாக்கும் கடவுள் அவைகளைப் பயன்படுத்தும் வகையையும் உணர்த்துவது இயற்கையேயன்றோ? முன் ஒரு பொழுதும் நான் பசுவிடம் பால் கறந்தது இல்லை; ஆட்டுப்பால்

கறந்தது அறவே இல்லை. எவராவது வெண்ணெய் எடுப்பதை அல்லது பாலடைக் கட்டி செய்வதைக் கண்டதும் இல்லை. இப்படி இருந்தும் நான் பால் கறக்க எளிதிற் பயின்றேன். பல தடவைகளில் பாலடைக் கட்டி செய்யப் புகுந்தபோது, பால் பழுதாய்ப் போனதும் உண்டு. ஆயினும் நாளடைவில் கை படிந்து பழக்கம் உண்டாகி வெண்ணெய் எடுக்கவும், பாலடைக் கட்டி செய்யவும் திறமையுடையவன் ஆனேன். அதன்பின் இவ்விரண்டும் எப்பொழுதும் எனக்குக் குறைவில்லாதிருந்தன.

## கடவுள் அளித்த பொருள்

படைக்கப்பட்ட உயிர்களுக்கு மிகுந்த பேரிடர் வந்த காலத்திலும், எல்லாவல்லமையும் உடைய கடவுள் அவைகள்மீது இரங்கி, அவைகளை மிகுந்த அன்பாய் ஆதரிப்பார் அன்றோ? நாம் அடையும் கொடிய துன்பங்களை நமக்கு இன்பமாகத் தோற்றுவிக்கவல்லவர் அவர். இருட்டு அறைகளிலும், சிறைச்சாலைகளிலும், இருப்பவர்களுக்கு வியக்கத்தக்க நன்மைகளைச் செய்து, தம்மைப் புகழ்ந்து ஏத்தும்படி அவர்கள் உள்ளத்தை அருள் சுரந்து ஏவும் வல்லமையுள்ளவர். தொடக்கத்தில் பசியால் வருந்தி இறந்தொழிவது அன்றி, வேறு வழியில்லை என்று நான் வருந்தி ஏங்கிய இந்தக் காட்டில் எனக்குப் பல்வகை உணவு தேடிக் கொடுக்கப்பட்டுள்ளதை நினைத்து அக்கடவுளுக்கு நன்றி செலுத்தாது இருக்க முடியுமோ?

## நானே தீவின் ஒப்பற்ற அரசன்

நானும் எனது சிறிய குடும்பமும் ஓரிடத்திற் கூடியிருந்து உணவு உண்பதைக் கண்டால், விருப்பு வெறுப்பு இல்லாத துறவியும் வியந்து மகிழ்வான். இத்தீவு முழுவதற்கும் நான் ஒப்பற்ற மன்னனாக இருந்தேன். அஃது என் பெரும் பேறு. நான் என் குடிமக்கள் எல்லோருடைய உயிரையும், காக்கவும் அழிக்கவும் முழு உரிமை உடையவனாய் இருந்தேன். என் விருப்பப்படி எந்த உயிரையும் தூக்கிலிட்டுக் கொல்லவும், உயிரையும் உரிமையையும்

எடுத்துக் கொள்ளவும், எனக்கு வல்லமை உண்டு. என் குடிமக்களிற் கலகம் செய்வார் எவரும் இல்லை.

இது மட்டும் அன்று, என் பணியாளர் சூழ்ந்து நின்று ஏவல் செய்யத் தனியரசன்போல் இருந்து, மிக்க வளங்களோடு உண்டு வாழ்ந்தேன். என்னுடன் தாராள மாகப் பேச இடம் பெற்ற தோழன் நான் வளர்த்த கிளி ஒன்றே. என்னுடைய நாய் வாழ்நாள் முதிர்ந்து, தளர்ந்து, தன் இனத்தைப் பெருக்குவதற்குப் பெண் நாய் முகத்தை என்றும் காணாதிருந்து, எப்பொழுதும் என்வலப்புறத்தில் உட்கார்ந்த வண்ணமாய் இருந்தது. என் உணவுமேசை யின் இருபக்கங்களிலும் இரண்டு பூனைகள் உட்கார்ந்து, அடிக்கடி நான் போடும் உணவுத் துண்டுகளை ஆவலுடன் தின்று என் உதவிக்கு நன்றியுடையனவாய் இருந்தன.

இந்தப் பூனைகள் தொடக்கத்தில் கப்பலினின்றும் நான் கரைக்குக் கொண்டுவந்த இரண்டு பூனைகள் அல்ல. அவை இரண்டும் இறந்து போயின. நான் வாழும் இடத் திற்கு அருகில் நானே அவைகளை எடுத்து அடக்கம் செய் தேன். இறக்குமுன் அவற்றில் ஒன்று குட்டி போட்டது. அதனுடன் புணர்ந்த விலங்கு இனம் யாது என்று நான் அறியேன். அதன் வயிற்றிற் பிறந்து வழிவழியாக வந்த இவ்விரண்டை மட்டும் நான் பழக்கப் படுத்தி வளர்த்தேன். மற்றவைகள் என் வீட்டை விட்டு நீங்கிக் காட்டுப்பூனைகள் ஆயின. சென்ற பின்னும் அவைகளிற் பல என் வீட் டுக்குள் வரத் தலைப்பட்டு, உணவுப் பொருளைக் கொள்ளை யடித்ததனால், அவைகளைச் சுட்டுக் கொன்றேன். அதன் பிறகு எஞ்சியவைகள் என் வீட்டிற்கு வரவே இல்லை. மேற் கூறியவாறு ஏவல் கேட்போர் பலர் சூழ, ஒரு விதத்திலும் குறைவின்றி, உண்டு உடுத்து இன்பத்தோடு வாழ்ந்து வந்தேன். மக்கள் பழக்கம் இல்லாததன்றி எனக்கு வேறு குறை இல்லை. இக்குறையும் சிறிது காலத்திற்குள் நீங்கி யது. பழகுவதற்குரிய மக்கள், கூட்டமாக அங்கு வந்து சேர்வார்கள் என்று தோன்றியது.

# பதினோராம் அதிகாரம்

## ப க்கைக் கொண்டுவர விரும்புதல்

எனது ஓடத்தை வைத்திருந்து பயன்படுத்த வேண்டும் என்று எனக்குச் சிறிது எண்ணம் உண்டானதையும், இனி அதில் ஏறி ஐயமும், பேரிடரும் நிறைந்த பயணம் செய்வதற்கு மனம் இல்லாதிருந்ததையும் முன்பு கூறினேன். அதனால் சில வேளைகளில் ஓய்ந்திருந்து அவ்வோடத்தை இக்கரையின் அருகில் எவ்வாறு கொண்டு வந்து சேர்ப்பதென எண்ணினேன். சில வேளைகளில் ஓடம் இல்லாதிருப்பினும் குற்றமில்லை என்று எண்ணி அதைப்பற்றி நினையாமல் இருந்தேன். முன் சென்ற பயணத்தில் கடற்கரையின் அமைப்பு எவ்வாறு உள்ளது, நேர்மை, கூர்மை, சாய்வு, சரிவு எவ்வாறு அமைந்துள்ளன; நீரோட்டம் எத்திசையில் பெருகி ஓடுகின்றது? என்பனவற்றை அறியும் பொருட்டுக், கரையை அடுத்திருந்த ஒரு குன்றின்மேல் ஏறிய செய்தி தெரிவித்தேன் அன்றோ? அக் குன்று இருக்கும் கரைக்குப் போகவேண்டும் என்று அளவற்ற ஆவலும் எண்ணமும் கொண்டேன். இந்த அவா நாளுக்கு நாள் வளர்ந்தது. அதனால் அவ்விடத்திற்குத் தரைவழியாய்க் கரையை ஒட்டிப் பயணப்பட்டேன். இங்கிலாந்திலிருக்கும் எவராவது என் அலங்கோலத்தைக் கண்டால் திகைத்து மயங்குவர். அல்லது ஏளனம் செய்து நகைப்பர். நான் உலாவச் சென்றபொழுது நினைத்து நின்று என் கோலத்தை உற்றுப்பார்த்து, இக்கோலத்திலேயே நான் யார்க்ஷயர் மாகாணத்தில் பயணம் செய்வேனாகில் பார்ப்பவர்களுக்கு மிக்க வேடிக்கையாய் இருக்குமே என்று எண்ணிப் புன்னகை செய்தேன். என் ஆடையணிகள் எவ்வாறு இருந்தன என்று கூறுகின்றேன்; கேட்கள்.

நான் உடுத்தியிருந்த உடைகள்

நான் தலையில் அணிந்த வெள்ளாட்டுத் தோல் குல்லா பருத்து உயர்ந்து அழகின்றியிருந்தது. அதன் அடித் தொங்கல் வெயிலுக்கு மறைப்பாகவும், மழைத்துளியைக் கழுத்தில் விழவொட்டாமல் அப்பால் தள்ளிவிடவும் தக்கதாக நீண்டு சரிந்திருந்தது. இந்தத் தீவில் ஆடைக்குள் மறைந்திருக்கும் உடம்பின் உறுப்புக்களில் மழைத்துளி விழும்போது உண்டாகும் குளிருக்கு ஒப்பான துன்பம் வேறு ஒன்றும் இல்லை.

நான் அணிந்திருந்த ஆட்டுத்தோல் மார்புச்சட்டை எனது நடுத்தொடை வரையில் நீண்டிருந்தது. காற்சட்டை குறுகி முழங்கால் முட்டிவரையில் எட்டியது. அஃது ஒரு கிழ ஆட்டுக்கடாத் தோலினால் தைக்கப்பட்டது. அதனால், அத்தோலின்மீது உள்ள நீண்ட மயிருக்குள் முழங்கால் முட்டியின் கீழுள்ள கால் சிறிது அளவு மறைந்திருந்தது. ஆதலினால், நான் உடுத்தியிருந்த அரைக்காற் சட்டை பெரும்பாலும் மக்கள் உடுக்கும் முழுக்காற் சட்டையைப் போன்றிருந்தது. கால் உறையும், செருப்பும் எனக்கு இல்லை. குதி உயர்ந்த நீண்ட தோலுறை போன்றதாக எனது அடியையும், முழந்தாளின் கீழ்க்காலையும், ஒருவாறு மறைக்கும் பொருட்டு, அழகின்றி ஓர் இணையான தொடு தோல் செய்து இட்டிருந்தேன். அதற்கு என்ன பெயர் இடலாம் என்று எனக்குத் தெரியவில்லை. அஃது ஒன்று மட்டுமா, என் உடம்பை மூடிய ஆடைகள் எல்லாம் அழகின்றியே இருந்தன.

காய்ந்த வெள்ளாட்டுத் தோலினாற் செய்த அகலமான பட்டை ஒன்று இடுப்பிற் கட்டியிருந்தேன். அதற்குப் பூட்டு இல்லை. இரண்டு வார்கட்டி இழுத்து இறுக்கப்பட்டது. அதன் இரு விலாப்புறத்திலும் ஒருவிதத் தெறிப் பூட்டு இரண்டு செய்து, அத்தெறிகளிற் கத்தியாவது குத்துவாளாவது அன்றி, ஒன்றில் மரம் அறுக்கும் குறுகிய வாள் ஒன்றும், ஒன்றிற் கைக்கோடரி ஒன்றும் மாட்

டப்பட்டு இருந்தன. அகலக் குறைவான மற்றொரு தோற் பட்டை தோளில் தொங்கும்படி இட்டு, இரு முனைகளையும் மேற் சொல்லியவாறு இறுக்கிக் கட்டியிருந்தேன். அதன் முனையில் எனது இடது கக்கத்தின் கீழ் இரண்டு ஆட்டுத் தோற்பைகள் தொங்கின. ஒன்று வெடி மருந்துப்பை; ஒன்று குண்டுப்பை. முதுகுப்புறத்திற் குடையும், தோளில் துப்பாக்கியும் வைத்துக்கொண்டு, சற்றேனும் அழகு இன்றி இருந்த அகன்ற ஆட்டுத்தோல் குடை பிடித்துக்கொண்டு வெளியிற் சென்றுவந்தேன். பார் வைக்கு அழகின்றியிருந்தாலும் முதன்மையாகத் துப்பாக்கி யும் இரண்டாவதாகக் குடையும் ஆகிய இவ்விரண்டுந் தானே எனக்கு இன்றியமையாத துணைக்கருவிகள். உடம்பை மினுக்குவதில் எண்ணமின்றி நில நடுக்கோட்டுக் குப் பத்தொன்பது பிரிவு தொலைவிற்குள் உலாவிய எனது முகம் வெள்ளை மணிதரும் நீகிரோவரும் கூடி வாழ்ந்த போது பிறக்கும் கலப்பு மக்களின் முகம்போலக் கறுத் திருக்கவேண்டும் அன்றோ? அவ்வளவு கறுக்கவில்லை. எனது தாடிமயிர், முக்கால் அடி நீளம் வளரும் வரையிலும் அதைக் கத்தரிக்காமல் விட்டிருந்தேன். பின்பு மழித்தல் கத்தியும், கத்தரிக்கோலும் வேண்டுமட்டும் இருந்ததனால், நான் அதைக் குறுக வெட்டி மீசையிற் கத்திபோடாமல் அதை வளர்த்து, ஸல்லித் துறையில் நான் கண்ட துருக்கி யர் சிலர் வைத்திருக்கும் அகன்ற மீசையைப்போல ஒழுங்கு படுத்தினேன். துருக்கியர்மட்டுமேயன்றி, ஸல்லித் துறை அடுத்த நாட்டில் வாழும் முகமதியர் மீசை வைத்துக் கொள்வது வழக்கமன்று. எனது மீசையின் நீளத்தையும், அதன் சாயலையும், இங்கிலாந்தில் இருப்பவர்கள் கண் டால், மயங்கித் திகைப்பார்கள். ஆயினும் அவைகள் என் குல்லாவைத் தூக்கத்தக்க அளவுக்கு நீண்டவைகள் என்று கூறமாட்டேன்.

### குன்றின்மேல் ஏறிக் கடலைக் காணுதல்

நான் இதுவரையிற் கூறியவைகள் எல்லாம், பிறர் கண்டு கூறுங் கூற்றுக்களே அன்றி என் கூற்றுக்

கொள்ளுதல் வேண்டா. நான் வாழ்ந்த இடத்தில் என்னைக் காண்பவர் எவரும் இல்லாததனல், நான் அழகற்றவனய் இருப்பினும் என்ன? அல்லது அழகனய் இருப்பினும் என்ன? இரண்டும் ஒன்றுதான். அதனல் என் உருவத்தைப்பற்றி ஒன்றும் கூருது விடுகின்றேன். மேலே விரிவாய்க் கூறிய ஆடை அணிகளைப் புனைந்துகொண்டு ஐந்து ஆறு நாள் வரையில் இரண்டாவது பயணம் செய்தேன். முதலிற் கடற்கரை வழியாய்ச் சென்று மலைமேல் ஏறுவதற்கு, எனது ஓடத்தை நிறுத்தி நங்கூரம் போட்ட இடத்தை இலக்காய் வைத்துச் சென்றேன். இம்முறை ஓடத்தைப் பாதுகாப்பாகப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பம் இல்லாததனல், குறுக்கு வழியாய்ச் சென்று, முன் ஏறிய அவ்வளவு உயரத்திற்கு மலை ஏறிக், கடலுக்குள் ஒற்றி நீண்டிருந்ததும், நான் ஓடம் ஏறிச்சுற்றி வந்ததும், ஆகிய நிலத்தொடர் முனையைப் பார்த்தபொழுது, கடல் அடங்கி அமைதியாய் இருப்பதையும், அலைக்கிளர்ச்சியாவது, அசைவாவது, நீரோட்டமாவது இல்லாதிருப்பதையும் கண்டு வியப்பு அடைந்தேன்.

**நீர் பெருகும் நேரத்தை அறிதல்**

இவ்வாறு கடல் அமைதியாய் இருக்கும் காரணம் யாது என்று முதலில் எனக்கு விளங்கவில்லை. பொறுத்திருந்தாயினும் பார்த்து, நீரோடும் திசை வேறுபாட்டால் இவ்வேற்றுமை உண்டாயிருக்குமோ என்று அறிய முடிவு செய்தேன். அப்பொழுதே அதன் காரணம் எனக்கு மயக்கமற விளங்கிற்று. கடல்நீர் வற்றம் மேற்குத்திசையினின்று தொடங்கிக் கரையிலுள்ள பெரிய ஆற்றினின்று வேகமாய்ப் பெருகும் வெள்ளத்துடன் கலப்பதனல், இந்த நீரோட்டம் உண்டாக வேண்டும் என்றும், மேல்காற்று உரத்து அடித்தால் கரை அடுத்து நீர் ஓடுகிறதென்றும், வாடைக்காற்று வலிவோடு அடித்தால், கரைக்குத் தொலைவில் ஓடுகிறதென்றும் அறிந்தேன். அன்று மாலைப் பொழுதிலேயே அதற்குச் சான்று, கண்கூடாகக் கண்டேன். மாலைநேரம் வரும்வரையில் அவ்விடத்தில் உலாவிக்

கொண்டு நின்று, மீண்டும் மலையேறிப் பார்த்தபொழுது வற்றுநீர் ஓடத் தொடங்கியது. அது கரைக்கு அருகில் அன்றி, ஒன்றரை மைல் தொலைவில் சேய்மையில் ஓடிற்று. நான் ஓடம் செலுத்திக்கொண்டு சென்றபொழுது, நீர்கரை நெருங்க ஓடி, ஓடத்தை விரைவாய் அடித்துக்கொண்டு போயிற்று. கால வேறு பாடு அறிந்து நீர்வற்றும் வேளையிற் செல்வேனாயின் அப்படிப்பட்ட துன்பம் நேராது.

## ஓடத்தைக் கொண்டுவர அவாவுதல்

வற்று வேளை இது, பெருக்கு வேளை இது; என்று திட்டமாய் அறிந்தால் என் ஓடத்தை எளிதில் திருப்பித் தீவைச் சுற்றி முன் நின்ற விடத்திற்கொண்டு வந்து சேர்க்கலாம் என்று நான் கண்ட காட்சியால் எனக்கு மனவுறுதி உண்டாயிற்று. இந்த முடிவின்படி செய்ய நினைத்த பொழுது, முன்பு எனக்கு நேர்ந்த பேரிடர்களை நினைத்துத் திகிலடைந்தேன். பிறகு அதைப்பற்றி நினைக்கும்பொழுதெல்லாம் என் மனம் பதறிற்று. அவ்வாறு பதறினாலும் என் கருத்தை நான் விட்டு விடவில்லை. வேறு ஒரு முடிவு செய்தேன். அதன்கண் ஓர் இடரும் இல்லை. பாடுபட்டு வருந்தி உழைக்க வேண்டி யிருந்தது. அது மற்றொரு ஓடம் செய்வதுதான். அவ்வாறு செய்தால் முன் செய்த ஓடம் தீவின் அப்புறத்திற்கும், இஃது இப்புறத்திற்கும் எனக்குப் பயன்படும்.

## இத்தீவில் எனக்கு இருக்கும் தோட்டங்கள் இரண்டு

இக்காலத்தில் நான் வாழ்ந்த தீவில் எனக்கு இருந்த தோட்டங்கள் இரண்டு. ஒன்று மலைக்கீழ் மதில்சூழ்ந்த கூடாரம். அதன் பின் பக்கத்தில் ஒரு குகை. இப்பொழுது அக்குகை ஒன்றிற்குள் ஒன்றாய்ப் பல அடுக்கறைகளாய் விரிவு செய்யப்பட்டிருந்தது. அவற்றுள் அதிகம் காய்ந்து பரந்திருந்த ஓர் அறையின் கதவு என் கோட்டைச் சுவர் மலையுடன் பொருந்திய விடத்தில், வெளியிற் செல்வதற்கேற்ற வாயிலாய்ப் பயன்பட்டது. அவ்வறையில் நெருக்கமாய் வைக்கப்பட்டிருந்த பொருள்கள் யாவை? முன்பு

ஓர் இடத்தில் நான் விரிவாய்க் கூறியபடி, பெரிய மட் பாண்டங்களும், பதினொன்று பதினைந்து அகன்ற கூடை களுமே ஆகும். ஒவ்வொன்றும் ஐந்து ஆறுமரக்கால் நெல் பிடிக்கும். அக்கூடைகளில் நான் என்னுடைய விளை பொருள் முதலிய உணவுக்குப் பயன்படும் பொருள்களை வைத்திருந்தேன். எனது முக்கிய உணவுப் பொருள் தான் நீக்கிக் குறுகக் கொய்த நெல் முதலிய கூலங்களின் கதிரும், கையாற் கசக்கி மணியாக்கின கூலமும்தாம்.

எனது வீட்டிற்குப் புறமதிலாய் அடைத்த வேலி மரங்கள் பருத்துத் தழைத்துக் கிளைத்து மிகவும் அடர்ந் திருந்ததனால், வெளியில் நின்று பார்ப்பவர்களுக்கு அவ் வேலிக்குள் இருக்கும் என் வீடு சற்றேனும் தெரியாது.

இவ்வீட்டுக்கு அருகில் வெளித்தரைக்கு உட்பகுதி யில் பள்ளமான இடத்தில் இரண்டு வயல்களை ஆண்டு தோறும் வெட்டிக் கொத்தி எருவிட்டு, விதைக்கும் காலத்தில் விதைத்து, அறுக்கும் காலத்தில் அறுப்பு அறுத்துப் பயன்படுத்திக்கொண்டு வந்தேன். மேலும் அதிக கூலம் வேண்டுமானால், பக்கத்தில் அதிக நிலம் சேர்த்துப் பயிர் செய்வேன்.

**இரண்டாவது தோட்டம்**

இஃது அன்றி, என்னுடைய நாட்டுப்புற வீட்டுக்கு அருகிலும் பக்குவமான தோட்டம் இருந்தது. முதலில் நான் கட்டிய வீட்டின் வேலியை அவ்வப்பொழுது அள வான உயரத்தில் மட்டமாய் நறுக்கி ஒழுங்குபடுத்தினேன். ஏணி எப்பொழுதும் வேலிக்குட்புறத்தில் சாத்தப்பட் டிருந்தது. முதலிலே சிறு கொம்புகளாய் இருந்த வேலிக் கால்கள் வரவரப் பருத்து வலிவு பெற்று, உயர்ந்து அடர்ந்தன. அவைகள் பக்கத்தில் படர்ந்து நெருங்கிக் கூடிக் குளிர்ந்த நிழல் உண்டாகும்படி, உயர்ந்த கொம்பு களைப் பக்குவமாய் நறுக்கித் தள்ளி வளர்த்தேன். இதன் நடுவில் எனது கூடாரம் இருந்தது. கூடாரம் என்றால், நட்ட கால்களின் மேல் நிழலுக்காக விரித்துக் கட்டிய

கப்பற்பாய். அஃது ஒரு பொழுதும் பழுதாகவில்லை. இந்த மேற்கட்டியின் கீழே, நான் சுட்டுக்கொன்ற விலங்குகளின் தோல் உறையில் பஞ்சு போன்ற மெதுவான பொருள் களைப் பொதிந்து செய்த சார்மணைக்கட்டில் ஒன்று வைத் திருந்தேன். கடலோடிகள் கப்பலிற் படுக்கும் கம்பளி ஒன்றும், போர்த்துக் கொள்வதற்காகக் கப்பற் காவற் காரர் அணிந்துகொள்ளும் அங்கி ஒன்றும் அங்கு வைத் திருந்தேன். என்னுடைய முதன்மையான இடத்தினின்று நான் எங்காவது வேலையின் பொருட்டுச் சென்றிருக்கும் வேளையில் இந்த நாட்டுப்புற வீடுதான் எனக்கு உறை விடமாகப் பயன்பட்டது.

இதன்பக்கத்தில் ஆடுகளைவிட்டு அடைக்கும் அடைப்புக்கள் இருந்தன. அவ்வடைப்பு வேலையில் நான் மிகுந்த துன்பம் அடைந்ததனால், வேலிக்கால்களின் இடையில், சிறிது வெளி இருந்தது கண்டு, அவ்வழியில் ஆடுகள் வெளியில் ஓடிவிடும் என்று நினைத்து வருந்தி, அவ்வேலியின் புறத்தில் சிறு கொம்புகள் நெருக்கமாய் நாட்டினேன். அவ்வாறு நாட்டிய பின் அது வேலியன்றிப் பலகை அடைத்த தட்டியைப் போன்று இருந்தது. அவ் வேலியின் வழியே ஒரு கையை நுழைக்கவும் இடம் இல்லை. அவ்வேலிக் கால்கள் அடுத்துவரும் மழைக் காலத் தில் வளர்ந்து, கிளைத்து, வலிவுற்றுத் தழைத்து, மதிலைக் காட்டிலும் அதிக உறுதியாகும்.

நான் செயலற்றுச் சோம்பியிராமல் என் இன்ப வாழ்க்கைக்கு இன்றியமையாது தோன்றும் எதையும் அரும்பாடுபட்டுச் செய்து நிறைவேற்றினேன் என்பதற்கு இதுவே சான்றாகும். என் வீட்டிற்கு அருகில் எனக்குப் படிந்து வசப்பட்ட ஆடுகளை வளர்த்து, அதிகப்படுத்திக் கொண்டு வந்தேன். இத்தீவில் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தாலும் அதுவரையிற் பதங்கெடாத இறைச்சியும், பாலும், வெண்ணெயும், பாலடைக் கட்டியும் பக்கத்தில் பாதுகாப்பாய்வைத்திருப்பதற்கு ஒப்பாக அஃது இருந்தது. ஆடுகள் எவ்விதத்திலாயினும் வெளியில் சென்று ஓடி

விடாதபடி, அடைப்பை வலுப்படுத்திப் பழுதகற்றிக் கொண்டு வருவேனாகில், வேண்டும் பொழுது பிடித்துக் கொள்வதற்கு ஏற்றபடி அவ்வாடுகள் எப்பொழுதும் என் அருகில் இருக்குமென்று உறுதியாய் நம்பினேன். அதனால் மேலும் மேலும் கால்களை நாட்டி வேலியை உறுதி செய்தேன். என்னுடைய அவாவினால் அளவிற்கு அதிக நெருக்கமாய்க் கால்களை நாட்டியது கருதிப் பின்பு அவைகளிற் சிலவற்றைப் பிடுங்கி எறிந்துவிட்டேன்.

## கொடி முந்திரிப் பழமும் பயன்பட்டது

மேலும் இவ்விடத்தில் எனது கொடிமுந்திரிப் பழக் காடு இருந்தது. அப்பழங்களைப் பறித்து வற்றல்போட்டு, மாரிகாலத்திற்கு வேண்டுமென்று வைத்திருந்தேன். அது தான் மழைக்காலத்தில் எனது முக்கியமான உணவு. உணவு வகைகளில் அதைப்போல் நாவிற்கு இன்பமும், சுவையுமான பொருள் வேறு இல்லை. அது நாவிற்கு இன்பமாய் இருந்தது மட்டுமன்றி, நோய்க்கு மருந்தாகவும், உடல் நலத்துக்கு உதவியாகவும், உடலுக்கு வளப்பம் தருவதாகவும், உடலின் வெப்பத்தை நீக்குவதாகவும் இருந்தது.

## ஓடத்தில் ஏறி இன்பப் பொழுது போக்குதல்

இந்நாட்டுப்புறவீடு எனது மலைக்கோட்டைக்கும், ஓடம் நிறுத்தப்பட்டிருந்த இடத்திற்கும் நடு இடம் ஆதலால், நான் ஓடத்தைப் பார்க்கப் போகும்பொழுதெல்லாம் இடைவழியில் இவ்வீட்டில் தங்கினேன். நான் பெரும்பாலும் ஓடத்தைப் போய்ப் பார்த்து அதன் துணைக் கருவிகள் அனைத்தையும் பழுதின்றிக் காத்துக்கொண்டு வந்தேன். சில வேளை இன்பப் பொழுது போக்காக ஓடம் ஏறிப் போவதும் உண்டு. முன் போலப் பேரிடர் வரத்தக்க பயணம் செய்ய என் மனம் விரும்பவில்லை. கரையினின்று இரண்டொரு கல்லெறி தொலைவுக்கு அப்புறம் நான் ஒரு பொழுதும் ஓடத்தைச் செலுத்திப் போகவில்லை. அவ்வாறு சென்றால் எனக்குத் தெரியாமல் நீரோட்டமாவது கடுங்காற்றாவது ஓடத்தை அடித்துக்கொண்டுபோய்

நெடுங்கடலில் தள்ளும் என்றும், வேறு ஏதேனும் பேரிடர் நேரும் என்றும் அச்சமுற்று இருந்தேன். இது நிற்க. இப்பால் என் புதிய திருப்பத்தைக் கூறுகின்றேன்.

**புதிய மனிதனுடைய அடிச்சுவடு கண்டு அஞ்சுதல்**

ஒருநாள் உச்சிப் பொழுதில் ஓடம் இருக்கும் இடத்திற்குச் சென்றபோது, கடற்கரை மணலில் ஒரு மனிதனுடைய கால் அடிச்சுவடு இருந்தது கண்டேன். உடனே மயக்கம் அடைந்து, இடி விழுந்தவனைப் போலவும், பேய் கண்ட பிள்ளையைப் போலவும், திகைத்து நின்றேன். எவரேனும் பேசும் ஒலி கேட்கின்றதோ என உற்றுக் கேட்டேன். எவரேனும் காணப்படுகின்றனரோ என்று சுற்றிலும் உற்றுப் பார்த்தேன். ஒன்றுங் கேட்கவுமில்லை; எவரையும் காணவும் இல்லை. மேட்டில் ஏறி நின்று தொலைவில் பார்த்தேன். கரைக்கு அருகில் நெருங்கியும் தொலைவிற்சென்றும் பார்த்தேன். எவ்விடத்திலும் ஒருவரும் இல்லை. நான் முதலிற்கண்ட அடிச்சுவடு மட்டுமே இருந்தது. மேலும், வேறு அடிச்சுவடு இருக்கிறதோ என்றும், நான் கண்டது வெறும் கற்பனையாக இருக்குமோ என்றும் திட்டமாய் அறிவதற்காக மீண்டும் அவ்வடிச்சுவட்டைப் போய்ப் பார்த்தேன். கற்பனை என்று சொல்லுவது பொருந்தாது. கால்விரல், குதிக்கால் காலின்படம், உள்ளங்கால் முதலிய உறுப்புக்களின் அச்சு அடையாளம், சிறிதாயினும் மயக்கமின்றி, அடிச்சுவடு மிக விளக்கமாய்ப் புலப்பட்டது. அவ்விடத்தில் மனிதருடைய அடிச்சுவடு வந்ததற்குக் காரணம் என்ன என்று நான் அறியவும் இல்லை. கற்பனை செய்யவும் இயலவில்லை. திகைத்து மயங்கிய என் மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிற்று. சற்று நேரம் என் நினைவு அழிந்திருந்தேன். அதன் பிறகு மலைக்கோட்டைக்குத் திரும்பினேன். திரும்பிச் செல்லும்போது, "மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்பது போலவும், "அஞ்சினவன் கண்ணுக்கு வானமெல்லாம் பேய்" என்பது போலவும், என் கண்ணுக்கு எதிர்ப்பட்ட புதர், மரம், குற்றி முதலிய பல

வற்றையும் மனிதன் என்று எண்ணி அளவில்லாத திகில் அடைந்தேன். அச்சத்தினால் அடிக்கொருமுறை திரும்பிப் பார்த்த வண்ணமே சென்றேன். ஏங்கித் திகைத்த என் மனத்திற்குத் தோன்றிய பற்பல அஞ்சத்தக்க வடிவங்களை எடுத்து விளக்கிக் கூறுவது இங்கு இயலாது. ஒவ்வொரு நொடிப் பொழுதிலும், என் உள்ளத்திற் பிறந்த அஞ்சத்தக்க நினைவுகள் பல. அறிவு ஆராய்ச்சிக்குப் பொருந்தாத வீண் கற்பனைகள் பல.

## அச்சத்தால் ஒடுங்கிக் கோட்டையினுள் கிடத்தல்

கோட்டையை நெருங்கியவுடன், பிடிக்கத் தொடர்ந்து ஓடிவருபவர்களின் கண்ணுக்குத் தப்பக் கருதும் திருடனைப் போலக் கோட்டைக்குள் பறந்து ஓடினேன். நான் தொடக்கத்தில் செய்துவைத்த ஏணி வழியாய் மதில் ஏறி உட்சென்றேனோ? பிறகு கோட்டை வாயிலாய் ஏற்பட்ட மலைத்துளை வழியாய் நுழைந்து புகுந்தேனோ? எப்படிச் செய்தேனென்று இப்பொழுது எனக்கு நினைவு இல்லை. வேட்டையாடுவோர் தொடர்வது கண்டு தன் வளைக்கு விரைந்து ஓடும் முயலுக்கும், நாய் வேகமாய் வருவது கண்டு, தன் குழிக்குப் பறந்து ஓடும் நரிக்கும் மிகுந்த திகில் இருக்கும் என்று சொல்வார்கள்: நான் என்னுடைய வீட்டிற்கு ஓடிவந்தபொழுது எனக்கு இருந்த அச்சம் அத்திகிலை விட அதிகமாய் இருந்தது.

அன்று இரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. திகில் உண்டானதற்குக் காரணமான அடிச்சுவட்டைக் கண்ட விடம் நீங்கியும், எனது கவலை மட்டும் தொலையாமல் பின்னும் வளர்ந்தது. இஃது இயற்கைக்கு மாறுபட்டது. பழக்க வழக்கத்திற்கும் வேறுபட்டதே. அச்சத்தால் என் மனம் மயங்கித் தடுமாறியதனால், அடிச்சுவடு கண்ட விடம் வெகு தொலைவில் இருந்தும் அச்சமான நினைவுகள் என் நெஞ்சைவிட்டு இன்னும் நீங்கவில்லை. நான் கண்டது பேயின் அடிச்சுவடாய் இருக்கும் என்று சில வேளை நினைத்தேன். அந்த எண்ணம் என் அறிவிற்குச் சரியென்று

புலப்பட்டது. பேய் அன்றி வேறு எதுவும் மானிடவடிவை தாங்கி அவ்விடத்திற்கு எவ்வாறு வரும்? வந்து இறங்கின கலம் எங்கே? வேறு அடிச்சுவடுகள் இல்லையே. எந்த மனிதனும் அவ்விடத்திற்கு வரக்கூடுமா? அது நிற்க. அடிச்சுவட்டைக் காண்பதற்கு எவருமில்லாத இந்த இடத்திற் பேய் மானிடவடிவம் தாங்கி வரக்கூடும் என்று நினைப்பதற்கும் இடமில்லை. நான் அதைக் காண்பேன் என்று பேய்க்கு எப்படித் தெரியும்? அதனால் இந்த எண்ணமும் என்னுடைய மயக்கத்தை நீக்கவில்லை. என்னை அச்சுறுத்த வேண்டுமானால் ஒரே ஓர் அடிச்சுவட்டினால் அன்றி வேறு வழி பேய்க்குத் தெரியாதா? எளிதிற் செய்யத் தக்க எண்ணிறந்த வழிகள் அதற்குத் தெரியுமே. தீவின் எதிர்க்கரையில் நான் இருந்ததனால், அக்கரையில் ஏதும் அச்சக்குறி காண்பிக்காமல், நான் காணுதற்கரிய தொலைவான எதிர்க்கரையில், தன் அடிச்சுவட்டைப் பதிவு செய்து வெளியிடுவதற்குப் பேய் அவ்வளவு மூடத்தனம் உள்ளதா? அதுவும் காற்று வலுக்கும்பொழுது பொங்கிப் புரளும் அலை வாரிக்கொண்டு போகத்தக்க கடற்கரை மணலில் தன் காலடியின் அடையாளத்தை வைத்திருக்குமா? காரியத்தின் தன்மையை நினைக்குமிடத்து, இந்த எண்ணம் அறிவு ஆராய்ச்சிக்கு ஒத்து வரவும் இல்லை. பேயின் மாயத் தன்மைகளைக் குறித்துப் பெரும்பாலும் மனிதர் எண்ணும் எண்ணங்களுக்கு ஒத்திருக்கவும் இல்லை.

இத்தன்மையான பல முறைகளை நினைத்து, அதுபேய் அன்று என்றும், அதனிலும் கொடிய அஞ்சத்தக்க ஏதோ ஓர் உயிர்ப்பொருள் என்றும் நினைத்தேன். வேறு உயிர்ப்பொருள் என்றது கடலின் எதிர்க்கரையை அடுத்த நிலப்பகுதியில் வாழும் வேடர். அவர்கள் ஓடம் ஏறிக் கடலில் உலாவும்பொழுது, நீரோட்டத்தின் வேகத்தினாலாவது, எதிர்காற்றின் கடுமையினாலாவது, ஓடம் தள்ளுண்டு இக்கரை சேர, அவர்கள் இறங்கி, இது மனிதர் இல்லாத தீவு என்று நினைத்து மீண்டும் ஓடமேறிப் போயிருப்பார்கள். வேடருடன் வாழ என் மனம் உடன்படாது. அவ்வண்ணமே இத்தீவில் வாழ்வதற்கு அவர்கள் மனமும் இசையாது.

## வேடரை நினைத்து மிகவும் வருந்துதல்

இவ் வெண்ணங்களைப் பெயர்த்தும் பெயர்த்தும், நான் பலவாறு நினைத்துக்கொண்டிருந்தபோது, அவர் கரையை அடைந்த வேளையில் நான் அவ்விடத்தில் நிற்காததைப்பற்றியும், அவர்கள் எனது ஓடத்தைக் காணாதது பற்றியும், களிகூர்ந்து கடவுளை வழிபட்டு வாழ்த்தினேன். ஓடத்தை அவர்கள் கண்டால் இவ்விடத்தில் மனிதர் வாழ்வதை அறிந்து, ஒரு வேளை அவர்கள் மனிதரைத் தேடி, உள் நாட்டிற்கு வந்தாலும் வருவார்கள். அவர்கள் ஓடத்தைக் கண்டு, இத்தீவில் மனிதர் இருப்பதாக எண்ணிக் கொண்டுபோயிருப்பார்களானால், இனிக் கூட்டமாகச் சேர்ந்து வந்து, என்னைப் பிடித்துக் கொன்று உண்டு விடுவார்கள். என்னைக் காணாதிருப்பினும், ஆட்டு மந்தைகள் விட்டு அடைத்திருக்கும் எனது அடைப்பையாவது கண்டு, கூலத்தை அழித்துப் பாழ்படுத்தி, நான் வளர்த்த ஆடுகளைப் பிடித்துக்கொண்டு, போவார்கள். பின்பு நான் உணவுக்கு வழியின்றிப் பட்டினியால் வருந்தி இறந்து போவேன் என்று நினைத்து, ஏக்கமுற்றேன். என் நெஞ்சு புண்பட்டது.

## கடவுள் நம்பிக்கை மறந்துபோயிற்று

இவ்வச்சம் என் நெஞ்சை வருத்தியதனால், எனது கடவுள் அன்புக்குரிய நம்பிக்கை முழுதும் நீங்கிப்போயிற்று. கடவுள் செய்த நன்மைகளைப் பழக்கத்திற் கண்டறிந்து, வியந்து, அவரே எனக்குத் துணையும், பற்றுக்கோடும் ஆவார் என்ற எண்ணமும், அவரே எனக்கு அடைக்கலம் என்னும் நம்பிக்கையும் வெயிலைக் கண்ட பனி போல் அகன்றன. அற்றை நாள் வரையில் உயர்ந்த உணவு அளித்து ஆதரித்த அருட்கடலாகிய கடவுள் எனக்கு ஈந்து அருளிய உணவுப் பொருள் முதலியவைகளைப் பிறர் கவர்ந்துகொள்ளாதபடி காக்கவல்லவர் என்று எண்ணாமல், எனது நம்பிக்கையைக் கைவிட்டேன். ஒரு தடவையில் விளைந்த பயிர் அறுக்கப்படுமுன் அதற்கு ஏதேனும் இடையூறு வரும் என்று நான்முதலில் எண்ண

வில்லை. அதனால் அதிக விளை பொருள்களை விளைவிக்க மிகப் பரந்த நிலத்தில் பயிர் செய்யவில்லை. அவ்வாறு எனக்குத் தேவைப்பட்ட அளவுமட்டும் குறைந்த நிலத்தில் பயிர் செய்தது தவறு என்று உணர்ந்தேன். இக் குற்றம் என்னைச் சேர்வது முறைதான் என்று எண்ணி, இனிமேல் ஏதேனும் இடையூறு நேர்ந்தால் நான் உணவுக்கு வழி யின்றி இறந்துவிடாதிருக்க எண்ணினேன். ஒவ்வோராண் டிலும் விளையும் பொருள் இரண்டு மூன்று ஆண்டுகட்குப் பயன்படும் அளவுக்கு மேலும் இரண்டு மூன்று மடங்கு நிலத்தைப் பயிரிடத் தொடங்கினேன்.

## இன்ப துன்பங்களின் மாறுபாடுகள்

மனிதருடைய வாழ்நாள் மிகக் குறுகியது. அவ்வா றிருந்தும் அக்குறுகிய காலத்துக்குள் அவர்களுக்குத் திரு வுள்ளத்தின் செயலால் வரும் நன்மை தீமை, பெருமை சிறுமை, இன்பம் துன்பம் ஆகியவை எவ்வளவு மாறுபட் டிருக்கின்றன. நமது நிலைமை மாறுபடும் பொழுதெல் லாம் அதற்கேற்ப வெவ்வேறு தன்மைகளை நமக்குள் தோற்றுவிக்கும் பலவித அடிப்படைகள் எவ்வளவு மறை முகமாய் இருக்கின்றன. நாம் இன்று விரும்புவதை நாளை வெறுக்கிறோம். இன்றைக்கு வேண்டுமென்று நாடுவதை நாளைக்கு வேண்டாமென்று நீக்குகிறோம். இன்றைக்கு நமக்கு உறுதுணையாய் இருந்து துணிவைத்தரும் பொருள் நாளைக்கு அச்சத்தைத் தருகின்றது. அதை நினைத்தாலும் நடுக்கம் உண்டாகிறது. இக் கொள்கை இந்த வேளையில் என்னைப் பொறுத்தமட்டில் ஐயந்திரிபு அற முழுவதும் உண்மையாகின்றது. எவ்வாறு என்று கூறுகின்றேன்:— நான் மனிதர் துணையின்றிக் கடல் சூழ்ந்த இத்தீவில் தனியேயிருந்து வருந்தியதைப்பற்றி நினைத்து மனம் புண் பட்டவன். மனிதருடனாவது மற்ற உயிர்களோடாவது பழகிவாழத் தகுதியற்றவன் என்று கடவுள் என்னை இச்சீர் கெட்ட நிலைமையில் வைத்ததாக எண்ணி, வருந்தியவன். மக்களினத்தாருள் ஒருவரையாவது காணப் பெறுவே னாயின், உயிர்த் தண்டனை பெற்ற ஒருவன், விடுதலை பெற்

றும் பிழைத்திருக்கத் தீர்ப்புப் பெறுவானுகில், அவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சி எத்தகையதோ அத்தன்மையான மகிழ்ச்சி எனக்கு உண்டாகும் என்றும், அதைவிட உயர்ந்த இன்பப் பதவி உயிர்கள் மறுமையில் அடையும் வீட்டுலகம் ஒன்று தவிர வேறு இல்லை என்றும் நினைத்திருந்த எனக்கு இப்பொழுது மனிதரைக் குறித்து நினைத்தவுடனேயே, மிகுந்த அச்சம் உண்டாகிறது. என் உடம்பு குளிர்ந்து விறைத்து நடுங்குகிறது. அதுவும் மனிதருடைய ஒலியைக் கேட்டு அன்று; அவர்கள் உருவைக் கண்டு அன்று; இத்தீவில் ஒரே ஒரு வெற்றடிச் சுவடுகண்ட அளவில் பதறி, உதறி ஒடுங்கி, உருவழிந்து போகத் தொடங்கினேன்.

### என் மனத்தில் உண்டான பற்பல எண்ணங்கள்

இப்படித்தான் இந்த உலகில் மனிதருடைய நினைவுகளும் செயல்களும் எப்பொழுதும் ஒரே அளவாய் இராமல், காலத்திற்குக் காலம் மேற்கூறியவாறு வேறுபடுகின்றன. முதலில் எனக்கு உண்டான மயக்கம் சற்றுத் தெளிந்தவுடன், என் நெஞ்சில் பற்பல வேடிக்கையான எண்ணங்கள் உண்டாயின. என் எண்ணம் சென்ற துறையை அடியிற் சற்று விரிவாய்க் கூறுகின்றேன். அளவற்ற அறிவும், அருளும் உள்ள கடவுள் எனக்கு விதித்த நிலைமை இதுதான்: நிலைத்த அறிவுடையவராகிய அவர் எனக்கு இப்படிப்பட்ட பல துன்ப நிலைகளை எக்காரணத்தால் உண்டாக்கினர் என்று முன்னதாகக் கண்டறியும் வன்மை எனக்கு இல்லை. ஆதலால் தலைவராகிய அவர் எனக்கு இப்படிப்பட்ட பேரிடர்களை வருவித்து அளிப்பது ஏன் என்று எதிர்மொழி பேசுவது தவறு; அவர் என்னைப் படைத்தவர். நான் அவரால் படைக்கப்பட்டவன்; படைக்கப்பட்ட பொருளைத் தன் விருப்பப்படி நடத்தும் உரிமை அவருக்கு உண்டு என்பதில் ஐயம் இல்லை. அன்றியும் நான் ஒழுங்கு தவறி நடந்து, என்னைப் படைத்த பெருமையுடைய கடவுளுக்குத் தவறு செய்ததனல், அவர் தமது விருப்பப்படி என்னை எவ்வாறுவது

தண்டிப்பது முறைதான். நான் அவர் கருத்துக்கு மீறித் தவறு செய்து பாவியானதால், என்மீது கோபங்கொண்டு அவர் எனக்கு விதிக்கும் தண்டனையை மனம் தாழ்ந்து ஏற்றுக்கொள்வது என் கடன் ஆகும்.

மேலும் என்னை முறைமையாய்த் தண்டித்து எனக்குத் துன்பம் வருவித்த நீதியும் முழுவல்லமையும் உள்ள கடவுள் எனக்கு மீட்சி தரவும் வன்மையுடையவர். அவர் இச்சீர்கெட்ட நிலையினின்று என்னை விடுதலை செய்யாதிருப்பினும், அவருடைய திருவுள்ளத்தின் செயலுக்கு முழுவதும் மனம் பொறுத்து அமைந்து அடங்கி நடப்பது என் கடமையாகும். அதுவுமன்றி அவரே எனக்குப் புகலிடம் என்று நம்பி வாழ்த்தி வழிபாடு செய்து, ஒவ்வொரு நாளும் அவர் தெய்வச் செயலாய் எனக்கு உணர்த்தும் கற்பனைகளையும், வெளியிடும் விதிகளையும் மனம் அடங்கிக் கைக்கொள்வதும் என்னுடைய பொறுப்புத்தான்.

### மறைமொழி எனக்கு ஆறுதல் அளித்தது

இந்த நினைவுகள் பல நாழிகை, நாள், கிழமை, பல திங்கள் வரையில் என் உள்ளத்தைவிட்டு நீங்காதிருந்தன. இந்த வேளையில் நான் மேலும் மேலும் நினைத்து வந்ததனால் விளைந்த சிறந்த நன்மை ஒன்றை இவ்விடத்தில் கூறாது விடுவது முறையன்று. அந்நன்மை வருமாறு: ஒருநாள் அதிகாலையில் நான்படுத்த படுக்கையிற் கிடந்தவாறே வேடருடைய அடிச்சுவடு கண்டது குறித்தும், அதனால் எனக்கு நேரிடும் பேரிடர் குறித்தும் நினைத்துக் கவலையும் வருத்தமும் கொண்டு மனம் தடுமாறினேன். அவ்வாறு தடுமாறும்பொழுது, "பேரிடர் வந்தபோது என்னை நோக்கிக் கூப்பிடு, நான் உன்னை விடுவிப்பேன். நீ என் பெருமையை விளங்குமாறு செய்வாய்" என்னும் மறைமொழி என் நினைவுக்கு வந்தது.

அந்நினைவு வந்தவுடன் நான் அச்சந்தெளிந்து, களிகூர்ந்து எழுந்து, எனக்கு விடுதலை செய்தருளும்படி ஆவலுடனும், மனவுறுதியுடனும், கடவுளை வேண்டினேன்.

வேண்டுகோள் முடிந்த பின்பு படிப்பதற்காகத் திருமறை நூலை எடுத்துத் திறந்து பார்த்தேன். அப்பொழுது "தலைவனை நோக்கிக் காத்திரு, உறுதி கொள், அவர் உன் மனத்தை நிலைப்படுத்துவார்; தலைவர்க்கே காத்திரு என் கிறேன்" என்னும் சொற்றொடர் முதன்முதல் என் கண் ணுக்கு எதிர்ப்பட்டது. இச்சொற்றொடரைப் படித்தவுடன் என் மனத்திற்கு உண்டான ஆறுதல் இவ்வளவென்று சொல்ல முடியாது. கடவுளை வழிபட்டுப் புகழ்ந்து, மறை நூலை வைத்துவிட்டுப் பின்பு துன்பம் நீங்கி யிருந்தேன். அவ்வேளையில் என் துன்பம் முழுவதும் நீங்கிற்று.

## அறியாமையும் பின்பு மனம் தேறுதலும்

மேற்கூறிய ம், எனக்கு உண்டா யிருக்கும்பொழுது, ஒருநாள் ))லைவயெல்லாம மன மருட்சி என்றும், எனக்குத் தோன்றிய அடிச் சுவடு நான் ஓடம்விட்டு இறங்கியபொழுது பதிந்த என் காலடிச் சுவடு என்றும் எண்ணிச் சற்று மனம் தேறினேன். மேலும் அடிச்சுவடு கண்ட இடத்தின் வழியாய் ஓடம்ஏறப் போன நான், ஓடத்தினின்று இறங் கிய பின்பும் அந்த வழியில் வந்திருக்கலாமே; அஃது என்னு டைய காலடிச் சுவடேயன்றி வேறு அன்று. இதுவரை யில் நான் நினைத்தது முழு அறியாமை. பேய்களையும் உரு வெளித் தோற்றங்களையும் பற்றிக் கதை கற்பித்துச் சொல்லத் தொடங்கிச், சொல்லும் பொழுதே கேட்பவரைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகமாய்ப் பயப்படுகின்ற மூடனுக்குச் சமமாய் எனது அடியைக் கண்டு, திகைத்துத் துன்புற்றுச் சீரழிந்தேன் என எண்ணினேன்.

அதன் பிறகு நான் சற்றுத் துணிவு கொண்டவனாய் மீண்டும் தீவில் உலாவத் தொடங்கினேன். மூன்று பகலும் இரவும் கோட்டைக்குள் அடங்கிக் கிடந்து உணவும் நீரும் இல்லாது வாடியதனால், எனக்குப் பசிக்களை மிகுதிப் பட்டது. வீட்டுக்குள் சில வாற்கோதுமை ரொட்டியும் தூய நீரும் அன்றி, வேறு ஒரு பொருளும் இல்லை. அன்றி

யும் நாள்தோறும் மாலை வேளையில் நான் பால் கறந்த ஆடுகளில் மூன்றுநாள் வரையில் பால்கறக்காது விட்டதனுல், மடியிற் பால் கட்டி அவைகள் துன்பமுற்றன. சில ஆடுகளுக்குப் பால் வற்றியே போயிற்று.

தன் நிழலைக்கண்டு அஞ்சும் மிருகத்தைப் போல, நான் என் காலடிச் சுவட்டைக்கண்டு ஏங்குவதற்குக் காரணம் இல்லை என்று என்னைத் தேற்றிக்கொண்டு வெளியிற் புறப்பட்டு ஆடுகளிற் பால் கறப்பதற்காக என் நாட்டுப்புற வீட்டுக்குச் சென்றேன். போகும் வழியில் எனக்கு மேலும் அச்சம் உண்டாயிற்று. எவராயினும் என்னைத் தொடர்ந்து வருவார் என்று அடிக்கடி திரும்பிப் பார்த்தேன். கொண்டுபோன கூடையை வைத்துவிட்டு ஓடித் தப்ப நினைத்தேன். இதைக் கேட்பவர்கள் இந்த நன்றி கெட்டவனுடைய நெஞ்சே இவனை வருத்தியதனுல், இவனுக்கு இவ்வளவு துன்பமுண்டாயிற்றென்றும், எளிதில் நீங்காத திகில் அண்மையில் இவனுக்கு உண்டாயிருக்க வேண்டும் என்றும் எண்ணுவார்கள். அஃது உண்மைதான்.

### அடிச்சுவட்டைக் கண்டு மறுபடியும் பேரச்சம் கொள்ளுதல்

இரண்டு மூன்று நாள் வரையில் நான் ஒன்றையும் காணுததனுல், சற்றே மனம் தெளிந்து, அஞ்சுவதற்கு உண்மையான காரணம் இல்லை என்றும், எனது கற்பனையே அச்சத்தை வருவித்தது என்றும், நினைத்தேன். உண்மை தெளியும் பொருட்டுக் கடற்கரைக்குப் போய், அவ்வடிச்சுவட்டின்மேல் எனது காலடியை வைத்து, அஃது எனது அடிச்சுவடுதானு என்று அறிய எண்ணினேன். அதனுற் கடற்கரைக்குப் போய் அவ்விடத்தைப் பார்த்தேன். அது நான் ஓடம் விட்டிறங்கிய பொழுது உலாவிய கரையாகத் தோன்றவில்லை. அடிச்சுவட்டின்மேல் எனது காலை வைத்து அளவு பார்த்தேன். அஃது எனது அடியை விட இரண்டு மடங்கு பெரிதாயிருந்தது. இவ்விரு காரணங்களையும் எண்ணி, எனக்கு முன்னைவிட அதிகத் திகில் உண்டாயிற்று. என் கண்ணுக்கு எட்டிய வானம்

முழுவதும் பேய் மயமாகத் தோன்றியது. குளிர் காய்ச்சல் கண்டு வருந்துபவனைப் போல, என் உடம்பு அச்சத்தால் குளிருண்டாகி விறைத்து நடுங்கியது. ஒருவனோ அன்றிப் பலரோ அக் கரையில் இறங்கினர் என்பதற்கு ஐயமில்லை என்றும், அல்லது அத்தீவில் மனிதர் குடியிருக்கிறார்கள் என்றும், நான் நினைக்காத வேளையில் அவர்கள் வந்து என்னைப் பிடித்துக் கொள்வார்கள் என்றும் உறுதியாய் நம்பி, வீட்டுக்குத் திரும்பிப் போனேன். இனி வரும் பேரிடர்களினின்றும் தப்பித்துக் கொள்ளும் வழி யாது என்று அப்பொழுது நான் ஆராயவில்லை.

அச்சத்தால் பதறுவோர் செய்யும் முடிவுகள் சிறிதும் பயன்பட மாட்டா என்று அறிவுடையவர் கூறுவர். அச்சமுள்ளவர்க்கு அறிவு துணை நில்லாது. பகைவர் ஆட்டு மந்தையைக் கண்டு அதனைப் பிடித்துத் தின்ன வருவர். அல்லது வேறு எந்த இரையையேனும் பிடித்துத் தின்ன அடிக்கடி இத்தீவிற்கு வரத் தொடங்குவர். அவ்வாறு வராதபடி இப்பொழுதே அடைப்பை வெட்டிப் பிரித்து, ஆடுகளைக் காட்டில் துரத்திவிட வேண்டும் என்று முதலில் எண்ணினேன். இங்கு விளையும் கூலத்தையும் அவர்கள் காணக்கூடும் என்று எண்ணி, விளை பயிரை அழித்து, நிலத்தை அகழ்ந்து புரட்ட நினைத்தேன். பின்பு, பகைவர் நான் குடியிருக்கும் அடையாளத்தைக் கண்டு, வீட்டுக்கு நெருங்கி வந்து, என்னைப் பிடித்துக் கொள்வார்கள் என்று எண்ணிக் காலம் தாழ்க்காமல் விரைவில் என்னுடைய ஓலை வீட்டையும், கூடாரத்தையும் அழித்து விட நினைத்தேன்.

### வீட்டினுள் இருந்து வருந்துதல்

நான் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்த அன்று இரவு முழுவதும் என் உள்ளத்திற் குடிகொண்ட நினைவுகள் பல. எனக்கு உண்டான அச்சம் வரவர அதிகரித்தது. முன் போல் என் எண்ணத்தில் திகில் உண்டாக்கும் கொடிய காட்சிகள் தோன்றின. துன்பங்களைக் கண்ணுக்கு எதிரே

காண்பவர்களுக்கு உண்டாகும் அச்சத்தைக் காட்டிலும், காணுதவர்களுக்கு மிகக் கொடிய அச்சம் உண்டாகும். தீமைகளை அடைபவர்களுக்கு உண்டாகும் துன்பத்தை விடத், தீமை வருமென்று கவலையுறுவோர் படும் துன்பம் மிகக் கொடியது. இதற்குமுன் எனக்குப் பேரிடர் வந்த நேரங்களில் திருவுள்ளத்தின் செயலால் வருவதெல்லாம் எனக்கு நன்மையாய் முடியும் என்று நினைத்து என் நெஞ்சைத் தேற்றிக்கொண்டு வந்தேன். இந்த வேளையில் அவ்வித எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. **பெலிஸ்தியர்** தன்மேற் படையெடுத்து வந்தபோது, கடவுளும் தன்னைக் கைவிட்டார் என்று முறையிட்ட சவுலைப் போலிருந்தேன். எனக்கு வந்த துன்பத்தை நினைத்து, என்னை அத்துன்பத் தினின்றும் விலக்கிக் காத்தருளும்படி, கடவுளை வாழ்த்தி வணங்கி, அவர் விருப்பத்திற்கு அடங்கி, அவ்வாறு என் மனத்தைத் தேற்ற நான் நினைக்கவில்லை. அவ்வாறு செய் திருப்பேன் ஆனுல், அவர் என்னை ஆதரித்து, என் மனக் கவலையை நீக்குவார். அல்லது அதைத் தாங்கத்தக்க மனவுறுதியைத் தருவார்.

**பகலில் நினைத்து வருந்துதல்**

மேற்கூறியவாறு இரவு முழுவதும் பல நினைவுகளால் என் மனம் நிலையற்று வருந்தியதனுல் எனக்குத் தூக்கம் வரவில்லை. காலையில் அயர்ந்து தூங்கினேன். தூக்கந் தெளிந்து எழுந்தபின் எனது அச்சமும் ஒருவாறு தெளிந் தது. பிறகு நான் பதருதிருந்து, செய்ய வேண்டிய செயல்களைக் குறித்து நீண்ட நேரம் நினைத்துப் பார்த்துப் பின்வருமாறு முடிவு செய்தேன். மிகுந்த இன்பமும், செழுமையும், பெரிய கண்டத்துக்கு அண்மையிலுமுள்ள இத் தீவில் மனிதர் ஒருவரேனும் போக்குவரவு செய்வ தில்லை என்று சொல்வது பொருந்தாது. இங்கே எவரும் நிலையாய்க் குடியேருதிருப்பினும், பக்கத்திலுள்ள நாட்டி னின்று மனிதர் செலுத்திவரும் ஓடங்கள் இக்கரைக்குத் தொலைவில் வரும்பொழுது எதிர்காற்று அவைகளை அடித்துக் கொண்டு வந்து இக்கரையிற் சேர்க்கவும் கூடும்.

அல்லது அவர்கள் தாமே வேண்டுமென்று, ஓடத்தைக் கரைக்கு நேர்முகமாய்த் திருப்பிச் செலுத்திக்கொண்டு வந்தாலும் வருவர். நான் இவ்விடத்திற்கு வந்து சேர்ந்து பதினேந்து ஆண்டுகள் ஆயின. இதற்கு முன் மனிதரை யன்றி அவர்கள் நிழலையும் நான் இங்குக் கண்டதில்லை. மேற்கூறிய ஒவ்வாக் காற்று முதலிய காரணங்களால் ஓடம் இக்கரையிற் சேர்ந்திருப்பினும், கரையில் ஏறுவதற்கு இவ்விடம் தமக்குப் பயன்படாதென்று கருதி, அவர்கள் மீண்டும் ஓடத்தைத் திருப்பிச் செலுத்திக்கொண்டு போயிருப்பார்கள். நிலையற்றுத் திரியும் கடலோடிகள் கருதா வண்ணம் காற்று, அலை முதலிய காரணங்களால் இக் கரையடைந்து இறங்கி, இரவு நேரத்தில் தங்கியிருந்து, மறுநாட் காலையில் காற்றும் நீரோட்டமும் வளப்பட்ட நேரத்தில் ஓடம் ஏறிப் போயிருக்கவும் கூடும். அப்படி இருக்குமானால் எனக்கு அச்சம் உண்டாவது முறைதான். ஆதலால், இனி நான் அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்படா மல், கூடியவரையில் விழிப்பாயிருந்து, ஒதுக்கிடம் தேடிச் சென்று வாழ ஏதேனும் வகை செய்யவேண்டும்.

### கோட்டை மதிலை மேலும் உறுதிப்படுத்துதல்

மேற்கூறியபடி நினைத்துச் சிறிது நேரம் பதைப்பற்று இருந்தேன். அப்பொழுது எனது குகையை மிகப் பெரிதாய் அகழ்ந்ததும், முழைக்கோட்டை மலையுடன் பொருந்திய இடத்திற்கு அப்புறம் ஒரு வாயில் வைத்ததும் தக்கன அல்ல என்று நினைத்து வருந்தினேன். இதைப் பின்னும் அழுந்தி ஆராய்ந்தபோது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் நாட்டிய இரட்டை நிரை மரங்கள் இருக்குமிடத்தில், அரைவட்ட வடிவமாய் இன்னும் ஒரு கோட்டைக்கு மதில் எழுப்பவேண்டும் என்று முடிவு செய்தேன். மேற்கூறிய இரு நிரை மரங்கள் அடர்த்தியாய் நாட்டப்பட்டிருந்தன. அவைகளுக்கு இடையில் அங்கங்கே சில தூறுகள் நாட்டினால் அவைகளே அதிக அகலமும் உறுதியுமுள்ள மதிலாகு மென்றெண்ணி அவ்வாறு செய்தேன்.

ஆகவே, எனது கோட்டைக்கு இரண்டடுக்கு மதில்கள் இருந்தன. புறமதிலின் இடையில் மரக்கட்டைகளும், பழைய கம்பிகளும், வேறு வன்மையுள்ள பொருள்களும் பொதிந்து அதை அடர்த்தியும் உறுதியும் உடையதாக்கினேன். இம் மதிலில் என் கை நுழையத்தக்க ஏழு துளைகள் உண்டாக்கினேன். இம் மதிலின் உட்புறத்து அடியிற் குகையினின்று மண் அகழ்ந்து கொண்டு வந்து போட்டுக் காலால் மிதித்து, வலுப்படுத்தி, மதிலைப் பத்து அடி அகலமுள்ளதாக ஆக்கினேன். மேற்கூறிய ஏழு துளைகளின் ஊடே நான் கப்பலினின்று கொண்டுவந்த ஏழு துப்பாக்கிகளை இரண்டு மூன்று நொடிப் பொழுதிற்குள் எல்லாம் வெடிதீரத்தக்கதாக வளமான தட்டுகள் செய்து இசைத்து வைத்தேன். இம் மதில் செய்து முடிக்கப் பல திங்கள் சென்றன. வருந்தி யுழைத்து மதில் வேலையை நிறைவேற்றும் அளவும் எனக்கு அச்சம் தெளியவில்லை.

### பகைவர்க்குத் தெரியாமல் கோட்டையை மறைத்தல்

இவ்வேலை முடிந்தபின் எவராவது இத்தீவில் வந்தால், இப்புறமதில் அவர் கண்ணுக்கு எதிர்ப்படாவண்ணம் மதிலுக்கு வெளியே நான்கு திசையிலும் இருபதினாயிரம் நீரலரிக் கொம்புகளை நெருங்க நாட்டினேன். இக் கொம்புகள் விரைவில் ஓங்கி வளர்ந்து கிளைக்குந்தன்மையுள்ளன. மேலும் சுவருக்கும் அம் மரங்களுக்கு மிடையில் சிறிது தொலைவு நிலத்தை வெட்ட வெளியாய் விட்டிருந்தேன். பகைஞர் வரின் அவரை முன்னடி எளிதிற் காணும் பொருட்டும் மர ஒதுக்கில் அவர் மறையாதிருக்கும் பொருட்டும் இப்படிச் செய்தேன்.

இரண்டு ஆண்டுகளுக்குள் அம்மரங்கள் வளர்ந்து நெருங்கிப் பெருந் தோப்பு ஆயின. ஐந்து ஆறு ஆண்டு காலத்தில் ஊடறுத்துச் செல்வதற்கரிய அடர்ந்த பெருங் காடு என் வீட்டுக்கு எதிரே இருந்தது. அதைக் காண

பவன் அதற்கு இப்புறம் ஏதும் இருக்கும் என்று எண்ணுவான். மனிதர் வாழும் இடம் இருக்குமென்று கனவிலும் நினையான். வெளியிற் செல்வதற்கும், உள்ளே நுழைவதற்கும, நான் வாயில் வைக்கவில்லை. மலையின் அடித்தரையில் சற்றுப் பதிவாய் இருந்த விடம் பார்த்து அதில் ஓர் ஏணியை நிறுத்திச் சார்த்தினேன். மற்றொரு புறத்தில் மலை உள்ளே கவிந்திருந்தது. அவ்விடத்தில் மற்றோர் ஏணி வைத்துச் சார்த்தினேன். இவ்விரண்டு ஏணிகளில் நான் ஏறி வெளியிற் செல்வதும் உள்ளே புகுவதுமாயிருந்தேன். வேண்டும் பொழுதன்றி மற்ற வேளைகளில் ஏணிகளை அவ்விடத்தினின்று பெயர்த்துத் தரையில் வைத்திருந்தேன். எவனுவது உட்செல்லத் துணிவானுகில் அவன் உருண்டு புரண்டு காயம் பட்டு வருந்துவான் என்பதற்கு ஐயமில்லை. ஒரு வேளை புண்படாது உட்புகினும் அவன் எனது புறமதிலுக்கு வெளிப்பக்கந்தான் நிற்பான். அச்சங் கொள்வதற்குக் காரணம் இல்லை.

பகைவருடைய அச்சமின்றி நலத்துடன் வாழும் பொருட்டு, எனது அறிவுக்குத் தோன்றிய காவல்கள் எல்லாவற்றையும் செய்தேன். அச்சங்கொண்ட என் நினைவுகளை உண்மையாகக் கொண்டு நான் செய்த முன் ஏற்பாடுகள் எல்லாம் முறையாய்ச் செய்யத்தக்கவைகளே என்று நாளடைவில் நடந்த நிகழ்ச்சிகளால் புலப்படும்.

### ஆடுகளை மறைத்து வைக்க இடம் தேடுதல்

இவ்வேலை நடந்தேறிய பொழுது நான், என்னுடைய மற்ற வேலைகளைக் குறித்து நினைவின்றி இருக்கவில்லை. ஆட்டுமந்தையைக் குறித்து நான் மிகுந்த நினைவோடு இருந்தேன். வெடிமருந்து குண்டுச் செலவு இன்றி ஒன்று விட்டு ஒருநாள் எனக்கு அவைகளால் தேவையான அளவு இறைச்சி கிடைத்தது. முன்போலக் காட்டு ஆடு சுடுவதற்கு நான் வெயிலில் திரிந்து இளைப்படைய வேண்டிய

தில்லையன்றோ ? ஆதலால், எனக்கு இவ்வளவு நலந்தரும் அவ்வாடுகளை வெறுத்துப் போக்கிவிடுவதற்கும், பிறகு வேறு காட்டாடுகளைப் பிடித்து வசப்படுத்தி வளர்ப்பதற்கும் நான் விரும்பவில்லை.

இதன் பொருட்டு நீண்டநேரம் மனம் பதறுதிருந்து நினைத்தபின் ஆடுகளை இடையூறின்றிக் காக்கும் வகை இரண்டு என் அறிவுக்குப் புலப்பட்டன. வாய்ப்பான ஓரிடத்தில் நிலவறை அகழ்ந்து, ஆடுகளை இரவு வேளையில் அவ்வறைக்குள் அடைப்பது ஒருவகை. ஒதுக்கிடம் பார்த்து ஒன்றுக்கொன்று தொலைவாய் இரண்டு மூன்று அடைப்புக்கள் உண்டாக்கி, ஒவ்வோர் அடைப்பிலும் குறைந்தது ஆறு ஆட்டுக்குட்டிகளை விட்டு வளர்ப்பது மற்றொரு வகை. இப்படிச் செய்தால், பழைய அடைப்புக்குள் இருக்கும் பெருமந்தைக்கு ஏதும் இடையூறுவரினும், இவ்விளங் குட்டிகள் நாளடைவில் எனக்குச் சிறிதும் வருத்தமின்றி வளர்ந்து மந்தையாய்ப் பெருகுமன்றோ ? இந்தத் திட்டத்தின்படி செய்வதற்கு நாட்படும்; மிகுந்த பாடுபடவேண்டும். ஆயினும் உடல் வருத்தத்தைப் பொருட்படுத்தாமல் இப்படிச் செய்வதே அறிவுடைமை என்று எண்ணினேன்.

வளமான ஒதுக்கிடம் காணச் சிலநாட் சென்றன. ஒருமுறை நான் தீவின் கீழ்ப்பக்கத்தினின்று வீட்டுக்குத் திரும்பி வருகிறவழியில் நெருங்கிய காட்டிற் சேர்ந்து, வழி தெரியாமல் மயங்கி நின்றதாக முன்பு சொன்னேன். அக் காட்டின் இடையில் செழுமையான நிலம் மூன்று ஏக்கர் வரையில் திடலாயிருந்தது. அதன் நான்கு எல்லைகளிலும் காடு செறிந்திருந்ததனால், அதுவே அடைப்புக்கு ஒப்பாயிற்று. முந்தின அடைப்புகளை உண்டாக்குதற்கு உழைத்ததுபோல், இதில் நான் உழைக்கவேண்டுவதில்லை. ஆகவே, இதுவே என் கருத்துக்கேற்ற இடமென்று குறித்தேன்.

காலத் தாழ்வு இன்றி உடனே அவ்விடத்தைக் கெட்டியாய் வளைத்து அடைக்கத் தொடங்கி, ஒரு திங்

களுக்குள் வேலையை முடித்து, காட்டுத் தன்மை எனக்கு வசப்பட்ட பத்து ஆட்டுக் குட்டிகளையும், இரண்டு கடாக்களையும் அதற்குள் விட்டுப் பின்னும் வேலியை வலிவு படுத்தி, முன் சொல்லிய அடைப்பின் வேலிக்கு ஒப்பாக ஆக்கினேன். பரபரப்பின்றிப் பொறுத்திருந்து இப்படி ஒழுங்கு செய்வதற்குச் சற்று நீண்டநாள் சென்றது.

## பன்னிரண்டாம் அதிகாரம்

### மனக்கவலையால் கடவுள் நினைவு நீங்கியது

இதுவரையில் இத்தீவில் நான் மனிதர் எவரையும் கண்டதில்லை. ஒரு மனிதனுடைய வெறும் காலடிச் சுவட்டைக் கண்டு அஞ்சியதனுல், இவ்வளவு வருந்தி உழைக்கும்படி நேரிட்டது. இரண்டு ஆண்டு காலமாய் இந்தக் கவலை என்னைவிட்டு நீங்காதிருந்தது. அதனுல் எனக்கு முன் இருந்த ஆறுதல் இல்லை. இரவும் பகலும் இடையீடு இன்றி மனிதருக்கு அஞ்சித் திகைத்திருக்கும் எனக்கு ஆறுதல் உண்டாவது எப்படி? என் மனம் கவலையால் மயங்கித் தடுமாறவே, கடவுட்பற்றுக்குரிய நினைவுகளும் ஒழிந்து போயின. மனிதருடைய இறைச்சியைத் தின்னும் வேடர் என்னைப் பிடித்துக் கொள்வார்கள் என்றெண்ணி ஏக்கமுற்றுத் தடுமாறிய என் மனம் மேல் உலக வாழ்வில் செல்லவில்லை. முன்பு இயல்பாய் என்னிடத்திலிருந்த அடக்கமும் அமைதியும் இல்லாமையால் இறைவனைப் பற்றியும் அவன் அருள்பற்றியும் நினைக்கும் நினைப்பும் நீங்கியது. எப்பொழுதாயினும் கடவுளை வழிபடும்போது என் உள்ளம் சூழ்ந்துள்ள பேரிடர்களை நினைத்துத் துன்புற்று வருந்தும் நிலையில் இருந்தது. பொழுது விடியுமுன் காட்டு வேடர் என்னைக் கொன்று தின்று விடுவார்கள் என்று இரவுதோறும் எண்ணித் துயில் ஒழிந்து துன்புற்றேன். மனக்கலக்கமின்றி இறைவன் அருளிய நல்வரங்களை நன்கு மதித்து, அவரிடம் அன்பு கூர்ந்து அவாக்கொண்டிருக்கும்பொழுதன்றி, ஏங்கித் தடுமாறும்பொழுது, கடவுளை வாழ்த்தி வணங்க இயலுமோ? இறக்கும் நிலையில் இருக்கும் நோயாளி தன் பாவத்திற்காக வருந்த முடியுமோ? அது போலத் தனக்கு இடர் வந்துள்ளதென்று திகில் பிடித்து இருப்பவன் ஆறித் தேறி, அன்போடு கடவுளை வழிபடுவதற்கு இயலுமோ? நோய் உடலை வருத்தும். கவலை

உள்ளத்தை வருத்தும். நோயாளிக்குள்ள உடல்நலக்குறைவைக் காட்டிலும், கவலை யடைகின்றவர்க்கு உள்ள மனவலிமைக் குறைவு மிகுதியாகும். கடவுளை நினைத்து வாழ்த்துவது மனத்தின் வேலை. உடல் உறுப்புக்களின் செயலால் நடைபெறுது. இவைகளுக்கெல்லாம் என் வாழ்வு நிகழ்ச்சிகளே சான்ருகும்.

**தொலைவில் ஓர் ஓடத்தைக் கண்டேன்**

இனிவிட்ட குறையினின்று என் வாழ்க்கை வரலாறுகளைக் கூறுகின்றேன். என்னுடைய ஆடுகளிற் சிலவற்றை மேற்கூறியவாறு திங்கு வராத ஒதுக்கிடத்தில் அடைத்த பின், பின்னும் ஒரு வளமான இடம் தேடித் தீவில் நெடுந்தூரம் உலாவிப் பார்த்தேன். போகப் போகத் தீவின் மேற்குக் கரைக்கு நேர்முகமாய் நான் இதற்குமுன் ஒரு பொழுதும் செல்லாத இடத்திற் சேர்ந்து, நெடுங்கடலை ஏறிட்டுப் பார்த்தேன். நெடுந்தொலைவில் ஓடம் ஒன்று நிற்பதுபோல் என் கண்ணுக்குத் தோன்றிற்று. அஃது ஓடமோ அன்றோ என்று திட்டமாய் எனக்குத் தெரியவில்லை. நான் முன்பு கடலோடிகள் பெட்டியிற் கண்டு, எடுத்துக் கொண்டுவந்த இரண்டொரு தொலைநோக்கிக் கண்ணுடிகள் வீட்டில் இருந்தன. அவைகளை இங்கே நான் கொண்டுவரவில்லை. அதனுல் குன்றின் மேலிருந்து இறங்கினேன். இறங்க இறங்க ஓடம் என் கண்ணுக்கு மறைந்தது. பின்பு நான் அதைக் குறித்து நினைக்கவில்லை. இனி, வெளியிற் புறப்படும் பொழுதெல்லாம் எனது அங்கியுறையில் தொலை நோக்கிக் கண்ணுடி ஒன்று முதன்மையாக வைத்திருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன். குன்றைவிட்டிறங்கி நான் முன் ஒருபொழுதும் போகாத தீவின் முடிவிற் சேர்ந்தபின், பின் வருமாறு நினைத்தேன். ஒரு மனிதனுடைய காலடிச் சுவட்டை இத்தீவிற் கண்டதைப் பற்றி எனக்கு வியப்புண்டானதற்குக் காரணம் இல்லை. இத்தீவில் வேடர் எப்பொழுதும் வராத பக்கத்தில் என்னைக் கொண்டுவந்து சேர்த்தது இறைவன் எனக்குச் செய்த உதவிகளுள் சிறந்த உதவியாகும். அந்நாட்டி

னின்று பயணப்படும் ஓடங்கள் நெடுங்கடலில் தொலைவில் சேரும்பொழுது, ஒரு துறையில் அடைவதற்கு அடிக்கடி இக்கரைக்கு நேர்முகமாய்த் திரும்பி வருவதுண்டு. மேலும் வேடர் பெரும்பாலும் ஓடமேறிக் கடலிற் போரிடுவது வழக்கம். வெற்றி பெற்ற பக்கத்தார் தாம் சிறை பிடித்தவர்களை இக்கரைக்குக் கொண்டுவந்து கொன்று அம் மனித இறைச்சியைத் தின்பது வழக்கம். ஆதலால் அப் புலையர் என்னையும் தனியே கண்டால் அடித்துக்கொன்று தின்று விடுவார்கள். இந்த நிகழ்ச்சிகளைப் பின்பு விளக்கமாய்க் கூறுவேன்.

**மனித இறைச்சி தின்ற இடம் கண்டு மயங்குதல்**

மேற்கூறியபடி நான் ஏறி இறங்கிய குன்றின் அடி இத்தீவின் தென்மேற்குக் கரை. அந்தக் கரையிற் சேர்ந்த பொழுது, தலை ஓடு, கை, கால், மனித உடம்பின் மற்ற உறுப்புக்களின் எலும்புகள் கரையில் எங்கும் சிதறுண்டிருந்ததையும், நெருப்பு மூட்டி எரித்த ஓரிடத்தையும், கத்தி கட்டிச் சேவல்களைச் சண்டைக்கு விடும் களரியைப் போல வட்ட வடிவமாய் நிலம் ஓரிடத்தில் அகழப்பட்டிருந்ததையும் கண்டு, திகைத்து நடுங்கிப் பதறினேன். எனக்கு உண்டான திகிலைச் சொல்வதற்கு நா எழவில்லை. மேற் சொல்லிய வட்டக்குழியில் அந்தப் புல்லர்கள் உட்கார்ந்து, தாம் கொன்ற மனிதருடைய இறைச்சியைத் தின்றார்கள் என்று கருதினேன்.

இவைகளைக் கண்டு மிகுந்த வியப்பும் நினைவு இழப்பும் உடையவனாய் இருந்ததனால், எனக்கு நேரிடும் பேரிடர் பற்றி உண்டான அச்சத்தை நெடுநேரமட்டும் மறந்துவிட்டேன். மனிதர் இவ்வாறு சீர்கெட்டுக் கொடிய விலங்குகளைக் காட்டிலும் இழிந்து மிகக் கொடியோராகி இப்படிப்பட்ட கொடிய செயல்களைச் செய்வார்களா என்று எண்ணினேன். அதனால் வியப்பு எனக்கு மிகுந்து முன் உள்ள அச்சம் அதற்குள் அமிழ்ந்து மறைந்தது. மனித இறைச்சி உண்பவரைப்பற்றி நான் பெரும்பாலும் கேட்டிருந்தும்

அவர்களுடைய கொடிய செயல்களின் அடையாளங்களை இதற்குமுன் நான் கண்டதில்லை. எனக்கு உண்டான வியப்பைத் தொடர்ச்சியாய்ச் சொல்வதற்கு நேரம் இல்லை. சுருக்கிக் கூறி முடிக்கின்றேன். அந்த அஞ்சத்தக்க காட்சியைப் பார்த்துக்கொண்டு நிற்க என் கண் பொறுக்கவில்லை. குடல்புரண்டு வாய்க் குமட்டியது. மயங்கிவிழுவதற்குத் தொடங்கியபோது நன்றாய் வாந்தி செய்தேன். வாந்தி எடுத்தபின் எனக்குண்டான வருத்தம் சற்றுத் தீர்ந்தது. அதன் பின்பு அங்கே நிற்க முடியாமல், மீண்டும் குன்றில் விரைந்தேறி வீட்டுக்குத் திரும்பினேன்.

### கடவுளை வாழ்த்துதல்

அந்தக்கரை மறையும் தொலைவிற் சென்றபின் சற்று நேரம் திகைத்து நின்று, பின்னும் தெளிந்து, வானத்தை அண்ணாந்து பார்த்து, எனது உள்ளம் கரைந்து உருக, கண்ணீர் ஆறாய்ப் பெருகக் கடவுளை வேண்டி வழிபட்டேன். இத்தன்மையான கொடிய பாவங்களிற் பயின்ற புலையர் வாழும் நாட்டிற் பிறவாமல், நல்லொழுக்கம் நிறைந்துலவும் நாட்டிற் பிறந்து வளரும்படி எனக்கு நல்லருள் செய்தவர் அவர். இத்தீவில் எனது இக்காலநிலை மிகுந்த கொடுமையுள்ளதாய் இருப்பினும், இவ்விடத்திலும் பலவித இன்பங்களை என்மீது இரங்கித் தருபவர் அவர்; நான்படும் துன்பத்திலும் துய்க்கும் இன்பம் அதிகம். முதன்மையாய் இந்தத் துன்ப நிலையில் இருக்கும்பொழுதும் தம்மை அறிந்து, மனம் தெளிந்து, தேறி தமது நல் வாழ்த்து மொழிகள் பின்னும் எனக்குக் கிடைக்கும் என்று நம்பித் துயரொழிந்திருக்கச் செய்பவரும் அவரே. இவ்வாறு உள்ளம் தேறியிருப்பது என்னுடைய பெரிய நற்பேறுதான். நான் இதற்கு முன்பட்ட துன்பங்கள், இனிமேல் படும்துன்பங்கள் அனைத்தும் இப்பேற்றுடன் ஒத்துப் பார்க்குமிடத்தில் மிகக் குறைவாகத் தோன்றும். இந்த நன்றிகளனைத்தையும் எண்ணிக் கடவுளுக்கு வாழ்த்துடன் கூடிய வணக்கம் தெரிவித்தேன்.

கடவுள் செய்த நன்றிகளை உணர்ந்து, அவரை வணங்கி வாழ்த்திய உள்ளத்தோடு எனது வீட்டிற்குச் சென்று சேர்ந்து, இனி அச்சமில்லை என ஆறித்தேறி யிருந்தேன். நான் கண்ட காட்சிகளைக் கருத்தாய் நினைக்கும்போது எனக்குப் பேரிடர்வரக் காரணம் இல்லையென்று கருதினேன். மேற்கூறிய கொடிய வேடர்கள் இங்கே தமக்கு ஏதேனும் வேண்டுமென்றுயினும், வேண்டும் பொருள் இருக்குமென்றுயினும், ஏதாவது அகப்படுமென்றுயினும் இத்தீவிற்கு வந்தவர்கள் அல்லர். அவர்கள் காடு அடர்ந்த கரையிற் பெரும்பாலும் இறங்கி யிருப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை. அவ்விடத்தில் அவர்களுக்கு உதவும் பொருள் ஒன்றையும் அவர்கள் கண்டிருக்க மாட்டார்கள். நான் இவ் விடத்தை அடைந்து பதினெட்டு ஆண்டுகள் ஆகியும், இதற்கு முன் மனிதர் அடிச்சுவட்டை ஒருபொழுதும் கண்டதில்லை. வேண்டுமென்று அவர்களுக்கு எதிரே செல்லாதிருப்பேனுயின், இன்னும் பதினெட்டு ஆண்டுகள் இங்கிருந்தாலும், அவர்கள் என்னைக் காண்பது அரிது. கொடியோரல்லாத நல்ல மனிதரைக் கண்டு, அவர்களுடன் அறிமுகம் உண்டாகுமானுல், எனக்கு நன்மைதான். மனித இறைச்சி உண்போராகிய கொடிய வேடர் கண்ணுக்கு எதிரில் நான் ஏன் வலியப் போக வேண்டும்? கூடியவரை யில் அவர்கள் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்து வாழ்வதுதான் அறிவுடைமை.

### கொடிய வேடருக்கு அஞ்சி மறைந்து வாழ்தல்

அக்கொடிய வேடரையும், விலங்குகளைப்போல் இரக்க மின்றி அவர்கள் ஒருவரை ஒருவர் கொன்று உண்ணும் கொடிய வழக்கத்தையும் நினைக்க நினைக்க, எனக்கு அவர் களைப்பற்றி மிகுந்த வெறுப்பு எண்ணமே உண்டாயிற்று. இரண்டு ஆண்டுகாலம் நான் இதே நினைவாய் இருந்து வருந்தினேன். என் வீட்டையும் ஓலைக்குடிசையாகிய நாட்டுப் புற உறையுளையும், காட்டுக்குள் இருக்கும் அடைப்பையும் விட்டு வேறு இடங்களுக்குச் செல்லவில்லை. ஆடுகளை அடைக்கும்பொழுதன்றி நான் அவ்வடைப்புக்குச் செல்ல

வில்லை. அடிக்கடி வெளியிற் சென்றால், ஒரு வேளை அந்தப் பேய்கள் கண்ணெதிரில் படவேண்டி நேரும் என்று அச்சமுற்றிருந்தேன். கொடியவராகிய அவ்வேடருக்கும் பேய்க்கும் வேறுபாடு இல்லை. இந்த இரண்டு ஆண்டு வரையிலும் நான் எனது ஓடத்தைப் பார்க்கப் போகவும் இல்லை. புதிதாய் ஒன்று செய்வது நலம் என்று எண்ணினேன். பழைய ஓடத்தைத் தீவைச் சுற்றிச் செலுத்திக் கொண்டு வர நேர்ந்தால், கடலில் ஒருவேளை கொடிய வேடர் என்னைக் கண்டு பிடித்துக் கொன்று தின்று விடுவார்கள் அல்லவா?

**அச்சம் குறைந்தது**

வேடர் ஒருபொழுதும் என்னைக் காண மாட்டார்கள் என்று எண்ணி யிருந்ததனால், நாளடைவில் அவர்களைப் பற்றி எனக்கு உண்டான கவலை நீங்கி, முன்போலக் கவலையற்றிருந்தேன். ஒரு வேளை கண்டாலும் காண்பார்களே என்று முன்னிலும் மிகுந்த விழிப்போடு இருந்தேன். வெடி ஒலி கேட்டு என்னைத் தேடுவார்கள் என்று நான் துப்பாக்கியைப் பயன்படுத்துவதை விட்டு விட்டேன். ஆடுகளைப் பிடித்து வளர்ப்பதற்குக் கடவுள் எனக்கு நல்ல வேளையில் அறிவு உண்டாக்கியது வியத்தகு நன்மை என்று இப்பொழுது தான் எனக்கு விளங்கிற்று. உணவுக்கு வேண்டும் இறைச்சி எளிதில் அகப்பட்டதனால், துப்பாக்கிகொண்டு, காட்டில் உலாவிச் சுடவேண்டிய வேலை இல்லையன்றோ? அன்றியும் இரண்டொருமுறை குழி வெட்டிக் கண்ணிவைத்துத்தான், ஆடு பிடித்தேன். ஆகவே, இரண்டு ஆண்டுவரையில் நான் துப்பாக்கி எடுத்துக் கொண்டு வெளியிற் சென்றேனேயன்றி, மருந்தும் குண்டும் நிரப்பி வெடிக்கவில்லை. வெளியிற் செல்லும் பொழுதெல்லாம், ஆட்டுத்தோல் இடுப்புப்பட்டையில் கப்பலினின்று கொண்டுவந்த கைத்துப்பாக்கிகள் மூன்றில் இரண்டும், பளிங்குபோல ஒளிவரத் தீட்டிய பெரிய கத்தி ஒன்றும் சேர்த்துக் கட்டிக்கொண்டு சென்றேன். கத்திக்கு உறை இல்லை. இவ்விதப் போர்க்கோலத்தோடு புறப்படும் என்

னைக் காணும் எவனும் கலங்கித் திகைத்து விழுவதன்றி, எதிர்த்து நிற்பானோ?

### இருக்கும் நிலையே உயர்வு என்று எண்ணுதல்

நான் இப்படி விழிப்போடிருந்து, முன்போல் மனம் தேறி நாட்கழித்தேன். இவை எல்லாவற்றையும் நினைத்து எப்பொழுதும் துன்ப நிலையில் இருந்து வருந்துபவர்களை விட எனது நிலைமேல் என்றும், கடவுள் எனக்கு இதனி லும் கொடிய பேரிடர்களை வருவிக்க வல்லவராய் இருந் தும், என்மீது இரங்கி இவ்வித நன்னிலையில் என்னை வைத்தது என்னுடைய நற்பேறுதான் என்றும் எண்ணி னேன். அன்றியும் தம்மிலும் அதிக செல்வர் துய்க்கும் இன்பத்தையும், தாம் துய்க்கும் மிகக் குறைந்த துன்பத் தையும் நினைத்துத் தமக்கு அவ்வின்பம் இல்லையேயென்று துன்பப்பட்டுக் குறை கூறும் மனிதர் பலர் உளர். அவர் கள் தம்மிலும் இழிந்த நிலையுடையோர் படும் துன்பத்தை எண்ணுவார்களானால், அவர்கள் பெருத பற்பல இன்பங் களைத் தாம் பெற்று வாழ்வதைப்பற்றி மகிழ்கூர்ந்து, கடவு ளைப் போற்றுவார்களே என்று என்னுள்ளம் எண்ணியது.

### சாராயம் இறக்க எண்ணுதல்

என்னுடைய இப்பொழுதைய நிலையில் எனக்கு இன் றியமையாமல் என்னென்ன வேண்டுமோ அவைகள் பெரும் பாலும் இருந்தன. அன்றியும் மேற்கூறிய கொடியவராகிய வேடருக்கு அஞ்சி, அவர்களிடம் அகப்பட்டுக் கொள்ளா மல் தப்பித்துக்கொள்வதற்காக வேண்டிய நினைவோடு இருந்ததனுல் என்னுடைய இன்பவாழ்வுக்குரிய பொருள் களைச் செய்துகொள்ளும் அறிவு நுட்பம் மழுங்கியது. வாற் கோதுமையை ஊறவைத்து அதில் பீர் என்னும் சாராயம் இறக்குவதற்கு வழிவகை செய்யவேண்டும் என்று இதற்கு முன் நான் எண்ணியிருந்த எண்ணத்தைவிட்டு விட்டேன். அது வீணுன நினைவு. அவ்வெண்ணத்தை நிறைவேற்றக் கருதியது அறிவின்மைதான். பீர் சாராயம் இறக்குவதா னுல் பீப்பாய்கள் வேண்டும். பீப்பாய் செய்வதற்குப் பல

திங்கள் பாடுபட்டாலும் இயலாது. அது செய்யும் முறை என்னுடைய ஆராய்ச்சிக்கு எட்டவில்லை என்று முன்பு ஓரிடத்தில் கூறியிருக்கின்றேன். மேலும் வடிக்கும் சாரா யத்தைப் பழுதின்றிக் காப்பதற்குத் தேவையாக அதிலிடும் ஹாப் என்னும் பூண்டு வேண்டும். அதை நொதிக்கச் செய் வதற்குப் பிரை இடவேண்டும். காய்ச்சுவதற்குக் கொப் பரை வேண்டும். இவை ஒன்றுக்கும் வழியில்லை. பீர் சாராயம் செய்வதற்கு எனக்கு எண்ணம் உண்டாயிருந்த போது, வேடரைப்பற்றிய அச்சம் அதற்குத் தடையாய் அமைந்தது. அத்தடை நேராவிடில், நான் ஏதேனும் வகை செய்து சாராயம் இறக்கிவைத்திருக்க முடியும். நினைத்த செயலை எவ்விதத்திலாயினும் நிறைவேற்றுதிருப் பது என் பண்பு அன்று.

### வேடரை வெல்லக் கருதுதல்

இப்பொழுது எனது சூழ்ச்சி ஒரு புதிய துறையில் இறங்கியது. இரக்கம் சிறிதும் இன்றி எந்த மனிதனையா வது, பிடித்துக்கொண்டு, இக்கரைக்கு வந்து கொன்று தின்ன முயலும்போது அக்கொடிய வேடரைக் கொன்று, அம்மனிதனைத் தப்புவிக்கும்வகை என்னவென்று ஆராயத் தொடங்கினேன். இராப்பகல் இஃது ஒன்று தவிர வேறு கவலை இல்லை. அவர்களை அழிப்பதற்காயினும், அது முடி யாதாகில், இனி இக்கரைக்கு வராதபடி வெருட்டித் துரத் துவதற்காயினும், நான் நினைத்த சூழ்ச்சிகளையும் வழிகளை யும் ஒவ்வொன்றாய் எழுதில் அவை இப்புத்தகத்துள் அமையா. இதனைக் காட்டிலும் பெரிய புத்தகம் எழுத வேண்டும். அந்த வழிகள் அனைத்தும் பயன்படாமற் போயின. நானும் ஆளுடன் ஆளாய் அவர்களுக்குட் போயிருந்தாலன்றி நான் நினைத்த வகைகள் நடைபெற மாட்டா. வில் போரில் கைதேர்ந்த வேடர் இருபது முப் பது பெயர் அம்பும் வில்லும் வைத்திருக்கும்பொழுது, நான் ஒருவன் அவர்களுக்குட்போய், அவர்களை வெல்ல இயலுமா? துப்பாக்கியைப் பயன்படுத்துவதில் எனக்குள்ள வல்லமை அம்பு விடுவதில் அவர்களுக்கும் உண்டு. அவர்

கள் ஓர் இலக்கைக் குறித்து அம்பு எய்வார்களானால், அது தப்பாமல் அவ் விலக்கைத் துளைக்கும்.

அவர்கள் நெருப்பு மூட்டி எரிக்குமிடத்தில் ஒரு குழி அகழ்ந்து, அதற்குள் ஐந்து ஆறு இராத்தல் வெடிமருந்து வைத்து மூடி உறுதி செய்து மறைத்து வைத்தால், அவர்கள் நெருப்பு மூட்டும்பொழுது மருந்து பற்றிச் சீறி வெடித்துப் பக்கத்தில் உள்ள யாவரையும் கொல்லுமென்று சில வேளை எண்ணினேன். அவ்வாறு செய்வது பயனற்றது என்று பின்பு புலப்பட்டது. மருந்தும் வர வரச் செலவழிந்து இப்பொழுது என்னிடத்தில் ஒரு பீப்பாய் மாத்திரமே இருந்தது. அதில் ஐந்து ஆறு இராத்தலை இவ் விதத்தில் வீணாய்ச் செலவழிப்பதற்கு என் மனம் ஒப்பவில்லை. அன்றியும் புதைத்து வைக்கும் மருந்து நெருப்புப்பற்றி அவர்கள் அருகில் நிற்கும்பொழுது தான் வெடிக்கும் என்று எவ்வாறு கூற முடியும்? ஒருவேளை அவர்கள் சற்றுத் தொலைவில் நிற்கும்பொழுது மருந்துபற்றிச் சீறி வெடிக்க, அவர்கள் திடுக்கிட்டு விலகித் தப்பித்துக்கொள்ளுதலும கூடும் அன்றோ? அது காரணமாக இனி இத் தீவிற்கு வராமற் போய்விடுவார்களா? இல்லை இல்லை. ஆதலால் இந்தச் சூழ்ச்சி பொருந்தாது என்று தள்ளிவிட்டுப் பின்னும் ஒரு சூழ்ச்சி நினைத்தேன். என்னுடைய மூன்று துப்பாக்கிகளிலும் இரண்டு இரண்டு தடவை வெடி தீரும்படி குண்டு மருந்து நிறைத்து இடித்துப் புதர் ஒதுக்கில் மறைந்திருத்தல் வேண்டும். வேடர்கள் கொலைத் தொழில் செய்யும் வேளையில் வெடித்தால் ஒவ்வொரு வெடிக்கு இரண்டு மூன்று பெயராவது விழுவார்கள் என்பதற்கு ஐயமில்லை. அதன் மேல் எனது மூன்று கைத் துப்பாக்கிகளையும் கத்தியையும் கொண்டு, விரைந்து ஓடி, அவர்களிடையிற் புகுந்தால் இருபது பேர் இருந்தாலும், அனைவரையும் தப்ப வொட்டாமல் வெட்டி வீழ்த்தி அழிக்க முடியும் என்பதாக எனக்கு ஒரு புதிய சூழ்ச்சி தோன்றியது. இரவு பகல் இதுவே நினைவாக இருந்தேன். சில வேளை நான் அவர்கள் மேல் குண்டு வீச முயலுவதாகக் கனவுங் கண்டதும் உண்டு.

இந்தச் சூழ்ச்சியை என் மனம் அழுந்த நினைத்துக் கொண்டிருந்ததனால், வளமான ஒதுக்கிடம் கண்டு, மறைந்திருந்து, வேடர் வரும் நேரத்தில் பார்ப்பதற்காகப் பலநாள் வரையில் உலாவித் திரிந்தேன். முன்பு மனிதருடைய உடலுறுப்புக்களைக் கண்ட விடத்திற்கு அடிக்கடி சென்றேன். நாளடைவில் அவ்விடம் நன்றாய் எனக்குப் பழக்கமாயிற்று. அந்தக் கொலைஞர் பேரில் சினம்கொண்டு, இருபது முப்பது பெயரை என் கத்திக்கு இரையாக்கவேண்டும் என்று உறுதி செய்தேன். அவ்வாறிருந்தும், அவ்விடத்திற்குச் சென்று, உயிர்கள்மீது இரக்கம் இல்லாத விலங்குகளோடு ஒத்த அந்தக் கொடிய அரக்கர் ஒருவரை ஒருவர் கொன்று தின்று விட்ட உடற்குறைகளைக் கண்ட உடனே என் உள்ளம் பதைத்து அச்சம் மேலிட்டது. அதனால் சினத்தை மறந்தேன்.

### துப்பாக்கி வெடியினால் வேடரைக் கொல்ல நினைத்தல்

பலநாள் வரையில் தேடித்திரிந்து, ஒருநாள் குன்றின் சார்பில் வளமான இடம் கண்டேன். அவ்விடத்தில் மறைந்திருந்தால், ஓடம் வருவது தெரியும். அவ்வேடர் கரையில் ஏறு முன் ஒளித்துப் பதுங்கி விரைந்து ஓடி, அடர்ந்த காட்டில் நுழைந்து, ஒருவன் ஒளித்திருக்கப் போதிய அகலமுள்ள ஒரு மரப்பொந்தில் பதுங்கிப் பதுறு திருந்து, அவர்கள் செய்யும் கொலைத் தொழிலைக் கருத்தாய்க் கண்டு, அவர்கள் நெருங்கியிருக்கும்பொழுது, தலைகளை இலக்காய்க் குறிவைத்து வெடி தீர்ப்பேனானால், தவறாமல் குண்டுகள் அவர்கள் தலைகளைத் துளைக்கும். எல்லாரும் விழாதிருந்தாலும் முதல் வெடியால் மூன்று நான்கு பேராவது காயப்படுவார்கள்.

இவ்விடத்திலேயே எனது சினத்தை நிறைவேற்ற வேண்டும் என்று உறுதி செய்து, இரண்டு பெரும் துப்பாக்கிகளிலும், ஒரு குருவிக் குழாய்த் துப்பாக்கியிலும் மருந்து குண்டு இட்டு இடித்து ஆயத்தஞ் செய்தேன். பெருந்துப்பாக்கிகளில், பெரிய குண்டுகள் இவ்விரண்டும்,

கைத்துப்பாக்கிக் குண்டின் அளவான சிறிய குண்டு ஐவ் வைந்தும், குருவிக் குழாய்த் துப்பாக்கியில் ஒரு கை நிறைந்த பெரிய குண்டும் இட்டு இடித்தேன். கைத் துப் பாக்கி ஒவ்வொன்றிலும், நந்நான்கு குண்டு இடித்து வைத் தேன். மூன்று வெடி தீர்க்கப் போதுமான குண்டும் மருந் தும் எடுத்துக்கொண்டு பயணம் செய்வதற்கு முன் ஏற் பாடுகள் செய்தேன்.

இவ்வாறு திட்டம் செய்துகொண்டு ஒவ்வொரு நாளும் காலையில் என் வீட்டினின்று புறப்பட்டுக் குன்றின் உச்சியில் ஏறிக் கடலில் ஓடம் வருவதையும், தீவிற்கு அரு கில் நெருங்குவதையும், தீவுக்கு எதிரே தொலேவில் நிற் பதையும் காணவேண்டுமென்று விரும்பிப் பார்த்துக் கொண்டு வந்தேன். வீட்டுக்கும் மலேயின் உச்சிக்கும் உள்ள தொலேவு ஏறத்தாழ மூன்று கல். இரண்டு மூன்று திங்கள் வரையில் நாள்தோறும் காலேயில் அவ்விடத்திற் குப்போய்க் கரையிலாவது, அதன் அருகிலாவது, கடலில் கண்ணுக்கு எட்டும் தொலேவிலாவது ஓர் உருவையும் காணுமல் வீட்டுக்குத் திரும்பி வந்தேன். இவ்வாறு இரு விழியும் கம்பி பூக்கப் பார்த்துக்கொண்டிருந்து, ஒன்றை யும் காணுமல் திரும்பி வருவது எனக்குத் துன்பமாய் இருந்தது.

### வேடர் செய்யும் கொலேயைப்பற்றி ஆராய்தல்

வேடருடைய ஓடம் அங்கு வருகிறதோ இல்லேயோ என்று பார்ப்பதற்காகக் கரையை அடுத்த குன்றுக்கு நாள்தோறும் நான் சென்றுகொண்டிருந்தேன். அந்த நாள்களில் என் கருத்துச் சிறிதும் பிழைபட்டதென்று நான் நினேக்கவில்லே. அக்கொடிய வேடர் இயற்கைக்கு மாறுபாடாக மனிதரைக் கொன்று தின்னும் கொடிய வழக் கத்தைப்பற்றியும், எனக்கு முதலில் உண்டான அச்சத் தையும் வெறுப்பையும் எண்ணினேன். அதனுல், இரு பது பெயராலும், முப்பது பெயராலும் சரி, அந்த ஆடையில்லா அரக்கரை இரக்கமின்றிக் கொன்று ஒழிக்க

வேண்டும் என்று நான் செய்த உறுதியான முடிவு சரி யானதென்றே கருதினேன். அவர்களைக் கொல்வது அறமோ, அன்ருே என்று நான் சீர்தூக்கி ஆராயவில்லை. இவ்வுலகத்தை ஒழுங்காய் நடத்திவரும் எல்லாம் அறிந் தவராகிய கடவுள் அவர்களுக்கு இக் கொடிய பண்பினைக் கொடுத்திருக்கிருர். கொலைத் தொழிலையே அறமென்று எண்ணிக், கடைப்பிடியாய்த் தலைமேற்கொண்டு ஒழுகும் இயற்கை யறிவைக் கொடுத்திருப்பதையும், தொன்று தொட்டு அவர்கள் தன்மை மாறுபட்டு இழிந்ததனல், அவர்கள் குணக்கேட்டில் முதிர்ச்சியடைந்து, இரக்க மின்றிப் படுகொலை செய்து வருவதையும், நான் நினைக்க வில்லை. ஒவ்வொருநாட் காலையிலும் நான் குன்றேறி ஓடம் வருமென்று பார்த்தும் ஒருநாளாவது வராததனல் என் மனம் சலித்தது. அதனல் வேடரைக் கொல்ல வேண்டும் என்று நான் கொண்டிருந்த கருத்தும் மாறு படத் தொடங்கிற்று. நான் செய்ய நினைத்திருப்பது என்னவென்றும், பல ஊழிக்காலம் அளவும் இவர்கள் கடவுளால் தண்டிக்கப்படாமல் அவர் பிறருக்கு விதிக்கும் உயிர்த்தண்டனைத் தீர்ப்பை நிறைவேற்றும் சேவகர் போல இவர்கள் இருக்கிருர்கள் என்றும் நினைத்தேன். ஆதலால் அவ்வேடர்களைக் குற்றவாளிகள் என்று முடிவு செய்யவும், அவர்களைக் கொல்லவும், எனக்கு என்ன உரிமை அல்லது அதிகாரம் இருக்கிறது என்றும், அவர்கள் எனக்கு என்ன குறை செய்தார்கள் என்றும், நினைத்தேன். அவர்கள் பலரும் ஒன்று சேர்ந்து ஒருவரை ஒருவர் கொலை செய்த வழக்கில் புகுந்து நீதிமுறை பேச எனக்கு என்ன உரிமை உண்டு என்றும், ஓய்வாக இருந்து நினைத்துப் பார்த்தேன். வேடருடைய செயல்களைக் குறித்து என் உள்ளம் பின்வருமாறு எண்ணத் தொடங் கியது. இக் கொடிய வேடர் செய்யும் செயலுக்காகக் கடவுள் அருளும் தீர்ப்பு இன்னதென்று எனக்கு எப்படித் தெரியும்? மனிதரைக் கொன்று தின்பது குற்றமென்று அவர்கள் நினைக்கவில்லை யென்பது உண்மை. அவர் களுடைய மனச்சான்று அதைக் குறித்து அவர்களைக்

கண்டிக்கவும் இல்லை. அவர்களுடைய இயற்கை யறிவு இது பெருந்தவறு என்று விளக்கவுமில்லை. கொலை செய்வது தீத்தொழில் என்று அவர்கள் அறியார்கள். நீதிமுறைகளைப் பாதுகாக்கும் கடவுள் விதித்த கட்டளையை எண்ணுமல், நாம் மிகுதியான தீவினைகளைச் செய்ய வில்லையா? அதுபோல் அவர்கள் செய்வதும் இறைவன் கருத்துக்கு மாறுபட்டதேயாகும். ஆடு கோழிகளின் கழுத்தை அறுத்து ஊனை நாம் உண்ணுதல் போல அவர்கள் போரிற் சிறைபிடித்த மனிதனைக் கொன்று அவன் இறைச்சியை உண்கின்றனர். அவர்கள் அதனைக் குற்றமென்று எண்ணுவதே இல்லை.

## வேடர்கள் குற்றவாளிகள் அல்லர்

இவ்வாறு சற்று நேரம் நான் ஆழ்ந்து நினைத்த அளவில், மேற்கூறிய வேடர்கள் கொலைஞர் என்று நான் நினைத்தது தவறு என எனக்கு உறுதிப்பட்டது. கிறித்தவ சமயத்தார் போர் முகத்திற் பிடிக்கும் மனிதரை உயிர்த்துன்பம் செய்வதும், கூட்டமான பகைஞர் படைக் கலங்களைப் பாதத்தில் வைத்துத் தலைவணங்கி நிற்பினும், அவர்கள் அனைவரையும் கழுத்து அறுத்துக் கொல்வதும் வழக்கந்தானே. இப்படி உயிர்க் கொலை புரியும் கிறித்தவரைக் கொலைக் கொடுமையாளர் என நாம் சொல்வது இல்லையே. ஆகவே அவ் வேடரும் கொலைத் தொழிலாளர் அல்லர் என நான் முடிவு செய்தேன்.

மேலும் அவர்கள் மனிதரைக் கொல்லும் வழக்கம் கொடியதும் இழிந்ததுமா யிருப்பினும், அதனால் எனக்கு வரும் குறை என்ன? அவர்கள் எனக்குச் சிறிதும் தீங்கு செய்யவில்லை. எனக்கு ஏதும் தீங்கு செய்ய வந்தால், அப்பொழுது என் உயிரைக் காத்துக் கொள்ளும் பொருட்டு அவர்களைக் கொன்று அழிக்கவேண்டுவது முறையாகும். இது வரையில் எனக்கு அவர்களால் சிறிதும் துன்பம் உண்டாக வில்லை. நான் இங்கேயிருப்பதும் அவர்களுக்குத் தெரியாது. எனக்குத் தீங்கு செய்யவேண்டும் என்று

அவர்கள் கனவிலும் எண்ணவில்லை. ஆதலால், நான் அவர்களைக் கொல்வது அறமாகாது. அஃது அறமென்று கூறினால், அமெரிக்காவில் நூறாயிரக் கணக்கான வேடர்களை ஸ்பானிய இனத்தார் கொன்றதும் அறமாகவேண்டும். அவ்வேடர்கள் உருவச்சிலைகளை வழிபட்டு, விலங்கினும் இழிந்து, கடவுள் உருவங்களுக்கு மனிதரைக் கொன்று இரையாக்குவது முதலிய பல கொடுஞ் செயல்களைச் செய்து வந்தனர். அவர்கள் ஸ்பானியருக்கு எத்தகைய குற்றங்களையும் செய்யவில்லை. அவர்களை ஸ்பானியர் பற்றறக் கொன்றது கொடுமை என்றும், கடவுளுக்கும் மனிதருக்கும் ஏற்காத படுகொலை என்றும், அரிய கொடுஞ் செயல் என்றும், ஐரோப்பாவில் உள்ள மற்றைக் கிறித்தவர்களே யன்றி, இக்காலத்தில் ஸ்பானிய இனத்தார்கூடப் பலவாறு கண்டித்து மனம் பதைத்து வெளியிட்டிருக்கிறார்களே. இதனால், உயிர்களிடத்து இரக்கமுள்ள மனிதர் அனைவரும், தம் உயிரைப் போலப் பிறர் உயிரை மதிக்கும் கிறித்தவர்களும் ஸ்பானியரை நினைக்கும்பொழுது, அச்சமுற்றுக் கலங்கிப் பதறுகின்றார்களே. துன்பங்கொண்டு உழலும் மக்களைக் கண்டால் அவர்களிடம் அன்புகொண்டு இரக்கம் காட்டாத வன்னெஞ்சராகிய கொடிய மனிதருக்கு ஸ்பானிய நாடா சிறந்த இருப்பிடமாக வேண்டும் என்று எண்ணித் திகைக்கின்றார்கள். உயிர்கள்மீது இரக்கம் கொள்ளும் மனிதர், துன்பத்தால் வாடும் மனிதரைக் காணும்பொழுது, அவர்கள் மீது இரங்கி அன்பு கொள்வது இயற்கையே என்பதாக, என்னுள்ளத்தில் பல எண்ணங்கள் உண்டாயின.

### வேடரைக் கொல்ல முயல்வதால் எனக்கே தீமை உண்டாகும்

இந்த எண்ணங்கள் என் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தவுடன், வேடரைக் கொல்வதைப் பற்றி நான் கொண்டிருந்த கருத்தை நீக்கலானேன். சிறிது சிறிதாய் அவ்வெண்ணத்தையே, நான் கை விட்டேன். வேடரைச் சுட்டுக் கொல்ல நினைத்தது தவறு என்றும், அவர்கள் முதலில் எனக்கு ஏதேனும் தீங்கு செய்ய வந்தால் என்

ளுல் இயன்ற சூழ்ச்சி வகைகள் செய்து, அவர்களைத் தடுப்பது தகுமே யொழிய, வலிய அவர்களுடன் போர் தொடுப்பது முறையன்று என்றும், அவர்கள் என்னைக் கண்டுபிடித்தால், நான் இன்னது செய்ய வேண்டும் என்பதை அறிவேன் என்றும் ஆராய்ந்து முடிவு செய்தேன்.

அன்றியும், பின்வரும் எண்ணங்களும் என் உள்ளத்தில் தோன்றின:—வேடரைக் கொல்வதனுல் எனக்கு அழிவு வருமேயன்றி மீளுதல் இராது. வேடர் இக் கரையில் இறங்கும் நேரத்தில் அவர்கள் எல்லோரையும் ஒரேயடியாய்க் கொல்ல முடியுமாளுல் அஃது எனக்கு நன்மையாகும். ஒருவனுவது என் கைக்குத் தப்பித் திரும்பிப் போய் நடந்த நிகழ்ச்சிகளைத் தன் நாட்டவர்களுக்குச் சொல்ல நேர்ந்தால் அவர்கள் கடுஞ்சினம் கொண்டு, ஆயிரக்கணக்கில் திரண்டு வந்து, சீறி என்மேற் பழிவாங்குவார்கள். ஆகவே, தப்பாமல் அவர்களாற் கொல்லப்படுவேன். இவ்வாறு என் உயிருக்கு நானே வலிய அழிவைத் தேடிக் கொள்வது அறிவுடைமையாகாது.

### நான் செய்யத்தக்கது யாது ?

ஆதலால், செய்யத்தக்கது யாது என ஆழ்ந்து நினைத்துப் பின்வருமாறு முடிவு செய்தேன். இந்தக் கொலைச் செயலில் நான் எந்த முறையாலாவது நோக்கம் வைத்து ஈடுபடுவது அறமாகாது; அறிவுடைமையும் ஆகாது. என்ளுல் இயலும் வகை யாவும் செய்து, நான் அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்படாமல் மறைந்திருக்க வேண்டும். இத்தீவில் மனிதர் வாழ்வது உண்டு என்று அவர்கள் நினைப்பதற்குரிய சிறிது அடையாளமாவது தோன்றுதபடி விழிப்போடு இருக்கவேண்டும். இதுதான் நான் கடைப்பிடித்து உறுதியாய் இருந்து செய்யத்தக்க செயல் ஆகும்.

### எனக்கு நல்லறிவு பிறந்தது

அறிவினுல் ஆராய்ந்து செய்த இந்த முடிவு சமயவழியால் நினைத்துப் பார்க்குமிடத்தும் எனக்குச் சரி என்றே

புலப்பட்டது. எனக்குத் தீங்கு சிறிதும் செய்யாத காட்டு வேடரைக் கொல்வதற்கு நான் பற்பல கொடிய வழிகளை நினைத்தது பெருந்தவறு என்று என் உள்ளத்தில் தோன்றியது. அவர்கள் ஒருவருக்கொருவர் செய்த தீமையைக் குறித்துக் கேட்பதற்கு நான் யாவன்? எனக்கு என்ன உரிமை இருக்கிறது? அவர்கள் இனத்தார் செய்த கொடுமைகளுக்குக் கடவுள் அவர்கள் இனத்தாரைக் கொண்டே நீதிப்படி அவர்களைத் தம் திருவுள்ளத்திற் கேற்றபடி ஒறுத்து விடுவார்.

இந்த ஒழுங்கு முறை எனக்கு இப்பொழுது நன்றாய் விளங்கிற்று. முன்பு நான் முடிவு செய்தபடி அவர்களைக் கொன்று அழித்திருப்பேனானால், வேண்டுமென்று, காரணமில்லாமல் கொலை செய்யும் கொடியோனுக்கு வரும் கெடுதியே எனக்கும் வந்து சேரும். அப்படிச் செய்யாமல், நல்ல வேளையில் மனம் தெளிந்து தப்பிக்கொண்டேன். அதைப் பற்றி என்மனம் முழு நிறைவை அடைந்தது. அதன் பிறகு நான் முழந்தாளிட்டு மனம் தாழ்ந்து, கடவுளை வணங்கிக் கொலைத் தொழில் செய்யாதபடி என்னை விலக்கிக் காத்ததற்காக அவருக்கு வாழ்த்து மொழிகள் கூறினேன். காட்டு வேடருடைய கையில் அகப்படாதிருக்கவும், தற்காப்பின் பொருட்டு அவர்களைக் கொல்வது முறை யென்று தெரிந்தால் ஒழிய, வேறு காரணமாக அவர்களைக் கொல்லாதிருக்கவும் எனக்கு நல்லறிவு பிறப்பித்து என்னை நல்வழிப் படுத்தி அருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டேன்.

### ஓடத்தைப் பாதுகாத்தல்

இதற்குப் பிறகு, ஏறத்தாழ ஓராண்டு வரையில், என் மனம் மேற்கூறிய துறையைவிட்டு நீங்காதிருந்தது. நான் அவர்களைக் கண்டு பிடிக்கத்தக்க வழிகளைக் கனவிலும் நினைக்கவில்லை. கடலில் அவர்கள் ஓடம் வருவதையும், அல்லது வாராததையும் பார்க்கவாயினும், அவர்கள் கரையில் இறங்கியிருக்கின்றார்களா என்பதைக் காணவாயினும்,

இவ்வோராண்டில் ஒருமுறையாவது நான் மலைமீது ஏற வில்லை. குன்றின்மீது ஏறிப் போய்ப் பார்க்க நேர்ந்தால், வேடரைக் கண்டு அவர்கள்மேல் விழுந்து, அவர்களை அழிப்ப தற்கு என் மனம் விரும்பினாலும் விரும்பும். இதை நினைத்துத்தான் முன்னைய வழக்கப்படி குன்றேறிக் காண் பதை நிறுத்திக் கொண்டேன். என்னுடைய ஓடத்தைச் செலுத்திக்கொண்டு வருவதற்கு மட்டும், நான் ஒரு முறை மேற்குக் கடற்கரைக்குச் சென்றேன். அதைச் செலுத்திக் கொண்டு, கீழ் கரையில் சில உயர்ந்த பாறைகளின் ஒதுக் கில் ஒரு சிறு குடாவில் நிறுத்திக் கட்டினேன். அங்கே நீரோட்டம் மிக்க விரைவாய் இருந்ததனால், வேடர் எவ் விதத்திலாயினும் ஓடமேறி வரத் துணியமாட்டார்கள். துணிவு இருந்தாலும் அவர்கள் மனம் அதற்கு இசையவு மாட்டாது என்று உணர்ந்தேன்.

ஓடத்திற்குரிய துணைக் கருவிகள் ஒன்றையும் விட்டு விடாமல் பாய்மரம், பாய், நங்கூரம் முதலிய எல்லாப் பொருள்களையும் ஓடத்தில் ஏற்றிக்கொண்டு வந்தேன். நங்கூரம் அதன் பெயருக்குரியதன்றாயினும் என்னாலியன்ற அளவும் சிறப்பாய் அமைத்திருந்தேன். வேடர் வந்தால், அவர்கள் இந்தக் கருவிகளையாவது, ஓடத்தையாவது, தீவில் மனிதர் வாழும் எந்த அறிகுறியையாவது காணாத படி இவைகள் எல்லாவற்றையும் இக்கரைக்குக் கொண்டு

### அச்சத்தால் அடங்கியிருத்தல்

மேலும் நான் முன்போல அடிக்கடி வெளியிற் புறப் படாமல் என்னுடைய குகைக்குள் இருந்தேன். ஆட்டுப் பால் கறப்பதற்கும், என் மந்தையைப் பார்த்து வருவதற்கு மட்டும் அடுத்தடுத்துப் போனேன். ஆட்டு மந்தைகள் தீவின் எதிர்ப்பக்கத்தில் நடுக்காட்டில் எட்டாத தொலை வில் இருந்ததனால், அங்கே ஏதும் இடர்வரும் என்று அஞ்சுவதற்குக் காரணம் இல்லை. சில வேளையே இத்தீவில் இறங்கும் வேடர் இங்கே தமக்கு ஏதும் பொருள் வேண்டு

மென்று நாடி வருவதில்லை. ஆதலால், அவர்கள் கரைப் பக்கத்தில் தங்கிப்போவ தொழிய நடுத்தீவிற்கு வந்து உலாவமாட்டார்கள். அவர்களைக் குறித்து எனக்கு அச்சமும் விழிப்பும் உண்டானதற்குப் பிறகும் அவர்கள் இத் தீவில் வந்து இறங்கியிருப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை. நான் முன்பு படைக்கருவிகளின்றி ஆடையற்ற மனிதனாக உலாவித் திரிந்தபொழுது, அவர்கள் எதிர்ப்பட்டிருந்தால் என் நிலை யாதாயிருக்கும்? அவர்கள் என்னை என்ன பாடு படுத்தமாட்டார்கள்? சிறிய குண்டு அடைத்துக்கொண்டு போன ஒரே ஒரு துப்பாக்கிமட்டும் என்னிடம இருந்தது. அஃது எனக்கு அவ்வேளையில் போதுமா? தீவில் அங்கங்கே திரிந்து, எனக்குப் பயன்படும் பொருள் ஏதேனும் அகப் படுமா என்று பார்த்துக்கொண்டு வந்தேன். அன்றியும், என்னுடைய காலடிச் சுவட்டைக் கண்டு, பதினைந்து இருபது வேடர் விரைந்தோடி என்னைத் தொடர்ந்து வந்தால், நான் தப்பித்துக்கொண்டிருக்க முடியுமா? அவ்வேளையில் என் மனம் பதைத்துத் துடித்து வருந்தியிராதோ என்று எண்ணி, அளவு கடந்த திகிலடைந்தேன்.

அவர்கள் என்னைக் கண்டு தொடர்ந்தால் அதற் கென்ன சூழ்ச்சி செய்வேன்? நான் அவர்களோடு எதிர்க்க வல்லவன் அன்றே? இயன்ற அளவு ஏதேனும் சூழ்ச்சி செய்வதற்கு, அவ்வேளையில் எனக்கு நிலையான மனவுறுதி யிராதன்றோ? ஆழ்ந்த நினைவும் துணை உதவிகளும் செய்துகொண்டு இருக்கும் இப்பொழுது உள்ள சிறிது அளவு அறிவாவது அவ்வேளையில் எனக்கு வராது என்று சற்று அழுத்தமாய் நினைக்கும்பொழுது, என் மனம் முறிந்து நிலையழிய, எளிதில் நீங்காத் துயரம் மேலிட்டது. வேறு செயல்களில் மனத்தைச் செல்லவிடாமல் இஃ தொன்றையே ஊன்றி நினைத்தபொழுது, தாங்குதற்கரிய துன்பம் உண்டாயிற்று. அது விரைவில் ஆறவில்லை. வர வர என் மனம் திரும்பி, அத்துன்பத்தை மறந்து, கடவுள் செய்த வியத்தகு நன்மைகளை நினைத்து, அவரைத் தொழுது வாழ்த்தி, அவர் என்னைப் பலவிதத் துன்ப நிலை

களினின்றும் நீக்கி, எனக்குத் தோன்றுதபடி நேர்ந்த பெரிய தீமைகளைத் தடுத்து, அருள் சுரந்து, என்னைக் காத்தாரன்றோ? அவர் அருள் இல்லையென்றால், நான் நினையாதிருக்கும் வேளையில் வேடராகிய கொடியோரால் எனக்கு நேரிடும் தீமைகளை நீக்கிக்கொள்ளும் சூழ்ச்சி செய்ய எனக்குத் திறமை ஏது?

உலக நிகழ்ச்சிகளில் மனிதருக்கு நேரிடும் துன்பங்களை அருட்கடலாகிய கடவுள், பலவாறு விலக்கிவருவதை நான் முதலிற் கண்டுணர்ந்தேன். அப்பொழுது, என் நெஞ்சில் பிறந்த நினைவுகள் இவ்வேளையிலும் உண்டாயின. அவைகளைச் சுருக்கிக் கூறுகின்றேன். சில வேளைகளில் நமக்கு வரும் துன்ப நிலைகள் வியக்கத்தக்கவாறு நீங்குகின்றன. மேலும் இந்த வழியோ, அந்த வழியோ எதிற் செல்வது சிறப்பு என்று ஐயப்படும்பொழுது, நமது மனம் ஒரு வழியை நாட, ஏதோ மறைமுகமான அறிவு நமக்குள் பிறந்து, நம்மை நல்வழியிற் செலுத்துகின்றது. அன்றியும் நமது அறிவு, மனம், செயல் இம்மூன்றும் ஒத்து ஒரு வழியைச்சார்ந்து நிற்க, நமக்குள்ளே விரைவில் வியக்கத்தக்க நல்லறிவு பிறந்து, நம்மை அவ்வழியிற் செல்லவிடாமல் நல்வழியில் செலுத்துவதும் உண்டு. அதற்கு அடிப்படை எது என்றும், அஃது எவரால் தோன்றியது என்றும், நமக்குத் தெரியாது இருக்கும். நமது விருப்பமும் மனமும் சென்ற துறையில் இறங்கியிருப்போமானால் நாம் அழிந்து போயிருப்போம் என்று பிறகு நமக்குத் தோன்றும். இவ்வகையான பல நினைவுகள் எனக்கு உண்டானதனால், இனி என் நெஞ்சில் மறைமுகமான அறிவாவது, கட்டளையாவது தோன்றி ஒன்றைச் செய்யவும் அல்லது செய்யாது விடவும், ஒரு வழியிற் செல்லவும் அல்லது வேறு வழியிற் செல்லவும் என்னைத் தூண்டும்பொழுது, நான் அவ்வாறே நடக்க வேண்டும் என்று முடிவு செய்தேன்.

**மறைமுகமான அறிவு உள்ளத்தில் தோன்றுதல்**

மேற்குறித்த மறைமுகமான அறிவு என் உள்ளத்தில் பிறந்த உடனே அதன் தோற்றம், முடிவு, நோக்கம் முதலிய

வற்றைக் குறித்து ஒன்றும் நினைக்காமல் அதன் வழியிற் சென்றேன். இப்படி நடந்ததனால் எனக்கு நன்மை யுண்டாயிற்று என்பதற்குப் பல எடுத்துக் காட்டுகள் உண்டு. முதன்மையாய்த் துயர் நிறைந்த இத்தீவில் நான் இறங்கிப் பழகிய காலத்தின் பிறகு, எனக்கு உண்டான செயலின் வெற்றிகள் மிகப் பல. இப்பொழுது எனக்கு உண்டாயிருக்கும் தெளிந்த அறிவு முன்பு இருந்திருக்குமானால், பல வேளைகளில் மேற்கூறிய முறையைச் சார்ந்து நடந்ததனால் அடைந்த நன்மைகளுக்கு எடுத்துக் காட்டாய்ச் சொல்லக் கூடும். என்னைப் போலப், பலவிதத் துன்பங்களையும் இழப்புக்களையும் அடைந்து, அல்லது சிறிய துன்பங்கட்கு உட்பட்டு, எதனையும் நன்றாகத் தெளிய ஆராயப் பயின்றவர்கள் அனைவருக்கும் நான் கூறும் அறிவுரை வருமாறு: கடவுள் வழியாய் வருகின்ற அவ்விதச் சூழ்ச்சிகளை எளியன என்று தள்ளிவிடாதீர்கள். அவை கண்ணுக்கு எட்டாத் தூய இறைவனிடத்திலிருந்து வந்தனவாம் எனக் கருதலாம். அதைப்பற்றி நாம் நினைப்பதும் இல்லை. அதன் முறை நமக்குத் தோன்றாது. ஆயினும், ஒன்றுமட்டும் உண்மை. உடம்போடு கூடிய மனிதர்களுக்கும், உடம்பு இல்லாத உயிர்களுக்கும் மறைமுகமான உரையாடல் நடக்கின்றதென்பதற்கு அந்தப் புதிய அறிவுகளே சான்றாகும். இந்தச் சான்றை மறுப்பவர் இல்லை. மனிதர் வாழாத இந்தக் காட்டில் நான் தனியே நாட்கழித்த பிற்காலத்தில், எனக்கு நேர்ந்த பல நிகழ்ச்சிகளை இதற்கு எடுத்துக் காட்டுகளாய் இடம் வரும்போது சொல்வேன்.

எனக்கு மிகுந்த மனக்கவலையும், அடுத்தடுத்துப் பெருந்துன்பங்களும், அவைகளைத் தவிர்க்கும் வகையைக் குறித்துப் பல எண்ணங்களும், உண்டாயின. அதனால் எனது பிற்கால இன்ப வாழ்வின் பொருட்டு நான் முன்பு செய்யத் தொடங்கின துணைக் கருவி செய்யும் தொழிலை மறந்துவிட்டேன். அவைகளை மறப்பது வியப்பு அன்றோ? உணவுப் பொருள் திரட்டுவதைவிட வேடர் கைக்குத் தப்பிப் பிழைத்திருப்பதையே எண்ணி எண்ணி நான்

அதிக மனக்கவலை கொண்டேன். எவருக்காவது ஒலி கேட்குமென்று, ஆணி அடிப்பது, மரக்கிளை தறிப்பது, துப்பாக்கிகொண்டு சுடுவது முதலியவற்றை யெல்லாம் நிறுத்திவிட்டேன். பகலிற் புகை நெடுந்தொலைவிலுள்ளார்க்கும் தோன்றுமாதலால், அதை எவராவது கண்டு நான் இருக்குமிடத்திற்கு வருவார்கள் என்றெண்ணி ஏங்கி, நெருப்பு எரிப்பதையும் நிறுத்திவிட்டேன். பானை சட்டி, சுங்கான் முதலிய மட்பாண்டங்கள் சுடுவதற்கு வழக்கமான இடத்தைவிட்டு, காட்டில் எனது புதுமையான அறைக்குள் சூளை வைத்தேன். அவ்விடத்திற்குப் போயச் சிலநாட்கள் சென்றபின், தரைக்குள்ளே நெடுந் தொலைவுதானே உண்டான ஒருமுழை இருக்கக் கண்டு, ஆறுதல் அடைந்தேன். அம்முழையின் வாயிலில் எந்த வேடன் போய் நிற்பினும், அஞ்சிப் பின்னிடுவது ஒழிய, உட்செல்லத் துணியான். பேரிடர் வந்த காலத்தில் ஒளிந்து கொள்வதற்கேற்ற அடைக்கல நிலையம் ஒன்று வேண்டும். அஃதன்றி, வேறொன்றும் வேண்டுவதில்லை என்று துணிந்த என் போன்றவன் தவிர, வேறு எவனும் அதிற் செல்லத் துணிய மாட்டான்.

இம்முழையின் வாய் ஒரு பெரும் பாறையின் அடியில் இருந்தது. அங்கே கரித்துண்டு வேண்டிப் பெரிய மரக்கிளைகளைத் தற்செயலாய் தறித்துக்கொண்டிருந்தேன். திருவுள்ளத்தின் செயலால் எதனை யாயினும் நான் செய்ததாக, அல்லது எவ்விடத்திற்கேனும் சென்றதாக உறுதி சொல்வதற்குத் தகுதியான வழி காணுததனுல், தற்செயலாய் அவ்விடத்திற்குச் சென்றேன் என்றேன். மரக்கிளை தறித்த வகையைக் கூறுவதற்கு முன், கரி வேண்டியதற்குக் காரணம் யாது என்று கூறுகின்றேன்.

**கரி தேவைப்பட்ட காரணம்**

நான் குடியிருக்கும் இடத்தில் விறகுக் கட்டைகளில் நெருப்பு மூட்டி எரித்தால், தொலைவில் எவராவது புகையைக் கண்டு, என்னிடத்திற்கு வருவார் என்றெண்ணி

அச்சமுற்றிருந்தேன் அன்றோ? அதற்கு அஞ்சி, ரொட்டி சுட்டுத் தின்னுமலும், இறைச்சி முதலிய உணவுப் பொருள்களைச் சமைத்து உண்ணுமலும், பட்டினியிருந்து வருத்தப் படுதலும் ஒவ்வாது. ஆதலால் இங்கிலாந்தில் இருப்பவர்கள் மண்ணுக்கடியில் நெருப்பு மூட்டி விறகைச் சுட்டுக் கரியாக்குவது போல, நானும் இவ்விடத்தில் கரிசுட ஒரு வகை செய்தேன். சுட்டு, நெருப்பை அவித்தபின், கரியைச் சேர்த்து வீட்டுக்குக் கொண்டு போகலாமென்று கருதினேன். சமையல் முதலிய வேலைகளுக்குக் கரியில் நெருப்பு மூட்டினுல், புகை எழும்பாது என்னும் உறுதியை நினைத்து இவ்வாறு செய்தேன்.

## முழைக்குழியில் இரண்டு கண்கள் தெரிந்தன

இனி, நான் மரக்கிளை வெட்டிய கதையை விட்ட குறையினின்று கூறுகின்றேன். வெட்டிக்கொண்டு நிற்கும் பொழுது, சிறுதூறு ஒன்றின் பருத்த கொம்புக்குப் பின் ஒரு குழி இருந்தது கண்டு, அதை நன்ருய்ப் பார்க்கக் கருதி, ஒருவாறு அதன் வாயிலிற் சென்று நின்று பார்த்தேன். அஃது என்னைப்போல் இருவர் தலை தட்டாமல் நிமிர்ந்து நிற்கத்தக்க ஆழமும் நீளமும் உள்ளதாய் இருந்தது. அம்முழையின் உள்ளிடம் முழுதும் இருள் சூழ்ந்து இருந்தது. ஒன்றும் தெரியவில்லை. அகன்று திரண்ட கண்கள் இரண்டு விண்மீன்களைப் போலவிட்டு விட்டு ஒளி வீசின. அவை மனிதன் ஒருவனுடைய கண்களோ, அல்லது பேயின் கண்களோ அறியேன். முழை வாயிலின் வழியாய்ச் செல்லும் ஒளியில் அவ்விழிகளின் ஒளிநேரே பாய்ந்து எதிர்ஒளியாகத் தெரிந்தது. அக்கண்களைக் கண்டவுடன் நான் திகில் பிடித்து வெளியில் ஓட விரைந்தேன்.

## உயிர் நீங்கும் ஒருவனுடைய பெருமூச்சுக் கேட்டது

சற்றுப் பொறுத்து அச்சம் தெளிந்தபின் என்னைப் போன்ற முழு முட்டாளைக் கண்டதில்லை என்றும், பேயைக் கண்டு இப்படி அஞ்சும் நான் இருபது ஆண்டுகள் இத்

தீவில் தனியே வாழ்ந்தது எப்படியென்றும் என்னையே கண்டித்துக் கொண்டேன். என்னைக் காட்டிலும் அதிகக் கொடுமையுள்ளதொன்றும் இம்முழையில் இராது என்று எண்ணித் துணிவு கொண்டேன். பின்பு துணிவைக் கை விடாமல் என் நெஞ்சை உறுதிப்படுத்திக்கொண்டு, கொழுந்துவிட்டெரியும் கொள்ளிக்கட்டை ஒன்று கைக் கொண்டு, மீண்டும் உள்ளே சென்றேன். மூன்றடி பெயர்த்து வைக்குமுன் உயிர்த்துன்பமடையும் ஒருவன் பெருமூச்சுவிடு வதுபோன்ற ஒலிகேட்டது. பின்பு வன்மையிழந்தானொரு வன் அரைகுறையாய்ப் பேசுவன போன்ற சில சொற் களும் முடிவில் மீண்டும் ஒரு பெருமூச்சொலியும் எழுந்தன. அதைக் கேட்டவுடன் முன்போல் என் நெஞ்சு பதறியது. உடனே நான் முன் வைத்த காலைப் பெயர்த்துப் பின் வைத்தேன். அச்சத்தால் என் உடம்பு விறைத்து வியர்த் தது. என் மயிர் சிலிர்த்து, முரணின பன்றி மயிர்போல விறைத்தெழுந்தது. அவ் வேளையில் என் தலையில் குல்லா இருக்குமானால், விரைவில் சிலிர்த்த மயிர் வீசி யெறிந்து அப்புறப் படுத்தும் என்பதற்கு ஐயமில்லை, இவ்வாறு எனக்குத் திகில் உண்டாகியிருந்தும், நான் பின்னும் என் நெஞ்சை உறுதிப்படுத்தினேன். முழு வல் லமையுள்ள கடவுள் எங்கும் கலந்திருந்து, என்னைக் காக்க வல்லவராய் இருக்கின்றார் என்று எண்ணி, எனக்கு நானே துணிவு கூறிக்கொண்டு, மறுபடியும் முழைக் குள்ளே போக முயன்று திரும்பினேன். கையிலிருந்த நெருப்புக் கொள்ளியை என் தலை மட்டத்துக்குமேல் உயர்த்திப் பிடித்து உற்றுப் பார்த்தபொழுது, ஒரு பெரிய கிழ ஆட்டுக் கடா உடல் வலிமை அற்று, இளைத்து வருந்திப் பெருமூச்செறிந்து, உயிர்த்துன்பமுற்றுப் படுத் திருந்தது கண்டேன்.

### ஆட்டுக்கடா படுத்துக் கிடந்தது

அதற்கு எழுந்திருக்கும் வன்மையுண்டோ என்று அறியும் பொருட்டு, அதைச் சற்றுத் தள்ளிவிட்டேன். அஃது எழுந்து நிற்க முயன்றும் முடியாமல் இருந்தது. இக்

கடாவைக் கண்டு எனக்குச் சொல்வதற்கரிய திகில் உண்டானது போல, இவ்விடத்திற்கு எவரேனும் காட்டுமனிதர் வர நேர்ந்தால், அவருக்கும் திகில் உண்டாகும் என்று எண்ணி, கடாவைப் படுத்த வண்ணமாய் இருக்க விடுவதே நன்று என்று நினைத்தேன்.

மேற்கூறியபடி என்னைப் பிடித்த திகிலும் வியப்பும் தொலைந்தபின், முழையை ஏற இறங்க நான்கு திசையிலும் பார்த்தேன். அது மிகச் சிறியதாய் இருந்தது. அஃது ஏறத்தாழப் பன்னிரண்டடி உயரமுடையதாய் இருந்தது. அதன் வடிவம் நாற்கோணமோ வட்டமோ அன்று; அழகற்ற கோணல் மாணலாய் இருந்தது. மனிதர் கைப்படாமல் தானே உண்டான முழைக்கு வடிவு வரையறை ஏது? அதன் மறுமுனை சற்றுப் பதிந்து குழிந்திருந்தது. சிறு குழந்தைகளைப் போலக் கைகால் மடக்கித் தவழ்ந்தாலன்றி, அக்குழிக்குள் செல்வது இயலாது. அதில் நுழைந்தால் எவ்விடத்தை அடையலாம் என்று எனக்குத் தெரியவில்லை. மேலும் என்னிடத்தில் விளக்கும் இல்லை. அதனால் அன்று அதில் நுழையாமல், மறுநாள் விளக்கும், சக்கி முக்கியும் கொண்டு வந்து நுழைந்து பார்க்க முடிவு செய்தேன்.

**ஒளிவீசும் மலை முழை**

மறுநாள் வெள்ளாட்டின் நிணத்தால் நான் செய்து வைத்திருந்த மெழுகு வர்த்திகள் ஆறு கொண்டுபோய்க் கொளுத்தி நாய் தவழ்வதுபோல, மேற்குறித்த குழிக்குள் முப்பது அடி தொலைவு தவழ்ந்து சென்றேன். அஃது எவ்வளவு தொலைவு செல்லுமென்றும் அதறகப்புறம் இருப்பது என்ன என்றும் அறியாமல் துணிந்து போவதனால் ஏதேனும் பெருந்துன்பம் வரினும் வரும் என்று நினைத்தேன். தொல்லையான இடத்தைக் கடந்து சென்றபின், அம்முழையின் முகடு வரவர இருபது அடி வரையில் அகன்று பரந்திருந்தது. இரு பக்கங்களும், முகடும் கண்ணுக்கு மிக அழகாக இருந்தன. அவ்வளவு சிறந்த

காட்சியை நான் அத்தீவில் எங்கும் கண்டதில்லை. என் கையிலிருந்த இரண்டு ஆட்டு நிணவர்த்திகளின் ஒளியால் முழை மதில்களினின்று பல்லாயிரக் கணக்கான விளக்குகள் எதிரொளி வீசின. இத்தனை எதிரொளிகள் தோன்றுவதற்குக் காரணமாய் அம் மலை முழையில் இருந்தது வைரமோ, மாணிக்கக் கற்களோ பொற் பொடியோ அறியேன். பெரும்பாலும் பொற்பொடியாகவே இருக்கும் என்று நினைத்தேன்.

## புதிய முழைக்குள் பொருள்களைச் சேர்த்தல்

இருள் அடர்ந்திருப்பினும், அக்குழி கண்ணுக்கு மிகவும் இனிதாய் இருந்தது. அதன் அடித்தரை உலர்ந்து ஒப்பமாய் இருந்தது. அது பொடிக் கற்பாங்கு நிலம். ஆகவே, அருவருப்போ நச்சுத்தன்மையோ, கொண்ட உயிர்ப்பொருள் அங்கு ஒன்றும் இல்லை. முழையின் முகட்டிலும் பக்கங்களிலும ஈரம் சுவறியிருக்கவில்லை. அதன் வாயில்மட்டும் நுழைந்து போவதற்குத் தொல்லை கொடுத்தது. அந்த முழை அச்சமுற்று அடங்கி யிருப்பதற்குத் தகுதியான அடைக்கல இடமென்று கண்டு, நான் மகிழ்ச்சியுற்று, என்னிடத்தில் உள்ள சில பொருள்களை அவ்விடத்தில் கொண்டுபோய்ப் பாதுகாப்பாய் வைக்க முடிவு செய்தேன். முதன்மையாய் வெடி மருந்து வைத்திருந்த பீப்பாயையும், குருவிக் குழாய்த் துப்பாக்கி இரண்டையும், பெருந்துப்பாக்கிகள் மூன்றையும் நான் அவ்விடத்திற்கொண்டுபோய் வைக்க முடிவு செய்தேன். எனக்குள்ள குருவிக் குழாய்த் துப்பாக்கிகள் மொத்தம் மூன்று. பெருந் துப்பாக்கிகள் எட்டு. அவற்றுள், மேற்கூறிய மூன்று ஒழிந்த மற்ற ஐந்தும் எனது கோட்டையின் புறமதிலிற் பீரங்கிகள் போல நினைக்கும்பொழுது தடையின்றி வெடிப்பதற்கேற்றபடி நாட்டப்பட்டிருந்தன. தேவைப்படும்பொழுது அவைகளை எடுத்துக்கொண்டு போகவேண்டுமானாலும், எளிதில் எடுக்கத் தக்கபடி வைக்கப்பட்டிருந்தன.

வெடி மருந்துப் பீப்பாயைப் பெயர்த்துக் கொண்டு போக முயன்ற வேளையில் பீப்பாயைத் திறந்து பார்த்தேன். அந்தப் பீப்பாய் நான் கடலிலிருந்து உருட்டி வந்தது. அதற்குள் நீர் சுவறியது. பீப்பாயை உடைத்துப் பார்த்த அளவில், அதன் நான்கு பக்கத்திலும் மருந்தில் மூன்று நான்கு அங்குலம் அளவிற்கு நீர் ஏறி, மருந்து கட்டியாய் இறுகி விறைத்திருந்தது. அதற்குள் இருந்த மருந்து உயர்தரமானது; அறுபது இராத்தல் அளவினது. அதில் ஒரு பழுதும் இல்லை. ஓட்டுக்குள் இருக்கும் பருப்பை அவ்வோடு பழுதின்றிக் காப்பதுபோல, பீப்பாயின் இடையில் உள்ள மருந்தை அதன் நான்கு பக்கத்திலும் நீர் ஏறி உலர்ந்து இறுகிய மருந்து இடையூறின்றிக் காத்தது. அப்பொழுது நான் அம்மருந்தைத் தொல்லையின்றிக் கொண்டுபோய்ச் சேர்த்தேன். ஏதேனும் தாக்குதல் உண்டாகும் என்று அஞ்சியதனால், அதன் பிறகு நான் கோட்டைக்குள் இரண்டு மூன்று இராத்தல் மருந்துக்குமேல் அதிகமாக வைக்கவில்லை. உருக்கிக் குண்டு வார்ப்பதற்காக வைத்திருந்த காரீயத்தையும் முழையினுட் கொண்டுபோய்ச் சேர்த்தேன்.

மனிதர் எவரும் போக முடியாத மலை முழைகளிலும், பொந்துகளிலும் பழைய காலத்தில் அரக்கர் வாழ்வதுண்டு என்று சொல்வார்களன்றோ? நானும் அவர்களைப் போன்ற அரக்கன் என்று எண்ணி அச்சமின்றி இருந்தேன். நான் இங்கிருக்கும்பொழுது, வேடர் ஐந்நூறு பேர் என்னைத் தொடர்ந்துவரினும் கண்டுபிடிக்க மாட்டார்கள். கண்டு பிடித்தாலும் என்னைத் தாக்கும்பொருட்டு இவ்விடத்திற்கு வர அவர்களுக்குத் துணிவு உண்டாகாது.

இறக்கும் நிலையில் குற்றுயிராய்க்கிடந்த கிழ ஆட்டுக் கடா மறுநாள் முழைவாயிலில் இறந்துபோயிற்று. இறந்த விடத்திலேயே நான் எளிதிற் குழி பறித்து, முடைநாற்றம் வீசாதபடி அதைப் புதைத்து அடக்கம் செய்தேன். இழுத்து வெளியிற் கொண்டு போவது பெருந்துன்பம் என்று தோன்றியதனால் இவ்வாறு செய்தேன்.

## பதின்மூன்றும் அதிகாரம்

### இருபத்து மூன்ருவது ஆண்டின் நிலைமை

நடக்கும் ஆண்டு நான் இத்தீவில் வந்திறங்கிய இருபத்து மூன்ருவது ஆண்டு. இவ்வளவு காலம் நான் இங்கிருந்து பழகியதனுல், இதுவே நான் பிறந்த நாடுபோல ஆயிற்று. இவ்விடத்திற்கு வேடர் வந்து கலகம் செய்து, என் நிலையைக் குலையார்களென்று எனக்கு உறுதியாய்த் தெரியவருமானுல், நான் கவலையற்று வாழ்நாள் முடிவு வரையில் இங்கிருந்து, முறையில் இறந்த கிழ ஆட்டைப் போல இவ்விடத்திலேயே இறக்க விரும்புவேன். நாளடைவில் சில பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளைப் பயின்றுவந்தேன். அதனுல் எனது காலம் வழக்கத்தைவிட இன்பமாய் எளிதில் கழிந்தது. முதலில், நான் முன்பே கூறிய வாறு என் கிளியாகிய பாலுக்குப் பேச்சுக் கற்பித்தேன். அது வர வரத் தெளிவாயும் திருத்தமாகவும் பேசியது கேட்டு, உவப்புற்றேன். அந்தக்கிளி சரியாய் இருபத்தாறு அகவை என்னுடன் வாழ்ந்தது. பின்னும் அஃது எத்தனை ஆண்டு உயிருடன் இருந்ததோ அறியேன். கிளிக்கு வாழ்நாள் நூறு ஆண்டுகள் என்று பிரேஜில் நாட்டார் சொல்வார்கள். நான் வளர்த்த கிளி நாளிதுவரையில் அத்தீவில் இறவாதிருந்து, ஏழை இராபின்சன் குரூசோவைப் பெயர் சொல்லி அழைக்கவும் கூடும். எந்த ஆங்கிலேயனுக்காவது அவ்விடத்திற்குப்போய், அக்கிளி பேசுவதைக் கேட்கும் கெடுநிலை உண்டாகாதிருக்கக்கடவது. ஒருகால் ஒருவன் அக்கிளி பேசுவதைக் கேட்பானுயினும், அது கிளியன்று பேய் என்றே உறுதியாய் நம்புவான். எனது நாய் பதினுறு ஆண்டளவும் என்னைவிட்டு நீங்காத் தோழனுய் இருந்து, வாழ்நாள் முதிர்ந்து இறந்துபோயிற்று. என் பூனைகள் நாளடைவில் பல்கியதையும், என்னையும் என் சொத்துகளையும் தின்னத் தொடங்கியதனுல், அவற்றில் பலவற்றை

நான் சுட்டுக்கொன்றதையும் முன்பு வெளியிட்டேனன்றோ? நான் கொண்டுவந்த கிழப்பூனைகள் இரண்டும் இறந்தபின், மற்றவைகளை வெருட்டித் துரத்திவிட்டேன். அவைகளுக்கு இரையொன்றும் கொடுக்கவில்லை. அதனால், அவைகள் என்னைவிட்டுப் பிரிந்து காட்டுப்பூனைகள் ஆயின. எனக்கு விருப்பமான இரண்டு மூன்று பூனைகள்மட்டும் என்னுடன் பழகி என் வயப்பட்டிருந்தன. அவைகள் போட்ட குட்டிகள் அனைத்தையும் நான் கடலில் அமிழ்த்திக்கொன்றேன். அந்த இரண்டு மூன்று பூனைகள் என் குடும்பத்தாரைப்போல இருந்தன. அன்றியும் இரண்டு மூன்று வெள்ளாட்டுக் குட்டிகளைக் கைத்தீனி கொடுத்து வளர்த்தேன். ஒருவாறு பேசப் பயின்று, என்னை இராபின்சன் குரூசோ என்று அழைத்த கிளிகள் வேறிரண்டு இருந்தன. அவை நான் முதலில் வளர்த்த கிளிக்குச் சிறிதும் ஒப்பானவை அல்ல. பாலுக்குப் பேச்சுப் பழக்குவதற்கு நான் உழைத்ததுபோல் அவைகளை வருந்திப் பயிற்றவில்லை. மேலும், கடற்கரையிற் பல்வேறு கடற்பறவைகளையும் பிடித்துச் சிறகு வெட்டிவிட்டு வளர்த்து வந்தேன். அப்பறவைகளின் இன வேறுபாடு அறியேன். எனது கோட்டை மதிலுக்குப் புறத்தில் நான் நாட்டிய சிறு கிளைகள் நாளடைவில் தழைத்து வளர்ந்து, அடர்ந்து பெருந்தோப்பாயின. அத்தோப்பில் மேற்கூறிய பறவைகள் மகிழ்ச்சியோடு வாழ்ந்து வரவர மிகுதியாகப் பல்கின. அவைகள் அங்கிருந்தது எனக்கு மிகவும் மகிழ்ச்சியாய் இருந்தது. வேடரைப்பற்றிய அச்சம் ஒன்று மட்டும் இல்லாதிருக்குமானால் மேற்கூறியபடி எனக்கு ஒரு குறையும் இராது.

## ஒன்றை நினைக்கின் அஃது ஒழிந்திட்டு ஒன்றாகும்

நாம் எண்ணியவாறு எப்பொழுதும் நடக்குமா? எனது எண்ணம் ஒன்று; திருவுள்ளத்தின் செயல் ஒன்றாய் முடிந்தது. என் வரலாற்றைப் படிப்பவர்கள் அனைவரும் அதில் முதன்மையாய் ஒரு சிறப்பைக் காண்பார்கள்,

கூடிய முயற்சிகள் செய்து நாம் தவிர்க்கக் கருதும் துன்பம் எதுவோ, அது பெரும்பாலும் நமது தடையில் நிற்காமல் நமக்கு நேர்கின்றது. அவ்வாறு நேரும்பொழுது, அது நமக்கு மிகுந்த திகிலை வருவித்து நம்மை வருத்தும். பின்னும் அதுவே நம்மைத் தொல்லையினின்றும் விலக்கி முன்னைய இன்ப நிலையை அடைவிக்கும் வாயிலாயும், கருவியாயும் அமையும். என்னுடைய வாழ்வில் எனக்கு ஏற்பட்ட நிகழ்ச்சிகள் பலவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகச் சொல்ல இயலும். ஆயினும் இந்தத் தீவில் நான் தனியே நாட்கழித்த இறுதிக் காலத்தில் நேர்ந்த நிகழ்ச்சிகளே இதற்கு முதன்மையான எடுத்துக் காட்டுகளாம்.

## வேடர் எரித்த நெருப்பின் காட்சி

மேற் கூறியபடி நான் இத்தீவிற் சேர்ந்த இருபத்து மூன்றாவது ஆண்டு டிசம்பர்த் திங்களில் ஒருநாள் விடியற் கருக்கலிலேயே அறுப்பறுக்க வயலுக்குப் போனேன். எனக்கு இரண்டு கல் தொலைவில் கடற்கரையில் நெருப் பெரிந்த வெளிச்சத்தைக் கண்டு திகைத்து நின்றேன். அஃது இதற்கு முன் வேடர் சிலர் இறங்கியிருந்ததைப்பற்றி நான் சில அடையாளங்கள் கண்ட தீவின் முனையை ஒட்டியதுதான். ஆயினும் அந்நெருப்புத் தோன்றியது தீவின் எதிர்ப்பக்கத்தில் அன்று; நான் வாழும் பக்கத்திலே. இதைக் குறித்து எனக்குப் பின்னும் அதிகத் திகில் உண்டாயிற்று.

எனக்கு உண்டான அச்சம் இவ்வளவு என்றில்லை. வேடர் என்னைப் பிடித்துக்கொள்ளுவார்கள் என்று எண்ணி வெளியிற் புறப்படத் துணியாமல் தோப்புக்குள் நின்றேன். இந்த வேடர்கள் தீவில் எங்கும் உலாவி வரும் பொழுது, எனது விளை பயிரையும், அரிதாளையும், எனது கைத் தொழிலாகிய அடைப்பு முதலியவைகளையும் காண்பார்களானால், இங்கே மனிதர் வாழ்வு உண்டு என்றெண்ணி ஆராய்ந்து பார்த்து, என்னைக் கண்டு பிடிக்கிற வரையில் இத்தீவை விட்டுப்போக மாட்டார்களே என்று

நினைக்க, அச்சம் என்னும் நெருப்பினால் என் உள்ளம் வெந்தது; மனம் பதைத்தது. உடனே கோட்டைக்குத் திரும்பி, மதிலேறி ஏணி வழியாய் இறங்கி, ஏணியை இறக்கிக் கீழே சார்த்திவைத்தேன். கோட்டைப் புற மதிலின் வெளிப்பக்கத்தில் புதிய காட்சி ஒன்றும் தோன்றாமல், கண்ணுக்கு எதிர்ப்படும் அனைத்தும் காடு செடி போன்று தோன்றும்படி ஒழுங்கு செய்தேன்.

**கோட்டைக்குள் ஒளிந்துகொண்டது**

கோட்டைக்குள் போய், பகைவரை உட்செல்ல ஒட்டாமல் தடுக்கத்தகும் வழி வகைகள் செய்தேன். பீரங்கிக்கு ஒப்பாக மதில் துளையில் வைத்த துப்பாக்கிகளிலும், கைத் துப்பாக்கிகள் அனைத்திலும், மருந்து குண்டு அடைத்து இடித்து, என் உயிர் இவ்வுடம்பை விட்டு நீங்கும் அளவும் பகைவரிடம் அகப்படாமல் தப்பிக்கொள்ள முடிவு செய்தேன். வேடர்கையில் என்னை அகப்படுத்தாமல் என்மீது இரங்கி, எனக்கு அடைக்கலமாய் நின்று, என்னைக் காத்தருளவேண்டும் என்று, மன மொழிகளால் கடவுளை வேண்டிக்கொண்டேன். இந்நிலையில் இரண்டு மணி நேரம் இருந்தேன். பகைவரின் நிலை அறிய எனக்குத் துடிப்பாய் இருந்தது. மறைவாக இருந்து அவர்கள் நிலையைக் கண்டு அறிந்து வந்து கூறுவதற்கோ ஒற்றர் எவரும் இல்லை.

பின்னும் சற்று நேரம் உட்கார்ந்த வண்ணமாய் இருந்து, செய்யத்தகுந்தது யாது என்று, நினைத்தேன். இனி எவ்வாறேனும் பகைவரைப்பற்றிய செய்திகளை அறிய வேண்டும் என்னும் எண்ணம் உண்டாயிற்று. ஒன்றும் அறியாது வாளாவிருக்க என் மனம் ஒப்பவில்லை. விரைந்து எழுந்து ஏணியைச் சார்த்தி நிறுத்தி, ஏறி மலை உச்சியை அடைந்தேன். அங்கியுறைக்குள் வைத்திருந்த தொலை நோக்காடியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு, வயிறு தரையில் அழுந்தும்படி குப்புறப்படுத்து, வெளிச்சம் தோன்றிய இடக்குறிப்பைப் பார்த்தேன். ஆடையில்லாத காட்டு மனிதராகிய வேடர்கள் ஒன்பது

பேர் நெருப்பு எரித்து, அதைச்சுற்றி உட்கார்ந்திருந்தார் கள். அவர்கள் குளிர்காய்வதற்கு அவ்வாறு நெருப் பெரிக்கவில்லை. வேனிற்காலத்தில் குளிர் ஏது? மக்களு லைச் சுடுவதற்கே நெருப்பு எரிப்பதாக நினைத்தேன். அவர் கள் பிணத்தையாவது, உயிர் உள்ள மனிதரையாவது கொண்டு வந்திருப்பார்கள் என்றும் தோற்றியது.

## அவர்கள் வரும் வேளை எது?

அவர்கள் ஏறிவந்த ஓடங்கள் இரண்டு. அவ்வோடங் கள் கரையில் இழுத்து ஏற்றிவிடப்பட்டு இருந்தன. கடல் வற்றும் நேரம் ஆதலால், பெருக்கு வரும்பொழுது ஓடம் ஏறிச் செல்வதற்குக் காத்திருந்தார்கள் போலும். கொடிய வேடரைக் காண்பதே உயிரை வருத்தும் காட்சியாகும். அதுவும் நான் வாழ்ந்த கரையோரத்தில் எனக்கு மிக அண்மையில் கண்டால் என்னுடைய மனம் என்ன பாடு படாது? பிறகு செய்யவேண்டிய வேலைகளை நன்றாய்ச் சீர் தூக்கி ஆராய்ந்து பார்த்து, அவர்கள் கடல்நீர் வற்றும் வேளையிலன்றிப் பெருகும் நேரத்தில் வருகிறதில்லையென்று கண்டு உறுதி செய்துகொண்டு, சற்று மனம்தேறியிருந் தேன். இனி அவர்கள் கடல்நீர் வற்றும் நேரத்தில் வந்து இறங்கியிருப்பதாக அறிந்தாலன்றி, நீர்ப்பெருக்கு வேளை யில் அச்சமின்றி வெளியிற் போகலாம் என்று என் அறி விற்கு எட்டியது. பின்பு நான் பெருக்கு வேளையில் கவலை யற்று வயலுக்குப்போய், அறுப்பு அறுத்தேன்.

நான் எண்ணியவாறே நடந்தது. கடல்நீர் மேற்கு முக மாய்ப் பெருகத் தொடங்கிய உடனே அவர்கள் எல்லாரும், ஓடம் ஏறி, தண்டு வலித்துச் சென்றார்கள். ஓடம் ஏற ஒரு மணி, ஒன்றரை மணி நேரத்திற்கு முன் அவர்கள் கூத்தா டத் தொடங்கினார்கள். அவர்களுடைய உடல் அசைவுகள் எல்லாவற்றையும் என்னுடைய தொலை நோக்காடியால் எளிதில் கண்டேன். அவர்கள் பிறந்த மேனியாய் நின்ற நிலை என் கண்ணுக்குத் தப்பவில்லை. ஆயினும் அவர்கள் ஆடவரா மகளிரா என்று துணியக் கூடவில்லை.

**வேடர் சென்ற பிறகு அவ்விடத்தைக் காணுதல்**

அவர்கள் ஓடம் ஏறிச் சென்றதைக் கண்டவுடன், நான் என்னுடைய இரண்டு தோள்களிலும் பெருந்துப்பாக்கிகளும், இடுப்புப்பட்டையில் கைத் துப்பாக்கிகள் இரண்டும் உருவின பெருங்கத்தி ஒன்றும் வைத்துக் கொண்டு, முதலில் வேடர் குறிப்புத்தோன்றிய குன்றுக்கு மிக விரைவாய்ச் சென்றேன். போர்க்கருவிகள் எடுத்துக் கொண்டு சென்றதனால், அவ்விடத்தை அடைய இரண்டு மணி நேரம் சென்றது. அவ்விடத்தை அடைந்தபொழுது அங்கே முன் கண்ட ஓடங்களன்றி, மேலும் மூன்று ஓடங்கள் வந்திருந்ததாக அறிந்தேன். கடலில் சற்றுத்தொலைவில் கூர்ந்து பார்த்தபோது, அவ்வோடங்கள் அனைத்தும் ஒன்றாய்ச் சேர்ந்து, பெருநிலப் பகுதியின் கரைக்கு நேர்முகமாகச் சென்றது கண்டேன்.

கரையில் மனிதர் உடற்குருதியும், எலும்புகளும், வேடர் தின்று கழித்துவிட்ட இறைச்சித் துண்டங்களும், இருப்பது கண்டு அவர்கள் செய்த கொலைத் தொழிலை நினைத்துப் பதறி நடுங்கிக் கலங்கினேன். மக்கள் ஊனைச் சுவைத்துத் தின்று களிகூர்ந்து ஆடிய அக்கொடியோரை எண்ணியபோது எனக்கு மிகுந்த சினம் உண்டாயிற்று. மறுமுறை அவர்கள் எத்தனை பேர் திரண்டுவரினும், அக்கொடியோரைக் கண்ட உடனே கொன்று அழிக்கவேண்டும் என்று முடிவு செய்தேன். அன்று முதல் பதினைந்து திங்கள் வரையில் நான் அவர்களைக் காணவில்லை. அவர்களுடைய அடிச்சுவடுகளையாவது வேறு அடையாளங்களையாவது நான் காணவே இல்லை. அதனால், அவ்வேடர் இத்தீவிற்கு எப்பொழுதேனும் ஒருவேளை வருவது ஒழிய, அடுத்து அடுத்து வருவதில்லை என்று அறிந்தேன். மழைக்காலத்தில் அவர்கள் வெளிக்கிளம்பார்; அல்லது இத்துணைத் தொலைவுப் பயணம் செய்யார்கள். அவர்களை நான் காணாதிருந்தேன் ஆயினும், நான் நினையாத வேளையில் விரைவில் வந்து, என்னைப் பிடித்துக்கொள்வார்கள் என்று, இராப்பகல் எப்பொழுதும் அஞ்சித் துன்பமுற்

றேன். துன்பங்களைத் துய்ப்பதைவிட, அத்துன்பங்கள் வரும் என்று எண்ணித் தடுமாறுவதே அதிக மனவருத்தத்தை விளைவிக்கும் என்று என்னைப் பொறுத்தவரையில் கண்கூடாய்க் கண்டேன்.

### வேடரைக் கொல்ல நினைத்தல்

மேற் குறித்த பதினைந்து திங்கள் வரையில் அவர்களைக் கொன்று அழிக்கவேண்டும் என்னும் கருத்தே என் உள்ளத்தில் உறுதிபெற்றிருந்தது. பெரும்பாலும் பயனுள்ள செயல்களில் மனத்தைச் செலுத்தாமல் இனி அவர்கள் முன்போல் இரண்டு கூட்டங்களாய்ப் பிரிந்து தம்முள் பொருது நிற்பார்களானால், அவர்களைத் தப்பவிடாமல் கொன்று ஒழிக்கத்தக்க வழி வகை என்ன என்று ஆராய்ந்து, நினைத்துக்கொண்டிருந்தேன். ஒருகால் அவர்களுள் ஒரு கூட்டத்தைக் கொன்றாலும் அவர்கள் அவ்வளவோடு இத்தீவிற்கு வருதல் ஒழிந்து போகாது. மறுநாளோ அல்லது அடுத்த வாரத்திலோ, திங்களிலோ வருவார்கள். அவர்கள் வர வர நானும் அவர்களைக் கொன்று ஒழித்துவருவேன். ஆகவே, மனிதரைக் கொன்று தின்னும் அவர்களுக்கும், அவர்களைக் கொல்லும் எனக்கும் வேறுபாடு என்ன? இருதிறத்தாரும் கொலைக் குற்றவாளிகளே ஆவோம். ஒரு வேளை அவர்களை விட நானே முதிர்ந்த தீயோன் ஆவேன் என்று கருதிக் கொலைத் தொழிலை அடியோடு மறந்துவிட்டேன்.

### அஞ்சி அஞ்சி வாழ்தல்

உயிர்களிடத்துச் சிறிதும் இரக்கமில்லாத அந்தக் கொடியோர் என்னை இன்றைக்கோ அல்லது நாளைக்கோ, இன்னும் சில நாட்கள் சென்றபிறகோ பிடித்துக்கொன்று தின்பார்கள் என்று எப்பொழுதும் எண்ணிக் கலங்கித் திகைத்திருந்தேன். வெளியிற் புறப்படும் வேளை தோறும் அவ்வேடர் எதிரில் வருவர் என்று எண்ணி, நான்கு திசையிலும் கருத்தாய்ப் பார்த்தவண்ணமாய்ச் சென்றேன். இப்படி இருக்கும் காலத்தில், காட்டு ஆடுகளைப் பிடித்து

வளர்த்துக்கொண்டு வந்தது புண்பட்ட என் மனத்துக்கு மிகுந்த ஆறுதலாய் இருந்தது. துப்பாக்கி வெடிக்கும் ஒலியைக் கேட்டு அவர்கள் தேடிவராதபடி, வேடர் இறங்கும் கரைப்பக்கத்தில் நான் துப்பாக்கி வெடிக்கத் துணியவில்லை. முதல்முறை வெடி ஒலிகேட்டு அவர்கள் வெருண்டு ஓடித்தப்பினாலும், பின்பு சிலநாட்களில் இருநூறு முந்நூறு ஓடங்களோடு அவர்கள் இக்கரையில் வந்து சேர்ந்தால், என்னுடைய நிலை இரங்கத் தக்கதாகுமே என்று ஆழ்ந்து நினைத்து, எக்காரணம் கொண்டும் நான் அத்தீவில் துப்பாக்கியால் சுடுவது இல்லை என்று உறுதி செய்து கொண்டேன்.

### வேடருடன் போர்

பின்பு அவர்களை இத்தீவிற் காணப் பதினைந்து திங்கள் சென்றன. கண்ட நிகழ்ச்சி வரலாற்றை விரைவில் கூறுவேன். ஒருவேளை இதற்கிடையில் அவர்கள் இரண்டொருமுறை வந்து போயிருக்கவும் கூடும். வந்திருப்பார்களானாலும் தங்கினதாகத் தெரியவில்லை; அல்லது நான் அவர்கள் ஆரவாரத்தைக் கேட்கவில்லை. நான் இத்தீவை அடைந்த இருபத்து நான்காவது ஆண்டு மேத் திங்களில் எனக்கும் அவர்களுக்கும் வியத்தகு போர் நடந்தது. அதைப்பற்றிக் கதைத் தொடர்ச்சியின்போது உரிய இடத்தில் கூறுகின்றேன்.

### கடலிற் பீரங்கி வெடி கேட்டது

மேலே குறித்த பதினைந்து பதினாறு திங்கள் காலத்தில் எனக்கு உண்டான கவலை இவ்வளவு என்றில்லை. நான் ஒருபொழுதும் அயர்ந்து தூங்கவில்லை. பெரும்பாலும் அச்சந்தரும் கனவுகள் கண்டேன். சில வேளைகளில் கனாக்கண்டு, பயந்து துடித்துப் பதைத்து எழுந்ததும் உண்டு. பகலில் என் மனம் சொல்வதற்கரிய துன்பத்தில் மூழ்கியது. இரவில் வேடரைக் கொல்வதாகவும், கொல்வதற்குக் காரணங்கள் இவை இவை என்றும் கனாக்கண்டேன். இஃது இவ்வாறு இருக்க, மேத் திங்கள் 16-ஆம்

நாள் பகல் முழுதும் பெரும் புயற்காற்று அடித்தது. அன்றிரவு மேகம் மின்னி முழங்கிக் கடும்புயல் அடித்தது. அதன் காரணம் யாது என்று அறியேன். நான் மறை நூலைப் படித்து என்னுடைய அப்பொழுதைய நிலையைப் பற்றி ஆழ்ந்த நினைவோடு இருக்கும்பொழுது, கடலில் துப்பாக்கி வெடித்த ஒலி கேட்டுத் திடுக்கிட்டேன்.

இவ்வெடியொலி கேட்டதனால் எனக்குண்டான மனக்கிளர்ச்சி ஒருபுறம்; முன்பு வேடரைப்பற்றி எனக்கு உண்டான திகில் ஒருபுறம். இப்பொழுது எனக்குப் புதுமையான நினைவுகள் உண்டாயின. மிக விரைந்து எழுந்து நொடிப்பொழுதிலே ஏணியைச் சார்த்திக் குன்றின் உச்சியில் ஏறிக் கடலைப் பார்த்தேன். துப்பாக்கி திரிவாய் மருந்தில் நெருப்புப்பற்றி மினுக்கிய ஒளி தோன்றிற்று. சில நொடிப் பொழுதிற்குள் மறுபடியும் ஒரு வெடி ஒலி கேட்டது. அது, முன்பு கடலில் நீரோட்டம் எனது ஓடத்தை வேகமாய் அடித்துக்கொண்டு போய்விட்ட இடத்தில் பிறந்ததாகத் தோன்றிற்று.

**கடலில் ஒரு கப்பல் காணப்பட்டது**

கடலில் ஏதோ ஒரு கப்பல் துன்பமுற்று நிற்பதாகவும், அதில் உள்ளவர்கள் சற்றுத் தொலைவில் நிற்கும் மற்றொரு கப்பலுக்குத் தங்கள் உயிரிழப்புப் பெருந்துன்பத்தைக் குறிப்பித்து, உற்ற வேளையில் உதவிகேட்கும் அடையாளமாக இவ்வெடி ஒலி யெழுப்பியதாகவும், உடனே நினைத்தேன். அவர்களுக்கு உதவி செய்யும் வன்மை எனக்கு இல்லாதிருப்பினும், அவர்களால் எனக்கு ஏதாயினும் நன்மை உண்டாகக் கூடும் என்று எண்ணினேன். அவ்வேளையில் எனக்கு ஓரளவு மனவுறுதி உண்டாகியது. அருகில் உள்ள காய்ந்த விறகுக் கட்டைகள் எல்லாவற்றையும், விரைவாய் எடுத்துக்கொண்டுபோய், மலைமேற் பெருங் குவியலாய் அடுக்கி, நெருப்பு மூட்டினேன். விறகு ஈரப்பசுமையின்றி நன்றாகக் காய்ந்திருந்ததனால், எளிதில் நெருப்புப்பற்றிக் கொழுந்துவிட்டு எரிந்தது.

காற்றுவலிவோடு அடித்தும், நெருப்புச் சிதறுமல் நின்று எரிந்தது. அதனுல் கரைக்கு அருகில் கப்பல் நிற்பது உண்மையானுல், கடலோடிகள், இவ்வொளியை ஐயமின்றிக் காண்பார்கள் என்று நினைத்தேன். நெருப்பு வளர்ந்து கொழுந்துவிட்டு எரிந்தபோது மேலும் ஒரு வெடி ஒலி கேட்டது. அதன்பிறகு மேலும் தொடர்ச்சியாகப் பல ஒலி கேட்டதனுல், கடலோடிகள் இந்த நெருப்பு ஒளியைக் கண்டு கொண்டார்கள் என்று என் மனம் எண்ணியது. பொழுதுவிடியும் வரையிலும், அவிந்து போக விடாமல் விறகிட்டுத் தீ வளர்த்துக்கொண்டிருந்தேன். கதிரவன் தோன்றி வானத்தில் மப்பு நீங்கியபின், தீவின் கீழ்த் திசையில் கடலில் நெடுந்தொலேவில் ஏதோ ஒரு பொருள் என் கண்ணுக்குப் புலப்பட்டது. அது கப்பலின் பாயோ? அதன் அடிப்பாகமோ? உறுதியாக இன்னதென்று, தெரியவில்லே: தொலேநோக்காடிக்கும் தோன்றவில்லே. அது மிகப் பெரும் தொலேவில் இருந்ததனுலும், வானத்தில் மப்பு நீங்கி, வெளுப்பு ஏறுததனுலும், அதைப் பற்றி இவ்வளவு மயக்கமும் ஐயமும் உண்டாயின.

## பார்த்தொடர் தாக்கி, கப்பல் பழுதுற்றது

அன்று பகல் முழுதும் அடிக்கடி பார்த்தேன். நான் கண்ட பொருள் நின்ற இடத்தைவிட்டுப் பெயராதிருந்ததனுல், கப்பல் நங்கூரம் இட்டு நிற்கிறதென்று முடிவு செய்தேன். ஆயினும் எனக்கு மனம் நிறைவு அடையவில்லே. அஃது இன்னது என்று திட்டமாய் அறிய விரும்பி, துப்பாக்கி எடுத்துக்கொண்டு, தீவின் தென்கரையில் முன்பு நீரோட்டம் என்னேத் தள்ளிக்கொண்டு போய் விட்ட, ஒதுக்குப் பாறைத் தொடர் இருக்குமிடத்திற்கு விரைந்து ஓடினேன். அவ்விடத்திற் சேருமுன் வானம் தூய்மையாய் வெளுத்தது. கண்ணெளி பாயர்த மிகுந்த இருளடர்ந்த இரவு நேரத்தில் கப்பல் ஒன்று பார் தட்டிப் பழுதுபட்டிருந்ததைக் கண்டு வருந்தினேன். அது தான் நான் ஓடம் ஏறிப்போனபொழுது கண்ட பார்

வேகமாய் ஓடும் நீர் அதில் மடங்கித் திரும்பியதனுல் எனக்கு முன்பு நேரிட்ட சொல்வதற்கரிய பெருந் துன்பத்தி னின்றும் மீட்சி பெற்றேன் என்று முன்பு ஓரிடத்தில் கூறி யிருக்கின்றேன்.

**கப்பல் உடைந்ததற்குக் காரணம் என்ன?**

ஆகவே, மேற்கூறிய பாறைத் தொடரால் எனக்கு உயிர்ப் பாதுகாப்பும், அம்மரக்கலத்தில் இருந்தவர்களுக்கு உயிர் இழப்பும் உண்டாயின. இரவு இருளடர்ந்து கொண் டற் காற்று வலிவோடு அடித்ததனுல், நீரில் மறைந்திருந்த பார்த் தொடரைக் காணுமல், கப்பலை அவர்கள் செலுத்த, அது பாறைத் தொடரில் தாக்கி ஏறியதாய் இருக்க வேண்டும். இத்தீவை அவர்கள் கண்டிருக்க மாட்டார்கள். கண்டிருப்பார்களாஞல், ஓடம் ஏறிக்கரை அடைந்து தப்பித்துக் கொண்டிருப்பார்கள். முதன்மையாய் நான் வளர்த்த பெருநெருப்பு வெளிச்சத்தைக் கண்டபொழுது, உதவி செய்யக் கேட்கும் அடையாளமாகிய வெடி வெடித்த தைக் குறித்து நான் எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி னேன். வெளிச்சத்தைக் கண்டவுடன் திடீரென ஓடமேறிக் கரைபிடிக்க விரைந்து செலுத்திக்கொண்டு வரும்பொழுது, பொங்கிப் புரளும் அலைக்கிளர்ச்சியால், ஓடம் கவிழ்ந்து முழுகி இறந்தார்களோ என்றும் அலை வளர்ந்து தாக்க அதனுல் ஓடம் சிதறுண்டு உடைந்ததோ என்றும் அவர் களை வலியத் தங்கள் ஓடத்தைக் கடலில் வீசினுர்களோ என்றும் அண்மையில் நின்ற வேறு கப்பற்காரர்கள் வெடி யொலி கேட்டு அவர்களைத் தங்கள் மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டு போனுர்களோ என்றும் ஓடத்தில் இறங்கிப் போகும்பொழுது, ஓடம் நீரோட்டத் திசை முகமாய்ச் சென்று ஆழமான கடலில் இறங்கி அழிந்து போயிற்ரே என்றும் அவர்கள் அங்கே பசித்துன்பம் நீக்க வழியின்றி வருந்தி, ஒருவரையொருவர் கொன்று உண்ணும் கொடிய அறிவு பெற்ருேர்களோ என்றும் பலவாறு எண்ணித் தடுமாறினேன்.

## துன்பத்திலும் இன்பம் கொடுப்பவர் இறைவனே !

இவைகளெல்லாம் என் மனக்கருத்தேயன்றி, ஒன்றேனும் உறுதியன்று. அவர்கள் படும்துன்பத்தைக் கண்டு, வருந்துவ தொழிய மற்றைப்படி அவர்களுக்கு உதவி செய்யும் வன்மை எனக்கு ஏது? இக்கரைக்கு அருகில் உடைந்து பாழ்பட்ட இரண்டு கப்பல்களிலிருந்த மக்கள் பலரில் நான் ஒருவன் தவிர மற்றெவரும் கரையேறவில்லையே? என்னைமட்டும் கடவுள் இந்தப் பாழ்ந்தீவில் தனியே எல்லாவகையான இன்பங்களும் பெற்று வாழ்ந்திருக்கச் செய்தார் அன்றோ? அதுபற்றி நான் அவருடைய திருப்பெயரை மேலும் மேலும், பரிவு கூர்ந்து பாடிப் பரவ வேண்டும் என்று எண்ணி, இரவில் உடைந்த கப்பலைக் கண்டு நல்லறிவு பெற்றேன். அன்றியும் எவ்வகையான தாழ்ந்த நிலையில் இருப்பவர்களும், துன்பநிலை அடைந்து வருந்துவோரும், அவரவர் நிலைமைக்கேற்க ஏதாயினும் நல்வரங்களை இறைவன் வழியாய்ப் பெற்றுத் துய்க்காமல் இருப்பதும் இல்லை. தம்மினும் மிக்க தாழ்ந்த நிலையில் இருந்து வருந்துவோரைக் காணுதிருப்பதும் இல்லை. உயர்வு தாழ்வு, இன்பம் துன்பம் எல்லாம் ஒருவர் பக்கமே இருக்கும் என்பது பொருந்துமா?

## உடைந்துபோன கப்பலில் இருந்தவர்கள் எங்கே ?

உடைந்துபோன கப்பலில் இருந்தவர்களில் ஒருவனாவது தப்பிப் பிழைத்திருப்பதாய் நினைப்பதற்கும் இடம் இல்லாதிருந்தது. பக்கத்தில் வேறு மரக்கலம் நின்று உற்ற வேளையில் நெருங்கிச் சென்று, அவர்களை ஏற்றிக் கொண்டு போஒற் போயிருக்கலாமே தவிர, வேறு வகையில் அவர்கள் உயிரோடு இருப்பதாக எண்ணுவதற்கு இடம் இல்லை. வேறு கப்பல் வந்து அவர்களுக்கு உதவிற்று என்று கொள்வதற்கு உறுதி என்ன? வேறு மரக்கலத்தின் அச்சு அடையாளம் சிறிது அளவும் எனக்குத் தோன்றவில்லை.

## துணை மனிதர் வேண்டும் என ஆவல் கொண்டேன்

சில வேளை எனக்கு உண்டான வியக்கத்தக்க ஆவலின் அளவைக் கூற வார்த்தைகள் இல்லை. ஆ! கடலோடிகளில் ஒருவன் மட்டுமேனும் தப்பிப் பிழைத்து என்னிடத்திற்கு வருவானாயின், எனக்கும் ஒரு தோழன் இருக்கிறான், நானும் ஒருவனுடன் பழகுகின்றேன் என மகிழ்ந்து, அவனுடன் உரையாடி இன்புற்று வாழ்வேன் அன்றோ! என்ற எண்ணம் உண்டாயிற்று. நான் இத் தீவிற் சேர்ந்து, தனியாய் வாழத் தொடங்கி இத்தனை ஆண்டுகள் சென்றும், மனிதர் துணை வேண்டும் என்று, இதற்குமுன் எனக்கு இவ்வித அடங்கா விருப்பம் உண்டாகவில்லை. மனிதர் துணை எனக்கு இல்லாததுபற்றி நான் மாறாத்துயர் அடைந்ததும் இல்லை.

வேட்கை ஊற்றுக்கண் போன்றது. கட்புலனாய ஒரு பொருளோ புலனாகாப் பொருளோ அவ்வூற்றுக் கண்ணைத் திறக்கிறது. நாம் அளவற்ற ஆவலுடன் விரும்பும் பொருள் கண்ணுக்கு எதிரே தோன்றாதிருப்பினும் நினைவுக்கு ஒருவாறு தோற்றமளிக்கும். பொங்கும் வேட்கையெனும் ஊற்றுப் பெருக்கு மனத்தை அடித்துச் செல்கிறது. மனம் தான் விரும்பின பொருளை விடாப்பிடியாகப் பிடித்து, துய்க்கப் பார்க்கும்; விரும்பின பொருள் எதிர்ப்படாதிருந்தால் மீளாத் துயரடைந்து வருந்தும்.

ஒருவனாவது பிழைத்திருப்பானாகில், அஃது எனக்குப் பெரும் பேறாகும் என்று பல தடவை அடுத்தடுத்துக்கூறி வருந்தினேன். என்னுடைய அவாவின் கிளர்ச்சியினால் இச்சொற்களைச் சொன்னபொழுது, விரல்கள் உள்ளங்கையில் அழுந்தும்படி இரு கைகளையும் இறுக்கிப் பிடித்துப் பிசைந்தேன். அவ்வேளையில் ஏதேனும் நுண் பொருள் என் கைக்குள் இருந்தால், நான் அறியாவண்ணம் அது கசங்கித் தூளாய்ப் போயிருக்கும். பல்லுடன் பல்கிட்டி இறுக மூடிய வாயைச் சற்றுநேர மட்டும் திறக்க முடியாதிருந்தது.

உயிர்களின் உடல்நிலை பண்பு முதலியவற்றை உணர்த்தும் நூல்களைக் கற்றறிந்தவர்க்கன்றி எனக்கு மேற்கூறிய பண்பு எவ்வாறு வந்தது என்று தெரியாது. நான் அடைந்த நிலையைக் கூறினேன். அஃது எனக்கு மிகவும் வியப்பாய் இருந்தது. அதற்குக் காரணம் இன்னதென்று அறியேன். என்னுடைய அவாவின் பெருக்கத்தினாலும், உள்ளத்தின் இடைவிடா நினைப்பினாலும், என்னைப்போலும் கிறித்தவ நெறியாளன் ஒருவன் இவ்விடத்திற்கு வந்து இருக்கின்றான் எனவும், நாங்கள் இருவரும் கலந்து உரையாடி, உறவு கொண்டு உவப்புறுவதாகவும் நெஞ்சிற் பழுத்த எண்ணம் உண்டாயிற்று.

**சிறுவன் ஒருவனுடைய உடல் கடலில் மிதந்து வந்தது.**

கரும்பை நினைத்து விரலைக் கடித்தால் பயனென்ன? தித்திக்குமா? முடியாத செயல் என்றும் முடியாது. நேரிற் கண்டு கலந்து பேசி மகிழும் நல் வரம் எனக்கு இல்லை; அல்லது அவர்களுக்கு அப்பேறு இல்லை; அல்லது இருதிறத்தாருக்கும் அப்பேறு இல்லை. நான் இத்தீவினின்று புறப்பட்டு வெளியேறும் வரையில் அக் கடலோடிகள் உடைந்த கப்பலினின்று தப்பினார்களா என்று அறியவில்லை. சிலநாட்கள் சென்றபின் ஒரே ஒரு சிறுவனுடைய உடல் கப்பல் உடைந்த இடத்திற்குக் கிட்டிய தீவின் முடிவில் கரையில் ஒதுங்கியது கண்டேன். கடலோடிகள் அணியும் மார்புச் சட்டையும், முழந்தாள் வரையில் உள்ள சணல் நூல் கால் உறையும், சணல் நூலால் நெய்யப்பட்ட உள்சட்டை ஒன்றும் தவிர வேறு ஆடைகளை அந்த உயிரற்ற உடலிற் காணவில்லை. அவன் எந்த நாட்டான், எந்த இனத்தான் என்பனவற்றை அறிவதற்குரிய ஒரு குறிப்பும் அங்கு இல்லை. சட்டையினுள் நாணயம் இரண்டும், புகைபிடிக்கும் சுங்கான் ஒன்றும் இருந்தன. அந்த நாணயத்தைக் காட்டிலும், சுங்கான் எனக்குப் பதின்மடங்கு அருமையுடையதாய் இருந்தது.

### உடைந்த கப்பலைப் பார்க்க ஓடமேறிச் சென்றேன்

காற்றும் கடலும் அடங்கி அமைதியாய் இருந்த தனால், எனக்கு உதவும் பொருள் ஏதாயினும் அகப்படும் என்றும், கடலோடிகளில் எவனாவது பிழைத்திருப்பது கண்டால், நான் அவனைக் கரையேற்றி, வாழ்நாள் முழுதும் அவனுடன் பழகி, மகிழ்ந்து வாழலாம் என்றும் நினைத்து, என்னுடைய ஓடத்தில் ஏறிப்போய் உடைந்த கப்பலைப் பார்க்கப் பேரவாக் கொண்டேன். ஓடமேறிப் போகவேண்டும் என்னும் அவா என் உள்ளத்தில் நாளுக்குநாள் வளர்ந்து நிறைந்தது. அதனால் இரவு பகல் எப்பொழுதும் அந்த ஒரு நினைவு தவிர வேறு நினைவு அற்றிருந்தேன். இந்த நினைவு கடவுள் அருளால் எனக்கு உண்டானது என்றும், அதற்கு இடம் கொடாதிருப்பது குற்றம் என்றும், திருவுள்ளத்தின் செயலால் வருவது வருக என்றும் எண்ணி ஓடம் ஏறிப் போக முடிவு செய்தேன்.

### ஓடத்தில் உணவுப் பொருள்களை ஏற்றுதல்

என் மனத்தில் தோன்றிய எண்ணம் சிறிதும் குறையவில்லை. நான் வீட்டுக்கு விரைந்து போய்ப் பயணத்திற்குரிய முன்னேற்பாடுகள் எல்லாம் செய்து, ரொட்டி, ஒரு குடம் தூய நீர், ஓடம் செலுத்துவதற்குரிய திசையறி கருவி, ஒரு புட்டி ரம் சாராயம், (இதில் செலவழிந்தது போகப் பின்னும் மிகுதியாக வைத்திருந்தேன்) ஒரு கூடை கொடி முந்திரிப்பழ வற்றல், மேலும் இன்றியமையாத பொருள்வகை—இவை யாவும் எடுத்துக்கொண்டு, ஓடம் இருந்த கரைக்குப்போய், அதில் ஊறியிருந்த நீரை இறைத்தபின், அதைக் கடலில் இறக்கி, கொண்டு போன பொருள்களை யெல்லாம் அதில் ஏற்றி அடுக்கிவைத்தேன். மேலும் வேண்டிய பொருள்களை எடுத்து வருவதற்காக வீட்டுக்குத் திரும்பினேன். இரண்டாவது தடவை நான் மெய் வெயர்க்க வருந்தி எடுத்துக்கொண்டு போய் ஓடத்தில் ஏற்றிய பொருள்கள் :—ஒரு பை அரிசி, வெயிலுக்குப் பிடிக்கக் குடை, ஒரு குடம் தண்ணீர், சிறு வாற்கோதுமை

ரொட்டி இருபத்து நான்கு, வெள்ளாட்டுப்பால் ஒரு புட்டி, பாலடைக் கட்டி ஒன்று ஆகிய இவைகளே யாகும்.

### ஓடத்தைக் கடலிற் செலுத்துதல்

மனவிரைவு போல விரைவாகப் போய்ச் சேருவதற்காகக் கடவுளை வாழ்த்தி வணங்கினேன். பின்பு ஓடம் ஏறிக் கரையோரமாய்த் தண்டு வலித்துக் கொண்டு போய்த் தீவின் வடகிழக்கு முடிவிற் சேர்ந்தேன். அங்கிருந்து ஆழ்ந்த கடலில் ஓடத்தைத் திருப்பிச் செலுத்த என் மனம் துணியவில்லை. சற்றுத் தொலைவில் தீவின் இருபக்கத்திலும் நீரோட்டங்களைக் கண்டு, எனக்கு முன்பு ஒரு முறை நேரிட்ட உயிரிழப்புத் துன்பத்தை நினைத்துக் கலங்கி மனத்தளர்ச்சி யடைந்தேன். அவ்விரு நீரோட்டங்களுள் ஏதாயினும் ஒன்றில் எனது ஓடம் சிக்கினால் பெருங் கடலில் தீவின் கரை மறையும்படி எட்டாத தொலைவில் விரைவாய்த் தள்ளிக்கொண்டு போகப்படும் என்றும், விரைவில் காற்றுத் தோன்றி வலிவுற்றால், என்னுடைய சிற்றோடம் கவிழ்ந்து நான் முழுகி இறந்து போவேன் என்றும் நினைத்து ஏங்கினேன்.

### ஓடத்தைக் கரையிற் சேர்த்தேன்

இந்த நினைவுகளால் என் மனம் வருந்தியது. அதனால், துணிந்து செய்யத் தொடங்கிய செயலை முடியாதென்று நிறுத்திவிட்டு, கரை ஒதுக்கில் ஓடத்தை ஒதுக்கி நிறுத்திக் கரையில் இறங்கி, அங்கு உள்ள மேட்டு நிலத்தில் உட்கார்ந்தேன். **"கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை"** என்னும் பழமொழிப்படி கடற்பயணம் செய்வதற்குப் பேராவாவும், அதில் நேரிடும் உயிர்த்துன்பங்களை நினைத்து அச்சமும் உள்ளவனாய் இருந்தேன். இவ்வண்ணம் ஆழ்ந்த நினைவோடு இருந்தபோது, நீரோட்டத்திசை மாறியதும், நீர்ப் பெருக்கு வந்ததும் கண்டேன். நீர் வற்றுமளவும் ஓடமேறிச் செல்வதற்கு இயலாது. உயர்ந்த மேட்டு நிலத்தில் ஏறி நின்று பார்த்தால், கடல் பெருகத் தொடங்

இப்பொழுது நீர் ஓடிய திசை இன்னதென்று அறியலாம் என்றும், ஓடத்தை விரைவில் கரையில் ஒதுக்கிவிடத்தக்க நீரோட்டம் இன்னதென்று பார்த்து அறியலாம் என்றும் நினைத்தேன். இவ்வாறு நினைத்துக் கொண்டு இருக்கும் பொழுது இரண்டு திசையிலும் கடலை நெடுந்தூரம் வரையில் தடையின்றிக் காணத்தக்க சிறு குன்று ஒன்று, என் கண்ணுக்கு எதிர்ப்பட்டது. அதில் ஏறி நின்று பார்த்த பொழுது, நீரோடும் திசைகளின் குறிப்பையும், திரும்பி வரும்பொழுது இன்ன திசைமுகமாய் ஓடத்தைச் செலுத்த வேண்டும் என்னும் குறிப்பையும் கண்கூடாய்க் கண்டேன். மேலும் கடல் வற்றும்பொழுது, நீர் ஓடத் தொடங்குமிடம் தீவின் தென்முனைக்கு அருகில் நெருங்கியிருந்தது என்று கண்டு கடல் பெருகும் பொழுது வட பாகத்தின் கரைக்கு அருகில் நீர் ஓடும் இடக்குறிப்பு இருக்குமென்று நினைத்தேன். திரும்பி வரும்பொழுது தீவின் வட பக்கத்தைச் சார்ந்து ஓடத்தைச் செலுத்தினால், இடையூறின்றிக் கரைசேரலாம் என்றும் அறிந்தேன்.

### மறுபடியும் ஓடம் செலுத்திக் கப்பலை அடைந்தேன்

நான் கண்டறிந்தவைகளால் எனது மயக்கம் தெளிந்து, மனம் தேறிற்று. மறுநாட் காலையில் நீரோடும் வேளை பார்த்துப், பயணப்பட நினைத்து, அன்றிரவு, கப்பற் சேவகர் அணியும் பெரிய நெடுஞ்சட்டை அணிந்து, ஓடத்தில் படுத்துத் தூங்கிவிட்டுப் பின்பு அதிகாலையில் புறப்பட்டேன். முதலில் நேர் வடக்காகக் கடலிற் சிறிது சேய்மையிற் சென்றேன். கிழக்கு முகமாய் ஓடிய நீரோட்டத்தில் இறங்கியபொழுது, ஓடம் மிக்க விரைவாகச் சென்றது. முன்பு தெற்குமுகமாய் ஓடிய நீர்ப்பெருக்கில் சேர்ந்த பொழுது, என்னை மீறி ஓடம் மிக்க விரைவாய்ச் சென்றதே; இப்பொழுது அவ்வளவு விரைவாய் ஓடவில்லை. மிக்க வலியோடு தண்டு வலித்து, உடைந்த கப்பலுக்கு நேரே ஓடத்தைச் செலுத்தி, இரண்டு மணி நேரத்துக்குள் போய்ச் சேர்ந்தேன்.

**கப்பலில் இருந்த பொருள்கள் எவை ?**

அஃது உளமுருக்கும் கண்ணராவிக் காட்சியாகும். ஸ்பானியக் கட்டுக்கோப்பு உடையதாக இருந்த அக்கப்பல் இரண்டு பாறைகளின் இடையில் அகப்பட்டு நெருக்குண்டது. அதன் பின் அணி எறிதிரை தாக்கிச் சிறு சிறு துண்டுகளாய் உடைந்து போயிற்று. பாறை தட்டிய அதன் முன் அணி ,விரைவாய்த் தாக்கிய அதிர்ச்சியினால் பழுது பட்டிருந்தது. தலைப் பாய்மரமும் முற்பாய் மரமும் அடியோடு முறிந்து போய் இருந்தன. அணியின் பாய் மரம் பழுது இன்றி வன்மையுற்றிருந்தது. நாவாய்த் தலையும் அதன் இரு பக்கமும் உறுதியாய் இருந்தன. கப்பலருகில் நெருங்கிப்போன பொழுது, அதில் இருந்த நாய் ஒன்று என்னைக் கண்டு, இரங்கிக் குலைத்து அழுதது. நான் அதைக் கைகாட்டிக் குறிப்பினால் வரவழைத்தேன். அது கடலிற் குதித்து நீந்தி வந்தது. நான் அதைத் தூக்கி ஓடத்தில் ஏற்றிப், பசி தாகத்தால் வாடி மெலிந்து குற்றுயிராய்க் கிடந்தது கண்டு, முதலில், ஒரு ரொட்டி எடுத்துப் போட்டேன். பதினைந்து நாள் வரையில் பட்டினியிருந்து பனியில் விறைத்த ஓநாயைப் போல அடங்காத ஆவலுடன், அஃது அந்த ரொட்டியைப் பரபர என்று தின்றது. பிறகு எளிய அந்த நாய் சிறிது அளவு தண்ணீர் குடிக்கச் செய்தேன். அதற்கு விருப்பமான அளவு குடிக்க விடுவேனாகில் விலாப்புடைக்கக் குடித்து அதன் வயிறு வெடித்துப் போகும் என்பதற்கு ஐயமில்லை. அந்த நாய்க்கு நீர் வேட்கை அவ்வளவு மிகுந்திருந்தது.

பிறகு கப்பலில் ஏறிப் பார்த்தபொழுது, மடைப் பள்ளி அறையில் இருவருடைய உடல்கள் ஒன்றை யொன்று இறுகத் தழுவியபடி நீரில் மிதந்தன. மரக்கலம் பாறை தட்டியபொழுது புயல் அடித்ததனால், அலை பொங்கிப் புரண்டு, கப்பலில் நீர் இறைத்த வண்ணமாய் இருக்க, அங்கிருந்த கப்பலாட்கள் நீரில் மூழ்கித் திக்குமுக்காடி இறந்தார்கள் போலும். அக் கப்பலில் ஏறியவர்களில் உயிர் தப்பிப் பிழைத்திருந்தது நாய் ஒன்று மட்டுமே

யாகும். அங்கிருந்த பொருள்கள் எல்லாம் நீர் ஊறிப் பழுதுபட்டுப் போயின. அடியில் சாராயப் பீப்பாக்கள் சில இருந்தன. அது கொடி முந்திரிச்சாறோ? பிராந்தி என்னும் சாராயமோ அறியேன். கடல் வற்றும் நேரத்தில் வெள்ளம் வடிந்தோடிய பின், அப் பீப்பாக்களை நன்றாகக் கண்டேன். மிகப் பெரியவைகளாக இருந்தமையால், அவைகளைப் பெயர்க்க முடியவில்லை. கப்பற்காரர்களுடைய பெட்டிகள் பலவற்றைக் கண்டு, இரண்டை எடுத்து ஓடத்தில் ஏற்றினேன். உள்ளிருந்த பொருள் இன்னதென்று அறிவதற்கு நான் திறந்து பார்க்கவில்லை.

பின்பு அந்தப் பெட்டிகளைத் திறந்து, அவற்றில் இருந்த பொருள்களைக் கண்டு, உடைந்துபோன அக் கப்பலில் மிகுந்த செல்வப் பொருள்கள் ஏற்றப்பட்டிருந்தன என நினைத்தேன். அந்தக் கப்பலின் பின் பகுதி பார் தட்டிப் பழுது இன்றிப் பொறுத்து நின்று, முன் பகுதி உடைந்துபோயிருக்குமானால், இந்தப் பயணத்தில் திரண்ட செல்வம் என் கையிற் கிடைக்கும் என்பதற்கு ஐயம்இல்லை. கப்பல் திரும்பி நின்ற திசை நிலையைப் பார்த்தபோது, அது **மெக்ஸிகோ** கடற்குடாவில் உள்ள **கியூபா** தீவின் தலைநகரமாகிய **ஹவன்னு** துறை கண்டு, ஸ்பானிய துறைக்குப் போவதற்காக **பிரேஜில்** நாட்டுப் பகுதிக்கு அப்புறத்தில் தென் அமெரிக்கா கண்டத்தின் தென் பாகத்தில் உள்ள, **பியு-போனஸ் ஆயக்ஸ்** துறையின் நின்றுவது **ரியோ டி லா பிளன்ட்டா** துறையின் நின்றுவது பயணப்பட்டிருக்கவேண்டும் என்று என் அறிவிற்குப் புலப்பட்டது. அதில் இருந்த திரண்ட பொருள்கள் எல்லாம் உப்புநீர் ஊறி ஒன்றுக்கும் உதவாமற் போயின. நான் பிணமாய்க் கிடந்த இருவர் ஒழிந்த மற்றவர்களுக்கு என்ன நேர்ந்தது என்று அறியேன்.

**கப்பலில் இருந்து நான் எடுத்துச் சென்ற பொருள்கள்**

ஏறத்தாழ இருபது காலன் சாராயம்விட்டு அடைத்த சிறிய பீப்பாய் ஒன்றைக் கண்டெடுத்து அதனையும் ஒரு

வாறு ஓடத்தில் இறக்கிவைத்தேன். அன்றியும் அறைக் குள் சில பெருந் துப்பாக்கிகளும், பெரிய வெடி மருந்துக் கொம்பு ஒன்றும் இருந்தன. செலவு இல்லாததனால், துப் பாக்கிகளைவிட்டு, மருந்துக் கொம்பை மட்டும் எடுத்தேன். அதற்குள் மருந்து நான்கு இராத்தல் வரையில் இருந்தது. மேலும், எரிதழற்கரண்டி ஒன்றும், எனக்கு மிகவும் உதவி யான குறடு ஒன்றும், சிறிய பித்தளைக் கொப்பரை இரண் டும், பலகாரம் சுடும் செப்புப் பாத்திரம் ஒன்றும், இறைச்சி சுடும் கருவி ஒன்றும் அகப்பட்டன. நாயையும், மேற் கூறிய பொருள்களையும் ஏற்றிக்கொண்டு, கரை முகமாய் நீரோட்டம் திரும்பியதனால், ஓடத்தைத் திருப்பிக் கதிர வன் மறைய ஒரு மணி நேரத்துக்கு முன் மிகவும் இளைப் புற்றுக் கரையை நெருங்கிப் பிடித்தேன்.

## புதிய முழைக்குள் பொருள்களைச் சேர்த்தல்

அன்றிரவு படகில் படுத்துத் தூங்கி, மறுநாட் காலை யில் எழுந்திருந்து, எனக்குக் கிடைத்த பொருள்களையெல் லாம் மலைக் கோட்டைக்குக் கொண்டுபோகாமல், அண் மைக்காலத்தில் கண்ட முழைக்குள் சேர்த்துவைக்க முடிவு செய்தேன். பசி ஆறிய பின், பொருள்களை இறக்கி ஒவ் வொன்றாக ஆராய்ந்து பார்த்தேன். பீப்பாயில் இருந்தது சுவையற்ற ஒருவகை ரம் சாராயம். அது பிரேஜில் நாட்டில் இருந்தபொழுது, நான் குடித்த சாராயத்தின் தன்மை யுள்ளதன்று. பெட்டிகள் இரண்டிலும் என் செலவிற் குதவும் பொருள்கள் பல இருந்தன. ஒரு பெட்டியில் மணம் ஊட்டிய உயர்ந்த இனிய சுவைச்சாறு விட்டு அடைத்த புட்டிகள் பல இருந்தன. ஒவ்வொரு புட்டியி லும், ஒன்றரைப்படி சாறு வரையில் விட்டு அடைத்து அதன் வாய்க்கு வெள்ளித் தகட்டு மூடி இடப்பட்டிருந் தது. மேலும் சுவை மிக்க தின்பண்டங்கள் வைத்து, உப்பு நீர் உட் செல்லாதபடி மேற் கூறியவாறு வெள்ளித் தகட்டு வாய் மூடி இடப்பட்ட கலயங்கள் இரண்டு இருந் தன. அவ்வித மூடி இல்லாத மற்றிரண்டு கலயங்களில் நீர் ஏறிப் பலகாரம் பழுதாய்ப் போயிற்று. மிக நன்றாய்

இருந்த பயன்படத்தக்க சில சட்டைகளும், பதினெட்டு வெள்ளைச் சணல்நூல் கைக்குட்டைகளும், சாயம்தோய்த்த கழுத்துக் குட்டைகளும் இருந்தன. சட்டைகள் கிடைத்தது எனக்கு நன்மைதான். வெய்யிற் காலத்தில் வெயர்க்கும்பொழுது, முகம் துடைப்பதற்கு அந்தக் கைக் குட்டைகள் எனக்குப் பயன்பட்டன. பெட்டியின் அறைக் குள் மூன்று பை நிறைய ஒருவித நாணயம் இருந்தது. அவை மொத்தம் ஆயிரத்து ஒரு நூறு. ஒரு பைக்குள் ஆறு ஸ்பானியத் தங்க மொகராக்களும், சில சிறு பொற் பாளங்களும், ஒரு கடிதச் சுருளில் இருந்தன. அவைகள் எல்லாம் சேர்ந்து ஓர் இராத்தல் எடை இருக்கும்.

அடுத்த இரண்டாவது பெட்டிக்குள் இருந்த ஆடை கள் சில எனக்குப் பயன்படாதவை. அதில் எப்பொழுதும் பயன்படும் வெடி மருந்து இல்லை. பளிங்கு மினுக்கிட்ட வெடி மருந்து இரண்டு இராத்தல் வரையில் மூன்று சிறு கலயங்களில் இருந்தது. உற்ற வேளையில் குருவிக்குழாய்த் துப்பாக்கிகளில் நிறைத்து வெடிப்பதற்காக அவ் வெடி மருந்து அங்கே வைக்கப்பட்டிருந்தது போலும். இக் குறி களால் அந்தப் பெட்டி பீரங்கித் தலைவனுடைய துணைவன் பெட்டி என்று நினைத்தேன். இவ்வளவு துன்பம் எய்தி ஓடத்தில் ஏறி கப்பலுக்குச் சென்று வந்தும், என் செல விற்கு இன்றியமையாது பயன்படும் பொருள்கள் மிகுதி யாய் அகப்படவில்லை. நான் எடுத்து வந்த நாணயம் எனக்கு எவ்விதத்திலும் பயன்படாது. அஃது என் கால் தூசிக்கு ஒப்பாகவே காணப்பட்டது. ஆங்கிலேய நாட்டுக் காலணிகளும், கால் உறைகளும் பல ஆண்டுகளாக எனக் குக் கிடைக்கவில்லை. மூன்று நான்கு காலணிகள் கிடைக்கு மானால், அந்தப் பணம் முழுவதையும் கொடுத்தாவது வாங்கிக்கொள்வேன். மடைப்பள்ளி அறையிற் கண்ட பிணங்களின் கால்களில் இருந்த இரண்டு இணை காலணி களையும், ஒரு பெட்டிக்குள் இருந்த இரண்டு இணைகாலணி களையும், எடுத்துப் பயன்படுத்தினேன். அவை பருமனற்ற ஒற்றைத்தோல் அடிக்காலணிகள். ஆங்கில நாட்

டுக் காலணிகளைப்போல, காலுக்குப் பொருத்தமானவை களும் அல்ல. விரைவில் தேய்ந்து போகாமல் நாட்பட இருக்கத்தக்கவைகளும் அல்ல. கப்பற்காரருடைய பெட் டிக்குள் நாணயங்கள் ஐம்பது இருந்தன. பொன் இல்லை. இந்தப் பெட்டிக்காரன் முன் கூறிய பெட்டிக்காரனைப்போல, பணக்காரன் அல்லன் என்று எண்ணுகிறேன். அவன் அலுவலாளன் போலும்.

## பணத்தைப் பாதுகாப்பாய் வைத்திருத்தல்

பயன்படாது என்று எறிந்துவிடாமல், அகப்பட்ட பணத்தைச் சுமந்துகொண்டு போய்க் குகையிற் பாதுகாப் பாய் வைத்தேன். இஃது அன்றி, முன்பு எங்கள் கப்பலில் கண்டு எடுத்து வந்த பணமும் என்னிடம் இருந்தது.கப் பலின் பின் அணி பார்தட்டிப் பொறுத்து நிற்க நேர்ந் திருந்தால், என்னுடைய ஓடத்தில் அடுத்து அடுத்துப் பல தடவை ஏற்றிக்கொண்டு வரத்தக்க பணம் மிகுதியா கக் கிடைக்கும் என்றும், அதை நான் குகைக்குள் வைத் துப் பாதுகாத்தால், இங்கிலாந்திற்குத் திரும்பிப்போக இடம் பெறினும், மறு பயணம் வரும் அளவும், அது முறையிற் பாதுகாப்பாய் அழியாமல் இருக்குமென்றும், நினைத்து, கப்பலின் பின் அணி உடைந்து போனது எனது கெட்ட காலம் என்று நினைத்து வருந்தினேன்.

## மலைக்கோட்டையிற் சென்று தங்குதல்

கிடைத்த பொருள்கள் எல்லாவற்றையும் கொண்டு போய்ப் பாதுகாப்பாய் வைத்த பின், கடற்கரைக்குத் திரும்பி, ஓடம் ஏறி, அதை முன் நின்ற துறைக்குச் செலுத் திக்கொண்டு போய்க் கட்டி விட்டுப் பிறகு எனது பழைய வாழ்விடத்துக்கு விரைந்து சென்றேன். அங்கே புதுமை ஒன்றையும் நான் காணவில்லை. முன் இருந்தபடி யாவும் நன்றாகவும் பாதுகாப்பாகவும் இருந்தன. பின்பு நான் இளைப்பாறி, முன்போல் அடங்கியிருந்து, குடும்பச் செயல் களை ஒழுங்குபெறச் செய்துகொண்டு சிறிது காலம்வரை யில் மனக்கவலை அற்று இருந்தேன். முன்னைவிட அதிக

வழிப்பாய் இருந்து, அடிக்கடி மலையுச்சியில் ஏறி, மக்கள் நடமாட்டம் இருக்கிறதா எனப் பார்த்துக்கொண்டிருந் தேன். முன்போல நான் அடிக்கடி வெளியில் உலாவவில்லை. தீவின் கீழ்ப்பாகத்தில் வேடர் ஒரு பொழுதும் வருவதில்லை என்று அறிந்ததனுல், ஏதேனும் வேலை இருக்கும்பொழுது அவ்விடத்திற்குப் போனேன். அப்பொழுது படைக் கருவி களை அணிந்து கொள்ளாமல் அச்சமின்றிச் சென்று வந் தேன். மற்றைத் திசைகளில் நான் செல்வதே இல்லை. அரிதாய் எப்பொழுதேனும் போக நேர்ந்தால், துப்பாக்கி, கத்தி முதலிய எல்லாப் படைக் கருவிகளையும் அணிந்து கொண்டு மிகுந்த விழிப்போடு சென்று வருவேன்.

## பதின்மூன்காம் அதிகாரம்

### தீவைவிட்டு வெளியேற வழி யாது ?

மேலும் இரண்டு ஆண்டுகள் செல்கின்றவரையில் என்னுடைய நிலைமை மேற் கூறியவாறே இருந்தது. நற் பேறு இல்லாத மகனாய்ப் பிறந்த என்னுடைய அறிவின் மையே எனக்கு நேரிட்ட பெருந்துன்பங்கள் எல்லாவற்றிற் கும் காரணம் என்று எப்பொழுதும் கண்கூடாய்க் கண் டேன். அதனால் இந்தத் தீவினின்று விலகி வெளியேறு வதற்கு என்னென்ன வழி வகைகள் உண்டு என்று இந்த இரண்டு ஆண்டு முழுவதும், என் மனம் நினைத்தபடியே இருந்தது. உடைந்த கப்பலில் எனக்கு உதவும் பொருள், ஒன்றும் இல்லாமையால், அங்கு மறுபடியும் போக விரும்ப வில்லை. வழியில் நேரிடக்கூடிய இடர்களை எண்ணாமல், மீண்டும் அக்கப்பலிற்குச் செல்லுதல் தவறு என்று அறி வும் தடை செய்தது. ஆயினும் அத்தடையையும் பொருள் செய்யாமல் சில வேளைகளில் மேலும் பயணம் செல்ல நினைத்தேன். சில வேளைகளில் வேறிடங்களுக்குப் பயணம் செல்லவும் கருதினேன். ஸல்லி துறையினின்று ஏறி ஒளித்து ஓடின ஓடம் என்னிடம் இருந்தால், இலக்கு இன் றிப்போய்ச் சேரும் இடம் சேரட்டும் என்று நான் அதில் ஏறிக் கடற்பயணம் செய்வேன் என்பதற்கு ஐயமில்லை.

### பழைய நிலையை நினைத்து வருந்துதல்

மனிதரிற் பெரும்பாலோர் தமக்கு வந்துள்ள நிலை தாம் செய்த செயல்களுக்கு ஏற்றபடி, கடவுள் வழியாய் ஏற்பட்டது என்று எண்ணி, மன நிறைவு கொள்ளாமல் குறையாகவே நினைக்கின்றனர்கள். கொள்ளைநோய் போன்ற அம் மனக் குறையே அவர்களுக்கு நேரிடும் துன்பம், பொரு ளிழப்பு, உயிரிழப்பு ஆகியவற்றிற் பாதியை விளைவிக்கின் றன. என்பதும் உண்மையாகும். அதனை மெய்ப்பிக்கும் சான்றாக நான் விளங்கினேன். என்னுடைய பழைய நிலை

யையும், தந்தை புகட்டிய நல்லறிவையும் என் அறிவின் மையால் பொருட்படுத்தாது நீக்கியதை நினைத்து வருந்தினேன். அதன் பிறகும் நான் நெறி தவறி நடந்ததனால் தான் இந்தப் பெருந் துன்பநிலை எனக்கு வந்ததென்றும் உணர்ந்தேன். திருவுள்ளத்தின் செயலால் பிரேஜில் நாட்டிற் சேர்ந்து பயிர்த் தொழில் செய்யத் தொடங்கி, அது கைகூடி வருமென்றும் கண்டேன். நான் எனது பொருளாவாவை மீற ஒட்டாமல் அடக்கி, உள்ளது போதும் என்று மன அடக்கம் கொண்டு, சிறிது சிறிதாய்ச் சேரும் பொருளை அழிக்காமல் சேர்த்து வைத்திருப்பேனானால், இதற்குள் நான் பிரேஜில் நாட்டில் பணம் முதல் வைத்துப் பயிர் செய்விக்கும் பெரிய வாணிகனாக வளர்ந்திருப்பேன். நான் அங்கிருந்த குறைவான காலத்திலேயே எனக்கு உண்டான வளர்ச்சி மிகுதியாகும். மனம் பதறாமல் பொறுத்திருந்து, என் செயல்களைச் சீராய் நிறைவேற்றி வருவேனாயின் இப்பொழுது நூறாயிரக் கணக்கில் பொருள்கள் வைத்திருப்பேன். பிரேஜில் நாட்டில் நிலம் விலைக்கு வாங்கிப் பயிர்த்தொழிலுக்குரிய துணைப்பொருள்கள் எல்லாவற்றையும் சேர்த்து வைத்துக்கொண்டு பயிர் செய்தேன். அத்தொழில் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து எனக்குக் கைகூடி வந்தது. அதனை அவ்வாறே மனம் பதறாமல் அறிவின் துணை கொண்டு வளர்த்து வந்திருப்பேனாயின் இருந்த இடத்திலேயே என் பொருட்செல்வம் வளர்ச்சி யடைந்திராதா? தோட்டத்தில் வேலை செய்வதற்கு வாணிகர் நமது வீட்டு வாயிலிற் கொண்டு வந்து விற்கும் நீகிரோவரை விலை கொடுத்து வாங்கக் கூடாதா? இவற்றை எண்ணாமல், என் சிறப்பைக் கெடுத்துக்கொண்டு, நீகிரோவரை விலைக்கு வாங்குவதற்காக வணிகருடைய, செயலாளனாய் நான் கப்பல் ஏறி, கினியாவிற்குப் போகத் துணிந்த காரணம் யாது? அஃது என் அறிவின்மை யல்லவா? சிறிது விலை குறைத்து வாங்கக் கருதி, எவரும் அற்ற நான், ஆழ்ந்த கடலில் அவாவின் வயப்பட்டுப் பயணம் செய்தது அறிவுடைய செயலாகாது என்று எவரும் கூறுவார்கள்

**இளைஞர் இயற்கை எது ?**

பின்வருவதை எண்ணுமல் மனம்போன வழியில் துணிந்து செல்வது இளைஞர் இயற்கை. ஆண்டுகள் ஏற ஏற அவர்கள் தமது அறிவின்மையால் விளைந்த துன்பங்களையும் ஆக்கக் கேடுகளையும் கண்கூடாகக் கண்டு சீர்திருத்தம் அடைவார்கள். இவ்வாறு தாம் அடைந்த துன்பங்களை எண்ணி, மனம் தெளிந்து சீர்பெறுவது ஆண்டில் வளர்ந்த ஆடவர் இயற்கை. என்னுடைய நிலைமை இவ்வாறு இருந்தது. என் அறிவு மாறுபட்டுக் கிடந்ததனால் என் நிலைமையை எண்ணி, என் மனம் எப்பொழுதும் குறை கூறிக் கொண்டே இருந்தது. இத் தீவினின்று நீங்கிச் செல்வதற்குரிய வழி வகைகளைப்பற்றி நான் இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருந்தேன். எஞ்சிய கதையைப் படிப்பவர்களுக்கு இன்பம் உண்டாகும் வண்ணம், நான் இத்தீவைவிட்டு விலகுவதற்குச் செய்த சில சூழ்ச்சிகளையும், செயல்களையும் சிறிது சுருக்கிக் கூறுகின்றேன்:—

உடைந்த கப்பலுக்குச் சென்றுவந்த பின் ஓடத்தை வழக்கமான துறையில் கட்டிவிட்டு என் இருப்பிடத்தை அடைந்து அடங்கி யிருந்து நாட்களைக் கழித்தேன். இதற்குமுன் இருந்ததைவிட இப்பொழுது என்னிடம் இருந்த செல்வம் அதிகமாயினும் அதனால் எனக்குப் பயன் ஒன்றும் இல்லை. ஸ்பானிய நாட்டினர் பெரு நாட்டிற்குப் போகுமுன், அங்குள்ள இந்தியரிடம் இருந்த செல்வம் பயனற்றுக் கிடந்தது போல, எனக்கும் இந்தத் தீவில் இப்பணம் பயன்படாது இருந்தது.

**ஒருநாள் இரவு தூக்கம் இல்லை**

இப்பாழ்ந் தீவில் நான் தனியே வாழ்ந்த இருபத்து நான்காவது ஆண்டு, மார்ச்சுத் திங்கள், மழை காலத்தில் ஒருநாள் இரவு நான் தூங்கு மஞ்சத்தில் உறங்குவதற்குப் படுத்திருந்தேன். இரவு முழுவதும் கண்ணோடு கண் மூடவில்லை! விழித்தவண்ணமாய் இருந்தேன், எனக்குச் சிறிது அளவும் உடல் நலக் குறைவு இல்லை. உடல் நோய்,

வலி, முதலிய எதுவும் இல்லை. வேறு சிறப்பான மனத் துன்பமும் இல்லை. எனக்குத் தூக்கம் வராத காரணம் இன்னது என்று கூறுகின்றேன்.

அன்றிரவு என் உள்ளத்தில் நிகழ்ந்த எண்ணிறந்த நினைவுகளை ஒவ்வொன்ருய்க் கூறுவது இயலாது. அஃது அத்துணை இன்றியமையாததும் அன்று. நான் இத்தீவில் வந்து இறங்கிய நாள்முதல் நேர்ந்த நிகழ்ச்சிகளையும், அது முதல் இதுவரையிலும் நடந்த வரலாறுகளையும் சுருக்க மாக நினைத்துப் பார்த்தேன். நான் இத்தீவில் கால் வைத்த நாள்முதல் பல ஆண்டுகள் வரையிலும், என் மனம் மகிழ்ந்து இன்பம் அடையுமாறு எனக்கு உண்டான சுற்றுப்புற வளர்ச்சிகளையும், கடற்கரை மணலில் மனிதர் காலடிச்சுவடு கண்ட நாள் முதல் இடையருது, எனக்கு நேர்ந்த துயரத்தையும், அச்சத்தையும், கவலையையும் இணையாக வைத்து உயர்வு தாழ்வு பார்த்தேன். வேடர்கள் நான் இத்தீவிற் சேர்ந்தபின் பலமுறை இவ்விடத்திற்கு வந்திருப்பார்கள். திரளாகச் சேர்ந்து வந்திருக்கவும் கூடும். காலடிச் சுவடு காணுமுன் அவர்களைக் குறித்து நினைக்கவும் அஞ்சவும் காரணம் இல்லையன்ருே; அதனுல் நான் மனக்கவலையற்றிருந்ததாக வெளியிட்டேன். எனக்கு நேரிடும் பேரிடர் எப்பொழுதும் ஒன்றுதான். இன்ன பேரிடர் நேர்ந்ததென்று அறியாததனுல், உண்மையில் ஏதும் இடர் இல்லாதவன் போல மனக்களிப்போடு இருந் தேன். இதை ஆதாரமாய்க்கொண்டு, என் மனத்தில் சில பயனுள்ள எண்ணங்கள் உண்டாயின. அவற்றுள் பின் வருவது முதன்மையானது.

**மனத்தின் அமைதிக்கு இறைவன் அருள் துணை**

இந்தப் பூவுலகத்தில் மனிதரை ஆண்டு நடத்திவரும் கடவுள் அவர்களுடைய பார்வையையும், அறிவையும் ஒடுக்கி வரையறுத்திருப்பது அவர்களுக்கு அளவற்ற நன்மையே தருவதாகும். பல்லாயிரக்கணக்கான, பேரிடர் களும், உயிர்த்துன்பங்களும் எத்திசையிலும் மனிதனைச்

சூழ்ந்து நெருங்கி இருக்கின்றன. அவன் அவைகளைக் காண்பானுகில். கண்ட அடுத்த நொடிப் பொழுதிலேயே கலக்கமுற்று நடுங்கி, மனம் குன்றிச் சோழிவான். அவனுக்கு நேரிடும் இடர்கள் அவனுடைய காட்சிக்குப் புலப்படாமலும், தன்னைச் சூழும் தீங்கு ஒன்றையும் அறியாமலும் இருப்பதனுல், அவன் மனக்கவலையின்றி அமைதியோடு இருக்கின்ருன்.

### தோன்ருத் துணையாய் இருப்பவன் இறைவனே

சற்றுநேரம் இவ்வாறு நினைத்துச் சீர்தூக்கிப் பார்த்த பின், இத்தனை ஆண்டுகளாக இப்பாழ்ந் தீவில் எனக்கு நேரிட்டிருந்த இடையூறுகளை வென்று வாழ்ந்ததை நினைத்து வியப்புற்றேன். சிறுமலை யுச்சியின் மறைவிலும், பெருமாத்தின் ஒதுக்குப்புறத்திலும், இருளடர்ந்த இரவிலும், மனித உடலைத் தின்னும் வேடருடைய கையில் அகப்படும் கொடிய சூழ்நிலை இருந்தும், நான் அச்சமின்றியும் மனஅமைதியுடனும், அங்கங்கே உலாவித் திரிந்ததை நினைத்து நினைத்துத் திகைத்து மயங்கினேன். வெள்ளாட்டையாவது, கடல் ஆமையாவது நான் பிடிக்கும் பொழுது என் கருத்து எதுவோ, அதுவே என்னைப் பிடிக்கும்பொழுது கொடிய வேடர்க்கு உண்டாகும் கருத்தாகும். புரு முதலிய பறவைகளைக் கொன்று தின்பது தீவினை என்று நான் நினைப்பதில்லை. அதுபோலவே என்னைக் கொன்று தின்பதும் கொடுஞ்செயல் என்று அவர்கள் நினைக்கமாட்டார்கள். எனக்குத் தெரியாமலே கடவுள் என்னை அவ்வேடர் கையில் அகப்படாமல் பாது காத்து வராவிடில், அவர்கள் என்னைக் கொன்று தின்றிருப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. இவற்றை நினைத்து மனம் உருகி என்னைப் பாதுகாத்த இறைவனுடைய திருப்பெயரை மனமாரக் கூறி வாழ்த்தினேன்.

### வேடரைப் போல ஓடமேறிச் செல்ல நினைத்தல்

இறைவன் திருவருட் செயலை ஆராய்ந்து நினைத்து வாழ்த்திய பின், கொடியோராகிய வேடருடைய செயல்களைக் குறித்து நினைத்தேன். எல்லா உலகங்களையும்

அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களையும் நன்முறையிற் பாதுகாத்துவரும் அறிவே வடிவமாய் உள்ள ஆண்டவன் இவ்வேடர்களை விலங்குகளிலும் இழிந்த அறிவினராக்கித் தம் இனத்தைத் தாமே மனம் இரங்காமற் கொன்று தின்னும்படி கைவிட்டுவிட்ட காரணம் என்ன என்று ஆராய்ந்து நினைத்தேன். இக்கருத்துக்களின் வழியாக அவ்வேளையில் பயனற்ற சில கேள்விகள் என் உள்ளத்தில் பிறந்தன. இந்தக் கொடிய வேடர் வாழும் நாடு எது? இத்தீவின் கரைக்கும் அவர்கள் இருக்கும் நாட்டிற்கும் இடையில் உள்ள தொலைவு எவ்வளவு? தங்கள் இருப்பிடத்தை விட்டு அச்சமின்றி அவர்கள் இவ்வளவு தொலைவு வந்த காரணம் என்ன? அவர்கள் பயன்படுத்தும் ஓடம் எத்தன்மையுடையது அவர்களைப் போல நானும் இவ்விடத்தினின்று அவர்களுடைய நாட்டிற்குப் போவதற்குரிய ஏற்பாடுகள் ஏன் செய்தல் கூடாது?

### ஓடம் ஏறிச் சென்றால் வேறு நாட்டை அடையலாம்

அவர்கள் நாட்டுக்குப் போக நேர்ந்தால் நான் என்ன செய்வேன்? வேடர் கையில் அகப்பட்டால் நான் எந்நிலை அடைவேன்? அவர்கள் என்னைப் பிடிக்கத் தொடர்ந்தால் தப்பித்துக் கொள்ளும் வகை யாது? தப்பித்துக் கொள்ளும் வகை அறியாமல், நான் அவர்கள் நாட்டில் இறங்கி அவர்கள் கையில் அகப்படாது இருப்பது எப்படி? அவர்கள் கையில் நான் அகப்படாவிடினும் உணவிற்கு என்ன செய்வேன்? எவ்விடத்திற்குப் போவேன் என்கின்ற எண்ணங்களில் ஒன்றேனும் என் உள்ளத்தில் தோன்றவில்லை. இவைகளைக் குறித்து நான் நினைக்கவே இல்லை. ஓடம் ஏறி அக்கரைசேரும் எண்ணம் ஒன்றுமட்டுமே என் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. எனது நிலைமையைப் போலத் தொல்லைதரும் நிலைமை எவருக்கும் இல்லை யென்றும், இதனைக் காட்டிலும் கொடிய துன்பம் இறப்பு ஒழிய வேறு இல்லை என்றும் கருதினேன். வேறு நிலப்பரப்பின் கரையில் ஏறுவேனாயின் எனக்கு ஏதாயினும் உதவி கிடைக்குமென்றும், முன்பு ஆப்பிரிக்கக் கரையில் ஓடம்

செலுத்திக்கொண்டு சென்றபொழுது, மனிதர் வாழும் இடம் அகப்பட்டதுபோல, இப்பொழுதும் கரையோரமாய் ஓடம் ஏறிப்போனால் மனிதர் வாழும் இடத்தைக் கண்டு, அவர்களால் உதவிபெறலாம் என்றும், ஒருவேளை கடல்வழியில் இறித்தவர் கப்பலைக் கண்டால் அவர்கள் என்னைத் தங்கள் கப்பலில் ஏற்றிக்கொண்டு போவார்கள் என்றும் நினைத்தேன். துன்பங்களைத் துய்த்துக்கொண்டிருக்கும் துணையற்ற எனக்கு மேலும் கொடிய பேரிடராகிய இறப்பு நேருமாயின், நான்படும் துயரங்கள் எல்லாம் அவ்வளவோடு ஒழிந்துபோய்விடும் என்றும் நினைத்தேன். என் மனம் கலக்கமுற்று நடுங்கியதனால் இந்த நினைவுகள் எனக்கு உண்டாயின.

கருத்தோடு படியுங்கள். பல நெடுங்காலம் சென்றதனாலும் நான் கவலையில் மூழ்கி, இனி மீட்சி இல்லை என்று துன்புற்றதனாலும், எவரையாவது கண்டு கலந்து பேசி, நான் பிறந்த நாட்டில் நிகழும் செய்திகளைக் கேட்டறிந்து மகிழ விரும்பினேன். இந்த அரிய சிறையினின்று மீளும் வகை அறியலாம் என்று ஓடம் ஏறிச்சென்று உடைந்து பழுதுற்ற கப்பலை அடைந்தேன். எல்லாம் பயனற்றுப் போயின. அதனால் என் மனம் நிலைகொள்ளாது பதறியது. மேற்கூறிய நினைவுகளால் சுழற்காற்றில் அகப்பட்ட சருகுபோல எனது உள்ளம் சுழன்றது. திருவுள்ளத்தின் செயலால் வருவது வருக என்று எண்ணி, மனம் தேறிக் கலக்கமற்றிருக்கும் நிலை இப்பொழுது என்னை விட்டு நீங்கியது. ஓடத்தில் ஏறிக் கடலின் மறு கரையில் உள்ள துறையிற் சேரும் அவா வளரவளர, அதன் வயப்பட்டேன். என்னுடைய நினைவை வேறு துறையிற் செலுத்தும் வல்லமையற்றிருந்தேன்.

**கனவு கண்டு வருந்துதல்**

இரண்டு மணி நேரத்திற்கு மேல், இந்த எண்ணமே என் உள்ளத்தில் அழுந்தி அவா மிகுதிப்பட்டது. அதனால் என் உடலில் குருதி கொதித்தது. சுரநோய் கண்டவனைப் போல கை நாடி படபட என்று அடித்தது. ஊன்றி

ஆழ்ந்து நினைத்ததனால் மனக்கிளர்ச்சி குறைந்து, இளைப் புற்று அயர்ந்து தூங்கினேன். என் உள்ளத்தில் அழுந் திய நினைவைக் குறித்துக் கனவு காண்பேன் என்று இதைப் படிப்பவர்கள் நினைக்கவும் கூடும். நான் கண்ட கனவு அதைப்பற்றியும் அன்று. அதற்குத் தொடர்பான யாதொன்றைப் பற்றியும் அன்று நான் கண்ட கனவைக் கூறுகின்றேன். ஒருநாள் காலையில் வழக்கம்போல் கோட்டையினின்றும் வெளியேறி உலாவும் பொழுது, பதினொரு வேடர் இரண்டு ஓடங்களில் ஏறிக் கொன்று தின்பதற்காக ஒருவனை ஏற்றிக் கொண்டு வந்து கரையில் இறக்கினார்கள். விரைவில் அவ்வேடன் அவர்கள் கைக்கு அகப்படாமல் தப்பிப் பிழைப்பதற்காகப் பறந்து ஓடினான். அவன் எனது கோட்டை மதிலுக்கு எதிர்த்தோப்பில், ஒளித்துக் கொள்வதற்காக ஒன்றியாய் ஓடிவந்து நின்றான். அதனைக் கண்ட நான் அவனிடத்திற்குப் போய் அவனை அன்போடு பார்த்துத் தேற்றினேன். அந்த வழியில் மற்ற வேடர்கள் அவனைத் தொடர்ந்து வந்ததாய் எனக்குத் தோன்றவில்லை. என்னைக் கண்டவுடன் தனக்கு உதவி செய்யும்படி வேண்டிக் கொள்பவன்போல, அவன் எனக்கு எதிரில் முழந்தாளிட்டு நின்றான். அது கண்டு, நான் அவனுக்கு எனது ஏணியைக் காட்டி, அதன் வழியாய் அவனை உள்ளே வரச்செய்து, குகைக்குள்ளே கொண்டு போய்ச் சேர்த்தேன். அன்று முதல் அவன் எனக்குக் குற் றேவல் செய்துகொண்டு வந்தான். அவன் என் வசப்பட்ட உடனே, பின்வருமாறு நினைத்தேன். "இனி நான் கட லின் மறுகரைக்கு அச்சமின்றி, ஓடம் ஏறிப் போகலாம் என்றும், இவன் ஓடத்தைச் செலுத்திக் கொண்டு போவான் என்றும் கருதினேன். மேலும் இன்னது செய்யவேண்டும் என்றும், உணவுப் பொருள்களை அடை வதற்கு இன்ன இடத்திற்குப் போகவேண்டும் என்றும், வேடர் இருப்பதனால் இன்ன இடத்திற்குப் போகக்கூடா தென்றும், அச்சமின்றி இன்ன இன்ன இடங்களுக்குப் போகலாம் என்றும், இன்ன இன்ன இடங்களைக் கனவி லும் நினைக்கக்கூடாதென்றும் எனக்கு நல்ல சூழ்ச்சிகள்

கூறுவான்" என்றும் நினைத்தேன். இவ்வளவோடு தூக்கம் கலைந்து எழுந்தேன். அந்த நேரத்தில் எனக்கு மீட்சி உண்டாகும் என்பதை நினைத்து மன மகிழ்ச்சியடைந் தேன். தூக்க மயக்கம் நீங்கி என் அறிவு எனக்கு வந்த பின், நான் கண்டது கனவு என்று அறிந்து, துயரக் கடலில் முழுகி மனம் தளர்ந்து வருந்தினேன்.

### வேடன் ஒருவனைப் பிடிக்க விரும்புதல்

பின்பு வேடர் கொன்று தின்பதற்காக இக் கரைக்குக் கொண்டுவரும் மனிதரில் ஒருவனைக் கூடிய முயற்சி செய்து நான் கையகப்படுத்தினால் அன்றி எனக்கு மீட்சி இல்லை என்று கருதினேன். இப்படிச் செய்வதற்கு எதிராகப் பெரிய இடையூறு ஒன்று உண்டாகும் என்றும் நினைத் தேன். அவர்கள் எல்லோரையும் எதிர்த்து அழித்தா லொழிய நான் நினைத்த செயல் நேராய் முடியாது. வந்து இறங்கும் வேடர் எல்லோரையும் தாக்கிக் கொன்று அழிப் பது என்றால் முடியாது. அன்றியும், இப்படிச் செய்வது அறமும் அன்று என்று நினைத்தேன். என் உயிரைக் காத்துக்கொள்ளும் பொருட்டே அவ்வாறு செய்கின்றேன் என்றாலும், இத்துணை மனிதரைக் குருதியாறு பெருகும் படி, கொன்று அழிப்பது முறையன்று என எண்ணி னேன். அக்கொலையை நினைத்தபோதே என் உள்ளம் நடுங்கியது. இக்கொலையைப் பற்றி என் உள்ளத்தில் தோன்றிய தடைகளை முன்பே கூறியிருக்கின்றேன். ஆத லால், மறுபடியும் கூறுவது வேண்டாததாகும். என்னைக் கொன்று தின்னவரும் அக் கொடியோருடைய வாய்க்கு இரையாகாதபடி, நான் உற்ற வேளையில் அவர்களைக் கொன்று, என் உயிரைக் காத்துக் கொள்வது குற்ற மாகாது என்று ஒருபுறம் எனக்கு எண்ணம் தோன் றியது. அவ்வாறு தோன்றினும், என் உயிரைக் காத்துக் கொள்வதற்காக மனிதரைக் கொல்வது குறித்து நினைத்த வுடன் என் மனம் கலங்கியது. நீண்ட நாட்களாக இதற்கு என் மனம் உடன்படவில்லை.

இருபக்கத்து நீதிகளையும் நெடுநாள் வரையில் என் உள்ளத்தில் இருத்தி, சிலவேளை ஒரு பக்கத்தைச் சார்ந்து துணிவதும், சில வேளை அதைத் தள்ளி எதிர்ப் பக்கத்தைச் சார்ந்து கலக்க முறுவதுமாய் இருந்தேன். முடிவில் இச்சிறையிருப்பினின்று மீட்சியடையும் பேரவா மேற்கொண்டதனால், வேடரில் ஒருவனை எவ்விதத்திலாயினும், மிகுந்த துன்பங்களை மேற்கொண்டாவது, பிடித்துக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தேன். அதற்குப் பிறகு எவ்வாறு பிடித்துக் கொள்வதென்று சூழ்ச்சி செய்யத் தொடங்கினேன். அதைப் பற்றித் தவறுமல் நிறைவேறத் தக்க வழி காண முடியாதிருந்தது. ஆதலால், நான் எப்பொழுதும் விழிப்பாய் இருந்து, வேடர் இக் கரையை அடையும் வேளை பார்த்துக்கொண்டிருந்தால், அவ் வேளையில் இன்னது செய்யலாம் என்று எனக்கு வழி பிறக்கும் என முடிவு செய்தேன்.

**வேடர் வருகையை எதிர்பார்த்திருந்தேன்**

மேற்கூறிய முடிவுகளைக் கடைப்பிடியாய்க் கொண்டு, வேடர் வரும் வேளை பார்த்திருந்தேன். நாட் பட்டதனால் என் மனம் ஓய்ந்தது. தீவின் மேற்குமுனைக்கும், தென் மேற்கு முனைக்கும், நாள்தோறும் சென்று காத்து நின்று பார்த்தும், வேடர் ஓடம் ஒன்றையும் காணவே இல்லை. நான் இவ்வாறு வேடருடைய வரவை எதிர்பார்க்கத் தொடங்கி ஒன்றரை ஆண்டுக்கு மேலும் சென்றதனால் என்னுடைய ஊக்கம் அழிந்து, துயரம் பெருகிற்று. என் உள்ளத்திற் பிறந்த அவா ஒழிந்து போகவில்லை. காலம் ஏறஏற அது வளர்ந்தது. முன்பு நான் வேடரைக் காணுமலும், அவர்கள் என்னைக் காணுமலும் இருப்பதற்கு இன்றியமையாத பாதுகாப்புச் செய்ததுபோல், இப்பொழுது நான் அவர்களைக் காண்பதற்கு விரும்பி, என்னால் முடிந்த முயற்சிகளை யெல்லாம் செய்தேன்.

**நெடுநாள் காத்திருந்தும் வேடர் வரவில்லை**

மேலும் ஒருவன் மட்டும் அன்று, இருவர் அல்லது மூவர் அகப்படினும், நான் அவர்களை அடிப்படுத்தி ஆட்

கொண்டு சொற் கேட்கும்படி செய்து, எனக்கு அவர்களால் ஏதும் தீங்கு நேராதபடி சூழ்ச்சி செய்வதற்குத் திறமை எனக்கு உண்டு என்று நினைத்தேன். மேலே குறிப்பிட்ட துணை உதவிகளை நினைத்து மகிழ்ந்து, வேடர் வருவார் வருவார் என்று எதிர்பார்த்திருந்தும், நெடுநாள் வரையில் எவரும் வராததனால், எனது முன் ஏற்பாடுகள் பயன் படாது ஒழிந்தன. இந்தக் கருத்தை ஒன்றரை ஆண்டுகள் வரையிலும் என் உள்ளத்தில் இருத்தியும் பயன்படாமற் போனதனால், அது சுவையற்றுப் பாழாய்ப் போயிற்று.

### ஒருநாள் வேடர் வந்து களியாட்டம் புரிந்தனர்

இவ்வாறு இருக்கும்போது ஒருநாள் அதிகாலையில், தீவில் நான் இருக்கும் பக்கத்தில் ஐந்து ஓடங்கள் நெருங் கிக் கரையை அடைந்திருந்ததைக் கண்டேன். வந்து இறங் கிய மக்கள் என் கண்ணுக்குப் புலப்படவில்லை. அவர்கள் பெரும்பாலும் ஓடம் ஒன்றுக்கு நான்கு, ஐந்து அல்லது ஆறு பேர் வருவர். அதற்கு மேலும் வருவது வழக்கம். இதனை முன்னரே நான் நன்கு அறிவேன். இவ்வைந்து ஓடங்களிலும் முப்பது பேராவது வந்திருப்பார்கள் என்று கருதினேன். ஆள் உதவியற்ற நான் ஒருவன் இருபது முப்பது பேரோடு எதிர்த்து. அவர்களை வெல்வதற்கு இசையாது என்று எண்ணிச் சற்றுக் கலங்கினேன். மன வருத்தம் அடைந்த நான் கோட்டையின் உள்ளே அடங்கி யிருந்தேன். முன்பு நான் ஏற்பாடு செய்துவைத்த போர்க் கருவிகளை அவற்றிற்குரிய இடங்களில் வைத்து வாய்ப்பு நேரும்போது தடையின்றிப் போர் புரிவதற்கு ஆயத்தமாய் இருந்தேன். நெடுநேரம் வரையிலும் காத்திருந்தும் அவர்கள் ஒலி சிறிதும் கேளாததனால், சற்று வருந்தி, ஏணியின் அடியில் துப்பாக்கிகளை வைத்துவிட்டுக் குன் றேறி, அதன் முடியின் ஒதுக்கில் மறைந்து நின்று, தொலை நோக்காடியாற் பார்த்தேன். அங்கே கூடி நின்றவர் முப்பது பேர். அவர்கள் நெருப்பு மூட்டி எரித்து, இறைச்சி சமைத்து, அந்நெருப்பைச் சூழ நின்று, தங்கள் குல வழக் கத்திற்குரிய பலவித அழகு இல்லாத ஆட்டங்களையும் நட

னங்களையும் செய்து நடித்தார்கள். அவர்கள் சமைத்த இறைச்சி இன்னது என்றும், அதை அவர்கள் சமைத்த முறை இன்னது என்றும் நான் அறியேன்.

**மனிதன் ஒருவனைக் கொன்று சமைத்தனர்**

நான் பார்த்துக்கொண்டு நின்றபோது, அவர்கள் கொலை செய்வதற்காக ஓடத்தினின்று மனிதர் இருவரைப் பிடித்துக்கொண்டு வந்து, குறுந்தண்டினாலோ, மரக் கத்தியினாலோ அப்பொழுதே ஒருவனை அடித்து வெட்டிக் கொன்று, பிணமாக வீழ்த்தினார்கள். மரத்தினால் வாள் செய்து பயன் படுத்துவது அவர்கள் வழக்கம். இரண்டு மூன்றுபேர் அந்தப் பிணத்தைத் தோல் உரித்துச் சமைப்பதற்குத் துண்டு துண்டாக வெட்டினார்கள். அவ்வேலை நிறைவேறும் வரையிலும், மற்றொருவனைப் பக்கத்தில் நிறுத்தியிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் மனித இறைச்சியைச் சமைப்பதற்குத் துண்டிப்பதில் நினைவாய் இருந்தனர். அது கண்டு, மற்றொரு மனிதன் இதுதான் சரியான வேளை என்று விரைவில் காற்றின் விரைவு போலக் கடற்கரை மணல் தரையில் என்னுடைய உறைவிடத்துக்கு நேர்முகமாய் விரைந்து தப்பிஓடி வந்தான். அவன் என்னிடத்திற்கு மிக்க விரைவாய் ஓடி வருவதையும், அவர்கள் எல்லோரும் அவனைத் தொடர்வதையும் கண்டு எனக்கு அளவு கடந்த மனநடுக்கம் உண்டாயிற்று. காட்டு மனிதன் ஒருவன் என்னுடைய தோப்பில் ஓடி வந்து ஒளித்து நின்றதாக நான் கண்ட கனா நிறைவேறும் என்று எண்ணினேன். மற்ற வேடர்கள் அவனைத் தொடர்ந்து ஓடி வரவுமில்லை தோப்பிற் காணவும் இல்லை, என்பதாகக் கனாக் கண்டேன் அன்றோ! அஃதே போன்று நடக்கவில்லை. பின்னும் சற்றுநேரம் பார்த்துக் கொண்டு நின்றபோது, மூன்றுபேர் மட்டும் அவனைப் பின் தொடர்ந்து ஓடி வந்தார்கள். அவன் மிகுந்த விரைவாய் ஓடி அவர்களுக்கு எட்டாத தொலைவில் நெடுந்தூரம் வந்துவிட்டான். மேலும் அரைமணிநேரம் மூச்சு அடக்கி ஓடுவானானால், பிறகு அவர்களில் எவனாவது அவனைக் கண்டு பிடிப்பது

முடியாது. இதை நினைத்து நடுங்காது நின்று, மனம் தெளிந்து துணிவு கொண்டேன்.

### வாய்க்காலைக் கடந்து ஓடி வந்தனர்

உடைந்த கப்பலினின்று எடுத்துவந்த பொருள்களை இறக்கிய கதைப் பகுதியை இந்நூலின் முற்பகுதியில் கூறியபொழுது, நான் குறிப்பிட்ட நீரோடை அவர்களுக்கும், எனது மண்டபத்திற்கும் இடையில் இருந்தது. பிழைக்கக் கருதி உயிர் ஒட்டி ஓடிவரும் அத்தனி மனிதன் நீந்தப் பயின்றிருந்தால் அன்றி, அவ்வோடைக் கரையில் அவனைத் தொடரும் காட்டு மனிதர் கைக்குத் தப்புவது எளிதன்று என்று கருதினேன். அப்பொழுது நீரோடையில் வெள்ளம் பெருகியிருந்தது. ஆயின் அம்மனிதன் அச்சம் சிறிதும் இன்றி அதில் இறங்கி இருபது முப்பது கை வீச்சில் நீந்திக் கரையேறிச் சற்றும் இளைக்காமல் மிக்க விரைவாய் ஓடி வந்தான். தொடர்ந்த மூவரில் இருவர் வாய்க்காலில் இறங்கி நீந்தினார்கள். மூன்றுமவன் நீந்தப் பழகினவன் அல்லன்; ஆதலால், அக்கரையில் அவர்களைப் பார்த்த வண்ணமாய் நின்று, சற்றுநேரஞ் சென்றபின் திரும்பி, மெதுவாய்ச் சென்று விட்டான். அவ்வளவில் அவன் பேறு உள்ளவன் என்றே கூறவேண்டும்.

### அவர்களில் ஒருவனைப் பிடிக்க முயன்றேன்

நீரோடையில் இறங்கி நீந்தின இருவர் அதைத் தாண்டிக் கரைசேர்ந்த மனிதனைப் போல அவ்வளவு விரைவாய் நீந்தவில்லை. அவர்கள் அதைத் தாண்டுவதற்கு, முன்னவனுக்குச் சென்ற நேரத்தைப் போல மேலும் ஒரு பங்குக்கு அதிகம் சென்றது. ஒருவனை எனக்கு ஏவற்காரனாகவாயினும், தோழனாகவாயினும், உதவியாளனாகவாயினும் அமைத்துக் கொள்வதற்கு ஏற்ற நேரம் இதுதான் என்றும், இந்த எளிய மனிதனுடைய உயிரைக் காப்பதற்கு எனக்கு இறைவன் வழியாகக் கட்டளை பிறந்திருப்பது இந்த நிகழ்ச்சிகளால் புலப்படுகிறதென்றும், என் உள்ளத்தில் உறுதியான உணர்ச்சியும் விருப்பமும் உண்டாயின.

உடனே அந்நொடிப் பொழுதிலேயே கூடிய விரைவில் ஏணியின் அடியில் வைத்த துப்பாக்கி இரண்டையும் எடுத்துக் கொண்டு, ஏணியில் ஏறிக் குன்றின் உச்சியை அடைந்தேன். பிறகு கடற்கரைக்கு எதிரான அதன் சாரலிற் குறுக்குவழி பிடித்து, விரைவில் இறங்கி, தொடரும் வேடருக்கும், தொடரப்படும் வேடனுக்கும் இடைவழியிற் சேர்ந்து, ஓடிப் பறந்த மனிதனை உரத்துக் கூவி அழைத்தேன். அவன் முதலில் என்னைத் திரும்பிப் பார்த்து, அவ்வேடருக்கு அஞ்சியது போல எனக்கும் அஞ்சிப் பதறினன். திரும்பி என் அருகே நெருங்கி வருமாறு கை அடையாளம் காட்டினேன்.

### வேடர் மூவரில் ஒருவனைக் கொன்றேன்

அன்றியும், தொடர்ந்த இருவரிடத்திற்கு மெதுவாய்ப் போய் அவர்களில் முதலில் வந்தவன்மேல் பாய்ந்து விழுந்து, எனது துப்பாக்கியின் அடிக்கட்டையால் ஓர் அடி அடித்து, அவனைத் தரையில் வீழ்த்தினேன். மற்ற வேடர்களுக்கு வெடி ஒலி கேட்குமென்று அஞ்சி நான் அவனைச் சுட்டுக் கொல்ல விரும்பவில்லை. அவர்கள் நிற்கும் தொலைவில் வெடி அதிர்ச்சி கேட்பதும், புகை தோன்றுவதும் ஐயமேதான். ஒருவனை அடித்து வீழ்த்தியவுடன் மற்றவன் அஞ்சி நின்ருன். நான் அவனிடத்திற்கு விரைந்து சென்றேன். நான் சற்று நெருங்கிச் சென்றபோது, அவன் தன் வில்லில் நாண் ஏற்றி, என் மேல் அம்பு விடுவதற்கு முயன்ருன். அதனைக்கண்ட நான் இனித் தாமதிக்கலாகாது என்று எண்ணி அவன்மீது ஒரு குண்டு செலுத்தினேன். உடனே அவன் பிணமாகிச் சாய்ந்தான். அவ்விருவருக்கும் அஞ்சி ஓடிய, மேற்கூறிய எளிய வேடன் நிலைத்து நின்ருன். தன் பகைஞர் இருவரும் விழுந்து இறந்தது கண்டான். (இருவரும் இறந்தார்கள் என்றே நினைத்தான்.) எனது துப்பாக்கியில் மருந்து பற்றியெரிந்த வெளிச்சத்தையும், வெடி ஒலியையும் கண்டும் கேட்டும் திகைத்து மரம்போல விறைத்து நின்ருன். அவனுக்கு என்னிடம் நெருங்கிவர மனம் ஒப்ப

வில்லை. ஓடுவதற்குக் கால் துணைசெய்யவில்லை. நான் மறுபடியும் உரத்துக்கூவி வரவழைத்தேன். நெருங்கி வரும்படி கைகாட்டி அழைத்தேன். எளிதில் குறிப்பு அறிந்து, சற்றுத் தொலைவு வருவதும், இடையில் நிற்பதும், பின்னும் சற்றுத் தொலைவு வருவதும் அதன் பிறகு நிற்பதுமாய் இருந்தான். நான் தன்னைப் பிடித்துப் பகைவர் இருவரையும் கொன்றதுபோல் கொல்வேன் என்று அவன் நினைத்து மனம் பதறி நின்றான் போலும்.

## மூன்றாவது வேடன் எனக்கு அடிமை ஆனான்

பின்பும் நான் அவனுக்கு அடையாளம் காட்டி வரவழைத்தேன். ஐயம் கொண்ட அவனுடைய மனத்தைத் தேற்றுவதற்காகப் பலவித குறிப்புக்கள் செய்தேன். அதனால் அவன் பத்துப் பன்னிரண்டடியளவில் நெருங்கி வந்து ஒருமுறை, தன் உயிரைக் காப்பாற்றியதற்காக எனக்கு வணக்கம் சொல்லும் குறிப்பாக முழந்தாள் மடக்கி மண்டியிட்டு நின்றான். நான் முகமலர்ச்சியுடன் அவனை அன்போடு பார்த்து, மேலும் அருகே நெருங்கி வருமாறு குறிப்புக் காட்டினேன். வரவர நெருங்கி என் அடியிற் சேர்ந்தபின், அவன் முழந்தாளிட்டு நின்று, தரைக்கு முத்தம் கொடுத்து, தன் தலையைத் தரையில் வைத்து, என் காலை எடுத்துப் பிடித்துத் தன் தலைமேல் வைத்தான். இஃது அவன் எனக்கு என்றும் அடிமைத்தொழில் செய்வதாக வாக்குறுதி தரும் குறிப்பு என்று கருதினேன். நான் அவனைத் தூக்கி நிறுத்திப் பாராட்டிப் பலவாறு தேற்றினேன். இவ்வளவோடு என் காரியம் நிறைவேறிற்றென்று செயல் ஒழிந்திருப்பதற்கு முடியவில்லை. துப்பாக்கியின் அடிக்கட்டையால் அடித்து வீழ்த்திய வேடன் இறந்தான் என்றேன் அன்றோ; அவன் இறக்கவில்லை. பட்ட அடியால் நினைவு இழந்து கிடந்தான். அறிவு தெளிந்தபின் அவன் உயிரோடு இருப்பதாகத் தெரிந்தது. அவனை என் துணைவனுக்குக் காட்டி அவன் இன்னும் இறக்கவில்லை என்று குறிப்பித்தேன். அவன் எனக்கு ஏதோ கூறினான். அவனுடைய கருத்து எனக்குத் தோன்றாதிருப்பினும் இருபத்

தைந்து ஆண்டு காலமாய் என் ஒலி தவிர வேற்று மனிதர் பேச்சு ஒலி கேளாத என் செவிக்கு அவனுடைய பேச்சின் ஒலி மிகவும் இனிமையாய் இருந்தது. அதைப் பற்றி நினைத்து மகிழ்வதற்கு அது நேரம் அன்று.

## இரண்டாவது வேடனும் கொல்லப்பட்டான்

நான் துப்பாக்கியால் அடித்து வீழ்த்திய வேடன் களை தெளிந்து எழுந்து உட்கார்ந்தான். அதனைக் கண்டு என்னிடத்தில் வந்து சேர்ந்த ஏழை மனிதன் அஞ்சி நடுங்கினான். அதை நான் கண்டு, அறிவு தெளிந்த வேடனைச் சுட்டுக் கொல்லக் கருதும் குறிப்போடு மற்றொரு துப்பாக்கியை அவனுக்கு நேரே பிடித்தேன். அப்பொழுது என்னிடத்தில் புகலாக வந்திருந்த வேடன் என்னுடைய இருப்புப் பட்டையில் தொங்கிய உறையில்லாக் கத்தியைக் கேட்டு வாங்கும் குறிப்போடு கை நீட்டினான். அவன் கருத்துப்படியே கத்தியைக் கொடுத்தேன். அவன் அதை வாங்கின உடனே விரைந்து ஓடி, ஒரு வீச்சில் பகைவனுடைய தலையை அறுத்தான். அவன் கத்தியை வீசித் தலையை வெட்டிய வியத்தகு வன்மையைக் கண்டு நான் வியந்தேன். வழக்கமாய்க் கொலைத் தண்டனையை நிறைவேற்றும் கொலைஞருக்கும் இல்லாத இவ்வரிய வன்மை மரவாள் அன்றி, எஃகிற் செய்த கத்தியைப் பிறந்தநாள் முதல் இதுவரையில் காணாத இவ் வேடனுக்கு எவ்வாறு உண்டாயிற் றென்று மிகவும் வியந்து மகிழ்ந்தேன். வாள் வன்மையில் இவ்வேடனுக்கு இவ்வளவு அரிய திறம் வாய்த்திருப்பதைக் கண்டால் எவரும் வியப்பு அடைவார்கள். வேடர் பயன்படுத்தும் மரவாள் அதிக உறுதியும் வன்மையும், கூர்மையும் உள்ளதென்றும், அவர்கள் அதனால் ஒரே வீச்சில் தலையை மட்டுமன்றிக் கைகளையும் அறுக்க வல்லவர் என்றும், பின்பு நான் தெரிந்து கொண்டேன். தலையை அறுத்தவுடன் அவன் பெற்ற வெற்றியைக் குறித்து மகிழ்ச்சி தெரிவிக்க, சிரித்துக்கொண்டு வந்து, பல மெய்ப்பாடு தோன்ற நின்று, அறுத்த தலையை

யும் கத்தியையும் என் காலடியில் கொண்டுவந்து வைத்தான்.

**பிணங்களைப் புதைத்தல்**

முதலில் மற்றொரு வேடனை இத்துணை நெடுந்தொலைவில் நின்று நான் கொன்றதைப் பற்றி அவனுக்கு அடங்காத வியப்பு உண்டாயிற்று. அதனால், பிணத்தைக் கைவிரலாற் சுட்டி, அருகிற்சென்று பார்ப்பதற்கு இடந்தர வேண்டும் என்று குறிப்பினால் கேட்டான். அவ்வாறே போகச் சொல்லிக் குறிப்புக் காட்டினேன். அவன் போய்ப் பார்த்துச் சற்றுநேரம் வியந்து நின்று, புரட்டிப் புரட்டி, மார்பிற் குண்டு பாய்ந்த வழியைப் பார்த்தான். குருதி அதிகம் வடிந்திருக்கவில்லை. உள்ளே வடிந்த குருதி வெளிப்படாமல் தடைப்பட்டிருந்தது. உயிர்த் தொடர்பு சிறிதும் இன்றிப் பிணம் விறைத்துப் போயிற்று. பின்பு அவன் அங்கிருந்த வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு வந்தான். நான் வீட்டுக்குப் போகத் திரும்பினேன். மேலும் வேடர் அவ்விடத்திற்கு வரக்கூடும் என்று குறிப்பினால் தெரிவித்து, என்னைத் தொடரும்படி அவனுக்குக் குறிப்புக் காட்டினேன்.

இனிமேல் வேடர் அவ்விடத்திற்கு வந்தால் அவர்கள் காணாதிருக்குமாறு அப்பிணங்களை மணலில் புதைக்க வேண்டும் என்று அவன் குறிப்பித்தபடி புதைக்கச் சொன்னேன். உடனே அவ்வேடன் மணலைத் தோண்டிப் பிணங்களை ஒவ்வொன்றாய்க் கால்மணி நேரத்திற்குள் புதைத்தான். பின்பு நான் அவனை அழைத்துக் கொண்டு தீவின் இடையில் உள்ள எனது முழைக்குச் சென்றேன். ஆகவே, கனவில் வேடன் என்னுடைய தோப்பில் அடைக்கலம் புகுந்தான் எனக் கண்ட பகுதியை நான் நிறைவேற விடவில்லை.

**என்னுடைய அடிமை படுத்துத் தூங்கினான்**

ஓடிக் களைத்திருந்த அவனுக்கு ரொட்டியும், ஒரு குலை கொடிமுந்திரிப் பழ வற்றலும் தின்னக் கொடுத்து, நீர்

வேட்கைக்கு ஒரு மிடறு தண்ணீர் குடிக்கக் கொடுத்தேன். பசி ஆறிக் களை தெளிந்தபின், நான் சில வேளை கம்பளம் விரித்துப் படுப்பதாய சிறு வைக்கோற் போரில் படுத்துத் தூங்குமாறு குறிப்புக் காட்டினேன். என்னிடத்தில் அடைக்கலம் புகுந்த ஏழை வேடன் படுத்துத் தூங்கினான்.

## அடிமையின் உறுப்பு அமைப்புக்கள் எவ்வாறு இருந்தன ?

அவனுடைய கை கால் முதலிய உறுப்புக்கள் நீண்டு இருந்தன. உடம்பு அதிகமாகப் பெருக்காமல் நெடியனாய் வளர்ந்து இருந்தான். அவனுக்கு என்னுடைய மதிப்பின் படி இருபத்தாறு அகவை இருக்கும். அவன் முகம் களையுள்ளதாய் இருந்தது. சினக்குறிப்புச் சிறிதும் இல்லை. அவனிடத்தில் ஆண் தன்மை விளங்கியது. முகத்திற் புன்னகைக் குறி தோன்றும்போது, அவன் இனிமையும் மென்மைத் தன்மையுமுள்ள ஐரோப்பியனுக்கு ஒப்பாக இருந்தான். அவன் தலைமயிர் ஆட்டு மயிர் போலச் சுருளாமல் நீண்டு கறுத்திருந்தது. அவன் அகன்ற ஏறு நெற்றியும், அறிவு விளங்கும் கூர்மையான விழிகளும் உடையவன். அவன் உடல் நிறம் இத்தன்மையுள்ளதென்று திட்டமாய்ச் சொல்வதற்கு இசையாது. அது கண்ணுக்கு அழகான இருண்ட மான் நிறத்தின் மினுக்கு உள்ளதாய் இருந்தது. பிரேஜிலியர் வர்ஜீனியர் முதலிய அமெரிக்க இந்தியர் உடல் நிறத்தைப்போல் அழகற்ற வெளிறிய மான்நிறம் உடையது அன்று. அவன் திரண்டு பருத்த முகமும், நீகிரோவர் மூக்கைப்போலச் சப்பையின்றிச் சிறுத்த மூக்கும், சிறந்த வாயும், மெல்லுதடும், ஒழுங்கு உடைய யானைத் தந்தம் போன்ற வெண்மையான அழகிய பல்லும் உடையவன். அரைமணி நேரத்திற்குச் சற்று அதிகம் அயர்ந்து தூங்காமல் இளந்தூக்கம் தூங்கி, எழுந்து முழையினின்று வெளியே வந்து, பக்கத்தில் உள்ள அடைப்பில் ஆடுகளில் பால் கறந்து கொண்டிருந்த என்னைக் கண்டு ஓடிவந்து, தரையிற் படுத்து, நான் செய்த உதவிக்கு நன்றியை மனத்தாழ்மையுடன் வெளியிடும் குறிப்புக் காட்டினான்.

**அடிமைக்கு நற்பழக்கங்களைக் கற்பித்தேன்**

பின்பு அவன் தன் வாழ்நாள் இறுதி வரையில் எனக்கு அடங்கி யிருந்து தொண்டு செய்து அடிமையாகி நடப்பதாகப் பலவாறு குறிப்பித்தான். அவன் குறிப்புக்களிற் பலவற்றை நான் அறிந்து, அவனிடத்தில் எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாகி யிருப்பதாகத் தெரிவித்தேன். சிறிது காலத்திற்குள் இருவரும் உரையாடல் நிகழ்த்துவதற்காக அவனுக்குப் பேசக் கற்றுக் கொடுத்தேன். நான் அவனைப் பகைவரிடமிருந்து தப்புவித்து ஆட்கொண்டது வெள்ளிக்கிழமை ஆதலால், அந்த நாளை நினைவில் வைத்திருக்கும் பொருட்டு, அவனுக்கு **வெள்ளிக்கிழமை** என்று பெயரிட்டேன். **ஆண்டை** என்னும் மொழியை உச்சரிக்கப் பயிற்றி அதுவே என் பெயர் என்று அவனுக்கு உணர்த்தினேன். ஆம்; இல்லை என்னும் சொற்களைக் கற்பித்து அவற்றின் பொருளைத் தெரிவித்தேன். ஒரு மண்கலயத்திற் பாலை வார்த்து, ரொட்டியை அதில் ஊறப் போட்டேன். பாலைப் பருகி, ரொட்டியைத் தின்று காட்டி, அவ்வாறு செய்யும்படி அவனிடம் கூறினேன். உடனேயே அவன் நான் செய்தபடி ரொட்டியைப் பாலில் தோய்த்துத் தின்று, அது மிக்க சுவையுடையதாய் இருக்கிறதென்று குறிப்பால் தெரிவித்தான்.

**பிணம் தின்ன விரும்பிய அடிமையின் கருத்தை மாற்றினேன்**

அன்று இரவு முழுவதும் அவனுடன் அங்கிருந்து, மறுநாள் அதிகாலையில் என்னுடன் வரக் குறிப்புக் காட்டி, உடுக்க ஆடை கொடுப்பதாகத் தெரிவித்தேன். ஆடையின்றியிருந்த அவனுக்கு என் சொல் மகிழ்ச்சி தந்தது. முதல் நாள் பகைவர் இருவர் உடல் அடக்கம் செய்யப்பட்ட இடத்திற் போகும்பொழுது, அவன் அவ்விடக் குறிப்பைக் காட்டி, குறிப்பு அறிவதற்காகத் தான் வைத்த அடையாளத்தைக் கண்பித்து, அப்பிணங்களைத் தோண்டி எடுத்து உண்ணவேண்டும் என்று எனக்குக் குறிப்பால் தெரிவித்தான். அதைப்பற்றி எனக்கு மிகுந்த

வெறுப்பும், அருவருப்பும் உண்டாகும் என்பதைக் குறிப் பித்தேன். மனிதருடைய ஊனை உண்பதற்கு நினைத்தாலே எனக்குக் குடல்புரண்டு வாய்க்குமட்டல் உண்டாகும் என்று காண்பித்தேன். அங்கே நிற்காமல் வருமாறு கை யசைத்து அழைத்தேன். உடனே அவன் தடை சொல் லாமல் என் சொல் கேட்டு வந்து விட்டான். நாங்கள் இருவரும் மலைஉச்சியில் ஏறியபின், அவனுடைய பகைவர் சென்றுவிட்டார்களா என்று தொலை நோக்குக் கண்ணாடி யாற் பார்த்தேன். அவர்களையாவது ஓடத்தையாவது காணவில்லை. அதனால் அவர்கள் கூட்டாளிகள் இருவரை யும் தேடிப் பார்க்க நினைக்காமல் போய்விட்டார்கள் என்று ஐயமறத் தெரிந்தது. அவர்கள் தங்கிச்சென்ற இடமும் மயக்க மறத் தோன்றியது.

### காட்டு மனிதர் செய்த வேலைகள்

இவ்வளவோடு எனக்கு மனநிறைவு உண்டாகவில்லை' அச்சம் தெளிந்து அதிகமான துணிவு எனக்கு உண்டா னதனால், அவ்விடத்திற்குச் சென்று, நடந்த நிகழ்ச்சிகளை முழுவதும் அறிந்து வருவதற்காக நானும் வெள்ளிக்கிழமை யும் போர்க் கருவிகளுடன்சென்றோம். வெள்ளிக்கிழமையின் கையில் உருவின கத்தியைக் கொடுத்தேன்' வில்லும் அம்பும் அவன் முதுகில் தொங்கும்படி கட்டிக்கொண்டு வந்தான். அவன் வில் வித்தையில் கைதேர்ந்தவன் என் பதை அறிந்தேன். மேலும் என் துப்பாக்கிகளில் ஒன்றை அவன் கையிற் கொடுத்து, மற்றிரண்டையும் நான் எடுத் துக்கொண்டு இருவரும் அவ்விடத்திற்குச் சென்றோம். போய்ச் சேர்ந்தபொழுது, அங்கே கண்ட அச்சம் தரும் காட்சியினால் எனது குருதி நாம்புகளிற் குளிர்ந்து, தடை பட்டு நிற்க, உடம்பு விறைத்து நடுங்கியது. என் மனம் குன்றிப் போயிற்று. நான் கண்ட காட்சி என்மட்டில் மிகுந்த துயர் தரும் காட்சியாக இருந்தது. வெள்ளிக் கிழமைக்கு அதைப்பற்றிக் கவலை சிறிதும் இல்லை. அவ் விடத்தில் மனிதர் எலும்புகள் நிறைந்திருந்தன. தரையில்

குருதி ஆறு பெருகிக் காய்ந்து கிடந்தது. பெரிய இறைச்சித் துண்டுகள் வெந்தவைகளும், வெட்டுண்டு கிழிந்தவைகளும், தின்றுவிட்ட சிறு துண்டுகளுமாய்ச் சிதறுண்டு கிடந்தன. பகைவரை வென்றபின், அவர்கள் பெருமகிழ்ச்சியோடு விருந்து உண்டதற்குப் பல சான்றுகளை அங்குக் கண்டோம். நான் கண்ட தலை ஓடுகள் மூன்று; கைகள் ஐந்து; கால் எலும்புகள், தொடை எலும்புகள் மூன்று, நான்கு. வேறு உடலுறுப்புக்கள் பலப்பல. அப்பொழுது வெள்ளிக்கிழமை இனிய 'செய்கை'யால் எனக்குத் தெரிவித்த செய்திகளைக் கூறுகின்றேன். "எங்கள் நாட்டுத் தலைவருக்கும், இவ்வேடர்களுக்கும் மிகக் கடுமையான போர் நடந்தது. நான் அவ்வரசன் பக்கத்தாரில் ஒருவன். பகைவர் போரில் பலரைச் சிறைபிடித்துக்கொன்று தின்பதற்காக நான்கு திசையிலும் கொண்டு சென்றார்கள். இவ்விடத்திற்கு அவர்களால் சிறைபிடித்துக்கொண்டு வரப்பட்டவர் நால்வர். அவர்களில் மூவரை இவ்வேடர் கொன்று தின்றுவிட்டார்கள். நான்காவது மனிதன் நான்தான்."

## மனிதர் இறைச்சியை நெருப்பில் இட்டு அழித்தல்

தலை ஓடு, எலும்பு, இறைச்சி முதலாக அங்கிருந்த உறுப்புக்கள் எல்லாவற்றையும், வெள்ளிக்கிழமையைக் கொண்டு ஒன்றாய்ச் சேர்த்து ஒரு குவியலாய்ப் போட்டு, நெருப்புவைத்துச் சாம்பல் ஆகிற வரையில் கொளுத்தினேன். பிறந்தநாள் முதல் மனிதர் ஊன் தின்று பழகிய வெள்ளிக்கிழமையின் கண்ணும் மனமும் இறைச்சியிலேயே நாட்டமாய் இருந்தன என்று அவன் முகக்குறியால் எனக்கு நன்கு தெரிந்தது. மனிதர் ஊனை நினைக்கவும், கண்ணுக்கெதிரில் காணவும் எனக்கு மிகுந்த அருவருப்பும், வாய்க்குமட்டலும் உண்டானதைக் கண்டு, அவன்தன் அவாவை வெளியிடத் துணியவில்லை. இறைச்சியைத் தின்ன முயன்றால், அவனை அப்பொழுதே அவ்விடத்திலேயே கொன்றுவிடுவேன் என்பதாக அவனுக்குத் தெரிவித்தேன்.

## அடிமை வேடனுக்கு உடைகள் அளித்தேன்

மனிதர் இறைச்சியை எரித்தபின் மலைமுழைக்கு வந்தோம். அதன்பிறகு வெள்ளிக்கிழமைக்கு வேண்டிய உடை வகைகளைத் தேர்ந்து தைக்கத் தொடங்கினேன். முதல்முதல் பழுதுபட்ட கப்பலில் பீரங்கிச் சேவகன் பெட்டியிற் கண்டெடுத்த சணல் நூல் நெசவுக் காற் சட்டையை வெள்ளிக்கிழமையினுடைய அளவுக்கு ஏற்ற படி வெட்டித் தைத்துக் கொடுத்தேன். பின்பு வெள்ளாட்டுத் தோலினால் மார்புக்கு ஏற்ற உறை ஒன்று தைத்துக் கொடுத்தேன். நாளடைவில் என் ஆடைகளை நானே தைக்கப் பழகி யிருந்ததனால், தையல் வேலையில் எனக்கு ஒருவாறு கை படிந்திருந்தது. முயலின் தோலினால் அவன் தலைக்கு அளவாகச் சிறந்த குல்லா ஒன்று செய்து கொடுத்தேன். தலைவனாகிய என்னைப் போலவே அடிமையாகிய வெள்ளிக்கிழமையும் காற்சட்டையும், மார்பு உறையும் அணிந்து, தலையிற்குல்லா இட்டுக்கொண்டு சிறப்பாயிருந்ததனால் அவன் மிகுந்த மனக்களிப்பு அடைந்தான். சட்டை அணிந்துகொண்டு உலாவுவது முதலில் அவனுக்குத் தொல்லையாகத் தோன்றியது. மார்புச்சட்டையின் கையுறைகள் அவன் தோளில் அழுந்தி அவனைச் சற்று வருத்தின. சட்டையின் கையுறையைப் பிரித்துச் சற்று நெகிழ்ச்சியாய்த் தைத்துக் கொடுத்தேன். நாளுக்குநாள் பழக்கப்பட்டதனால், பிறகு சட்டை அணிந்துகொள்வது அவனுக்கு இன்பமாகத் தெரிந்தது.

## அடிமை வேடன் உறைவதற்கு இடம் அளித்தல்

நானும் அவனும் முழையில் வந்து சேர்ந்த மறுநாள் அவனை எவ்விடத்தில் இருக்கச் செய்யவேண்டும் என்று நினைக்கத் தொடங்கினேன். அவனுக்கு எத்தகைய இடையூறும் இன்றி யிருக்கவும், நானும் கவலையற்றிருக்கவும் ஏற்றபடி கோட்டையின் உள் மதிலுக்கும் வெளிமதிலுக்கும் இடைவெளியில் ஒரு சிறு கூடாரத்தை உண்டாக்கி, அதில் அவனைக் குடியிருக்கும்படி செய்தேன்.

அங்கிருந்து முழைக்குள் செல்வதற்கு ஏற்பட்டிருந்த வாயிலில் ஒருவாறு செய்த வாயிற்படியை நாட்டினேன். பின்பு பலகைக் கதவு ஒன்று இணைத்து, வாயில் மட்டத்திற்குச் சற்று உட்பட அதைக் குகைக்குள் இருந்து திறப்பதற்கேற்றபடி மாட்டினேன். இரவு நேரத்தில் நான் கதவைச் சாத்தித் தாழ் இட்டு, ஏணிகளை உள்ளேவைத்துக்கொண்டேன். அதனால், அவன் எனது உள் மதிலைத் தாண்டி முழைக்குள் எவ்விதத்திலும் வருதற்கு இசையாது. ஒருவேளை வருத்தப்பட்டு ஏறி வரத் துணிவானானால், நான் எவ்வளவு அயர்ந்த தூக்கத்தில் இருப்பினும் ஒலி கேட்டு விழிக்காது இரேன். எனது முதலாவது மதிலில் நீளமான கொம்புகள் வைத்துக், குன்றின் சாரலிற் சார்த்தித் தாழ்வாரம் இறக்கிக் குறுக்குக் கழிகள் பரப்பி நாணலைப்போல் உறுதியுள்ள வைக்கோலை அடர்த்தியாகப் போட்டு வேய்ந்திருந்தேன். அத்தாழ்வாரத்திற்குள் என் கூடாரம் முழுதும் அடங்கி யிருந்தது. ஏணியேறி உட்செல்வதற்கும், வெளியில் வருவதற்கும் ஏற்பட்டிருந்த வாயிலில் ஒருவிதக் கள்ளக் கதவு போட்டிருந்தேன். அதை வெளியில் நின்று எவரேனும் திறந்தால், அஃது உடனே கழன்று விழுந்து விடும். விழும்போது உண்டாகும் ஒலி கேட்டு நான் விழித்துக் கொள்வேன். என்னுடைய படைக் கருவிகளை இரவு நேரங்களில் தவறாது குகையினுள் வைத்திருந்தேன்.

**அடிமை வேடனுடைய நல்ல பண்புகள்**

இவ்விதப் பாதுகாப்புச் செய்திருக்கத் தேவையில்லை. வெள்ளிக்கிழமை நல்ல பண்புகளை யுடையவன். ஆயினும் பாதுகாப்பு இன்றி நான் இருப்பது எவ்வாறு இயலும். வெள்ளிக்கிழமையைக் காட்டிலும் அதிக நன்றியும்,அன்பும், உண்மையும் உள்ள ஏவலாள் எவரிடத்திலும் இருந்ததில்லை எனக் கூறலாம். வெள்ளிக்கிழமையினிடத்தில் சினங்கொள்ளும் தீயபண்பாவது, முரட்டுத்தன்மையாவது, வஞ்சகமாவது இல்லை. அவன் என்னுடைய சொல்லைக் கேட்டு, என் கருத்து அறிந்து, எனக்குப் பணிகள் புரிந்து

வந்தான். அவன் என்னைத் தந்தைபோல எண்ணி, என் மேல் அதிக அன்பும், பற்றும் உடையவனாய் இருந்தான். இடர்வரும் வேளையில் தன் உயிரைக் கொடுத்தாயினும் என்னைக் காப்பாற்றுவதற்குப் பின்னிடமாட்டான். அவன் இவ்விதச் சிறந்த பண்புகள் உடையவன் என்று எனக்கு ஐயந்திரிபு அறப் பலவாறு தெரிந்ததனால், அவனால் எனக்கு ஏதேனும் தீங்கு நேரிடும் என்று சிறிதும் கவலைப் படவேண்டியது இல்லை என்று அறிந்தேன்.

## வேடருக்கு இறைவன் நல்லறிவு தராதது ஏன்?

படைக்கப்பட்ட எல்லாவுயிர்களையும் அவ்வவற்றுக்கு ஏற்றபடி பாதுகாத்து ஆண்டு நடத்திவரும் கடவுள், கூட்டமான வேடர்கள் தம் உட்கருவிகளாகிய மனம், அறிவு முதலியவைகளை நல்ல செயல்களிற் செலுத்திப் பயன்படச் செய்யாதபடி தடுத்து வைத்திருப்பதற்குக் காரணம் என்ன? இறைவனுடைய திருவுள்ளம் ஏன் இரங்கவில்லை? என்பதை நான் அறியேன். ஆயினும் எங்களைப் போல அவர்களுக்கும், எள்ளளவும் குறைவின்றி மனம் முதலிய உட்கருவிகளும், அறிவும், விருப்பங்களும், அன்பு உள்ளமும், உதவி செய்யும் பண்பும், தமக்குத் தீங்கு செய்தவர்களுக்குத் தீங்கு செய்யும் நினைவும், செய்ந்நன்றி மறவாத சிறந்த அறிவும், வஞ்சனை அற்ற தன்மையும், நேர்மையும், நன்மை செய்தற்கும் பிறர் செய்த நன்மையைப் பெற்று நுகர்தற்குரிய திறமையும் கடவுள் அருளால் கிடைத்திருக்கின்றன என்பவற்றையும் நினைத்து வியப்புக் கொண்டேன். நம் உட்கருவிகளாகிய மனம் முதலியன இறைவன் திருவருளாகிய விளக்கின் ஒளியினாலும், திருமொழியாகிய மறை மொழியினாலும், நமது அறிவினாலும் மயக்கம் நீங்கித் தெளிந்திருந்தும், அவைகள் எல்லாவற்றையும் பயன்படுத்தாது வீணாக்குகின்றோம். நாம மேன்மையடையத்தக்க அறிவைக் கடவுள் நமக்கு அளித்திருப்பதுபோலப், பல ஆயிரம் மக்களாகிய வேடருக்கும் அருளியிருப்பாரானால், அவர்கள் அவ்வறிவை நன்கு மதித்துப் போற்றி முறையாகப் பயன்படுத்துவார்கள் அன்றோ; அவர்

களுக்கு இந்த மேலான அறிவை அளிக்காமல் கடவுள் மறைத்த காரணம் என்னையோ? என்று பல வேளைகளில் நினைத்துத் துன்புற்றேன்.

## இறைவன் செயல் நாம் அறிய முடியாதது

மேற்கூறியவாறு நினைக்கின்ற நேரங்களிற் கடவுள் சிறந்த அறிவின் மேன்மையைச் சிலருக்கு அளித்துச், சில ருக்கு மறுத்து, அவ்விருதிறத்தாரையும் முறையின்றி ஒரே கட்டளையிற் செலுத்துவது முறையன்று என இறை வனுடைய செயலைக் குறித்துச் சிறிது அளவுக்கு மீறியும் நினைத்தேன். ஆயினும் என்னுடைய நினைவுகளை இவ் வாறு முறை கடந்து போகாமல் பின்வரும் காரணங்களால் தடை செய்து நிறுத்தினேன். முதலாவது, இவ் வேடர் களை முறை வழி நின்று தண்டனையடையும்படி செய்ததற் குக் காரணம் இன்னதென்று அறியோம். அளவற்ற தூய்மையும், முறையும் கடவுளுக்கு இயற்கை ஆதலால், அவர் இவ்வேடர்களைத் தமது திருமுன்னின்று விலகும் படி திட்டம் வகுத்திருப்பாரானல், மறை நூல்களிற் கூறிய படி, அவர்களுக்கு மேற்கோளாய் ஏற்பட்ட சிறிது அறி வையும் தள்ளிக் கொடுவினையாளர் ஆனதே அதன்காரண மாய் இருக்கலாம். மேலும் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் துன்பங்களின் அடிப்படைக் காரணம் நமது அறிவுக்குத் தோன்றுதிருப்பினும், அத்துன்பங்கள் முறைமையானவை கள் என்று அவர்கள் அறிவு ஒப்புக்கொள்ளவும் கூடும். இரண்டாவது—கடவுள்—குலாலனுக்கு ஒப்பானவர். மனி தர் அவர் வனையும் பாண்டத்திற்கு முதற் காரணமான களி மண்ணுக்கு ஒப்பானவர். பாண்டம் குலாலனைப் பார்த்து, "நீ என்னை இவ்வாறு உருவு அமைத்து உண் டாக்கின காரணம் என்ன?" என்று கேட்பது முறை யாகுமா?

## அடிமை வேடனுக்கு வேலை செய்யவும் பேசவும் கற்பித்தேன்

இதனை இவ்வளவோடு நிறுத்திவிடுகிறேன். புதிய வனுய் வரப்பெற்ற எனது தோழனைப்பற்றி நினைப்பின்

எனக்கு அவனிடத்தில் மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. அவனால் அதிகப்பயனும், கையுதவியும், நன்மைகளும் உண்டாகும் பொருட்டு, அவனுக்கு என்ன என்ன கற்பிக்கத்தகுமோ அவை அனைத்தையும் ஆர்வத்துடன் கற்பித்து வந்தேன். முதன்மையாய்த் தடையின்றிப் பேசவும், நான் சொல்வதை அறியவும், அவனுக்குப் பயிற்சியளித்தேன். கற்பிக்கப்படுவதை எளிதில் கற்கும் திறம் அவனுக்கு மற்றவரைக் காட்டிலும் அதிகமாய் இருந்தது. நான் சொல்வது அவனுக்குப் புலப்படும் பொழுதும், தன் கருத்தை அவன் எனக்குத் தெரிவிக்கும்பொழுதும் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியும் உள்ளக் கிளர்ச்சியும் உண்டாயின. அவன் எப்பொழுதும் இளைக்காமல் இதில் கண்ணும் கருத்துமாய் இருந்தான். அதனால் அவனுடன் பேசுவது எனக்கு மிகவும் இன்பமாய் இருந்தது. இப்பொழுது எனக்கு மனக்குறை ஏதும் இல்லை. இனி, வேடரால் எனக்கு இடையூறு நேராதிருக்குமானால், இறக்கும் அளவும், இவ்விடத்திலேயே வாழ்ந்தாலும் குற்றம் இல்லை என்று எண்ணியிருந்தேன்.

# பதினைந்தாம் அதிகாரம்

## துப்பாக்கி வெடி கண்டு அடிமை வேடன் திகைத்தான்

கோட்டைக்குத் திரும்பி இரண்டு மூன்று நாள் சென்ற பின், அஞ்சத்தக்கவாறு மனிதரைக் கொன்று, அவ்விறைச்சியைத் தின்று பழகி, அதில் சுவை கண்ட வெள்ளிக்கிழமைக்கு, இனிமேல் மனிதர் இறைச்சியில் நோக்கமும், விருப்பமும் இல்லாதிருக்கும்படி செய்வதற்காக, வேறு இறைச்சியை அவனுக்கு உண்ணக் கொடுத்து அதில் அவாவை உண்டாக்கவேண்டும் என்று எண்ணி, ஒரு நாள் அவனைக் காட்டுக்கு அழைத்துக்கொண்டு சென்றேன். எனது மந்தையில் இருந்த ஓர் ஆட்டுக் குட்டியைக் கழுத்து அறுத்து, வீட்டுக்குக் கொண்டு வந்து சமைக்கக் கருதிச் சென்றேன். அவ்வாறு சென்றபொழுது மரநிழல் ஒதுக்கில் ஒரு வெள்ளாடும், அதன் இரண்டு குட்டிகளும் படுத்திருக்கக் கண்டேன். நான் வெள்ளிக்கிழமையைப் பிடித்து அசையாமல் நிற்கச் சொல்லி, அக்குட்டிகளில் ஒன்றைத் துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தினேன். தன் பகைவனை வேடன் ஒருவனை நான் கொன்றபோது சற்றுத் தொலைவில் நின்று கண்டிருந்தான்; ஆயினும் நான் கொன்றவகை இன்னது என்று அறியாதிருந்தான். அதனால் மூடனாகிய வெள்ளிக்கிழமை வியப்பினால் கலங்கி நடுங்கித் திகைத்து நின்றான். அவன் மனம் சலித்துத் தளர்ந்து போய்விடும் என்றும் நான் நினைத்தேன். நான் சுட்ட ஆட்டுக்குட்டியை அவன் காணவும் இல்லை. அஃது இறந்ததென்று அறியவும் இல்லை. தன் மார்பு உறையை விரைவுடன் பிரித்து, தன் உடம்பிற் புண்பட்டதோ என்று பார்த்துத் தன்னைக் கொல்வதற்கு நான் கருத்துக்கொண்டிருப்பதாக நினைத்துப் பதறினான். என் பாதத்து அருகில் முழந்தாளிட்டு நின்று என் முழந்தாளைத் தொட்டு, ஓயாமல் என்னென்னவோ சொல்லிக்கொண்டிருந்தான்.

அதன் பொருள் எனக்குத் தெரியாது. தன்னைக் கொல்லா திருக்கும்படி வேண்டிக்கொண்டான் என்று பொதுவாக முடிவுசெய்து கொண்டேன்.

### வெள்ளிக்கிழமை துப்பாக்கிக்கு வணக்கம் செய்தல்

நான் அவனுக்குத் தீங்கு ஒன்றும் செய்யேன் என் பதைப் புலப்படுத்த விரும்பினேன். அதனால் அவன் கையைப் பிடித்து, அவனைப் பார்த்து நகைத்துக் குண்டு பட்டு விழுந்த ஆட்டுக்குட்டியை விரற்குறிப்பால் காண் பித்து, ஓடிப்போய் அதை எடுத்துவரும்படி கூறினேன். அவன் எடுத்துக்கொண்டு வந்தான். பின்பு அக்குட்டி எவ்வாறு கொல்லப்பட்டது என்று அவன் அதைப் பார்த் துப் பார்த்து வியந்துகொண்டு நின்றான். அப்பொழுது மறுபடியும் துப்பாக்கியில் மருந்து கெட்டித்து வைத்தேன். சற்று நேரம் சென்ற பின், பருந்தின் சாயலான பெரிய பறவை ஒன்று, துப்பாக்கிக் குண்டு பாயும் தொலைவிற்குள் ஒரு மரத்தில் இருந்தது கண்டேன். துப்பாக்கியால் சுடும் வழக்கத்தை வெள்ளிக்கிழமைக்குத் தெரிவிப்பதற்காக, அவனை மீண்டும் என் அருகில் வரச்சொல்லிப், பறவைக்கு நேர் குறியாய்த் துப்பாக்கியைப் பிடித்தேன். பின்பு அவ னுக்குத் துப்பாக்கியையும், பறவையையும், அதன் கீழ்த் தரையையும் காட்டி, அத்துப்பாக்கியால் அந்தப் பறவை யைச் சுட்டு, அவ்விடத்தில் வீழ்த்துவேன் என்று குறிப் பித்தேன். பிறகு அவனுக்கு என்னுடைய மனக் குறிப்பு விளங்கியது. அதனால் அவன் பார்த்துக்கொண்டு நின்ற போதே சுட்டேன். நொடிப்பொழுதினுள் அந்தப்பறவை கீழே விழுந்தது. பருந்தின் சாயலாய்ப் பெரிதாக அஃது இருப்பினும் உண்மையில் அப்பறவை கிளியேயாகும். நான் எவ்வளவு தேற்றியும் அவனுக்கு அச்சம் நீங்கவில்லை. பறவை விழுந்ததைக் கண்டவுடன் அவன் நடுநடுங்கி அஞ்சினான். துப்பாக்கியில் நான் மருந்து நிரப்பியதை அவன் காணாததனால் அவனுக்கு மிகுந்த மயக்கம் உண்டா யிற்று. அருகிலாயினும் தொலைவிலாயினும் நிற்கும் மனி தரையும் விலங்குகளையும், பறவை முதலிய எல்லா உயிர்

களையும் அழித்துக்கொல்லத்தக்க வியப்புடைய உயிர்
கொல்லிப் பொருள் ஏதோ ஒன்று அத்துப்பாக்கிக்குள்
இருக்கிறது என்று எண்ணி, ஏக்கம் கொண்டு நின்றான்.
இதனால் அவனுக்கு உண்டான மயக்கம் தீரப் பலநாட்கள்
சென்றன. நான் இடம் கொடுப்பேனானால் அவன் எனக்
கும் துப்பாக்கிக்கும் இறைவனுக்குச் செய்யும் வழிபாட்
டைச் செய்வான் என்பதில் ஐயம் இல்லை. அன்று முதல்
பலநாள் வரையில் அவன் துப்பாக்கியைத் தொடுவதற்கும்
துணியவில்லை. தனித்திருக்கும்பொழுது, அவன் அத்
துப்பாக்கியுடன் உரையாடல் நடத்திவந்தான். அத்துப்
பாக்கி தன் வினாக்களுக்கு மறுமொழி கூறுவதாகவும்
நினைத்தான். அவன் என்னுடன் பேசப் பழகிய பிறகு
உனக்கும் துப்பாக்கிக்கும் நடந்த உரையாடல் என்ன
வென்று கேட்டேன். என் உயிரைக் கொல்லாதிருக்கும்படி
வேண்டிக்கொண்டேன் என்று அவன் விடை கூறினான்.

**உப்பு இட்ட உணவை உண்ண மறுத்தல்**

இதைப்பற்றி அவனுக்கு உண்டான வியப்பும் மயக்க
மும் சற்றுத் தெளிந்த பின், நான் சுட்டு வீழ்த்திய பற
வையை ஓடிப்போய் எடுத்துவரச் சொன்னேன். குற்றுயி
ராய் விழுந்த கிளி, துடித்துப் பதைத்துச் சிறகடித்து,
விழுந்த இடத்திற்குச் சற்றுத் தொலைவில் தத்திச்சென்று
மறைந்திருந்தது. அதனால் அவன் அதைத் தேடிப்
பார்த்து எடுத்துவரச் சிறிது நேரம் சென்றது. எடுத்து
வந்த பின் துப்பாக்கி சுடுவதன் சூழ்ச்சியறியாத அவனுக்
குத் தெரியாதபடி மீண்டும் அத்துப்பாக்கியில் மருந்து
நிரப்பி, இனி என் கண்ணுக்கு எதிர்ப்படும்
யாவது பறவையையாவது சுடுவதற்குக்
நின்றேன். ஒன்றையும் காணவில்லை. அதனால், ஆட்டுக்
குட்டியை எடுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினோம்.
அன்று மாலை நான் தோல் உரித்து, இறைச்சியைத்
துண்டு துண்டாய் வெட்டி, ஒரு பாண்டத்திற் கறிசமைத்து
மற்றொரு பாண்டத்தில் சுவையுள்ள குழம்பு வைத்தேன்.
சமைத்த கறியில் சிறிது அளவு நான் தின்று பின்பு

வெள்ளிக்கிழமைக்கும் கொடுத்தேன், அவன் அதை மகிழ்ச்சியுடன் வாங்கித் தின்றான். அவன் நாவிற்கு அவ் விறைச்சி இனிமையாய் இருந்ததாகப் புலப்பட்டது. இறைச்சியுடன் உப்புச் சேர்த்து நான் தின்றதைக் கண்டு, அவன் மிகவும் வியப்பு அடைந்து, உப்புத் தின்னத் தகாது என்று எனக்குக் குறிப்பித்தான். நான் சிறிது உப்பை அவன் வாயில் போட்டேன். அவன் உடனே அருவருத்து உமிழ்ந்து காறித்துப்பித் தூய நீரால் வாய் கழுவினான். பின்பு நான் உப்பு இல்லாமல் இறைச்சியை மட்டும் எனது வாயில் இட்டு, அவன் செய்தபடி அரு வருத்து உமிழ்ந்து காறித்துப்பினேன். அவனுக்கு உப்பைப்பற்றி அருவருப்பு உண்டானதுபோல, உப்பு இடாத இறைச்சியைப் பற்றி எனக்கும் அருவருப்பு உண் டாயிற்றென்று குறிப்பித்தேன். பல நாள் வரையில் பல வாறு முயன்றும் உப்பினிடத்தில் அவனுக்கு விருப்பம் உண்டாகவில்லை. நெடுநாள் வரையில் அவன் இறைச்சிக் காவது, குழம்புக்காவது உப்பிட்டுச் சாப்பிடவில்லை ; நாள் பட்டபின் மிகவும் சிறிது உப்பு மட்டும் சேர்த்து உண்ணப் பயின்றான்.

### இறைச்சியைப் பொரித்து உண்ணுதல்

முதல்நாள் அவனுக்கு இறைச்சியை வேக வைத்துக் குழம்பு காய்ச்சிக் கொடுத்து அருந்தச் செய்ததனால், மறு நாள் ஒரு துண்டு இறைச்சியைப் பொரியல் கறிசெய்து கொடுக்க நினைத்தேன். அடுப்பு மூட்டி அதன் இருபக்கத் திலும், இரண்டு கொம்புகள் நாட்டி அக்கொம்புகளின் இடையே குறுக்குக் கொம்பு ஒன்று கட்டி, அதன் நடுவில் கயிறு கட்டித் தொங்கவிட்டுத் தொங்கும் முனையில் இறைச்சித் துண்டைக் கட்டினேன். எரியும் அடுப்பின் அனல், ஊஞ்சல்போல் ஆடிய இறைச்சித் துண்டில் ஏற ஏற, அது நன்றாய் வெந்தது. இந்தச் செய்கையைக் கண்டு **வெள்ளிக்கிழமை** மிகவும் வியப்பு அடைந்தான். மேற் கூறியபடி, இங்கிலாந்தில் பலர் இறைச்சி சுட்டதைப் பார்த்திருக்கிறேன். வெந்தபின் அவன் அவ்விறைச்சியைத்

தின்று பார்த்தான். நாவிற்குச் சுவையாய் இருந்ததனால், தன் மகிழ்ச்சியை எனக்குப் பலவிதக் குறிப்புகளால் தெரிவித்தான், பின்பு மனிதர் ஊனை இனி, ஒருபொழுதும் தான் உண்பதில்லை என்று அவன் கூறினன். அதனைக் கேட்டு நான் மிகவும் மகிழ்ச்சி யடைந்தேன்.

### ரொட்டி சுடவும் கற்றுக் கொடுத்தேன்

மறுநாள் அவனைக்கொண்டு இதற்கு முன் நான் ஓரிடத்தில் கூறியபடி போர் அடிப்பித்துக் கூலத்தைக் காற்றில் தூற்றும்படி செய்தேன். கூலத்தின் மாவினால் ரொட்டி சுட்டுத் தின்னலாம் என்பதை நான் அவனுக்கு உணர்த்தினேன். போர் அடித்துத் தூற்றிக் காண்பித்த போது, அவன் நான் செய்தபடியே திறமையோடு செய்தான். பிறகு மா அரைத்துப் பிசைந்து புளிக்க வைத்து ரொட்டி சுட்டுக் காண்பித்தேன். சிறிது காலத்திற்குள் இவ் வேலைகள் எல்லாவற்றையும் வெள்ளிக்கிழமை என்னைப் போலப் பழுது இன்றிச் செய்வதற்கு வல்லமை பெற்றான்.

### வெள்ளிக்கிழமை மிகவும் வருந்தி யுழைத்தல்

இனி இருவருடைய உணவுக்கும் வேண்டிய கூலம் விளைவிக்க வேண்டும் ஆதலால், அதிக நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்யக் கருதி, அதிகப் பரப்புள்ள நிலம் இன்னதென்று கண்டு, முன்போல வேலி அடைக்கத் தொடங்கினேன். இவ்வேலையை வெள்ளிக்கிழமையும் வருத்தம் பாராமல், மனநிறைவோடும் மகிழ்ச்சியோடும் செய்தான். இதுவரையில் தனியே இருந்த என்னுடன் நீயும் வந்து கூடியதனால், இருவருக்கும் உணவுக்குப் போதுமான கூலம் விளைவிக்கும் பொருட்டு, முன் பயிர் செய்த நிலத்துடன் இந்நிலத்தையும் புதிதாகச் சேர்த்துப் பயிரிடத் தொடங்கினேன் என்று அவனுக்குக் கூறினேன். நான் கூறியது அவனுக்கு நன்றாய்ப் புலப்பட்டது. என் பொருட்டாக நீர் முன்னிலும் அதிக வேலை செய்ய நேர்ந்ததனால் இன்னது செய்ய வேண்டும் என்று சொல்வீ

ளுல் நான் வருத்தம் பாராட்டாமல் உமக்காக மிக வருந்தி உழைப்பேன் என்று என்னிடம் தெரிவித்தான்.

**அவனுடன் பேசுவதில் எனக்குற்ற இன்பம்**

இத்தீவில் வாழ்ந்த காலத்தில் இந்த ஆண்டுபோல எந்த ஆண்டிலும் எனக்கு அதிக இன்பம் உண்டானதில்லை. வெள்ளிக்கிழமை ஒருவாறு பேசுதலிலும் நான் எடுத்து வரச் சொல்லும் பொருள்களின் பெயர்களை அறிவதிலும் தேர்ச்சி பெற்ருன். நான் அவனை அவ்வப்போது அனுப்பும் இடங்களின் குறிப்பையும் அறிவதற்கு நன்கு பயின்ருன். அவன் என்னுடன் தாராளமாகப் பேசினுன். ஆகவே பல ஆண்டுகள் வரையில் எவருடனும் பேசாமல் மௌனமாய் இருந்த நான் இவன் பொருட்டாக என் தாய் மொழியைப் பேசத் தொடங்கினேன். அவனுடன் பேசுவது எனக்கு இன்பமாய் இருந்தது. அஃதன்றி அவனைப்பற்றி எனக்கு மிகுந்த நல்ல எண்ணமும் உண்டாயிற்று. அவன் வஞ்சனை அற்ற உண்மையாளன் என்று நாளடைவில் பல சான்றுகள் புலப்படுத்தின. அதனுல் அவனிடத்தில் நெஞ்சார அன்பு கூர்ந்தேன். அவனும் இதற்கு முன் என்னைப்போல எவரிடமும் அன்பு பாராட்டியதில்லையென்று அவனுடைய செயல்களால் நாளடைவில் தெரிந்துகொண்டேன்.

**வெள்ளிக்கிழமையின் பழைய வரலாறு யாது?**

மீண்டும் தன் நாட்டிற்குச் செல்ல அவனுக்கு விருப்பம் உண்டா என ஆராய்ந்து அறியத் தொடங்கினேன். நான் கேட்கும் எந்தக் கேள்விக்கும் தடையின்றி விடை கூறத் தக்கவாறு நான் அவனுக்கு ஆங்கில மொழியைக் கற்பித்திருந்தேன். உன் கூட்டத்தார் போரில் ஒரு பொழுதும் வெற்றி பெற்றதில்லையா என்று நான் கேட்டதற்கு அவன் புன்னகை செய்து "ஆமாம், போர் நடக்கும் பொழுதெல்லாம் நாங்களே திறம்படப் போரிடுகிருேம்." என்ருன். இவ்வாறு எனக்கும் அவனுக்கும் பின்வரும் உரையாடல் நடைபெற்றது. வெள்ளிக்கிழமை, நீங்கள்

எப்பொழுதும் திறம்படப் போரிடுவது உண்மையானால் பகைவர் எப்படி உன்னைப் பிடித்துக்கொண்டனர்?

**வெள்ளிக்கிழமை:**—என்னை அவர்கள் பிடித்துக்கொண்டது பெரிதன்று; என்னுடைய இனத்தார் பகைஞரை நன்றாய்த் தோற்கடித்தார்கள்.

**தலைவன்:**—தோற்கடித்தார்களா? எப்படி? உன் இனத்தார் பகைஞரைத் தோற்கடித்தால், நீ அவர்கள் கையில் அகப்பட்டது எவ்வாறு?

**வெள்ளிக்கிழமை:**—என் இனத்தார் அங்கங்கே கூட்டம் கூட்டமாய்ப் பிரிந்து, பகைஞருடன் போர்புரிந்தனர். நான் சேர்ந்த கூட்டத்தில் பகைஞர் தொகை மிகுதியாய் இருந்தது. அதனால் அவர்கள் என்னுடன் பின்னும் மூவரைச் சிறை பிடித்தார்கள். சற்றுத் தொலைவில் நடந்த போரில் பகைவர் தொகையைவிட என் இனத்தார் தொகை அதிகம். அங்கே பகைவரில் ஆயிரம் இரண்டாயிரம் பேர் என் இனத்தாரால் சிறை பிடிக்கப்பட்டார்கள்.

**தலைவன்:**—பகைவர் இடத்தினின்று உன் இனத்தார் உன்னைச் சிறைமீட்காது விட்ட காரணம் என்ன?

**வெள்ளிக்கிழமை:**—பகைவர் என்னையும் இன்னும் மூவரையும் பிடித்து விரைவிற் கொண்டோடி, ஓடத்தில் ஏற்றி இக்கரையிற் சேர்த்தார்கள். அப்பொழுது அவர்களைத் தொடர்ந்து பிடிப்பதற்கு என் இனத்தாரிடம் ஓடம் இல்லை.

**தலைவன்:**—நான் கூறுவதைக்கேள். வெள்ளிக்கிழமை சிறை பிடிப்பவர்களை உன் இனத்தார் என்ன செய்வார்கள்? இக்கரையில் வந்த உன் பகைவர் உன்னைச் சேர்ந்த மூவரையும் கொன்று தின்றதுபோல, எங்கேயாவது கொண்டுபோய் உண்டார்களோ?

**வெள்ளிக்கிழமை:**—ஆம், என் இனத்தாரும் மனிதர் ஊன் உண்பவர்களே. பிடித்தவர்கள் எல்லோரையும் கொன்று தின்பார்கள்.

**தலைவன்:**—அவர்கள் தம்மால் பிடிக்கப்பட்டவர்களை எங்கே கொண்டு போவார்கள்?

**வெள்ளிக்கிழமை:**—தமக்கு விருப்பமான எவ்விடத்திற்கும் கொண்டு போவார்கள்.

**தலைவன்:**—இவ்விடத்திற்கு வருவார்களா?

**வெள்ளிக்கிழமை:**—ஆமாம். இவ்விடத்திற்கும் வருவார்கள்; மற்றெவ்விடத்திற்கும் செல்வார்கள்.

**தலைவன்:**—நீயும் அவர்களுடன் முன்பு இவ்விடத்திற்கு வந்திருக்கிறாயா?

**வெள்ளிக்கிழமை:**—ஆம், வந்திருக்கிறேன். இப்படிக் கூறும் பொழுது, தீவின் வடமேற்குக் கரையைக் கைவிரலாற் சுட்டிக் குறிப்பித்தான். அதுதான் அவர்கள் வழக்கமாய் வந்திறங்கும் இடமெனக் காணப்படுகிறது.

பகைவராகிய வேடர் வெள்ளியைச் சிறை பிடித்துக் கொன்று தின்று மகிழ்வதற்கு இக்கரையில் வந்து இறங்கியதுபோல, வெள்ளியும் தான் சிறை பிடித்த மனிதரைக் கொன்று உண்பதற்குத் தன் இனத்தாராகிய வேடருடன், தீவின் எதிர்க்கரையில் முன்பு வந்தது உண்டு என்பதை அவன் வாய்ப்பிறப்பால் அறிந்தேன். சிறிது காலம் சென்றபின், நான் அச்சமின்றி அவனை அவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு போனபொழுது, அவன் இடக் குறிப்பு அறிந்து, அங்கே தானும், தன் இனத்தாராகிய வேடரும் முன் ஒருமுறை இருபத்து மூன்று மனிதரைக் கொண்டுவந்து அடித்துக் கொன்று தின்றதாகச் சொன்னான். அன்றியும் அவர்களில் ஆடவர் இருபது பேர், பெண்கள் இருவர்; குழந்தை ஒன்று என்று கணக்கும் கூறினான். ஆங்கில மொழியில் இருபதைக் குறிக்கும் எண்ணின் பெயர் அவனுக்குத் தெரியாததனால், அவன் இருபது கல் எடுத்து ஒரு நிரையாக வைத்து, என்னை ஒவ்வொன்றாய் எண்ணிப் பார்த்துச் சொல்லச் சொன்னான்.

### கடலில் நீர் பெருகும் வேளை எது?

இந்த உரையாடல் முடிந்த பின், இந்தத் தவி னின்று அக்கரைக்கு எவ்வளவு தொலைவு உள்ளதென் றும், கடலிற் செலுத்திக்கொண்டு போகும் ஓடங்கள் பெரும்பாலும் உடைந்து அழிவதில்லையா என்றும் கேட் டேன். அதற்கு அவன் கேடு ஒன்றும் இல்லை. ஓர் ஓட மாவது உடைந்து அழிந்ததும் இல்லை. கடலிற் சற்றுத் தொலைவிற் செல்லும்பொழுது நீரோட்டம் உண்டாகிறது. அந்நீரோட்டமும் காற்றும் ஒரு முகமாய்த் திரும்பி, நாள் தோறும் முன்னேரம் ஒரு கரைக்கும், பின்னேரம் எதிர் கரைக்கும் செல்லும் என்றான்.

### தீவைச்சுற்றிய வெளி நாடுகளைத் தெரிந்துகொள்ளுதல்

நீர் பெருகுவதையும் வற்றுவதையும் அவன் குறிப் பித்ததாக முதலில் என் எண்ணத்திற்பட்டது. பின்பு பேராறு ஆகிய ஒரிநாக்கோ ஆற்றின் மிகுந்த பெருக்கினு லும், வற்றத்தாலும், அவன் கூறிய நீரோட்டமும், காற் றும் உண்டாயின என்று அறிந்தேன். அவ்வாறு கடலொடு கலக்குமிடத்தில் இத்தீவு இருக்கிறதென்றும், மேற்கிலும் வடமேற்கிலும் தெரிகிற கரை **ட்ரினிடாட்** என் னும் பெருந்தீவு என்றும் அஃது இவ்வாற்றின் கூடல் துறைக்கு வடக்கு முடிவு எல்லையில் இருக்கிறதென்றும் நினைத்தேன். அந்த நாடு, அதன் குடிகள், அதைச் சூழ்ந்த கடல், கரையடுத்த நாடு, நகரம், அதன் அண்மையில் வாழும் மக்கள் கூட்டம் முதலிய செய்திகளைப் பலவாறு வெள்ளிக்கிழமையினிடத்தில் கேட்டுத் தெரிந்துகொண் டேன். நான் கேட்டவைகளைப்பற்றி, அறிந்த வரலாறுகள் எல்லாவற்றையும், சிறிதாவது வஞ்சனையின்றி மனமும் மொழியும் ஒத்துக் கூறினான். வேடருக்குள் வழங்கிய இன வேறுபாட்டின் பெயர்களைச் சொல்லும்படி கேட்டேன். **கரிப்** என்னும் பெயர் ஒன்றை மட்டும் கூறினான். **ஓரிநாக்கோ** ஆற்றின் கடற் கலப்புத் துறையினின்று **கயானே** வரையி லும், அதன்பிறகு **தூயட் மார்த்தா** வரையிலும் பரந்து

இருப்பதாகத் தென் அமெரிக்கப் படத்தில் விளங்கிய **கரிபி யரை** அவன் குறிப்பித்ததாக எளிதில் அறிந்தேன். வானத்துத் திங்கள் மறையும் இடத்திற்கு அப்புறம் நெடுந்தொலைவில் என்னைப்போலத் தாடி வளர்த்த வெள்ளை மனிதர் வாழ்வதாகவும், அவர்கள் எண்ணிறந்த மக்களைக்கொன்று அழித்ததாகவும், வெள்ளிக்கிழமை எனக்குக் கூறினன். **ஸ்பானிய** நாட்டினர் **அமெரிக்கா**வைச் சேர்ந்த பல இடங்களில் உள்ள மக்களை இரக்கமின்றி அழித்ததனாலும், தொன்றுதொட்டு எல்லா இனத்தாரும் இவ் வரலாற்றைத் தலைமுறை தலைமுறையாய் அறிந்திருப்பதனாலும், அவன் கூறிய வெள்ளை மனிதர் **ஸ்பானியர்** என்றே பொருள் செய்துகொண்டேன். தாடி மயிர் வளர்த்த வெள்ளை மனிதர் என்று சொல்லும்பொழுது, வளர்ந்து நெருங்கிய என்னுடைய மீசையைத் தன் விரலாற் சுட்டினன். என் முகத்தில் வளர்ந்திருந்த தாடியைப்பற்றி முன்பே நான் கூறியிருக்கின்றேன்.

### தீவைக் கடந்து செல்வதில் நம்பிக்கை

நான் இந்தத் தீவை விட்டு நீங்கி, அந்த நாட்டிற்குப் போய், அவ் வெள்ளை மனிதருடன் சேரத்தக்க வகை உன்னுற் கூற முடியுமா என்று கேட்டேன். அதற்கு வெள்ளிக்கிழமை "ஆமாம், இரண்டு ஓடம் ஏறிப்போகலாம்" என்றான். அவன் இரண்டு ஓடம் என்று சொன்னதற்குப் பொருள் இன்னதென்று முதலில் எனக்கு விளங்கவில்லை. பின்பு பலவாறு ஆராய்ந்து பார்த்தபோது, இரண்டு ஓடத்தின் அளவிற்கு இடம் அகன்று பெரிதாகிய ஓடத்தையே அவன் இரண்டு ஓடம் என்று சொன்னதாகப் பொருள் செய்துகொண்டேன்.

வெள்ளிக்கிழமை கூறிய இச்செய்தி என் செவிக்கு இன்பமாய் இருந்தது. எவ்வளவு காலம் சென்றாலும். நான் இங்கிருந்து இவ்வெளியே காட்டு மனிதனுடைய உதவியால் தப்பித்துக்கொள்வதற்கு வாய்ப்பும் நேரமும்

கிடைக்குமென்று அந்நேரம் தொடங்கி என் உள்ளத்தில் துணிவு உண்டாயிற்று.

**கடவுளைப்பற்றிய கொள்கையை அவனுக்குப் புகட்டுதல்**

வெள்ளிக்கிழமை நாள் செல்லச் செல்ல என்னுடன் பழகி, என்னுடைய மொழியிற் பேசப் பழகினன். நாங்கள் இருவரும் கலந்து உரையாடிக்கொண்டு இருந்தபோது கடவுள் உணர்வு பற்றிய கொள்கையின் அடிப்படையை நான் அவனுக்கு உணர்த்தாமல் விடவில்லை. ஒருநாள் நான் அவனைப் பார்த்து, உன்னைப் படைத்தவர் யாவர் என்று கேட்டேன். இந்தக் கேள்வி பேதையாகிய அவ்வேடனுக்குப் புலப்படவில்லை. தன் தந்தை யாவன் என்று கேட்டதாக நினைத்தான்போலும். எனது கேள்வியை வேறு முறையில் கேட்டால் அஃது அவனுக்குப் புலப்படும் என்று எண்ணி, இந்தக் கடலையும், நீ வாழும் இந்நிலத்தையும், குன்றுகளையும், வானத்தையும் படைத்தவர் யாவர் என்று கேட்டேன். கடல், நிலம், திங்கள், விண்மீன் கூட்டம் முதலிய எல்லாப் பொருள்களும் உண்டாகுமுன் தொடங்கி யிருக்கின்ற பரம்பொருளாகிய ஒரு கிழவரே படைத்தார் என்றும், அவர் பெயர் பினுமக்கி என்றும், விடை கூறினன். இக்கிழவர் எல்லாப் பொருள்களையும் படைத்தவரானல், அவைகள் அவரை வழிபடாதிருக்கின்ற காரணம் என்னவென்று கேட்டேன். அவன் நல்ல எண்ணங்களையே எண்ணியவனைப் போலவும், தன்னெஞ்சு அறிய எவ்வகைத் தீங்கும் செய்யாதவனைப்போலவும் "எல்லாப் பொருள்களும் அக்கிழவரை வணங்குகின்றன" என்ருன். உன் நாட்டில் இறந்த மனிதர்கள் எவ்விடத்திற்கேனும் சென்ருர்களா என்று வினவியதற்கு அவன் ஆம், அவர்கள் எல்லாரும் பினுமக்கியிடத்திற் போய்ச்சேர்ந்தார்கள் என்று விடை கொடுத்தான். வேடராற் கொன்று உண்ணப்பட்ட மனிதரும் அவரிடத்துக்குப் போனுர்களா என்று கேட்டதற்கு ஆம் என்ருன்.

மேற்கூறிய கேள்வி வாயிலாக அவனுடைய உண்மையான அறிவின் தகுதி இவ்வளவு என்று கண்டு, அதனை

அடிப்படையாய்க் கொண்டு, உண்மைக் கடவுளைப்பற்றி அவனுக்கு உணர்த்தத் தொடங்கினேன். நான் வானத்தை அண்ணாந்து பார்த்து. எல்லாப் பொருளையும் படைத்த கடவுள் அதோ அங்கிருக்கின்றார். தமது சிறந்த வல்லமையினாலும், அறிவினாலும் இம்மண்ணுலகத்தைப் படைத்த அவர் அவைகளைக் கொண்டே அதை ஆண்டு நடத்தி வருகின்றார். அவர் முழு வன்மையுடையவர்; நமக்கு எல்லாம் செய்ய வல்லவர்; எதனையும் நமக்கு அருள் புரியும் வன்மையுடையவர்; நம்மிடத்தினின்று எதையும் எடுத்துக் கொள்ள அதிகாரம் உள்ளவர்; என்பதாகச் சொல்லி, இவ்வாறு வர வர அவன் மனக் கண்ணைத் திறந்தேன். நம்மைத் தீவினைச் சிறையினின்று மீட்கும்பொருட்டு, இயேசுகிறிஸ்து இப் பூவுலகில் மனித வடிவு தாங்கி வந்ததையும், கடவுளுக்கு நாம் வழிபாடு செய்தற்குரிய விதத்தையும், நாம் இங்கிருந்து கூறும் வாழ்த்து மொழிகள் மேல் உலகத்தில் உள்ள அவர் செவியிற் கேட்கும் என்பதனையும் பற்றி நான் கூறிய வரலாறுகளை அவன் கருத்தோடு கேட்டான்; அதனை ஒத்துக் கொண்டு மனம் மகிழ்ந்தான்.

அதன்பின் ஒருநாள் வெள்ளிக்கிழமை, சற்றுத் தொலைவில் பெரிய மலைகளில் வாழ்கின்ற பினுமக்கி யிடத்திற்கு நாங்கள் போய் ஏதும் சொன்னால், அவருக்கு அது கேட்கும். இங்கிருந்து சொல்வது ஒன்றும் கேளாது. நீர் சொல்லும் கடவுள் கதிரவன் இருக்குமிடத்திற்கும் அப்புறத்தினின்று இம் மண்ணுலக மக்கள் இங்கிருந்து கூறும் வாழ்த்து மொழிகளைக் கேட்கும் வன்மையுடையவரானால், அவர் பினுமக்கி என்னும் கடவுளைக் காட்டிலும் அதிகப் பெருமையுடையவராய் இருக்கவேண்டும் என மொழிந்தான். நீ எப்பொழுதாயினும் பினுமக்கியிடத்திற் பேசுவதற்கு மலைகளுக்குச் சென்றதுண்டா என்று கேட்டேன். வெள்ளிக்கிழமை போகவில்லை. இளைஞர் செல்வது வழக்கம் அன்று. ஆண்டுகள் முதிர்ந்த கிழவராகிய ஊவூகாகியர் (குருமார்) அன்றி, மற்றவர்கள் அவ்விடத்திற்குப் போவதில்லை. அவர்கள் மலையேறிச் சென்று,

வணக்க மொழிகள் கூறி வழிபட்டுப், பினுமக்கி கூறிய மறு மொழிகளாகிய நல்லுரைகளைக் கேட்டு வந்து எங்களுக்குத் தெரிவிப்பார்கள் என்றான்.

### குருமார் செய்யும் தவறுகள்

இந் நிலவுலகில் மன இருள் நிறைந்த பேதைமையுள்ள புறச்சமயத்தாருள்ளும், குருமார் செய்யும் ஏமாற்றம் சில உண்டு என்றும், குருமார் மக்களுக்குத் தம்மிடத்தில் எப் பொழுதும் நல்ல எண்ணம் உண்டாகுமாறு செய்து, அதை நிலைப்படுத்தும் பொருட்டுச், சமயக்கோட்பாட்டின் உட்கருத்துக்களை வெளியிடாமல் மறைக்கின்றார்கள் என் றும் அறிந்தேன். இவ் வேமாற்றுவேலை இப் பூவுலகில் எச்சமயத்தாரிடத்தும் உள்ளதுபோல, விலங்கினும் சீர ழிந்து கொடுவினைகள் செய்யும் வேடருக்குள்ளும் உண் டென்று வெள்ளிக்கிழமையினுடைய வாய்மொழிகளால் தெரிந்து கொண்டேன்.

### பேய்கள் செய்யும் குற்றங்கள்

இது குருக்களுடைய ஏமாற்றுவேலை யென்று வெள்ளிக்கிழமைக்கு உணர்த்தி, அவன் மயக்கத்தைத் தெளிவிக்கக் கருதி, அவனுக்குப் பின்வருமாறு அறிவு புகட்டினேன் :—உங்கள் குருக்கள் மலையேறிப் பினுமக்கியை வணங்குவதற்காகச் செல்வது என்பது உங்களை ஏமாற்றும் செயல். அவர்கள் அங்கிருந்து வரும்பொழுது, பினுமக்கி யுடைய வார்த்தைகள் என்று உங்களுக்குத் தெரிவிப்பது மேலும் பெரிய பொய். அவர்கள் யாருடனாவது பேசு வதும், விடை பெறுவதும் உண்மையானால் அவர் கடவுள் அல்லர். பேயாய் இருக்க வேண்டும் என்பதாக அவனுக் குத் தெரிவித்தேன். பின்பு பேய் என்பது யாது என்பதை யும், அதன் முன்னைய நிலையையும், அது மேலுலகத் திற்குத் தலைவராகிய கடவுளுக்குத் தவறு செய்ததையும், அது மனிதரிடத்தில் பகை கொள்வதையும், அதன் கார ணத்தையும், அறிவற்ற மூடர் வாழும் நாடுகளில் தானே கடவுள் என்று முற்பட்டு அவர்களால் சிறப்பு வழிபாடு

பெறுவதையும் எடுத்துக்கூறினேன். மேலும் மனிதர் அறிவு மயங்கி அழிந்து போவதற்கு அது செய்யும் அள வற்ற சூழ்ச்சிகளையும்; நம்மை நாமே வஞ்சித்து, மன விருப் பத்தோடு அழிவைத் தேடிக் கொள்வதற் கேற்றபடி செய் யும் செயல்களையும், குருவி பிடிக்க வேடன் கண்ணி ஏற்று வது போல, நம்மைப் பிடித்துக் கொள்வதற்கு ஏற்றபடி கண்ணி வைப்பதற்காக, அது மறைவாக நம்முடைத பண்புகளையும், விருப்பங்களையும் எடுத்துக் கொள்வயை யும் பற்றி நெடுநேரம் அவனோடு உரையாடினேன்.

### வேடனுக்கு மறுமொழி புகலத் தெரியாதிருந்தேன்

கடவுள் ஒருவர் உண்டு என்பதைப்பற்றி அவன் மனத்தில் சிறந்த உணர்ச்சிகளை அழுந்தப் புகட்டுவது எளிதாயும், பேயைக் குறித்துச் சொல்வதை அவன் நம்பும் படி செய்வது அரிதாயும் இருந்தன. பெருமை வாய்ந்த முதற் பொருளும், எல்லாவல்லமையும் உடையவரும், மனத்திற்குள் இருந்து அறிவு புகட்டும் தன்மையுடைய வரும் ஆகிய இறைவர் ஒருவர் இருப்பது இன்றியமையா தது என்பதைப் புகட்டினேன். நம்மைப் படைத்த அக் கடவுளுக்கு வழிபாடு செய்வது முறையும் அறமும் ஆகும் என்றும் தெரிவித்தேன். எடுத்துக்காட்டுகள் கொண்டு நான் அவனுக்குக் கூறிய செய்திகள் எல்லாவற்றுக்கும், இந்த உலக நிகழ்ச்சிகளும், இயற்கையும் துணையாய் இருந் தன. இழிந்த கடவுளாகிய பேயையும், அதன் முன்னைய நிலையையும், அஃது உண்டு என்பதையும், அதன் இயற்கை யான பண்புகளையும், முதன்மையாய்த் தீங்கு செய்யவும், நம்மைக் கொண்டு தீங்கு செய்விக்கவும், அதற்குச் சிறந்த விருப்பம் உண்டாகியிருப்பதையும் குறித்து என்னால் இயன்றவரை வலியுறுத்தினேன். அறிவிலியாகிய அவ் வேடன் தன் நினைவில் இயற்கையாய்த் தோன்றிய குற்ற மற்ற ஒரு கேள்வி கேட்டபொழுது, அதற்கு விடைகூறத் தெரியாமல் மிகவும் மனம் தடுமாறினேன்.

## இறைவன் செயலைப் பற்றிய வினாவும் விடையும்

இறைவன் வன்மையைப் பற்றியும், அவருடைய திறமையைப் பற்றியும், பாவத்தினிடம் அவருக்கு உண்டாகும் மிகுந்த அருவருப்பைக் குறித்தும், அவர் கொடுமை செய்பவர்களை அழிக்கும் நெருப்பாய் இருப்பதைப் பற்றியும், மனிதர் முதலிய படைப்புப் பொருள்கள் எல்லாவற்றையும் நொடிப்பொழுதில் படைத்த அவர் நொடிப் பொழுதிலேயே அழிக்க வல்லவர் என்பதைப் பற்றியும் நான் வெள்ளிக்கிழமைக்கு விளக்கமாய்க் கூறினேன். அவன் ஓவியப் பாவைபோல அடங்கியிருந்து, அதிகக் கருத்தோடும் அன்புடனும் கேட்டான். பிறகு பேய்கள் மனிதர் உள்ளத்தில் நுழைந்து, கடவுளுக்குப் பகையாகி, அவரைப் பற்றிக் கொண்டிருக்கும் நல்ல எண்ணங்களை வீணாக்குகின்றன. இப்பூவுலகில் இயேசுநாதருடைய அரசாட்சியை வீணாக்கி, அழித்து மேலும் பல கெட்ட செயல்கள் செய்யும் பொருட்டுக் கேடு நினைத்துத் தன்னாலாகும் வல்லமைகள் எல்லாவற்றையும் செய்கின்றன என்று வெள்ளிக்கிழமைக்குத் தெளிவாகச் சொன்னேன். அது கேட்டு அவன், நன்று; இறைவன் மிகுந்த வன்மையும் பெருமையும் உடையவர் என்றீரே; பேய்க்கு உள்ள பல வல்லமைகள் அவருக்கு இல்லையா ? என வினவினான். அவ்வினாவிற்கு நான்: "உண்டு; உண்டு." சொல்லக்கேள் வெள்ளிக்கிழமையே, கடவுள் பேயைக் காட்டிலும் பெரு வன்மையுடையவர்; அவர் அதற்கு மேற்பட்டவர். இந்த முறையை மனத்தில் வைத்தே, பேயைக் காலால் மிதிக்கவும், அதன் நயவஞ்சனைகளுக்கு இடம் கொடாமல் அறுதியாய் நிற்கும்படி நமக்கு மனவுறுதி அளிக்கவும், அது செலுத்துகின்ற நெருப்பு அம்புகளை அவிக்கவும் வேண்டும் என்று நாம் கடவுளை வாழ்த்துகின்றோம்." என விடை கூறினேன். இந்த அளவோடு வெள்ளிக்கிழமை தன்னுடைய உரையாடலை நிறுத்தவில்லை. "கடவுள் பேயை விட அதிக வன்மையுடையவர் என்பது உண்மையானால், அப்பேய் மேலும்மேலும் கெட்டுக் கொடுமை செய்யாதபடி அவர் அதனை உடனே கொன்று

அழிக்காதிருப்பது ஏன்?" என்று மேலும் ஒரு கேள்வி கேட்டான்.

**அரசன் அன்றே கொல்வான் இறைவன் நின்று கொல்வான்**

அவன் கேட்ட கேள்விக்கு விடை கூறுவது எளிதாய் இருந்தும் எனக்குத் தெரியாமல் சற்றுத் தடுமாறினேன். நான் ஆண்டுகளால் முதிர்ந்திருப்பினும் மறைநூற் கருத்துக்களை அறியாத இளஞ்சிறுவனாய் இருந்ததனால் வினாவுக்கேற்ற விடை கூறவும், ஐயம் தீர்க்கவும், உணர்தற்கரிய கருத்துக்களைச் சிக்கறுத்துத் தெளிவிக்கவும் திறமையற்றவனாய் இருந்தேன். கூறத்தகுந்த விடை இன்னது என்று தெரியாததனால், கேளாதவன் போல் அந்த வினாவைத் திரும்பவும் சொல்லச் சொன்னேன். தன் கேள்விக்கு விடை அறிவதற்கு விரும்பிய வெள்ளிக்கிழமை முன் கேட்டபடி சொற்கள் சிதறக் கேட்டான். அதற்குள் என் அறிவு சற்றுத் தெளிந்தது.

"கடவுள் பேயை உலக முடிவுக் காலத்தில் கடுமையாய்த் தண்டிப்பார். அவர் அதற்கு வழக்கு அறுத்துத் தீர்ப்புக் கூறும் காலம் வரும் அளவும் தண்டனை விதிக்காமல் விட்டு, அதன் பிறகு என்றும் அவியாது நின்று எரியும் பெரிய தீக் கடலில் அதைத் தள்ளுவார்" என்று சொன்னேன். இந்த விடை அவனுக்குச் சரியான விடையாகத் தோன்றவில்லை. அவன் என் சொல்லைத் திருப்பிச் சொல்லி, "உலகம் முடியும் வரையிலும் தண்டிக்காமல் விடுவதா! இஃது எனக்கு நன்கு விளங்கவில்லை. கடவுள் பேயை இதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே ஏன் அழிக்கவில்லை?" என்று மேலும் கேட்டான். இந்தக் கேள்வி கேட்கிற நீ இறைவன் கட்டளையை மீறித் தீவினை செய்யும் உன்னையும் என்னையும் அவர் உடனே அழிக்காதிருப்பது ஏன் என்று கேட்பதாகிறது. நாம் மனம் வருந்திப் பாவ மன்னிப்புப் பெறும்பொருட்டுக் காப்பாற்றப்பட்டிருக்கிறோம்." என்றேன். அவன் சற்றுநேரம் பேசாமல் இருந்து நினைத்து மிகுந்த அன்பு கொண்டு, "நன்று, நன்று,

மிகவும் நன்றாய் இருக்கின்றது; அப்படியானால் நீரும், நானும், பேயும், கொடுமைகள் செய்தவர் அனைவரும் உயிரோடு பாதுகாக்கப்பட்டிருக்கிறோம். நாம் செய்த பாவத்துக்காக மனவருத்தப் படுவோமானால், கடவுள் எல்லோருக்கும் மன்னிப்புக் கொடுப்பார்'' என்றான்.

இயற்கை அறிவு உடையோர் படைக்கப்பட்ட பொருள்களின் ஒழுங்கைக் கண்டு, எல்லா உலகங்களுக்கும் தலைவராகிய கடவுள் ஒருவர் உண்டு என்றும், நாம் மனம், அறிவு முதலியன உடையோர் ஆதலால் அவரைத் தகுதியுடன் தாழ்ந்து பணிந்து வழிபாடு செய்தல் வேண்டும் என்றும் அறியலாம் ஆயினும் மறைமொழி ஒழிய வேறு ஒன்றும் இயேசுகிறிஸ்துவைப் பற்றியும், அவர் நமக்காகக் குருதி கொடுத்துப் பெற்ற சிறை மீட்சி ஒழுங்கைப் பற்றியும், புதிய உடன்படிக்கையைப் பற்றியும், அரியணையில் வீற்றிருக்கின்ற கடவுளுடைய திருவடிப் படியில், நடுநிலை செய்பவரைப் பற்றியும் நமக்குணர்த்தாது, இறைவன் வாயினின்று வெளிப்படும் மொழி ஒன்றே அன்றி, வேறு எதுவும் மேற்கூறியவற்றை நமது உள்ளத்தில் புகட்டாது என்று கூறுகின்றேன். ஆதலால் நம்முடைய தலைவரும், நம் உயிரைப் பாதுகாப்பவரும் ஆகிய இயேசு கிறிஸ்துவின் நல்லுரை எனப்படும் திருமொழியாகிய மறைநூலும், தமது தொண்டருக்கு வழிகாட்டி, அவர்கள் மனத்தைத் தூய்மை செய்யும்படி அனுப்புவதாகக் கடவுளால் உறுதி மொழி அளிக்கப் பெற்ற கடவுள் ஆவியுமே கடவுளைப்பற்றிய நல்லறிவையும், உயிர் ஈடேற்றத்துக்குரிய துணைகளையும், மனிதர் நெஞ்சில் உணர்த்துபவைகளாம். இதற்கு வெள்ளிக்கிழமையின் வாய்மொழியாகப் பிறந்த சொற்களே எனக்குச் சான்று ஆயின.

### சொல்வன்மை பெறுவதற்குக் கடவுளை வேண்டுதல்

அதன் பிறகு, ஒரு செயலைச் செய்வதற்கு வெளியிற் செல்வதுபோல, நான் எனக்கும் வெள்ளிக்கிழமைக்கும் நடந்த உரையாடலை அவ்வளவோடு நிறுத்திவிட்டேன்.

பின்பு விரைந்து எழுந்து, வெள்ளிக்கிழமை ஒரு வேலையின் மீது தொலைவான இடத்திற்கு அனுப்பிவிட்டு, மிக்க கருத்தோடும் அன்போடும் பின்வருமாறு கடவுளை வேண்டிக் கொண்டேன். "எல்லா உலகங்களுக்கும் தலைவராகிய கடவுளே, பேதையாகிய இவ்வேடனுக்கு அறிவுரைகளைப் புகட்டும்படி உம் அடியேனாகிய எனக்கு வன்மை அளித்து அருள் செய்ய வேண்டும். இயேசுகிறிஸ்து வழியாக உம்மை அறியும் அறிவாகிய உண்மை ஒளியை அடைவதற்கு, அறிவு சிறிதும் இல்லாத இவ்வேழைக்கு உமது ஆவியின் உதவியை அளித்து அருள வேண்டும். அவ்வேடன் மனக்குறை இன்றித் தன் நிலைமை இறைவன் அருளால் ஏற்பட்டதென்று எண்ணி, மன நிறைவோடு இருக்கச் செய்ய வேண்டும். நான் கூறுவதை அவன் மனம் உண்மை என்று ஒப்புக்கொள்ளவும், அவனுக்கு அறிவுக் காட்சி உண்டாகவும், அவன் உயிர்ப் பாதுகாப்புப் பெறவும், தக்கபடி உமது திருமொழியின் பொருளை நான் அவன் உள்ளத்துக்கு ஏற்கும்படி போதிக்குமாறு எனக்கு அறிவு நலம் தந்தருள வேண்டும்", அவன் திரும்பி வந்த பின், உலகப் பாதுகாப்பாளராகிய இயேசுவினால், மனிதருக்குத் தீவினைச் சிறைமீட்சி உண்டானதைப்பற்றியும், கடவுளிடத்திற்கு மனம் திரும்பிப் பெருமையுள்ள தலைவராகிய இயேசுகிறிஸ்துவிடம் அன்பு பாராட்ட வேண்டும் என்று கடவுள் வழியாய்க் கூறப்பட்ட தூய நற்செய்திகளின் கொள்கைபற்றியும், நெடுநேரமட்டும் அவனுடன் உரையாடினேன். நம்மைத் தீவினைச் சிறையினின்று மீட்ட பெருமை தங்கிய தலைவர் கடவுளுடைய ஒற்றர்போல வடிவு தாங்கி வராமல், ஆபிரகாமின் குடும்பத்தில் மானிட வடிவு தாங்கி வந்த காரணம் இன்னது என்றும், அந்தக் காரணத்தால் கடவுளுக்கு மாறுபட்டுக் கேடுற்ற ஒற்றருக்கு மேற்கூறிய சிறைமீட்சியில் உரிமை இல்லை என்றும், வழிதப்பிப் போன ஆட்டுமந்தையைப்போல நிலையற்றுச் சிதறுண்டு இருந்த மனிதரிடத்து உலகப் பாதுகாவலராகிய இயேசுநாதர் வந்தார் என்றும் என் அறிவுக்கு எட்டிய வரையிலும் ஆராய்ந்து அவனுக்கு விளக்கமாய்க்

கூறினேன். இந்தச் செய்திகளுக்குத் தொடர்பான வேறு பல வரலாறுகளையும் தெரிவித்தேன்.

**நான் கடவுள்நெறி எடுத்துரைக்கும் ஆசிரியன்**

பேதையாகிய வெள்ளிக்கு நான் பலவாறு உணர்த்திய கருத்துக்களில் என்னுடைய அறிவு சிறிதும், வஞ்சனை இன்மை அதிகமாகவும் இருந்தன என்று இறைவன் சான்றாகக் கூறுகின்றேன். அவனுக்கு அந்தக் கடவுள் நெறியை விளக்கிச் சொல்லும்பொழுது, கருத்தாய் ஆராய்ந்து, தீரத்தெளிய ஆராய்ந்து கூறியதனால், முன்பு நான் அறியாதவைகளும், முழுமையாய் நினைக்காதவைகளுமான பல செய்திகளைப் புதிதாக எளிதில் அறிந்தேன். இதற்கு என்னைப் போலப் பலர் தங்கள் வாழ்க்கையில் சான்று கண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். இந்த வேளையில் நான் இக்கருத்துக்கள்பற்றி ஆராய்ந்தபோது, அவற்றில் என் மனம் ஈடுபட்டதுபோல அவ்வளவு சிறப்பாய் முன் ஒருபொழுதும் ஈடுபட்டதில்லை. ஆகவே, நான் உணர்த்திய உண்மைகளால் அந்த வேடன் சிறப்புற்றாலும் என்? இழிவு அடையினும் என்ன? அவன் என்னிடத்திற்கு வந்ததினாலேயே, நான் பொய்ம்மைகள் எவை என்பதை உணர்ந்தேன். அதனால் அவன் இங்கு வந்தது எனக்கு நன்மையாய் முடிந்தது என்று கடவுளுக்கு வாழ்த்துக் கூறுவது முறையாகும். முன்பு எனக்கு ஏற்பட்டிருந்த துன்பச் சுமை சற்றுக் குறைந்தது. நான் வாழ்ந்த இடத்தில் எனக்கு உண்டான இன்ப நிகழ்ச்சிகளுக்கு அளவில்லை. நான் தனியே குடியேறி இத்தீவில் இருக்கும் பொழுது மேலுலக நினைவு உடையவனாய், என்னை இவ்விடத்திற்கு அழைத்து வந்த இறைவனுடைய உதவியை நாடினேன். இப்பொழுது திருவுள்ளத்தின் செயலால் அறிவிலியாகிய வேடன் ஒருவனுடைய உயிரைப் பாதுகாக்கவும், நிலைத்த உயிருக்கு அடிப்படையான இயேசுகிறிஸ்துவைப் பற்றும் அறிவு அவனுக்கு உண்டாகவும், கடவுள் நெறியைப்பற்றியும் கிறிஸ்துவ மறை மொழிகளைப்பற்றியும், உண்மையான அறிவைப் புகட்டவும் வாய்ப்புப் பெற்றேன்.

திருவுள்ளத்தின் செயலால் என் வழியாகவே அவனுக்கு உயிர் ஈடேற்றம் உண்டாகும் எனினும் ஒருவாறு பொருந்தும். இந்த மேலான நன்மைகளை நினைத்து நினைத்து என் உள்ளம் மிகக் களி கூர்ந்தது. இப்பாழ்ந்தீவில் இருக்கும் என்னைப் போலச் சொல்வதற்கரிய கொடுந் துன்பம் அடைவார் எவரும் இல்லை என்றெண்ணி, முன் பலமுறை மிக வருந்திய நான் இப்பொழுது இத்தீவிற்கு வந்தது என்னுடைய பெரும்பேறு என்று அடிக்கடி நினைத்துப் பெரு மகிழ்ச்சி யடைந்தேன்.

### மறைமொழி கற்பித்து நன்மை அடைந்தேன்

அதன்பிறகு, நான் இத்தீவில் வாழ்ந்த நாளெல்லாம் என்னுடைய மேன்மைகளை நினைத்து மகிழ்கூர்ந்து, எல்லாம்வல்ல கடவுளை வாழ்த்திக்கொண்டு வந்தேன். நானும் வெள்ளிக்கிழமையும் கூடிப் பழகி வாய்ந்த காலம் மூன்று ஆண்டுகள். மனிதர் இப்பாரில் வாழும் காலத்து முழு மன நிறைவு அடைவது உண்மையானல், நானும் வெள்ளிக்கிழமையும், இம்மூன்ருண்டு காலத்தில் நல்லுரையாடி மேன்மை பெற்ருேம் என்பது உண்மையே. வேடனுகிய வெள்ளிக்கிழமை இப்பொழுது என்னிலும் மிகுந்த கிறித்துவ நெறிபற்றும் அன்பும் உடையவன் ஆனுன். நாங்கள் இருவரும் செய்த தீவினைக்காக உண்மையில் வருந்திப் பின்பு உய்யும் வழியைக் கண்டு, துயரம் நீங்கிய கடவுள் தொண்டர்களாய் இருந்தோம் என்று கடவுள் அருளால் கூறுகின்றேன். படிப்பதற்கு எங்களிடம் மறைநூல் இருந்தது. எங்கள் உள்ளத்தில் நல்லறிவை உண்டாக்குவதற்குக் கடவுளுக்கு இங்கிலாந்து அண்மையும், இத்தீவு நெடுந்தொலைவும் உடையதல்லவே.

நான் எப்பொழுதும் மறைநூலை நன்கு படித்து, அவற்றில் உள்ள கருத்துக்களை எனக்குத் தெரிந்தவரையிலும், வெள்ளிக்கிழமைக்கு எடுத்துக் கூறி வந்தேன். அன்றியும் மேற்கூறியபடி அவ்வப்போது வெள்ளிக்கிழமை அச்சத்தோடும் அன்போடும் மறைநூல் மொழிகளைக்

குறித்துப் பல கேள்விகள் கேட்டதனுல், மறைநூலை நன்கு கற்றுக் கருத்தோடு ஆராய்ந்து மிகுந்த தேர்ச்சி யுடையவன் ஆனேன். அவன் என்னிடத்தில் வந்து சேரா திருந்தால் எனக்கு இவ்வளவு தேர்ச்சி யுண்டாகாது. மனிதர் இல்லாத இத்தீவில் வாழும்பொழுது வாழ்க் கையின் இடையில் துய்த்து அறிந்த மற்றொரு முதன்மை யான செய்தியை இவ்விடத்தில் கூறுமல் விடுவது தகுதி யன்று என்று எண்ணுகிறேன். கடவுளைப்பற்றி நாம் அறிவதற்கு இன்றியமையாது வேண்டியது எதுவோ அதுவும், இயேசு கிறிஸ்து வழியாய் ஏற்பட்ட உயிரின் ஈடேற்றத்தை உணர்த்தும் கொள்கை எதுவோ அதுவும் மறை நூலில் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. அவை களை எவரும் எளிதில் உணர்ந்து உரிமையாக்கிக் கொள்ள லாம். நான் கிறித்துவநெறி உண்மைகளைக் குறித்து ஆசி ரியரிடம் அறிவு மொழிகளைக் கேட்டது இல்லை. உரை நூல் களின் துணையும் இல்லை. மறைமொழிகளை நானே படித்துச் செய்த தீவினைக்காக நானே வருந்தினேன். உயிர் உய்வு அடையும் பொருட்டு மேலான கடவுளை மனம் உருகி அன்புடன் வழிபட்டேன். முதன்மையான நற்செயல்களைச் சிறிதும் தவறின்றிச் செய்வதற்குப் பழகினேன். நற்பண்பு களிலும் நற்செயல்களிலும் நாளடைவில் தேர்ச்சி பெற் றேன். கடவுள் விதித்த நன்முறைகள் எல்லாவற்றையும் மேற்கொண்டேன். அன்றியும் மயக்கம் இன்றி நான் கற்ற அறிவை வேடனுக்குக் கற்பித்தேன். அவன் மன இருள் நீங்கி, அறிவு நலம்பெற்று, நற்பண்புகளிலும், நற்செயல் களிலும் திருந்தி அன்பு உள்ள கிறித்துவன் ஆனுன். என் காலத்தில் அவனைப் போலும் களங்கம் அற்ற பற்றுள்ள கிறித்தவர்கள் பலரை நான் காணவில்லை. இவ்வாறு மனி தர் எளிதில் உணர்ந்து சீர்பெறத் தக்கவாறு மறை நூற் கொள்கைகள் அமைந்திருப்பது மேன்மையாகும்.

**கிறித்துவ மறைநூல் சிறந்த வழிகாட்டியாகும்**

கடவுள் நெறிக் கோட்பாடுகளின் நுட்பங்களைக் குறித்தும், திருப்பேரவை ஆட்சி விதிகளைக் குறித்தும்

இம்மண்ணுலகில் உண்டான அளவை உரையாடல்களும், சொற்போர்களும், வழக்குகளும், சிறு பூசல்களும் பயனற்றவைகள். அவைகளை நாம் ஆராய்ந்து அறிவது சிறப்பான செயலன்று. அவைகள் பயனற்றவைகள் என்று நான் ஒருவன்மட்டும் அன்று, எவரும் கூறுவார்கள். வீட்டு நெறியை மயக்கமின்றித் தெரிவிக்கும் திருமொழி நூல் எங்களிடம் இருந்தது. அன்றியும் இறைவன் தூதராக வந்தவர் தமது திருமொழியால் எங்களுக்கு நல்லறிவு புகட்டி, உண்மை வழியில் எங்களை நடத்தி மறைநூலிற் கற்றறிந்ததற்கு ஏற்றபடி முழுமனத்தோடும் ஒத்து நடக்கும்படி செய்தார் என்று உள்ளங்குளிர நினைத்தோம். அதனால் கலக்கமற்று இருந்தோம். இஃது எங்கள் முயற்சியால் மட்டும் அன்று; இறைவன் திருவருள் நோக்கால் பெற்ற பேறு. கடவுள் கோட்பாட்டு நெறிபற்றிய சொற்போர் நிகழ்ச்சிகளால் இந்நிலவுலகில் எங்கும் தலைதடுமாற்றம் உண்டாகி யிருக்கின்றது. அக்கருத்துக்களை உணர்த்தும் நூல்களை நாங்கள் சேர்த்துப் படித்து விளக்கம் அறிந்திருக்கின்றோம். ஆயினும் அவற்றால் சிறிதாயினும் பயன் உண்டு என்று எனக்குத் தோன்றவில்லை. இதுவரையில் கடவுள்நெறிக் கோட்பாடு பற்றிய செய்திகளைக் கூறினேன். இனி எங்கள் வரலாற்றைக் கூறுவேன்.

### வெள்ளிக்கிழமைக்குத் துப்பாக்கி சுடவும் கற்றுக்கொடுத்தேன்

வெள்ளிக்கிழமையும் நானும் நாளுக்கு நாள் ஒருவரோடு ஒருவர் கலந்து உறவாடி நன்றாய்ப் பயில்வதற்குள், நான் கூறும் எக்கருத்தையும் அறியும் வன்மை பெற்றான். அவன் சிறந்த மொழி நடையிற் பேசாதிருப்பினும், தன் கருத்தைத் தடையின்றி, எனக்குத் தெரிவிக்கத் தக்கபடி அவனுக்கு ஆங்கில மொழியில் பேச்சுத் திறம் உண்டாயிற்று. பின்பு என் வரலாறுகளை அவனுக்குக் கூறினேன். வரலாறு முழுவதும் அன்று. நான் இத்தீவில் வந்து சேர்ந்ததும், இங்கிருந்து நாட்கழித்ததும், வந்தது முதல் இதுவரையில் சென்ற கால அளவும் ஆகிய வரலாறுகளைக் கூறினேன். துப்பாக்கியில் மருந்து குண்டு

நிரப்பிக் கெட்டித்து வெடி தீர்க்கும் திறத்தையும் அவனுக்குத் தெரிவித்துத் துப்பாக்கியைப் பயன்படுத்தப் பழக்கினேன். அஃது அவனுக்கு முன்பு மிக்க மறை பொருளாய் இருந்தது. நான் அவனுக்கு ஒரு கத்தி கொடுத்தேன். அதை அவன் வாங்கிப் பார்த்து, மிக்க விருப்பத்தோடு வைத்திருந்தான். மேலும் இடுப்பிற்கட்டும் பட்டை ஒன்று உண்டாக்கி, அதில் உடைவாள் உறை ஒன்று தைத்துத் தொங்கும்படி இசைத்துக் கொடுத்து, அவ்வுறையில் உடைவாள் மட்டும் அன்றிக், கைக்கோடரி ஒன்றும் வைத்திருக்கக் கொடுத்தேன். சில வேலைகளுக்கு உடைவாளைப் போலக் கைக்கோடரியும் உதவும். பல வேளைகளில் உடைவாளைக் காட்டிலும் கைக்கோடரி மிகவும் பயன்படத்தக்க ஆயுதமாகும்.

**வெள்ளிக்கிழமைக்கு மேலும் பல நிகழ்ச்சிகளைத் தெரிவித்தேன்**

ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள பல நாடுகளின் சிறப்புக்களையும், முதன்மையாய் நான் பிறந்த நாடாகிய இங்கிலாந்தின் வளத்தையும் குறித்து அவனுக்கு எடுத்துக் கூறினேன், ஆங்கிலேயர் குடித்தனம் செய்யும் முறை, இறைவழிபாடு செய்யும்முறை, ஒருவரை ஒருவர் பாராட்டி உதவிபுரிந்து ஒழுகும் தன்மை, எல்லா நாடுகளுக்கும் மரக்கலம் ஏறிச்சென்று, வாணிகம் செய்யும் திறம் முதலிய வரலாறுகளைக் கூறினேன். அதன்பிறகு, நான் ஓடம் ஏறிப்போய்ப் பார்த்த உடைந்த மரக்கலத்தைக் குறித்து அறிந்த செய்திகளைச் சொல்லிக் கூடியவரையில் அது நின்ற இடக்குறிப்பைக் காண்பித்தேன். அம்மரக்கலம் உருக்குலைந்து உடைந்து நெடுநாட்களுக்கு முன்பே சிதறுண்டு போயிற்று.

உடைந்த எங்கள் ஓடத்தின் குறையுருவைக் காண்பித்தேன். நான் கரையடைந்து சிலநாட் சென்றபின், எனது முழுவலிவாலும் அசைக்க முடியாதிருந்த அவ்வோடத்தின் குறை உரு இப்பொழுது சின்னபின்னமாய் உடைந்து போயிற்று. எஞ்சியிருந்த குறையுருவைக் கண்ட

வுடன் வெள்ளிக்கிழமை நெடுநேரம் ஒன்றும் பேசாமல் அதைப் பார்த்துக்கொண்டு நின்றான். "எதைப்பற்றி நினைத்துக்கொண்டு நிற்கின்றாய்" என்று கேட்டேன். அதற்கு அவன், "இதுபோன்ற ஓடம் எங்கள் நாட்டிற்கு வந்தது பார்த்திருக்கிறேன்." என்றான்.

அவன் கூறியது கொச்சை மொழியாய் இருந்ததனால், அதன்பொருள் எனக்கு விளங்கவில்லை. பிறகு நான் முழுவதும் கேட்டதனால், இவ்வோடத்தின் சாயல் உள்ள ஓடம் ஒன்று தன் நாட்டின் கரையில் கடுங்காற்றால் தள்ளுண்டு வந்து நின்றதைத் தான் கண்டதாக விளக்கமாய்க் கூறினான். ஐரோப்பியர் மரக்கலம் வேடர் நாட்டின் கரை அடுத்த கடலில் பழுதுற்றதாகவும், அதைச் சேர்ந்த ஓடம் கட்டவிழ்ந்து கரை சேர்ந்ததாகவும் நினைத்தேன். அதில் எவராவது தப்பிப் பிழைத்துக் கரை சேர்ந்திருப்பார் என்றாயினும், அவர்கள் எவ்விடத்தினின்று பயணப்பட்டு வந்திருப்பார்கள் என்றாயினும் நினைக்க எனது புலன் செல்லவில்லை. அதனால் ஓடம் எத்தன்மையது என்று மட்டும் கேட்டேன்.

### வெள்ளை மனிதர் வந்திறங்கிய ஓடம்

வெள்ளிக்கிழமை அவ்வோடத்தின் சாயல் இப்படிப் பட்டது என்று விளக்கமாய்ச் சொன்னான். அன்றியும், "வெள்ளை மனிதரைப் பேரிடருற்று இறவாதபடி கடல் நீர்த் தொல்லையினின்று பாதுகாத்தோம்" என்று சற்று மன உருக்கத்தோடு கூறினான். மனிதர் கரையடைந்திருப்பார்கள் என்று உடனே என் கருத்திற்பட்டது. "அவ்வோடத்திலும் வெள்ளை மனிதர் இருந்தார்களா" என்று கேட்டேன். வெள்ளிக்கிழமை "ஆம் ஓடம் நிறைய வெள்ளை மனிதர் இருந்தார்கள்," என்றான். எத்தனை பெயர் என்று கேட்கக், கைவிரல் எண்ணிப் பதினேழு பெயரைக் குறிப்பித்தான். அவர்கள் எங்கே என்று கேட்டேன். அதற்கு அவன், "உயிரோடு இருக்கிறார்கள்; என் இனத்தாருடன் வாழ்கிறார்கள்" என்றான்.

அவன் கூறியது கேட்டு, என் நெஞ்சில் புதிய நினைவுகள் உண்டாயின. இத்தீவின் கரை தெரியும் தொலைவில், பார் தட்டிப் பழுதுற்று நின்ற கப்பலில் இருந்தவர்களே, இனி இக்கப்பல் பயன்படாது என்று கருதி, ஓடத்தில் ஏறித் தப்பிப் பிழைத்துக் கரை சேர்ந்திருப்பர். வேடருடன் சேர்ந்து வாழும் வெள்ளை மனிதர் அவரே ஆவர் என்று நினைத்தேன்.

### வேடர் உதவிபெற்று வெள்ளை மனிதர் வாழ்தல்

அவர்கள் நிலை இப்பொழுது எவ்வாறு இருக்கின்றது என்று கேட்டேன். அதற்கு அவன் நாளது வரையில் அங்கேதான் இருக்கிறார்கள் என்றான். அவர்கள் அவ்விடம் சேர்ந்து நான்கு ஆண்டுகள் ஆகின்றன. வேடர்கள் கெடுதி ஒன்றும் செய்யாமல் அவர்களுக்கு வேண்டும் உணவுப் பொருள்களைக் கொடுத்து வருகின்றார்கள் என்றும் வெள்ளிக்கிழமை கூறினான். வேடர்கள் அப் புதிய மனிதர்களைக் கொன்று தின்னாமல் விட்ட காரணம் என்ன என்று கேட்டேன். "இருதிறத்தாரும் உடன் பிறந்தார் ஆனார்கள். போர் செய்யவரும் பகைவரிற் சிறை பிடித்தவர்களை மட்டுமே அன்றி மற்ற மனிதரை வேடர் கொன்று தின்பது இல்லை" என்று வெள்ளிக்கிழமை விடை கூறினான். இருதிறத்தாரும் உடன்பிறந்தார் ஆனார்கள் என்று அவன் கூறியதற்கு, இணக்க உடன்படிக்கை செய்துகொண்டார்கள் என்று பொருள் செய்து கொண்டேன்.

### வெள்ளிக்கிழமை தன் நாட்டைக் கண்டு பெருமகிழ்வு உற்றான்

பின்னும் சில திங்கள் கழிந்தபின், ஒரு நாள் வெள்ளிக்கிழமை இத்தீவின் கீழ்க்கரையில் உள்ள சிறுமலை யுச்சியில் ஏறி நின்றான். வானத்தில் மப்பு இல்லாத நேரத்தில் நான் மலை உச்சியில் நின்று அமெரிக்க நாட்டின் கரையைக் கண்டதாக முன் ஓரிடத்தில் குறிப்பித்தேன். அதுதான் இம்மலை. கடலும் காற்றும் அடங்கி, வானம் வெளுத்திருந்தது. வெள்ளி அந்நாட்டின் நேர்முகமாய் நின்று,

கருத்தைப் பொருத்திப் பார்த்து, வியப்பினால் தன்னை மறந்து நின்றான். பின்பு பாய்ந்து குதித்து நடனம் செய்து சற்றுத் தொலைவில் நின்ற என்னை உரத்துக்கூவி அழைத்தான். செய்தி என்னவென்று கேட்டேன். "மனம் மகிழ்ந்தேன்! மகிழ்ச்சியடைந்தேன்! அதோ எனது நாடு. அதோ என் இனத்தார்!" என்றான். மீண்டும் தன் நாட்டுக்குப் போய் வாழ விரும்பியவன்போல, அவன் முகத்தில் என்றுமில்லாத புதிய மகிழ்ச்சிக் குறி விளங்கியது. அவன் கண்கள் உள்ளத்தின் களிப்பை விளக்கித் துலங்கின. அவனுக்கு மிகுந்த அவா உண்டாகியிருப்பதாக அவன் முகக் குறிப்பால் தோன்றிற்று. இந்தப் பண்புகளையும் குறிகளையும் வெள்ளியினிடத்தில் கண்டு, சற்று ஐயம் எனக்கு உண்டானதால், என் மனம் முன்போல இன்பமாய் இருக்கவில்லை. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணினேன். வெள்ளிக்கிழமை தான் பிறந்த நாட்டிற்குச் செல்ல நேர்ந்தால், இவ்விடத்தில் அறிந்த செய்திகள் எல்லாவற்றையும், நான் செய்த நன்றிகளையும் மறந்து தன் நாட்டவர்களுக்குச் சொல்லி விடுவானோ என்று நினைத்தேன். நூறு இருநூறு பெயர்களுடன் இத்தீவிற்கு வந்து, என்னைக் கொன்று உண்டு எல்லாரும் விருந்தாடல் புரிவார்கள் என்றும் நினைத்தேன். போர்க்களத்தில் சிறை பிடிப்பவர்களைக் கொன்று உண்ணும்பொழுது களிப்புறுவதுபோல, என்னைப் பிடித்து உண்ணும்பொழுதும் அவர்களுடன் வெள்ளிக்கிழமை களிகூர்ந்து இருப்பான் என்றும் உறுதியாய் நம்பினேன்.

### வெள்ளிக்கிழமை நன்றி மறப்பவனா?

இவ்வாறு வெள்ளிக்கிழமை நன்றி மறந்து எனக்குக் கேடு செய்வான் என்று எண்ணியது எனது குற்றந்தான். இதைப் பிறகு அறிந்து மிகவும் வருந்தினேன்; ஆயினும் ஒரு திங்கள் வரையிலும் ஐயம் என் நெஞ்சில் குடிகொண்டு, நாளுக்கு நாள் வளர்ச்சியுற்றதனால், நான் முன்போல் அவனுடன் அன்பு கொண்டு பேசி உறவாடவில்லை. முன்னைக் காட்டிலும் சற்று ஒதுங்கியே இருந்தேன். இப்படிச் செய்

தது என் குற்றந்தான். செய்ந்நன்றி மறவாத உண்மைத் தொண்டனாகிய வெள்ளிக்கிழமை கேடு ஒன்றும் நினைக்க வில்லை. பற்றுக்கொண்ட கிறித்துவத் தொண்டனும், செய்ந்நன்றி மறவாத நண்பனும், நினைத்து மகிழத்தக்க நற்பண்புகள் உடையவனுமாக அவன் இருந்தான் என்று பிறகு நன்றாக எனக்குத் தெரிந்தது.

அவனைப்பற்றி ஐயமும் தவறான எண்ணமும் நான் கொண்டிருந்த காலத்தில், அவன் மனக் கருத்தை அறி வதற்காக நாள்தோறும் சூழ்ச்சியுடன் பல கேள்விகள் கேட்டேன். அவன் கூறியது ஒன்றும் என்னுடைய ஐயத்தை வளர்ப்பதற்கு உரியதாக இல்லை. வஞ்சனையின்றி அவன் கூறியவைகள் எல்லாம், உண்மையாய் இருந்தன. இவ்வாறு சிலநாள் வரையில் ஐயத்தால் என் மனம் துன் பப்பட்டுக்கிடந்தது. பின்பு அவனுடைய களங்கமில்லாத பண்புகளைக் கண்டு ஐயம் நீங்கினேன். அதனால் மறுபடி யும் அவனுக்கு உற்ற சிறந்த நண்பன் ஆனேன். எனக்கு மனவருத்தம் உண்டாயிற்றென்று அவன் சிறிதும் அறிய வில்லை. ஆகவே அவனைப்பற்றிச் சூது நினைக்க வழி இல்லையே.

## வெள்ளிக்கிழமைக்குத் தன் நாடு அடையும் விருப்பம் உண்டா?

வேறு ஒரு நாள் அம்மலையில் இருவரும் உலாவிக் கொண்டு இருந்தோம். கடலில் மூடுபனி நிறைந்திருந்தத னால் கண்டத்தின் கரை தெரியவில்லை. "வெள்ளிக்கிழ மையே, இங்கே வா, நீ உன் பிறந்த நாட்டிற்போய்ச்சேர்ந்து உன் இனத்தாருடன் கூடி வாழ விரும்புகிறாயா?" என்று கேட்டேன். அவன் அதற்கு; "ஆம். எனது இனத்து மக்களோடு சேர்வது எனக்கு மிகவும் மகிழ்ச்சி" என்றான். "உனது பிறந்த நாட்டிற்குப்போய் என்ன செய்வாய்? மறு படியும் சீர்கெட்டு, விலங்கின் தன்மையுள்ளவனாய், மனிதர் ஊனை உணவாகக்கொண்டு கீழ் மகனாக நாட்கழிப்பாயா?" என்று வினவினேன். அவனுக்கு ஏதோ மனக்கவலை யுண் டாகியிருப்பதாக அவன் முகத்தில் விளங்கியது. தலை

அசைத்து, அவன் "இல்லை இல்லை! நற்பண்பும் நற்செயல் களும் உடையவர்களாய் இருக்கவும், கடவுளை வழிபடவும், இனி மனிதர் ஊன் உண்ணுமல், கூலத்தை அரைத்து மாவில் ரொட்டி சுட்டு, அதையும் ஆடுமாடுகளின் இறைச் சியையும் பாலையும் உண்ணவும் வேண்டுமென்று என் நாட் டவர்களுக்குச் சொல்வேன்" என்று விடை கூறினன். "அப்படிச் சொல்வாயானல், அவர்கள் உன்னைக் கொன்று விடுவார்களே" என்று நான் கூறினேன். அது கேட்ட வெள்ளிக்கிழமை சற்று நேரம் பேசாமல் இருந்து ஆழ்ந்து நினைத்து, "இல்லை. அவர்கள் என்னைக் கொல்லமாட்டார் கள், நான் கூறுவதனைக் காது கொடுத்துக் கேட்டு அறி வாளிகள் ஆக விரும்புவார்கள். ஓடத்தில் வந்து இறங் கிய தாடி வளர்த்த வெள்ளை மனிதரிடத்தில் அவர்கள் பல நற்பண்புகளைக் கேட்டு அறிந்து மேன்மையுற்று இருக்கின் ருர்கள்." என்று கூறினன். அப்படியானல் அவர்களிடத் திற்போய்ச்சேர உனக்கு விருப்பமாய் இருக்கிறதா என்று நான் கேட்க, அவன் முறுவலித்து, இவ்வளவு தொலைவு நீந்திப்போக எனக்கு உடல் வலிமை இல்லை என்ருன். நான் ஓர் ஓடம் செய்து கொடுத்தால் அதில் ஏறிப்போவ தற்குத் தடை என்ன என்று கேட்டேன். அதற்கு அவன் நீரும் என்னுடன் வருவீரானல், இருவரும் போவோம் என் ருன். "நானும் உன்னுடன் வருவதா! என்னைக் கண்ட உடனே, கொன்று தின்றுவிடுவார்களே! அதற்கு வழி என்ன?" என்றேன். வெள்ளிக்கிழமை "இல்லை. இல்லை! அவர்கள் உம்மைக் கொன்று தின்றுவிடாமல், உம்மிடத் தில் அன்புகூர்ந்து இருக்கும்படி செய்வேன்" எனக் கூறி னன். பகைவரைக் கொன்று தன் உயிரைக் காத்த வர லாறுகளை அவர்களுக்குக் கூறி, அவர்கள் கருத்தைக் கவர்ந்து, என்னிடத்தில் அன்பு கூரும்படி செய்வதே அவ னுடைய மனக்கருத்து என்று அறிந்தேன். மனத்துயர் அடைந்து பற்றுக்கோடு அற்றவர்களாய்க் கரை சேர்ந்த பதினேழு தாடி வளர்த்த வெள்ளை மனிதருக்குத் தன் இனத்தார் செய்த உதவிகளையும், நல்ல பணிகளையும்பற்றி விளக்கமாய் என்னிடத்தில் கூறினன்.

**ஓடம் ஏறி வெள்ளிக்கிழமையின் ஊரை அடைய விரும்பினேன்**

அவன் இவ்வாறு விவரமாய்க் குறிப்பிட்ட வெள்ளை மனிதர் ஸ்பானியர், அல்லது போர்த்துக்கீசியர் என்று உறுதியாய் நம்பினேன். பெரிய நாட்டிற்கு நாற்பது கல் தொலைவில் உள்ள இத்தீவில் தனியேயிருக்கும் பற்றுக் கோடு அற்ற எனக்குத் துணை செய்வார் ஒருவரும் இல்லை. எப்படியாவது அக்கரை பிடித்து, அவர்களுடன் சேர்ந்தால், அங்கிருந்து அவர்கள் துணையைக்கொண்டு, சிறையிருக்கும் துயரம் நீங்கி, நான் பிறந்த நாட்டைச் சென்று அடையலாம் ஆதலால், அக்கரை சேர வகை பார்க்கவேண்டும் என்று அன்றுமுதல் எனக்கு அவா உண்டாயிற்று. சில நாட்கள் சென்றபின், நான் வெள்ளிக்கிழமை ஓடம் விட்டிருந்த கரைக்கு அழைத்துக்கொண்டுபோய், உன் பிறந்த நாட்டிற்குச் செல்ல உனக்கு ஓர் ஓடம் தருவேன் என்று சொல்லி, நீரில் மூழ்கியிருந்த ஓடத்தில் ஏறிய நீரை இறைத்து, வெளியிற் கொண்டுவந்து நிமிர்த்தி, அவனுக்குக் காண்பித்தபின் இருவரும் அதில் ஏறினோம்.

ஓடம் செலுத்தும் திறத்தில் அவன் என்னைவிட இருமடங்கு வன்மையுடையவன் என்றும், மிகுந்த விரைவாய்ச் செலுத்தும் திறம் அவனுக்கு உண்டு என்றும் கண்கூடாய்க் கண்டு "நல்லது வெள்ளிக்கிழமை, இனித் தடை என்ன? இவ்வோடத்தைச் செலுத்திக்கொண்டு, இ( வரும் உன் நாட்டிற்குச் செல்வோமா?" என்று கேட்டேன். நான் இவ்வாறு கேட்டதைப்பற்றி நினைத்து, அவன் ஊக்கம் அழிந்தவன்போல் ஒன்றும் பேசாதிருந்தான். இவ்வளவு தொலைவு அச்சமின்றிச் செல்வதற்கு அவ்வோடம் மிகச் சிறியது என்று நினைத்தான் போலும். அதனினும் பெரிய ஓடம் மற்றொன்று இருப்பதாகச் சொன்னேன். நான் முன்பு பலநாள் வருந்திச் செய்து, கடலில் இறக்க முடியாதென்று விட்ட ஓடம் இருந்த இடத்திற்கு மறுநாள் அவனை அழைத்துக்கொண்டு போய்க் காண்பித்தேன். அதைக் கண்டவுடன் அது நமது பயணத்துக்கு உதவுமென்று வெள்ளிக்கிழமை கூறினான். அவ்வோடம் தேடுவா

ரற்று இருபத்திரண்டு இருபத்து மூன்று ஆண்டுகளாய் வெய்யிலிற் கிடந்து விறகுபோற் காய்ந்து முறுகி வெடித்து, ஒருவாறு உட்கிப்போயிற்று. வெள்ளிக்கிழமை அதைக் கண்டு "இவ்வோடத்தில் ஏறிப் போகலாம்; இதில் நமக்கு வேண்டும் அளவிற்கு உணவுப் பொருள்களும், அருந்துதற்கேற்ற நீர்வடிவமான பொருள் வகைகளும், ரொட்டி முதலானவைகளும் ஏற்றிக்கொண்டு போகலாம்" என்றான்.

# பதினாறும் அதிகாரம்

## வெள்ளிக்கிழமையின் விருப்பம்

எல்லாச் செயல்களையும் நன்றாய் ஆராய்ந்தபின், வெள்ளிக்கிழமையுடன் அமெரிக்காக் கண்டத்திற்குப் போவதுதான் நன்று என்று உறுதியாய் நினைத்தேன். பின்பு வெள்ளியைப் பார்த்து, நாம் இருவரும் கண்ட ஓடத்தின் அளவு பெரிதாகப் புதிய ஓடம் ஒன்றைச் செய்து முடிக்க வேண்டும்; நீ அதில் ஏறி உன் வீட்டிற்குப் போக வேண்டும் என்று கூறினேன். அவன் வாயினி அதற்கு விடை ஒன்றும் பிறக்கவில்லை. அவனுக்கு ஆழ்ந்த நினைவுகளும் மனக்கவலையும் உண்டாகியிருப்பதாக அவன் முகக் குறிப்பினின்று விளங்கியது கண்டு அதற்குக் காரணம் என்ன? என்று கேட்டேன். அப்பொழுது அவன் "நீர் வெள்ளிக்கிழமையின் மேல் பெருஞ்சினம் கொள்வதற்குக் காரணம் என்ன? நான் என்ன குற்றம் செய்தேன்?" என்று என்னைத் திருப்பிக் கேட்டான். அதற்கு நான் உன் கருத்து என்ன என்று கேட்டு எனக்கு உன்னிடத்தில் எள் அளவும் சினம் இல்லை என்றேன். "சினம் இல்லையா!" என்று இச்சொற்களைப் பல கால் வற்புறுத்திச் சொல்லி, "என்னை என்னுடைய இனத்தார் வாழும் இடத்திற்கு அனுப்பிவிடும் காரணம் என்ன?" என்று கேட்டான். "காரணம் என்ன என்று கேட்கிறாய் வெள்ளிக்கிழமை உன் நாட்டிற்குச் சென்று வாழ உனக்கு விருப்பமாய் இருக்கிறது என்று நீயே சொல்ல வில்லையா?" எனக் கேட்டேன். "ஆமாம், நாம் இருவரும் அவ்விடத்திற் சென்று வாழ்வது எனக்கு விருப்பந்தான். என் தலைவராகிய நீர் என்னுடன் வாராதிருந்தால்; எனக்கு அங்கே போக விருப்பம் இல்லை." என்றான். என்னை விட்டுத் தனியே போக அவன் ஒருபொழுதும் நினைக்கவில்லை. நான் உன்னுடன் வருவதா?

நான் உன்னுடன் அங்கு வந்து என்ன செய்வேன்? எனக் கேட்டேன். இதைக் குறித்து அவன் நீண்ட நேரம் நினைக்காமல் பின்வருமாறு உடனே விடைகூறினான்:—"அங்கு இருப்பவர்களுக்கு உம்மால் மிகுந்த நன்மை உண்டாகும். அந்தக் காட்டுத் தன்மையுள்ள வேடருக்கு நீர் நல்ல அறிவுரைகளைக் கூறினால், அவர்கள் நற்பண்புகளிலும், செயல்களிலும், பழகுவார்கள். மயங்கியிருக்கும் அவர்களுடைய அறிவு தெளிவு அடையும். கொடிய செயல்களை ஒழித்து நற்செயல்களில் ஈடுபட்டு மேன்மையடைவார்கள். அமைதியும் அன்பும் அவர்களிடத்து உண்டாகும். கடவுளை அறியவும், அவரை வழிபடவும், நல்லொழுக்கம் உடையவர்களாய் வாழவும் நீர் அவர்களுக்கு நல்லறிவு புகட்டுவீர்." எனக் கூறினான்.

"வெள்ளிக்கிழமை, நீ என்ன கூறுகிறாய் என்பதை அறியாமல் கூறுகின்றாய்? அறிவில்லாதவனாகிய எனக்கு என்ன தெரியும்?" என்று நான் கூற, அவன் "தெரியும், தெரியும், நீர் எனக்கு நல்லறிவு புகட்டினீர். அவ்வாறே அவர்களுக்கும் நல்லறிவு புகட்ட உம்மால் ஆகும்" எனக் கூறினான். அதற்கு நான்: "இல்லை, இல்லை. நான் வரவில்லை; நீ மட்டும் போக வேண்டும்; நான் முன்பு தனியே இங்கு இருந்தது போல் இருப்பேன்" என்றேன். இச்சொற்களைக் கேட்டு அவன் மனம் தடுமாறியதனால், இடுப்புப் பட்டையில் வழக்கமாய் மாட்டிக் கொண்டு போகும் கைக்கோடரி ஒன்றை விரைந்து ஓடிப்போய் எடுத்து வந்து என்னிடத்திற் கொடுத்தான். இதனால் என்ன செய்யச் சொல்கின்றாய்? என நான் கேட்டேன். "வெள்ளிக்கிழமையைப் பிடித்து வெட்டிக் கொன்றுவிடும்" என்று அவன் கூறினான். நான் உன்னை வெட்டுவதற்குக் காரணம் என்ன என்று கேட்டபோது அவன் என்ன காரணத்தால் நீர் வெள்ளிக்கிழமையை அனுப்பி விடுகின்றீர்? வெள்ளிக்கிழமையை அனுப்ப வேண்டாம். அவனைப் பிடித்துக் கொன்று விடும் என விரைவில் விடை கூறினான். இது வேடிக்கைப் பேச்சு அன்று; அவன் தன்

நெஞ்சின் கருத்தை உள்ளபடி வெளியிட்டான். அவன் கண் கலங்கிக் கண்ணீர் ததும்பியதே இதற்குச் சான்று. அவனுக்கு என்னிடத்தில் மிகுந்த விருப்பம் உண்டாகி யிருத்தலையும், அவன் மனம் மாறுமல் நிலைபெற்றிருப்பதை யும் வெளிப்படையாய்க் கண்டு, என்னுடன் இருந்து வாழ விருப்பம் இருந்தால், நான் அவனை அனுப்பிவிட விரும்ப வில்லை என்று அப்பொழுதும் அதற்குப் பின்பு பல வேளை களிலும் கூறினேன்.

**புதிய ஓடம் செய்ய விரும்புதல்**

முடிவாகக் கூறினல், அவனுக்கு என்னிடத்தில் உறுதியான, நிலைத்த அன்பு உண்டாகியிருப்பதாகவும், அவன் எக்காரணம் கொண்டும் என்னைவிட்டுப் பிரிய மாட்டான் என்றும் அவன் வாய்மொழிகளால் ஐயம் திரிபு அறக் கண்டேன். மேலும் அவனுக்குத் தன் நாட்டு மக்கள் மேல் இருந்த பற்றும், என் வழியாகத் தன் நாட்டு மக்களுக்கு, நன்மை யுண்டாகும் என்று அன்புகூர்ந்து எண்ணியதுமே தான் பிறந்த நாட்டிற்குப் போகும் எண் ணத்தை அவனுக்கு உண்டாக்கின என்று அறிந்தேன். அவனுடைய நாட்டு மக்களுக்கு நன்மை செய்யும் வகை இன்னதென்று எனக்குக் கனவிலும் தெரியாது. ஆதலால், அவர்களுக்கு நன்மை செய்வதற்கு நான் அற்பமாயினும் நினைக்கவும் இல்லை; விரும்பவும் இல்லை. தாடி வளர்த்த வெள்ளை மனிதர் பதினேழு பெயர் தன் நாட்டில் வந்து வாழும் செய்தியை அவன் எனக்கு வெளியிட்டபோது, நான் அவர்களிடத்திற்கு எவ்வாருவது போய்ச் சேர்ந்து, அவர்கள் வழியாகத் தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று எனக்கு விருப்பம் உண்டாயிற்று என்னும் இச் செய்தியை முன்பே கூறியிருக்கின்றேன். அந்த விருப்பம் வரவர வளர்ந்து வலிவுற்று முதிர்ந்தது. அதனுல் காலம் தாழ்த்தாமல் விரைவில் நானும் வெள்ளிக்கிழமையும் தகுதியான பருமரம் பார்த்துத் தறிக்கவும், பயணத்திற்கு வளமான பெரிய ஓடம் ஒன்று செய்யவும் தொடங்கினேம். ஓடங்கள் மட்டும் அன்று, ஒரு பெருஞ் சேனை ஏறத்தக்க

போர்க் கப்பல்கள் பல செய்ய வேண்டுமாயினும், அவை களுக்கு வேண்டிய தகுதியான மரங்கள் தீவில் எங்கும் திர ளாய் இருந்தன. கடற்கரைக்கு அருகில் மரம் தறித்து ஓடம் செய்தால் அதை முன் போலத் தொல்லைப் படாமல் எளிதாய்க் கடலில் இறக்குவதற்கு இசையும் என்று எண்ணிக் கடற்கரைப் பக்கத்தில் மரம் பார்த்துத் தறிப் பது நலம் என்று எண்ணினேன்.

**பெரிய ஓடம் செய்து முடித்தல்**

இன்ன வகை மரம் ஓடத்திற்கு ஆகும் என்று என்னைக் காட்டிலும் வெள்ளிக்கிழமைக்கு மிக நன்றாகவும், திட்டமாகவும் தெரிந்தது. முடிவாக இறுதியில் வெள்ளி ஒரு மரத்தைக் குறித்து, அதுதான் ஓடத்திற்குத் தறிக்கத் தகும் என்றான். இருவரும் அதைத் தறித்து வீழ்த்தி ேனாம். அம்மரம் ஃபஸ்டிக் எனப் பெயர் வழங்கும் மரத் திற்கு ஒப்பாய் இருந்தது. அஃது ஒருவாறு அந்த இனத்து மரத்தைப் போலவும், நிறத்திலும் மணத்திலும் நிகராகுவா மரத்தைப் போலவும் இருந்தது. அதன் பெயர் இன்னது என்று எனக்கு நாளிது வரையில் தெரியாது. வெள்ளிக்கிழமை அம்மரத்தின் உள் வயிரத்தைச் சுட் டெரித்துக் குழித்து ஓடம் அமைக்க வேண்டும் என்றான். சுட்டு எரித்து ஓடம் அமைப்பதைக் காட்டிலும் உளி, கோடரி முதலிய ஆயுதங்களால் அடித்துக் கொத்திக் குடைந்து எடுப்பது எளிது என்று சொல்லி, ஆயுதங் கைக் கொண்டு வேலை செய்யப் பயிற்றினேன். அவன் எளிதிற் பயின்று வேலையிற் கைபடிந்து பழக்கமுடைய வன் ஆனான். முப்பதுநாள் இருவரும் வருந்தி உழைத்து ஓடம் செய்து முடித்தோம். கோடரியால் அதன் வெளிப் பக்கத்தைக் கொத்தி மெருகிட்டு, உருவாக்கியபின், ஓடம் மிகவும் அழகாய் அமைந்தது. அதன் பிறகு அடியில் பெரிய உருளை மரங்களைக் குறுக்கே அமைத்து, ஓடத்தைப் பெயர்த்து, அங்குலம் அங்குலமாய் நகர்த்தித் தள்ளிக் கொண்டு போய் நீரில் இறக்குவதற்கு, கிட்டமுட்டப் பதினைந்து நாட்கள் சென்றன.



**ஓடத்தில் துணைப் பொருள்கள் அமைத்தல்**

கடலில் இறக்கியபின் அத்துணைப் பெரிய ஓடத்தை எனது கையாளர்கிய வெள்ளிக்கிழமை மிகுந்த திறமை

யுடன் விரைவில் திருப்பித், தண்டுவலித்துச் செலுத்திய விந்தையைக் கண்டு நான் வியப்பு அடைந்தேன். நாம் இருவரும் இதில் அச்சமின்றி ஏறி அக்கரைக்குப் போக லாமா என்று கேட்டேன். "ஆம் பெரும் புயல் அடித் தாலும் அஞ்சவேண்டுவதில்லை; அச்சமின்றித் துணிவோடு போகலாம்" என்றான். இம்மட்டில் நான் மனநிறைவு கொண்டு இருந்து விடவில்லை. ஓடத்திற் பாய்மரமும் பாயும் உண்டாக்கவும், நங்கூரமும் கம்பியும் தேடி அமைக்க வும் வேண்டுமென்று எண்ணியிருந்தேன். பாய்மரம் தேடு வது அரிது அன்று. தேவதாரு என்னும் ஒருவகை மரம் தீவில் மிகுதியாய் இருந்தது. கடற்கரைக்கு அருகில் நேர்மையான இளந் தேவதாரு ஒன்றைக் கண்டு, வெள்ளிக் கிழமையைக் கொண்டு தறித்து, அதை ஒழுங்குபெற வெட்டிப் பாய்மரமாக அமைக்கும்படி சொன்னேன். பாய் தேடி அமைப்பதைப் பற்றித்தான் எனக்கு மிகுந்த கவலை உண்டாயிற்று. பழைய பாய்த்துண்டுகள் திரளாய் இருந் தன. அவைகளை இருபத்தாறு ஆண்டுகளாக வைத் திருந்தும், எனக்கு எப்பொழுதேனும் உதவும் என்று எண்ணாததனால், நான் பழுதாகாதபடி பாதுகாப்புச் செய்ய வில்லை. உட்கி உதவாமற் போம் என்று நம்பியிருந்தேன். ஒவ்வொன்றாய் எடுத்துப் பார்க்கும் அளவில், பல துண்டுகள் எனக்குப் பயன்படாதனவாய் இருந்தன. ஒரு வாறு பயன்படத்தக்க இரண்டு துண்டுகளைக் கண் டெடுத்து, எனக்குத் தெரிந்தமட்டும் தைத்துப் பக்குவப் படுத்தத் தொடங்கினேன். தகுதியான ஊசி இல்லை. ஒரு விதமாய் வருந்தித் தைத்துப் பொருத்தி, முக்கோணவடி வான நன்றாக அமையாத பாய் ஒன்றை அமைத்தேன். இங்கிலாந்தில் இந்த வடிவத்தில் உள்ள பாய்க்கு ஆட்டுத் தோல் பாய் எனப் பெயர் வழங்குவர். இந்தப் பாயை நீண்ட கொம்பு ஒன்றில் இசைத்து, ஓடத்தின் பக்கத்தில் குறுங்கொம்பு குறுக்கே வைத்து, அதிற்கட்டி, ஓடத்தைச் செலுத்த எண்ணியிருந்தேன். ஆங்கிலேய மரக்கலங்களைச் சேர்ந்த பெரிய வள்ளங்களுக்கு இந்த வடிவமான பாய் கட்டுவார்கள். இந்த வரலாற்று நூலின் தொடக்கத்தில்

கூறியபடி பார்பெரி நாட்டினின்று ஓடமேறி ஒளித்து ஓடிய பொழுது, நான் அதிற் கட்டிய பாய் இத்தன்மையுள்ள தாகவே இருந்தது. ஆகவே, இத்தகைய பாய் தூக்கி ஓடம் செலுத்தப் பயின்றிருந்தேன்.

பாய் மரம் வெட்டிப் பக்குவமாய் ஓடத்தில் இசைத்துப் பாய் தைத்து, மற்றும் இன்றியமையாத துணைப் பொருள் பலவும் தேடி ஒழுங்குபடுத்துவதற்குச் சற்றுக் குறைய இரண்டு திங்கள் சென்றன. காற்று வாட்டத்தில் ஓடத்தைத் திருப்பிச் செலுத்த வேண்டிய அதற்குதவியாகப் பாய்மரம் கட்டும் பக்கக் கயிறு ஒன்றும், முற்பாய் ஒன்றும் உண்டாக்கினேன். முதன்மையாய் ஓடம் திரும்புவதற்குப் பின் அணியில் சுக்கான் ஒன்று பொருத்தினேன். இந்தவேலைகளில் பழக்கம் இல்லாத எனக்குச் சிறந்த திறமை எவ்வாறு வரும்? இந்தத் துணைப் பொருள்களெல்லாம் ஓடத்திற்கு இன்றியமையாதன என எண்ணியதனுல், எத்தனையோ சூழ்ச்சிகள் செய்து அவற்றைத் திரட்டினேன். அவற்றுள் பல செய்யும் பொழுதே வீணுயின. ஆயினும் சலிக்காமல் உழைத்து இறுதியில் ஒருவாறு நான் எடுத்த செயலைச் செய்து முடித்தேன். ஓடம் சமைப்பதற்கு நான் உழைத்த அளவுக்கு அதற்குரிய துணைப் பொருள்களைத் தேடுவதற்கும் உழைத்தேன்.

## வெள்ளிக்கிழமைக்கு ஓடம் செலுத்தக் கற்பித்தேன்

இவ்வேலைகள் அனைத்தும் செய்து முடித்தபின் எனது ஓடம் செலுத்தும்வகையை வெள்ளிக்கிழமைக்குப் பயிற்ற வேண்டி யிருந்தது. துடுப்புக்கொண்டு ஓடம் செலுத்த அவன் நன்ருய்ப் பழகி யிருப்பினும், பாய் தூக்க, இறக்க, சுக்கான் பிடிக்க, திருப்ப வகை அறியாதிருந்தான். நான் சுக்கான் பிடித்து ஓடம் செலுத்திக்கொண்டு போனதையும், திருப்பிக்கொண்டு வந்ததையும், இருபுறத்திற்கும் பாய் மாற்றினதையும், அதில் ஓடம் சென்ற திசைக்கு ஏற்றபடி காற்றுப் பிடித்ததையும் கண்டபொழுது அவன் அதிக வியப்பு அடைந்து நின்றுன்.

பின்பு நாளுக்கு நாள் கண்டு பழகிக் கைதேர்ந்த கடலோடி ஆனான். திசையறி கருவியைப் பயன்படுத்தும் முறை மட்டும் அவனுக்குக் கற்பிக்க இயலாதிருந்தது. மழைக் காலத்திலன்றி, மற்றைக் காலங்களில் வானத்தில் முகில் சூழ்ந்து மப்பு மந்தாரம் இல்லாதபடியினாலும், மூடுபனியில் லாததனாலும், இரவில் விண்மீன்களும், பகலில் கரையும் வெளிப்படையாகத் தெரியும். மழைக்காலத்தில் எவரும் கரை வழியாகவாவது, கடல்வழியாகவாவது பயணம் செய்ய நினைக்கிறதில்லை. ஆதலினால் திசையறி கருவியைப் பயன்படுத்தக் காரணமும் இல்லை.

## இருபத்தாறுவது ஆண்டு நிறைவு விழா

இத்தீவில் எனது சிறை யிருப்புத் தொடங்கி இருபத்தேழாவது ஆண்டு பிறந்தது. சென்ற மூன்று ஆண்டுகள் வெள்ளிக்கிழமை என்னுடன் பழகவே எனது வாழ்க்கை முறை முன் இருந்ததற்கு வேறுபட்டதனால், அம்மூன்று ஆண்டையும் எனது சிறை யிருப்புக் காலக் கணக்கி னின்று தள்ள வேண்டும். முன்போல ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடிக் கடவுள் எனக்கு மனம் இரங்கிச் செய்த பற்பல நன்மைகளை நினைத்து, அவரை வணங்கி வாழ்த்தினேன். இப்பொழுது அவர் தமது திருவருளால் என்னை அன்பாய் ஆதரித்து வருவதற்கும், இனி விரை வில் சிறை மீளுவேன் என்னும் துணிவை எனக்கு உண் டாக்கியதற்கும் நன்றியுடையவனாய் அவரை முன்னிலும் பன்மடங்கு பாராட்டி வழிபட்டேன். இன்னும் ஓராண்டிற் குள் நான் இந்தச் சிறைச்சாலையினின்று விடுதலை பெறு வேன் என்பதாக என் உள்ளத்தில் அழியாத உறுதியான எண்ணம் உண்டாயிற்று. ஆனாலும் இந்த எண்ணத் தைக்கொண்டு நான் செயலற்று இருக்கவில்லை. வழக்கப் படி பயிர்த்தொழில் செய்து தரையை அகழ்ந்து கொம்பு நட்டு வேலி அடைத்துக்கொண்டு வந்தேன். அன்றியும் கொடிமுந்திரிப்பழம் பறித்து உலர்த்திப் பதம் செய்து பின்னும் இன்றியமையாத வேலைகள் எல்லாவற்றையும் நிறைவேற்றினேன்.

**புதிய ஓடத்தைப் பாதுகாத்தல்**

இதற்குள் மழைக்காலம் வந்ததனால், பெரும்பாலும் வெளியிற் செல்லாமல் வீட்டில் இருந்தேன். புதிதாய்ச் செய்த ஓடத்தை எனது சிறையிருப்புத் தொடங்கிய காலத்தில் கப்பலினின்று கட்டி ஏறிவந்த தெப்பம் கரையைச் சேர்ந்த நீரோடையில் திருப்பிக்கொண்டுவந்து, நீர்ப் பெருக்கு வேளையில் கரையில் அலை எட்டும் தொலைவில் இழுத்துக் கரையேற்றினேன். ஓடம் நின்று மிதக்கத்தக்க பரப்புள்ள தரையை வெள்ளிக்கிழமையைக்கொண்டு அகழ்வித்தேன். நீர் ஏருதபடி கடல்வற்றும் வேளையில் அவ்விடத்தின் ஓரத்தில் உறுதியான அணைகட்டினோம். ஆகவே, எங்கள் ஓடம் கடற்கரைப் புறத்தில் அலைக்குத் தப்பி, வெறுந்தரையில் நின்றது. அது மழையில் நனையாதபடி திரளான மரக்கிளைகளை வெட்டிக்கொண்டுபோய், அடர்த்தியாய் அடுக்கி, வீடு வேய்ந்ததுபோல், அதை மூடிக்கட்டியபின், சிறைமீட்சிப் பயணம் செல்லக் கருதி, நவம்பர், டிசம்பர்த் திங்கள் வரும் அளவும் காத்திருந்தோம்.

**காட்டு மனிதரின் ஓடங்களைக் கண்டு அஞ்சுதல்**

கார் காலம் நீங்கியது. ஆதலால் பயணம் செய்வதற்கு நாள்தோறும் முயற்சிகள் செய்து வந்தேன். முதலில் பயணத்துக்கு வேண்டும் உணவுப் பொருள் முதலியவைகளை இரண்டொரு வாரத்திற்குள் திரட்டி ஓடத்தில் ஏற்றவும், அதன் பிறகு அணையை வெட்டிப் பிரித்து, ஓடத்தைக் கடலில் இறக்கவும் எண்ணினேன். பெரும்பாலும் வாரத்திற்கு ஒருமுறை நாங்கள் கடல் ஆமை பிடித்து, அதன் முட்டைகளையும் இறைச்சியையும் சமைத்து உண்பது வழக்கம். ஒரு நாள் காலையில் நான் பயணத்துக்கு வேண்டிய ஏதோ வேலை செய்து கொண்டிருந்தேன். அப்பொழுது வெள்ளிக்கிழமையைக் கடற்கரைக்குச் சென்று ஆமை பிடித்துவரச் சொன்னேன். அவன்போய் உடனே திரும்பி ஓடிப் பறந்து வந்து, புற மதி

லாகிய வேலியைத்தாண்டி, உள்ளே குதித்தான். தரையில் அவன் அடி தங்கவில்லை. அவன் அவ்வளவு மிக்க விரை வாய் ஓடி வந்து, செய்தி என்ன என்று நான் கேட்கு முன், "தலைவரே! தலைவரே! துன்பம் வந்துவிட்டது! கேடு வந்து விட்டது!" என்று பதறி நடுங்கி ஓலமிட்டான். "செய்தி என்ன? வெள்ளிக்கிழமை, பதருமற் சொல்" என்று கேட் டேன். அதற்கு அவன், "சொல்வது என்ன? அதோ பாரும்! ஓடம் ஒன்று, இரண்டு, மூன்று! ஒன்று, இரண்டு, மூன்று!" என்ருன். இப்படிச் சொன்னதனுல் ஆறு ஓடங்களைக் கண்டான் என்று நினைத்து, விவரமாய்ச் சொல்லும்படி கேட்டேன். வந்த ஓடங்கள் மொத்தம் மூன்று என்று அவன் வாய் மொழியால் அறிந்து, "வெள்ளிக்கிழமை இங்கே வா, அஞ்சாதே" என்று அவனை ஆற்றித்தேற்றி னேன். அவனுக்குச் சிறிதாயினும் அச்சம் தெளியவில்லை. வேடர் தன்னைத் தேடிப் பிடித்துத் துண்டு துண்டாக அறுத்து உண்ண வந்தார்கள் என்று நினைத்து நடுங்கி ஞன். அவன் நெஞ்சு பதறியதையும் கைகால் உதறியதை யும் கண்டு, கலக்கமுற்று, இதற்கு என்ன செய்வது என்று சற்று நேரம் நினைத்துப், பின்பு பகைவரால் உனக்கு வரும் தீங்கு எனக்கு இல்லையா? அஞ்சாதே என்று அவனுக்கு ஆறுதல் கூறி அவனைத் தேற்றினேன். மேலும், "வெள்ளிக்கிழமை நாம் அவர்களோடு போரிட்டு வெல்வதற்கு மனவுறுதி செய்துகொள்ள வேண்டும். போரிட உன்னுல் முடியுமா?" என்று கேட்டேன். அவன், "துப்பாக்கியால் சுடுவதற்குப் பழகியிருக்கின்றேன்; ஆயி னும் என்ன, பகைவர் திரளாய் வந்திருக்கின்ருர்களே" என்ருன். திரளாய் வந்திருப்பது பெரிதன்று, குண்டு பட்டு இறப்பவர்கள் போக, அதற்குத் தப்பி இருப்பவர்கள் துப்பாக்கி வெடி அதிர்ச்சி கேட்டு அடிவயிறு கலங்கும்படி நடுங்குவார்கள்." என்று சொல்லி, உனக்கு ஒரு தீங்கும் வராமல் நான் காத்துக்கொள்வேன்; நீ எனக்குத் தீங்கு வராமல் காத்து எனது அருகில் நின்று என் சொற்படி தவருமல் நடப்பாயா? எனக் கேட்டேன். "என் உயிரைக் காத்து அருளிய தலைவரே, நீர் என்னை இறக்கும்படி கூறி

னும் அவ்வாறே இறப்பேன்" என்றான். பின்பு ஓரளவு ரம் சாராயம் கொண்டு வந்து அவனுக்குக் குடிக்கக் கொடுத்தேன். அளவோடு செலவு செய்து வந்ததனால் வேண்டும் அளவுக்குச் சாராயம் என்னிடத்தில் இருந்தது. அவன் சாராயம் குடித்த பின், நாங்கள் வழக்கமாய் வெளியிற் கொண்டுபோகும் குருவிக் குழாய்த் துப்பாக்கிகள் இரண்டையும் எடுத்து, மருந்து போட்டு, கைத்துப்பாக்கிக் குண்டின் அளவான குண்டுகள் கெட்டித்து வைக்கச் செய்தேன். நான் நான்கு பெருந் துப்பாக்கிகளை எடுத்து, ஒவ்வொன்றிலும் பெரிய குண்டுகள் இவ்விரண்டும், சிறு குண்டுகள் ஐவ்வைந்தும் கெட்டித்து, பின்பு கைத்துப்பாக்கிகள் இரண்டில் ஒவ்வொன்றுக்கு இவ்விரண்டு குண்டு போட்டு, வழக்கப்படி உறையில்லாப் பெருங் கத்தியை எனது இடுப்புப் பட்டியில் மாட்டி, வெள்ளிக்கிழமைக்குக் கைக்கோடரியைக் கொடுத்தேன்.

**ஓடத்தில் வந்தவர் எத்தனை பேர்?**

மேற்கூறிய முயற்சிகள் செய்த பிறகு, தொலை நோக்காடியை எடுத்துக்கொண்டு, மலை உச்சியில் ஏறி, அதன் பக்கத்தில் நின்று, உற்று நோக்கினேன். கரையில் எனக்குத் தெரிந்த ஓடங்கள் மூன்று. நின்ற காட்டு மனிதர் இருபத்தொருவர் கைதிகள் மூவர் அவர்கள் போரில் சிறைப் பிடித்த அம்மூவரையும் வெட்டிக்கொன்று விருந்து உண்டு கொண்டாடுவதற்கு வந்திருப்பதாகத் தோன்றியது. அறிவு கெட்ட அந்த வேடர்கள் கொடிய விலங்குகளைப்போல மனிதரைத் துடிக்கப் பதறக் கழுத்து அறுத்து அவர் தம் இறைச்சியை உண்பது வழக்கந்தானே.

**வந்த வேடரைக் கொல்ல எண்ணுதல்**

முன்பு வெள்ளிக்கிழமை ஓடிப் பறந்து வந்து என்னிடம் அடைக்கலமானபோது வேடர் இறங்கிய துறை வேறு. இப்பொழுது அவர்கள் இறங்கியிருக்கும் துறை எனது ஓடம் நின்ற நீரோடைக்கு அண்மையில் ஆகும். அவ்விடத்தில் கரை சற்றுப் பள்ளமாய் இருந்தது. அன்றியும் கடற்

கரை வரையிலும் காடு அடர்ந்திருந்தது. மேற் கூறிய வேடர் இவ்விடத்திற் கொண்டாட வந்த விருந்தின் கொடிய தன்மை எனக்கு மிகுந்த வெறுப்பை உண்டாக்கியதனாலும், அடர்ந்த காட்டின் ஒதுக்கில் அவர்கள் கண்ணுக்கு மறைந்து நிற்பது இயலும். ஆதலாலும் நான் குன்றைவிட்டு இறங்கிப்போய், வெள்ளிக்கிழமையைக் கண்டு, வெள்ளிக்கிழமை! கடற்கரைக்குப்போய் வேடரைக் கொல்ல முடிவு செய்திருக்கிறேன். நீயும் என்னுடன் வந்து என் பக்கத்தில் நிற்பாயா? என்று கேட்டேன். அவனுக்கு உண்டாகியிருந்த அச்சம் தெளிந்து நான் கொடுத்த சாராயத்தை உட்கொண்டதனால் ஊக்கம் பிறந்திருந்தது. நீர் என்னை இறக்கச் சொன்னாலும் அந்நொடிப் பொழுதிலேயே இறப்பேன் என்று முகம் மலர்ந்து கூறினான்.

என்னுடைய சினம் தணியுமுன் குண்டு மருந்து கெட்டித்திருந்த துப்பாக்கி முதலிய படைக்கலங்களை மேற் சொல்லியபடி இருவரும் எடுத்துக்கொண்டு, புறப்படுவதற்கு ஏற்பாடுகள் செய்தோம். இடுப்புப் பட்டையில் மாட்டுவதற்குக் கைத்துப்பாக்கி ஒன்றும், தோளில் வைத்துக்கொண்டு வருவதற்குப் பெருந்துப்பாக்கிகள் மூன்றும், வெள்ளிக்கிழமைக்குக் கொடுத்தேன். நானும் அவ்வாறே கைத்துப்பாக்கி ஒன்றும், பெருந்துப்பாக்கிகள் மூன்றும் எடுத்துக்கொண்டு இருவரும் பயணப்பட்டோம். எனது சட்டையின் உறைக்குள் ரம் சாராயப்புட்டி ஒன்று இருந்தது. வெடி மருந்தும் குண்டுகளும் வைத்துக் கட்டிய பெரும் பை ஒன்றை வெள்ளிக்கிழமை கொண்டு வந்தான். என்னைவிட்டு விலகாமல் என் பின் வரவும், நான் சொல்லுமளவும் ஒன்றும் செய்யாமல் இருக்கவும், வாய் திறவாமல் மௌனமாய் இருக்கவும், அவனுக்கு வற்புறுத்திச் சொன்னேன். இவ்வாறு போர் மேற்கொண்டு இருவரும் வேடர் கண்ணுக்கு எதிர்ப்படாமல், குண்டு பாயும் தொலைவிற் சேரும் பொருட்டு, எங்களுக்கு வலப்பக்கத்தில் ஒரு மைல் தொலைவிற்குப் போய், நீரோடையைக் கடந்து காட்டிற் சேர்ந்தோம்.

அவர்களைக் கொல்வது முறையாகுமா?

அவ்வாறு போகும்போது, முன்பு எனக்குண்டா யிருந்த நினைவுகள் மீண்டும் பிறந்ததனால், நான் செய்த முடிவு தளர்ச்சியடைந்தது. வேடர் திரளாய் வந்திருப்பதனால், நான் அவர்களை எதிர்க்க இயலாதென்று என் உள்ளத்தில் அச்சம் உண்டாகவில்லை. கையில் படைக் கருவிகள் இல்லாத அவர்களோடு பிறர் துணையின்றி நான் ஒருவன் மட்டுமே போரிட நேரினும் வெற்றி பெறுவதற்கு எனக்குத் திறமை போதும். என்னுடைய நெஞ்சிற் பிறந்த எண்ணம் இது: வேடரைக் கொன்று அவர்களைக் கொன்ற கொலைப் பாவத்திற்கு நான் ஆளாகவேண்டிய காரணம் என்ன? இன்றியமையாமை என்ன? அவர்கள் எனக்குத் தீங்கு செய்யவும் இல்லை. செய்ய நினைக்கவும் இல்லை. என்னைப் பொறுத்தவரையில் அவர்கள் குற்றம் இல்லாதவர்கள். அவர்கள் செய்யும் கொடுஞ் செயல்களே அவர்களுக்கு அழிவைத் தேடித்தரும். அவர்களையும் அவர்கள் நாட்டவரையும் அறிவு கெட்டுக் கொடிய செயல்களிற் பயிலுமாறு கடவுள் கைவிட்டார் என்பதற்கு அவர்களுடைய கொடிய தீ யொழுக்கமே அழியாத அறிகுறியாய் இருக்கின்றது. அவர்களுடைய குற்றச் செய்கைகளைக் குறித்து நெறி முறை கூறவும், அவர்கள் குற்றத்திற்கு ஏற்ப உயிர் நீக்கம் செய்யவும் கடவுள் என்னை அறநெறி மன்றத் தலைவராக ஏற்படுத்தவில்லையே. அவர் மனத்துக்குப் பொருத்தமான காலத்தில் தாமே அவர்களுடைய கொடுமைகளைத் திட்டமாய் ஆராய்ந்து, நாட்டு மக்கள் அனைவரும் செய்த குற்றத்திற்கு அந்நாட்டவர் அனைவரையும் ஏற்றபடி ஒறுப்பார். கடவுள் அவர்களை ஒறுப்பதற்கு முன் நான் சென்று ஒறுப்பது முறையன்றே. வெளிப்படையில் அவர்களுடைய பகைவனும், அவர்களுடன் முன்னரே போர் தொடுத்திருப்பவனுமான வெள்ளிக்கிழமை தன் மட்டில் அவர்களைத் தாக்கிக்கொல்லத் துணிவது முறைதான். எனக்கு அவர்கள் தீங்கு ஒன்றும் செய்யவில்லையே என்ற எண்ணங்கள் வழி முழுவதும் என் உள்

ளத்தில் தோன்றி வழக்காடின. அதனால் அவர்கள் இருக்குமிடத்திற்கு நெருங்கிச் சென்று, ஒளித்து நின்று, அவர்கள் கொடிய விருந்து கொண்டாடுவதைக் கண்டு, அதன் பிறகு திருவுள்ளத்தின் செயலால் எனக்கு உண்டா கும் நினைவின்படி நடக்கவும் முடிவு செய்தேன். தகுதியான காரணம் உண்டானால் அன்றி நான் அவர்கள் செயலில் குறுக்கிடுவது இல்லை எனவும் முடிவு செய்தேன்.

### மறைந்திருந்து அவர்கள் செயலைக் காணுதல்

இவ்வாறு முடிவு செய்துகொண்டு, கூடியவரையில் விழிப்புடன் மௌனமாய் இருவரும் காட்டிற்புகுந்து, நிற்கா மல் நடந்து,ஒரு பகுதியை அடைந்தோம். வெள்ளிக்கிழமை என்னைவிட்டு விலகாமல், எனது அடிமேல் அடி எடுத்து வைத்து வந்தான். எங்களுக்கும் வேடருக்கும் இடையில் அக்காட்டின் ஒரு கோடி தவிர வேறு ஒதுக்கிடம் இல்லை. இவ்விடத்தில் ஒலி கேளாமல் வெள்ளிக்கிழமையை அழைத்துக் காட்டின் மூலையில் ஒரு பெரிய மரத்தைக் காட்டி, நீ அம்மரம் நிற்கும் இடத்திற்போய், வேடர் என்ன செய்கின்றார்கள் என்று பார்த்து வந்து எனக்குச் சொல் என்று அனுப்பினேன். அவன் போய்ப் பார்த்து வந்து, அவர்கள் நெருப் பெரித்து, அதைச் சூழ இருந்து, தாம் கொன்ற மனிதரில் ஒருவனுடைய இறைச்சியைத் தின் கிறார்கள் என்றும், சற்றுத் தொலைவில் கட்டுண்டு கிடக் கும் மற்றொரு மனிதனை இனி அடித்துக்கொல்வார்கள் என்றும் என்னிடம் தெரிவித்தான். அவன் சொல்லைக் கேட்டவுடன் என் உள்ளம் எரிந்து கரைந்து உருகிற்று. மேலும் கட்டுண்டு இருப்பவன் வேடன் அல்லன். ஓடத் தில் உயிர் பிழைத்து வேடருடைய கரையை அடைந்த தாடி வளர்த்த வெள்ளை மனிதரில் ஒருவன் என்றான். தாடி வளர்த்த வெள்ளை மனிதன் என்ற ஒலி கேட்டவுடன், நான் நடுங்கி அஞ்சிப் பதைப்புற்று, மர ஒதுக்கிற் போய் நின்று, ஆடை அணிந்த ஐரோப்பிய வெள்ளை மனிதன் ஒருவன் கடற்கரையில் நாணல்போன்ற ஏதோ ஒரு வகைக்

கொடியினால் கை கால் கட்டப்பட்டிருப்பதைத் தொலை நோக்காடியால் தெளிவாய்க் கண்டேன்.

பின்னும் நூறு முழம் தொலைவில் ஒரு மரமும், அதற்கு அப்புறம் சிறு புதரும் இருந்தன. அவ்விடத்திற் சேர்ந்தால் எங்களுக்கும் வேடருக்கும் உள்ள தொலைவு குண்டு செல்லும் தொலைவிற் பாதி அளவாய்க் குறுகும் என்றும், அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்படாமல் போக லாம் என்றும் சற்றுத் தொலைவு சென்றபொழுது எனக்குத் தெரிய வந்தது. ஆதலினால் எனக்குள் மூண்டு எரிந்த சினம் என்னும் நெருப்பைச் சிறிது அடக்கி இரு பது அடி தொலைவு தாண்டிப் போனவுடன் சிறு தூறு எதிர்ப்பட்டது. மற்ற மரம் கிட்டும் அளவும் அந்தத் தூறு தொடர்ச்சியாய் இருந்தது. அதற்கு அப்புறம் தரை சற்று மேடாய் இருந்தது. அம் மேட்டுக்கும், வேடர் இருந்த இடத்திற்கும் தொலைவு ஏறத்தாழ இருநூற்று நாற்பதடி. மேடு ஏறியபின், அவர்களைக் கண்ணுக்கெதிரே நின்றாற்போல முழுவதும் கண்டேன்.

### வேடரைத் துப்பாக்கியால் சுடுதல்

இனி நொடிப் பொழுதாயினும் தாழ்த்து நிற்றல் கூடாது. அக்கொடிய வேடர்களில் பத்தொன்பது பெயர் தரையில் நெருங்கி உட்கார்ந்திருக்க, இருவர் மட்டும் நற் பேறு இல்லாத அந்த எளிய கிறித்தவனைக் கொன்று தின்பதற்குக் கொண்டுவரச் சென்றார்கள். அந்தக் கிறித் தவனுடைய காலிற் கட்டியிருந்த கட்டை அவிழ்ப்பதற்குக் குனிந்தார்கள். உடனே நான் வெள்ளிக்கிழமையைப் பார்த்துக் "கேள் வெள்ளிக்கிழமை, ஏவுகின்றபடி செய்" என்றேன். அவன் 'ஆகட்டும்' என்றான். பின்பு: "நான் செய்கிறபடி நீயும் தவறாமற் செய்வாயாக" என்று அவ னுக்கு வற்புறுத்திச் சொல்லி விட்டுப் பெருந் துப்பாக்கி களில் ஒன்றையும், குருவிக் குழாய்த் துப்பாக்கியையும் தரையில் வைத்தேன். வெள்ளியும் அப்படிச் செய்தான். மற்றப் பெருந்துப்பாக்கியை வேடரை நோக்கிக் குறி தப்பா

மல் பிடித்து, அவனையும் அவ்வண்ணம் செய்யச் சொல்லி, ஆயத்தமாய் இருக்கிருயா என்றேன். ஆம் என்றான். அப்படியானால் வெடி தீர் என்று சொல்லி நானும் வெடி தீர்த்தேன்.

வெள்ளிக்கிழமை இடம் நோக்கிப் பாய்ச்சிய குண்டு சற்றும் தவருமல் குறித்த இடத்திற் பாய்ந்ததனால் அங்கு நின்ற வேடரில் இரண்டுபேர் இறந்து போனார்கள். மூன்று பேர் காயம் பட்டார்கள். நான் குறி வைத்துச் சுட்டது அவ்வளவு நன்ருய்ப் பலிக்கவில்லை. என் துப்பாக்கியால் இறந்தவன் ஒருவன். காயம் பட்டவர்கள் இருவர். எதிர் பாராமல் தமக்கு நேரிட்ட கொடிய துன்பத்தைக் குறித்து வேடர் பட்ட பாட்டையும், அவர்களுக்கு உண்டான அளவு கடந்த குலை நடுக்கத்தையும் எவ்வாறு விளக்கிக் கூற முடியும்? காயப்படாத வேடர் அனைவரும் குறித்து எழுந்து, பாய்ந்து, பதறி நடுங்கி இந்தத் துன்பம் எந்தத் திசையிலிருந்து வந்தது என்று அறியாமையினால் ஒரு திசைக்கும் ஓடாமல், தடுமாறினார்கள். வெள்ளிக்கிழமையின் கண்கள் அவர்கள் மேற் பாய்ந்த வண்ணம் இருந்தன. அவன் என் சொற்படி செய்யக் காத்துக்கொண்டிருந்தான். வெடி தீர்த்தவுடன் நான் துப்பாக்கியைத் தரையில் வைத்துவிட்டு, குருவிக்குழாய்த் துப்பாக்கியை எடுத்துக் குதிரை வில்லை இழுத்து, மயங்கித் தடுமாறி நின்ற வேடரை நோக்கிப் பிடித்து நின்றேன். வெள்ளிக்கிழமையும் அவ்வாறே செய்தான். ஆயத்தமாய் இருக்கிருயா் என அவன் "ஆம்" என்றான். "இறைவனுடைய திருப்பெயரை மனத்தில் வைத்துச் சுடு" என்றேன். உடனே இருவரும் வெடி தீர்த்தோம். இத் துப்பாக்கிகளில் இடப்பட்ட குண்டுகள் சிறிய கைத்துப்பாக்கிக் குண்டுகள் ஆதலால், இரண்டு பெயர் மட்டும் இறந்தார்கள், பலர் காயம் பட்டுப் பதறிக் கதறி, குளறிக் கூவி, பித்தங் கொண்டவர்கள் போலப் பிதற்றி, உடல் முழுவதும் குருதி வடிய வருந்தினார்கள். அவர்களில் பின்னும் மூன்று பெயர் குற்றுயிரோடு விழுந்தார்கள்.

வெடி தீர்ந்த துப்பாக்கிகளை வைத்துவிட்டுக் குண்டு மருந்து இட்டிருந்த பெருந் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு, வெள்ளிக்கிழமையைத் தொடர்ந்து வரும்படி கூறி, விரைந்து ஓடிக் காட்டினின்றும் வெளியே வந்தவுடன் வேடர்கள் என்னைக் கண்டார்கள். அஃதறிந்ததும் நான் நெடுங் குரலிட்டுக் கூவினேன். மனம் இளைக்காமல் மிகுந்த துணிவுடன் அடியெடுத்து என்னைத் தொடர்ந்து வந்த வெள்ளிக்கிழமையும் அவ்வாறே கூக்குரலிட்டான். காற்றின் விரைவுபோல விரைந்து செல்வதற்கு எங்கள் படைக்கலங்கள் தடையாய் இருந்ததனால், வேடர் இருந்த இடத்திற்கும் கடலுக்கும் இடையில் கடற்கரையில் கட்டப்பட்டிருந்த மனிதன் இருக்குமிடத்துக்குக் கூடிய விரைவில் விரைந்து சென்றேன். அவனைக் கழுத்தறுக்கப் போயிருந்த கொலைஞர் இருவரும் முதல்முறை வெடித்த துப்பாக்கி ஒலி கேட்டவுடன், கலங்கித் திகைத்துக் காலொடு கால் பின்னக் கடற்கரைக்கு ஓடி ஓடத்திற் பாய்ந்தார்கள். பின்னும் மூன்று பெயர் அவர்களைப் போலவே ஓடி ஒளிந்தார்கள். நெருங்கிப் போய் அவர்களைச் சுட்டு வீழ்த்தும்படி வெள்ளிக் கிழமையிடம் நான் கூறினேன். அக்குறிப்பு அறிந்த வெள்ளிக்கிழமை நூற்றிருபது அடி தொலைவு ஓடி அவர்களுக்கு அருகிற் சேர்ந்தவுடன் வெடி தீர்த்தான். எல்லோரும் ஓடத்திற்குள் சரிந்து குவியலாய் விழுந்தார்கள். யாவரும் இறந்தார்கள் என்று எண்ணினேன். சற்று நேரம் சென்று இரண்டு பெயர் எழுந்திருந்தார்கள். இறந்தவர் இருவர். காயம் பட்டவன் ஒருவன். அவனும் ஓடத்தின் அடியில் பிணம் போலவே கிடந்தான்.

### வெள்ளை மனிதனை விடுதலை செய்தல்

அதே நேரத்தில் நான் கத்தியை உருவிச் சிறைப் படுத்தப்பட்டிருந்த வெள்ளை மனிதனுடைய கைகால்களைப் பிணைத்திருந்த கொடிகளை அறுத்து அவனைத் தூக்கி

நிறுத்திப் போர்த்துகீசிய மொழியில் யாவன் என்று வினவினேன். அதற்கு அவன் இலத்தின் மொழியில் கிறித்துவ சமயத்தான் என்று கூறினன். கைகால் சோர்ந்து வலிவின்றி இருந்ததனால் நடுங்காமல் நிற்க வாயினும் என்னுடன் பேசவாயினும் அவனுக்கு முடியாமல் இருந்தது. என் சட்டை உறைக்குள் வைத்திருந்த சாராயப் புட்டியை எடுத்து அவன் கையிற் கொடுத்துக் குடிக்கச் சொல்லிக் குறிப்பித்தேன். ஒரு துண்டு ரொட்டியும் கொடுத்தேன். அதைத் தின்று சாராயம் குடித்துச் சோர்வு தெளிந்த பின், அவனது நாடு எது என்று கேட்டேன். "எஸ்பனேலி" என்றான். பின்னும் சற்றுக் களையாறித் தன்னைப் பகைவருடைய கையினின்றும் தப்புவித்த நன்றியை என்றும் மறவாமல், தான் எனக்குக் கடன்பட்டவனாய் இருப்பதாகப் பல குறிப்புக்களால் தெரிவித்தான். அவன் வாய் மொழியைக் கேட்டு, நான், "அன்பரே, பேசிக் கொண்டிருப்பதற்கு இது நேரம் அன்று. இப்பொழுது போரிட வேண்டும. உமக்கு உடல் வலிவு இருந்தால் இந்தக் கைத்துப்பாக்கியையும், கத்தியையும் எடுத்து உம்மைக் காத்துக்கொள்ளும்" என்று எனக்குத் தெரிந்தமட்டும் ஸ்பானிய மொழியிற் கூறினேன். அவன் எனக்கு வணக்கம் சொல்லிப் படைக் கலங்கள் இரண்டையும் கைக்கொண்டவுடன் அவனுக்குப் புதிய உள்ளக் கிளர்ச்சி உண்டாயிற்று. மிகுந்த சினம் கொண்டு அவன் பகைவர் மேல் பாய்ந்து விழுந்து இருவரை நொடிப்பொழுதில் துண்டித்தான். நடந்த உண்மை நிகழ்ச்சி இதுதான்:—இந்தக் கெடுதிகள் எல்லாம் எதிர்பாராமல் விரைவில் நேர்ந்ததனால் வெடி ஒலி கேட்ட அந்த நொடிப் பொழுதிலேயே இழிஞராகிய அவ் வேடர்கள் சிலர் அஞ்சி நடுங்கி உயிர்விட்டனர். ஏனையோர் ஓடித் தப்புவதற்கு ஊக்கம் சிறிதும் இல்லாது குண்டுக்கு இரையாகி விழுந்தனர். வெள்ளிக்கிழமை ஓடத்தில் சுட்டு வீழ்த்தின ஐவரிலும் மூவரே குண்டுபட்டுச் சரிந்து விழுந்தனர். மற்றை இருவரும் அஞ்சிக் குலைநடுங்கி விழுந்தார்கள்.

**வேடனுக்கும் வெள்ளை மனிதனுக்கும் போர்**

என் கைத்துப்பாக்கியையும் கத்தியையும் ஸ்பானியன் இடத்தில் ஒப்புவித்ததனால், உரிய வேளைக்கு வேண்டுமென்று நான் வைத்திருந்த துப்பாக்கியை வெடி தீர்க்காதிருந்தேன். ஆதலால் நாங்கள் முதலில் நின்று துப்பாக்கி வெடி தீர்த்த மரத்தடியில் வைத்திருந்த படைக்கலங்களை வெள்ளிக்கிழமையைக்கொண்டு விரைவில் எடுப்பித்து, நான் வைத்திருந்த பெருந்துப்பாக்கியை அவன் கையிற் கொடுத்து, அவன் எடுத்துக்கொண்டு வந்த துப்பாக்கிகள் எல்லாவற்றிலும் ஓரிடத்தில் உட்கார்ந்து இருந்து குண்டு மருந்து நிரப்பி அடைத்தேன். துப்பாக்கி வேண்டும்பொழுது என்னிடம் வரும்படி அவர்கள் இருவருக்கும் சொன்னேன். நான் மருந்து நிரப்பிக்கொண்டு இருந்த போது, வெள்ளை மனிதனுக்கும் வேடன் ஒருவனுக்கும் மிகவும் கடுமையாய்ப் போர் நிகழ்ந்தது. வேடன் அந்த வெள்ளையன் மேற் பாய்ந்து பருத்த மரவாள் ஒன்றைச் சுழற்றி அவனைக் கழுத்தறுக்க முயன்றான். முன்பு உற்ற வேளையில் உயிர்த் துணையாய்ச் சென்று நான் அவனைப் பாதுகாக்காவிடில், அவன் உடலைப் பிளந்திருக்கக் கூடிய வாள் அதுவே. உடல் வலிமை குன்றியும் மடங்கலேற்றுக்கு ஒப்பான வீரமும் துணிவும் உள்ள ஸ்பானியன் நெடுநேரம்மட்டும் அவ்வேடனைத் தடுத்து அவனுக்குத் தலையில் இரண்டு வெட்டு வெட்டிப் படுகாயங்கள் உண்டாக்கி யிருந்தான். காயம்பட்டும் வேடன் உடல் இறுகித் திரண்டு பழுத்த தோள்வலி படைத்த வீரன் ஆதலால், நெருங்கிக் கைகலந்து, களைப்புற்ற ஸ்பானியனைக் கட்டித் தழுவி, விழுத்தி, அவன் கீழும் தான் மேலுமாய் இருக்கையில், ஸ்பானியன் கைக்கொண்டிருந்த கத்தியைத் திருகிப் பறிக்கப் பார்த்தான். ஸ்பானியன் முன்னறிவோடு கத்தியைக் கைநெகிழவிட்டு, இடுப்புப் பட்டையில் மாட்டியிருந்த கைத்துப்பாக்கியை விரைவில் இழுத்தெடுத்து, அவன் உடலைத் துளைக்கும்படி குண்டு செலுத்தினான். ஸ்பானியனுக்குத் துணையாகச் சென்ற

நான் நெருங்கிச் செல்லுமுன் வேடன் குண்டுபட்டு இறந்தான்.

**வேடர்களோடு கடும்போர்**

தன் விருப்பப்படி செய்வதற்கு இடம் பெற்றிருந்த வெள்ளிக்கிழமை ஓடிப்பறந்த வேடர்களைத் தொடர்ந்தான். அவனிடம் கைக்கோடரி ஒன்று ஒழிய வேறு படைக்கலம் இல்லை. அந்தக் கைக்கோடரியால் அவன் முன்பு காயம் பட்டு விழுந்த மூவரையும் பின்னால் தனக்கு எதிர்ப்பட்ட யாவரையும் தறித்துக்கொன்றான். ஸ்பானியன் என்னிடத்திற்கு வந்து, குருவிக் குழாய்த் துப்பாக்கி ஒன்று வாங்கிக்கொண்டுபோய் வேடர் இருவரைத் தொடர்ந்து சுட்டுக் காயப்படுத்தினான். அவனால் ஓடமுடியாமையினால், காயம்பட்ட அவர்கள் காட்டிற்குள் ஓடி மறைந்தார்கள். வெள்ளிக்கிழமை அரியேறு போல முழங்கி, விரைந்து தொடர்ந்துபோய், அவ்விருவரில் ஒருவனைக் கோடரிக்கு இரையாக்கினான். மற்றவன் மிக்க விரைவோடு ஓடிப் பறந்து, முன்பட்ட காயத்தைப் பொருள் செய்யாமல், கடலிற் பாய்ந்து, உயிரொட்டி நீந்தி ஓடத்தில் இருந்தவர்களுடன் சேர்ந்தான். ஓடத்தில் இருந்தவர்கள் மூவர். அவர்களோடு காயம்பட்டவன் ஒருவன் இறந்தானோ பிழைத்தானோ அறியோம். ஓடத்தில் வந்து இறங்கிய வேடர் இருபத்தொருவரில் எங்கள் கைக்குத் தப்பினவர்கள் அம்மூவர் மட்டுமே யாவர். இறந்தவர்களும் காயம் பட்டவர்களும், எங்கள் கைக்குத் தப்பினவர்களுமான வேடர் கணக்கு விவரம் வருமாறு :—

| | | |
|---|---|---|
| (1) | மரத்தடியில் நின்று செலுத்திய குண்டு பட்டு இறந்தவர்கள் ... | 3 |
| (2) | இரண்டாம் தடவை தீர்த்த வெடியில் இறந்தவர்கள் ... | 2 |
| (3) | ஓடத்தில் வெள்ளிக்கிழமையால் கொல்லப் பட்டவர்கள் ... | 2 |

| | | |
|---|---|---|
| (4) | முதலில் காயம்பட்டவர்களுள் டீ யானால் கொல்லப்பட்டவர்கள் | ... 2 |
| (5) | காட்டில் டியானால் கொல்லப்பட்டவன் | ... 1 |
| (6) | ஸ்பானியன் படைக்கலத்திற்கு இரையானவர்கள் | ... 3 |
| (7) | பட்ட காயத்தால் இங்கும் அங்கும் விழுந்திருப்பது கண்டு கொல்லப்பட்டவர்களும், வெள்ளி தொடர்ந்து போய்க் கொன்றவர்களும் | ... 4 |
| (8) | ஓடத்தில் எங்கள் கைக்குத் தப்பிப் பிழைத்தவர்கள் (ஒருவன் தப்பிப் பிழைத்திருப்பினும் காயம்பட்டவன்) | ... 4 |
| | ஆக மொத்தம் | 21 |

**வெள்ளியின் தந்தையும் கட்டுண்டு கிடந்தான்**

ஓடத்தில் இருந்த வேடர்கள் துப்பாக்கிக் குண்டுக்கு எட்டாத தொலைவில் சேருமாறு விரைவாகத் தண்டு வலித்துச் சென்றார்கள். வெள்ளிக்கிழமை அவர்களைக் குறி வைத்து இரண்டு மூன்று வெடி தீர்த்தும், எவருக்கும் குண்டுபடவில்லை என்று எண்ணுகிறேன். அவர்களைத் தப்பவிட்டால் அவர்கள் நடந்த நிகழ்ச்சிகளைச் சொல்லி, இருநூறு முந்நூறு ஓடங்களில் தங்கள் நாட்டு வேடர்களை அழைத்துக்கொண்டு வந்து எங்களைக் கொன்று தின்பார்களே; அவ்வளவு மக்கள் கூட்டத்தை எதிர்த்து நிற்க எங்களால் இயலுமோ என நினைத்துக் கலக்கமுற்றிருந்தேன். அவர்கள் விட்டுச் சென்ற இரண்டு ஓடங்களுள் ஒன்றிலேறி அவர்களைத் தொடர்ந்து கைப்பற்ற வேண்டும் என்று வெள்ளிக்கிழமை வற்புறுத்திச் சொன்னான். நான் அதற்கு உடன்பட்டுக் கடற்கரைக்கு விரைந்து ஓடி, ஓர் ஓடத்திற் பாய்ந்து வெள்ளியையும் தொடரச் சொன்னேன், அவ்வோடத்தில் ஸ்பானியனைப் போலவே, கொலை

செய்யப்படுவதற்குக் கைகால் கட்டப்பட்ட மற்றொரு மனிதன், நடந்த செய்தி இன்னதென்று அறியாமல் மனம் கலங்கி, இறந்தவன்போலக் கிடந்தான், அவன் கால் கைகள் கழுத்தோடு அடுத்து வைத்துக் கட்டப்பட்டிருந்த தனால், தலைநிமிர்ந்து கரையை எட்டிப் பார்க்கக் கூடாதபடி விறைத்துக் குற்றுயிராய் இருந்தான். வேடரைத் தொடர் வதற்கு ஓடம் ஏறிய நான் அங்கிருந்த இவ்வேடனைக் கண்டு மிகவும் வியப்புற்றேன்.

உடனே கொடிகளை அறுத்து, அவனைக் கட் டவிழ்த்து, எழுந்து நிற்கும்படி தூக்கிவிடப் பார்த்தேன். எழுந்து நிற்க அவனுக்குக் கால் விளங்கவில்லை. பேசவும் நாஎழவில்லை. தன்னைக் கொல்வதற்குக் கட்டு அவிழ்த்து விட்டேன் என்று எண்ணி அவன் வருந்தி அழுதான்.

**வெள்ளி தன் தந்தையைக் காணுதல்**

வெள்ளிக்கிழமை ஓடத்தில் வந்தவுடன், நான் உன்னைக் கொல்வதற்கன்று, பாதுகாக்க வந்தவன் என்று வெள்ளிக்கிழமையைக் கொண்டு அவனுக்குச் சொல்லு வித்தேன். பின்பு சாராயப் புட்டியை எடுத்து, சிறிது அளவு குடிக்கக் கொடுத்தேன். சாராயங் குடித்ததனாலும், பகைவரிடமிருந்து விடுதலை பெற்ற நல்லமொழி கேட்டத னாலும், அவன் அச்சம் தெளிந்து, உள்ளக் கிளர்ச்சியுடன் எழுந்து உட்கார்ந்தான். வெள்ளிக்கிழமை அம்மனித னுடைய முகத்தை ஏற இறங்கப் பார்த்து, அவன் வாய் மொழியைக் கேட்டவுடன் பட்டபாடுகளைக் காணும் எவ ரும் மனம் உருகிக் கண்ணீர் ஆறாய் வடியக் கதறி அழு வார்கள் என்பதற்கு ஐயமில்லை. அவ்வேடனுக்கு வெள்ளி முத்தம் கொடுத்தான்; அவனைக் கட்டித் தழுவினான். கதறி அழுதான்; மகிழ்ந்து நகைத்தான். மனங்களித்து ஆடினான்; துள்ளிக் குதித்தான்; மகிழ்ச்சிகொண்டு பாடினான். அன்புகொண்டு கூவினான்; கைகளைப் பிசைந்து முறுக்கினான் ; தன் தலையில் தட்டிக் கொண்டான். பைத் தியம் பிடித்தவனைப் போலப் பின்னும் பாடித்துள்ளிப்

பாய்ந்தான். "உனக்கு உண்டான வியப்பு என்ன" என்று நான் பல தடவை கேட்டும், என்சொல் அவன் செவியில் ஏறவில்லை. நெடுநேரஞ் சென்ற பின், வெள்ளிக்கிழமை தன் பதைப்புச்சற்று அடங்கியபொழுது, அவ் வேடன் தன் தகப்பன் என்று வெளியிட்டான்.

## வெள்ளிக்கிழமை தன் தந்தைக்கு உதவி செய்தல்

தந்தையைக் கண்டதனாலும், அவன் கொலைஞரால் கொல்லப்படும் கொடு நிலையிலிருந்து தப்பிப் பிழைத்ததனாலும், அறிவிலியாகிய இவ்வேடனுக்கு உண்டான மகிழ்ச்சிப்பெருக்கையும், தந்தையினிடம் மைந்தனுக்கு உண்டான பற்றினையும், கண்டபொழுது என் நெஞ்சு உருகியது இவ்வண்ணம் என்று நாவினால் விளக்கிக் கூறுவது எளிதன்று. பின்பு அன்பு கூர்ந்து வெள்ளிக்கிழமை தன் தந்தைக்கு உள்ளம் உருகிச் செய்த பணிவிடைகளின் தன்மையை ஒருவாற்றானும் கூறுவதும் அரிதாகும். அவன் நெடுநேர மட்டும் ஓடத்தில் ஏறுவதும் இறங்குவதுமாயிருந்தான். ஏறும்பொழுது தந்தை அருகில் உட்கார்ந்து தன் மார்புச் சட்டையைக் கழற்றிவிட்டுத் தன் தகப்பன் தலையைத் தன் மார்போடு அணைத்து, அரைமணி நேரம்மட்டும் பிடித்துக்கொண்டிருந்து களையாற்றினான். பின்பு கட்டுண்டு விறைத்திருந்த கைகளையும் கால்களையும் சூடு பிறக்கத் தன் கையால் தேய்த்து நோவாற்றினான். நான் அதைக் கண்டு, காலுக்கும் கைக்கும் தேய்க்குமாறு புட்டியில் இருந்த சாராயத்தில் சிறிது அளவு கொடுத்தேன். சாராயம் தேய்த்ததனால், கால் வலி கை வலி அவனுக்கு எளிதில் தீர்ந்தது.

## வேடர் ஓடம் புயலிற் பட்டது

இதற்குள் வேடர் ஓடம் கண்ணுக்கு எட்டாத தொலைவில் ஓடி மறைந்தது. நாங்கள் மேற்சொல்லிய தடையினால், அவர்களைத் தொடரும் கருத்தை மறந்தோம். அவ்வாறு தொடராமல் நின்றதும் நன்மையாகவே முடிந்தது. பிறகு இரண்டு மணி நேரத்திற்குள் காற்று உண்டாகி, இரா முழுதும் கடும் புயல் அடித்தது. வேடர் கால் பங்கு

வழி செல்லு முன், வடமேற்குத் திசையினின்று காற்று உண்டாகிப் புயல் அடித்ததனுல், அத்திசைக்கு நேர் முகமாய்ச் சென்ற அவர்கள் ஓடம் தப்பாது, என்றும், அவர்கள் ஒருபோதும் தங்கள் கரைக்குச் சென்றிருக்க மாட்டார்கள் என்றும் எண்ணுகிறேன்.

**வெள்ளிக்கிழமை தன் தந்தைக்கு மீண்டும் உதவி செய்தல்**

வெள்ளிக்கிழமை தன் தந்தைபால் மிகவும் கருத்தோடு இருந்து, வேண்டிய பக்குவத்தோடு பணிவிடைகள் பலவும் செய்ததனுல், அவன் ஆவல் தீருமளவும் நான் அவனுக்கு ஒன்றும் சொல்லாதிருந்து, பிறகு அவனைப் பெயர் சொல்லி அழைத்தேன். குதித்துப் பாய்ந்து நகைத்துப் பெருமகிழ்வோடு வந்தான். "உன் தகப்பனுக்கு ரொட்டி கொடுத்தாயா" என்று கேட்டேன். அவன் தலையை அசைத்து, "ரொட்டி ஏது,? வைத்திருந்ததை நாயினும் கடையேனுகிய நானே தின்றுவிட்டேனே" என்ருன். பிறகு நான் கொண்டுபோயிருந்த சிறிய பைக்குள் இருந்து ஒரு ரொட்டி எடுத்துக்கொடுத்தேன். அன்றியும் அவனுக்கென ஒரு கிண்ணம் சாராயம் கொடுத்தேன். அவன் அதைத்தான் குடியாமல் தகப்பனுக்குக் கொடுத்தான். மேலும் எனது சட்டை உறைக்குள் இருந்த கொடி முந்திரிப் பழவற்றல் குலை இரண்டு மூன்றில் ஒரு கை நிறைந்த வற்றலை வெள்ளிக்கிழமையிடம் கொடுக்க, அவன் அதைத் தகப்பனுக்குக் கொடுத்துவிட்டு உடனே ஓடத்தை விட்டு இறங்கி, ஏதோ மருள் பிடித்தவன்போலத் தலை தெறிக்க ஓடினுன். ஓட்டத்தில் அவனுக்கு எவரும் இணையல்லர். அவன் காற்று விரைவு, மன விரைவைக் காட்டிலும் அதிக விரைவாய் ஓடிப் பறந்து, நொடிப்பொழுதில் கண்ணுக்கு எட்டாத தொலைவில் மறைந்தான். சற்றுத் தொலைவு நான் அவனைத் தொடர்ந்து ஓடி ஓடி உரத்துக் கூவி அழைத்தும், அவன் திரும்பிப் பார்க்கவும் இல்லை. மூச்சு அடக்கி ஓடி, கால் மணி நேரம் சென்றபின் திரும்பி வந்தான். வரும்போது அவ்வளவு விரைவாய் ஓடி வரவில்லை. வர வர விரைவு தணிந்தது. கையில் ஏதோ

எடுத்துக்கொண்டு வந்ததனால், முன்போல விரைவாய் ஓடி வருதற்கு அவனால் இயலவில்லை.

நேரே என்னிடத்திற்கு வந்தான். அவனால் வீட்டுக்குப்போய், மட்குடம் எடுத்துத் தகப்பனுக்கு நீர் வேட்கை தீர்க்கத் தூய நீர் கொண்டுவந்தான். அன்றியும் ரொட்டி இரண்டு கொண்டு வந்து எனக்குக் கொடுத்து, தண்ணீரைத் தகப்பனுக்கு எடுத்துக்கொண்டு போனான். எனக்கும் நீர் வேட்கை அதிகமாய் இருந்ததனால், ஒரு மிடறு தண்ணீர் குடித்தேன். சாராயம் குடித்த போதும் தீராத களைப்பு தகப்பனுக்குத் தண்ணீர் குடித்தவுடன் நன்றாய்த் தெளிந்தது. தண்ணீர் குடிக்கு முன் அவன் கடுமையான நீர் வேட்கையால் மூர்ச்சித்துக் கிடந்தான்.

### வெள்ளை மனிதனுக்கு உதவி செய்தல்

வெள்ளிக்கிழமையின் தந்தை நீர் அருந்திய பின், குடத்தில் இன்னும் தண்ணீர் இருக்கிறதா என்று நான் கேட்டேன். அவன் "ஆம்" என்றான். "உன் தகப்பனைப் போலக் கடும் வேட்கையால் வருந்துகின்ற அந்த ஸ்பானியனுக்கு அதைக் கொண்டுபோய்க் கொடு" என்றேன். மேலும் அவன் எடுத்துவந்த ரொட்டிகளிலும் ஒன்றைக் கொடுத்தனுப்பினேன். ஸ்பானியன் மிகச் சோர்ந்து, மர நிழலிற் பசும்புல் தரையில் படுத்திருந்தான். அவன் கை கால்கள் முரட்டுத் தனமாய்க் காட்டுக் கொடிகளால் இறுக்கிக் கட்டப்பட்டிருந்ததனால், வீங்கி விறகு போல விறைத்திருந்தன. வெள்ளி தண்ணீர் கொண்டு போய்க் கொடுத்தபொழுது, ஸ்பானியன் எழுந்து உட்கார்ந்து, நீர் குடித்து, ரொட்டியை வாங்கித் தின்றான். அவ்வேளையில் நானும் அவ்விடத்திற்குப் போய், ஒரு கை நிறைந்த கொடி முந்திரிப் பழவற்றல் கொடுத்தேன். நான் செய்த நன்றியை அவன் மறவாமல் நன்கு மதித்திருப்பதாக அவன் என்னை ஏறிட்டுப் பார்த்தபொழுது, அவன் முகமலர்ச்சியினால் வெளிப்படையாகப் புலப்பட்டது. அந்த ஸ்பானியன் தான் தளர்ந்த நிலையிலும் ஊக்கத்துடன் ஓடிப் பகைவரைக்

கொல்ல முயன்றதால் உடல் வலுவிழந்து இளைப்பாய் இருந்தான். எழுந்து நிற்கவும் அவன் கால் விளங்க வில்லை. இரண்டொரு முறை எழுந்து நிற்க முயன்றும், அவனால் இயலவில்லை. அவன் கணைக்கால்கள் அதிகமாய் வீங்கி, அவனுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிருந்தது. ஆதலினால், நான் அவனை உட்கார்ந்திருக்குமாறு கூறி, வெள்ளிக்கிழமையைக் கொண்டு அவன் காலில் சர்ராயம் ஊற்றித் தேய்ப்பித்தேன்.

## புதிய விருந்தாளிகள்

அவ்வாறு தேய்த்துக் கொண்டிருந்தபோது, இரண்டொரு விநாடிக்கு ஒருமுறை அன்பு மறவாத ஏழை வேடனாகிய வெள்ளிக்கிழமை தன் தகப்பன் இன்னும் ஓடத்தில் உட்கார்ந்தபடி யிருக்கிறானா, இல்லையா என்று திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒருமுறை கண்டு, திடீர் என எழுந்து, ஒன்றும் சொல்லாமல் விரைந்து மின்போலத் தகப்பனிடத்திற்கு ஓடிப் பறந்து, அவன் படுத்து இளைப் பாறுவது கண்டு, நிற்காமல் உடனே என்னிடத்திற்கு வந்தான். வெள்ளிக்கிழமை ஓடும்பொழுது கண் வேகத்தினும், அவன் கால் வேகம் மிஞ்சியதனால் தரையில் எடுத்து அடி வைத்தது தெரியவில்லை. பின்பு நான் ஸ்பானியனைப் பார்த்து, உன்னை வெள்ளிக்கிழமை தூக்கி நிறுத்திக், கை கொடுத்து, ஓடத்திற் கொண்டுபோய்ச் சேர்த்து, ஓடத்தைத் திருப்பிச் செலுத்தி, எங்கள் வீட்டில் கொண்டுவந்து விடுவான். அங்கே நான் வேண்டும் பக்குவங்கள் செய்து, உன்னை ஆதரிப்பேன்'' என்று கூறினேன். அவ்வாறு கூறி முடித்ததும் வெள்ளிக்கிழமை அவ்விடத்திற்குவந்து தன் உடல் வலிமை கொண்டு, ஸ்பானியனைத் தூக்கித் தன் முதுகில் ஏற்றிச் சுமந்து கொண்டுபோய் மெதுவாய் இறக்கி, ஓடத்தட்டில் தகப்பனுக்கு, அருகில் உட்கார வைத்துப், பின்தான் நீரில் இறங்கி, ஓடத்தைச் சற்றுத் தொலைவுதள்ளிக் கொண்டுபோய் விட்டு, ஏறிக்கரை ஓரமாய்த் தண்டு வலித்துச் செலுத்தி, ஆள் நடை விரைவிலும், அதிக விரைவாய் எங்கள் துறையில் கொண்டு சேர்த்

தான். காற்றுச் சற்றுக் கடுமையாய் வீசியும், அவனது கை வன்மையால் ஓடம் விரைவில் கரையை அடைந்தது. இருவரையும் ஓடத்தில் இருக்கச் செய்து விட்டுக் கரையில் இறங்கி உடனேயே மற்றொரு ஓடத்தைத் திருப்பிக் கொண்டு வருவதற்காக மீண்டும் அவ்விடத்திற்கு ஓடினான். கரைவழியாய் வந்த நான் அவனுக்கு எதிரில் வந்தபோது "திரும்பி எவ்விடத்திற்குப் போகிறாய் என்று கேட்டேன். மற்றோர் ஓடத்தைக் கொண்டுவரப் போகிறேன்" என்று விரைந்து சென்றான். ஓட்டத்தில் அவனை வெல்லத்தக்க மனிதரும் இல்லை; குதிரைகளும் இல்லை. கால்நடையாய்ச் சென்ற நானும் துறைசேர, அவன் இரண்டாம் தடவை செலுத்திக் கொண்டு வந்த ஓடமும் சேர்ந்தது. பின்பு அவன் என்னை வீட்டுக்குப் போகும்படி கையாற் குறிப்பித்து, எங்கள் புது விருந்தாளிகள் இருவரையும் ஓடத்தினின்றும் இறக்கிக் கரை சேர்த்தான். அவர்கள் இருவரும் நடக்க இயலாது இருந்தார்கள். ஆதலினால் அவர்களை வீட்டிற் கொண்டுவந்து சேர்க்க வகை தெரியாமல் வெள்ளிக்கிழமை மலைத்து நின்றான்.

### விருந்தினர்க்குச் சிறு குடில் அமைத்தல்

இதற்கு வழி என்ன என்று நான் சற்றுநேரம் ஆழ்ந்து, நினைத்து, அவர்களைக் கடற்கரையில் சற்று நேரம் உட்கார்ந்திருக்கச் சொல்லிவிட்டு, என்னிடத்திற்கு வருமாறு அவன் கேட்கும்படி உரத்துக் கூறினேன். அவர்களை ஏற்றிக் கொண்டு வந்து சேர்ப்பதற்கு நான் மிகு விரைவில் ஒரு வகை வண்டி செய்தேன், அதை நானும் வெள்ளிக்கிழமையும் கொண்டுபோய் அவர்களை ஏற்றி, இருவரும் தள்ளிக்கொண்டு வந்து கோட்டை மதிலின் புறத்திற் சேர்த்தோம். அதன் பிறகு மதிலைத்தாண்டி உட்செல்வது எவ்வாறு என்பது விளங்காமல் இருந்தது. முன்பு கடற்கரையி னின்று விருந்தினர் இருவரையும் இவ்விடத்திற்குக் கொண்டுவருவது எவ்வாறு என்று சற்று நேரம் ஆழ்ந்து நினைத்த அளவில் தக்க வழி என் உள்ளத்தில் பிறந்தது அன்றோ? அது பெரிதன்று. மதில்

கடந்து உட்செல்வதற்கு வழி இல்லை. அவர்கள் பொருட்டாக மதிலை இடித்து வீழ்த்த என் மனம் உடன்படவில்லை. ஆதலால் வெளி மதிலுக்கும் சிறு தோப்புக்கும் இடையில் உள்ள வெளியிடத்தில் சிறந்த கூடாரம் என்று உண்டாக்கி, பழைய கப்பற் பாய்களால் அதைமூடி, மரக்கிளைகளால் வேய்ந்து, வைக்கோல் மெத்தைகள் இரண்டு செய்து, அம் மெத்தைகளின் மீது கம்பளம் விரித்து, விருந்தினரைப் படுக்க வைத்துப் போர்த்துக் கொள்ளும்படி வேறு இரண்டு கம்பளம் கொடுத்தோம். இவ்வேலை முழுதும் இரண்டுமணி நேரத்துக்குள் நிறைவேறிற்று.

### நான் இத்தீவுக்கு அரசன்

இப்பொழுது என்னுடைய தீவில் மக்கள் குடியேறியதால் என் பரிவாரத்துக்குக் குறை வில்லை என்று மகிழ்ச்சி கொண்டேன். அடிக்கடி என்னை ஒரு வேந்தனுய்க் கருதி மகிழ்ந்தேன், முதலாவது இந்நாடு முழுவதும் என் உடைமை. அரசாளும் உரிமை எனக்கு உண்டு என்பதற்குத் தடை இல்லை, இரண்டாவது என் குடி மக்கள் எனக்குக் கட்டுப்பட்டவர்கள். நானே அவர்களுக்குப் பேரரசன், நான் இட்டதே சட்டம். அவர்கள் எல்லோரும் என்னுல் உயிர்தப்பிப் பிழைத்தவர்கள். தேவைப்பட்டால் என் பொருட்டுத் தம்முயிரையும் கொடுக்க ஆயத்தமாயிருந்தார்கள். என் குடி மக்கள் மூவரும் மூவேறு சமயக் கோட்பாட்டினர். இது வியக்கத்தக்கது தான். வெள்ளிக்கிழமை போப்பு நெறிக்குப் புறம்பான கிறித்தவன் மனிதவூன் உண்ணும் அவன் தந்தை பல தெய்வ வழிபாடு செய்பவன், ஸ்பாணியன் போப்பு நெறிப்பட்ட கிறித்தவன் ஆயினும் அவரவர் விருப்பப்படி வழிபாடு செய்வதற்கு என் குடி மக்களுக்கு நான் உரிமை கொடுத்திருந்தேன். இனி முதன்மையான செய்திகளைக் கூறுகின்றேன்.

### விருந்தினர்க்கு உணவு அளித்தல்

சிறைமீட்சி அடைந்து உடல்வலிமை குன்றியிருந்த இருவரையும் நான் பாதுகாப்போடு கொண்டு வந்து

சேர்த்து, அவர்களுக்கு இருப்பிடம் அமைத்துப், படுத்து இளைப்பாறப் பக்குவமான மெத்தைகள் அளித்தபின், அவர்களுக்கு உணவு ஏதேனும் சமைத்துக் கொடுக்க முயன்றேன். முதலில் எனது பெரிய மந்தையிலிருந்து வெள்ளிக்கிழமையைக் கொண்டு ஒரு சிறந்த வெள்ளாடு பிடித்து அறுத்து அதன் பின்கால் தொடை இறைச்சியைத் துண்டுதுண்டாய் வெட்டிச் சமைத்துக் குழம்பும் வைத்தேன். அந்தக் குழம்பில் வாற்கோதுமையும், அரிசியும் இட்டுப் பக்குவமாய்ச் செய்தேன். கோட்டைக்கு வெளியிலேயே சமையல் வேலை நடைபெற்றது. உணவைப் புதுக் கூடாரத்திற்குள் கொண்டுபோய், யாவரும் ஒருங்கிருந்து உண்டோம். உணவு உண்ணும்போது நான் அவர்களுக்கு நன் மொழிகள் கூறித் தேற்றினேன், எனக்கும் அவர்களுக்கும் இடையே வெள்ளி மொழி பெயர்ப்பாளனாய் விளங்கினான். ஸ்பானியன் வேடர் நாட்டில் வாழ்ந்ததனால், அவர்களுடைய மொழியைப் பேசப் பயிற்சி பெற்றிருந்தான்.

### பிணங்களை அடக்கம் செய்தல்

'விருந்து' உண்டபின், நேரம் இல்லாததனால் எடுத்து வராமல் போர்க்களத்தில் விட்டு வந்த படைக்கலங்களை ஓடத்தில் ஏறிப்போய் எடுத்து வா என்று வெள்ளியிடங் கூறினேன். மறுநாள் அங்கங்கே வெளியிடத்தில் மடிந்த வேடருடைய பிணங்கள் கெட்டு நாற்றம் வீசாதபடி அவைகளையும், அதற்குமுன் அவ்வேடர் கொடிய விருந்து உண்டு எச்சமாய் விட்டிருந்த உடல் உறுப்புக்களையும் வெள்ளிக்கிழமையை அனுப்பி அடக்கம் செய்வித்தேன். அவ்வுறுப்புக்கள் புதைக்கப்படு முன்னமே நாறத்தொடங்கின. மூச்சு அடக்கி அவைகளைச் சேர்த்து ஒன்றுகூட்டுவதற்கு என் மனம் உடன்படாது. அன்றியும் அந்த வழியாய்ப் போனால், அவைகளைக் காண என் கண் பொறுக்காது. வெள்ளிக்கிழமை என் சொற்படி காலம் தவறாமல் பிணங்களைப் புதைத்து, வேடர் வந்து சென்ற அடையாளம் அவ்விடத்தில் சிறிதும் இல்லாதபடி தூய்மை செய்தான்.

ஆகவே, நான் மறுபடி அவ்விடத்திற்குப் போனபொழுது, காட்டின் ஒரு கோணத்தைக் குறியாய் வைத்து இடத்தைக் கண்டுகொண்டதொழிய, மற்றொன்றையும் நான் காண வில்லை.

விருந்தினருடன் உரையாடல்

இப்பால் என் புதிய குடிமக்கள் இருவருடனும் உரையாடத் தொடங்கினேன். முதன் முதல் "ஓடமேறித் தப்பித்துக் கொண்ட வேடரைக் குறித்து உனது கருத்து என்ன? அவர்கள் எங்களைக் கொன்று தின்பதற்காக மனிதரைச் சேர்த்துக் கொண்டு வருவார்களா?" என்று வெள்ளிக்கிழமையைக் கொண்டு அவன் தகப்பனைக் கேட்பித்தேன். அதற்கு அவன் "ஓடத்திற் போன வேடர்கள் அன்றிரவு அடித்த புயலுக்குத் தப்பிப்பிழைத்திருக்க மாட்டார்கள். கடலில் முழுகி இறந்து போவார்கள். அது தப்பினால், ஓடம் தெற்கு முகமாய்ச் சென்று, அங்குள்ள துறைகளுள் ஒன்றில் சேரும். சேர்ந்தால் அங்கிருப்பவர்கள் அவர்களைக் கொன்று உண்டு விடுவார்கள். ஒரு வேளை அவர்கள் தப்பிப் பிழைத்துக் கரை சேர்வார்களானால், என்ன செய்வார்களோ அறியேன். ஆயினும் நீங்கள் அவர்கள் மேற் பாய்ந்து விழுந்து அடித்த பேராற்றலையும், வெடி அதிர்ச்சியையும், வானம் மின்னியது போல எரிந்த வெளிச்சத்தையும், அவர்கள் கண்டு கேட்டு அடிவயிறு கலங்கித் திகைத்ததனால், தம்முடன் பயணப்பட்ட மனிதர் இந்நிலவுலக மனிதர் கையால் கொல்லப்பட வில்லை; மின்னலாலும் இடியாலுமே இறந்து போனார்கள் என்று தங்கள் நாட்டில் உள்ள மக்களுக்குக் கூறுவார்கள். உங்கள் இருவரையும் கண்டபொழுது, நீங்கள் படைக்கலம் எடுத்த மனிதர் அல்லர். தங்களைக் கொல்வதற்காக விண்ணுலகத்தினின்று வந்த கொடிய கடவுளர் என்று அவர்கள் பேசியது கேட்டேன். மனிதர் நெருங்கி வந்து கை கலந்து கத்தி முதலிய படைக்கலங்களாற் பகைவரைக் கொல்வது ஒழிய, நீங்கள் செய்தபடி கை ஓங்காமல் தொலைவில் நின்று, நெருப்புக் கணை செலுத்தி, வானம்

முழங்குவதுபோல் இரைந்து பேசக்கூடும் என்று அவர்கள் கனவிலும் எண்ணுர்கள். இந்த எண்ணம் அவர்களுக்கு வரவே வராது'' என்ருன். கிழப்பருவம் அடைந்த இவ் வேடன் கூறியது உண்மையென்று பிறகு கேள்வி வழியாக அறிந்தேன். அவ்விடத்தில் வாழும் வேடர் அதற்குப்பின் ஒரு பொழுதும் இத்தீவிற்கு வரத் துணியவில்லை என்றும், ஓடமேறிப் போய்க் கரை சேர்ந்த நான்கு மனிதர் கூறிய அஞ்சத்தக்க செய்தியைக் கேட்ட ஏனை வேடர்கள் நடு நடுங்கி, மனம் கலங்கி, இனி அந்தக் கொடிய தீவுக்கு எவன் சென்ருலும் அவன் கடவுளர் செலுத்தும் நெருப்புக் கணை களால் கொல்லப்படுவது உண்மை என உறுதியாய் நம்பி ஞர்கள் என்றும், அச்செவி வழிச் செய்தி கூறிற்று.

இச்செய்தி எனக்கு நாட் சென்று தெரியவந்தது. தீவில் இருக்கும்பொழுது நெடுநாள் வரையில் வேடரைக் குறித்து இராப் பகல் எப்பொழுதும் ஏக்க முற்றிருந்தேன். நானும் என் படை வீரர்களும் மிகுந்த விழிப்போடு இருந் தோம். நாங்கள் நான்கு பேர் இருந்ததனுல், வேடர் நூறு பேர் எந்நேரத்தில் வந்தாலும், அப்பொழுதே அச்சமின்றி வெளியில் வந்து, அவர்களோடு எதிர்த்துப் போர் செய் யும் வல்லமை எங்களுக்கு உண்டு.

சில நாள் வரையில் விழிப்போடு இருந்தும், வேடர் ஓடம் வராததனுல், அவர்கள் வரவைக் குறித்து உண்டாகி யிருந்த அச்சம் நாளடைவில் தொலைந்தது. இது நிற்க, நான் வேடர் நாட்டிற்குப் போக நேர்ந்தால், அவர்கள் தன் பொருட்டாக என்னை வரவேற்று, எனக்கு நன்மைகள் செய்வார்கள் என்று வெள்ளிக்கிழமையின் தகப்பன் உறுதி கூறினன். அதனுல், முன்பு நினைத்தபடி தீவை யடுத்த பெரு நாட்டிற்குப் பயணப்படவேண்டும் என்று எனக்குள்ளே எண்ணம் உண்டாயிற்று.

## பதினேழாம் அதிகாரம்

### ஸ்பானியனுடன் உரையாடல்

நான் ஸ்பானியனுடன் உளம்விட்டு உரையாடிய பின் என் எண்ணத்தைத் தள்ளிவைத்தேன். அவனையன்றி பதினாறு ஸ்பானியரும், பிற போர்த்துகீசியரும் கப்பல் பழுதுபட்டதனால், கடுங்காற்றால் துன்பமுற்று வேடருடைய கரையை அடைந்து, அங்கு அவர்களுடன் கலகம் சிறிதும் இன்றி ஒத்து வாழ்வதாகவும், உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத பொருள்கள் இன்மையால் மிக வருத்தப் படுவதாகவும் அவன் வாய்மொழியால் அறிந்தேன். உங்கள் பயண வரலாறுகளை விளக்கமாய்க் கூறு என்று நான் கேட்க அந்த ஸ்பானியன் பின் வருமாறு முதலிலிருந்து முடிவுவரை கூறினான்:

### ஸ்பானியன் பயண வரலாறு

"எங்களுடைய தாய் நாடு ஸ்பெயின். நாங்கள் கடலோடிகள். ரியோடிலா பிலாட்டா துறையில் தோலும் வெள்ளியும் ஏற்றிக்கொண்டு ஹாவன்னா துறைக்குப் பயணப்பட்டோம். இந்தப் பொருள்களை அங்கே இறக்குமதி செய்தபின், அங்குள்ள பொருள்களை வாங்கிக்கொண்டு திரும்பி வரும்படி முதலாளி கட்டளை இட்டிருந்தார். கப்பலைச் செலுத்திக்கொண்டு போகும்போது, கடல் வழியில் உடைந்து பழுதுபட்ட மற்றொரு மரக்கலத்தினின்று உயிர் தப்பிப் பிழைத்த போர்த்துக்கீசியக் கடலோடிகள் ஐந்து பெயரைக் கண்டு எங்கள் கப்பலில் ஏற்றிக்கொண்டு போனோம். அப்புறம் எங்கள் கப்பலும் பழுதுபட்டது. எங்கள் மனிதர் ஐந்து பெயர் முழுகி இறந்துபோனார்கள். இறைவன் திருவருளால் தப்பிப் பிழைத்த நாங்கள் சொல்வதற்கரிய பெரிய உயிரிழப்புத் துன்பங்களில் ஈடுபட்டுப் பசியால் வருந்தி, முடிவாகப் பொங்கிப்புரளும் அலை வீச்சி

னல், மனிதரைக் கொன்று உண்ணும் வேடர் வாழ்கின்ற நாட்டின் கரையில் ஒதுக்கிவிடப்பட்டோம். அங்கே அவர்களுக்கு உணவாவதே நமது முடிவுஎிலை என்று இடையருது நினைத்து ஏக்கம் உற்று இருந்தோம்.

"எங்களிடம் இருந்த வெடி மருந்து கொஞ்சம் குறைய முழுதும் உப்புத் தண்ணீரில் நனைந்து பழுதாய்ப் போயிற்று. பழுதுபடாதிருந்தது மிகக் குறைவு. கரை அடைந்த பின் அம் மருந்து செலவாகிற வரையில் இரண்டொரு நாள் உணவுக்கு உதவும் பறவை முதலியவைகளைச் சுட்டுத் தின்ரோம்." என்றான்.

வேடர் நாட்டில் உங்களுக்கு என்ன நேரும் என்று எண்ணினீர்கள். அவ்விடத்தினின்று தப்பித்துக்கொள்வதற்கு நீங்கள் ஏதாயினும் வழி செய்யவில்லையா? என நான் கேட்ட கேள்விக்கு ஸ்பானியன்; "செய்யாமல் என்ன, பலவித ஆராய்ச்சிகள் செய்தோம். எங்களிடத்தில் மரக்கலமும் இல்லை; மரக்கலம் செய்தற்குரிய கருவிகளும் இல்லை. உணவுப் பொருள் ஒன்றும் இல்லை. ஆதலினல் எங்கள் எண்ணம் நிறைவேருது என்றும், எங்களுக்கு மீட்சி இல்லை என்றும், கண்டு வருந்திக் கண்ணீர்விட்டோம்." என மொழிந்தான்.

### ஸ்பானியரை விடுவிக்கும் சூழ்ச்சிகள்

அப்புறம் நான் அவனைப் பார்த்து, இங்கே வா, நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் வேடர் நாட்டினின்று விலகித் தப்பித்துக் கொள்வதற்கு ஒரு சூழ்ச்சி சொல்லுகிறேன் கேள். அதை நன்ருய்ச் சீர்தூக்கி நினைத்து, ஏற்குமோ ஏற்காதோ என்று சொல்லு. நீங்கள் அனைவரும் இவ்விடத்தில் வந்து சேர்ந்தால், எளிதில் தப்பித்துக்கொள்ளக்கூடாதா? நான் உங்களிடத்திற்கு வரவும், உங்களை நம்பி எனது உயிரை உங்கள் கையில் ஒப்புவிக்கவும் அஞ்சுகிறேன். ஒரு வேளை நீங்கள் தீங்கு நினைத்து எனக்குக் கேடு செய்தால் உங்களைக் கேட்பவர் யார்? செய்ந்நன்றி மறவாதிருப்பது மனிதர் பிறவிப்பண்பு அன்று. பெரும்

பாலும் மனிதர் தமக்குப் பிறர் செய்த உதவிகளை நினைவில் வைத்துத் தாமும் எப்பொழுதும் அவர்களுக்குப் பதில் உதவி செய்வது இல்லை. பிறரால் ஏதாயினும் உதவி பெற விரும்பினால், அவர்களிடம் நன்மொழிகள் கூறி, ஏற்கும் வண்ணம் ஒப்புக்கு நடப்பார்கள். ஆங்கிலேயன் எவனாவது நியூ ஸ்பெயினில் சேர்வதுண்டானால், மிகக் கொடிய துன்பம் நேர்ந்து அவன் அங்கு அடைந்திருப்பினும், ஸ்பானியர்கள் அவனைச் சிறைபிடித்து வருவதற்கு ஐயமில்லை. தவறாமல் இதுவே அவன் நிலையாகும். வெளிநாட்டில் கொடிய வேடரிடம் அகப்பட்டுத் துன்புறும் உங்களை, அவர்களிடமிருந்து தப்புவித்து, நியூ ஸ்பானியாவிற் கொண்டுபோய்ச் சேர்த்த பின், பாம்பு பால் வார்த்து வளர்த்தவனைக் கடித்துக் கொல்வதுபோல, நீங்கள் உங்கள் உயிரைப் பாதுகாத்த என்னை வாழ்நாள் முழுவதும் சிறையில் இருத்துவீர்களானால் அதனை என் மனம் பொறுக்காது. கோழிக்குஞ்சை விரைந்து விழுந்து அடித்துக் கூர்மையான கால் நகங்கள் ஏறும்படி இரு கால்களின் இடையே இடுக்கிக்கொண்டு போய்த் துடிக்கப் பதைக்கக் கொன்று உண்ணும் பருந்தைப்போன்று, இரக்கம் சிறிதும் இல்லாத உங்கள் குருக்கள் இடம் அகப்பட்டு, அவர்களுடைய நீதி மன்றத்தாரால் பாவி என்று முடிவு செய்யப்பெற்றுக் கொடுந் தண்டனை பெறுவதைக் காட்டிலும், வேடர் கையில் அகப்பட்டு அவர்களுக்கு உணவுப் பொருளாக ஆவதில் தாழ்வு ஒன்றும் இல்லை. இப்படி வரும் என்று என் மனம் அஞ்சித் தடுமாறுகின்றது. இவ்வாறு அஞ்சுதற்கு இடமில்லை என்றால் உன்னைச் சேர்ந்த மக்களை இங்கே வர வழைத்து, நாம் எல்லாரும் கூடி, பெரிய ஓடம் ஒன்று செய்து, தெற்கே பிரேஜில் நாட்டுப் பகுதிக்காவது, வடக்கே இருக்கும் தீவுகளுக்காவது, ஸ்பானிய கரைக்காவது அவ்வோடத்தில் ஏறி, எளிதிற்போய்ச் சேரலாம். ஆயினும், எனது படைக்கலங்கள் எல்லாவற்றையும் கைக்கொண்டு நான் செய்த உதவிக்குப் பதிலாக நீங்கள் என்னைக் கட்டாயப்படுத்திப் பிடித்து, உங்கள் நாட்டிற்குக் கொண்டுபோய், எனக்குக் கொடுமைகள் செய்வீர்களானால்,

அப்புறம் நான் இருந்தென்ன இறந்தென்ன என அழுத்திச் சொன்னேன்.

## ஸ்பானியன் கூறிய உறுதிமொழிகள்

அவன் வஞ்சனை சிறிதும் இன்றி, மிக அறிவுத் திறனோடு பின்வருமாறு விடை கூறினன். வேடருடைய நாட்டில் அகப்பட்டுக்கொண்ட என் நாட்டு மக்கள், சிறையிருப்புப்போன்ற நிலையிலிருந்து வருந்துவதனால், மனம் இரங்கி அவர்களை விடுதலை செய்யும் சிறந்த மனிதனுக்குத் தீங்கு செய்ய நினைப்பது அவர்களுக்கு வெறுப்பாய் இருக்குமென்று நம்புகிறேன். உமக்கு விருப்பமானல் நான் இக்கிழவனுடன் வேடர் நாட்டுக்குப்போய், அவர்களைக் கண்டு, இச்செய்திகளைப்பற்றிப் பேசி, அவர்கள் கருத்து அறிந்து வந்து சொல்லுவேன். உம்மைத் தங்கள் தலைவராக ஒத்துக்கொண்டு, உமது சொற்கேட்டு, உமக்குக் கனவிலும் கேடு நினையாமல் கிறித்தவ நெறியாளர் வாழும் எந்த நாட்டுக்குப் போக உமக்கு விருப்பமோ அந்த நாட்டிற்கே உம்முடன் சென்று நலத்துடன் சேருகிறவரையில், உமது ஏவலின்படி தவருமல் நடப்பதாக உறுதிமொழி கூறச் செய்து, உடன்படிக்கை முறியும் எழுதி, அவர்கள் கையொப்பம், வாங்கி வருவேன்.

"அன்றியும் நீர் போகச்சொன்னல் ஒழிய, என் வாழ்நாள் இறுதிமட்டும் நான் உம்மைவிட்டுப் பிரியேன் என்றும், என் நாட்டவர்கள் சிறிதாயினும், உமக்குக் கேடுசெய்வார்களானல், நான் உமக்குத் துணை நின்று என் குருதி துளித் துளியாய்ச் சிந்தி, எனது உடம்பு வெற்றெலும்பாய் உலருமட்டும் அவர்களுடன் சண்டையிடுவேன் என்றும், என் மட்டில் சிறிது மாற்றமின்றி உறுதிமொழி அளிக்கின்றேன்.

"மேலும் அவர்கள் அனைவரும் நெறி முறை தவருத உண்மையாளர்கள். கையுதவிக்குப் படைக் கருவிகளாயினும், உடுக்க ஆடைகளேனும், உண்ண உணவாவது இல்லாதவர்களாய் வேடர் ஆணைக்கு உட்பட்டு, அவர்கள்

மேன்மையே தமது கருத்தாய்க்கொண்டு, பிறந்தநாட்டுக்கு இனித் திரும்பிப்போக முடியாதென்று எண்ணித் துன்பக் கடலில் மூழ்கியிருக்கிறார்கள். அற நெறிச் செல்வாராகிய நீர் அருள் கூர்ந்து, அவர்களைச் சிறைமீட்கத் தலைப்படுவீராகுல், இனிப் பிழைப்பினும் இறப்பினும் உம்மையே தஞ்சம் என்று எண்ணி, உமது அடியாராய் நடப்பார்கள் என்று முழுவதும் நம்புகிறேன்." என்றான்.

## அதிக நிலங்களைப் பயிரிடும் முயற்சி

இந்த உறுதிமொழிகளைக் கேட்ட பின், கூடிய முயற்சிகள் செய்து, அவர்களை விடுதலை செய்யவும், அவர்களோடு உடன்படிக்கை செய்து வரும்படி கிழ வேடனையும், ஸ்பானியனையும் தூதர்களாய் அனுப்பவும் முடிவு செய்தேன். பயணத்திற்கு வேண்டும் முயற்சிகள் யாவும் செய்த பின், தன் முழு நினைவோடும் வஞ்சனையின்றியும் ஸ்பானியன் வாயிலின்றும் பிறந்த தடை ஒன்றை நான் முழுவதும் நம்பி, அவனுடைய கூட்டாளிகளைச் சிறைமீட்கும் முயற்சியைக் குறைந்தது ஆறு திங்கள் வரையில் நிறுத்திவிட்டேன். தடை இதுதான்:

ஸ்பானியன் எங்களிடத்திற் சேர்ந்து ஏறத்தாழ ஒரு திங்கள் ஆயிற்று. இக்கால வரையில் கடவுள் அருளால் உணவுக்கு வேண்டியவைகளை நான் தேடித் திரட்டி வைத்திருந்தது இவ்வகையென்று அவனுக்கு வெளியிட்டேன். நான் தொடுத்து வைத்திருந்த வாற்கோதுமையும், நெல்லும் இவ்வளவென்று அவன் திட்டமாய்க் கண்டான். நான் ஒருவன் மட்டும் இங்கு இருந்தால் அவை என் செலவிற்கும் கண்டு மிஞ்சும். இப்பொழுது என்னுடன் பின்னும் மூன்று பெயர் என் குடும்பத்திற் சேர்ந்திருந்தார்கள். ஆகவே, எங்கள் நான்கு பெயருக்கும் இக்கூலம் அளவோடு செலவு செய்தாலன்றிச் செலவிற்குப் போதுமானது அன்று. இப்படியானுல் வேடர் நாட்டில் இருக்கின்ற ஸ்பானியர் பதினன்கு பெயரும் எங்களுடன் வந்து சேர்ந்தால் ஆகப் பதினெட்டுப் பெயருக்கும் உண்டிக்கு வகை

இல்லையே. அன்றியும் எல்லாரும் வந்து சேர்ந்த பின் வள மான ஓடம் ஒன்று செய்து அமெரிக்காவில் கிறித்தவ நெறியார் வாழும் எந்த நிலப் பகுதிக்கேனும் பயணப் படுவோமானால், கப்பலில் இருக்கும் வரையிலாவது எனது கூலம் உணவுச் செலவுக்குக்காணாதே. இந்த உண்மைகளை எடுத்துக்காட்டி ஸ்பானியன் என்னிடத்தில் உள்ள விதை விதைப்பதற்கு அளவான நிலத்தைத் தானும் மற்ற இரு வரும் கொத்தி வெட்டிப் பண்படுத்தி விதைக்கவும், அது பயிராகி வளர்ந்து விளைந்தபின் அறுத்துக் கூலத்தைக் களஞ்சியத்திற் சேர்த்து வைக்கவும், அப்புறம் தன் நாட்ட வர்களை அழைத்துவரவும் இடந்தரவேண்டும் என்று கேட் டான். இப்படிச் செய்யாமல், இப்பொழுதே அவர்களை அழைத்துவர நேர்ந்தால், களஞ்சியத்தில் இருக்கும் சிறி தளவு கூலமும் விரைவில் செலவழிந்துபோம். ஆதலால், பசி வருத்தம் பொறுக்காமல், அவர்கள் மனம் வேறுபட்டு ஒருவேளை கலாம் விளைப்பார்கள் என்றும், சிறைத்துன்பம் நீங்க, வறுமைத் துன்பம் வந்ததென்று குறை கூறி நாம் சொல்லும் சொற்களைக் கேளாமல் மீறி நடப்பார்களென் றும் சொன்னான். மேலும் "எகிப்து நாட்டினின்று சிறை மீண்டு வந்தபொழுது இஸ்ரவேல் மைந்தர் மகிழ்கூர்ந்தும், காட்டின் கண் உணவுக்கு முட்டுப்பட்டபொழுது, தங்களைச் சிறைமீட்ட இறைவனை மதிக்காமற் கலகம் செய்தது அறி யீரா" என்றான்.

இவ்வாறு ஸ்பானியன் சரியான வேளையிற் கூறிய நல்லுரையை நான் இன்பமாய்க் கேட்டு, அவனிடத்திற் சற்றுவது வஞ்சகம் இல்லை என்று முழுவதும் நம்பினேன். ஆகையினால், நாங்கள் நான்கு பெயரும் என்னிடம் இருந்த மர மண்வெட்டிகளால் நிலம் அகழ்ந்து உழுது பண்படுத் திப் பக்குவம் செய்ய ஒரு திங்கள் சென்றது. அடுத்து விதைப்புக் காலம் வந்ததனால், இருபத்திரண்டு கலம் வாற் கோதுமையும் பதினாறு பறை நெல்லும் விதைத்தோம். இதற்குமேல் அதிக கூலம் விதைப்பதற்கு இயலாது. விதைக் கூலத்தைத் தனியே எடுத்து வைத்த நாள் முதல்

விதைத்த கூலம் விளைந்து வரச் சரியாக ஆறு திங்கள் செல்லும். உணவுக்கு வைத்திருந்த கூலம் ஆறு திங்கள் வரையில் எங்கள் செலவிற்கு ஒருவாறு போதும். இந்த நாட்டில் விதைக்குக் கூலம் ஒதுக்கிய நாள் முதல் ஆறு திங்களே கணக்கு. விதைத்த கூலம் நிலத்தில் ஆறு திங்கள் கிடக்கவேண்டியதில்லை.

### புதிய ஓடம் செய்ய முயலுதல்

என்னுடைய தீவின் குடித்தொகை மிகுதிப்பட்டதனுல், திரளான வேடர் வந்தாலன்றி, எங்கள் நால்வரையும் அவர்கள் எவ்விதத்திலும், மேற்கொள்ள முடியாதென்று எண்ணித் தீவில் எவ்விடத்திலும் அச்சம் இன்றிப்போய் வந்துகொண்டிருந்தோம். இவ்விடத்தினின்று விரைவில் விலகி விடுதலை பெறவேண்டும் என்று நாங்கள் எண்ணியிருந்ததனுல், அதற்குரிய சாதனங்களைத் தேடவேண்டும் என்று எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தேன். ஓடத்திற்கு வளமான மரங்களை அங்கங்கே குறித்து, வெள்ளிக்கிழமையையும் அவன் தகப்பனையும் கொண்டு தறித்தேன். என் கருத்துக்களை நான் ஸ்பானியனுக்குச் சொல்ல, அவன் துணைத்தலைவனுய் நின்று செய்யவேண்டிய வழிமுறைகளைக் காட்டிக்கொடுத்து அவர்களைக்கொண்டு வேலை செய்வித்தான். முன்பு நான் ஆள் உதவி இன்றித் தன்னந்தனியே மரம் தறித்து வீழ்த்தி, ஒவ்வொரு மரத்தில் ஒவ்வொரு பலகை வெட்டி ஒழுங்குபடுத்திய வகையை அவர்களுக்கு உணர்த்தினேன். அவர்கள் நாளடைவில் வைரமான சிந்தூர மரம் தறித்துப் பன்னிரண்டு பெரும் பலகை வெட்டிச் சீர்ப்படுத்தினுர்கள். பலகை ஒன்றின் நீளம் முப்பத்தைந்து அடி; அகலம் இரண்டுஅடி, தடிப்பு இரண்டு முதல் நான்கு அங்குலம் வரை. மரம் தறித்து இந்தப் பலகைகளை வெட்டிச் சீர்ப்படுத்துவதற்கு எவ்வளவு வருத்தப்பட்டு உழைக்கவேண்டும் என்பதை இக்கதையைப் படிப்பவரே ஆராய்ந்து அறியலாம்.

### வேறு உணவுப் பொருள்கள்

இவ்வேலை நடக்கும் காலத்தில், நான் வளர்த்து வந்த சிறிய ஆட்டு மந்தையைப் பெரிதாக்கி வளர்ப்பதற்குச் சூழ்ச்சி செய்தேன். நாள் ஒன்றுக்கு இருவர் விழுக்காடு வெள்ளிக்கிழமையும் ஸ்பானியனும், நானும் வெள்ளிக்கிழமையும் மாறி மாறித் துப்பாக்கி கொண்டு காட்டுக்குப் போய், எதிர்ப்படும் ஆடுகளைச் சுட்டு வீழ்த்தினோம். குட்டிகளைக் கொல்லாமல் கொண்டுவந்து மந்தையிற் சேர்த்தோம். இவ்வாறு நாளடைவில் சேர்ந்த புதுக் குட்டிகள் இருபது. இதுவும் பெரிதன்று. கொடிமுந்திரிப் பழக் குலைகளை வெயிலில் உலர்த்தும் காலம் வந்தபொழுது, திரளான குலைகளைப் பறித்து வெயிலில் தூக்கி, உலர்த்தி, அறுபது எண்பது பீப்பாய்கள் நிறையச் சேர்த்து வைத்தேன். பழ வற்றலால் பெயர்பெற்ற அலிகன்ட் நகரத்திற்குப் போனாலும் இவ்வளவு அகப்படுவது அருமை. இவ்வற்றலும் ரொட்டியும் தான் எங்கள் முதன்மையான உணவு. இவ்வுணவு நாவிற்குச் சுவையும் உடம்புக்கு வலிமையும் தருவதாய் இருந்தது.

### விளைந்த கூலத்தை அறுவடை செய்தல்

விதைத்த கூலம் நன்கு விளைந்து, அறுக்கப் பருவம் ஆயிற்று. இந்தத் தடவை விளைச்சல் அவ்வளவு சிறந்த முறையில் மிகுதியாக விளையவில்லை; ஆயினும் குற்றம் இல்லை. விளைந்த மணி எங்கள் செலவிற்கு முழுவதும் காணும். விதைத்த வாற்கோதுமை இருபத்திரண்டு கலம் அறுத்துப் போரடித்துத் தேறினது இருநூற்றிருபதுக்கும் அதிகம். நெல்லும் இந்த அளவில் விளைந்தது. இவ்விரண்டு வகைக் கூலமும் மேற்கூறிய பதினாறு ஸ்பானியரும் என் குடும்பத்திற் சேர்ந்தாலும், மறு தடவை விளைச்சல் வரும் அளவும் எங்கள் எல்லோருக்கும் உணவுக்குப்போதும். நாங்கள் பயணத்துக்கு முயன்றாலும், மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டுபோய் அமெரிக்காவில் எந்தப் பகுதிக் கரையிலேனும் சேரும் அளவும் எங்கள் செலவுக்

குப் போதுமானதாகும். போர் அடித்துக் கூலத்தை வீட்டிற் கொண்டுவந்து சேர்த்தபின் அதை வைப்பதற்கு என்னிடமிருந்த கூடைகள் போதாமையால், பின்னும் சில கூடைகளைக் கொடிகளால் முடைந்தோம். நேர்த்தியாய்க் கூடைகள் முடைவதில் ஸ்பானியன் கை நன்றாய்ப் பழக்கப் பட்டிருந்தது. இக் கொடிகளால் கொத்தளம் முதலிய காவல் அரண் ஏதாயினும் நான் கட்டாதிருந்ததைப்பற்றி அவன் குறை கூறினன். அவ்வித அரண்களைச் சமைப்பது தேவையில்லை எனக் கண்டேன். வரும் விருந்தினர்கட்குப் போதுமான அளவில் கூலம் முதலிய உணவுப் பொருள்கள் தேடிச் சேர்த்து முடிந்ததனால், "இனி அடுத்த கண்டத்திற்குப் போய், அங்கிருக்கும் உன்னுடைய மனிதரை இக்கரைக்குக் கொண்டு வரும்படி உன்னால் இயன்ற முயற்சிகளைச் செய்" என்று ஸ்பானியனுக்கு விடை கொடுத்தேன்.

### ஸ்பானியன் தன் துணைவரை அழைத்துவரச் செல்லுதல்

தன் துணைவரை அழைத்துவர ஸ்பானியன் விரும்பி ஒத்துக் கொண்டான். தன்னைச் சிறை மீட்கும்படி தூது அனுப்பி, இத் தீவிற்கு வரவழைக்கும் அறநெறியாளனைக் காணும் பொழுது தான் அவனுக்கு எவ்விதத் தீங்கும் செய்வதில்லை என்றும், அவனைத் தாக்குவதில்லை என்றும், உனக்கும் இக் கிழவேடனுக்கும் எதிரில் நின்று உறுதி மொழி கூறுவதற்கு உடன்படாத ஒருவனையும் நீ இங்கே கொண்டுவரக் கூடாது. மேலும், அந்த ஸ்பானியர்கள் மேற்கூறிய அறநெறியாளனுக்கு யாரும் தீங்கு செய்ய வொட்டாமல் தடுத்துத் துணை நின்று, எவ்விடத்திற்குப் போனலும் அவன் சொற் கேட்டு, அவனுக்கு அடங்கி நடப்பதாக உடன்படிக்கை முறி எழுதிக் கையொப்பம் இட்டு உங்களிடத்தில் ஒப்புவிக்க, அதை நீங்கள் வாங்கிக் கொண்டு வரவேண்டும் என்றும் ஸ்பானியனுக்குத் திட்டமாய்க் கட்டளை இட்டு ஒரு முறி எழுதிக் கொடுத்தேன். எழுதும் இறகுக்கும் மைக்கும் வழியில்லாதிருந்த ஸ்பானியர்கள் உடன்படிக்கை முறி எழுதிக் கொடுப்பது எப்படி

என்று நான் கேட்கவும் இல்லை; ஸ்பானியன் கேட்கவும் இல்லை.

இவ்வரையறைகளைக் கேட்டபின் ஸ்பானியனும் கிழவனுகிய வேடனும் முன்பு இத்தீவிற் சிறைப்படுத்திக் கொண்டுவரப்பட்ட ஓடங்களில் ஒன்றில் ஏறிப் பயணப் பட்டார்கள்.

ஓடம் ஏறும்பொழுது, நான் அவர்களுக்குத் தலைக்கு ஒரு பெருந் துப்பாக்கியும், எட்டு வெடி தீர்க்கப் போதுமான மருந்து குண்டும் கொடுத்து, "இம்மருந்தையாவது குண்டுகளையாவது இன்றியமையாமை நேர்ந்தபோது அன்றி வீணுய்ச் செலவு செய்யாமல் உற்ற வேளைக்கு வேண்டும் என்று வைத்திருங்கள்" எனத் திட்டம் சொல்லி அனுப்பினேன்.

நான் இத்தீவில் வந்து சேர்ந்து இருபத்தேழு ஆண்டுகள் முழுவதும் நிறைவேறிப் பின்னும் சிலநாட்கள் சென்றன. சென்றும், இச்சிறையிருப்பு நீங்கி ஈடேறும் பொருட்டு இதற்கு முன் நான் எவ்வித முயற்சியும் செய்யாததனுல், இம்முயற்சியைப் பற்றி என் உள்ளம் களி கூர்ந்தது. பல நாட்கள் வரையில் அவர்களுக்கும், எட்டு நாள் வரையில் அவர்கள் அழைத்து வரும் மனிதருக்கும் உணவுச் செலவுக்குப் போதுமான ரொட்டியும் கொடிமுந்திரிப் பழவற்றலும் கொடுத்து பயணம் வெற்றி உறுக என்று வாழ்த்தியனுப்பினேன். மேலும் திரும்பி வரும் பொழுது கரைகிட்டு முன்னே வருபவர்கள் அவர்கள் தாம் என்று நான் உறுதியாய் அறியும்படி எவ்விதக் கொடி ஏற்றவேண்டும் என்று அவர்களுக்கு விளக்கமாய்ச் சொல்லி வைத்தேன். என் கணக்குப்படி அவர்கள் பயணப்பட்டது அக்டோபர் திங்கள். அன்று முழுநிலவு; வளக்காற்று வீசியது. நாள் கணக்கு முன்பு ஒரு முறை தவறிப் போனதால், பின்பு எனக்குத் திட்டமாய்த் தெரியவில்லை. ஆண்டுக் கணக்கும் அத்துணை வரையறையாய் நான் வைக்கவில்லை. பிறகு நான் எழுதி வைத்த கணக்

கைச் சோதித்துப் பார்த்து, ஆண்டுக் கணக்கில் தவறு இல்லை என்று கண்டேன். எட்டுநாள் வரையில் அவர்கள் வரவை எதிர்பார்த்திருந்தேன். எட்டாம் நாள் எதிர் பாராத இடுக்கண் ஒன்று நேரிட்டது. இதற்குமுன் இத் தன்மையான இடுக்கண் இந்தப் பூவுலகில் எவர்களுக்கா யினும் நேர்ந்ததைக் கண்டதும் கேட்டதும் இல்லை. ஒரு நாள் காலையில் நான் அயர்ந்து தூங்கும்பொழுது என் வேலையாள் வெள்ளிக்கிழமை ஓடிப் பறந்து வந்து, "தலை வரே, ஐயா, வந்து விட்டார்கள்!" என்று உரக்கக் கூப் பிட்டான்.

## ஆங்கிலக் கப்பலும் ஓடமும் கண்டேன்

உடனே நான் துடித்துப் பதைத்து எழுந்து, விரை வாய் ஆடை அணிந்து, ஒன்றுக்கும் அஞ்சாமல் எனது சிறு தோப்புக்கு இடையே சென்றேன். இத்தோப்பு நாளடைவில் நன்றாய் அடர்ந்து படர்ந்திருந்தது. நான் வெளியிற் செல்லும்பொழுது படைக்கலங்கள் இல்லாமற் செல்வது வழக்கம் அன்று. இவ்வேளையில் மட்டும் படைக் கலம் இன்றி வெறுங் கையுடன் சென்றேன். ஆதலினால் ஒன்றுக்கும் அஞ்சாமல் சென்றேன் என்றேன். கடற் கரையை எட்டிப் பார்த்தபொழுது ஓடம் ஒன்று கரைக்கு நாலரைக் கல் தொலைவில், அணியப் பாய் தூக்கி, அள வாய் வீசிய வளக்காற்றில் கரைக்கு நேர்முகமாய் வரக் கண்டு, வியப்புக் கொண்டேன். பின்னும் சற்றுக் கருத் தாய்ப் பார்த்த அளவில், அவ் வோடம் நடுக்கடலில் இருந்து அன்றி, இத்தீவின் தென்கோடியில் நின்று வருவ தாகத் தோன்றிற்று. அப்பொழுதே நான் வெள்ளிக் கிழமையை வரவழைத்து, ஓடத்தில் வருபவர்கள் நாம் எதிர்பார்த்திருக்கும் மக்கள் அல்லர். அவர்கள் நமக்கு நண்பர் என்றும், பகைவர் என்றும் விவரம் தெரியவில்லை. பதறாமல் மறைந்திருப்பாயாக என்று சொன்னேன்.

அதன் பிறகு அவர்கள் யாவர் என்று அறிந்து ஐயம் தெளியும் பொருட்டுத் திரும்பி வந்து, தொலை

நோக்காடி எடுத்துக்கொண்டு, ஏணியை நிறுத்திக் குன்றின் உச்சியில் ஏறினேன். ஏதாயினும் இடுக்கண் நேரிட்டிருப்பதாக எனக்குள்ளே ஐயம் உண்டாகும் பொழுது நான் குன்றின் உச்சியில் ஏறி என்னை எவரும் காணுதபடி மலை ஒதுக்கில் மறைந்து நின்று, தொலை நோக்காடியாற் பார்ப்பது வழக்கம்.

மலை உச்சியில் நான் அடி எடுத்து வைக்கும் பொழுதே, எனக்கு ஏழரைக்கல் தொலைவில் தென் கீழ்த் திசையில் சற்றே தெற்கை நாடி ஒரு கப்பல் நங்கூரம் இட்டு நிற்பது என் கண்ணுக்குத் தெளியத் தோன்றிற்று. அதற்கும் கரைக்கும் தொலைவு நாலரை மைலுக்கு அதிகம் இராது. தொலை நோக்காடியாற் பார்த்து, அஃது ஆங் கிலேயக் கப்பல் என்றும் அவ்வோடம் அதைச் சேர்ந்த நெட்டோடம் என்றும் வெளிப்படையாய் அறிந்தேன்.

**ஆங்கிலக் கப்பல் இங்கு வந்தது ஏன்?**

கப்பலைக் கண்டதும், அதில் இருப்பவர்கள் எனது தாய் நாட்டவர் என்றும், எனக்கு நண்பர் என்றும் நம்பு வதற்குக் காரணம் இருந்தது. சொல்வதற்கரிய மகிழ்ச்சி யும் ஒருபால் உண்டாயிற்று. ஆயினும் அவ்வேளையில் எனக்கு உண்டான மனத் தடுமாற்றம் இவ்வளவென்று வெளியிடவும் இயலாது. என் நெஞ்சில் உண்டான ஐயம் முழுதும் நீங்கவில்லை. அவர்கள் எங்கிருந்து வந்தவர்கள் என்று நான் அறியேன். ஆதலினுல், விழிப்போடு இருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். எனக்குள்ளே பின் வரும் எண்ணங்கள் பிறந்தன. ஆங்கிலேயக் கப்பல் இவ் விடத்திற்கு வரக் காரணம் என்ன? ஆங்கிலேயர் வாணிகம் செய்ய எந்த நாட்டிற்காயினும் போக்குவரவு செய்வதற்கு இது வழியல்லவே; அடித்த காற்றில் துன்பமுற்று கப் பல் இக்கரையில் ஒதுங்கிற்றென்று கொள்ளின் புயல் அடிக்கவில்லையே. அக்கப்பலில் இருக்கும் கடலோடிகள் உண்மையில் ஆங்கிலேயராஞல் அவர்கள் இங்கே வந்தது நன்மைக்கன்று. ஏதாயினும் கேடு செய்யக் கருதி வந்திருப்

பார்கள். அப்படிப்பட்ட கொள்ளைக்காரர் அல்லது கொலை காரர் இடத்தில் வலியப் போய் அகப்பட்டுக் கொள்வது அறிவுடைமை யன்று. பதுருமல் நின்றவிடத்தில் நிற்பதே நன்று.

## துன்பம் வருவதை ஆராய வேண்டும்

எவனுக்காவது இடுக்கண் உயிரிழப்பு முதலியன உண்டாகும் முன்னதாகச் சில சிறிய குறிகள் தோன்றும் பொழுது, அவைகளை வீண் என்று எண்ணி, விட்டு விடுதல் கூடாது. இடுக்கண் வருமுன் அதை உணர்த்தும் அறிகுறிகள் உண்டாவது உண்மையே. செயல் முறைகளைத் திட்டமாய் ஆராய்ந்தறியும் பழக்கம் உடையோர் இதற்கு மறுப்புக் கூறமாட்டார். அந்த அடையாளங்கள் இவ்வுலகத்தின் மறைமுகமான செய்திகளை வெளியிடுபவைகளும் வான்மொழிகளுமாய் இருக்கின்றன என்பதற்கு ஐயமில்லை. இடுக்கண் வருமுன் அதைக் குறித்து அந்தக் குறிகள் நம்மை நினைவுறுத்தும் தன்மையுள்ளவைகளாய் விளங்கினுல், அவை நமது, மேன்மையின் பொருட்டு நமது நன்மையை விரும்பும் இறைவனிடம் இருந்து வந்தன என்று நாம் கருதினுல் என்ன? அதில் என்ன தாழ்வு இருக்கிறது? அந்தப் பொருள் உயர்வுடைய கடவுள் தாமோ? சற்றுத் தாழ்ந்த நிலையில் இருப்பதோ என்று நாம் ஆராய வேண்டியது இல்லை.

இவ்வாறு ஆராய்வது சரிதான் என்று இந்த நேரத்தில் எனக்கு நேரிட்டிருந்த இடுக்கண்ணுல் நன்கு அறிந்தேன். மறைமுகமான இந்த முன்னறிக்கை எங்கிருந்து வந்தாலும் என்ன? அதை நான் நினைவிற் கொண்டு கூடிய வரையில் முன் பாதுகாப்புச் செய்யாதிருப்பேன் ஆனுல், எனக்கு வரும் அழிவுக்கு ஒரு பொழுதும் மீட்சி இல்லை. முந்தின இடுக்கண்களை விட இதுவே மிகவும் பெரியதாகும். இதன் உண்மை பின் சொல்லப்படும் செய்திகளால் உங்களுக்கு நன்கு விளங்கும்.

### கப்பலில் வந்தவர் யாவர் ?

நான் அவ்விடத்தினின்று பார்க்கத் தொடங்கிய சற்று நேரத்துக்குள் ஓடம் கரைக்கு நெருங்கிவந்தது. அதில் இருந்தவர்கள் கரையில் இறங்க வாய்ப்பான துறை யைக்கண்டு, அதில் ஓடத்தை ஒதுக்குவதற்காக, கரை நெருங்கச் செலுத்தினார்கள் போலும். முன்பு நான் என் தெப்பங்களை ஒதுக்கிக் கரை ஏற்றின சிறு குடா அவர் களுக்குத் தெரியவில்லை. எனக்கு அரை மைல் தொலைவில் ஓடத்தைக் கடற்கரையில் ஒதுக்கினார்கள். அவர்கள் அவ் விடத்தில் நின்று விட்டது எனக்கு நன்மைதான். எனது வீட்டிற்கு முற்றம் போல் அத்துணை அண்மையில் உள்ள மேற்கூறிய சிறுகுடாவில் ஓடம் ஒதுங்க நேர்ந்தால், அவர்கள் கரையில் இறங்கினவுடனே என்னை அடித்து, வீட்டினின்று துரத்தி, என் சொத்துக்கள் எல்லாவற்றை யும் சூறையாடிக் கொண்டு போவார்கள். கரையில் இறங் கிய பின், அவர்களிற் பெரும்பான்மையோர் ஆங்கிலேயர் என்று முழுவதும் நம்பினேன். இரண்டொருவர் டச்சுக் காரர் என்று நினைத்தேன். அது தவறு எனப் பின்பே அறிந்தேன். அவர்கள் ஆகப் பதினொரு பெயர். மூன்று பேர் படைக்கலம் இல்லாதவர். கட்டப்பட்டு இருந் தார்கள் போலும். முதலில் நான்கைந்து பேர் கரையில் இறங்கி, கட்டப்பட்ட அம் மூவரையும் இறக்கினார்கள். அம் மூவரில் ஒருவன் மிகத் துயரடைந்து வருந்தி, மிக இறங்கிக் கெஞ்சும் பாவனையான செயல்களைச் செய்தான். மற்ற இரண்டு பேரும் அவனைப்போல் அத்தனை அதிகம் வருந்த வில்லை. மிக வருத்தப்படும் நிலையில் என்று அடிக்கொரு முறை தங்கள் கைகளை உயர்த்தினார்கள்.

### வெள்ளிக்கிழமையுடன் உரையாடல்

அவர்களைக் கண்டவுடன் என்மனம் பதறிக் கலங் கிற்று. அவர்கள் இன்னார் இனையர் என்றும், இங்கே வந்த காரணம் இன்னதென்றும், எனக்குத் தெரியவில்லை. வெள்ளிக்கிழமை, "தலைவரே! வேடரைப்போல் ஆங்கிலே

யரும் மனிதரைச் சிறைபிடித்து அடித்துக் கொன்று தின்பது வழக்கந்தான். அதற்கு எடுத்துக்காட்டாகக் கண்ணுக்கெதிரே காண்கின்றோமே" என ஆங்கில மொழியிற் கூறினான். அதற்கு நான், "ஏன் இப்படிச் சொல்லுகிறாய் வெள்ளிக்கிழமை! அவர்கள் அம்மனிதரைக் கொன்று உண்பார்கள் என்று எண்ணுகிறாயா?" என்று கேட்க, "ஆம் உண்பார்கள்" என்றான். "இல்லை இல்லை, அவர்களைக் கொலை செய்வார்கள் போலும்; உண்ணவேமாட்டார்கள். இஃது உண்மை என்று நம்பு" என்று கூறினேன்.

**வந்த ஆங்கிலேயர் என்ன செய்தார்கள்?**

நாங்கள் இருவரும் மேற்கூறியவாறு உரையாடல் செய்தோம். ஆயினும் என்மனம் அவர்களைக் குறித்து அஞ்சிக் கலங்கிற்று. சிறையாளர் மூவரும் அப்பொழுதே கொல்லப்படுவார்கள் என்று நினைத்தேன். அதற்குரிய காரணம் இன்னதென்று எனக்குத் தோன்றவில்லை. அந்தக் கொடிய கொலைஞரில் ஒருவன் பெரிய கத்தி ஒன்றைக் கையிற் கொண்டு, ஆதரவு அற்ற சிறையாளரில் ஒருவனை வெட்டுவதற்கு ஓங்கினான். அந்நொடியிலேயே அவன் வெட்டப்பட்டு இறப்பான் என்று நினைத்தவுடன் என் உடம்பில் உள்ள குருதி குளிர்ந்து, உடல் விறைத்தது.

இந்த நேரத்தில் அந்த ஸ்பானியனும், அவனுடன் போன வேடனும் இங்கு இருக்கவில்லையே; அல்லது இந்தக் கொடியோர் காணாதபடி குண்டு பாயும் தொலையில் போக வழியிருக்குமானால், நான் படைக்கல வலிமை இல்லாத அவர்களைச் சுட்டுக்கொன்று, வருந்துவோர் மூவரையும் பாதுகாப்பேனே. என மனம் இரங்கி நினைத்தேன். ஆனாலும் உற்ற வேளையில் இதற்கு இன்னபடி செய்யவேண்டும் என்று எனக்குத் தகுதியான எண்ணம் பிறந்தது.

செருக்குள்ள அக்கடலோடிகள் சிறையாளர் மூவருக்கும் மேற் கூறியவாறு கொடுமைகள் செய்த பின்பு, அவர்களை விருப்பமான இடத்திற்குப் போகும்படி செய்துவிட்டு,

நாட்டு வளப்பம் கண்டறியக் கருத்து உள்ளவர்கள்போல அங்கங்கே ஓடி உலாவித் திரிந்தார்கள். சிறையாளர் மூவரும் துயர் அடைந்து வருந்துவோர் போலத் தரையில் உட்கார்ந்து, ஆழ்ந்த சிந்தனையோடு இருந்தார்கள்.

**என்னுடைய பழைய நினைவுகள்**

அவர்களைக் கண்டவுடன், நான் தொடக்கத்தில் இத் தீவின் கரை அடைந்து நான்கு பக்கங்களையும் பார்த்த பொழுது, இனி ஈடேற வகை இல்லை என்று தவித்துச் சுற்றிலும் பார்த்துப் பதறியதும், எனக்கு அளவு கடந்த அச்சம் உண்டானதும், கொடிய விலங்குகள் கொன்று விடும் என்று மரத்தில் ஏறி இரவு முழுதும் அங்கு இருந்ததும், ஆகிய இந்த நினைவுகள் எல்லாம் என்னுடைய மனத்தில் எழுந்தன.

நாட்கள் பல செல்ல எனக்கு உணவுக்கு உதவியான பல பொருள்களை நான் எளிதிற் கைக்கொள்ளும்படி இறைவர் அருளால் இக் கப்பல் புயலில் அகப்பட்டு, வெள்ளப் பெருக்கில் தள்ளுண்டு கரை நெருங்க வந்து நிற்கிறது என்று அறியாமல், அன்றிரவு என் மனம் தடுமாறிய வண்ணம், மேற் கூறிய தமியர்களாகிய சிறையாளர் மூவரும் தாம் விரைவில் விடுதலை பெற்று, உணவுக்கு முட்டுப்பாடு இன்றி ஆறித் தேறிக் கடைத்தேறுவதற்கு நேரம் வாய்த்தது என்று அறியாமல், தங்களுக்குத் தப்பும் வகை இல்லை என்று எண்ணி, மனம் பதறித் தத்தளித்தார்கள்.

**கடவுள் அருள் இருந்தால் எல்லாம் நன்மையாகும்**

இனி நடப்பது இன்னது என்று நமக்கு எள் அளவும் தெரியாது. ஆதலினால் உயிர்த்தொகைகள் எல்லாவற்றையும் படைத்த பெருமை வாய்ந்த கடவுள் நம்மைக் கைவிடார் என்று முழுவதும் நம்பி, நாம் கலக்கம் அற்று இருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அவர் தமது படைப்புப் பொருளைச் சிறிதும் ஆதரவு இன்றிக் கலங்க விடமாட்டார். மிகக் கொடிய இடுக்கண் வரும் காலத்திலும் அவர் அவர்களுக்கு ஏதாயினும் நன்மை செய்வார்.

அவர்கள் அண்மையில் தமக்கு மீட்சி இல்லை என்று பத றிக் கதறும்பொழுது அவர்களுக்கு அதிக விரைவில் மீட்சி உண்டாவதும் உண்டு. இது பெரிது அன்று. தங் களுக்கு அழிவை விளைவிக்கும் என்று அவர்கள் எண் ணிய செயல்களே அவர்களைக் கடைத்தேற்றி மேன்மை யடையச் செய்வதும் உண்டு.

## அவர்கள் ஓடம் கரை தட்டி நின்றது

அவர்கள் கரைப்பட்டபொழுது, கடற்பெருக்கு முதிர்ந்த வேளை. தாம் கொண்டுவந்த சிறையாளருடன் பேசுவதிலும், நாட்டின் வளம் முதலியவைகளை அங்கங்கே உலாவித்திரிந்து பார்ப்பதிலும், அவர்கள் நினைவாய் இருந்தபோது பெருகிய நீர் வற்றியது. வற்றவே ஓடம் தரையிற் பொறுத்து நின்றது. ஓடத்தில் இருந்த இருவர் அளவுகடந்து சாராயம் குடித்ததனால், மயங்கி அயர்ந்து தூங்கினார்கள். இஃது எனக்குப் பிறகு தெரிய வந்தது. முத லில் விழித்து எழுந்தவன் ஓடம் தரையிற் பொறுத்து நிலை பெயராது இருந்தது கண்டு, கரையில் பல இடங்களிலும் திரிந்தவர்களை விரைவாய்க் கூவி அழைத்தான். அவர்கள் எல்லாரும் மிக விரைவாய் ஓடிப்போய் ஓடத்தைத் தள்ளித் தண்ணீரில் இறக்கிவிடக் கூடிய வரையில் முயற்சி செய் தார்கள். ஓடம் அதிகப் பருமனாய் இருந்ததனாலும், அக் கரையில் தரை அதிக மணற்பாங்காய் இருந்ததனாலும், அதைப் பெயர்த்துத் தள்ள அவர்கள் வலிமை போதா திருந்தது.

நன்றாய்க் கடல் ஓடிப் பயின்றவர்களுக்குப் பெரும் பாலும் முன் அறிவு இல்லை. இக்கடலோடிகள் ஓடம் தள்ளுவதற்கு இசையாதென்று அதைவிட்டுத் திரும்பி, மீண்டும் அவரவரே உலாவித் திரிந்து தீவின் சிறப்புக் களைக் கண்டு மகிழ்ந்தார்கள். சிலர் ஓடத்தின் பக்கத்தில் நின்றபோது, கரை ஏறி உலாவப் போனவர்களில் ஒருவன் உரத்துக் கூப்பிட்டு: "ஜாக், இப்பொழுது ஓடம் தள்ள முடியாது; வீண் முயற்சியை விட்டுவிடுங்கள். இனிக்கடல்

பெருகும்பொழுது ஓடம் மிதக்கும்." என்று சொன்னது கேட்டேன். இதனால் அவர்கள் எந்நாட்டவர்கள் என்று கண்கூடாக அறிந்தேன்.

வந்த மனிதரைப் பிடிக்க முயலுதல்

நான் இதுவரை கோட்டைக்குள் அடங்கியிருந்தேனே அன்றி வெளியில் வரவில்லை. நான் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த குன்று உச்சியின் எல்லைக்கு அப்புறம் ஓர் அடி தூரம் தாண்டிச் செல்லவும் இல்லை. எனது கோட்டை மிக அரணிப்பு உள்ளதாய் இருந்ததைக் கண்டு மகிழ்ந்தேன். ஓடம் மிதக்க இன்னும் பத்து மணிநேரம் செல்லுமென்றும், அதற்குள் கதிரவன் மறைந்து இருளுமென்றும், இரவில் அச்சமற்று இருந்து அவர்கள் செயல்களைக் காணலாம் என்றும், ஒருவரோடு ஒருவர் பேசுவார்களானால், அவர்கள் பேச்சு எனக்குக் கேட்கும் என்றும் அறிந்திருந்தேன்.

இப்படி இருக்கும்போது, முன்பு வேடருடன் போர் செய்ய முயன்றது போலப் போர்க்கோலம் அணிய, முயன்றேன். வேடரைக் காட்டிலும் இவர்கள் அதிகத் திறமையுள்ள பகைஞர் ஆதலால், நான் மிகவும் விழிப்போடு இருந்தேன். துப்பாக்கி சுடுவதில் கைதேர்ந்து குறி தவறாமல் சுடப் பயின்ற வெள்ளிக்கிழமையையும், போர்க்கோலம் பூணச் சொன்னேன். குருவிக் குழாய்த் துப்பாக்கிகள் இரண்டை நான் எடுத்துக்கொண்டு, பெருந் துப்பாக்கிகள் மூன்றை அவனுக்குக் கொடுத்தேன். நான் வெள்ளாட்டுத் தோலில் தைத்த அஞ்சத்தக்க நெடுஞ்சட்டை அணிந்து, முன் விளக்கமாய் நான் கூறிய நெடுங் குல்லாவைத் தலையில் அணிந்து, உருவின கத்தியும், கைத் துப்பாக்கிகள் இரண்டும் இடுப்புப்பட்டையில் மாட்டி, தோள் இரண்டிலும் இரண்டு துப்பாக்கிகள் வைத்துக்கொண்டு, வெளியிற் புறப்பட்டபொழுது, என் கோலத்தைக் காணும் எவரும் அஞ்சி நடுங்காமல் இரார்.

கதிரவன் மறைந்து இருளுகிற வரையில் போர் தொடங்குதல் கூடாது என்று நினைத்திருந்ததாக முன்னே கூறினேன். உச்சிப்பொழுது கழிந்து இரண்டுமணி அளவில் வெப்பம் மிக்க கொடுமையாய் இருந்தபொழுது, அவர்கள் எல்லோரும் காட்டில் அங்கங்கே திரிந்து சிதறிப் படுத்துத் தூங்கினார்கள் போலும். துன்பத்தால் வருந்தும் சிறையாளர் மூவருக்கும் தூக்கம் வருமா? அவர்கள் ஏறத்தாழ கால் கல் தொலைவில் ஒரு பெரிய மரத்தின் நிழலில் உட்கார்ந்த வண்ணமாய் இருந்தார்கள். காட்டிற் புகுந்த மற்றவர்கள் கண்ணுக்குச் சிறையாளர் இருந்த இடம் புலப்படாதென்று எண்ணினேன்.

இனி நான் அவர்களுக்கு எதிரிற் போய் அவர்கள் நிலைமை இன்னது என்று கேட்டறிய நினைத்து மேற் குறித்தபடி போர் மேற்கொண்டவனாய் வெளிப்பட்டேன். என் வேலையாளும் அடியவனும் ஆகிய வெள்ளிக்கிழமை யும் என்னைப்போல் படைக்கலம் அணிந்தவனாய் எதிர்ப் படும் எவரும் அஞ்சும்படியான கோலத்துடன் எனக்குப் பின் சற்றுத் தொலைவில் வந்தான். எனது கோலம் கண்களை இமைக்காமல் உருட்டி விழித்துக்கொண்டு விரைந்து புறப்படும் வேதாளத்தின் கோலத்திற்கு ஒப் பாய் இருந்தது. வெள்ளிக்கிழமை அவ்வளவு அஞ்சத் தக்க கோலம் உடையவனாய்த் தோன்றவில்லை.

**சிறையாளருடன் உரையாடல்**

நெருங்கிச் செல்லும் அளவும் அவர்கள் என்னைக் காணாதபடி நான் மெதுவாய்ச் சென்று, அருகில் நின்று, "பெருமக்களே, நீங்கள் யாவர்?" என்று ஸ்பானிய மொழி யில் குரல் எழுப்பிக் கூவிக்கேட்டேன்.

ஒலி கேட்டவுடன் அவர்கள் திடுக்கிட்டு எழுந்து நின்று பதைத்தார்கள். திரும்பிப் பார்த்து, எனது கொடிய வடிவத்தைக் கண்டபொழுது, அவர்கள் பின்னும் பத்து மடங்கு பதைத்துக் கலங்கினார்கள். எனது கேள் விக்கு விடை கூறவில்லை. ஓடித் தப்பிக் கொள்வதற்கு

அவர்கள் முயன்றனர், அது கண்டு நான்; "பெருமக்களே, என்னைக் கண்டு கலங்க வேண்டா. நீங்கள் நினையாதிருக்கும் போது, உங்கள் முன்வந்த இவன் உங்கள் உயிர் நண்பன் ஆனாலும் ஆகக்கூடும்." என ஆங்கில மொழியிற் கூறினேன். என் சொற் கேட்டவுடனே அம் மூவரில் ஒருவன் குல்லாவைத் தலையினின்று எடுத்து மரியாதை செய்து, "அப்படியானால், இவர் மேல்உலகத்தினின்று இங்கு அனுப்பப்பட்டு இருக்க வேண்டும். எங்கள் துன்ப நிலை மனிதர் துணையால் நீங்கும் தன்மையதன்று." என்று அதிக வணக்கத்துடனும் அச்சத்தோடு கூடிய அன்புடனும் உரைத்தான். "உதவிகள் முழுவதும் மேலுலகத்தினின்று வருவது உண்மைதான், நண்பரே. கேளும். உமக்கு என்ன உதவி வேண்டும் என்று கூறி என்னிடத்தில் உதவி பெற்றுக் கொள்வீரா? உம்மைப் பார்த்தால் மிகத் துயர் அடைந்து வருந்துபவர்போல் காணப்படுகின்றீர். நீர் இக் கரையில் இறங்கினவுடன், உம்முடன் வந்த விலங்கினும் கொடிய மனிதரிடம் கெஞ்சுபவர் போல வணங்கி நின்றீர். அங்ஙனம் இருந்தும் அவர்களில் ஒருவன் உம்மைக் கொல்வதற்காகக் கத்தி எடுத்து ஓங்கினதும் கண்டேன்." என்று சொன்னேன்.

வியப்பு அடைந்த அந்த ஏழை மனிதனுடைய இரு விழியினின்றும் அருவி பாய "என்னுடன் பேசும் நீர் தேவரா? மனிதரா? விண்ணுலகத் தூதரா?" எனக் கேட்டான். "இதைக் குறித்து நீர் ஒன்றும் அஞ்சவேண்டாம். நான் கடவுளிடம் விடைபெற்று உமக்கு உதவி புரிய வந்த விண்ணுலகத் தூதரானால், விலைமதிப்பரிய ஆடை அணிகலன்களும், சிறந்த படைக்கலங்களும் அணிந்து வந்திருப்பேன் அன்றோ? கடவுள் தூதர் என்னைப்போலக் கொடிய வேடத்தோடு வந்து உமக்குக் காட்சி அளிப்பாரா? உம்மை இரந்து கேட்கின்றேன். ஒன்றுக்கும் அஞ்சவேண்டா. நான் மனிதன், ஆங்கிலேயன்; உமக்கு உதவி செய்யக் கருதிவந்தவன்; என் ஏவல் கேட்பவன் ஒருவன் உளன். நாங்கள் துப்பாக்கி கத்தி முதலிய

படைக்கலங்களும், மருந்து குண்டும் வைத்திருக்கிறோம்; எங்களால் உமக்கு ஏதும் உதவி வேண்டுமா? தாராள மாய்ச் சொல்லும். உமது நிலைமை என்ன?'' என்று விவர மாய்க் கேட்டேன்.

அதற்கு அவன், "கேளும் ஐயா, எங்களைக் கொல்ல வந்த கொடியோர் இங்கு இருக்கும்போது எங்கள் வரலாறு முழுவதும் உமக்கு இரண்டொரு பேச்சில் சொல்லித் தீராது. சுருக்கிச் சொல்லுகிறேன். நான் அதோ நங்கூரம் போட்டு நிற்கின்ற கப்பலின் மீகாமன். கடலோடிகள் என் கட்டளையை மீறிக் கலகம் செய்து என்னைக் கொல்ல முயன் றார்கள். என்னைக் கொல்லாதிருக்குமாறு அவர்களை மிகப் பரிந்து கேட்டேன். இறுதியாக அவர்கள் சினம் சற்றுத் தணிந்து, என்னையும், இவ்விருவரையும் இந்தப் பாழ்ந் தீவில் கொண்டு வந்து இறக்கிவிட்டார்கள். இவர்களில் ஒருவன் துணை மாலுமி. மற்றவன் கடற்பயணத்தான். இவ்விடத்தில் மனிதர் வாழ்வு இல்லை என்று கண்டு, இறப்பே எமது முடிவு என்று இருந்தோம். இனி எமக்கு என்ன நிலை வருமோ அறியோம்'' என்றான்.

இச்செய்தி கேட்டு, "உங்கள் பகைவர் எங்கே? அவர் கள் எவ்விடத்திற்குச் சென்றார்கள்?'' என நான் கேட் டேன். அம்மாலுமி "ஐயா, எங்கள் பகைவர் அதோ தெரிகின்ற மரங்கள் அடர்ந்த காட்டுக்குப் போயிருக்கிறார் கள்; நாம் இங்கே நிற்பது அவர்களுக்குத் தெரியும் என் றும், பேசுவது கேட்கும் என்றும் அச்சமுற்று எனது நெஞ்சு பதறுகிறது. அவர்கள் உம்மைக் கண்டு, உமது குரல் கேட்பார்களானால், நம் எல்லோரையும் கொன்றுவிடு வார்கள் என்று உறுதியாய்க் கூறுகின்றேன்'' என விடை கூறினான்.

"அவர்கள் படைக்கலம் ஏதாயினும் வைத்திருக்கிறார் களா?'' என்று நான் கேட்டேன். மாலுமி: "அவர்கள் கொண்டுவந்த துப்பாக்கிகள் மொத்தம் மூன்று, ஒன்றை ஓடத்தில் வைத்துவிட்டுப் போனார்கள்'' என விடை கூறி

னன். "ஆகட்டும்; இனி நீர் எதற்கும் அஞ்சவேண்டா. என்ன வந்தாலும் நானே பார்த்துக்கொள்வேன்; அவர்கள் எல்லாரும் அயர்ந்து தூங்குகின்றார்கள். அனைவரையும் எளி திற் கொன்றுவிடலாம். உமது விருப்பம் என்ன? அவர் களைக் கொன்று விடலாமா? அல்லது சிறைப்பிடிக்கலாமா? சொல்லும்" என அவனுடைய கருத்தைக் கேட்டேன். அவர்களில் இருவர் எவருக்கும் அஞ்சாத கொடியோர் என்றும், அவர்களை இரக்கம் காட்டி விட்டு விட்டால், அவர்கள் வழியாய் ஏதும் தீங்கு விளையினும் விளையும் என்றும், அவர்களைச் சிறைப்பிடித்து வைத்தால் மற்றவர் கள் வழிக்கு வந்து, ஒழுங்காய்க் கீழ்ப்படிந்து தொழில் செய்வார்கள் என்றும் மாலுமி கூறினன். அவ்விருவர் யாவர் என்று நான் கேட்டேன். கண்ணுக்கு எட்டாத் தொலைவில் நிற்பதனால், அவர்களுடைய பண்பு குறி முத லியவற்றைச் சரியாய் இப்பொழுது கூறுவதற்கு இயலா தென்றும், நான் என்ன செய்யச் சொன்னாலும் என் சொற் படி செய்வதே தனது கருத்து என்றும் மாலுமி கூறி னன். அது கேட்டு; "நன்று. ஒரு வேளை நம்முடைய பேச்சைக் கேட்டு அவர்கள், எழுந்திருப்பார்கள் ஆதலால், இங்கிருந்து விலகி, அவர்கள் கண்ணுக்கு மறைவாக, நமது குரல் எட்டாத் தொலைவில் போயிருந்து, அதன் பிறகு இன்னது செய்யவேண்டும் என்று பேசி முடிவு செய் வோம்" என்று நான் கூறினேன். ஆதலால் அம்மூவரும் முழு மனத்தோடு என்னைத் தொடர்ந்து வந்தார்கள். எல் லாரும் காட்டிற்புகுந்து அந்தக் கொடியோருடைய கண் ணுக்கு மறைவான இடத்தை அடைந்தோம்.

பின்பு நான்: "கேளும். நீர் என்னிடத்தில் இரண்டு உறுதிமொழிகள் தருவீரானல். நான் உம்மைப் பகைவரிட மிருந்து விடுதலை செய்வேன்; இஃது உமக்கு விருப்பமா?" என்று கேட்டேன். நான் கூறும் முன்னமே மாலுமி என் குறிப்பு அறிந்து, "நான் எந்தச் செயல்களிலும் உமக்கு அடங்கி ஏவல் செய்வேன்; கலகக்கொடியோரிடத்தினின்று கப்பலைக் கைக்கோள்வோமானல், அதற்கு நீரே மா

கப்பல் நமது கைப்பட இயலாது போகுமானால், நீர் எந்த நாட்டுக்குப் போனாலும் நானும் உம்முடன் வந்து, இறக்கும் வரையும் உம்மைவிட்டுப் பிரியாது இருப்பேன்." என மொழிந்தான். மற்ற இருவரும் அவ்வண்ணமே கூறினார்கள்.

அதன் பிறகு நான் அவர்களை நோக்கி, "பதருமற் கேளுங்கள். நான் கூறும் கட்டளைகள் இரண்டு. முதலாவது: நீங்கள் இத்தீவில் என்னுடன் இருக்கிறவரையில் இங்கே நீங்கள் எவ்வித அதிகாரமாயினும் உடையவர்கள் போல நினைத்து நடக்கக்கூடாது. உங்கள் கையில் நான் ஒப்புவிக்கும் படைக்கலங்களைக் கேட்கும்பொழுது, தடையின்றி நீங்கள் எனக்குக் கொடுத்துவிடவேண்டும். நீங்கள் இத்தீவில் எனக்காவது, என் உடைமைக்காவது தீங்கு, அழிவு முதலியன செய்யக்கூடாது. மேலும் இங்கு இருக்கும்போது நான் விதிக்கும் கட்டளைகளுக்குக் கீழ்ப் படியவேண்டும். இரண்டாவது: இப்பொழுதாயினும் இனி மேலாயினும் மரக்கலம் அக்கொடியோரிடம் இருந்து திருப்பிக்கொள்ளப்படுமானால், என்னையும் என் அடியவனாகிய வெள்ளிக்கிழமையையும் அதில் ஏற்றிப் பயணக்கூலி வாங்காமல் இங்கிலாந்திற் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும்." என்றேன்.

சிறிதாவது முறை தவறுதல் இல்லாத இந்தக் கட்டுப்பாடுகளுக்குத் தான் உடன்படுவதாக மாலுமி கூறினான். மேலும் தான் பிழைத்திருக்கிறவரையில் தன்னை இறப்புத் துன்பத்தினின்று தப்புவித்துக் காத்த என்னைத் தன் உயிருள்ளவளவும் போற்றுவதாயும் தெரிவித்தான்: அறிவும் ஆராய்ச்சியும் உள்ள ஒருவன் நெஞ்சில் தோன்றும் வகை எத்தனை உண்டோ அத்தனை வகையாலும் உறுதிமொழி கூறினான்.

### சிறையாளருக்குத் துப்பாக்கி கொடுத்தல்

பின்பு நான், "நல்லது, இதோ குண்டு மருந்துடன் உங்களுக்கு மூன்று பெருந்துப்பாக்கிகள் கொடுக்கிறேன்.

இனி என்ன செய்யவேண்டும்? உமது கருத்தைக் கூறும்" என்று கேட்டேன். நான் செய்யும் நன்றியை என்றும் மறவாமல் உள்ளத்தில் வைத்திருப்பதாகவும், என் சொல்லையே கேட்டுத் தவறாமல் நடப்பதாகவும் அதுவே தன் விருப்பம் என்றும் மாலுமி கூறினான். "பொறுத்து இருந்து சூழ்ச்சி செய்வதற்கு இது நேரம் அன்று. எழுந்திருக்கு முன் அவர்களைச் சுட்டு வீழ்த்துவதே நன்று. முதல் முறை பொழியும் குண்டு மழைக்கு அவர்களில் எவராவது தப்பிப்பிழைத்து நமக்கு அடங்கி நடக்க உடன்பட்டால், அப்புறம் அவருக்கு ஒன்றும் செய்யாமல் விட்டு விடுவோம். அவர்கள் குண்டுபட்டு இறப்பதும், பிழைப்பதும் திருவுள்ளத்தின் வண்ணம் நடைபெறவேண்டும்" என்று என் கருத்தைத் தெரிவித்தேன்.

என் சொற் கேட்ட மாலுமி பின்வருமாறு கூறினான். "அவர்களைக் கூடியவரையிற் பிழைத்திருக்கச் செய்யவேண்டும். கொல்வதற்கு என் மனம் உடன்படவில்லை. அவர்களில் இருவர் கொடிய பாவிகள். அவர்களாலேதான் மரக்கலத்திற் கலகம் உண்டாயிற்று. அவர்களைத் தப்பவிடுவோமானால் நமது துன்ப நிலை நீங்கவே நீங்காது. அவர்கள் மரக்கலத்திற்போய், அங்கிருக்கும் எல்லோரையும் அழைத்துக்கொண்டு வந்து நம் எல்லோரையும் அழித்துவிடுவார்கள்." என்று மிகுந்த பணிவோடு கூறினான் அப்படியானால் நான் சொன்னபடி செய்வது முறைதானே. செய்தாலன்றி நமக்குப் பிழைத்திருக்க வகை இல்லை." என்றேன். ஆனாலும், அவர்களைக் கொன்று குருதி சிந்துவதற்கு மாலுமி சற்றுத் தயங்கினான்; பின்னும் பலவாறு நினைத்து மறுகினான். அதனைக் கண்டு நான், "இனி உங்கள் பாடு; நீங்களே போய் உங்களுக்கு விருப்பமானபடி நடவுங்கள்" என்று சொன்னேன்.

நாங்கள் இருவரும் உரையாடிக் கொண்டிருந்த பொழுது, காட்டில் தூங்கிக்கொண்டிருந்த கொடியவரிற் சிலர் எழுந்திருக்கும் ஒலி கேட்டது. சிறிது நேரத்தில் இருவர் எழுந்து நின்றது கண்டோம். "அவ்விருவரில்

எவனாவது நீர் குறிப்பித்த கலகத்தலைவரில் ஒருவனா" என்று நான் கேட்டதற்கு மாலுமி; "இல்லை" என்றான். "நன்று, இனி நினைத்துப் பார்க்கவேண்டியது இல்லை; இவர்களைத் தப்பித்துக்கொள்ள விடும்; இவ்விருவரும் உரிய நேரத்தில் எழுந்திருந்ததனால், திருவுள்ளத்திற்கும் அதுவே விருப்பம் எனத் தோன்றுகிறது. எஞ்சியுள்ள கொடியவரும் தப்ப விடுவீரானால் அஃது உமது குற்றமே ஆகும்" என்று மொழிந்தேன்.

### கடலோடிகளுடன் போர் புரிதல்

என்னுடைய சொல்லைக் கேட்டு, ஊக்கம் கொண்டு மாலுமியும் கூட்டாளிகள் இருவரும் ஆளுக்கு ஒரு துப்பாக்கி எடுத்துக்கொண்டு, காட்டிற் புகுந்தார்கள். மாலுமி இடுப்புப்பட்டையில் கைத்துப்பாக்கியும் ஒன்று செருகிக் கொண்டு சென்றான். கூட்டாளிகள் இருவரும் முன் சென்று சற்றே ஓசைப்படுத்திவிட்டார்கள். விழித்திருந்த கடலோடிகளில் ஒருவன் அந்த ஒலி கேட்ட உடனே திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்து, அவர்கள் நெருங்கி வருவது கண்டு தூங்கிக்கொண்டிருந்தவர்கள் விழிக்கும்படி கூவியும் பயனில்லை. காலம் கடந்து போய்விட்டது. கூவின உடனே மாலுமியின் கூட்டாளிகள் இருவரும் வெடி தீர்த்தார்கள். மாலுமி முன்னறிவோடு தன் துப்பாக்கியை வெடி தீர்க்காமல் வைத்திருந்தான். மாலுமியின் கூட்டாளிகள் கலகத் தலைவர் இருவரையும் நோக்கமாய் வைத்துக் குறி தப்பாமல் வெடி தீர்த்ததனால், ஒருவன் உடனே பிணமாக விழுந்தான். மற்றவன் உயிரிழப்புக்கு ஈடாகப் புண்பட்டு வீழ்ந்தான். உயிர்போகாததனால், அவன் திடீர் என எழுந்து நின்று தனக்கு உதவி செய்யும்படி மற்றவர்களை ஆவலுடன் கூப்பிட்டான். மாலுமி அவனை நெருங்கிச்சென்று, "உதவி செய்யும்படி ஓலம் இடுவதற்கு நேரம் கடந்துவிட்டது. நீ செய்த நம்பிக்கைக் கேட்டுக்கும் கொடுமைகளுக்கும் மன்னிப்பு அளிக்கவேண்டும் என்று கடவுளை வேண்டிக்கொள்ளவேண்டும்" என்று கூறித் துப்பாக்கியின் அடிக்கட்டையால் அவனை அடித்து வீழ்த்தினான். அப்

புறம் அவனுக்குப் பேச்சு மூச்சு இல்லை. அக் கொடியவர் கூட்டத்தில் மேலும் மூன்று பேர் எஞ்சியிருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்குச் சிறிது அளவு காயம்பட்டது. இதற்குள்ளே நானும் அவ்விடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். திடீர் என்று ஏற்பட்ட இக்கட்டான நிலையைக் கண்டு, இனி வணங்காமல் எதிர்த்து நிற்பது வீண் வேலை என்றறிந்து, தங்கள்மீது இரக்கம் காட்டவேண்டும் என்று அவர்கள் கெஞ்சிக் கேட்டார்கள். அப்பொழுது மாலுமி, "நீங்கள் செய்த நம்பிக்கைக் கேட்டை நினைத்து வருந்தியும், இனிக் கனவிலும் இத்தகைய கெடுதிகளை நினைப்பது இல்லையென்றும், கப்பலை மற்றக் கடலோடிகள் இடத்தில் நின்று கைக்கொண்டு, முன்பு பயணப்பட்டு வந்த ஜமேக்கா துறைக்குத் திருப்பிக்கொண்டு போய்ச் சேர்ப்பதில் உண்மையாய் உதவுவீர்கள் என்றும், உறுதிமொழி அளிப்பீர்களானால், உங்களைத் தப்பிப்பிழைக்க விடுவேன்." என வற்புறுத்திக் கூறினான்.

அவர்கள் இனித் தங்கள் நெஞ்சில் வஞ்சனை இல்லை என்பதை ஐயம் திரிபு அற மெய்ப்பிப்பதற்குப் பலவாறு உறுதிமொழிகள் கூறினார்கள். அவர்களுடைய சொற்களைக் கேட்டு, மாலுமி நம்பி அவர்களைக் கொல்லாமல் விடக் கருதினான். அவர் கருத்துக்கு உடன்படாதிருக்க என்னால் இயலவில்லை. ஆனாலும், அத்தீவில் இருக்கிற வரையில் அவர்கள் கைகளையும் கால்களையும் கட்டுவித்தேன்.

இது நடக்கும் நேரத்தில் ஓடத்தைக் கட்டி, தண்டுகளையும் பாயையும் எடுத்து வரும்படி நான் அனுப்பிய வெள்ளிக்கிழமையும், துணை மாலுமியும் கடற்கரைக்குச் சென்று, எனது சொற்படி எடுத்துக்கொண்டு வந்தார்கள். பகைவர் கூட்டத்திலிருந்து மூவர் மற்றவர்களை விட்டுப் பிரிந்து காட்டில் திரிந்து, துப்பாக்கி வெடி அதிர்ச்சி கேட்டுச் சற்று நாழிகை சென்று வந்தார்கள். கூட்டாளிகளை விட்டு விலகியிருந்தது அவர்களுடைய நற்காலந்தான். முன்பு தாங்கள் சிறைப்பிடித்திருந்த மாலுமி இப்பொழுது

தங்கள் வெற்றித் தலைவராய் இருக்கக்கண்டு அவர்கள் கட்டுப்பட்டு வழிக்கு வந்தார்கள். அவர்களுடைய கைகால்களையும் கட்டி வைத்தோம். ஆகவே, நாங்கள் முழு வெற்றி அடைந்தோம்.

### மாலுமியுடன் உரையாடுதல்

பின்பு மாலுமியும் நானும் மனம் கலந்து, அவரவர் வரலாறுகளை வெளியிட விரும்பினோம். முதலில் நான் எனது வாழ்க்கை வரலாற்றை முதலில் இருந்து முடிவுவரை கூறினேன். அவன் அதைக் கருத்தாய்க் கேட்டு, வியப்புக் கொண்டான். முதன்மையாய் உணவுப் பொருள்களும், துப்பாக்கி குண்டு மருந்து முதலிய படைக் கலங்களும் வியக்கத்தக்கவாறு எனக்குக் கிடைத்ததைப்பற்றி எண்ணி, அவன் மிகவும் மகிழ்ந்தான். என்னுடைய வரலாறு முழுவதும் வியப்பு நிறைந்தது தானே. அதைக் கேட்டு அவன் மனம் நெகிழ்ந்து உருகியது. பிறகு அவன் தனக்கு வந்த துன்பங்களையும் திருவருளால் இப்பாழ்ந் தீவில் பாதுகாக்கப்பட்டிருந்த என் வழியாகத்தான் இறப்பினின்று தப்பிப் பிழைத்ததையும் சொன்னான். இந்த வியத்தகு நிலையை நினைத்து நினைத்து அவன் விட்ட கண்ணீர் வெள்ளம் அவன் முகத்திற் பெருகிற்று. அதன் பிறகு ஏதும் சொல்வதற்கு அவனுக்கு நா எழவில்லை.

### விருந்தாளிகள் வீட்டுக்கு வந்தனர்

இந்த உரையாடல் முடிந்த பின், நான் அவனையும், கூட்டாளிகள் இருவரையும் எனது மலை வீட்டிற்கு அதன் உச்சி வழியாய் அழைத்துக்கொண்டுபோய், அங்கிருந்த உணவுப் பொருள்களைக் கொடுத்துப் பசியாற்றிய பின், அத்தீவில் நான் நெடுங்கால வரையில் இருக்கும்பொழுது என் அறிவுகொண்டு செய்த எல்லா வேலைப்பாடுகளையும் காண்பித்தேன்.

கண்டன எல்லாம் அவர்கட்கு வியப்பாகவும், கேட்டன எல்லாம் புதுமையாகவும் இருந்தன. முதன்மையாய்

மாலுமி எனது விந்தையான கோட்டை கொத்தளங்களை யும், தோப்பின் இடையில் எவர்க்கும் அச்சம் இன்றி நான் வீற்றிருந்ததைப்பற்றியும் எண்ணி மிகவும் வியப்புக் கொண்டான். மரங்கள் இங்கிலாந்தைக் காட்டிலும் இத் தீவில் மிக விரைவில் வளர்வது இயற்கை. எனது தோப்பு வர வர அடர்ந்து படர்ந்து, சிறு காடுபோல ஆயிற்று. அதற்குள் செல்லுவதற்கு ஒடுக்கமான சுற்று வழி ஒன்று வைத்திருந்தேன். அந்த வழி ஒன்று தவிர, அக்காட்டிற் குள் போக வேறு வழி இல்லை. மலைக்கோட்டையை மாலு மிக்குக் காண்பித்து, "இஃது எனது மாளிகை. என் இருப் பிடம்; அரசரிற் பெரும்பாலோருக்கு நாட்டுப் பகுதிகளிலும் சிறந்த மாட கூடங்கள் இருப்பது வழக்கம் அல்லவா? அவ்வண்ணம் இத்தீவின் இடையில் எனக்கும் ஒரு சிறந்த மாளிகை உண்டு. வேளா வேளைகளில் நான் அவ்விடத் திற்குப் போய்த் தங்குவேன். அதையும் உமக்குப் பின் ஒரு வேளையிற் காண்பிப்பேன். இது நிற்க, கப்பலைக் கைக் கொள்ளும் வகையைக் குறித்து ஆராய்வது அல்லவா இப்பொழுது நாம் செய்ய வேண்டுவது?" என்றேன்.

**கப்பலைக் கைப்பற்ற எண்ணுதல்**

மாலுமி "உண்மைதான்" என்று ஒத்துக்கொண்டு அதற்கு என்ன வழி செய்யலாம் என்று எனக்குச் சிறிதும் தோன்றவில்லை. இன்னும் இருபத்தாறு பேர் உருவில் இருக்கிறார்கள். அவர்கள் பந்துக் கட்டாய்ச் சேர்த்து என்னைக் கொல்வதற்குத் தீயசூழ்ச்சி செய்தவர்கள். நாட்டு விதி முறைப்படி அவர்கள் உயிர்த் தண்டனைக்கு உரிய வர்கள். இனி அவர்கள் தம் உயிரைப் பொருள் செய் யாமல், கன்னெஞ்சு உடையவர்களாய்க் கொண்டது கை விடார்கள். அகப்பட்டுக்கொண்டால் இங்கிலாந்திலாவது ஆங்கிலேயர் குடியேறிய எந்த நிலப் பகுதியிலாவது சேர்ந்தவுடன் தூக்குமரமே தங்கள் முடிவு என்று அவர் கள் அறிந்திருக்கின்றமையால், கொண்ட கருத்தை விட்டு விடாமல் நிறைவேற்ற வகை செய்வார்கள். நாம் மூன்று அல்லது நான்கு பேர் மட்டும் அத்தனை பேரோடு எதிர்க்

கவும், அவர்களைக் கீழ்ப்படுத்தவும் முடியாதே" எனக் கூறினன்.

அவன் கூறியதைச் சிறிதுநேரம் ஆழ்ந்து நினைத்து அதுமுறையான முடிவு என்று கண்டு, இனி அக்கடலோடிகள் இக்கரையில் இறங்கி எங்களைக் கொல்லாதிருக்கவும், குழிவெட்டி அதற்குள் பெரிய யானையை வீழ்த்தித் தன் வயப்படுத்துவதுபோல, நாங்கள் அவர்களை அகப்படுத்திக் கொள்ளவும், தகுதியான சூழ்ச்சி ஏதாயினும் காலம் தாழ்க்காமல் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தேன். இப்படி முடிவு செய்திருக்கும்போது, ஓடம் ஏறிக்கரைக்கு வந்த கூட்டாளிகள் கப்பலுக்குத் திரும்பி வராததைக் குறித்து அவர்கள் கவலையடைந்து, மிக்க விரைவில் அவர்களைத் தேடி, ஐயமின்றி மற்றோர் ஓடத்தில் படைக்கலத்துடன் கரைக்கு வருவார்கள் என்றும், நாம் அவர்களோடு எதிர்க்கும் வல்லமையுடையவர்கள் அல்லர் என்றும் என் உள்ளத்தில் தோன்றிய எண்ணத்தை நான் மாலுமிக்குக் கூறினேன். அவனும் சரி என்று ஒத்துக்கொண்டான்.

**ஓடத்தில் உள்ள பொருள்களை எடுத்தல்**

அதன்பிறகு "கடற்கரையில் நிற்கின்ற ஓடத்தைக் கடலோடிகள் வந்து, ஒருவேளைகொண்டு போனாலும் போவார்கள்; ஆதலால், அதில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, ஓடத்தின் அடியில் பெரிய துளை ஒன்று உண்டாக்கி விடுவோமானால், அப்புறம் ஓடம் அவர்களுக்கு உதவாது. அடியில் துளையுள்ள ஓடம் கடலில் மிதவாதே" என்று நான் சொல்ல எல்லாரும் போய் ஓடத்தில் ஏறி அங்கிருந்த படைக்கலம் முதலிய எல்லாப் பொருள்களையும் இறக்கிக்கரை சேர்த்தோம். நாங்கள் எடுத்தவைகள் ஒரு புட்டி பிராந்தி, ஒரு புட்டி ரம் சாராயம்; ரொட்டிகள் சில; வெடி மருந்துக் கொம்பு ஒன்று; இரட்டுத் துணி உறையிட்ட பெரிய சர்க்கரைக் கட்டி ஒன்று; இந்தச் சர்க்கரை ஐந்து ஆறு இராத்தல் எடை இருக்கும்; இவைகள் எல்லாம் எனக்கு

உதவின. முதன்மையாய்ப் பிராந்தியும், சர்க்கரையும் கிடைத்ததுபற்றிப் பெருமகிழ்வு கொண்டேன். சென்றபல ஆண்டுகளாக இவ்விரண்டும் என்னிடத்திற் சிறிதும் இல்லை.

## ஓடத்திற்குத் துளையிட்டது ஏன்?

ஓடத்தின் பாய்மரம், பாய், சுக்கான் இவைகளை எடுத்துக் கொண்டதாக முன்பு கூறினேன். மேற்கூறிய பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டுபோய்க் கரை சேர்த்தபின், ஓடத்தின் அடியில் பெருந்துளை ஒன்று உண்டாக்கினோம். கடலோடிகள் திரளாய்ச் சேர்ந்து வந்து எங்களைக் கீழ்ப்படுத்தினும், இனி ஓடத்தைக்கொண்டு போக முடியாது என்பது உறுதி. மரக்கலத்தைக் கடலோடிகள் இடத்தினின்று கைக்கொள்வதற்கு நாங்கள் திறமையுடையவர்களாக வேண்டும் என்பதைப்பற்றி நான் அதிகமாய் நினைக்கவில்லை. கடலோடிகள் ஓடத்தை இங்கு விட்டுப் போவார்களானால், நாங்கள் எளிதாக அதன் துளையை அடைத்துக் காற்றுக்கு நேர்முகமாய் இருக்கின்ற தீவுகளுக்கு அதில் ஏறிப் போகலாம் என்று எண்ணினேன். போகும் வழியில் எங்கள் விருப்பத்துக்குரிய நண்பராகிய ஸ்பானியரைக் கண்டு பேசவும் வேண்டும் என்பது எனது முதன்மையான எண்ணமாய் இருந்தது. நான் ஸ்பானியரை மறந்து விடவில்லை.

# பதினெட்டாம் அதிகாரம்

### மரக்கலத்தில் கொடி ஏற்றப்பட்டது ஏன்?

மேலே வெளியிட்ட எங்கள் கருத்துப்படி செய் வதற்கு முயன்று, முதலில் யாவரும் ஒன்ருய்ச் சேர்ந்து, ஓடத்தைத் தள்ளிக் கரையேற்றிப் பெருக்கு வேளையில் அது மிதந்து ஓடாவண்ணம் நீர் ஏறுமிடத்திற்கு அப் புறத்தில் விட்டு, எளிதில் அடைக்க இயலாத பெருந் துளை யாய் அதன் அடியில் துளைத்த பின், நாங்கள் உட்கார்ந்து, இனி என்ன வழி செய்யத் தகும் என்று எண்ணிக்கொண் டிருக்கும்போது, கப்பலில் ஒரு பீரங்கி வெடி ஒலி கேட்டது. அன்றியும், ஓடத்தை வரவழைக்கும் குறியாகிய கொடி பாய் மரத்தில் ஏற்றப்பட்டது கண்டோம். ஓடம் நின்ற இடத்தைவிட்டுப் பெயராததனுல், கடலோடிகள் பின்னும் பலமுறை வெடி தீர்த்து, வேறு அடையாளங்களால் ஓடத் தைத் திருப்பி வரும்படி குறிப்பித்தார்கள்.

### மறுபடியும் ஓர் ஓடம் வந்தது

எவ்வகை அடையாளங்கள் ஏற்றியும், எத்தனை வெடி கள் வெடித்தும் அவை வீணாயின. ஓடம் நின்ற விடம் விட்டுப் பெயர்ந்து திரும்பி வாராதது கண்டு, அவர்கள் கப்பலில் இருந்த மற்றோர் ஓடத்தைக் கடலில் இறக்கிக் கரைக்கு நேர்முகமாய்த் தண்டு வலித்துச் செலுத்திக் கொண்டு வந்தார்கள். இதை நாங்கள் தொலைநோக்காடி யாற் பார்த்தோம். நெருங்கி வருகையில், ஓடத்தில் வெடிக் கருவிகள் வைத்துக்கொண்டு, பத்துப்பேர் இருந்தது கண்டோம்.

கரைக்கு ஏறத்தாழ ஆறு கல் தொலைவில் கப்பல் நின்றதனுல், கடலோடிகள் ஓடம் செலுத்திக்கொண்டு வந்தபோது, அவர்கள் அச்சு அடையாளம், முகம்

எல்லாம் எங்களுக்கு நன்ருகத் தெரிந்தன. அவர்கள் ஓடம் இவ்வோடம் நின்ற இடத்திற்கு எதிர்முகமாய் வராமல் நீர்ப்பெருக்கால் சற்றுக்கிழக்கே தள்ளுண்டு அடைந்ததனுல், முன்பு இவ்வோடம் சேர்ந்த இடத்தில் வருவதற்காக, அவர்கள் கரை ஒதுக்கில் அதைச் செலுத் திக்கொண்டு வந்தார்கள்.

### ஓடத்தில் வருபவர் யாவர்?

இவ்வாறு அவர்கள் வந்ததனுல் அவர்கள் அடை யாளம் எங்கள் கண்ணுக்கு நன்ருய்த் தெரிந்தது. ஓடத் தில் வரும் கடலோடிகள் இன்னின்ஞர் என்றும், அவர் கள் தன்மைகள் இன்னின்னவை என்றும், மாலுமி திட்ட மாய்க் கண்டு அறிந்து "வருபவர்களில் மூன்று பேர் குற்றமில்லாதவர்கள்" அவர்களை மற்றவர்கள் வலுவுள்ள வர்களாகி அச்சுறுத்தித், தங்கள் தீய சூழ்ச்சிகளுக்கு ஒத்துவரும்படி செய்தனர். அஃதன்றி அவர்கள் தாமே உடன்பட்டவர்கள் அல்லர். மற்ற ஏழு பேரில் ஒருவன் மரக்கலப் பொருள்களை மேற்பார்வை இடும் முதன்மை யான அதிகாரி. அவனும் மற்ற ஆறுபேரும் மற்றக் கட லோடிகளைப்போல கலகம் மூட்டி நடத்திய கொடியவர்கள் தாம். அவர்கள் துணிந்து தொடங்கிய இந்தப் புதிய முயற்சியை என்ன கெடுதிவரினும் கைவிடுவதில்லை என்று உறுதிகொண்டுள்ள தீயோர் என்பதில் ஐயம் ஒன்றும் இல்லை. இந்தக் கொடியோரை வெல்வதற்கு நம்முடைய வலிமை போதாது என்று மிகவும் அஞ்சுகின்றேன்" என மொழிந்தான்.

### வருபவர்களை என்ன செய்வது?

மாலுமியின் கூற்றினைக் கேட்டு, முறுவல் செய்து, நான் "ஐயா மாலுமியே, முற்றும் நனைந்தவர்களுக்கு ஈரம் ஏது?" பெருந்துன்பங்களை அடைந்து அவற்றில் அழுந்தி யிருக்கும் நமக்கு அச்சம் ஏது? எவ்வித நிலைமையினும் நம்முடைய நிலைமை இழிந்தது ஆதலால், இனி நாம் இறந் தால் என்ன? பிழைத்திருப்பினும் என்ன? இரண்டும்

ஒன்றுதான். இருவிதத்தாலும் நம்முடைய இடர் நீங்கும். என்னுடைய உயிரைக் குறித்து என்ன நினைக்கின்றீர்? அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்குத் துணிவு கொண்டு, முயல்வது நன்று? அன்று? உமது உயிரைக் காக்கும்பொருட்டு நான் இவ்விடத்திற் பாதுகாக்கப்பட்டிருந்ததாக நீர் உறுதியாய் நம்பிச் சற்று நேரத்துக்கு முன் உள்ளக் கிளர்ச்சி கொண்டீரே. அந்த நம்பிக்கை எங்கே? என்மட்டில் இனி நேரப் போவதைக் குறித்து நினைக்குமிடத்து, ஒன்றுமட்டும் தவறி யிருப்பதாகத் தெரிகின்றது" என்று சொன்னேன். அஃது என்ன தவறு?' என மாலுமி கேட்டான். நான், "தவறு இதுதான். கடலோடிகளில் மூன்று நான்கு பெயர் ஒழுங்குடையவர்கள் என்றும், அவர்கள் உயிரைத் தப்புவிக்க வேண்டும் என்றும் கூறினீரே. இதுதான் என் கருத்தை நிறைவேற்றத் தடையாய் இருக்கும் தவறு. அவர்கள் எல்லாரும் கலகம் செய்த கொடியோராகிய கடலோடிகள் வகுப்பிற் சேர்ந்தவர்களானல், கடவுள்தாமே அவர்களை உம்மிடம் ஒப்புவிக்கும்படி ஒன்ருகச் சேர்த்து அனுப்பியதாக நினைத்துக்கொள்வேன். இஃது ஒன்றுமட்டும் உண்மை. இக்கரையில் வந்து இறங்கும் ஒவ்வொரு மனிதனும் நம்மிடம் அடிமையாவான். அதன் பிறகு அவர்கள் நடக்கையைக் கண்டு, அவர்களைக் கொல்லினும் கொல்வோம். அன்றிப் பிழைத்திருக்கவிடினும் விடுவோம்" என்றேன்.

**பழைய சிறையாளரைக் காவலில் வைத்தல்**

நான் இக்கருத்துக்களை முகம் மலர்ந்து உரக்கச் சொன்னபொழுது, மாலுமிக்குச் சோர்வு நீங்கித் துணிவு உண்டாயிற்று. அதுகண்டு மனக்கிளர்ச்சியுடன் நாங்கள் செயலிற் கண்ணுயிருந்தோம். கப்பலின் நின்று ஓடம் வருவதை நாங்கள் முதலிற் கண்டவுடன், எங்கள் சிறையாளரை வெவ்வேறு இடங்களுக்குப் பிரித்து அனுப்பி வலிவான காவலில் வைத்தோம்.

பழைய சிறையாளரில் இரண்டு பெயரைக்குறித்து, மாலுமிக்குச் சற்று ஐயம் உண்டாகி யிருந்ததனல், அவர்

களையும் விடுதலை பெற்ற மூவரில் ஒருவனையும் வெள்ளிக் கிழமையுடனே எனது முழைக்கு அனுப்பினேன். முழை கூப்பிடு தொலைவுக்கு அப்புறம் இருந்ததனால், அவர்கள் அங்கிருந்து பேசுவது கேட்கவும் மாட்டாது. அவர்கள் அங்கிருப்பதை எவரும் காணவும் மாட்டார்கள். முழை யினின்று சூழ்ச்சி செய்து வெளியிற் புறப்படுவார்களானால் காட்டில் வழிகண்டு பிடித்து அவர்கள் வரவும் மாட்டார்கள். முழையில் அவ் விருவரையும் கட்டுண்டபடி இருக்கச் செய்து, அவர்களுக்கு உணவுப் பொருள்கள் கொடுத்து வைப்போம். கட்டுப்பாடு மீறாமல் அடங்கி யிருப் பார்களானால், அவர்களை இரண்டொரு நாளில் கட்டுப்பாடு இன்றி உரிமையோடு இருக்க விடுவோம். யாருக்கும் தெரி யாமல் ஒளித்து ஓட வகை செய்வார்களானால், இரக்கம் இன்றி அவர்களைக் கொன்று விடுவோம் என வற்புறுத்திக் கூறினோம். இதைக் கேட்ட சிறையாளர் தங்கள் சிறை யிருப்பை மனம் பதைக்காமல் பொறுமையாய்த் தாங்கிக் கொள்வதாகவும், தங்களுக்கு உணவுப் பொருள் கொடுத்து, இரவில் விளக்கு ஏற்றுவித்துத் தங்களை விருப்பத்தோடு ஆதரிக்கும் உதவியைத் தாங்கள் மறக்கமாட்டோம் என் றும் வணக்கத்தோடு கூறினார்கள். அவர்கள் இருட்டி லிருந்து துன்பப் படாதிருப்பதற்காக வெள்ளிக்கிழமை நாங்கள் உண்டாக்கின மெழுகு வர்த்திகளிற் சிலவற்றை அவர்களுக்கு விளக்கேற்றக் கொடுத்தான். வெள்ளிக் கிழமை அம் முழை வாயிலில் தங்களைக் காவல் செய்து கொண்டு நின்றான் என்றே அவர்கள் எண்ணியிருந் தார்கள்.

## வரும் பகைவரை வெல்ல முடியுமா?

மற்றச் சிறையாளருக்கு இவ்விதக் கட்டுப்பாடு இல்லை. இருவரை மாலுமி முழுவதும் நம்பவில்லை என்று கூறியதனால், அவர்கள் பின்கட்டு மாறாய்க் கட்டப்பட்டிருந் தது உண்மைதான். மற்ற இருவரும் ஒழுங்கானவர்கள் என்று மாலுமி பாராட்டிக் கூறினான். அன்றியும் அவர்கள் தாங்கள் சாகும் வரையிலும் எங்களை விட்டுப் பிரிவது

இல்லை என்று அன்புடனும் அச்சத்துடனும் உறுதி மொழி கூறினார்கள். ஆதலினால் அவர்களை நான் என்னுடைய பணியாளராகச் சேர்த்துக் கொண்டேன். ஆகவே, அவர்களும் ஒழுங்கானவராகிய மூன்று பேரும் நாங்கள் இருவரும் சேர்ந்து எழுவர் ஆனோம். எங்கள் எழுவரிடத்தும் படைக்கலங்கள் இருந்தன. ஓடத்தில் வரும் கடலோடிகள் பதின்மரிலும், மூன்று நான்கு பேர் குற்றம் இல்லாதவர்கள் என்று மாலுமி கூறியதை எண்ணி, எவ்விதத்திலாயினும் நாங்கள் அவர்களை வென்று அடிமைப்படுத்த முடியும் என்று உறுதியாய் நம்பியிருந்தோம்.

### ஓடத்தில் வந்தவர் செய்த வேலைகள்

முன்பு வந்த ஓடம் நின்ற விடத்தில் அவர்கள் வந்து சேர்ந்தவுடன், தங்கள் ஓடத்தைக் கரைசேர நிறுத்தி, எல்லோரும் இறங்கி ஓடத்தை இழுத்துக் கரையேற்றியது கண்டு மகிழ்ச்சியடைந்தேன். அவர்கள் ஓடத்தைக் கரைக்குச் சற்றுத் தொலைவில் நிறுத்தி நங்கூரம் இட்டு, அதைக் காத்துக் கொண்டிருக்கும்படி ஆள் வைத்து வருவார்களானால்,நாங்கள் அதைக் கைப்பற்றிக் கொள்வதற்கு இயலாது என்று எனக்குண்டாகியிருந்த ஐயம் இப்பொழுது நீங்கிற்று.

கரையேறின உடனே அவர்கள் அனைவரும் மற்ற ஓடம் நின்ற விடத்திற்கு விரைந்து ஓடி, அதிலிருந்த துணைப்பொருள்கள் ஒன்றும் இல்லாமல் அது வெற்றோடமாய் இருந்ததையும், அதன் அடியில் பெருந்துளை துளைக்கப்பட்டிருந்ததையும், கண்டு பெரிதும் மனம் கலங்கி வியப்புக் கொண்டு நின்றார்கள். அவர்களுக்கு இதைக்கண்டு வியப்பு உண்டாவது இயல்புதான்.

சற்றுநேரம் அவர்கள் இதைக் குறித்து ஆழ்ந்த சிந்தையில் மூழ்கி, அதன்பிறகு தங்கள் கூட்டாளிகள் ஒலி கேட்டு வருவார்கள் என்று இரண்டு மூன்று முறை தங்களால் ஆனமட்டும் குரல் எழுப்பி உரத்த ஒலியோடு கூவினார்கள். அவ்வாறு கூவியும் பயன் ஒன்றும் இல்லை

பின்பு அவர்கள் நெருங்கி வட்டவடிவமாய் நின்று எல்லோரும் ஒரே நேரத்தில் வெடிதீர்த்தார்கள். வெடி அதிர்ச்சி எங்களுக்குக் கேட்டது. அதன் எதிர் ஒலியால் காட்டுமரம் செடி கொடி முழுவதும் அதிர்ந்து இரைந்தன. என்ன முயற்சி செய்தாலும், செயல் முடிவு ஒன்றுதான். பயன் ஒன்றும் இல்லை. முழையில் இருந்தவர்களுக்கு வெடி அதிர்ச்சி கேட்காது. எங்களிடம் இருந்தவர்களுக்கு நன்றாய்க் கேட்டது. ஆயினும் அவர்கள் வாய் திறக்கவும் துணியவில்லை.

இதனால் அவர்களுக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று. அவர்கள் மீண்டும் ஓடத்தில் ஏறிக் கப்பலுக்குச் சென்று, முன்பு ஓடத்திற் போய்க் கரையிற் சேர்ந்த கடலோடிகள் அழிக்கப்பட்டார்கள் என்றும், அந்தப் பெரிய ஓடத்தின் அடியில் துளை இடப்பட்டது என்றும் அங்கிருந்தவர்களுக்குத் தெரிவிக்க நினைத்தார்கள். இதனைப் பிறகு அவர்கள் தாமே சொல்லக்கேட்டோம். மேற்கூறியவாறே அவர்கள் காலம் தாழ்க்காமல் ஓடத்தைத் தள்ளிக் கடலில் இறக்கி எல்லோரும் ஏறினார்கள்.

கூட்டாளிகள் இறந்து போனார்கள் என்று எண்ணி, அவர்கள் மீண்டும் கப்பலிற் போய்ச் சேர்ந்து பாய் தூக்கிப் பிரயாணப் படுவார்கள் என்றும், கைக் கொள்ள முடியும் என நம்பியிருந்த கப்பல் கை தப்பிப் போகுமென்றும் நினைத்து மாலுமி மிகவும் ஏமாந்து தடுமாறித் திகைத்து நின்றான். ஆனாலும், அவர்கள் ஓடம் ஏறிப் போவதைக் குறித்து உண்டான திகைப்பும், தடுமாற்றமும் அதிக விரைவில் ஒழிந்து போக, அவர்கள் மீண்டும் கரையேறியது கண்டு மாலுமிக்குப் பின்னும் அவ்வளவு அச்சம் உண்டாயிற்று.

அவர்கள் ஓடம் ஏறிப் போய்ச் சிறிது நேரம் சென்றபின், மீண்டும் எல்லோரும் அதைவிட்டு இறங்கிக் கரையில் வருவது கண்டோம். ஓடம் ஏறியபின், அவர்கள் நீண்டநேரம் நினைத்துப் பார்த்துப் பின்பு ஓடத்தில் மூன்று

பேரை இருக்கச்செய்து, மற்றவர்கள் கரையேறித் தங்கள் கூட்டாளிகளைத் தீவில் எங்கும் தேடிப்பார்க்கும் எண்ணத் தோடு வந்தார்கள் போலும்.

நாங்கள் எண்ணியிருந்ததற்கு இது மிகவும் எதிர்ப் பாக இருந்தது. இனிச் செய்வது என்ன என்று அறியா மல் மயங்கினேம். ஓடத்தைத் தப்பவிடுவோமானல்; கரையில் இறங்கிய ஏழு பெயரை அகப்படுத்துவது எங் களுக்கு நன்மை அன்று. ஓடத்தில் இருப்பவர்கள் அதைச் செலுத்திக் கொண்டுபோய், கப்பலிற் சேர்ந்தபின், அவர்களும் அங்கிருக்கும் மற்றவர்களும் நங்கூரம் தூக்கிப் பாய் வலித்து ஓடிப் போவார்கள் என்பது உறுதி. அப் புறம் நாங்கள் கப்பலைக் கைக் கொள்ள முடியாது.

ஆயினும் இனிப் பதருமற் பொறுத்திருந்து, செய லின் முடிவைக் கண்டு, நேரத்திற் கேற்றபடி ஏதும் செய் வதே யன்றி வேறு வழியில்லை. ஏழு பேர் கரையேறிவர, ஓடத்தில் இருந்த மூன்று பேர் அதைக் கரைக்கு எட்டாத் தொலைவில் செலுத்திக்கொண்டு போய் நங்கூரம் போட்டு மற்றவர்களின் வருகையை எதிர்பார்த்துக்கொண்டு இருந் தார்கள். அதனல் நெருங்கிப் போய் ஓடத்தில் இருப்ப வர்களை அகப்படுத்துவதற்கு இயலவில்லை.

கரையில் ஏறினவர்கள் சிதருமல் நெருங்கிச் சிறுமலை யுச்சியின் பக்கத்திற்கு நேர்முகமாய் வந்தார்கள். அம்மலை யின் கீழேதான் உறைவிடம் இருந்தது. அவர்கள் வரு வதை நாங்கள் நன்ருகக் கண்டோம். அவர்கள் எங்களைக் காணமுடியாது. நாங்கள் அவர்களைச் சுட்டு வீழ்த்து வதற்கு ஏற்றபடி கிட்டி வருவார்களானல் எங்களுக்கு மகிழ்ச்சி யுண்டாகும். அல்லது நாங்கள் தடையின்றி வெளியிற் செல்வதற்கு ஏற்றபடி விலகிச் செல்வார் களானலும் நன்றே யாகும்.

சிறு மலையுச்சியின் பக்கத்தில் நின்று பார்த்தால் வட கீழ்த்திசையில் தரை மிகவும் தாழ்ந்திருக்கின்ற பள்ளமும், காடும் நெடுந் தொலைவு அளவும் தெரியும். அவர்கள்

மலைக்கு அருகிற் சேர்ந்தவுடன், தொண்டை வலிக்கும் அளவு உரத்துக் கூவினார்கள். கடற்கரைக்கு நெடுந் தொலைவில் போகவேனும், ஒருவரை விட்டு ஒருவர் பிரிய வேனும் அவர்கள் மனம் துணியவில்லை போலும். தாங்கள் செய்யவேண்டிய செயல்களைக் குறித்து ஆராய்வதற்கு ஒரு மரநிழலில் உட்கார்ந்தார்கள். முன்பு காட்டிற் புகுந்த கடலோடிகளைப் போல இவர்களும் மெய்ம்மறந்து தூங்குவார்களானால், இவர்களாலேயே எங்கள் எண்ணமும் செயலும் நிறைவேறும். இடுக்கண் நேரும் என்று மிகவும் அச்சம் கொண்டிருந்த அவர்கள் தூங்கத் துணியவில்லை. தங்களுக்கு நேரிடும் துன்பம் இன்னது என்று அறியவும் இல்லை.

## ஏழு பேரையும் பிடிப்பது எப்படி ?

ஏழு பேரும் உட்கார்ந்து சூழ்ச்சிகள் செய்வதைக் கண்ட மாலுமி என்னை நோக்கி "ஐயா, கூட்டாளிகள் வெடி யொலிகேட்டு வருவதற்காக அவர்கள் இன்னும் ஒருமுறை யாவரும் ஒன்று சேர்ந்து துப்பாக்கி வெடி தீர்ப்பார்கள். அவர்கள் வெடிமருந்து தீர்ந்தபின் விரைவாய்ப் பாய்ந்து ஓடி அவர்களை எதிர்ப்போமானால், ஐயமின்றித் தலைவணங்கி நமக்கு அடங்குவார்கள். ஆகவே, குருதி சிந்தாமல் நாம் அவர்களை அகப்படுத்திக் கொள்வோம்." எனத் தகுதியான வழியும் சூழ்ச்சியும் கூறினன். அவர்கள் மறுபடி மருந்து இட்டு நிரப்புமுன் நாங்கள் நெருங்கி நின்று விரைந்தோடி அவர்களைப் பிடித்துக் கொள்வோமானல், மாலுமி சொன்ன சூழ்ச்சி ஏற்றதாகும்.

அவன் நினைத்தபடி நடக்கவில்லை. இனிச் செய்யும் வகை இன்னது என்று முடிவு செய்யாமல் நெடுநேரமட்டும் அடங்கியிருந்தோம். இறுதியில் கதிரவன் மறைந்து இருளும் வரையில் நாம் ஒன்றும் செய்யக் கூடாது என்றும், மாலைப் பொழுது வந்த பிறகு அவர்கள் ஓடத்திற்குத் திரும்பாதிருந்தால், நாம் அவர்கள் நிற்குமிடத்திற்கும் கடற்கரைக்கும் இடையில் வழிபிடித்துப்

பேர், ஓடத்தில் இருப்பவர்களைக் கரைக்கு வரும்படி தூண்டுவதற்கு ஏதாயினும் சூழ்ச்சிகள் செய்யலாகும் என்றும், எனது கருத்தை என் கூட்டாளிகளுக்குச் சொன்னேன்.

அவர்கள் அவ்விடம் விட்டுப் பெயர்ந்து செல்லாததைக் குறித்து எங்களுக்கு மிகுந்த பதைப்பும் கவலையும் உண்டாகியிருந்தும், நெடுநேரமட்டும் பொறுத்திருந்தோம். நீண்ட நேரம் ஆராய்ந்த பின், அவர்கள் அனைவரும் எழுந்து கடற்கரைக்கு நேர்முகமாய்ப் போவது கண்டோம். அவ்விடத்தில் தமக்கு உயிரிழப்பு உண்டாகும் என்று அஞ்சித் திகைத்துக் கூட்டாளிகள் இறந்தார்கள் என்று எண்ணித் திரும்பிப்போய்க் கப்பலில் ஏறித் தாம் நினைத்த நாட்டிற்குப் பயணம்போக அவர்கள் முடிவு செய்ததாய்த் தெரிந்தது.

கரைக்கு நேர்முகமாய் அவர்கள் போவது கண்டவுடன், கூட்டாளிகளைத் தேடிப்பார்க்கத் தொடங்கிய முயற்சியை நிறுத்திவிட்டு, மரக்கலம் ஏறிப் பயணப்பட நினைத்துப் போகிறார்கள் என்று எண்ணினேன். உண்மையில் அதுவே அவர்கள் கருத்து. என் கருத்தை நான் மாலுமிக்குச் சொன்னவுடன், அவன் அப்படியாகுமானால் தனக்கு வரும் கேடுகளை நினைத்து, மனத்தளர்ச்சியடைந்தான். அவர்களைத் திரும்பவும் இங்கே வரும்படி செய்தற்குரிய சூழ்ச்சி ஒன்று அப்பொழுதே என் கருத்திற் பிறந்தது. அந்தச் சூழ்ச்சியால் என் செயல் சிறிதும் தவறாமல் நிறைவேறியது.

### ஓடத்தில் சென்ற எழுவரையும் திருப்பி அழைத்தோம்

மேற்கே உள்ள சிறிய நீரோடையைத் தாண்டி, முன்பு வெள்ளிக்கிழமை வேடரிடமிருந்து விடுதலை பெற்ற பொழுது, அவ்வேடர் இறங்கிய கரைக்கு நேரே போகவும், அரைக்கல் தொலைவில் உள்ள சிறிய மேட்டு நிலத்திற் சேர்ந்தவுடன் கூடியவரையிற் குரல் எழுப்பிக் கூவி, அந்த

ஒலி கடலோடிகள் செவியிற் பட்டது என்று அறியும் வரையிலும் அங்கே தங்கி நிற்கவும், ஒலி கேட்ட கடலோடிகள் அதற்கு மறுமொழியாய்க் கூவும் ஒலி செவியிற் கேட்டவுடனே பின்னும் ஒரு முறை கூச்சல் இடவும், அதன்மேல் கண்ணுக்கு எதிர்ப்படாமல் ஒதுங்கி நின்று, அவர்கள் ஒலியிடும் வேளை தோறும், அவர்களைத் தீவின் உள் பக்கத்தில் நெடுந் தொலைக்குச் சூழ்ச்சியாய் இழுத்துக்கொள்ளும் பொருட்டு மாற்றொலி கொடுக்கவும், அப்புறம் நான் சொல்லும் வழியாய் என்னிடத்திற்கு வளைந்து ஓடி வரவும் வேண்டும் என்று திட்டம் செய்து வெள்ளிக்கிழமையையும் துணை மாலுமியையும் அனுப்பினேன்.

கடலோடிகள் ஓடத்தில் ஏறினவுடன், வெள்ளிக்கிழமையும் துணை மாலுமியும் ஓ, ஓ என உரக்கக் கூவினார்கள். அப்பொழுதே அதைக் கேட்ட கடலோடிகள் தாமும் கூவிக்கொண்டு, ஒலி வந்த இடத்தை நோக்கி மேற்கே கடற்கரை வழியாய் விரைந்தோட, வழியில் நீரோடை எதிர்ப்பட்டது. பெருக்கு வேளையாய் இருந்ததனால், ஓடையைத் தாண்டிச் செல்ல இயலாமையால் பின்னும் கூவினார்கள். ஓடத்தைக்கொண்டு வந்து, தங்களை ஏற்றிக் கொண்டு போகும்படி அப்படிச் செய்தார்கள் என்று எண்ணினேன்.

அவர்கள் ஓடம் ஏறி, அந்த நீர்க் குடாவில் நெடுந் தூரம் சென்று, அதன் ஒரு கரை சேர்ந்தவுடன், முன்பு ஓடத்திலிருந்தவருள் ஒருவனைத் தங்களுடன் இறக்கிக் கொண்டு, மற்ற இருவரும் ஓடத்தில் இருக்கக் கடற்கரையில் உள்ள ஒரு சிறு மரத்தின் அடிக்கட்டையில் ஓடத்தைக் கட்டினது கண்டேன்.

## ஓடத்தில் இருந்த இருவரையும் பிடித்தோம்

இப்படி ஆகவேண்டும் என்றே நான் விரும்பியிருந்தேன். வெள்ளிக்கிழமையையும் துணை மாலுமியையும் அவர்கள் செயலிற் கண்ணாய் இருக்கவிட்டு மற்றவர்களை என்னுடன் அழைத்துக்கொண்டுபோய், ஓடக்காரர் கண்

னுக்குத் தெரியாதபடி நீரோடையைத் தாண்டி அவ்விரு வரையும் எதிர்பாராத வேளையில் பிடித்துக்கொண்டோம். ஒருவன் கரையிற் படுத்திருந்தான். மற்றவன் ஓடத்தில் இருந்தான். கரையிற் படுத்திருந்தவன் பாதி உறக்கமும் பாதி விழிப்புமாய் இருந்ததனால், எங்களைக் கண்டு திடீரென எழுந்து ஓட முயன்றபொழுது, எங்களுக்கு முந்திச் சென்ற மாலுமி அரியேறு போல அவன்மேற் பாய்ந்து, காலால் உதைத்து வீழ்த்தி, ஓடத்தில், இருந்தவனைப் பெயர் சொல்லி அழைத்துத், "தலைவணங்கி நிற்பாயானால் தப்புவாய், அல்லாவிடில் நீ இறந்து போவாய் என்பதை அறி" என வற்புறுத்திக் கூறினான்.

தன் கூட்டாளி காலால் உதைபட்டு விழுந்திருப்பதையும், ஆள் உதவியின்றித் தனித்திருக்கும் தன்னை ஐந்து பேர் வளைந்து அச்சுறுத்தி நிற்பதையும் கண்ணுக்கெதிரே கண்ட அந்தக் கடலோடியைத் தலைவணங்கும்படி உடன்படுத்துவதற்கு அவனுடன் வழக்காடவும் வேண்டுமா? அன்றியும் கடலோடிகளில் மூவர் நம்மோடு எதிர்த்து நிற்பதற்கு முழு மனத்தோடு உடன்படவில்லை என்று இதற்கு முன் ஓரிடத்தில் குறிக்கப்பட்டது அன்றோ? இவன் அம்மூவரில் ஒருவன். ஆதலினால் அவன் எங்களுக்கு அடங்கி நடப்பதற்குமட்டுமன்றிப் பிறகு களங்கமின்றி எங்களுடன் சேர்வதற்கும் எளிதில் உடன்பட்டான்.

இந்த நிகழ்ச்சிகள் நடந்த நேரத்தில் வெள்ளிக்கிழமையும் துணை மாலுமியும் தங்கள் செயலில் கண்ணாயிருந்து நிறைவேற்றினார்கள். அவர்கள் ஓ ஓ என்று கூவக் கூவக், கடலோடிகளும் ஒலி கேட்டுக் கூவித் தொடர்ந்ததனால், மாறி மாறி எத்தனையோ மலைகளும், காடுகளும் தாண்டி, கை கால் அயர்ந்து மனம் சலிக்கிற வரையில், அவர்களை நடுக்காட்டில் கொண்டு வந்து சேர்த்தார்கள். அவ்விடத்தினின்று கதிரவன் மறையு முன் கடலோடிகள் ஓடம் இருக்கும் கரைக்குத் திரும்பிப் போவது இயலாது என்று உண்மையாய் அறிந்து வெள்

ளிக்கிழமையும், துணை மாலுமியும் அவர்களை அங்கே நிற்க விட்டு, மிகவும் இளைப்புற்று எங்களிடத்திற்கு வந்து சேர்ந் தார்கள்.

## மற்ற ஐவரும் பட்ட துன்பங்கள்

இனிப் பொழுதுபட்டு இருளும்மட்டும் அவர்கள் கண் காணமல் காவல் செய்துகொண்டு நின்று, அப்புறம் அவர் களைத் தப்பவிடாமல் துடுக்காய்ப் பாய்ந்து அமர்த்திக் கொள்வதே ஒழிய, நாம் செய்ய வேண்டுவது மற்றுஎன்ன?'

வெள்ளிக்கிழமை என்னிடத்திற்குத் திரும்பி வந்த பின், அவர்கள் ஓடம் நின்ற இடத்திற்குப் போய்ச் சேர்வ தற்கு மிகுந்த நேரம் சென்றது. அவர்களில் முந்திச் சென்றவர்கள் ஓடக்கரைசேர நெடுநேரத்திற்கு முன் தம் மைத் தொடர்ந்தவர்களை நெருங்கி வரும்படி உரக்கக் கூவி அழைத்ததும், பிந்தினவர்கள் கால் வலித்து இளைப்புற்ற தனல், விரைந்து நடக்கத் தமக்கு இயலவில்லை என்று முறையிட்டு விடை கூறியதும் கேட்டுக் கொண்டிருந்தோம். இஃது எங்கள் செவிக்கு மங்கல மொழியாய் இருந்தது.

கடைசியில் அவர்கள் ஓடக்கரையில் வந்து சேர்ந்தார் கள். பெருகிய கடல் நீர் வற்ற, ஓடம் தரையிற் பொறுத்து நின்றதையும், ஓடக்காரர் இருவர் அங்கில்லாதிருப்பதை யும் கண்டு, அவர்கள் மனம் தடுமாறியது இவ்வளவென்று சொல்ல முயலாது. அவர்கள் பதறிப் பரிதபித்து, மந்திர சித்தியுள்ள மாயத்தீவில் வந்து அகப்பட்டுக்கொண்டோம் என்றும், அங்கே குடிகள் இருந்தால் யாவரும் அழிக்கப் படுவோம் என்றும், குடிகள் இல்லாவிடில் பேய்களாவது கண்ணுக்குத் தெரியாத காட்டுறை தெய்வங்களாவது அவ் விடத்தில் வாழும் என்றும், அவைகள் அனைவரையும் பிடித்துக்கொண்டு போய்த் தின்றுவிடும் என்றும் ஒருவ ரிடம் ஒருவர் பேசிக்கொண்ட ஒலி எங்கள் செவியிற் பட்டது.

அவர்கள் பின்னும் கூவித் தங்கள் கூட்டாளிகள் இருவரையும் அடுத்தடுத்துப் பலமுறை பெயர் சொல்லிக்

கூப்பிட்டும், ஏன் என்பார் எவரும் இல்லை. சற்று நேரம் சென்று அவர்கள் நம்பிக்கை அற்றுத் துயரம் மிஞ்சியவர் கள்போலக் கைகளைப் பிசைந்து முறுக்கிக்கொண்டு, இலக் கின்றி ஓடித்திரிவதும், திரும்பி ஓடத்திலேறி உட்கார்ந்து இளைப்பாறுவதும், பிறகு அதைவிட்டு இறங்கி உலாவித் திரிவதுமாய் இருந்தார்கள். இவற்றையெல்லாம் மாலையின் மங்கிய ஒளியிற் கண்டோம்.

என்னுடைய கூட்டாளிகள் இனித் தாமதித்து நிற்கா மல் என்னிடத்தில் விடைபெற்று, அவர்கள்மீது பாய்ந்து விழுந்து அடிக்கப் பதைத்தார்கள். ஆனாலும் கூடியவரை யில் அவர்களிற் பெரும்பாலரைக் கொல்லாமல் பிடித்துக் கொள்ள வேண்டும் என விரும்பினேன். முதன்மையாய்க் கடலோடிகள் படைக்கலம் கைக்கொண்டிருந்ததை நான் அறிவேன் ஆதலால், நெருங்கிய போரில் எங்கள் கூட்டத் தாருள் எவர் ஒருவரையும் வீணாய் மடிந்துபோக விடுவ தற்கு என் மனம் இணங்கவில்லை. அவர்கள் கூட்டம் கலைந்து சிதறும் அளவும் பொறுத்திருந்து பார்க்க முடிவு செய்தேன். ஆதலால் என் குறிக்கோள் தவறாது இருக் கும் பொருட்டு, நான் என் கூட்டாளிகளைப் பின்னும் அண் மையில் ஒளிய வைத்து, வெள்ளிக்கிழமையையும் மாலுமி யையும் குழந்தைகள் தவழ்வதுபோலக் கை கால் மடக்கிக் கடலோடிகள் காணாதபடி தரையில் ஊர்ந்து செல்லு மாறும், கூடியவரையில் நெருங்கிப் போகுமுன் சுட வேண்டாம் என்றும் திட்டம் செய்தேன்.

அவர்கள் சிறிது நேரமட்டும் ஊர்ந்து செல்லும் போது, கலகத்தலைவனும், இப்பொழுது மற்றவர்களைப் பார்க்கிலும் அதிகமாய் மனம் தளர்ந்து நொந்து சலிப்புற்ற வனாய் விளங்கியவனுமாகிய மரக்கலத்துணைப் பொருள் பாதுகாப்பு அதிகாரி கடலோடிகள் இருவருடன் மாலுமிக் கும் வெள்ளிக்கிழமைக்கும் எதிரே நடந்துபோனான். கலகக் காரரில் முதன்மையானவன் இவ்வாறு தன் கையிடத்து அகப்படுதற்கு வாய்ப்பு நேர்ந்திருப்பதைக் கண்டவுடன் மாலுமிக்கு மிகுந்த பதைப்பு உண்டாயிற்று. இலக்குத்

தவறுமற் குண்டு பாயத்தக்க அண்மையில் அவன் வரும் அளவும் மனம் பொறுக்கவில்லை. வெள்ளிக்கிழமையும் மாலுமியும் மேற்கூறிய கலகத் தலைவன் பேசிய ஒலி கேட்டனரே ஒழிய, மிக்க அண்மையில் வந்ததை இன்னும் காணவில்லை. மேலும் அதிக நெருக்கத்தில் வந்தபின், இருவரும் விரைவாய் எழுந்து நின்று அவர்களைக் குறி வைத்து வெடி தீர்த்தார்கள்.

மரக்கலத் துணைப்பொருள் பாதுகாப்பு அதிகாரியாகிய கலகத் தலைவன் நின்ற இடத்திலேயே உயிரற்று விழுந்தான். மற்றவர்களில் ஒருவன் உடலிற் குண்டுபாய்ந்தது. அவன் பக்கத்தில் விழுந்து குற்றுயிராய்க்கிடந்து, இரண்டு மணி நேரம் சென்ற பின் இறந்தான். மூன்றாவது மனிதன் உயிர் தப்பிப்பிழைக்க ஓட்டம் பிடித்தான்.

வெடி அதிர்ச்சி கேட்டவுடன், நான் என்னுடைய படைகளோடு அவ்விடத்திற்குச் சென்றேன். என் படையில் உள்ள வீரர்களின் தொகை எட்டு; யான் படைத் தலைவன்; வெள்ளிக்கிழமை உதவிப் படைத்தலைவன். மாலுமி, அவனுடன் வந்த இருவர், போரில் நாங்கள் சிறைபிடித்த மூவர் ஆகிய அறுவரும் படைவீரர்கள் பின் சொல்லப்பட்ட மூவரையும் நம்பி, அவர்களிடத்திலும் படைக்கலம் கொடுத்திருந்தோம்.

நாங்கள் மேற்கூறிய கடலோடிகள் நிற்குமிடத்தில் இருண்ட பின் பாய்ந்ததனால், எங்கள் தொகை விவரம் அவர்கள் அறியார்கள். அவர்கள் ஓடத்தில் இருக்குமாறு நிறுத்திப்போன ஒருவன் இப்பொழுது எங்கள் பக்கத்தில் சேர்ந்திருந்தான். அவனைக் கொண்டு நான் அவர்களைப் பெயர் பெயராய் அழைத்து, அவர்களுடன் உரையாடவும், அவர்கள் ஒப்பந்தத்திற்கு உடன்படுவார்களா என்று அறியவும் முயன்றேன். எங்கள் விருப்பத்தின்படி அவர்கள் உடன்படிக்கை செய்துகொள்ள ஒத்துக்கொண்டார்கள். அப்பொழுது அவர்கள் நிலைமை மிக இரங்கத்தக்கதாக இருந்ததனால், அவர்கள் கைக்கொண்ட படைக்கலங்

களை எங்களிடம் கொடுத்துவிட உடன்படுவார்கள் என்று நினைப்பது தவறு அல்லவே. படகில் சிறைப்பட்டவனாகிய இராபின்சன் ஒருவனை: "**டாம்ஸ்மித்! டாம்ஸ்மித்!**" எனப் பெயர் சொல்லிக் கூப்பிட அவன் குரற் குறிப்பு அறிந்து, "அது யார்? இராபின்சனா?" என்று கேட்டான். அப்பொழுது இவன், "ஆம், ஆம் **டாம்ஸ்மித்**, கடவுள் ஆணைப்படி சொல்லுகிறேன், உன் படைக்கலங்களைக் கைவிட்டு அடங்கி நில்; அடங்காயானால், நொடிப்பொழுதிலேயே நீங்கள் யாவரும் இறந்துபோவீர்கள்" என விடை கூறினான்,

**கலகக்காரரைச் சிறை பிடித்தல்**

"நாங்கள் எவர்களுக்கு அடங்கவேண்டும்? அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? என **ஸ்மித்** பின்னும் கேட்டான். அதற்கு இராபின்சன், "இங்கேதான் இருக்கிறார்கள்; நமது மாலுமியும் பின்னும் ஐம்பது பேரும் இந்த இரண்டு மணி நேரம் அளவும் உங்களைத் தொடர்ந்து திரிந்தார்கள்; மரக்கலத் துணைப்பொருள் பாதுகாப்பு அதிகாரி கொல்லப்பட்டான். வில்ஃப்ரை காயம்பட்டான், நான் சிறைப்பட்டேன்; நீங்கள் வணங்கி வழிக்கு வராது இருப்பீர்களானால், யாவருக்கும் சாவுதான் முடிந்த நிலை" எனக் கூறினான்.

அது கேட்டு, **டாம்ஸ்மித்**, "அவர்கள் எங்கள்மீது இரங்கி, எங்களைத் தண்டியாமல் விடுவார்களா? விடுவார்களானால், வழிக்கு வருவோம்" என, இராபின்சன், "நீங்கள் வணங்கி வழிக்கு வருவதாக உறுதிமொழி கூறுவீர்களானால், நான் போய்க் கேட்டு வருவேன்" என்று சொல்லி, மாலுமியைக் கேட்க, மாலுமி தானே "ஓ **ஸ்மித்**, என் குரலை அறிவாயே; இந்த நேரமே நீங்கள் கைக்கொண்ட படைக் கலங்களைத் தரையில் வைத்துவிட்டு, அடங்கியிருப்பீர்களானால், **வில் அட்கின்ஸ்** ஒருவன் தவிர, மற்றெல்லாரும் பிழைத்திருப்பீர்கள்," எனக் கூவிச் சொன்னான்.

அது கேட்டவுடன் **வில் அட்கின்ஸ்** என்பவன் "மாலுமி! கடவுள் பொருட்டாக எனக்கு மன்னிப்புக்

கொடும்! நான் என்ன கொடுமை செய்தேன்? என்னைப் போல் அவர்களும் தவறு செய்தவர்கள் தாமே" என்று ஓலமிட்டான். அவன் கூறியது உண்மையன்று; கலகம் தொடங்கினபொழுது, வில் அட்கின்ஸ் தான் முதலில் மாலுமியைப் பிடித்துக் கைகளைக் கட்டித் தகாத மொழி கூறி வைது, கொடுமைகள் செய்தவன். "உனக்கு இரக்கம் காட்டவேண்டுவது இல்லை. படைக்கலங்களை நீ வைத்துவிடவேண்டும்; வேந்தன் மனம் இரங்கிவிட்டால், தப்புவாய்" என மாலுமி அவனுக்குச் சொன்னான் அவன் வேந்தன் என்றது என்னைத்தான்., அவர்கள் எல்லாரும் என்னை வேந்தன் என்றே அழைத்தார்கள்.

கதையை வளர்க்காமல் சுருக்கிச் சொல்லுகிறேன். அவர்கள் அனைவரும் படைக்கலங்களை வைத்துவிட்டுத் தங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து உதவி செய்யவேண்டும் என்று வணங்கிக் கேட்டுக் கொண்டார்கள். அவர்களுடன் உரையாடிய மனிதனையும், பின்னும் இரண்டு பெயரையும் அனுப்பி அவர்கள் எல்லாரையும் கட்டும்படி செய்தேன். மேலே ஐம்பது பேர் என்று குறிப்பித்த என்னுடைய திரண்ட படைவீரர் தொகை கணக்கிட்டுப் பார்த்தால், மேற்கூறிய மூன்று பேருடன் ஆக எட்டுப் பேர். இந்த எட்டுப் படைவீரரும் நெருங்கிப்போய், அவர்கள் யாவரையும், கையகப் படுத்தினர்; அவர்கள் ஓடத்தையும் கைக் கொண்டார்கள். நானும் வேறு ஒருவனும் மட்டும் அரசியல் முறைமைப்படி அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்படாமல் நின்றோம்.

**சிறையாளரை மாலுமி கண்டித்தல்**

அப்புறம் ஓடத்தைப் பழுதுபார்த்துச் சீர்ப்படுத்துவதும், கப்பலைப் பிடிக்க ஆழ்ந்து வழி காண்பதுமே எங்கள் வேலை. இப்பொழுது அவர்களுடன் உரையாடுவதற்கு மாலுமிக்கு நேரம் இருந்ததனால், அவர்கள் தனக்குச் செய்த கெடுதிகளையும், கொடுஞ் செயல்களையும், அவர்கள் நினைத்த தீமைகளையும் எடுத்துக் கூறி வாய்

மொழியாற் கண்டித்தான். அவர்கள் செய்த தீவினையால் முடிவில் அவர்களுக்குத் துன்பங்களும் கவலையும் ஐய மின்றி உண்டாகும் என்றும், ஒரு வேளை தூக்கு மரத்தில் உயிரிழப்புத் தண்டனை பெறுவார்களென்றும் வற் புறுத்திச் சொன்னான்.

அவர்கள் யாவரும் தங்கள் குற்றத்தை நினைத்து மனம் வருந்துபவர்போலக் காணப்பட்டனர்; தங்களை உயி ரிழப்புத் தண்டனையினின்று தப்புவிக்கும்படி மிக வருந்தி இரந்து கேட்டார்கள். அதற்கு மாலுமி "நீங்கள் என் சிறையாளர் அல்லர்; இத்தீவின் தலைவருடைய சிறை யாளர். நீங்கள் இத்தீவின் கரையில் என்னை இறக்கிவிட்ட பொழுது, இது மனிதர் வாழ்வு இல்லாத பாழ்ந்தீவு என்று நினைத்தீர்கள். உங்கள் நினைவு ஒன்றும், தெய் வத்தின் எண்ணம் ஒன்றுமாய் முடிந்தன. இறைவன் திருவருளால் இத்தீவு மனிதர்வாழும் இடமாய் இருக் கிறது. இதன் தலைவர் ஆங்கிலேயர் ஒருவர். அவர் விரும் பினால் உங்கள் எல்லோரையும் இவ்விடத்தில் தூக்கு மரத்தில் ஏற்றிக் கொல்விப்பதற்கு இயலும். அந்த அதிகாரம் அவருக்கு உண்டு. ஆனாலும் அட்கின்ஸ் ஒருவனைத் தவிர, மற்றெல்லாரையும் அவர் மனம் இரங்கித் தூக்கில் இட்டுக்கொல்லமாட்டார் ஆதலால், நெறிமுறைப்படி தண்டனை பெறுவதற்கு அவர் அவர்களை இங்கிலாந்திற்கு அனுப்புவார் போலும். கொலைத் தண்டனை ஏற்றுக்கொள்வதற்குச் சித்தம் செய்து கொள் ளும்படி அட்கின்சுக்குச் சொல்வதற்கு எனக்கு வேந்தர் கட்டளை பிறப்பித்திருக்கிறார். அவன் காலையில் தூக்கில் இடப்படுவான்." என அவர்களுக்குத் தெரிவித்தான்.

இது கற்பித்துக்கூறிய கதையாய் இருப்பினும், அவர் கருதியவாறு பின்வரும் செயல்களுக்கு உதவியாய் இருந்தது. **அட்கின்ஸ்** என்பவன் முழந்தாளிட்டு வேந்த னுடன் பரிந்து பேசித் தன் உயிரைப் பாதுகாக்கும்படி மாலுமியை வேண்டினான். மற்றெல்லாரும் கடவுள் பொருட்

டாகத் தங்களை இங்கிலாந்திற்கு அனுப்ப வேண்டாம் என்று கெஞ்சிக் கேட்டார்கள்.

### கப்பலைக் கையகப்படுத்த முயலுதல்

எங்கள் சிறை மீட்சிக் காலம் வந்ததென்றும், இக் கடலோடிகளைக்கொண்டு கப்பலை முழு மனத்தோடு எங்கள் உரிமையாக்கிக் கொள்வதற்கு இவர்களை உடன்படுத்து வது மிகவும் எளிது என்றும், இப்பொழுது எனக்குத் தோன்றியது. ஆதலால் வேந்தனாகிய என்னுடைய கோலத்தை அவர்கள் காணாதிருக்குமாறு நான் இருட்டில் ஒதுங்கி அவர்கள் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து நின்று, சற்றுத் தொலைவில் நிற்பவன் போல மாலுமியை அழைத்தேன். உடனே நான் திட்டம் செய்து வைத்திருந்த படி என் மனிதரில் ஒருவன், "ஐயா, மாலுமி, வேந்தர் உம்மை அழைக்கிறார்," என மாலுமிக்குச் சொல்ல, அவன் "அரசர் கட்டளைப்படி ஏழையேன் இப்பொழுதே வருவ தாகத் தெரியப்படுத்து" என விடை கூறினான். அவர்கள் இந்த வார்த்தைகளைக் கேட்டு மேலும் வியப்பு அடைந் தார்கள். அன்றியும் படைத்தலைவரும் படை வீரர் ஐம்பது பேரும் நெருங்கிய இடத்தில் வந்து சேர்ந்திருக்கிறார்கள் என்று எல்லாரும் நம்பினார்கள்.

மாலுமி என்னிடத்திற்கு வந்தபொழுது, மரக் கலத்தை அகப்படுத்தும் பொருட்டு என் உள்ளத்தில் தோன்றிய எண்ணத்தை நான் அவனுக்குச் சொல்ல, அவன் அதுவே செய்யத்தக்கது என்று மிகவும் உவந்து, மறுநாட் காலையில் அதை நிறைவேற்ற முடிவு செய்தான்.

ஆனாலும், இந்தச் செயலை மிகுந்த சூழ்ச்சியோடு நிறைவேற்றவும், தவறாமல் நடைபெறவும் தக்கதாக நாம் சிறையாளரை இரண்டு பிரிவினராகப் பிரித்து வைக்க வேண்டும். "நீ போய் அட்கின்சையும், அவர்களில் அதிகக் கொடுமையாளராகிய பின்னும் இருவரையும் பிடித்துப் பின்கட்டுக்கட்டி மற்றச் சிறையாளர் இருக்கும் முழைக்கு அனுப்ப வேண்டும்" என்றேன். இந்த மனிதர்கள்

வெள்ளிக்கிழமையினிடத்திலும், மாலுமியுடன் கரையில் வந்து இறங்கிய மற்ற இருவரிடத்திலும் ஒப்புவிக்கப் பட்டார்கள்.

அவர்கள் அம்மூவரையும் சிறைச்சாலை முறையிற் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்; முதன்மையாய்த் துன்ப நிலை அடைந்து மனம் தடுமாறும் அவர்களுக்கு அந்தச் சிறைச்சாலை அச்சந்தரும் இடமாய் இருந்தது.

மற்றவர்களை எனது ஓலை வீட்டிற்குக்கொண்டு போகுமாறு கூறினேன். இந்த ஓலை வீட்டின் விவரம் முன்பே கூறியுள்ளேன். அதைச் சுற்றி வேலி அடைத்திருந்ததனாலும், அவர்கள் பின்கட்டுக் கட்டப்பட்டிருந்ததனாலும், அவ்விடம் வலிவான சிறைச்சாலைக்கு ஒப்பாய் இருந்தது; அப்படியல்லாதிருப்பினும் அஞ்ச வேண்டுவதில்லை. அவர்களும் ஒழுங்காய் நடப்பதாக உறுதி கூறியிருக்கின்றார்களே.

மறுநாள் காலையில் இவர்களைக் கண்டு பேசி, இவர்கள் கருத்தை ஆராய்ந்து அறிந்து, கப்பலுக்குப் போய் அதைக் கையகப்படுத்த இவர்களை நம்பி அனுப்ப இயலுமா, இயலாதா என்று அறிந்து வந்து தெரிவிக்கும்படி மாலுமியை அனுப்பினேன். மாலுமிபோய் அவர்களைக் கண்டு பேசி, அவர்கள் தனக்குச் செய்த தீங்கையும், இப்பொழுது அவர்கள் அடைந்த நிலையையும், இந்த நிகழ்ச்சிகளில் அவர்களைத் தப்பிப் பிழைத்திருக்க விடுவதாகத்தான் அவர்களுக்கு மன்னிப்புக் கொடுத்திருப்பதையும் கூறினன். ஆயினும் அவர்கள் இங்கிலாந்திற்கு அனுப்பப்படுவார்களானல், அவர்கள் சங்கிலியில் மாட்டித் தூக்கிற் போடப்படுவது உண்மை என்பதையும், யாவரும் ஒன்றுபட்டு, கப்பலை அங்கிருக்கும் கடலோடிகள் இடத்தினின்று கையகப்படுத்த உடன்படுவார்களானல், அவர்களுக்கு மன்னிப்புத் தரும்படி தாம் வேந்தனை உடன்படுத்துவதாகவும் அவர்களுக்கு விரித்து உரைத்தான்.

துன்பங்களை அடைந்திருக்கும் அம்மனிதர் மாலுமி கூறிய நன்மொழிகளைத் தடையின்றி அப்பொழுதே ஒத்துக்கொள்வார்களென்று எந்தக் குழந்தையும் சொல்லுமே. அவர்கள் முழந்தாளிட்டு, "இனி ஏதேனும் கேடு செய்ய நினைப்போமானால், எங்களுக்குத் தெய்வங்களின் கோபமும் வந்து நாங்கள் எவரும் படாதபாடு படுவோம். ஒருதுளிக் குருதியாவது எங்கள் உடம்பில் இருக்கும் அளவும் நாங்கள் இனி வஞ்சனை இன்றி உம்மோடு ஒத்து நடப்போம். நீரே எங்களுக்கு உயிர் உதவி செய்தவர் என்று எண்ணி, உமது உதவியை மறவாதிருந்து, நீர் இந்தப் பூவுலகில் எவ்விடத்திற்குப் போனாலும், உம்முடன் வருவோம். இறக்கும் அளவும் நீரே எங்கள் தந்தை என்று கூறுவோம்" என உறுதி மொழி கூறினார்கள்.

அதுகேட்டு, மாலுமி, "நன்று, நான்போய் உங்கள் வாய்மொழியை வேந்தருக்குத் தெரிவித்து, அதற்கு அவரை உடன்படுத்துவதற்கு ஏதேனும் முயற்சி செய்ய முடியுமோ என்று பார்க்க வேண்டும்" என அவர்களுக்குச் சொல்லி, என்னிடத்திற்கு வந்து, அவர்கள் மனக் கருத்து இத்தன்மையாய் இருக்கிறது என்று எனக்குத் தெரிவித்து, இனி அவர்கள் சொல்லும் செயலும் உள்ளமும் ஒத்து உண்மையாய் நடப்பார்கள் என்று தாம் ஐயம் திரிபு அற நம்புவதாகச் சொன்னான்.

ஆயினும், முழுதும் அச்சம் அற்று இருக்கும் பொருட்டு நீர் மீண்டும் அவர்களிடத்திற் சென்று, அவர்களில் ஐந்து பெயரைத் தேர்ந்தெடுத்து, நாம் செய்யத் தொடங்கும் செயலைச் செய்வதற்குப் போதுமான மக்கள் இருக்கின்றனர் என அவர்களுக்குத் தெரியக் காட்டி, அந்த ஐந்து பேரையும் உமக்குத் துணைவராகக் கப்பலுக்குக்கொண்டு போவதாகவும், மற்ற இருவரையும் முழைச் சிறைச்சாலைக்கு அனுப்பட்ட மூவரையும் மேற்கூறிய ஐவருடைய நாணயத்திற்குப் பிணையாளிகளாய் வேந்தர் தம் இடத்தில் வைத்திருப்பதாகவும், கப்பலைக் கைவசப்படுக்கப் [illegible]

கெட்டவர்கள் என்று தெரியவந்தால், பிணை இருக்கும் ஐவரும் இத்தீவில் சங்கிலி தொடுத்துத் தூக்கிற் போடப் படுவார்கள் என்பதாகவும் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று சொல்லி, மாலுமியை அனுப்பினேன்.

மாலுமி கூறியது அவர்களை அச்சுறுத்துவதாய் அமைந்தது. வேந்தர் இந்நிகழ்ச்சியில் மனம் வைத்துத் தமது சொற்படி தவருமல் நடப்பார் என்று அவர்கள் முழுவதும் நம்பிஞர்கள். இவ்வுடன் படிக்கையை ஒப்புக் கொள்வதன்றி, அவர்களுக்கு வேறு வழியில்லை. மேற் கூறிய ஐந்து பேரையும் உடன்படிக்கையின்படி ஒத்துக் கொள்ளச் செய்வதற்கு மாலுமியன்றி மற்றைச் சிறையா ளரும் இது தங்கள் கடமை என்று முயற்சி செய்தார்கள்.

எங்கள் படை வீரர் பின்வருமாறு, படையெடுத்துப் போதற்கு அணிவகுக்கப்பட்டார்கள். 1. மாலுமியும், துணை மாலுமியும் பயணம் வந்தவனும் மூவர். 2. முதல்முறைவந்த கலகக்காரர் கூட்டத்தில் சிறை பிடிக்கப்பட்ட இருவர். அவர்கள் ஒழுங்கானவர்கள் என்று மாலுமி சொல்லக் கேட்டு, நான் அவர்களை விடுதலைசெய்து, அவர்கள் கையில் படைக்கலம் கொடுத்திருந்தேன். 3. இதுவரையில் பின்கட்டுக்கட்டி எனது ஓலை வீட்டில் அடைத்திருந்த மற்ற இரண்டு பேர். இப்பொழுது மாலுமி கேட்டுக் கொண்டபடி அவர்களையும் விடுதலை செய்தேன். 4. கடைசி யாய் விடுதலை பெற்ற ஐந்து பேர். ஆகத் தொகை பன்னிரண்டு; இவர்கள் அன்றி, முழைச்சிறைச்சாலையில் பிணையிருந்தவர் ஐந்து பேர்.

இவர்களுடன் கப்பலுக்குப் படையெடுத்துப் போக உமக்கு விருப்பமாய் இருக்கிறதா என்று மாலுமியைக் கேட்டேன்; பின்னும் ஏழு பேர் இங்கே தங்கி யிருப்பதனு லும், அவர்களை அங்கங்கே தனித்தனியே வைத்துக் காவல் செய்வதும், அவர்களுக்கு உணவு கொடுத்துக் கொண்டு வருவதும், இரண்டு பேருக்குப் போதுமான வேலையாய் இருப்பதனுலும், நானும் என் அடிமை ஆள்

வெள்ளிக்கிழமையும் இவ்விடத்தை விட்டு நீங்குவது தகுதியன்று என நான் எண்ணினேன்.

முழையில் இருக்கும் ஐவரையும் நன்முய்க் காவல் செய்யுமாறு கட்டளையிட்டேன். வெள்ளிக்கிழமை ஒவ்வொருநாளும் இரண்டுமுறை உணவு முதலிய இன்றியமையாத பொருள்களை அவர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து வந்தான். மற்ற இரண்டு பேரிடத்தில் உணவுப் பொருள்களைக் கொடுத்து, அவர்களை இங்கிருந்து பாதி வழி அனுப்பினேன். அப்புறம் வெள்ளிக்கிழமை வாங்கிக் கொண்டு போனன்.

பிணையாளிகள் இருவர் கண்ணுக்கு எதிரில் நான் வெளிப்பட்டபொழுது, என்னுடன் கூட வந்த மாலுமி "இவர்தாம் உங்களை விழிப்போடு பார்த்துக்கொள்ளும்படி வேந்தர் ஏற்படுத்திய அதிகாரி. இவர் கட்டளை இட்டால் அன்றி, நீங்கள் எவ்விடத்திற்கும் போகக்கூடாது என்பதே வேந்தருடைய எண்ணம். இவரிடம் கேளாமல் எவ்விடத்திற்காயினும் செல்லுவீர்களானல், உங்களைக் கோட்டைக்குப் பிடித்துக்கொண்டு போய்க் கால்களில் விலங்கு இடுவார்கள்." என்று அவர்களுக்கு எடுத்துக் கூறினன்.

இதற்கு முன் அவர்கள் என்னைக் கண்டு, நானே தீவின் வேந்தன் என்று அறியாதபடி மறைந்திருந்ததனல், அவர்கள் இப்பொழுது என்னை வேற்று மனிதனுக நினைத்தார்கள். நான் அவர்களுக்கு வேந்தன் பெருமைகளையும், பட்டாளத்தின் சிறப்பையும், கோட்டையின் வலிமையையும், பின்னும் பலவற்றையும் வேளை நேர்ந்தபோது எல்லாம் விளக்கமாய்க் கூறினேன்.

**கப்பலைக் கைப்பற்றுதல்**

இப்பால் மாலுமி ஓர் ஓடத்தின் துளையைத் தொல்லையின்றி அடைத்து, அதிலும், மற்ற ஓடத்திலும் உணவுப் பொருள் முதலிய எல்லாவற்றையும் ஏற்றி அதில் இன்னின்னர் ஏறிப் போக வேண்டும் என்று ஏற்பாடு செய்தான்.

அவன் தம்முடன் வந்த கடலோடியை ஓர் ஓடத்திற்கு மாலுமியாக வைத்துப், பின்னும் நான்குபேரை அதில் ஏறிப்போகத் திட்டம் செய்து, துணை மாலுமியுடனும், மற்ற ஐந்து பெயருடனும் தான் ஏனைய ஓடத்தில் ஏறிப் போனான். செய்யவேண்டிய செயலைத் திட்டமாய் நினைத்து ஆராய்ந்து முடிவு கட்டியிருந்ததனால், அவர்கள் பாதி இரவு நேரத்தில் கப்பல் இருக்கும் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். கப்பலுக்குக் கூப்பிடு தொலையில் சேர்ந்தவுடன், மாலுமி இராபின்சனைத் தூண்டிவிட, அவன் கப்பலில் இருந்தவர்களை உரக்கக்கூவி வாழ்த்தி, மங்கல வார்த்தைகளைச் சொல்லிக் கரையில் இறங்கிய கடலோடிகளைத் தேடித் திரிந்து, கண்டுபிடிக்க இவ்வளவு நேரம் சென்றது என்றும், கடைசியில் அவர்களையும், ஓடத்தையும் கொண்டு வருவதாயும் நெடுங் கதை சொல்லிக் கொண்டு வந்தான். அவர்கள் இப்படிக் கதை கேட்டுக்கொண்டு இருந்தபோது, விரைவில் ஓடம் கப்பலின் பக்கத்திற் சேர்ந்தது; சேர்ந்தவுடன் மாலுமியும் துணைமாலுமியும் படைக்கலம் கைக் கொண்டு, முதல் முதல் கப்பலில் ஏறி, இரண்டாவது துணை மாலுமியையும், கப்பலில் தச்சு வேலை செய்யும் மேலாளையும் துப்பாக்கிகளின் அடிக்கட்டையால் அடித்து வீழ்த்தினார்கள். மற்றவர்களும் நம்பிக்கைக் கேடு செய்யாமல் அவர்களுக்கு முழு மனத்தோடு துணை நின்றதனால், யாவரும் ஒன்றாய்ச் சேர்ந்து, இரண்டாவது தட்டிலும், மேல்தட்டின் பின் அணியிலும், இருந்த கடலோடிகள் எல்லாரையும் அகப்படுத்தி, அப்புறம் கீழ்த்தட்டில் இருந்தவர்கள் வெளியில் வராதிருக்கும்படி, அதன் கதவை அடைக்கத் தொடங்கினார்கள். மற்ற ஓடத்தில் வந்தவர்கள் ஏணியின் வழியாய் கப்பலில் ஏறி, அதன் முன் அறையையும், மடைப்பள்ளி அறைக்குப் போகும் வாசலையும் காவல் செய்து அங்கே கண்ட மூன்று பேரைச் சிறை பிடித்தார்கள்.

### கப்பலில் நடந்த போர்

இது நிறைவேறி, மேல்தட்டில் எல்லாரும் பாதுகாப்பாய் வந்து சேர்ந்தபின், மாலுமி துணை மாலுமியையும், வேறு மூன்று பேரையும் பார்த்துக் கலகம் செய்த கொடியவர்கள் தங்களுக்குப் புதிய மாலுமியாக ஏற்படுத்திய மனிதன் இருக்கும் அறைக் கதவை நீங்கள் உடைத்துப் பெயர்த்து உட்செல்லுங்கள் என்று கட்டளை பிறப்பித்தான். புதிய மாலுமி அங்கே படுத்திருந்தான். அவன் ஒலி கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தான். அவனும், வேறு இரண்டு ஆடவரும், ஒரு சிறுவனும் ஆளுக்கு ஒரு துப்பாக்கி எடுத்தார்கள். துணை மாலுமி கடப்பாறையால் கதவைக் குத்திப் பிளந்து எறிந்தபொழுது, புதிய மாலுமியும், அவனைச் சேர்ந்த ஆடவர்களும், இவர்களைக் குறிப்பாய் வைத்து வெடி தீர்த்தார்கள். கதவை உடைத்த துணை மாலுமிக்குத் துப்பாக்கிக் குண்டு பட்டது. அவன் கை எலும்பு முறிந்து காயப்பட்டான். பின்னும் இரண்டு பேர் காயப்பட்டார்கள். எவரும் சாகவில்லை.

துணை மாலுமி தனக்கு உதவி செய்ய அவ்வறைக்குள் வரும்படி மற்றவர்களைக் கூவி அழைத்துத் தான் வைத்திருந்த கைத் துப்பாக்கியால் கொடியோனாகிய புதிய மாலுமியின் தலைக்கு நேராகக் குறி வைத்துக் குண்டு செலுத்தினான். குண்டுகள் அவன் வாய் வழியாய்ப் பாய்ந்து ஊடுருவி ஒரு காதின் பின்னே பிடரி வழியாய் வெளிப்பட்டன. அப்புறம் அப் புதிய மாலுமி பேச்சு மூச்சு இன்றி விழுந்தான். அதனைக் கண்ட மற்றவர்கள் தங்கள் படைக்கலங்களைக் கைவிடுத்துத் தலைவணங்கிக் கீழ்ப் படிந்தார்கள். அப்பால் எவருக்கும் உயிர் அழிவு இன்றிக் கப்பல் நல்ல நிலைமையில் கைப்பற்றப்பட்டது.

### கப்பலைக் கைப்பற்றியதனால் மகிழ்ச்சி யுண்டாயிற்று

கப்பலை இவ்வாறு கைப்பற்றிக் கொண்டவுடன் மாலுமி ஏழு பீரங்கி வெடிகள் தீர்த்துத் தான் வெற்றி பெற்ற செய்தியை எனக்குக் குறிப்பித்தான். நானும்

அவனும் ஒன்று கூடிக் குறித்துக்கொண்ட வெற்றி அடையாளம் இதுதான். இரவு ஏறத்தாழ இரண்டுமணி ஆகிறவரையில் கரையில் விழித்துக் கொண்டிருந்த எனக்குப் பீரங்கி வெடி கேட்ட உடனே மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. இஃது எங்களுடைய வெற்றி என்பதற்கு ஐயமில்லை.

பீரங்கி வெடி அதிர்ச்சியை மயக்கமறக் கேட்டபின் நான் படுத்துத் தூங்கினேன். அன்று பகல் முழுவதும் நான் உழைத்து இளைப்புற்றிருந்ததனால், எனக்கு அயர்ந்த தூக்கம் வந்தது. இவ்வாறு தூங்கியபொழுது விரைவில் துப்பாக்கி வெடி அதிர்ச்சி கேட்டு, விழித்தெழுந்தேன். அப்பொழுது எவரோ என்னை "அரசரே! அரசரே'" என்று அழைத்த ஒலி கேட்டது. உடனே அது மாலுமியின் குரல் என்று அறிந்தேன். உடனே நான் சிறு மலை உச்சியில் ஏறியபொழுது, அவன் அங்கே நின்று கப்பலைக் காட்டி, என்னைக் கட்டித் தழுவி, "என்னைச் சிறைமீட்ட என் அன்புள்ள தலைவரே, அதோ உமது கப்பல் வந்து சேர்ந்தது; அஃது உம்முடைய பொருள்தான்; நாங்களும் அதைச் சேர்ந்த துணைப் பொருள்கள் எல்லாமும் உம்முடைய பொருள்களே," எனக் கூறினான். நான் கப்பலை உற்று நோக்கினேன். அது கரைக்கு அரைக்கல் தொலைவிற்கு அப்பால் நங்கூரம் இட்டு நின்றது. மாலுமி முதலானவர்கள் அதைக் கைப்பற்றிக் கொண்டவுடன் நங்கூரம் தூக்கி, வளக்காற்று வீசியதனால் பாய் விரித்துச் செலுத்திக் கொண்டு வந்து ஒரு சிறிய நீரோடையின் புகுமுகத்தின் அருகில் நிறுத்தி நங்கூரம் இட்டார்கள். அப்பொழுது கடற் பெருக்கு வேளையாய் இருந்ததனால், மாலுமி சிற்றோடம் ஏறி, நான் இத்தீவில் வாழத் தொடங்கிய காலத்தில் என் தெப்பங்களைக் கரையேற்றின இடத்திற்கு அருகில் வந்து இறங்கினான். அவ்விடம் என் வாயிற்படியில் இருக்கின்றது எனினும் பொருந்தும்.

கப்பலைக் கண்டவுடன் எனக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று; நான் மெய்ம்மறந்து சோர்ந்து விழுதற்கு

உரியநிலையில் இருந்தேன். என் சிறை மீட்சி என் கைக்குள்ளே அடங்கிக் கிடந்தது. எல்லாப் பொருள்களும் எனக்குத் துணையாய் உதவி புரியும் நிலையில் இருந்தன. நான் விரும்பிய எவ்விடத்திற்கும் என்னை ஏற்றிக்கொண்டு போவதற்குப் பெருங்கப்பல் ஒன்று அமைந்து நின்றது. இவற்றையெல்லாம் கண்டு சிறிது நேரம் மட்டும் ஒரு வார்த்தையாவது மாலுமிக்கு எடுத்துக் கூறுவதற்கு என்னால் இயலவில்லை. அவன் என்னைப் பிடித்துக் கொள்ள நான் அவன்மேல் சார்ந்து கொண்டு நின்றேன். அந்த ஆதரவு இல்லாவிடில் நான் தரையில் விழுந்திருப்பேன்.

மாலுமி எனது வியப்பைக் கண்டு, எனக்கென்று கொண்டுவந்து சட்டை உறைக்குள் வைத்திருந்த மணம் ஊட்டிய இன்சுவைச் சாராயப் புட்டியை எடுத்து ஒரு திராம் குடிக்கக் கொடுத்தான். அதைப் பருகியபின், தரையில் உட்கார்ந்தேன். உடனே எனக்கு அறிவு தெளிந்தது. ஆயினும் நெடுநேரம் வரையில் நான் அவனுடன் பேசமுடியாதிருந்தது.

அந்த நேரத்தில் என்னைப்போல், எனது விருப்பத்துக்குரிய அன்பனாகிய மாலுமியும் தன் வயம் இழந்து இருந்தான். ஆனாலும், என்னைப் போல அவனுக்கு வியப்பு மிகுதிப்படவில்லை. அவன் என்னைத் தேற்றவும் என் அறிவைத் தெளிவிக்கவும் எத்தனையோ மகிழ்ச்சி மொழிகளைக் கூறினான். என் உள்ளத்தில் எதிர்பாராத போது விரைந்து பெருமகிழ்ச்சியுண்டானதனால் என் மனம் முதலிய உட்கருவிகள் தலைதடுமாறிப்போயின. இறுதியில் மனத்தில் நிறைந்திருந்த மகிழ்ச்சி வெள்ளமானது கண்ணீர் அருவியாகப் பெருகி வெளிவந்ததனால், சற்று நேரம் சென்று பேசுவதற்கு என் நாவுக்கு வன்மை ஏற்பட்டது.

அப்புறம் அவன் செய்தபடி நானும் அவனை என்னுடைய மீட்பன் என்று கையால் அணைத்துத் தழுவ இருவரும் மகிழ்ச்சி கொண்டாடினோம். 'நீர் என்னைச் சிறை

மீட்கும்படி கடவுள் அனுப்பிய நல்ல மனிதர் என்று நான் உம்மை நன்கு மதித்திருக்கிறேன் என்றும், நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் வியப்புத் தொடராய் இருக்கின்றன என்றும், இப்படிப்பட்ட வியத்தகு நிகழ்ச்சிகள், கடவுள் தமது திருக்கையில் செங்கோல் ஓச்சி இப்பூவுலகை ஆள்கின்றார் என்பதற்குச் சான்றாகும் என்றும், கூறினேன். மேலும் நிறைந்த வன்மையுடைய கடவுளின் கண்கள் இப்பூவுலகில் நெடுந்தூரத்தில் உள்ள நாற்றிசை மூலைகளிலும் நடக்கும் நிகழ்ச்சிகளை நுட்பமாய்க் கண்டறிந்து, அவர் திருவுள்ளம் இரங்கும்பொழுது, துன்பப்படுகின்றவர்களுக்கு உதவியை அனுப்புவார் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு ஆகும். என்றும் நான் அவருக்குக் கூறினேன்.

கடவுள் செய்த உதவியை நினைத்து, உள்ளம் களிகூர்ந்து, நான் அவரைத் துதித்து வணங்க மறந்துவிடவில்லை. இப் பாழான தீவில் துணையற்று வருந்திக் கிடந்த எனக்கு அவர் உணவு முதலிய எல்லாவற்றையும் கொடுத்து உதவி புரிந்தவர் ஆவர். அன்றியும் நமக்குக் கிடைக்கும் எல்லா வகை நன்மைகளுக்கும் அவரே காரணமானவர் என்று அறியவேண்டும். இப்படிப்பட்ட உயர்ந்த இரக்கமுடைய கடவுளை எவருடைய் உள்ளம் மகிழ்ந்து வாழ்த்திப் புகழாது இருக்கும்.

**காணிக்கைப் பொருள்கள்**

சற்றுநேரம் நாங்கள் இவ்வாறு உரையாடிக்கொண்டு இருந்தபின், இவ்வளவு காலம் தன்னை அடக்கி வைத்திருந்த பகைவர்கள் கப்பலில் சூறையாடி வைத்திருந்த சில உணவுப் பொருள்கள் முதலியவைகளை எனக்குக் கொடுக்கக் கொண்டு வந்திருப்பதாக மாலுமி சொன்னான். பின்பு அவன் ஓடத்தில் இருந்தவர்களை நோக்கி, நம் அரசருக்காக ஏற்றிக்கொண்டு வந்த பொருள்களை இங்கே எடுத்து வாருங்கள் என்று உரக்கச் சொன்னான். நான் அவர்களுடன் பயணப்பட்டுப் போவதற்கு அன்றி, இன்

னும் இத் தீவிலேயே வாழ்வதற்கு நான் எண்ணியிருப்பவ னாக நினைத்தார்கள். என்னை விட்டுப் பிரிந்து அவர்கள் மட்டும் தம் நாட்டுக்குப் போகும் குறிப்புக்களும் காணப் பட்டன. ஆதலால் இப்பொருள்கள் எனக்குக் காணிக் கையாகக் கொண்டுவந்து வைக்கப்பட்டன.

**மாலுமி கொண்டுவந்த பொருள்கள்**

மிக உயர்ந்த மணம் ஊட்டிய இன்சுவைச் சாறு நிறைந்த புட்டிகள் அடுக்கப்பட்ட பெட்டி ஒன்று; கொடி முந்திரிச்சாறு நிறைத்த பெரும் புட்டிகள் ஆறு; (ஒவ் வொரு புட்டியும் அரைக் காலன் கொள்ளும்.) மிக்க சிறப் புடைய புகையிலை இரண்டு இராத்தல்; கப்பலில் இருந்த மாட்டு இறைச்சித் துண்டு பன்னிரண்டு; பன்றி இறைச் சித் துண்டுகள் ஆறு; பயறு ஒரு பை. பிஸ்கட் ரொட்டி ஏறத்தாழ நூற்றுப் பன்னிரண்டு இராத்தல்.

மேலும் ஒரு பெட்டி சர்க்கரை; ஒருபெட்டி மா; ஒரு பை நிறைய எலுமிச்சங்காய், எலுமிச்சம்பழச் சாறு இரண்டு புட்டி. மேலும் திரளான பொருள்களை அவன் கொண்டு வந்தான். இவைகள் அன்றி, அவன்கொண்டு வந்த வேறு சில பொருள்கள் எனக்கு மேற்கூறிய பொருள் வகையனைத்தினும் ஆயிரம் மடங்கு மிகுதியாகப் பயன்படுபவைகளாய் இருந்தன. அவை தூய்மையான புதிய சட்டைகள் ஆறு. மிக நல்ல கழுத்துக் குட்டைகள் ஆறு. கை யுறைகள் இரண்டு இணை. செருப்பு ஓர் இணை. தலையில் அணியும் குல்லா ஒன்று. கால்உறை இரண்டு. அவன் இரண்டொருமுறை மட்டும் உடுத்த மிகநல்ல விலையுள்ள ஆடைகள் ஒரு தொகுதி. சுருக்கிக் கூறின் தலைமுதல் கால் வரையில் உடுத்தும் உடைகள் எல்லாவற்றையும் அவன் எனக்குக் கொண்டுவந்து கொடுத்தான்.

துன்பமுற்றுக் கிடந்த எனக்கு மாலுமி விருப்பத் தோடு கொண்டுவந்து கொடுத்த இப்பரிசுப் பொருள்கள் மிகப் பயன்படும் என்று குழந்தையும் கூறும் அன்றோ?

ஆயினும் நான் இப்படிப்பட்ட ஆடைகளை வாங்கி உடுத்துக் கொண்டபொழுது, இவைகள் எனக்கு மிகுந்த வெறுப்பும், அழகின்மையும், அருவருப்பும் தருவனவாய் இருந்தன. இதற்குமுன் எந்தவகை ஆடையாயினும் எனக்கு இவ்வாறு ஒவ்வாது இருந்ததில்லை.

### பிடித்த கைதிகளை என்ன செய்வது?

இந்தச் செயல்கள் நிறைவேறின பின்பு, அவன் கொண்டுவந்த உயர்வான பொருள்கள் எல்லாம் எனது சிற்றறை வீட்டில் கொண்டுவந்து சேர்க்கப்பட்டன. அதன்பின் நாங்கள் சிறைபிடித்திருந்த கைதிகளை என்ன செய்யலாம் என்று ஆழ்ந்து நினைக்கத் தொடங்கினேம். அவர்களை நம்பி எங்களுடன் அழைத்துப் போகலாமா? கூடாதா? என நீண்ட நேரம் நினைப்பது இன்றியமையாதது தாகவே இருந்தது. முதன்மையாய் அவர்களில் இருவர் வணங்கி வழிக்குவராத மிகுந்த கொடுமையுடையவர்கள் என்று எங்களுக்கே தெரியும். மேலும் இந்தப் பழிகாரருக்குச் சிறிது அளவும் உதவி செய்யலாகாது என்றும், அவர்களை அழைத்துக் கொண்டுபோக நேர்ந்தால் கால் விலங்கிட்டுக் கொண்டுபோக வேண்டும் என்றும், முதலில் எதிர்ப்படும் ஆங்கிலேயர் குடியேறிய நிலப்பகுதியில் குற்றங்களை ஆராய்ந்து முடிவு கூறும் பொருட்டு நீதிமன்றத்தில் கொண்டு போய் ஒப்புவிக்க வேண்டும் என்றும், மாலுமி சொன்னன். அவ்வாறு கூறினும் அவன் உள்ளத்தில் மிகுந்த கவலையும் நிறைந்திருப்பதாகத் தோன்றிற்று.

பின்பு, "நீர் குறிப்பித்த இருவரும் தம்மை இத்தீவிலேயே வாழும்படி விட்டுப் போக வேண்டும் என்று தாமே கேட்கும்படி நான் ஏதேனும் முயற்சி செய்து அவர்களை உடன்படுத்துகிறேன். இஃது உமக்கு விருப்பமா?" என மாலுமியை நான் கேட்டேன். அவன் "ஆம், அதுவே எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. அதனை நான் முழுமனத்தோடு ஒத்துக் கொள்ளுகிறேன்" என உரைத்தான்.

"நன்று, நான் அவர்களை வரவழைத்து, உமக்காக அவர்களிடம் பேசுகின்றேன்" என்று மாலுமிக்குக் கூறி, வெள்ளிக்கிழமையையும் பிணையாளிகள் இருவரையும் முழைக்குப் போய், அங்கிருந்த ஐந்து பேரையும் பின் கட்டை அவிழ்க்காமல் ஓலை வீட்டுக்குக் கொண்டுவந்து, நான் வரும் அளவும் அங்கே வைத்திருக்கச் சொன்னேன். கூட்டாளிகள் செய்த உறுதி மொழியை நிறைவேற்றிய தனால், மேற்கூறிய இருவர் பிணை இருக்கும் கட்டுப்பாடு நீங்கி விடுதலை பெற்றனர்.

சற்றுநேரம் சென்றபின், நான் புதிதாய்ப் பெற்ற உடைகளை உடுத்துக்கொண்டு அவ்விடத்திற்குச் சென்றேன். மீண்டும் என்னை வேந்தன் என்று அழைத்தார்கள். மாலுமியும் என்னுடன் வந்தான். எல்லாரும் ஓரிடத்தில் கூடியபின், மேற்கூறிய ஐவரை எனக்கு எதிரில் அழைப்பித்து, "நீங்கள் மாலுமிக்கு எதிர்ப்புச் செய்து கொடியவர்களாய் நடந்ததும், மரக்கலத்தைக் கொள்ளை அடித்துக்கொண்டு ஓடினதும், பின்னும் சூறை ஆடுவதற்கு முயன்றதும் ஆகிய செய்திகளை விளக்கமாய்க் கேட்டிருக்கிறேன். ஆனாலும் 'பிறர்க்குச் செய்யும் கேடு தனக்குச் செய்துகொள்ளும் கேடு ஆகும்' என்பதுபோல நீங்கள் செய்த தீமைகளே உங்களுக்கு மிகுந்த துன்பங்களை யுண்டாக்கிவிட்டன. பிறரை வீழ்த்தக் கருதி நீங்கள் வெட்டின படுகுழிக்குள் நீங்களே விழுந்தீர்கள்" என அவர்களுக்குச் சொன்னேன்.

மேலும், "என் ஏவற்படி மரக்கலம் எங்கள் கையில் அகப்பட்டுள்ளது. அது துறையில் வந்து நிற்கின்றது. உங்கள் புதிய மாலுமி செய்த கொடுமைகளுக்கு ஏற்றபடி வெகுமதி பெற்றுள்ளான். பாய்மரத்தின் குறுக்குக் கைக் கொம்பில் அவன் பிணம் தொங்குவதை நீங்கள் காண்பீர்கள். கை மெய்யாகக் கண்டுபிடித்த கடற் கள்வர் என்று நான் உங்களைத் தூக்கில் இட்டுக் கொல்லும்படி கட்டளை இடப்போகின்றேன். நான் பெற்றிருக்கின்ற ஆணை முறியின்படி உங்களை இப்படிச் செய்வதற்கு எனக்கு வல்லமை

உண்டு. இஃது உங்களுக்கே ஐயமறத் தெரியும். நன்று, இதற்கு நீங்கள் என்ன விடை கூறுகின்றீர்கள்" என்று முன் நடந்த வரலாறுகளை அவர்களுக்குச் சொல்லி, அவர் கள் கருத்தைக் கேட்டேன்.

குற்றவாளிகள் அளித்த விடை

"நாங்கள் கைது செய்யப்பட்டபொழுது, மாலுமி எங்கள் உயிரைப் பாதுகாப்பதாக உறுதிமொழி கூறினார். இப்பொழுது எங்கள் மீது இரங்கும்படி உம்மைத் தாழ்ந்து பணிந்து வேண்டிக் கொள்ளுகிறோம். உமக்குச் சொல் வதற்கு இது தவிர வேறு ஒன்றும இல்லை." என்பதாக அவர்களில் ஒருவன் விடை கூறினன். அதற்கு நான், "உங்களுக்கு எவ்வாறு இரக்கம் காட்ட முடியும்; நானும் இனிமேல் இங்கு இருக்க விரும்பவில்லை. என்னுடைய மக்களுடன் நான் இத்தீவை விட்டு விலகுவதற்கு முடிவு செய்து, மாலுமியுடன் கப்பலில் ஏறி இங்கிலாந்திற்கு விரைவில் செல்லப் போகின்றேன். நீங்கள் முறை தவறிப் பகைவராய் மாறின குற்றத்திற்காகவும், கப்பலைக் கவர்ந்து கொண்டு ஓடின குற்றத்திற்காகவும், நீதிமன்றத்தில் கொண்டுபோய் நிறுத்தப்படுவீர்கள். போகும்பொழுது கால்விலங்கிட்டுக் கைதிகளாய் இங்கிலாந்திற்கு அனுப்பப் படுவீர்கள். இதனைத் தவிர உங்களுக்குச் செய்யத் தகுவது வேறு ஒன்றும் இல்லை. உங்களைக் கைதிகளாய்க்கொண்டு போய் ஒப்புவித்தால் அங்கே உங்களுக்கு வரும்நிலை தூக்கு மரம்தான். இஃது உண்மை என்று அறிந்து கொள் ளுங்கள். இனி நீங்கள் என்ன செய்ய நினைத்திருக்கின் றீர்களோ எனக்குத் தெரியாது. ஆனபடி ஆகட்டும் என்று இத்தீவில் இருக்க விரும்புவீர்களானல் இருக்க லாம். நான் இத்தீவை விட்டுப் போக நினைத்திருப்பதனல், இனி இத்தீவைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. நீங்கள் இங்கிருந்து காலம் தள்ளக் கூடும் என்று எண்ணுவீர் களானல், அவ்வாறே உங்களைக் கொல்லாது வாழ்விக்க விரும்புகிறேன்; என அவர்களுக்குக் கூறினேன். நான் சொன்ன முடிவு அவர்களுக்கு மிக விருப்பமாய் இருந்தது

என்று அவர்கள் முகக் குறிப்பால் தெரிந்தது. இங்கிலாந் திற்குக் கொண்டுபோய்த் தூக்கில் இடப்படுவதைக் காட்டிலும், வந்தது வரட்டும் என்று துணிவுற்று இங்கு இருப்பதற்கே அவர்கள் விரும்புவதாகக் கூறினார்கள். அப்படி ஆனால் ஆகட்டும் என்று அவ்வளவோடு பேச்சை நிறுத்தினேன்.

**கைதிகள் தீவில் இருக்க விரும்புதல்**

ஆயினும், அவர்களை இங்கே நிறுத்திப்போவதற்கு மாலுமி மனம் துணியவில்லை. இதைக் குறித்து அவன் சிறிது எதிர்மாற்றம் கூறுவதாய்க் காணப்பட்டது. அவ னுடைய கருத்தை அறிந்து நான் அவனுடன் சற்றுச் சினந்துகொண்டவன்போல, "இவர்கள் என்னுடைய கைதி கள். உம்முடைய கைதிகள் அல்லர். நான் இவர்களிடம் இரக்கங்கொண்டு உதவி செய்வதாக உறுதிமொழி கூறி யிருப்பதனால், என் மொழி தவறுமற் காத்துக்கொள்ள வேண்டும். இதற்கு உடன்படுவது தகாதென்று நீர் நினைத்தால், நான் இவர்களைச் சிறை நீக்கி முன்போல உரிமையுடையவராக்கி விடுகிறேன். அஃது உமக்கு விருப் பம் இல்லாதிருந்தால், உம்மால் கூடிய முயற்சி செய்து, அவர்களைச் சிறை பிடித்துக்கொள்ளும்" என்றேன்.

இவ்வாறு நான் சொன்னதைக் கேட்டு, அவர்கள் இது தமக்குப் பேருபகாரம் என்று நினைப்பவர்கள்போலக் காணப்பட்டார்கள். அவர்கள் மனக் கருத்தின் வண்ணம் நான் அவர்களை விடுதலை செய்து, காட்டில் முன்பு இருந்த இடத்திற்குப் போகச்சொல்லித், துப்பாக்கி மருந்து, குண்டு நான் அவர்களுக்குக் கொடுப்பதாகவும், தகுதி என்று ஒத்துக்கொள்ளுவார்களானல், செம்மையாய்க் குடித்தனம் செய்தற்குரிய சில முறைகளைக் கற்றுக்கொடுப் பதாகவும் கூறினேன்.

பிறகு, நான் கப்பல் ஏறுவதற்கு முற்பட்டு, என் னுடைய பொருள்களை ஒழுங்கு படுத்தும் பொருட்டு, அன்று இரவு தீவிலேயே தங்கியிருப்பதாகவும், மாலுமிக்

குக் கூறி, அவனை அப்பொழுதே கப்பலுக்குப் போய், அதில் எல்லாவகையான ஏற்பாடுகளும் செய்யும் படியும், மறுநாள் நான் ஏறிப் போவதற்கு ஓடம் அனுப்பவும் சொன்னேன். மேலும், கொல்லப்பட்ட புதிய மாலுமியின் உடலை இம்மனிதர் காணும்படி பாய்மரத்தின் குறுக்குக் கைக் கொம்பில் தொங்கவிடும்படியும் கூறினேன்.

**தீவில் நான் வாழ்ந்த விதத்தைக் கற்பித்தேன்**

மாலுமி போனபின், நான் மேற்கூறிய ஐவரையும் எனது அறை வீட்டிற்கு வரவழைத்து, அவர்களுடைய வாழ்க்கை முறைகளைக் குறித்து அவர்களிடம் மிகுந்த கருத்தோடு பேசினேன். நீங்கள் செய்த முடிவு மிகவும் நல்ல முடிவு என்றும் மாலுமி அவர்களைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு போக நேர்ந்தால், உண்மையில் தூக்கிட்டுக் கொல்லப்படுவார்கள் என்றும், அவர்களுக்குக் கூறினேன். அன்றியும் கப்பலின் குறுக்குப் பாய்மரக் கொம்பில் அவர்கள் மாலுமி உடல் தொங்குவதைக் காட்டி, "நீங்கள் மரக்கலம் ஏறிப் போவீர்களானால் உங்களுக்கும் இவ்வாறே நேரும்" என்றும் கூறினேன்.

பின்பு அவர்கள் அனைவரும் இங்கு இருக்க விரும்புவதாகக் கூறியது கேட்டு, நான் இத்தீவில் குடித்தனம் செய்த மறைவான நிலையையும் வகையையும் இனி உங்களுக்குக் கூறி, மனக்குறை அற்று நலத்துடன் வாழும் வழியை உணர்த்துவேன் என்றேன். அவ்வாறே அத்தீவின் வரலாறு முழுவதையும், நான் அவ்விடத்திற் சேர்ந்த வரலாறுகளையும், அவர்களுக்குக் கூறினேன். என்னுடைய கோட்டை கொத்தளங்களையும், நான் ரொட்டி சுட்ட விதத்தையும், கூலம் விதைத்து விளைவித்த முறைகளையும், கொடி முந்திரிப் பழக்குலைகளை உலர்த்தி வற்றல் உண்டாக்கின முறையையும் உணர்த்தினேன். விரித்துக் கூறின் கதை வளரும். அவர்கள் இன்ப வாழ்வு வாழ்வதற்கு இன்றியமையாத எல்லாவற்றையும் தெரிவித்தேன். இனி அவ்விடத்தில் வந்து சேரும் ஸ்பானியர்

பதினாறு பேருடைய வரலாறுகளைச் சொன்னேன். அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி, அதை இவர்கள் கையில் கொடுத்து, அவர்களைக் கூட்டாளிகளாய்ச் சேர்த்து ஒற்றுமையோடு மனம் கலந்து வாழும்படி கூறினேன். அவ்வாறு வாழ்வதாக உறுதிமொழியும் அவர்களிடம் பெற்றேன்.

நான் ஐவருக்கும் கொடுத்த வெடிக் கருவிகள் ஐந்து பெருந்துப்பாக்கிகளும், மூன்று குருவிக் குழாய்த் துப்பாக்கிகளும் ஆகும். மேலும் கத்திகள் மூன்று, வெடி மருந்துப் பீப்பா ஒன்று. நான் இங்கே வந்து சேர்ந்த இரண்டொரு ஆண்டுகட்குப்பின் மிகுந்த செலவு செய்யாமலும், பழுதாக்காமலும், வைத்திருந்ததனால், இவ்வளவு மருந்து எஞ்சியிருந்தது. வெள்ளாடுகளைப் பிடித்து வசப்படுத்தி அவற்றை இனப்பெருக்கம் செய்விக்கும் முறையும் தெரியச் சொன்னேன். அவைகளிடம் பால் கறக்கும் வகை இன்னது என்றும், அவற்றைக் கொழுக்கச் செய்யும் முறை இன்னது என்றும், வெண்ணெய் கடையும் முறை இன்னது என்றும் பாலடைக் கட்டி செய்யும் விதம் இன்னது என்றும், திட்டமாய் உணர்த்தினேன்.

என் வரலாறுகளை முதலில் இருந்து முடிவுவரை அவர்களுக்கு விரித்துரைத்தேன். அன்றியும் இன்னும் இரண்டு பீப்பா மருந்தும், சில தோட்டப் பயிர் வகைகளின் விதையும் கொடுக்கும்படி மாலுமியை உடன்படுத்துவேன் என்றும் கூறினேன். அவ்விதைகள் எனக்குக் கிடைக்குமானால் மிகுந்த மகிழ்ச்சி அடைவேன் என்றேன். உணவுக்காக மாலுமி எனக்குக் கொண்டு வந்து கொடுத்த ஒரு பைப் பயற்றை நான் அவர்களுக்குக் கொடுத்து, அதைத் தவறாமல் விதைத்து மிகுதிப்படுத்த வேண்டும் என்றேன்.

இவையெல்லாம் நிறைவேறியபின், மறுநாள் நான் அவர்களை விட்டுப் பிரிந்து மரக்கலம் ஏறினேன். உடனே புறப்பட்டுச் செல்ல முயன்றோம். ஆனாலும் அன்றிரவு நங்

கூரம் தூக்கவில்லை. மறுநாள் அதிகாலையில் மேற்சொல்லிய ஐவரில் இருவர் நீந்தி வந்து கப்பலின் பக்கத்தில் நின்று மற்ற மூவரையும் குறித்து, இரங்கத்தக்கவாறு அழுது முறையிட்டு அவர்கள் தங்களைக் கொல்வார்கள் என்று சொல்லித் தங்களைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு போகும்படி வேண்டிக்கொண்டார்கள். மேலும், தங்களை உடனே தூக்கிற் போடுவதாய் இருந்தாலும், கப்பலில் ஏற்றிக்கொள்ளும்படி மாலுமியை வேண்டிக்கொண்டார்கள்.

அது கேட்டு மாலுமி அவர்களைக் கப்பலில் ஏற்றுவதற்கு என் ஆணை இல்லாமல் தமக்கு உரிமை இல்லை என்று போக்குச்சொன்னான்; ஆயினும் சிறிது நேரம் தடைவிடைகள் கூறி, அவர்கள் இனிச் செவ்வையாய் நடப்பதாக மிகுந்த வணக்கம், அன்பு அச்சம் இவற்றோடு உறுதிமொழி கூறினார்கள். பிறகு கப்பலில் ஏற்றிக்கொள்ளப்பட்டார்கள். கப்பலில் அவர்கள் ஒழுங்கானவர்களாய் அடங்கி நடந்தார்கள்.

சிறிது நேரம் சென்ற பின், நான் தீவில் இருந்தவர்களுக்குக் கொடுப்பதாகக், கூறிய பொருள்களை ஓடத்தில் ஏற்றிக்கொண்டு, கரைக்குப் போனேன். நான் அவர்களுக்காக மாலுமியிடம் பரிந்து பேசியதனால் அவன் அவர்களுடைய பெட்டிகளையும் ஆடைகளையும் கூட மற்றப்பொருள்களுடன் ஏற்றுவித்தான். இப்பொருள்களை அவர்கள் மிக்க பயனுடையவை என நன்றியோடு ஏற்றுக்கொண்டார்கள். அவர்களை இங்கிலாந்துக்கு வரவழைத்துக் கொள்ளுவதற்கு ஒரு மரக்கலம் அனுப்ப இயலுமானால், நான் அவர்களை மறந்து போகாமல் அனுப்பி யுதவுவதாகக் கூறி அவர்கள் மனத்தைத் தேற்றினேன்.

# பத்தொன்பதாம் அதிகாரம்

## தீவைவிட்டுப் புறப்படுதல்

நான் இத்தீவை விட்டுப் புறப்பட்டபொழுது, முன்பு வெள்ளாட்டுத் தோலில் செய்துவைத்திருந்த குல்லாவை யும், குடையையும், என் கிளிகளில் ஒன்றையும், நினைவுப் பொருள்களாக மரக்கலத்தில் ஏற்றிக்கொண்டேன். மேலும் என்னிடத்தில் சிறிது அளவு நாணயம் நாட்படக் கிடந்த தனால் பயனற்றுத் துருப்பிடித்து இருந்தது என இதற்கு முன் ஓரிடத்தில் கூறியிருக்கின்றேன். அதைச் சிறிது தேய்த்துத் துருநீக்கிக் கையாளுகிற வரையில் அது வெள்ளி நாணயம் எனப் பிறர் ஏற்றுக்கொள்ள மாட்டார் கள். அந்த நாணயங்களையும், முன்பு பழுதுபட்டு ஒதுங் கிய ஸ்பானிய மரக்கலத்திற் கண்டெடுத்த நாணயங்களையும் இந்த வேளையில் நான் கொண்டுபோக மறக்கவில்லை. கப்ப லில் இருந்தவர்கள் வைத்த கணக்கின்படி நான் இந்தத் தீவை விட்டுப் பயணப்பட்டது, 1686-ஆம் ஆண்டு டிசம் பர்த் திங்கள் பத்தொன்பதாம் நாள் ஆகும். இத்தீவில் நான் குடித்தனம் செய்தது இருபத்தெட்டு ஆண்டுகளும், இரண்டு திங்களும், பத்தொன்பது நாளும் ஆகும். முதல் முறை என்னைச் சிறை பிடித்து வைத்திருந்த ஸல்லி நாட்டு முகமதியர் இடத்தினின்று நான் நீண்ட ஓடம் ஒன்றில் ஏறி மறைந்து சொல்லாமல் ஓடியதும், இரண்டாம் முறை சிறையிருந்த தீவைவிட்டு நீங்கி மரக்கலம் ஏறியதும் ஒரே திங்கள் ஒரே நாள். இம் மரக்கலத்தில் பயணப்பட்டு நாட் கள் பல சென்ற பின், கி. பி. 1687-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 11-ஆம் நாள் இங்கிலாந்தை அடைந்தேன். ஆகவே நான் இங்கிலாந்தைவிட்டு நீங்கி நாடு சுற்றித் திரிந்த காலம் முப்பத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன.

## இங்கிலாந்தில் என் நிலைமை

இங்கிலாந்திற் சேர்ந்தபொழுது, எல்லா மக்களுக்கும் நான் அயலானாகவே இருந்தேன். எனக்கு உதவி செய்த வளும், நம்பிக்கையுடன் என்னுடைய பணத்தை ஒப்புக் கொண்ட உண்மை தவறாதவளும் ஆகிய அம்மை உயி ரோடு இருந்தாள். அவளுக்கு நேர்ந்த துன்பங்களும் கேடு களும் பல. இரண்டாம் மணம் செய்துகொண்டிருந்த அவள் மீண்டும் கைம் பெண்ணாகி, வாழ்க்கை நடத்துவ தற்கும் இயல்பின்றி இருந்தாள். எனக்குத் தரவேண்டிய கடன் பணத்தைக் குறித்துக் கலங்காதிருக்கும்படி நான் அவளைத் தேற்றினேன். நான் என்னுடைய பணத்தைக் கேட்டு அவளை வருத்துவது இல்லை என்று உறுதிமொழி கூறினேன். முன்பு அவள் என்னிடத்தில் அன்போடிருந்து என்னைப் பாதுகாத்த நன்றிக்குக் கைம்மாறாக என்னிடத் தில் இருந்த சிறிது அளவு பணத்தில் ஒரு பங்கு அவளுக் குக் கொடுத்தேன். அப்பொழுது என்னிடத்தில் பணம் மிகக் குறைந்த அளவில் இருந்ததனால், மிகுதியாகப் பொருள் உதவி செய்ய என்னால் இயலவில்லை. முன்பு அவள் எனக்கு அன்புகூர்ந்து செய்த நன்றியை நான் எப் பொழுதும் மறப்பதில்லை என்று உறுதிமொழி அளித் தேன். நான் அவளுக்கு உதவி செய்யத்தக்க செல்வ முடையவன் ஆனபோது இதை மறக்கவே இல்லை. பிறகு யார்க்ஷயர் மாகாணத்திற்குச் சென்றேன். அங்கிருந்த என் தாய் தந்தையர் முதலிய குடும்பத்தார் அனைவரும் இறந்துபோனார்கள். என் உடன் பிறந்த தங்கைமார் இரு வரையும், என் அண்ணன் ஒருவனுடைய பிள்ளைகளையும் மட்டும் கண்டேன். நீண்ட நாட்களுக்கு முன்பே அவர்கள் என்னை இறந்தவரில் ஒருவனாக எண்ணியிருந்ததனால், பெற்றோருடைய பொருளில் என்னுடைய பாகத்தைத் தனியே எடுத்து வைக்கவில்லை. விரிவாக இனி என்ன கூறவேண்டும்? எனக்கு உதவியும் துணையும் ஒன்றும் இல்லை. நான் வைத்திருந்த மிகக் குறைந்த பொருள் அங் கிருந்து வாழ்வதற்குப் போதுமானது அன்று.

ஆனாலும், நான் செய்திருந்த நன்மைக்கு எனக்கு ஒரு பதில் உதவி கிடைத்தது. அதை நான் எதிர்பார்த்திருக்க வில்லை. உரிய வேளையில் கெடு நினைப்பாளர் இடத்தி னின்று என்னால் விடுதலை பெற்ற மாலுமி தன்னையும், மற்றக் கடலோடிகளையும், நான் பாதுகாத்த வரலாற்றை யும், கப்பலையும் அதில் இருந்த பொருள்களையும் அக் கொடியோரிடம் இருந்து மீட்ட செய்திகளையும், கப்பல் உரிமையாளரிடம் விவரமாய்ச் சொன்னான். அவற்றைக் கேட்ட உரிமையாளரும் அவர்களுடன் தொடர்பு கொண்ட வேறு சில வணிகரும் என்னை அழைத்து என்னைப் பல படப் பாராட்டி, இருநூறு பவுனையும் அன்பு அளிப்பாகக் கொடுத்தார்கள்.

**லிஸ்பன் நகரம் சென்றேன்**

என் வருங்கால வாழ்க்கை முறைகளையும், என் செல் வத்தின் நிலையையும் பலவாறு நினைத்துக் குடித்தனம் செய்வதற்கு இப்பொருள் போதாது என்று உணர்ந் தேன். அதனால் **லிஸ்பன்** நகரத்திற்குப் போகவும், அங்கே தகுதியான மனிதரைக் கண்டு, **பிரேஜில்** நிலப்பகுதியில் உள்ள எனது தோட்டத்தின் வரலாறுகளையும், என் கூட்டாளியின் செயல்களையும் கூடியவரையில் கேட்டு அறியவும் எண்ணினேன். என்னுடைய கூட்டாளி சில ஆண்டுகளுக்கு முன் நான் இறந்து போனேன் என்று எண்ணியிருந்ததாகச் சில குறிப்புக்களால் தெரிந்தேன். மேற்கூறிய கருத்துடன் நான் **லிஸ்பனுக்குப்** போகும் கப்பலில் ஏறி, அடுத்த ஏப்பிரல் திங்களில் அவ்விடத்திற் சேர்ந்தேன். என்னுடைய அடிமை ஆள் வெள்ளிக்கிழமை யும் எந்த நேரத்திலும் என்னிடத்தில் மிகுந்த அன்பும் நன்றியும் உள்ள தொண்டனாய் இருந்து, நான் போகும் இடங்கள்தோறும் என்னுடன் வந்தான். **லிஸ்பனில்** சேர்ந்தவுடன், முன்பு ஆப்பிரிக்கக் கரைக்கு அருகில் என்னைக் கடல் வழியில் கண்டு தமது கப்பலில் ஏற்றிக் கரை சேர்த்த எனது பழைய நண்பராகிய மாலுமி இருக் கும் இடத்தைக் கேட்டு அறிந்து, சென்று, அவரைக்

கண்டு களி கூர்ந்தேன். அவர் கிழப்பருவம் அடைந்திருந்த தனுல் கப்பல் ஓட்டும் தொழிலைக் கைவிட்டுத் தமது மைந்தனை மாலுமியாக ஏற்படுத்தியிருந்தார். அவன் நாற்பதாட்டை ஆடவன். அவன் **பிரேஜில்** நாட்டிற்கு வாணிகத் தொடர்புகொண்டு போய் வருவது வழக்கம். அகவை முதிர்ந்த கிழ மாலுமி என்னை இன்னுன் என்று அறியவும் இல்லை. நானும் அவரை எளிதில் அறியவில்லை. பின்பு இருவருக்கும் தொடக்க நாளில் அறிமுகம் உண்டான நிலையை எடுத்துச் சொல்லி நான் இன்னுன் என்று அவருக்குத் தெரியப்படுத்தினேன்.

**என் தோட்டம் பற்றிய கேள்விகள்**

பழைய நட்பைப் பாராட்டி, இருவரும் பரிவு கூர்ந்து, சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்தபின், என் தோட்டத்தையும் கூட்டாளியையும்பற்றிக் கேட்டேன். கிழவராகிய மாலுமி "சென்ற ஒன்பது ஆண்டுக்காலத்தில் நான் பிரேஜில் நாட்டுக்குப் போகவில்லை. கடைசியாய் நான் அங்கிருந்து புறப்பட்டபொழுது, உன்னுடைய கூட்டாளி உயிரோடு இருந்தது அறிவேன். உனக்குப் பதிலாக இருந்து உன் பங்குக் கணக்கை எழுதி வைக்குமாறு நீ அவருடன் தொடர்புபடுத்தி வைத்திருந்த செயலாளர் இருவரும் இறந்துவிட்டார்கள். அவர்கள் இறந்துபோன பிறகு மேலும் மேலும் வளர்ச்சியடைந்த உன் தோட்டத்தின் வருமானம் வீணுகவில்லை. அதைக் குறித்துத் தவறு இன்றிக் கணக்கு வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுதும் அவ்வாறே இருக்குமென்று நம்புகின்றேன். நீ ஏறிப் போன கப்பல் அழிந்து போனதால், நீயும் கடலில் முழுகி இறந்தாய் என்று உறுதியாக எல்லோரும் எண்ணிவிட்டார்கள். அதனுல் உன் செயலாளர்கள் தோட்டத்தில் உன் பங்கில் விளைந்ததனுல் வந்த பொருளைக் கணக்குப்படி கருவூலக் காப்பாளரிடம் ஒப்புவித்தார்கள். அவர் அதை மூன்று பங்காகப் பிரித்து, நீ ஒருபொழுதும் வாராதிருந்தால், ஒரு பங்கை மன்னனுக்கும், மற்ற இரண்டு பங்கையும் வறியோர்க்குப் பயன்படுமாறும், இந்தியரைக் கிருத்

துவ நெறியிற் சேர்த்துக் கொள்ளும் பொருட்டுச், செல விடுவதற்கு **தூய ஆகஸ்டின்** என்னும் துறவிகள் மடத்திற் கும் கொடுத்தார். நீயாவது உன் பொருளுக்கு உரியவர்க ளாவது வந்து கேட்டால் அதை ஒப்புவிக்க வேண்டும் என்றும், ஆண்டுதோறும் அதற்கு வரும் வட்டி அறச் செயல்களில் செலவழிந்து போகும் ஆதலால், அதைமட் டும் கொடுப்பது இயலாது என்றும் திட்டம் செய்தார். குடிகளுடைய நிலத்தின் விளைவில் ஆண்டுதோறும் அரச னுக்குச் செலுத்தும் பொருளின் பங்கைக் கணக்கிடும் அதிகாரியும், துறவிகள் மடத்து வருமானத்தை வைத்துப் பாதுகாக்கும் அதிகாரியும், ஆண்டுதோறும் உன்னுடைய கூட்டாளி தோட்டத்தின் பயனைக் குறித்து எழுதிக் கொடுக்கும் கணக்கை நுட்பமாய் ஆராய்ந்து, அதில் உன் பங்குக்கு வருவது இவ்வளவு என்று கண்டு அதை வாங்கிக் கொண்டு வந்தார்கள். உனக்கு இக்கணக்கைப் பற்றி எள்அளவும் ஐயம் உண்டாதற்கு வழியில்லை." என்பதாகச் சொன்னார்.

**என் தோட்டத்தின் பிற்கால நிலை**

தோட்டம் எவ்வளவு வளர்ச்சி அடைந்தது என்று அறிவீரா? அதை ஒரு பொருள் என்று எண்ணி, அதில் எண்ணம் வைத்துச் சென்றால், எனக்கு ஏதேனும் பயன் கிட்டுமா? நான் போன பிறகு முறைப்படி என் பங்குக்கு வரும் பயனை நான் என் உடைமை ஆக்கிக்கொள்வதற்கு ஏதாயினும் தடை ஏற்படுமா? என நான் கேட்டேன்.

அவர் "உன் தோட்டத்தின் வளர்ச்சி இவ்வளவு என்று திட்டமாய் எனக்குத் தெரியாது. இஃது ஒன்று மட்டும் அறிவேன். உன் கூட்டாளி தனக்கு வரும் பங் கைச் சேர்த்துத் திரண்ட செல்வந்தன் ஆனான். மேலும் உன் பொருளில் அரசனுக்குக் குறித்த மூன்றில் ஒரு பங்குதானும் மற்றொரு துறவி மடத்திற்கோ, கடவுள் நெறி வளர்க்கும் வேறு ஒரு நிலையத்துக்கோ கொடுக்கப் பட்டது என்றும், அஃது ஆண்டுஒன்றுக்கு இருநூற்றெழு

பது பவுன் வரையில் தொகையேறும் என்றும் கேள்விப் பட்டதாக எனக்கு நினைவு இருக்கிறது. தோட்டம் முத லியவற்றுக்கு உரியவன் நீதான் என்று சான்று கூறுவ தற்கு உன்னுடைய கூட்டாளி இன்றளவும் உயிரோடு இருப்பதனாலும், உன் பெயர் அந்த நாட்டு மக்களின் பெயர் அட்டவணையில் பதிந்திருப்பதனாலும், நீ உன் பொருள்களை எளிதில் கைக்கொள்வதற்கு எவரும் தடை செய்ய மாட்டார். இதற்கு ஐயம் இல்லை. அன்றியும் உன் செயல் தலைவர்கள் இருவருடைய மைந்தர்கள் உண்மையாளர்கள்; வஞ்சனையில்லாதவர்கள்; கோடிக் கணக்கான செல்வம் படைத்தவர்கள். நீ உன் சொத்தை உரிமையாக்கிக் கொள்வதற்கு அவர்கள் உனக்கு உதவி செய்வதும் அன்றிக், காலம் சென்ற அவர்கள் தந்தையர் உன் செயல் தலைவராய் இருந்த வரையில் உன் பங்குக்குச் சேர்த்து வைத்த திரண்ட பணம் இப்பொழுது தங்கள் கையில் இருப்பதனால் அதையும் உனக்குக் கொடுத்து விடுவார்கள். அவர்கள் உன் செயல் தலைவர்களாய் இருந்தது பன்னிரண்டு ஆண்டுகள் என்று எண்ணுகின் றேன்." என்றார்.

அவர் கூறியவற்றைக் கேட்டு, நான் சிறிது மனக் கவலை கொண்டு, பின்வருமாறு கூறினேன். "ஐயா, நான் இறுதிமுறி எழுதினதும், போர்த்துக்கீசிய மாலுமியாகிய உம்மையே என் பொருளுக்கு முழு உரிமை உடையவராக ஏற்படுத்தியதும் அறிவீரே. இப்படியிருக்க என்னுடைய செயல் தலைவர்கள் என் பொருளை மேற்கூறியவாறு வேறு வழியில் செலவழிக்கத் திட்டமிட்டது எவ்வாறு பொருந் தும்?" எனக் கேட்டேன்.

மாலுமி: "நீ கூறுவது உண்மைதான்; நீ இறந்தாய் என்பதற்குச் சான்று இல்லாததனால், உன் இறப்பைக் குறித்து உண்மைச் செய்தி அறிகிற வரையில் நான் உனது இறுதிமுறிச் செயல் தலைவனாகத் தலையிட்டு ஒன் றும் செய்தற்கு இயலாது போயிற்று. மேலும் நெடுங் காலத்துக்கு முன் நிறைவேறிய இச் செய்திகளில் தலையிடு

வதற்கு நான் விருப்பம் கொள்ளவும் இல்லை. நீ எழுதிய இறுதிமுறியை நான் ஆவணக்களரியிற் பதிவு செய்யும்படி செய்ததும், என் உரிமையைக் குறித்து எடுத்துச் சொல்லியதும் உண்மைதான். நீ இறந்து போனாய் என்பதற்கும், அல்லது நீ இறவாது உயிரோடு இருக்கின்றாய் என்பதற்கும் எவ்வாறாவது சான்று காட்டமுடியுமானால், நான் உன் செயலாளனாக இருந்து வழக்கு நடத்தி, என்மீது உரிமையை நிலைக்கச் செய்து, சர்க்கரை தூய்மைப்படுத்தும் நிலையத்தை என்னுடையதாகக் கைப்பற்றிக்கொண்டு, இப்பொழுது பிரேஜில் நாட்டிற்குச் சென்றிருக்கும் என் மகன் இடத்தில் ஒப்புவித்துத் தொழில் நடத்தும்படி திட்டம் செய்திருப்பேனே. நிற்க இன்னும் ஒரு செய்தி சொல்லுகின்றேன். இதுவரையிற் கூறிய செய்திகளைப் போல அஃது உனக்கு மகிழ்ச்சியாய் இராது. உன்னை அறிந்த யாவரும் நீ இறந்து போனாய் என்று உறுதியாய் நம்பியிருந்ததனால், உன் கூட்டாளியும், செயல் தலைவர்களும் என்னை உன் ஆணையாளராக வைத்து, முதல் ஆறு எட்டு ஆண்டுகளில் தோட்டத்தின் பயனைக் கணக்குப் பார்த்து, உன் பங்கை என் கையிற் கொடுத்தார்கள். நான் ஒப்புக் கொண்டேன். அக்காலத்தில் தொழிலை வளர்த்து மிகுதிப்படுத்துவதற்கும், சர்க்கரை தூய்மை செய்யும் கட்டடம் ஒன்று கட்டுவதற்கும், அடிமைகளை விலைகொடுத்து வாங்குவதற்கும் பணச்செலவு அதிகம் நேரிட்டதனால், பிற்காலத்தில் சேர்ந்த பணத்தின் அளவு முதலில் தேறவில்லை. ஆனாலும் எனது வரவு செலவைக் குறித்து உள்ளபடி எழுதிவைத்த கணக்கு ஏடுகளை உன்னிடத்திற் கொடுப்பேன்" என்று கூறினார்.

**மாலுமி கொடுத்த கணக்கும் பணமும்**

பின்னும் சிலநாள் வரையில் தள்ளாத நிலையில் இருந்த மாலுமியும் நானும் உரையாடிக் கொண்டு இருந்தோம். பின்பு ஒருநாள் அவர் என்னுடைய கூட்டாளியும், வணிகராகிய செயல் தலைவர்களும் முதல் ஆறு ஆண்டுகளில் விளைந்த தோட்டத்தின் பயன் என்று

கணக்கு எழுதிக் கையொப்பம் இட்டுக் கொடுத்திருந்த ஏட்டை எடுத்துக்கொண்டு வந்து என்னிடம் காண்பித்தார். அவர்கள் ஒவ்வொரு ஆண்டின் விளைவிலும் எனக்கு வரும் பங்கை விற்றுப் பணமாகக் கொடுக்காமல் பொருளையே கொடுத்திருந்தார்கள். புகையிலை சுருள் சுருளாகவும், சர்க்கரை பெட்டிகளில் வைத்து அடைத்தும் ஒப்புவிக்கப்பட்டன. மேலும் சர்க்கரையைத் தூய்மை செய்து அதில் உண்டாக்கிய ரம்சாராயம், சர்க்கரைப் பாகு முதலியவைகளும் ஒப்புவிக்கப்பட்டன. இந்தக் கணக்கைப் பார்வையிட்டபொழுது ஆண்டு தோறும் ஒவ்வொரு வண்ணமாய்ப் பயன் மிகுதிப்பட்டது என்பது தெரிந்தது. ஆயினும் மேற் சொல்லியபடி செலவு ஏறியதனால் பயன் சிறிது அளவாகவே இருந்தது. அறுநூற்று முப்பத்தைந்து பவுனும், அறுபது பெட்டி சர்க்கரையும், புகையிலை பதினைந்து இரட்டைச்சுருளும் எனக்குக் கொடுத்திருப்பதாகக் கணக்கில் பதிந்திருந்தது கண்டேன். அதை அவர் எனக்கு மறைக்கவில்லை. நான் பிரேஜில் நாட்டுப் பகுதியை விட்டு நீங்கி ஏறத்தாழப் பதினோர் ஆண்டுகள் சென்ற பின், அவர் லிஸ்பன் நகரத்திற்குத் திரும்பி வரும் வழியில் கப்பல் உடைந்து, அதில் இருந்த மேற்கண்ட பொருள்கள் கடலில் முழுகிப்போயின என்று தெரியவந்தது. நற்பண்புகளையுடைய அந்த மாலுமி தமக்கு நேரிட்ட துன்பங்களையும், தாம் அடைந்த இழப்புக்கு ஈடாக என்னுடைய பணத்தைக் கொடுத்து வேறொரு புதிய கப்பலில் தாம் பங்கு சேர்ந்ததையும் சொன்னார். பின்பு அவர்: "என் அன்புள்ள நண்பனே, இதைக் குறித்து நீ கவலைப்பட வேண்டா. உனக்குப் பேரிடர் நேர்ந்திருக்கும் இந்த வேளையில் நான் உன்னை வறுமையில் கிடக்கச் செய்யேன். என்னுடைய மகன் இக்கரை சேர்ந்த உடனே உனக்குச் செலுத்தவேண்டிய கடனைத் தவறாமற் செலுத்துவேன்." என்று உறுதிமொழி கூறித் தன் சட்டை உறைக்குள் வைத்திருந்த பழைய பணப்பை ஒன்றைத் திடீர் என்று எடுத்து நூற்றுத்தொண்ணூற்றாறு பவுன் விலை மதிப்புடைய தங்க நாணயங்களை என் கையிற் கொடுத்தார். அப்

புறம் எனக்குச் செலுத்த வேண்டிய கடன் நிலுவைக்கு ஈடாக மேற்கூறிய கப்பல் விலை முறிச்சீட்டு இரண்டைக் கொடுத்தார். ஒன்றில் கப்பலின் காற்பங்கு அவருக்கு விற்கப்பட்டதாகவும், மற்றதில் எஞ்சிய பங்குகள் அவர் மகனுக்கு விற்கப்பட்டதாகவும் எழுதப்பட்டிருந்தது. அக் கப்பலிலேயே அவர் மகன் பிரேஜில் நாட்டுக்குப் போயிருந்தான்.

**மாலுமிக்கு நான் திருப்பிக் கொடுத்த பணம்**

செல்வம் குறைந்து சிறுமையடைந்து இருந்த மாலுமியிடத்தில் விளங்கிய உண்மைத் தன்மையையும், இரக்கத்தையும் கண்டு, என் மனம் மெழுகுபோல் உருகியது. அவர் எனக்குச் செய்த உதவியையும், கடல் வழியிற் கண்டு, என்னைத் தமது மரக்கலத்தில் ஏற்றிக்கொண்டு போனதையும், பல நாட்கள் உணவு அளித்துக் காக்கும் தந்தையைப்போல என்னைப் பாதுகாத்துக்கொண்டு வந்ததையும், முதன்மையாய் அவர் எனக்குக் களங்கம் அற்ற நண்பராய் இருந்ததையும் நினைத்தபொழுது, அவர் வாய்மொழியை நினைத்து அழாமல் இருக்க என்னால் முடியவில்லை. "இப்பொழுது நீர் என்னிடம் இவ்வளவு பொருளைக் கொடுத்துவிட்டு, உம்முடைய குடும்பத்தைப் பொருள் முடையின்றி உம்மால் பாதுகாக்க முடியுமா?" என்று கேட்டேன். "சிறிது பொருள் முட்டு உண்டாகும் என்பது உண்மையே. ஆனாலும் இஃது உன் பணம் அன்றோ? என்னைவிட உனக்கே பணமுட்டு அதிகம் அல்லவா?" என மாலுமி கூறினார்.

நற்பண்பு உடைய அவர் கூறிய சொல் ஒவ்வொன்றும், மனம் உருகிச் சொன்னதாய்க் காணப்பட்டது. அவர் பேசப் பேச என் கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. அதைத் தடுக்க என்னால் முடியவில்லை. சுருக்கமாகக் கூறி முடிக்கிறேன். அந்தப் பணத்தில் நூற்று முப்பத்தைந்து பவுன் எடுத்துக்கொண்டு, இறகும் மையும் தருவித்து, அதற்குப் பற்றுச் சீட்டு எழுதி, அச்சீட்டையும் எஞ்சிய பணத்தை

யும், அவரிடத்தில் திருப்பிக் கொடுத்துத், தோட்டத்தை நான் என்னுடைமையாகக் கையகப்படுத்திக்கொள்ள நேர்ந்தால் மற்றப் பணத்தையும் திருப்பிக் கொடுத்துவிடுவேன் என்றும், அவர் மகனுடைய கப்பலில் அவருக்குண்டான பாகத்தைக் குறிக்கும் விலை முறிச்சீட்டை நான் ஒருபொழுதும் வைத்திருக்க மாட்டேன் என்றும், நிலுவைத் தொகை எனக்குத் தேவையாக இருந்தால் அவருடைய வாய்மொழியே அதற்கு உரிய ஈடு ஆகும் என்றும் கூறினேன். மேலும் தோட்டம் என் கைக்கு வந்து அப்புறம் பணம் தேவையில்லாதிருந்தால், ஒரு சிறிது அளவாவது பணம் அவரிடம் வாங்குவது இல்லை என்றும, சொன்னேன்.

**தோட்டத்தின் பயனைப் பெறுவது எப்படி**

இது முடிந்தபின், அக்கிழவர் 'தோட்டத்தைக் குறித்து வழக்குத் தொடர வழி சொல்லித் தர வேண்டுமா' என்று கேட்டார். நான் அத்தோட்டம் இருக்கும் இடத்திற்குச் செல்ல எண்ணம் கொண்டிருப்பதாய்க் கூறினேன். அதற்கு அவர் "விருப்பமானால் போகலாம்; போகாதிருந்தாலும், உன் உரிமையைக் கைக்கொள்வதற்கும், உடனே தோட்டத்தின் பயனை உன் செலவிற்கு உதவும்படி செய்வதற்கும் தகுதியான வழிகள் உண்டு" எனக் கூறினார். பின்பு லிஸ்பன் துறையில் பிரேஜில் நாட்டுக்குப் பயணப்பட மரக்கலங்கள் முன் ஏற்பாட்டுடன் இருந்ததனால், அவர் எனது பெயரையும், நான் உயிரோடு வாழ்வதையும், பிரேஜில் நாட்டில் மேற்கூறிய தோட்டம் அமைப்பதற்கு நிலம் வாங்கிய மனிதன் நானே என்பதாகவும் தாம் உறுதி முறி ஒன்று எழுதி அதனை அரசாங்க ஆவணக்களரியில் பதிவு செய்தார். இந்த முறி ஏட்டில் முறைமைப்படி முறி எழுதுவோனைக்கொண்டு கையொப்பம் இடச்செய்து, அதனுடன் பதில் ஆணையாளர் அதிகாரத்தாளையும் சேர்ப்பித்தார். இத்தாள்களையும் தாம் எழுதிய கடிதம் ஒன்றையும் பிரேஜில் நாட்டில் இருக்கும் தமக்கு அறிமுகமான ஒரு வணிகருக்கு அனுப்பச் சொல்லி,

என்னுடைய தோட்டப் பயனைப்பற்றிய கணக்கு வரலாறு கள் வந்து சேரும் அளவும் என்னைத் தம்முடன் இருக்கச் சொன்னார்.

**தோட்டத்தின் பழைய நிலுவைகள் வந்தன**

இந்த அதிகார முறியைப்போல் அவ்வளவு முறைமை யாய் எவ்வித உண்டியும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. என்னைக் கடல் வழியில் செல்வதற்கு உடன்படுத்தி அனுப்பிய செயல் தலைவர்களின் மைந்தர்களாகிய வணிகர் களிடத்திலின்று பெருஞ்சிப்பம் ஒன்று ஏழு திங்களுக்குள் வரப்பெற்றேன். அதற்குள் பின் குறிக்கப்படும் சிறப்பான கடிதங்களும் உறுதி முறிகளும் அடக்கம் செய்யப்பட் டிருந்தன.

முதலாவது ஆறு ஆண்டு அளவும் எனது தோட் டத்தின் பயன் காட்டும் வரவு செலவு கணக்கு அவர்கள் தந்தையர் அந்த ஆறு ஆண்டுக்கணக்கைக் கிழவராகிய போர்த்துக்கீசிய மாலுமியிடம் தீர்த்து, எனது வரவு கணக்கில் பதிந்திருந்த நிலுவை ஆயிரத்து ஐந்நூற்று எண்பத்து நான்கு பவுன் பதினெட்டு ஷில்லிங்.

இரண்டாவது : அப்புறம் நான்கு ஆண்டுகளில் தோட்டத்தில் கிடைத்த பயனுக்கு வரவு செலவு கணக்கு. இந்த நான்கு ஆண்டுப் பயனும் என்னுடைய கூட்டாளி களின் இடத்தில் இருந்தது. அதில் செலவு தள்ளி எனது வரவு கணக்கில் பதிந்த நிலுவை நாலாயிரத்து முந்நூற்று எழுபத்தைந்து பவுன் ஏழு ஷில்லிங் மேற்குறித்த நான்கு ஆண்டு கழிந்தபின், நான் இறந்ததும் இறவாதிருப்பதும் தெரியாததனாலும், மேலும் இறவாதிருந்தாலும் இருக்கும் இடம் முதலியன ஒன்றும் தெரியாமையினாலும், அவர்கள் அரசாட்சி முறைப்படி எனது தோட்டப் பயனைத் தம் முடையதாக ஒப்புக்கொண்டு பயன்படுத்தி வந்தார்கள். ஒருவன் தன் ஊரைவிட்டு நீங்கி, வாழும் இடம் தெரியாமல் இருந்தால், அதற்குச் சட்ட நூல்கள் "நாட்டு உரிமை இழந்த நிலை" எனப் பெயர் கூறும்.

மூன்ருவது, தூயஆகஸ்டின் மடத்துத் தலைவர் வைத்திருந்த கணக்கு: அவரிடம் கொடுக்கப்பட்ட பதினன்கு ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலத்தின் பயன், அதில் மேற்கூறிய அறநிலைய மேற்பார்வையாளர்களால் செலவழிக்கப்பட்ட தொகை இவ்வளவென்று கணக்கு வரையறை செய்ய முடியாமையினல், அவர், செலவாகாமல் என் கணக்கில் தம்மிடம் இருந்த தொகை ஆயிரத்து நூற்று எழுபத்தேழு பவுன் நான்கு ஷில்லிங் என்று உண்மையாய்க் கூறினர். அரசனுக்குக் குறித்த பாகத்தின் கணக்கில் எனக்கு ஒரு காசும் வரவில்லை.

### என் கூட்டாளியின் நன்றி மறவாத் தன்மை

மேலும், என்னுடைய கூட்டாளி நான் உயிரோடு இருப்பதைப்பற்றி மிகவும் உருக்கமாய் வாழ்த்துக் கூறித், தோட்டம் ஆண்டுதோறும் வளர்ச்சியடையச் செய்த விதத்தையும், ஆண்டு ஒன்றுக்கு அதன் பயனுகக் கிடைத்த ஊதியத்தையும் தோட்டத்தின் பரப்பு வளர்ந்த முறையையும், அதில் பயிரிட்ட பொருள்களின் வகையையும், அதில் வேலை செய்யும் அடிமைகளின் வகையையும் விளக்கமாய் எழுதி, இருபத்திரண்டு சிலுவை அடையாளம் இட்டு, தெய்வ அன்னையை வழிபட்டு வணங்கி எழுதிய கடிதம் ஒன்று வந்து சேர்ந்தது. நான் உயிரோடு இருந்த நற்செய்தி அறிந்ததைப்பற்றி, இருபத்திரண்டு முறை தெய்வ அன்னையின் மறைமொழியை நாவினல் கூறி வணங்கி வாழ்த்தியதாக எழுதி அனுப்பினர். அன்றியும் பிரேஜில் நாட்டுக்கு வந்து தோட்டத்தைக் கைக்கொள்ளும்படி என்னை மிகவும் அன்பாய் வருந்தி அழைத்திருந்தார். நான் வர முடியவில்லையானல், என் பொருள்களை இன்னரிடம் ஒப்புவிக்க வேண்டும் என்று தமக்கு எழுதித் தெரிவிக்கச் சொன்னர். இறுதியில் தாமும், தமது குடும்பத்தாரும் மிகுந்த மனநட்புடன் எனக்கு வணக்கம் சொல்வதாக எழுதினர்.

### என் கூட்டாளி அனுப்பிய பொருள்கள்

அவர் செம்புலித்தோல் ஏழு எனக்கு அன்பு அளிப்பாய் அனுப்பினார். அவர் ஆப்பிரிக்காவுக்கு வேறொரு கப்பலை அனுப்பியிருந்ததாகவும், அக் கப்பல் என் கப்பலைப் போல அழிந்துபோகாமல் மிக்க விரைவில் திரும்பி வந்ததாகவும், இச் செம்புலித்தோல் அதன் வழியாய் வரப்பெற்றதாகவும் எழுதியிருந்தார். அன்றியும், மிக்க சுவையுள்ள ஐந்து பெட்டி நிறைந்த பலகாரமும், நாணய அச்சுப் பதியாத பொன் நூறும் அனுப்பினார். மேற்கூறிய பொருள்களைக் கொண்டுவந்த மரக்கலங்களிலேயே என்னுடைய உடன் கூட்டாளிகளாகிய வணிகர் இருவரும் ஆயிரத்து இருநூறு பெட்டி சர்க்கரையும், எண்ணூறு சுருள் புகையிலையும், எஞ்சிய பொருள் விற்ற பணமும் ஏற்றி அனுப்பினார்கள். வந்த தொகை முழுவதும் தங்க நாணயம்.

### புதிய செல்வத்தைக் கண்டு நான் மூர்ச்சித்து விடுதல்

முதலில் **யோப்** என்பவனுக்கு இருந்த செல்வத்தை விட, முடிவில் அவன் பெற்ற செல்வம் அதிகம் என்று சொல்வார்கள். என்னைப்பற்றியும் அவ்வாறே கூறுதல் தகும். எதிர்பாராத வண்ணம் வரப்பெற்ற செல்வப் பொருள் எல்லாவற்றையும் கண்டவுடன் என் நெஞ்சு பறவை சிறகு அடிப்பதுபோலப் பட பட என்று துடித்ததனால், எனக்கு உண்டான தடுமாற்றம் இவ்வளவு என்று சொல்வது இயலாது. **பிரேஜில்** நாட்டினின்று வரும் கப்பல்கள் சிதருமற் கூட்டமாய் வருவது வழக்கம் ஆதலால், கடிதம் முதலியவற்றைக் கொண்டுவந்த கப்பல்களிலேயே என்னுடைய பொருள்களையும் கொண்டுவந்தனர். கடிதம் முதலியன என் கையில் வந்து சேருமுன் என் பொருள்கள் எல்லாம் ஆற்றில் நின்ற மரக்கலங்களில் பாதுகாப்பாய் இருந்தன. சுருக்கமாய்க் கூறுகிறேன். இச் செய்தி கேட்டவுடன் நான் முகம் வெளுத்து, வாடி, நோயாளியைப்போல ஆனேன். கிழமாலுமி விரைந்து ஓடி, இனிய பழச்சாறு கொண்டு வந்து குடிக்கக் கொடுத்து, என்னை

ஊக்கம் கொள்ளச் செய்தார். அவர் அங்ஙனம் செய்யா திருப்பாரானால் விரைவில் உண்டான மகிழ்ச்சி வெள்ளத் தில் நான் மூச்சுத்திணறி வீழ்ந்து இறந்து போயிருப்பேன். இனிய குடிநீர் பருகிய பின்னும் நெடுநேர மட்டும் நான் மிக வருந்தித் துன்பப்பட்டேன். பின்பு மருத்துவரை வர வழைத்துக் காட்டினர். அவர் எனக்கு விரைவில் நோய் உண்டானதற்குக் காரணம் இன்னது என்று அறிந்து உடம்பிலிருந்து குருதியை ஊசியாற் குத்தி எடுத்தார். அதன் பின் வருத்தம் நீங்கி உடல் நலம் அடைந்தேன். இவ்வாறு என் மனத்தடுமாற்றத்தால் உண்டான துன் பத்தை நீக்கி என்னை நலம் அடையச் செய்யாதிருந்தால் என் உயிர் உடலில் நிற்காது என்று உறுதியாய் நம்பு கிறேன்.

## செய்ந்நன்றி மறவாமை

விரைவில் ஐயாயிரம் பவுனும் **பிரேஜில்** நாட்டில் ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் பவுனுக்கு மேற்பட்ட வரு மானம் உள்ள நிலங்களும் உடைய செல்வன் ஆனேன். இங்கிலாந்தில் இருக்கும் நிலங்களைப்போலவே, **பிரேஜில்** நாட்டில் உள்ள என்னுடைய நிலமும் நிலையான பயன்தரு வதேயாகும. என்னுடைய செல்வத்தின் பெருமை இவ் வளவென்று எனக்குத் தோன்றவில்லை. மனம் பதறு திருந்து அதைத் துய்த்துப் பயன்படுத்தும் முறை யாது என்றும் எனக்குத் தெரியவில்லை. எனக்குப் பேரிடர் வந்த காலத்தில் என்னை அன்போடு ஆதரவு காட்டியவரும், தொடக்க காலத்தில் எனக்கு இரக்கம் காட்டி, முடிவில் என் னுடைய பொருளை உண்மையாய் ஒப்புவித்த என்னுடைய பழைய உதவியாளரும், நற்பண்புடைய கிழவரும் ஆகிய மாலுமிக்கு முதல் முதல் தகுதியான நன்மை செய்ய நினைத் தேன். என்னிடம் வந்து சேர்ந்த செல்வம் எல்லாவற்றை யும் அவருக்குக் காண்பித்தேன். எல்லாச் செயல்களையும் நன்மையாய் முடியுமாறு செய்த இறைவனருளாலும், உமது முயற்சியினாலுமே எனக்கு இந்தத் திரண்ட செல் வம் கிடைத்த"தென்றும், "நீர் செய்த உதவிக்கு நூறு

மடங்கு மிகுதியாகப் பதில் உதவி செய்யும் வன்மை பெற்றேன்" என்றும் சொன்னேன். பின்பு நான் அவரிடத்தில் வாங்கியிருந்த நூற்று முப்பத்தைந்து பவுனையும் திருப்பிக் கொடுத்தேன். அதன் பிறகு முறி எழுதுவோரை வரவழைத்து, மாலுமியின் வாய் மொழியாற் பிறந்த கடன் நிலுவைப் பணம் அறுநூற்று முப்பத்தைந்து பவுனையும் அவர் கொடுத்துத் தீர்த்ததாகக் கடன் நீக்கிய முறிச்சீட்டு ஒன்று எழுதுவித்து, முறைமையானபடி நிறைவேற்றுவித்தேன். அதன்மேல் ஆண்டுதோறும் என் தோட்டத்தின் பயன் வரும்போது பெற்றுக்கொள்ளும்படி நான் அவருக்கு ஆணை முறி எழுதிக்கொடுத்தேன். என்னுடைய கூட்டாளி அவரை என்னுடைய செயலுரிமையாளராக ஒத்துக் கொண்டு, அவரிடம் கணக்குத் தீர்த்து, வழக்கமாய் வரும் கப்பல்களில் தோட்டத்தின் பயனை அவரிடத்திற்கு அனுப்பவேண்டும் என்றும் எழுதினேன். என் ஆணையாளராக அவரை ஒத்துக்கொள்ளும்படி ஆணை உரிமை முறி ஒன்றும் எழுதுவித்தேன். அந்த முறியின் ஈற்றுப் பகுதியில் வாழ்நாள் முழுவதும் ஆண்டு தோறும் என்னுடைய வருமானத்தில் நூற்றுமுப்பத்தைந்து பவுன் மாலுமிக்குக் கொடுத்து வரவேண்டும் என்றும், அவன் இறந்த பின், அறுபத்தேழு பவுன் பத்து ஷில்லிங்கை அவர் மகனுக்கும் நான் கொடுத்து வருவதாகக் கண்டு எழுதுவித்தேன். இந்த வகைகளால் மாலுமி எனக்குச் செய்த உதவிக்கு நன்றி செலுத்தினேன்.

**நான் இனி எங்கே செல்வேன்?**

இனி நான் எவ்விடத்திற்குச் செல்லவேண்டும் என்றும், இறைவன் திருவருளால் எனக்குக் கிடைத்த செல்வத்தை எவ்வாறு பாதுகாப்பது என்றும் ஆராயவேண்டியிருந்தது. தீவின் இடையிலே தனியே அடங்கிக்கிடந்த பொழுது, எனக்கு இவ்வளவு மனக் கவலை இல்லை. அங்கே எனக்கு உள்ளது ஒழிய, மற்றொன்றும் வேண்டியதில்லை. வேண்டுவது ஒழிய மற்றொன்றையும் நான் வைத்திருக்கவும் இல்லை. இப்பொழுது செல்வம் என்னும் பெரிய சுமை

யைச்சுமக்க வேண்டியவன் ஆனேன். ஆதலால் அதைப் பாதுகாப்போடு வைத்து இருப்பது எவ்வாறு என்று ஆராய்ந்துகொண்டு இருந்தேன். என்னுடைய தொகையை ஒளித்துவைக்க மலை முழையும் இல்லை. அதைத் துருப் பிடித்துக் களிம்பேறச் செய்வதற்குப் பூட்டும் திறவு கோலும் இல்லாத இடமும் இல்லை. நான் அதை எவ் விடத்தில் வைப்பேன். எவரை நம்பி ஒப்படைப்பேன். ஒன்றும் தெரியவில்லை. என்னுடைய பழைய நண்பனாகிய மாலுமி உண்மையாளன்தான். அவன் ஒருவனே எனக்குப் பற்றுக்கோடு. இது நிற்க, பொருள் மேற்பார்வையின் பொருட்டு நான் **பிரேஜில்** நாட்டுக்குப்போக வேண்டியிருந் தது. என் செயல்களை நன்றாய் ஆராய்ந்து, பிழை நீக்கி, என் பொருள்களை நம்பத்தக்க பெயரிடத்தில் ஒப்புவிக்கிற வரையில் **பிரேஜில்** நாட்டுக்கு எவ்வாறு போக முடியும்? முதலில் எனக்கு நன்மை செய்த கைம்பெண் நம்பத்தக்க ஒழுங்கு உடையவள் என்று அறிந்ததனால், அவளிடத்தில் என் பொருள்களை ஒப்படைத்தால், அவள் எனக்குக் கேடு செய்யாள் என்று முதலில் எண்ணியிருந்தேன். ஆயினும் அவள் அகவை முதிர்ந்து கிழவியாகிவிட்டாள். மேலும் வறுமையுற்றவள். கடன்பட்டிருப்பினும் இருப்பாள். நிலை இவ்வாறு இருப்பதனால், பொருள்களை எடுத்துக்கொண்டு திரும்பவும் இங்கிலாந்திற்குப் போவது அன்றி, வேறு வழி இல்லை என எனக்குத் தோன்றியது.

**கிழவிக்கும் பொருள் உதவி செய்தேன்**

இப்படித்தான் செய்யவேண்டும் என்று நான் உள் ளம் தெளிந்து தேறுவதற்கு நான்கு ஐந்து திங்கள் சென் றன. ஆதலால் முன்பு, எனக்கு உதவி செய்த கிழவராகிய மாலுமிக்கு முழு மன நிறைவு உண்டாகும்படி நான் எதிர் உதவி செய்ததுபோல, அதற்கு முன் எனக்கு நன்மைகள் செய்த நல்லோருடைய மனைவியாகிய அந்த ஏழைக் கைம் பெண்ணுக்கும், ஏதேனும் நல்ல உதவி செய்யவேண்டும் என்று நினைத்தேன். அவள் செல்வம் உடையவளாய் இருந்த காலத்தில் என்னுடைய பொருள்களை ஏற்றுக்

கொண்டு பாதுகாத்தவள்; என்னிடத்தில் அன்பாய் இருந்தவள்; எனக்கு நல்லறிவுரை கூறியவள்; ஆதலால், லிஸ்பன் பட்டணத்தில் இருக்கும் வணிகர் ஒருவரைக் கொண்டு, இலண்டன் பட்டணத்தில் இருக்கும் அவருடைய செயலாளருக்குக் கடிதம் எழுதுவித்தேன். நூறு பவுனுக்கு உண்டி அனுப்பினேன். அந்த உண்டித் தொகையை மேற்கூறிய செயலாளர் தாமே தேடிப்போய் அந்தக் கைம் பெண்ணைக் கண்டு அவள் கையில் கொடுத்தார். வறுமையில் வாடும் அவளுக்கு நான் உயிரோடு இருக்கும் வரையில் மேலும் மேலும் ஆண்டுதோறும் பொருள் உதவி செய்வேன் என்று தேறுதல் சொல்லும் படியும் கடிதம் எழுதுவித்தேன்.

### என் தங்கைகளுக்குச் செய்த உதவி

அந்நாளில் என்னுடைய தங்கைமார் இருவர் நாட்டுப் புறங்களில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கும் தலைக்கு நூறு பவுன் அனுப்பினேன். அவர்கள் வாழ்க்கையில் வறுமைத் துன்பமில்லாமல் இருந்தனர் எனினும், பெருஞ் செல்வம் உடையவர் அல்லர். ஒருத்தி கைம்பெண். மற்றவள் கணவன் அவளை அன்போடு பாதுகாப்பது இல்லை. என் சுற்றத்தாருள்ளும், எனக்கு அறிமுகம் ஆனவருள்ளும் என் பணம் முழுவதையும் மனம் துணிந்து நம்பி ஒப்புவிக்கத்தக்க மனிதர் யாரும் இல்லை. அவ்வளவு அன்புடையவன் எவனாவது இருந்தால், நான் என் செல்வத்தை ஒப்புவித்து, அது பாதுகாப்பாய் இருக்குமென்று மனம் தேறி பிரேஜில் நாட்டுக்குப் பயணப்பட்டுச் செல்வேன். இப்படிச் செய்வதற்கு இயலாமையால் மனம் வருந்தினேன்.

### பிரேஜில் நாட்டுக்கு நான் போகாதது ஏன்?

பிரேஜில் நாட்டுக்குப் போய், அங்குள்ள குடிகளின் உரிமை எனக்கும் ஒருவாறு உண்டாயிருப்பதனால், அவ்விடத்திலேயே வாழவேண்டும் என்று ஒருமுறை நினைத்தேன். ஆயினும், அங்கிருப்பவர்கள் மேற்கொள்ளும்

கோட்பாடு முறைகள் என் மனத்திற்கு ஒத்து வராததனால் நாளடைவில் அந்த நினைவை மறந்து விட்டேன். ஆனாலும் இப்பொழுது அவ்விடத்திற் போகாதபடி என்னைத் தடுத்தது கோட்பாட்டு முறை மட்டும் அன்று. முன்பு நான் அங்கு இருந்தபோது, என்னுடைய கொள்கையைப் பாராட்டாமல் அந் நாட்டவர்களின் கடவுள் நெறியை மேற்கொண்டு ஒழுகினேன். இப்பொழுதும் அப்படிச் செய்வதற்கு என் மனம் பின்னிடவில்லை. சிலவேளை அண்மைக் காலத்தில் இதைக் குறித்து மிகுதியாய் நினைத்துப்பார்த்தேன். உரோம நெறியாளரோடு பழகி வாழ்ந்து அந்த நாட்டில் இறந்துபோக நேர்ந்தால் எனக்கு நன்மை உண்டாகாது. இறக்கும்போது அஃது எனக்கு மன நிறைவைத் தரத்தக்க நல்ல நெறி அன்று என எண்ணினேன்.

### பிரேஜில் நாட்டுக்குக் கடிதம் எழுதுதல்

முன் சொன்னதையே திருப்பிச் சொல்லுகிறேன். பிரேஜில் பயணத்துக்குத் தடையாக நேர்ந்த முக்கிய காரணம் இஃது அன்று. என் செல்வத்தை ஒப்புவித்து விட்டுப் போவதற்கு எவரும் இல்லாததே அதன் காரணம் ஆகும். ஆதலினால் நான் இங்கிலாந்திற்குப் போக முடிவு செய்தேன். அங்கே போய்ச் சேர்ந்தால் நம்பத் தக்கவர் சிலரை நட்பாக்கிக் கொண்டாவது, என் சுற்றத்தார் சிலரைக் கண்டாவது, அவரிடத்தில் என் செல்வத்தை ஒப்புவிக்க இயலும் என்ற எண்ணங்கொண்டு, என் செல்வம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு இங்கிலாந்திற்குப் போக முயற்சி செய்தேன்.

பிரேஜில் துறையினின்று வந்த கப்பல்கள் மீண்டும் அவ்விடத்திற்குப் போக முன் ஏற்பாடுகள் செய்ததனால், அங்கிருந்து நடுவு நிலை தவறாமல் உள்ளபடி எனக்கு எழுதியனுப்பப்பட்ட வரவு செலவு நிலுவைக் கணக்குகளுக்கு மறுமொழி எழுதியனுப்ப முடிவு செய்தேன். முதலாவது தூய ஆகஸ்டின் மடத்துத் தலைவர் நன்றிக் கேடு செய்யாமல் ஒழுங்கானபடி என் அறநெறிப் பொருளைச் செலவு

செய்து பின்னும் தொகையாய் வைத்திருக்கும் ஆயிரத்து நூற்றெழுபத்தேழு பவுன் நான்கு ஷில்லிங் தொகையை எனக்குக் கொடுக்க வைத்திருப்பதாகத் தெரிவித்ததைப் பற்றி அவருக்கு மிகுந்த வணக்கம் தெரிவித்து ஒரு கடிதம் எழுதினேன். அந்தப் பணத்தில் அறுநூற்றெழுபத்தைந்து பவுனை மடத்திற்கும், எஞ்சியதை மடத்தின் தலைவர் விதிக்கும் திட்டத்தின்படி வறியோர்க்கும் கொடுக்கச் சொல்லி, அக்கடிதத்திற் கண்டு எழுதினேன்.

மேலும் எனக்காகக் கடவுளை வேண்டிக் கொண்டு வழிபாடு ஆற்றவும், இறைவன் திருவருள் எனக்கு உண்டாகும்படி அவ் விறைவனை வேண்டிக் கொள்ளும்படியும் நற்பண்பு உடைய அந்த மடத்தின் தலைவரை இரந்து கேட்டு எழுதினேன். இரண்டாவது என்னுடைய செயல் தலைவர்கள் இருவரிடத்திலும் விளங்கிய மாறுபடாத நன்னெறியையும், உண்மையையும் பாராட்டி, அவர்களைப் புகழ்ந்து ஒரு கடிதம் எழுதினேன். அன்பளிப்பு ஏதாயினும் அவர்களுக்கு அனுப்புவதற்கும் நான் விரும்பவில்லை. ஏன் எனின் கோடிக்கணக்கான செல்வம் பெற்ற அவர்கள் மகிழுமாறு எதனை அனுப்ப முடியும்? அவர்களுக்குக் குறை ஒன்றும் இல்லையே. மூன்றாவது என் கூட்டாளிக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவர் முயற்சி செய்து தோட்டத்தை மேலும் மேலும் வளர்ச்சி யடையச் செய்ததையும், உண்மை தவறாமல் அவ்வேலைக்குக் குறித்து வைத்த முதற்பணத்தை மேலும் மேலும் வளர்த்துப் பெருக்கியதையும் பற்றிக் கூறி அவரைப் புகழ்ந்து எழுதினேன். மேலும் இனி என்னுடைய பங்கை நான் என் பழைய ஆணையாளராகிய மாலுமிக்கு எழுதிக் கொடுத்த ஆணை முறியிற் கண்டபடி அந்த மாலுமிக்கே அனுப்பும்படியும் எழுதினேன். நான் அவ்விடத்திற்கு வரவும், வாழ்நாள் முழுதும் அங்கே இருந்து வாழவும் எண்ணம் கொண்டிருப்பதாக அவருக்குத் தெரிவித்தேன். அன்றியும் இக் கடிதத்துடன் இத்தாலிய நாட்டுப் பட்டு ஆடைகள் சில அவர் மனைவிக்கும், மகளிர் இருவருக்கும் சிறந்த நன்

கொடைகளாய் அனுப்பினேன். அவருக்கு மகளிர் இருவர் உளர் என்னும் செய்தி மாலுமியின் மைந்தர் வாய்மொழியால் எனக்குத் தெரிய வந்தது. இப் பட்டு ஆடைகளுடன் லிஸ்பன் கடைகளில் வாங்கின மிக விலை உயர்ந்த ஆங்கில நாட்டு அகல ஆடைகள் இரண்டும், உரப்பான கறுப்புக் கம்பளங்கள் ஐந்தும், விலை உயர்ந்த ஆடைகள் இன்னும் சிலவும் அனுப்பினேன்.

**இங்கிலாந்திற்குப் போக எண்ணுதல்**

இவ்வண்ணம் கணக்குவரையறை செய்து, என் பொருள்களை விற்றுப் பணமாக்கி, அதற்கு உண்டி எழுதி முடித்தபின், இங்கிலாந்திற்குப் போவது எவ்வாறு என்று நினைக்கத் தொடங்கினேன். இது தொல்லையாகவே இருந்தது. நான் கடற்பயணம் செய்து வழக்கப்பட்டிருப்பினும், இந்த வேளையில் இங்கிலாந்திற்குக் கடல் வழியாய்ச் செல்வதற்கு எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. இதற்குக் காரணம் இன்னது என்றும் தெரியவில்லை. என்னுடைய பொருள் மூட்டைகளைக் கப்பலில் அடுத்தடுத்து இரண்டு மூன்று முறை ஏற்றுவதும் இறக்குவதுமாய் இருந்து, இறுதியாகக் கடற்பயணம் செய்வதற்கு என் மனம் ஒருவிதத்திலும் உடன்படாததனால், மூட்டைகளை இறக்கி மனக்கலக்கம் உடையவனாய் இருந்தேன்.

**கடற்பயணம் செய்ய நான் விரும்பவில்லை**

கடலில் எனக்குப் பெருங்கேடுகள் உண்டானமை உண்மைதான். கடற்பயணம் செய்வதற்கு எனக்கு வெறுப்பேற்பட இதுவும் ஒரு காரணமாய் இருக்கலாம். இவ்வித நிலையில் என் உள்ளத்தில் தோன்றிய அழுத்தமான எண்ணத்தை நான் எவ்வாறு பொருட்படுத்தாது இருக்க முடியும்? ஆயினும் நான் இரண்டு கப்பல்களைத் தேர்ந்தெடுத்து, ஒன்றில் என்னுடைய உடைமைப் பொருள்களை ஏற்றுவித்தேன். ஒன்றில் ஏற்றுவதாக மாலுமியிடத்தில் கூறியிருந்தேன். பிறகு மேற்கூறியபடி என் மனம் தடுமாறியதனால் ஏற்றிய பொருள்களை இறக்கினேன். பிறகு

அந்தக் கப்பல்கள் இரண்டும் சென்றுவிட்டன. ஒன்றை **அல்ஜீரியர்** பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள், மற்றது **டார்பேய்க்கு** அண்மையில் கடலில் ஒற்றி வந்திருக்கும் முனை தட்டி உடைந்தது. மூன்று பெயர் தவிர, அதிற் போனவர் அனைவரும் மூழ்கி இறந்தார்கள். ஆகவே, அவ் விரண்டு கப்பல்களில் எதிலாவது நான் ஏறிப் போக நேர்ந்திருந்தால் பெருங்கேடு அடைந்திருப்பேன்.

### தரை வழியே செல்ல முடிவு செய்தேன்

இவ்வாறு கவலை கொண்டு, எல்லாவற்றையும் கிழ மாலுமியிடம் தெரிவித்தேன். அவர் கடல் வழியாகச் செல்ல வேண்டா என வற்புறுத்திக் கூறி, என்னைத் தடுத்து, தரை வழியாக **கிராய்னி** வரையும் சென்று, **பிஸ்கே** குடாவைத் தாண்டி **ரோஷிலி** என்ற இடத்தை அடைந் தால் அங்கிருந்து அச்சம் இன்றித் தரைவழியாய்ப் **பாரீஸ்** நகரத்திற்கு நலமாய்ப் போய்ச் சேரலாம். அப்புறம் **கலே** துறைக்குப் போய்க் கப்பல் ஏறி, **டோவரில்** இறங்கலாம்; அல்லது **மாட்ரிட்** நகரத்திற்குப் போய், அங்கிருந்து **கலே** துறை சேரும் அளவும் **பிரான்சு** தேயத்திற்கு இடையே வழி முழுவதும் கரையோரமே போகலாம் என்பதாகக் கூறினர். **கலே** துறையில் மரக்கலம் ஏறி **டோவரில்** சேர்வ தன்றி, வேறு வகையில் கடல் வழியாக நெடும் பயணம் செய்வது என் மனத்திற்கு ஒத்துவாராததனல் நான் வழி முழுதும் கரையோரமாகவே பயணம் செய்ய வேண்டும் என்று எண்ணித் துணிந்தேன். விரைவாய்ப் போய்ச் சேர வேண்டும் என்ற காரணம் இல்லாமையாலும், வழியிற் செலவாகும் பொருள் நான் பொருட்படுத்தாத படியாலும், இதுதான் எனக்கு நல்ல வழியாகப் புலப்பட்டது.

### என்னுடன் பயணம் செய்த வீரர்கள்

இவ் வழிச்செலவு பின்னும் எனக்கு இன்பமாய் இருக்கும் பொருட்டுக் கிழவராகிய மாலுமி, என்னுடன் பயணம் செய்ய விரும்பியிருந்த **லிஸ்பன்** பட்டணத்து வணிகர் ஒருவருடைய மைந்தராகிய ஆங்கிலேயர் ஒருவரை

அழைத்துக்கொண்டு வந்தார். அதன்மேல் பின்னும் இரண்டு ஆங்கில வணிகர்களும், போர்த்துக்கீசிய இளைஞர் இருவரும் எங்களுடன் சேர்ந்தார்கள். இவ்விருவரும் பாரிஸ் வரையில் மட்டும் எங்களுடன் கூடி வர இருந்தார்கள். ஆகவே, ஒருவருக்கு ஒருவர் துணையாகப் பயணப்படுதற்குக் கூடிய நாங்கள் அறுவர் ஆனோம். எங்களுக்கு அமைந்த ஏவற்காரர் ஐவர். இவ்வைவரில் ஒருவன் அந்த வணிகர் இருவருடைய வேலையாள். மற்றொருவன் போர்த்துக்கீசிய இளைஞருக்கு ஏவல் செய்பவன். செலவைச் சுருக்கிக் கொள்வதற்காக இருவருக்கு ஒருவன் வீழுக்காடு இரண்டு ஏவலரை மட்டும் அமர்த்திக் கொண்டார்கள். ஒருவன் வணிகர் மகனின் பணியாள், என்னுடைய பணியாளர் இருவர். அவர்களில் ஒருவன் குற்றேவல் செய்வதற்காக வழியில் நான் வைத்துக்கொண்ட ஆங்கிலேயக் கடலோடி. மற்றவன் என்னுடைய அடிமை வெள்ளிக்கிழமை. அவன் இவ்விடத்திற்குப் புதியவன் ஆதலால், வழியில் எனக்குத் தொண்டு செய்யும் திறம் உடையவன் அல்லன்.

இத்தனை பேருடன் நான் லிஸ்பன் நகரத்தினின்று பயணப்பட்டேன். நாங்கள் எல்லோரும் குதிரையேறிப் படைக்கலமுடையோராய்ச் சென்றதனால், ஒரு சிறிய குதிரைப் படைக்கு ஒப்பாய் இருந்தோம். இந்தக் கூட்டத்தில் நான் அகவை முதிர்ந்தவன் ஆதலாலும், என் பணியாளராக இரண்டு வேலையாட்கள் இருந்ததனாலும், இந்தப் பயணம் முழுதும் என்னைக் காரணமாகக்கொண்டு தொடங்கியதனாலும், என் துணைவர்கள் என்னையே தங்கள் படைத் தலைவன் என்று உயர்வாக மதித்து நடத்தினார்கள்.

### தரைவழிப் பயணம்

முன்பு கடற்பயணம் செய்த பொழுது, நான் அன்றன்று நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி உங்களுக்கு வருத்தம் கொடுக்கவில்லை அன்றோ? இப்பொழுதும் தரை வழியாய்ப் பயணம் செய்தபொழுது, ஒவ்வொரு நாளும் நடந்த நிகழ்ச்சிகளைச் சொல்லி, நான் உங்களை வருத்தமடையச்

செய்ய விரும்பவில்லை. ஆயினும், தொல்லையான இந்த நெடும் பயணத்தில் எங்களுக்கு நேர்ந்த சில இக்கட்டுகளை எடுத்துச் சொல்லாமல் விடுவது முறை அன்று.

ஸ்பானியத் தலைநகரான **மாட்ரீட்** பட்டணம் போய்ச் சேர்ந்தபோது, நாங்கள் அவ்விடத்திற்குப் புதிய மனிதர் ஆதலால், ஸ்பானிய அரண்மனை முதலிய சிறந்த இடங்களைப் பார்க்கவேண்டும் என்று அங்கே சிலநாள் தங்கினோம். அப்பொழுது வேனிற் காலத்தின் பிற்பாகம் ஆதலால் நாங்கள் விரைவில் வேலையை முடித்துக் கொண்டு **அக்டோபர்த்** திங்கள் இடையில் **மாட்ரிட்** பட்டணத்தை விட்டு நீங்கினோம். **நவாரியின்** எல்லையிற் சேர்ந்த பொழுது பிரான்சு தேயத்திற்கும் ஸ்பெயினுக்கும் இடையில் இருக்கின்ற **பிரெனீஸ்** மலைத்தொடரின் **பிரான்சு** தேயத்தின் எதிர்முகமான சாரலில் உறைந்தபனி அளவு கடந்து பொழிகிறது என்று கேள்விப்பட்டோம். வழிப் பயணம் செயவோர் அப்பனியைக் கண்டு அஞ்சாமல் துணிந்து போக முயன்றனர். ஆயினும் அதன் கொடுமை கண்டு தங்களால் கடந்து போக இயலாது என உணர்ந்து **பம்பிலியூனுவிற்குத்** திரும்பி வந்து விட்டார்கள் என்றும், வழியில் எதிர்ப்பட்ட சில நகரங்களிற் செய்தி கேட்டு அச்சம் உற்றோம்.

**பனியின் கொடுமை**

**பம்பிலியூனுவிற்** சேர்ந்தபொழுது, அவ்விடத்திலும் உறை பனி அதிகமாய்ப் பொழியக் கண்டோம். ஆடை உடுத்திக்கொண்டு பொறுத்திருக்க முடியாத மிகுந்த வெப்பமுள்ள நாட்டுப் புறங்களில் எப்பொழுதும் வாழ்ந்து பழக்கப்பட்ட எனக்கு அந்தக் குளிரைத் தாங்குவது மிகக் கடுமையாய் இருந்தது. வெப்பம் மிகுந்த **ஓல்ட் காஸ்டைல்** என்னும் இடத்தினின்று பத்து நாட்களுக்கு முன் பயணப் பட்ட நாங்கள் **பிரெனீஸ்** மலைகளினின்று வீசும் தாங்குதற் கரிய மிகக் கடுமையான குளிர் காற்றில் அகப்பட்டு, நடு நடுங்கி, விறைத்துக் கைவிரல் கால்விரல்கள் அழியத்தக்க

கொடிய நிலையில் இருந்தோம். எங்களுக்கு உண்டான துன்பத்தைக் காட்டிலும் வியப்பே பெரிதாகும்.

உறைபனிக்குள் மலைத்தொடர் முழுகி மறைந்ததைக் கண்டு, வெள்ளிக்கிழமை நடுநடுங்கிக் குளிரால் விறைத்ததைப் பார்த்தபொழுது எனக்கு மிக்க இரக்கம் உண்டாயிற்று. பம்பிலியூனுவிற்குச் சென்றால், தொல்லை தீரும் என்று எண்ணி, அவ்விடத்திற் சேர்ந்தோம். அங்கேயும் பலநாள் வரையில் மிகக் கடுமையாய் உறைபனி பொழிந்தவண்ணம் இருந்தது. இதனைக் கண்ட மக்கள் குளிர்காலம் வரவேண்டிய காலத்திற்கு முன் வந்துவிட்டது என்று கூறினார்கள். முன்னமே போக்கு வரவு செய்வதற்குக் கடுவழியாய் இருந்த சாலைகளில் இப்பொழுது சிறிதாயினும் போக்கு வரவு செய்ய இயலாதிருந்தது. விரித்துரைக்க வேண்டுவது என்ன? சில இடங்களில் செல்ல முடியாதபடி உறைந்த பனிப்படலம் மிகத் தடிப்பாய் இருந்தது. அது வட நாட்டுப் பகுதிகளில் இருப்பது போன்று கற்போல் இறுகி உரத்திருக்கவில்லை. ஆதலால், அதில் அடி எடுத்துவைக்கத் துணிந்தால், முழுகி இறந்துபோவது ஒழிய வேறு வழியில்லாதிருந்தது. நாங்கள் பம்பிலியூனுவில் சரியாய் இருபது நாள் தங்கியிருந்தோம். குளிர்காலம் நெருங்கிவந்ததையும், அதற்கு முன் எந்த ஆண்டிலேனும், அவ்வளவு கொடுமையாய் ஐரோப்பாவில் குளிர் இல்லாததனால், இனிக் குளிர்த்துன்பம் மிகுவது ஒழியக் குறையாதென்பதையும் கண்டு, ஃபாண்டரபியாவிற்குப்போய், அங்கிருந்து போர்யாக்ஸிற்குக் கப்பல் ஏறிப்போய்ச் சேர்வது நல்லது என்று கூறினேன். அது மிகவும் குறுகிய பயணந்தான். இதைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தபோது பிரான்சு தேயத்துச் செல்வர் நால்வர் வந்தனர். ஸ்பானிய எல்லையில் கணவாய்க்கு இப்புறத்தில் நாங்கள் தடைப்பட்டு நின்றதுபோல, அவர்களும் ஃபிரஞ்சு எல்லையில் கணவாய்க்கு அப்புறத்தில் தடைப்பட்டு நிற்கும்பொழுது அவர்களுக்கு வழிகாட்டி ஒருவன் கிடைத்தான். அவன் அவர்களை அழைத்துக்கொண்டு, லாங்குவிடாக் முனைக்கு அருகில்

உள்ள நிலத்தின் வழியாக நடந்து, பனித்துன்பம் மிகுதி யாய் இல்லாத வழி பிடித்துச் சென்று, மலையைத்தாண்டி இவ்விடத்திற் கொண்டு வந்து சேர்த்தான். உறைந்த பனி மிகுதிப்பட்ட இடங்களில், தாமும் குதிரைகளும், கால் புதையாமல் நடக்கத்தக்கதாக அஃது இறுகிக் கடினமாய் இருந்தது என்று அவர்கள் சொன்னார்கள்.

### வழிகாட்டி ஒருவன் துணையாக வந்தான்

மேற்கண்ட செய்திகளைக் கேள்வியுற்று, அந்த வழி காட்டியை அழைத்து எங்களுக்கு வழித்துணையாய் வரக் கேட்டோம். அதற்கு அவன் "உறைந்த பனி அளவு கடந்து உள்ள இவ்விடங்களில் தரையில் இரைக்கு வழி யின்றிப் பசித்துன்பத்தால் கொடுஞ் சினம்கொண்டு, எதிர்ப்படுவோரைக் கொன்று தின்னவேண்டும் என இம் மலை அடிவாரத்தில் பெரும்பாலும் கோநாய் முதலிய கொடிய காட்டு விலங்குகள் உலாவித் திரிவது வழக்கம். ஆதலால் அவைகளிடமிருந்து தப்பிப்பிழைப்பதற் கேற்ற படி படைக்கருவிகளுடன் வருவீர்களானால் உறைந்த பனித் துன்பத்திற்கு அஞ்சாதபடி நான் உங்களை மேற் கூறிய பிரஞ்சுக்காரர்கள் வந்த வழியாக அழைத்துக் கொண்டு போக உடன்படுவேன்" என்றான். அது கேட்டு நாங்கள் "முதன்மையாய்ப் பிரான்சு தேயத்தின் எல்லையில் மலையடிவாரத்தில் வழிப் போக்கர்களுக்கு ஒருவித இருகால் கோநாய்களால் பெருந்துன்பம் நேரிடுவது உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறோம். இத்துன்பத்திற்கு அஞ்சவேண் டாம் என்று நீ எங்களுக்கு உறுதி கூறுவாயானால், கோநாய் முதலிய கொடிய விலங்குகளை வெல்லத்தக்க படைக்கருவிகளுடன் வருவோம் என்று கூறினோம். நாம் செல்லும் வழியில் அத்தகைய துன்பம் ஒன்றும் இல்லை என்று அவன் உறுதி கூறினான். அவனுடைய வாய் மொழியைக் கேட்டு மனம்தேறிக், காலத்தாழ்வு இன்றி அவனுடன் கூடிப்போக ஒத்துக்கொண்டோம். அன்றியும், முன்பு போகத் துணிந்தும் இயலாமையினால், திரும்பிவந்த மக்கள் பன்னிரண்டு பேர் வேலைக்காரருடன் எங்கள் கூட்

டத்தில் சேர்ந்து வந்தார்கள். அவர்களில் சிலர் பிரஞ்சுக் காரர்கள்; சிலர் ஸ்பானியர்.

### பனிக்கு அஞ்சாது சென்ற பயணம்

மேற் கூறியவாறு வழித் துணைவனுடன் பம்பிலியூனு வினின்று, நாங்கள் நவம்பர்த் திங்கள் 15-ஆம் நாள் புறப் பட்டோம். அவன் எங்களை முன்பு மாட்ரிட் பட்டணத்தி னின்று, நாங்கள் இவ்விடத்திற்கு வந்த சாலை வழியாய் இருபது கல் தொலைவுமட்டும் அழைத்துப்போனது கண்டு எனக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று. இரண்டு ஆறு களைக் கடந்து தரை ஒப்பாயிருக்கும் நாட்டுப் பகுதியில் சேர்ந்தபொழுது, நாடு வெப்பமாகவும் கண்ணுக்கு இன்ப மாகவும் இருந்தது. உறை பனி சிறிதும் இல்லை. அப் புறம் விரைவில் இடப்புறமாகத் திரும்பி, அவன் வேறு ஒரு வழி பிடித்து, மலைத்தொடருக்கு அருகில் எங்களைக் கொண்டுபோய்ச் சேர்த்தான். குன்றுகளையும் செங்குத் தான மலைகளையும் கண்டு, உண்மையில் எங்களுக்கு அச்ச முண்டாயிற்று. ஆயினும் அவன் எத்தனையோ சுற்றுச் சுழற்சியான வழிகளில் எங்களை அழைத்துக்கொண்டு சென்றதனால், உறை பனி மிகுதியாய் இருக்கும் இடத்திற் சேராமலும், மலை ஏறும் துன்பம் தோன்றாமலும், அதன் உச்சியைத்தாண்டி, விரைவில் லாங்குவிடாக், காஸ்கனி என்னும் சிறப்பும் செழுமையுமான நாட்டுப் பகுதிகளைக் கண்ணுக்கு எதிரே காண்பித்தான். பயிர் பச்சைகள் செழித்து வளரும் பசுமையான தோற்றமுள்ள அம்மலை நாடுகள் கண்ணுக்கு அழகாய் இருந்தன. நாங்கள் அந் நாடுகளில் சேர்வதற்கு இன்னும் நெடுந்தொலை ஒப்பம் அற்று மேடும் பள்ளமுமாயிருந்த வழி பிடித்துப் போக வேண்டியிருந்தது. ஒரு பகலும் இரவும் வழி நடக்க முடி யாதபடி சிறிதும் ஓயாமல் உறை பனி பொழிந்ததனால் எங் களுக்குச் சற்று மனவருத்தம உண்டாயிற்று. வழித் துணைவன் இனி விரைவில் உறை பனியின் கொடுமை தொலையுமென்று எங்களைக் கவலையின்றி இருக்கச் சொன் னான். வழி போகப் போக நாளுக்கு நாள் தரை சரிவாய்

இருந்தது. அதற்குமேல் வடக்கு நோக்கிச் சென்றோம். எதற்கும் வழித் துணைவன் இருக்கிறன் என்று அவனை நம்பித் தொடர்ந்து போனேம்.

**கோநாய் கடித்தது**

ஒரு நாள் மாலை கதிரவன் மறைய இரண்டு மணி நேரத்திற்கு முன் எங்கள் வழித்துணைவன் சற்றே கண்ணுக்கு எட்டாத தொலைவில் எங்களுக்கு முந்திச் சென்ற பொழுது, விரைவில் கொடிய விலங்குகளாகிய கோநாய்கள் மூன்றும், அவைகளுக்குப் பின்னே கரடி ஒன்றும், அடர்ந்த காட்டின் பக்கத்தில் உள்ள ஒரு முழையினுள்ளிருந்து வெளியில் வந்தன. அவற்றில் இரண்டு கோநாய்கள் எங்கள் வழித்துணைவனை இலக்காய்க் குறித்து, நெருங்கிப் போயின. அவன் நெடுந்தொலைவில் இருக்க நேர்ந்தால், நாங்கள் நெருங்கிப்போய் அவனைத் தப்புவிக்குமுன், அவன் கோநாய்களால் கொன்று தின்னப்படுவான் என்பதற்கு ஐயமில்லை. ஒரு கோநாய் வழிகாட்டி ஏறிச் சென்ற குதிரை மேற் பாய்ந்து, அதைக் கடித்து, இறுக்கிப் பிடித்துக் கொள்ள, மற்றொன்று அவன்மேற் பாய்ந்து நெருங்கி, அவனைக் கொன்று தின்னப் போனதனுல், இடுப்பில் மாட்டியிருந்த கைத்துப்பாக்கியை இழுத்து வெடிக்க அவனுல் இயலவில்லை. உறுதியான மனத்துணிவும் உண்டாகவில்லை. அவன் மனம்பதறி மிகவும் உரக்கக் கூவினன். என்னுடைய அடிமை ஆள் வெள்ளிக்கிழமை எனக்குப் பின் நெருங்கிவந்ததனுல், குதிரையை முடுக்கிச் செலுத்திக் கொண்டு முந்திப்போய், நடந்த செய்தி என்ன என்று பார்க்கச் சொன்னேன். விரைந்துபோய் வழிகாட்டியைக் கண்டவுடன் அவனும் "தலைவரே, தலைவரே," எனப்பெருங் குரலிட்டுக் கூவினன். அவ்வாறு கூவிக்கொண்டு, மனத் துணிவு உடையவனுய், தடுமாறித் துன்புற்ற வழிகாட்டி நின்ற இடத்திற்கு நெருங்கிச் சென்று அவன்மேல் விழுந்து தாக்கி நின்ற கோநாயின் தலையில் குண்டு ஏறும் படி, தன் கைத்துப்பாக்கியால் சுட்டான்.

**வெள்ளிக்கிழமையின் திறமை**

உற்ற நேரத்தில் என் அடிமை ஆள் வெள்ளிக்கிழமை செய்யச் சென்றது வருந்திய நிலையில் இருந்த வழிகாட்டி செய்த நற்பேறுதான். வெள்ளிக்கிழமை தான் பிறந்தநாட்டில் கோநாய்களைப் பெரும்பாலும் கொன்று வழக்கப்பட்டிருந்ததனால் அச்சமின்றி நெருங்கிச் சென்று அந்தக் கோநாயைச் சுட்டு வீழ்த்தினான். அவனைத் தவிர எங்களில் எவனாவது போக நேர்ந்தால், நெருங்கிச் செல்லத் துணியாமல் தொலையில் நின்று சுடுவான். அவ்வாறு சுடும்போது குண்டு கோநாயின் தலையிற்படாமல், குறிதவறி வழிகாட்டியின் மேற்பாயவும் கூடும்.

வெள்ளிக்கிழமை குண்டு செலுத்திய வெடி அதிர்ச்சி கேட்டவுடனே இரு பக்கத்திலும் கோநாய்கள் ஊளையிட்டமிருந்த முழக்கமான பேரொலி கேட்டு, நாங்கள் எல்லாரும் திடுக்கிட்டு, அச்சமுற்றோம். அந்தப் பேரொலியை என்னைக்காட்டிலும் துணிவுடையவன் கேட்பினும் கலங்கி அஞ்சுவான். கோநாய்கள் ஊளையிட்ட ஒலி மலைகளில் தாக்கி எதிர் ஒலி உண்டானதால், கூட்டமான கோநாய்கள் பக்கத்திற் சேர்ந்திருப்பதாக நினைத்தோம். நாங்கள் கவலையற்றிருக்கும் வண்ணம் அவ்விடத்தில் கோநாய்கள் மிகுதியாய் இல்லை என்று சொல்ல முடியாது. ஒரு வேளை கூட்டமாய்ச் சேர்ந்திருக்கவும் கூடும். எப்படியும் இந்தக் கோநாயை வெள்ளிக்கிழமை சுட்டுக்கொன்றதைக் கண்டவுடனே, குதிரைமீது ஏறி, அதன் தலையைக் கவ்விப் பிடித்துக்கொண்டிருந்த மற்றொரு கோநாய் ஓட்டம் பிடித்தது. குதிரையின் தலையில் இருந்த கடிவாளத்து வார்க்குமிழில் கோநாயின் பல் ஏறியதனால், குதிரைக்குக் காயம் இல்லை. வழிகாட்டி கொடுஞ் சினமுள்ள கோநாயால் கையிலும், முழந்தாளுக்கு மேலே தொடையிலுமாக இரண்டிடத்திற் கடிபட்டு, மிகவும் காயம் அடைந்தான். அவன் கோநாயோடு எதிர்த்து, அதன் வாயில் அகப்படாமல் தப்பிக் கொள்ளச் சிறிது முயற்சி செய்தும், குதிரை மிரண்டு தடுமாறியதனால், அவன் குலுங்கித் தரையில்

விழும் நிலையில் இருந்த வேளையில், வெள்ளிக்கிழமை நெருங்கிப்போய்க், கோநாயைச் சுட்டுவீழ்த்தினான்.

வெள்ளிக்கிழமை வெடித்த துப்பாக்கி ஒலி கேட்ட பின்னும் நாங்கள் முன்போல மெதுவாய்ச் செல்வோமா? வழி தொல்லையானதாய் இருந்தும், நேரிட்ட இடர் என்ன என்று அறியும் பொருட்டுக் குதிரைகளைக் கூடிய விரை வில் முடுக்கிச் செலுத்திக் கொண்டு போனோம். முன்பு கண்கொண்டு நெடுந்தொலை பார்க்க முடியாதபடி தடை யாயிருந்த நெருங்கிய மரங்களைத் தாண்டி, வெளியிடத்திற் சேர்ந்தவுடன், வழிகாட்டிக்கு இடர் நேர்ந்த தென்றும், வெள்ளிக்கிழமை அந்த இடரை எவ்வாறு நீக்கினான் என்றும், ஐயமறக் கண்டோம். ஆயினும் அவன் சுட்டுக் கொன்ற விலங்கு என்ன இனத்தைச் சேர்ந்தது என்று நாங்கள் உடனே அறியவில்லை.

# இருபதாம் அதிகாரம்

## முன்னுரை

இதற்குப் பின் வெள்ளிக்கிழமைக்கும் கரடிக்கும் நடந்த சண்டையில் வெள்ளிக்கிழமை மிகுந்த வீரமும் துணிவும் கொண்டு போர் செய்து, மிகவும் வியப்பு உண்டாகுமாறு வெற்றி பெற்றான். முன்பு இவ்வளவு பெரிய போர் ஒரு பொழுதும் நடந்தது இல்லை. முதலில் வெள்ளிக்கிழமையைக் கரடி கடித்துக் கொன்றுவிடும் என்று அச்சமுற்றுத் தடுமாறினோம். அப்புறம் எங்கள் தடுமாற்றம் நீங்கிற்று. சண்டை மிகுந்த வேடிக்கையாக இருந்தது. கரடி கோநாயைப் போல விரைந்து ஓடத்தக்க பருமன் குறைந்த உடல் உள்ளது அன்று. அது திமிர்த்துப் பருத்த உடலும், விரைவின்றி நடக்கும் தன்மையும் உடையது.

## கரடியின் தன்மைகள்

கரடிக்கு உரிய முதன்மையான தன்மைகள் இரண்டு. அவ்விரண்டுமே பெரும்பாலும் அதன் செயலுக்கு எடுத்துக்காட்டுகளாகும். முதலாவது மனிதரைக் கொன்று தின்பது அதன் இயற்கை அன்று. "பசித்தவன் தின்னாததும் இல்லை; பகைத்தவன் சொல்லாததும் இல்லை" என்னும் பழமொழிப்படி தரை எங்கும் உறை பனி நிறைந்துள்ள நேரத்தில், பசித்துன்பத்தால் கரடிக்கு என்ன என்ன தவறான எண்ணம் உண்டாகுமோ அறியேன். ஆனாலும், மனிதர் தாமாய்த் தொடர்ந்து தாக்கச் சென்றால் அன்றிக் கரடி பொதுவாக அவர்களோடு எதிர்க்கிற வழக்கம் இல்லை. மனிதர் தம் கண்ணுக்கெதிரே காட்டில் கரடியைக் காணும்பொழுது, அதைத் தீண்டாமலும், அதனுடன் தொடர்பு வைத்துக் கொள்ளாமலும் இருப்பார்களானால், அஃது அவர்களைத் தீண்டவும் மாட்டாது,

திரும்பிப் பார்க்கவும் மாட்டாது. வழியில் எதிர்ப்படும் கர டிக்கு இடையூறு ஒன்றும் செய்யாமல் மனிதர் ஒரு புற மாய் வழிவிலகிப் போகவேண்டும். அது சிறிய குற்றத் தையும் பொறுக்காத மிகுந்த சினமுள்ள செல்வருக்கு ஒப் பானது. எந்தப் பெருவேந்தனை எதிரிற் காணினும் ஓர் அடி தொலையாவது அது வழிவிலகிப் போகாது. கரடி யைக் கண்டு அஞ்சுவோர் அவ்வழியை விட்டு, வேறு வழி பிடித்து, நிற்காமல் நடந்துபோக வேண்டும். நிலைத்து நின்று விழித்த கண் இமைக்காமல் அதைப் பார்த்தால் கரடிக்குச் சினம் உண்டாகும். கைவிரல் பருமன் உள்ள சிறிய மரக் குச்சியையாவது அதன்மேல் பட எறிந்தால், அல்லது வீசினால் இந்த மானக்குறைவை மனத்தில் வைத்துத் தன் செயலிற் கண்ணுயிருப்பதைவிட்டு, அஃது அவ்வாறு செய்தவன்மீது பழிதீர்க்கத் தொடர்ந்து போகும். அது தனக்கு வரும் பழிக்கு ஈடு செய்து, தன் மதிப்பைக் காத்துக் கொள்ளாமல் விடாது. இதுதான் அதற்குரிய முதன்மையான பண்பு. அதற்கு ஒரு முறை யாவது சினம் மூட்டுகிறவர்களை இராப்பகல் என்றும் வேறு பாடு இன்றி, அது மிகுந்த விரைவோடு தொடர்ந்து போய் மறித்து மேல் விழுந்து தன் பழியைத் தீர்த்துக் கொள்ளா மல் ஒரு பொழுதும் விடாது. இப்படிச் செய்வது அதற் குரிய இரண்டாவது பண்பு.

**வழிகாட்டியின் துன்பநிலைமை**

என்னுடைய அடிமை ஆள் வெள்ளிக்கிழமை எங்கள் வழிகாட்டியைக் கோநாயிடமிருந்து தப்புவித்தபின், நாங்கள் அவன் இருக்குமிடத்திற் போய்ச் சேர்ந்தோம். அப்பொழுது வெள்ளிக்கிழமை வழிகாட்டியைக் குதிரையி னின்று இறக்கி விட்டான். கோநாய் கடித்துக் காயப் பட்டு மனம் கலங்கி இருந்ததனால், குதிரையினின்று இறங்க அவனால் இயலாது இருந்தது.

**கரடி ஒன்று வந்தது**

அந்த வேளையில் மிகப் பருத்த கரடி ஒன்று விரை வில் சற்றுத் தொலைவில் வனத்தினின்று வெளியிற் புறப்

பட்டு வருவது கண்டோம். அவ்வளவு பெரிய கரடியை நான் அதற்குமுன் எப்பொழுதும் கண்டதில்லை. கண்டவுடன் நாங்கள் அனைவரும் சற்று வியப்பு அடைந்தோம். அதைக் கண்டபொழுது, வெள்ளிக்கிழமைக்குக் களிப்பும் மிகுந்த துணிவும் உண்டாயின என்று அவன் முகக் குறியால் தெரிந்தது. அவன் கரடியைக் கைவிரலாற் சுட்டி "ஓ, ஓ, ஓ" என மூன்று முறை கூவித், "தலைவரே, அதனுடன் கை குலுக்குவதற்கு என் உடலுறுப்புக்கள் எல்லாம் பதறுகின்றன. விடைதாரும்; வேடிக்கை காண்பித்து உங்களைச் சிரித்து மகிழச் செய்வேன்" என்று அவாவுடன் கூ[ ]றன்.

## கரடியுடன் போராட வெள்ளிக்கிழமை விரும்பினான்

அவனுக்கு இவ்வளவு களிப்பு உண்டானது கண்டு, மிகவும் வியந்து நான் "அடே! மூடனே, கரடி உன்னைத் தின்றுவிடுமே, ஏன் பதைக்கிறாய்?" என்றேன். அதற்கு அவன், "என்னைக் கொன்று விடுமா, என்னைத் தின்று விடுமா" என இரண்டு முறை கூறி, "நான் அதைத் தின்று விடுவேன், நான் உங்களுக்கு வேடிக்கை காண்பித்துச் சிரிப்பு உண்டாக்குவேன்; நீங்கள் இங்கே நில்லுங்கள். நன்றாய்ச் சிரிக்கத்தக்க வேடிக்கை செய்வேன்" என மொழிந்து, தரையில் உட்கார்ந்து நொடிப் பொழுதிற்குள் தன்னுடைய நெடுங்காலுறைகளைக் கழற்றி, அங்கி உறைக்குள் வைத்திருந்த தொடுதோலை எடுத்து மாட்டிக் கொண்டு, குதிரையை என்னுடைய மற்றொரு பணியாளனிடத்தில் கொடுத்துவிட்டுத் துப்பாக்கி கைக்கொண்டு, காற்றுப்போல விரைந்து ஓடினான்.

## வெள்ளிக்கிழமை கரடியைப் போருக்குத் தூண்டுதல்

கரடி எவர் நிகழ்ச்சியிலும் தலையிட விரும்பாமல், தன் நோக்கோடு மெல்ல நடந்து வந்தது. வெள்ளிக்கிழமை சற்று நெருங்கிப் போனபின், தான் கூறுவதைக் கரடி கேட்டு அறியும் தன்மையுள்ளது என்று நினைத்தவனைப் போல் "கேள், கேள், நான் உன்னுடன் பேசப் போகிறேன்"

என்று அதனிடம் பெருங் குரலிட்டுப் பேசினுன். நாங்கள் காஸ்கனிப் பக்கத்தில் உள்ள மலைச்சரிவைத் தாண்டி, மிகப் பரந்த காட்டில் இறங்கி, நெடுந்தூரம் வந்திருந்தோம். அந் நாட்டுப் பகுதியின் தரை ஒப்பாகவும், மரம் செடி அடர்ந் திராத வெளியாகவும் இருந்தது. ஆனுலும் அங்கங்கே பல மரங்கள் சிதறுண்டு இருந்தன. கரடியினும் மிக்க விரைவாய் ஓடின வெள்ளிக்கிழமை விரைவில் முந்திப்போய் அதை மறித்துப் பெருங்கல் ஒன்று எடுத்துக் குறி தவரு மல் அதன் தலையிற்பட எறிந்தான். அவன் எறிந்த கல் கரடியின் மேற்பட்டது. ஆயினும் அது மதிலின் மேற் பட்டது போல இருந்தது. கரடிக்குச் சிறிதும் உறைக்க வில்லை. ஆனுலும், வெள்ளிக்கிழமையினுடைய கருத் துக்கு அஃது உதவியாக இருந்தது. சிறிதும் அச்சம் இல்லாத அவ்வீரன் கரடியைக் கல்லால் எறிந்தது காயப் படுத்துவதற்கு அன்று. தன்னைத் தொடரும்படி தூண்டி விடவும், அவ்வேடிக்கையை நாங்கள் பார்த்துச் சிரிக்கவும் தான் அவ்வாறு செய்தான். எறிபட்ட கரடி அவனைக் கண்டவுடன் திரும்பி, எட்டி அடிவைத்து அவனைத் தொடர்ந்து வியத்தகு முறையில் அசைந்தாடி வந்தது. அதன் ஓட்டமும், மெல்ல ஓடும் பந்தயத்தில் ஈடுபட்ட குதிரையின் பாய்ச்சலும் ஒன்றுக்கு ஒன்று ஒப்பாய் இருந் தன. வெள்ளிக்கிழமை மிக விரைவாய்ப் பறந்து, எங் களுக்கு நேரே திரும்பி, எங்கள் உதவியை நாடியவன் போல ஓடி வந்தான். அதனுல், காலம் தாழ்க்காமல் கர டியைச் சுட்டு வீழ்த்தி வெள்ளிக்கிழமையைப் பாதுகாக்க நாங்கள் எல்லோரும் எண்ணம் கொண்டோம். தன் வேலையின்மீது எண்ணம் கொண்டு வேறொரு வழியிற் சென்ற கரடியை வெள்ளிக்கிழமை எங்களிடம் திருப்பி விட்டது பற்றி எனக்குக் கடுஞ்சினம் உண்டாயிற்று. அவன் கரடியை எங்களிடத்திற்கு வரும் வண்ணம் திருப்பி விட்டபின், தான் வந்த வழியை விட்டு வேறு வழியாக ஓடி ஞன். அதனைக் கண்டு எனக்குப் பின்னும் மிகுந்த சினம் மூண்டது. அந்த வேளையில் நான் உரக்கக் கூவி, "அடா நாயே! இதுதானு நீ சிரிப்பூட்டும் அழகு? இங்கே வந்து

உன் குதிரைமேல் ஏறிக்கொள். நாங்கள் கரடியைச் சுடுவ தற்கு வழிவிடு" என்று சொன்னேன். என்னுடைய சொல்லைக் கேட்டு, அவன் "சுடவேண்டாம்; சுடவேண் டாம்; பதறுமல் நில்லுங்கள்; வாய் கொண்ட மட்டும் சிரிக்கத்தக்க வேடிக்கை காண்பீர்கள்" என்று குரல் எழுப்பிக் கூவியபின், மேலும் ஓடினுன். கரடியினும் இரு மடங்கு மிக விரைவாய் ஓடும் திறம் உள்ளவன் ஆதலால், எங்களுக்கு ஒரு பக்கமாய்த் திரும்பித் தன் கருத்தை நிறை வேற்றுதற்குச் சரியான பெரிய சிந்தூர மரம் ஒன்றைக் கண்டு, தன்னைத் தொடரும்படி தலையசைத்துத் தெரி வித்துப் பின்னும் ஒரு பங்கும் விரைவாய் ஓடி, அம்மரத் தின் அடிக்குப் பத்துப் பதினைந்து அடி தொலையில் துப் பாக்கியை வைத்துவிட்டு, அதிக விரைவாய் மரத்தில் ஏறி ஞன். கரடியும் விரைவில் மரத்திற்கு அருகிற் சென்று சேர்ந்தது. நாங்கள் சற்றுத் தொலையிற் சென்றேம். கரடி துப்பாக்கியைக் கண்டு, அவ்விடத்தில் நின்று மோந்து பார்த்தபின், அதைவிட்டு நீங்கி, அ'தன் உடல் பருத்துத் திமிர்த்துப் பளுவாய் இருந்தும், ஒரு பூனையைப் போல மிக எளிதாய் மரத்தில் ஏறிற்று. என்னுடைய அடிமை ஆள் வெள்ளிக்கிழமை மரத்தில் ஏறியது அறி வில்லாத மூடத்தன்மை என்று எண்ணி, அவனுக்குத் தினைத்துணை அறிவாவது இல்லாததுபற்றி மிகுந்த வருத் தம் அடைந்தேன். கரடி மரம் ஏறியது கண்டு, நாங்கள் அதற்கு அருகில் சிரிக்கத்தக்க வேடிக்கை ஒன்றையும் காணவில்லை.

### வெள்ளிக்கிழமை எங்கட்கு வேடிக்கை காட்டினுன்

நாங்கள் மரத்திற்கு அருகிற் சென்றேம். அப் பொழுது வெள்ளிக்கிழமை அம்மரத்தின் பெரிய கொம்பு ஒன்றின் முனையில் உள்ள சிறிய கிளையில் உட்கார்ந்திருந் திருந்தான். கரடி அவனைத் தொடர்ந்து அக்கொம்பில் பாதி தொலை அளவில் போய்க்கொண்டிருந்தது. கொம்பு வரவரச் சிறுத்து மென்மையாய் இருந்த இடத்தில் கரடி சேர்ந்தவுடன், வெள்ளிக்கிழமை எங்களைப் பார்த்து, "ஆ,

ஆ! இனி என் வல்லமையைப் பாருங்கள், கரடிக்கு நடனம் பழக்குகிறேன்." என்று களிப்போடு கூறிக் குதித்துக் குதித்துக் கொம்பை இடு இடு என்று அசைத்தான். கரடி தள்ளாடித் தத்தளித்து நிலை பெயராமல் நின்று, திரும்பிப் போகும் வகை இன்னது என்று அறிவதற்குத் திரும்பிப் பார்த்துக் குறுவிழி விழித்தது. அப்பொழுதுதான் மனம் கொண்ட மட்டும் சிரித்தோம். ஆயினும், வெள்ளிக்கிழமை கரடியை இவ்வளவோடு விட்டுவிடவில்லை; பின்னும் எத்தனையோ வேடிக்கைகள் செய்தான். கரடி அடி பெயர்த்து வைக்காமல் பொறுத்து நிற்கக் கண்டபொழுது, அவன் அதற்கு ஆங்கில மொழி தெரியும் என்று நினைத்தவனைப் போல அதைத் திரும்பவும் கூப்பிட்டு; "என்ன? இப்பால் நீ வரவில்லையா? மனம் இரங்கி இன்னும் அருகே வா" என்று அதனை ஏளனம் செய்து, கொம்பு அசையாதபடி குதிக்காமல் நிற்பான். அவன் சொன்னதை அறிந்ததுபோலக் கரடி பின்னும் சற்று அருகே செல்லும். உடனே வெள்ளிக்கிழமை கூத்தாடிக் குதித்துக் கொம்பை அசைக்கக், கரடி அந்த அளவோடு நிற்கும். தலையிற் குண்டு செலுத்திக் கரடியைச் சுட்டு வீழ்த்த இதுதான் சரியான நேரம் என்று எண்ணி, நாங்கள் வெள்ளிக்கிழமையை அழைத்துக் குதிக்காமல் நில், கரடியைச் சுட்டு வீழ்த்துகிறோம் என்று சொல்ல, அவன் மிகுந்த ஆவலுடன் கூவி, "ஐயா, ஐயா உங்களை இரந்து கேட்கிறேன்! சுடாது இருங்கள். நானே அதைச் சற்றைக்கெல்லாம் சுடுவேன்" என்றான். நடந்த வரலாறுகள் எல்லாவற்றையும் சொல்லின் கதை நீளும் ஆதலால், சுருக்கிச் சொல்லுகிறேன். வெள்ளிக்கிழமை கூத்தாடிக் குதிக்கக், குதிக்கக், கரடி தள்ளாடித் தத்தளித்துத் தடுமாறியதைக் கண்டு, சிரித்துச் சிரித்து எங்களுக்கு மனம் சலித்துப் போயிற்று. ஆனாலும் அந்தப் பயல் என்ன செய்ய நினைத்திருந்தான் என்று எங்களுக்குத் தெரியவில்லை. கொம்பை அசைத்துக் குலுக்கிக் கரடியைத் தரையில் வீழ்த்தப் போகிறான் என்று முதலில் நினைத்திருந்தோம். இந்தச் சூழ்ச்சிக்கு இளக்காத முறை கர

டிக்குத் தெரியும் என்று பிற்பாடு கண்டறிந்தோம். கரடி நின்ற நிலையை விட்டுப் பிரிந்து, பின்னும் சற்றுத் தொலை சென்றால் அல்லவா, கொம்பை அசைத்துக் குலுக்கி அதை வீழ்த்தலாம். பருத்துப் படர்ந்த தன் விரல் நகங்களும், கால்களும் கொம்பில் அழுந்தும்படி, அஃது உறுதியாய் ஊன்றி மிதித்துக் கொண்டு, ஒரு நிலையாய் நின்றது. இந்த விளையாட்டு, "பகடியைப் பாம்பு கடித்தாற்போல" என்னும் பழமொழிப்படி முடியுமோ, எங்களுக்கு நன்மையாய் முடியுமோ, எப்படி ஆகும் என்று ஒருவிதத்திலும் தெரியவில்லை. இவ்வாறு எங்களுக்கு உண்டான ஐயப்பாட்டை வெள்ளிக்கிழமை விரைவில் தெளிவித்தான்.

**வெள்ளிக்கிழமை கரடியைச் சுடுதல்**

கொம்பில் ஊன்றி நிற்கும் நிலையைவிட்டுப் பெயர்ந்து அருகில் வருமாறு இனிக்கரடியை ஏமாற்ற முடியாது என்று கண்டு, அவன் "நன்று நன்று, நீ நெருங்கி வராதிருந்தால் நான் வருகிறேன்" என்று சொல்லித் தன் சுமை தாங்காமல் வளையத்தக்க கிளையின் சிறு முனைக்குப் போனான். அக்கிளை வளைந்து கீழே தொங்கி ஊஞ்சல்போல் ஆடிற்று. ஆக்வே வெள்ளிக்கிழமை வரவரக் கைசறுக்கி, கூடிய அண்மையில் கொம்பு வளைந்தவுடன் பிடித்தபிடியை விட்டுத் தரையிற் குதித்து, ஓடிப்போய்த் துப்பாக்கியை எடுத்து ஒன்றும் செய்யாமல் நின்றான். அவ்வேளையில் நான் "நல்லது வெள்ளிக்கிழமை, இனி என்ன செய்யப் போகிறாய்? நீ ஏன் அதைச் சுடவில்லை?" என்று கேட்டேன். அவன், "இப்பொழுது சுடவில்லை; அதற்கு இன்னும் காலம் இருக்கிறது. இப்பொழுது சுட்டு அதைக் கொல்லக் கூடாது. சற்றுநேரம் தாழ்த்து நின்றால், உங்களுக்கு இன்னும் ஒருமுறை சிரிப்புக் காட்டுவேன்" என விடை கூறினான். அவன் சொற்படி தவறாமற் செய்தான். தன் பகைவன் தரையில் இறங்கித் தப்பிவிட்டான் என்று கண்டு, கரடி தான் நின்ற கொம்பைவிட்டு, அடிக்கடி பின் பக்கம் பார்த்து இறங்கி அடிமரத்தில் மெல்ல மெல்ல அடிமேல் அடிவைத்து இறங்கி வந்தது. அது தன் பின்

காலைத் தரையில் வைக்கச் சற்றுமுன் வெள்ளிக்கிழமை அருகே சென்று நின்றான்; தன் துப்பாக்கிக் குழாய் வாயைக் கரடியின் செவித் துளையில் நுழையும்படி பிடித்து வெடித்தான். அப்பொழுதே கரடி உயிர் நீங்கிப் பிணமாய் விழுந்தது. கரடி விழுந்தவுடன் அந்த வீரன் இவ்வேடிக்கை யைக் கண்டு, எங்களுக்குச் சிரிப்பு உண்டாயிற்றென்று அறியும் வண்ணம் திரும்பிப் பார்த்து, எங்கள் முகக்குறி யைக் கண்டு, குதிரை கனைப்பதுபோல் பெருமுழக்கம் செய்து "என் தாய நாட்டில் கரடியைக் கொல்லும் முறை இதுதான்;" என்றான். "நீங்கள் கரடியைக் கொல்லும் முறை இதுவோ? உங்களிடத்தில் துப்பாக்கி இல்லையே" என்று நான் கேட்டேன். அதற்கு அவன் "துப்பாக்கி இல்லை; மிகப்பருத்து நீண்ட அம்புகளைச் செலுத்திக் கொல்வோம்" என்றான். இஃது எங்களுக்கு இன்பமான பொழுது போக்காய் இருந்தது. ஆயினும், இன்னும் நாங்கள் காட்டுவழி போக வேண்டியிருந்ததனாலும், எங்கள் வழிகாட்டி மிகவும் காயப்பட்டதனாலும் என்ன செய்வது என்று அறியாமல் இருந்தோம். கோநாய்கள் ஊளையிட்ட பேரொலி கேட்டு, அதே நிலைவோடு இருந்தேன். முன்பு ஆபிரிக்கக்கரையில் கொடிய விலங்குகள் இட்ட ஒலிகேட்டு எனக்கு மிகுந்த அச்சம் உண்டாயிற்று என்று தெரிவித் தேன் அன்றோ? அஃதன்றி இக்கோநாய்கள் ஊளையிட்ட ஒலிபோல, அவ்வளவு அஞ்சத்தக்க முழக்கத்தை நான் எப்பொழுதும் கேட்டதில்லை.

**மேலும் தொடர்ந்த பயணம்**

இக்காரணங்களாலும், கதிரவன் மறையும் வேளை நெருங்கியதனாலும், தங்கி நிற்காமல் விரைந்து சென்றோம். இல்லாவிடின் வெள்ளிக்கிழமை சொன்னபடி குண்டுபட்டு இறந்த மிகப் பெரிய கரடியின் தோலை உரித்து எடுத்துக் கொண்டு போகாமல் விடமாட்டோம். கரடித்தோல் வைத் திருந்தால், எமக்கு உதவும். ஆயினும், இன்னும் ஒன்பது கல் வழிபோக வேண்டியிருந்ததனாலும், வழிகாட்டி எங்களை

விரைவுபடுத்தியதனாலும் கரடியை விட்டுவிட்டுப் பய ணத்தை மேற்கொண்டோம்.

இவ்விடத்தில் தரையும் பனிக்குள் மறைந்திருந்தது. மலைகளில் இருந்ததுபோல, பனி பேரிடர் உண்டாகத் தக்க அவ்வளவு ஆழ்ந்திருக்கவில்லை. விலங்குகளை அடித்துக் கொன்று உண்ணும் கோநாய் முதலிய கொடிய விலங்கு கள் பசிப்பிணி தாங்காமல் இரைதேடிக் காட்டிலும் வெளி யிலும் வந்திருக்கின்றனவென்றும், சிற்றூர்க் குடிமக்களை அச்சுறுத்தித் திரளான ஆடுகளையும், குதிரைகளையும், சில மனிதரையும் கொன்று மிகுந்த கெடுதி செய்தன என்றும் பிறகு கேள்விப்பட்டோம்.

### வழியில் கோநாய்கள்

நாங்கள் சென்ற வழியில் அஞ்சத் தக்க பேரிடர் தரும் ஓரிடம் எதிர்ப்படும் என்றும், அந்நாட்டில் கோநாய்கள் கூட்டம் கூட்டமாய் வாழ்வது உண்டென்றும், அவ்விடத் திலே அவைகளைக் காணலாம் என்றும் எங்கள் வழிகாட்டி சொன்னான். அவ்விடம் காடு சூழ்ந்த சிறு வெளி நிலமும் அதற்கப்புறம் காட்டில் ஒரு முனை தொடங்கி, எதிர்முனை வரையும் ஒடுங்கி நீண்டிருக்கும் ஒற்றையடி வழியுமாம். வெளிநிலத்தைத் தாண்டி ஒற்றையடி வழியாகச் சென்றால், காட்டிற்கு அப்பால் இருக்கும் சிற்றூரிற் சேரலாம். அங்கேதான் இரவில் தங்குவதற்கு எண்ணம் கொண்டு இருந்தோம். வெளிநிலத்திற்கு இப்பால் உள்ள காட்டில் நுழைந்தபொழுது கதிரவன் மறைய அரைமணி நேரம் இருந்தது. கதிரவன் மறைந்து சற்று நேரம் சென்றபின் வெளிநிலத்தை அடைந்தோம். நாங்கள் முதலில் கடந்து வந்த காட்டில் வேறு வியப்பு நிகழ்ச்சி ஒன்றையும் காண வில்லை. அக் காட்டின் இடையில் ஏறத்தாழக் கால்மைல் குறுக்களவு உள்ள ஒரு சிறு வெளிநிலம் இருந்தது. அந்த வெளிநிலத்தில் பெரிய கோநாய்கள் ஐந்து எங்கள் வழியில் ஒன்றன்பின் ஒன்றாய்க் குறுக்கிட்டு, ஏதோ ஒரு விலங்கை அடிக்கத் தொடர்வன போல விரைந்து ஓடின.

அவைகள் எங்களைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை. ஐந்தாறு நொடிப்பொழுதிற்குள் கண்ணுக்கு எட்டாத தொலைவில் ஓடி மறைந்தன. இதற்கிடையில் ஒன்று சொல்லுகிறேன்.

### வழிகாட்டியின் முன் அறிவிப்பு

எங்கள் வழிகாட்டி எளிதில் அஞ்சும் இளநெஞ்சன். அவன் கோநாய்களைக் கண்டவுடன் பின்னும் அதிக கோநாய்கள் வரும் என்று எண்ணி, அவற்றை எதிர்க்க ஆயத்தமாய் இருக்கச் சொன்னான். ஆதலினால், நாங்கள் துப்பாக்கிகளை மருந்து குண்டு நிரப்பிக் கெட்டித்து ஒழுங்குபட வைத்துக் கொண்டு மிக விழிப்போடு சென்றோம். அக்காட்டைக் கடந்து சென்று வெளிநிலத்தில் சேருமளவும் வேறு கோநாய்களைக் காணவில்லை. காட்டின் நீளம் சிறிதுகுறைய ஒன்றரைக்கல் இருக்கும்.

### கோநாய்களின் பசிக்கொடுமை

வெளிநிலத்திற் சேர்ந்தவுடன் மிகவும் விழிப்பாய் இருக்கவேண்டியதற்குக் காரணம் உண்டு என்று அறிந்தோம். முதலில் எங்கள் கண்ணெதிரில் காணப்பட்டது, இறந்த குதிரை ஒன்று. அதைக் குறைந்தது பன்னிரண்டு கோநாய்கள் கடித்துக் கொன்று, இறைச்சி முழுவதையும் தின்றபின், வெற்றெலும்புகளில் ஒட்டியிருந்த மெல்லிய வெண்தோலைக் கடித்து உரித்துத் தின்று கொண்டிருந்தன. விருந்து உண்பதில் நினைவு அழுந்தி நின்ற அவ்விலங்குகளைக் கலைப்பது தவறு என்று கருதினோம். அவைகளும் எங்களைப் பொருட்படுத்தவில்லை. வெள்ளிக்கிழமை அவற்றின் மீது குண்டு செலுத்தப் பதைத்தான்; நான் அவனுக்கு விடை தரவில்லை. நாம் நினையாதபோது நமக்கு ஒருவேளை அதிகத் துன்பம் நேரிடும் என்றும், நாம் அதற்கு ஈடுசெய்ய முன் ஏற்பாடாய் இருக்க வேண்டும் என்றும், என் எண்ணத்திற்பட்டது. வெளிநிலத்தில் அரைப்பாகம் தொலை தாண்டிப் போகு முன், எங்கள் இடக்கைப் புறத்தில் இருந்த காட்டில்

அச்சந்தரும் முறையில் கோநாய்கள் ஊளையிடும் ஒலி கேட்டது. பின்னும் சற்று நேரத்திற்குள் ஏறத்தாழ நூறு கோநாய்கள் படைப்பயிற்சி பெற்ற படைத்தலைவர் அணி வகுத்து அனுப்பும் படைபோல நெருங்கி, நிரைநிரையாக எங்களுக்கு எதிரில் வந்தன. அவைகளை எதிர்க்கும்முறை இன்னது என்று எனக்குச் சிறிதும் தெரியவில்லை. நாங்களும் நெருங்கி நிரை நிரையாய் அணிவகுத்துச் செல்வது தான் இதற்கு ஏற்ற எதிர்முறை என்று நினைத்தேன். அவ்வாறே நொடிக்குள் அணிவகுத்து நின்றோம். இடையறுது சுடும் பொருட்டு, முதலில் ஒருவன் விட்டு ஒருவன் குண்டுமாரி பொழிய, அவ்வெடி தீர்ந்தவுடன், கோநாய்கள் தோற்று ஓடாமல் மேலும் எதிர்த்துவர நேர்ந்தால் மற்றவர்கள் தாமும் குண்டுமாரி பொழிய வேண்டும் என்றும், முதலில் வெடி தீர்த்தவர்கள் தங்கள் துப்பாக்கிகளில் மீண்டும் மருந்து குண்டு நிரப்புவது போன்று இராமல் அவனவன் ஒவ்வொரு கைத்துப்பாக்கி எடுத்துக்கொண்டு வெடிதீர்க்க முற்பட்டு நிற்க வேண்டும் என்றும் என் படைவீரர்களுக்கு ஆணை பிறப்பித்தேன். நாங்கள் எல்லோரும் ஆளுக்கு ஒரு துப்பாக்கியும், இவ்விரண்டு கைத்துப்பாக்கிகளும் வைத்திருந்தோம்.

### கோநாய்க் கூட்டத்தின் கொடுமை

மேற்கூறிய முறையில் பாதி மனிதர் ஒருமுறையும், மற்றப்பாதி மனிதர் மற்றொரு முறையுமாக வெடிதீர்த்து, அடுத்தடுத்து ஆறு தடவை குண்டு மாரி பொழிவதற்கு ஏற்ற திறத்தோடு இருந்தோம். ஆயினும் அப்படிச் செய்வதற்கு இடமில்லாமற் போயிற்று. முதன்முறை குண்டு மாரி பொழிந்தவுடன் பகையாக வந்த கோநாய்கள் வெடியதிர்ச்சி கேட்டும், மருந்து பற்றி எரிந்தது கண்டும் திடுக்கிட்டுத் திகைத்து நின்று விட்டன. தலையிற் குண்டுபட்டு இறந்து விழுந்தவைகள் நான்கு. வேறு சில காயம்பட்டுக் குருதி வடிய வடிய ஓடித் தப்பின. வடிந்த குருதி உறை பனியில் படிந்திருக்கக் கண்டோம். மற்ற

வைகள் உடனே அஞ்சி ஓடவில்லை. ஒரு நிலையாய் நின்
றன. அதுகண்டு, மிக்க கொடுமையுள்ள விலங்குகளுக்கு
மனிதர் குரல் கேட்டவுடனே மிகுந்த அச்சம் உண்டாகும்
என்று முன்பு கேள்விப்பட்டது எனக்கு நினைவு இருந்த
தனால், எங்கள் படைவீரர் அனைவரும் மிக உரக்கக் கூவி
னோம். என்னுடைய கருத்து சற்றும் தவறவில்லை. நாங்கள்
கூவினவுடன் கோநாய்கள் அஞ்சித் தயங்கிப் பின்னோக்கின.
பின்பு பின்னணியில் இரண்டாம் முறை குண்டுமாரி பொழி
வித்தேன். குண்டு பொழிந்தவுடனே அவைகள் ஓடிப்
பறந்து காட்டிற் போய்ச் சேர்ந்தன. அதனால் மீண்டும்
துப்பாக்கிகளில் குண்டு மருந்து கெட்டிக்க எங்கட்கு
நேரம் கிடைத்தது. காலத்தை வீணிற்போக்காதபடி
தாழ்த்து நிற்காமல் போய்க்கொண்டிருந்தோம். குண்டு
மருந்து கெட்டித்து ஒழுங்கு செய்தவுடன் எங்கள் இடக்
கைப் பக்கத்திலிருந்த அந்தக் காட்டில் அஞ்சத்தக்க
பேரொலி கேட்டது. அஃது அண்மையில் அன்று. நாங்கள்
சென்று கொண்டிருந்த வழியிற் கேட்டது.

இரவு நெருங்கியது. அஃது எங்கட்குப் பெரிய இடை
யூறுதானே? வரவர ஒலி மிகுந்ததனால், அது கொடிய
விலங்குகளாகிய கோநாய்கள் ஊளையிடும் ஒலி என்று
எளிதில் அறிந்தோம். விரைவில் இரண்டு மூன்று கூட்ட
மான கோநாய்கள் எங்கள் இடப்பக்கத்திலும், ஒரு
கூட்டம் எங்கட்குப் பின்புறத்திலும், ஒரு கூட்டம் எதிரி
லும் வந்து எங்களைச் சூழ்ந்து கொண்டன. அவ்வாறு
சூழ்ந்தாலும் அவைகள் எங்கள் மேல் வந்து விழாததனால்,
குதிரைகளைக் கூடியவரையில் முடுக்கிச் செலுத்திக்
கொண்டு போனோம். தரை ஒப்பமற்ற கடுவழியாய் இருந்த
தனால் குதிரைகள் மிக்க விரைவாய்ப் பாய்வதற்கு இயல
வில்லை. ஆயினும் இயன்றவரை விரைந்து ஓடின. இப்படிச்
சென்று வெளிநிலத்தைத் தாண்டி, அதன் எதிர்ப்பக்கத்
தில் உள்ள காட்டிற்குள் செல்லும் வழி கண்ணுக்கு
எதிர்ப்படும் தொலையிற் சேர்ந்தோம். அந்த ஒற்றையடிப்
பாட்டைக்கு அண்மையிற் சேர்ந்தபொழுது அங்கே கூட்ட

மான கோநாய்கள் சிதறி நின்றது கண்டு, மிகவும் திகைத்து மயங்கி

## கோநாய்களால் கடிக்கப்பட்ட மனிதர்

உடனே அக்காட்டிற்குச் செல்லும் மற்றொரு வழியில் துப்பாக்கி வெடி தீர்த்த ஒலி கேட்டு அவ்வழியைத் திரும்பிப் பார்த்தோம். அப்பொழுது கடிவாளம் இட்டுத் தோற்சேணம் கட்டியபடி ஒரு குதிரை காற்றுப்போல் விரைந்து ஓடிப் பறந்து வந்தது. பதினாறு பதினேழு கோநாய்கள் மிக்க விரைவாய் அதைத் தொடர்ந்தன. குதிரை அவைகளினும் மிக்க விரைவாய் ஓடிற்று. நெடுநேரமட்டும் அவ்வளவு விரைவாய் ஓடமுடியாமல் அக்குதிரை களைத்துப் போகும் ஆதலால், கோநாய்கள் அதை எவ்விதத்திலும் பிடித்து விடும் என்று உறுதியாய் நம்பினோம். அவைகள் முடிவில் குதிரையைத் தொடர்ந்து பிடித்து விட்டன.

இவ்விடத்தில் அளவு கடந்த நடுக்கம் கொள்ளத் தக்க காட்சி ஒன்றைக் கண்டோம். குதிரை காட்டினின்று வெளியே ஓடிவந்த துறையிற் சென்று பார்த்தபொழுது, செத்துக்கிடந்த மற்றொரு குதிரையையும், இரண்டு மனிதரின் உடல்களையும், உயிர்க்கொலைபுரியும் தன்மையுள்ள அக்கொடிய கோநாய்கள் தின்று கொண்டிருந்தன. அவர்களில் ஒருவன் பக்கத்தில் வெடி தீர்க்கப்பட்ட துப்பாக்கி ஒன்று இருந்ததனால், அவனே, எங்களுக்குக் கேட்ட வெடியை வெடித்தவன் என்பதற்கு ஐயமில்லை. அவன் தலையும், அரைக்கு மேற்பாதி உடலும், முற்றிலும் உண்ணப்பட்டது கண்டு, மிக்க மனக்கலக்கமுற்று நடுங்கி நின்றோம்.

## கோநாய்களுடன் போர்

இனிப்போகத்தக்க வழி எது என்று நாங்கள் அறியவில்லை. அந்தக் கோநாய்கள் எங்கள் மேல்விழுந்து எங்களைக்

கொன்று தின்ன முடிவு செய்தவை போல, உடனே எங்களைச்சூழ்ந்து நெருங்கின. அவைகள் முந்நூறு இருக்கும் என்று உறுதியாய் நம்புகிறேன். கடந்த வேனிற்காலத்தில் தறித்து வீழ்த்தப்பட்ட பெருமரங்கள் சில காட்டிற்குள் செல்லும் துறைவாயில் சற்றுத் தொலைவில் விலகி யிருந்தன. அவ்வேளை அவைகள் அங்கிருந்தது எங்களுக்கு மிகவும் நன்மையாக முடிந்தது. அவைகளை வெட்டியவர்கள் எடுத்துக்கொண்டு போவதற்காக அவ்விடத்தில் விட்டுவைத்திருந்தார்கள் போலும். அம்மரங்கள் இருந்த எல்லைக்குள் நான் என் படை வீரர்களை அணிவகுத்து நிறுத்தினேன். ஒரு நீண்ட மரத்திற்குப்பின் நாங்கள் அனைவரும் நிரையாய் நின்றபின், எல்லாரையும் குதிரையை விட்டு இறங்கச் சொல்லி, எங்களுக்கு எதிரில் இருந்த அம்மரத்தை மார்பு அளவு உயர்ந்த மதிலாகக் கருதி, நாங்கள் அதற்குள் முக்கோண வடிவாய் நின்று, குதிரைகளை மையத்தில் நிறுத்தினோம். நாங்கள் இப்படிச் செய்தது நன்றாய் முடிந்தது. அந்தக் கோநாய்கள் இவ்விடத்தில் எங்கள் மேல் விழுந்து தாக்க வந்ததைக் காட்டிலும் அதிக முரட்டுத்தனமான போர் ஒருபொழுதும் நடந்தது அறியோம். அவைகள் உறுமிக்கொண்டுவந்து, தங்களுக்கு இரையாகத்தக்க விலங்கை அடிக்கக் கருதிப் பாய்ந்து வருவதுபோல, மார்பளவு உயர்ந்த மதில் என்று நான் குறிப்பித்த வெட்டிய மரங்களின்மேல் ஏறிக்கொண்டன. எங்களுக்குப் பின்னால் நின்ற குதிரைகளைக் கண்டு முதன்மையாய் அவைகள் மேல்விழுந்து அடிக்க நாடியே கோநாய்கள் அவ்வளவு முரட்டு வெறிகொண்டு வந்தனவென்று தோன்றிற்று. உடனே முன்போல ஒருவன் விட்டு ஒருவனைக் குண்டுமாரி பொழியும்படி என் வீரர்களுக்குக் கூறினேன். அவர்கள் குறி தவறாமல் சுட்டதனால், முதல் வெடியில் பல கோநாய்கள் குண்டுபட்டு இறந்தன. ஆனாலும், பின் நின்றவைகள் முன் நின்றவைகளை முடுக்கித் தள்ளிப் பேய்கள்போல எங்கள் மேல் விழ நெருங்கி வந்ததனால், இடைவிடாமல் வெடி தீர்க்க வேண்டியிருந்தது.

எங்களுடைய பெருந் துப்பாக்கிகளால் பின்னும் ஒரு முறை குண்டுமாரி பொழிந்த பிறகு, அவைகள் சற்றுநேரம் ஓய்ந்து நின்றனபோலத் தோன்றின. அவைகள் அவ்வளவோடு அஞ்சிப் புறமுதுகு காட்டி ஓடும் என்று நான் எண்ணியிருந்தேன். சிறிது நேரத்துக்குள் மீண்டும் வேறு கோநாய்கள் நெருங்கி எங்களுக்கு எதிரிட்டு வந்தன. ஆதலினால் கைத்துப்பாக்கிகளாலும் இரண்டு முறை குண்டு மாரி பொழிந்தோம். இவ்வாறு நான்கு முறை தீர்த்த வெடியினால் குண்டுபட்டுப் பதினேழு பதினெட்டுக் கோநாய்கள் இறந்தன. முடமானவைகள் அதற்கு இரண்டு மடங்கு. அவ்வளவோடு அவை அஞ்சி ஓடாமல் பின்னும் நெருங்கி வந்தன. ஒரு முறை வெடி தீர்ப்பதற்கு மாத்திரம் குண்டு மருந்து கெட்டிக்கப்பட்டிருந்ததனால், அந்த நேரத்தில் அதையும் வெடி தீர்த்துவிட்டு வெறுங்கையாய் இருப்பதற்கு எனக்கு விருப்பமில்லை.

### நாங்கள் வெற்றி பெற்றது எப்படி?

நாங்கள் போரிட்டுக்கொண்டு நின்றபோது, என்னுடைய அடிமை ஆள் வெள்ளிக்கிழமை மிக்க விரைவில் கைத்திறமையுடன் எனது பெருந்துப்பாக்கியிலும், தன் துப்பாக்கியிலும், குண்டு மருந்து கெட்டிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். ஆதலால், அவனை விடுத்து, என்னுடைய மற்றைப் பணியாளனை வரவழைத்து, மருந்துக் கொம்பு ஒன்று கொடுத்து, மேற்குறித்த மரத்தில் அதன் அடிதொடங்கி நுனிவரையில் ஒரு வரிசை மருந்து கொட்டி வைக்கச் சொன்னேன். அவன் அடர்த்தியாக மருந்தை எனது சொற்படி கொட்டி வைத்துத் திரும்பி வந்தவுடன், கோநாய்கள் மரத்திற்கருகில் நெருங்கி வந்து சில அதன் மீது ஏறின. குண்டு கெட்டிக்காத கைத்துப்பாக்கி ஒன்றை அம்மருந்து வரிசைக்கு அருகில் சற்று எட்டிப்பிடித்து, வில்லை இழுத்தேன். உடனே மருந்து பற்றி எங்கும் கொழுந்துவிட்டு எரிந்தது. மரத்தின்மீது ஏறியிருந்தவைகளுக்கு நெருப்புச் சுட்டு உறைத்ததனால் ஆறு ஏழு கோநாய்கள் மரத்தின் இப்புறத்தில் எங்கள் நடுவில்

பாய்ந்து விழுந்தன. நொடிப் பொழுதிற்குள் நாங்கள் அவைகளை வெட்டி வீழ்த்தினோம். கதிரவன் மறைந்ததனால் இருட் பொழுது வந்தது. அந்த இருளில் மருந்து ஒளியோடு பற்றி எரிந்ததைக் கண்டு, மற்றவைகள் மிகவும் அஞ்சி அதிர்ந்து சற்றுப் பின்னிட்டு ஓடின. அந்த வேளையில் வெடி தீர்க்காமல் நாங்கள் வைத்திருந்த கைத்துப்பாக்கிகளால் கடைசி முறை குண்டுமாரி பொழியச் சொன்னேன். பொழிந்த பின் நாங்கள் அனைவரும் உரக்கக்கூவி, ஆர்ப்பரித்தோம். உடனே கோநாய்கள் அஞ்சிப் புறங்காட்டி ஓட்டம் பிடித்தன. இருபது கோநாய்கள் வரையில் காயம்பட்டு முடமாகி ஓடும் திறம் இன்றித் தரையிற்கிடந்து தத்தளிக்கக் கண்டு, நாங்கள் பாய்ந்து நெருங்கிப்போய்க் கத்திகளால் அவைகளை வெட்டிக்கொன்றோம். இதனால் எங்கள் எண்ணம் நிறைவேறிற்று. இறக்கும்போது அவைகள் அலறி ஊளையிட்ட ஒலி கேட்டுத், தன் இனத்திற்குக் கேடு நேரிட்டது என்று அறிந்து, மற்றவைகள் எல்லாம் அங்கே நிற்காமல் ஓடிப் பறந்துபோயின.

**சிற்றூரை அடைதல்**

தொடக்கம் முதல் முடிவுவரை நாங்கள் கொன்ற கோநாய்கள் ஏறத்தாழ அறுபது இருக்கும். பகற்காலமாய் இருந்தால், பின்னும் அத்தனை கோநாய்களை ஐயமின்றிக் கொல்வோம். போர்க்களத்தில் எதிர்ப்பட்ட பகை விலங்குகளை இவ்வாறு அறவே தொலைத்ததனால், காலம் தாழ்க்காமல் எங்கள் வழியிற்சென்றோம். பின்னும் மூன்று கல்தொலை வழி போகவேண்டியிருந்தது. போகும் வழியில் பல இடங்களில் விலங்குகளைக் கொன்று தின்னும் தன்மையுள்ள கோநாய்கள் ஊளையிடும் பேரொலி கேட்டது. சில வேளை அவைகளைக் கண்ணுக்கெதிரே கண்டது போன்று இருந்தது. உறை பனியிற் கண் கூசியதனால் அவைகள் கோநாய்கள் தாம் என்று உறுதியாய்த் தெரியவில்லை. ஏறக்குறைய ஒரு மணி நேரத்தில் இராத்தங்க நினைத்திருந்த சிற்றூரிற் போய்ச் சேர்ந்தோம். அச்சிற்றூரினர் அனைவரும் மிகுந்த அச்சம்கொண்டு நடு நடுங்கி படைக்

கலம் வைத்துக்கொண்டிருந்தார்கள். முதல் நாள் இரவு கோநாய்களும், சில கரடிகளும் அந்தச் சிற்றூரில் நுழைந்து, அவர்களை அச்சமடையச் செய்ததனால், அவர்கள் ஆடுமாடுகளையும், தம்மையும் அக் கொடிய விலங்குகளின் வாயில் அகப்படாமல் காக்கும் பொருட்டு, இராப்பகல் எந்த நேரமும், முதன்மையாய் இரவு நேரத்தில் படைக்கலத் துணையுடன், விழித்திருந்து காவல் செய்யும் படி நேரிட்டது.

**பனிக் காலத்தில் அங்கு வந்தது தவறு**

எங்கள் வழிகாட்டி மேற்கூறியபடி இரண்டு காயம் பட்டிருந்ததனால் மறுநாட்காலை அவன் கை கால் வீங்கிக் குடைச்சல் எடுத்தது. அவன் பயணம் செய்ய முடியாமல் இருந்தான். ஆதலால் அவனை அங்கே நிறுத்திவிட்டுப் புதிய ஆள் ஒருவனை வழிகாட்டியாய் அமர்த்திக் கொண்டு, டூலூஸ் நாட்டிற்குப் போனேம். அந்நாடு உடல்நலத்துக்கு ஏற்ற அளவு வெப்பமும் செழிப்பும் சிறப்பும் உள்ளதாய் இருந்தது. அங்கே உறைபனியும் இல்லை; கோநாய் முதலிய கொடிய விலங்குகளும் இல்லை. வழியில் எங்களுக்கு நேரிட்ட பேரிடர்களை அங்குள்ள மக்களுக்குச் சொன்னபொழுது, அவர்கள் மலையடிவாரத்திலுள்ள பரந்த காட்டில் முதன்மையாய்ப் பனி பொழியுங் காலத்தில் கோநாய் முதலிய கொடிய விலங்குகளால் வழிச் செல்வோருக்குத் துன்பம் நேர்வது வழக்கந்தான் என்றூர்கள். ஆனாலும் இந்தக் கடுங்குளிர் காலத்தில் எங்களை இந்த வழியில் அழைத்துக் கொண்டுவந்த வழிகாட்டி மிகவும் அறிவில்லாத மூடன் என்றும், நாங்கள் அனைவரும் கொடிய விலங்குகளால் கொன்று தின்னப்படாமல் தப்பி வந்தது மிக்க வியப்புத்தான் என்றும் சொன்னார்கள். கோநாய்கள் நெருங்கி வருவது கண்டு, நாங்கள் குதிரைகளை நடுவில் நிறுத்தி, முக்கோண வடிவாய் அணிவகுத்து நின்ற செய்தியைச் சொல்லக்கேட்டு, அவர்கள், "நீங்கள் அப்படிச் செய்தது முழுதும் தவறு. நீங்கள் உயிர்தப்பிப் பிழைத்து வந்தது மிகவும் வியப்புத்தான். கோநாய்கள்

தமக்கு விருப்பமான இரையாகிய குதிரைகளைக் கண்டதனு லேயே அவ்வளவு முரட்டுத்தனமாய் உங்கள்மேல் வந்து விழுந்தன. பனி பெய்யாத காலங்களில் அவைகள் துப்பாக்கியைக் கண்டவுடனே பயந்து நடுங்கி ஓட்டம் பிடிக்கும். கடும் பசி வருத்தத்தால் வெறிகொண்டவைகள் போலத் திரியும் வேளையில் குதிரைகளைக் கண்டு, கொன்று தின்பதற்காக மட்டற்ற ஆவல் உடையவைகளாக இருந்ததனுல், அவைகள் தமக்கு நேரிடும் துன்பத்தைச் சற்றுவது பொருட்படுத்தவில்லை. அந்தச் சரியான வேளையில் இடையீடு இன்றித் துப்பாக்கி வெடி தீர்த்து, இறுதியில் வெடி மருந்து தூவி, சூழ்ச்சி முறையில் அதில் நெருப்புப் பற்ற வைத்து வெற்றி பெற்றீர்கள். இவ்வாறு செய்யவில்லையானுல், உங்களை அக் கோநாய்கள் கடித்துச் சிதறிவிழச் செய்வது உறுதி. ஆயினும் நீங்கள் குதிரைமீது இருந்து கொண்டே படைவீரரைப் போல மனம் துணிந்து குண்டு மாரி பொழியும்படி செய்திருந்தால், அக்குதிரைகள் உங்களிடம் இருப்பதனுல், கோநாய்களுக்கு அவைகளிடத்தில் அவ்வளவு நாட்டமும் துணிவும் உண்டாகா. மேலும் இறுதியில் குதிரைகளை விட்டு இறங்கி, நீங்கள் எல்லோரும் தனியே ஓரிடத்தில் நெருங்கி நின்ருல், அவைகள் அக் குதிரைகளைக் கொன்று தின்ன விரும்பி ஒரே நோக்கமாய்ச் செல்லும். படைக்கலங்கள் வைத்திருப்பதனுலும், பன்னிரண்டு பேர் வரையில் நீங்கள் சேர்ந்திருப்பதனுலும், நீங்கள் அச்சமின்றி நலத்துடன் வந்து சேரலாம்.'' எனக் கூறினுர்கள். என்னைப் பொறுத்தவரையில் பிறந்த நாள்முதல் இதுவரையில் எந்தக்கொடிய துன்பத்தினுலும் இத்தகைய மன நடுக்கம் உண்டாகவில்லை. பேயின் மாற்றுருவம் போன்ற கோநாய்கள் முந்நூற்றுக்கு மேற்பட்டவை பெருமுழக்கம் செய்துகொண்டு, வாய் திறந்தபடி எங்களைக் கொன்று தின்ன வந்ததையும், ஓடி ஒதுங்குவதற்காயினும், ஒளித்து நிற்பதற்காயினும் எவ்வகைப் புகலிடமும் இல்லாதிருந்ததையும் கண்டபொழுது, நான் திகைத்து மயங்கி, இனி இறந்து முடிவதே என் நிலை என்று எண்ணியிருந்தேன். ''சூடுண்ட பூனை அடுப்பங்கரை சேராது'' என்னும்

பழமொழிக்கு என் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் உண்மைப் பொருள் கண்டேன். என் மனம் பட்டபாடு எனக் கன்றோ தெரியும்? இனி எவ்வித இன்றியமையாமை நேர்ந்தாலும், நான் ஒரு பொழுதும் இம்மலை வழியில் வருவதில்லை என்று முடிவு செய்தேன். கிழமைக்கு ஒரு முறை புயலடிக்கும் என்று ஐயம் திரிபு அற அறிந்திருப் பினும், இனி இம்மலை வழி நடப்பதைவிடத், துன்பம் கருதாமல் மூவாயிரம் கல் தொலைவாயினும் கடல் வழிப் பயணம் செய்வதே நலமென்று நினைத்தேன்.

### டோவர் துறையை அடைதல்

பிரான்சு நாட்டை ஊடறுத்துக் கொண்டு சென்ற வழியில் வியக்கத்தக்க நிகழ்ச்சி எதையும் நான் காண வில்லை. என்னைவிட மிகுந்த வல்லமையுடைய வழிப் பயணத்தார் கண்ட வரலாறுகள் எல்லாவற்றையும் முன்பே நன்கு எழுதித் தெரிவித்திருக்கிறார்கள். அவை களைத் தவிர மற்றொன்றையும் நான் காணவில்லை. நான் டூலூசினின்று பயணப்பட்டு, பாரிஸ் சேர்ந்து, அங்கே நீண்ட நாள் தங்காமல் கலேக்குப் போய் மரக்கலம் ஏறி, சனவரித் திங்கள் 14-ஆம் நாள் எவ்விடையூறும் இன்றி டோவர் துறையில் கரையேறினேன். நான் மேற்குறித்த பயணம் செய்த காலம் கடுங்குளிர் காலம்.

நான் எந்த இடத்தை அடைய வேண்டும் என எண்ணிப் புறப்பட்டேனோ அவ்விடத்தில் இப்பொழுது வந்து சேர்ந்தேன். சிலநாட்களில் நான் புதிதாய்த் தேடிக் கொண்ட பொருள்கள் எல்லாம் பழுதின்றி என்னிடம் வந்து சேர்ந்தன. நான் கொண்டுவந்த உண்டிகளைத் தொல்லையின்றி மாற்றிப் பணமாக்கினேன்.

இங்கிலாந்தில் நல்ல பண்புகளுடைய அந்தக் கிழட்டுக் கைம்பெண்தான் எனக்கு முதன்மையான நல்லறிவு புகட்டும் அமைச்சர் போன்று இருந்தாள். அவளுக்கு நான் பணம் கொடுத்தனுப்பிய நன்றியை மனத்தில் வைத்து இந்த உயிர் அளித்த நல்லோர் பொருட்டு என்ன

என்ன பாடுபட்டாலும் தரும் என்று அவள் நினைத்திருந்தாள். நான் என் சொத்து முழுவதையும் அவளை முழு மனத்தோடு நம்பி ஒப்புவித்துக் கவலையற்று இருந்தேன். முதலில் இருந்து முடிவு வரையில் நற்பண்புகளாலும் நற்செயல்களாலும் மேன்மையுற்ற இந்தச் செல்வியினுடைய களங்கமற்ற மனநேர்மையை நினைத்து, மிகுந்த மகிழ்ச்சியடைந்தேன்.

## தோட்டத்தை விற்க விரும்பினேன்

இதன்பின் என் பொருள்களை இவளிடத்தில் ஒப்புவித்துவிட்டு, லிஸ்பன் நகரத்திற்குப் போகவும், அங்கிருந்து பிரேஜில் நாட்டுக்குப் பயணப்படவும் எண்ணம் கொண்டேன். இந்த எண்ணத்துக்குத் தடையாகச் சமயக்கோட்பாடு பற்றிய எண்ணம் என் உள்ளத்தில் பிறந்தது. நான் வெளி நாடு சென்றிருக்கும் காலத்தில் பெரும்பாலும் தனி மனிதனாய் நாட்கழித்தபோது உரோமன் நெறியைக் குறித்து என் உள்ளத்தில் சில ஐயங்கள் பிறந்தன. அதனால், இனி எனது மனம் உவந்து ஏற்றுக் கொண்ட நெறிக்கோட்பாடுகளைக் கைவிட்டு விடவேண்டும் உரோமக் குருக்கள் அவையின் அதிகாரத்தில் இருக்கவும், முழுமனத்தோடு உரோமன் கொள்கையை மேற்கொள்ளவும் முடிவு செய்தால் அன்றி, நான் பிரேஜில் நாட்டுக்குப் போகவும், போய் அங்கே நிலைத்து வாழவும் இயலாது என்று அறிந்தேன். ஆதலினால் இங்கிலாந்திலேயே நிலைத்து வாழவும், கூடுமானால் எனது தோட்டத்தை விலைக்கு விற்றுவிடவும் முடிவு செய்தேன்.

## தோட்டத்தை விற்கும் முயற்சி

தோட்டத்தை விற்கும் பொருட்டு நான் லிஸ்பன் பட்டணத்தில் இருக்கும் கிழவராகிய என் நண்பருக்கு ஒரு கடிதம் எழுதி, அவர் கருத்து என்ன என்று கேட்டதற்கு அவர் "உன் தோட்டத்தை அவ்விடத்திலேயே எளிதில் விற்கக் கூடும், உன் பொருளின் பாதுகாப்பாளருடைய மைந்தராகிய வணிகர் இருவரும் பிரேஜில் நாட்டில் வாழ்

பவர்கள். உன் தோட்டம் என்ன விலைபெறும் என்று அவர்கள் நன்ருக அறிந்திருப்பார்கள். அவர்கள் தோட்டத்தின் எல்லையிலேயே வாழ்கின்ருர்கள். அன்றியும் அவர்கள் குறைவற்ற செல்வர் என்று அறிவேன். ஆதலால் அந்தத் தோட்டம் உங்கட்கு விலைக்கு வேண்டுமா? என அவர்களைக் கேட்கும்படி எனக்கு அதிகாரம் கொடுப்பாயாஞல் கேட்பேன்; அவர்கள் அதை விலைக்கு விருப்பத்தோடு வாங்கிக் கொள்வார்கள். உன் தோட்டம் முறைப்படி என்னவிலை பெறுமோ அதற்குமேல் ஆயிரம் பவுன் வரையில் உன் கையில் வந்து தேறும் என்பதற்கு ஐயமில்லை." எனத் தெரிவித்தார்.

நான் அப்படிச் செய்ய உடன்பட்டுத், தோட்டம் வேண்டுமோ என்று அவ்வணிகரைக் கேட்கும்படி என் நண்பராகிய மாலுமிக்கு விடைகொடுத்தேன். அவர் கடிதம் எழுதிக் கேட்டார். ஏறத் தாழ எட்டுத் திங்கள் கழித்துத் திரும்பி வந்த கப்பலில் அவர்கள் அனுப்பிய கடிதம் வரப் பெற்று, அவர் எனக்குக் கடிதம் எழுதி, வணிகர் உன் தோட்டத்துக்கு ஏழாயிரத்து நானூற்று இருபத்தைந்து பவுன் கொடுக்க உடன்பட்டு, இத்தொகையை **லிஸ்பன்** பட்டணத்திலே இருக்கும் தங்கள் செயலாளர் ஒருவரிடத்திற்கு அனுப்பி யிருக்கிருர்கள் என்பதாகச் செய்தி தெரிவித்தார். நான் அக்கடிதத்தைப் பார்வையிட்டு, **லிஸ்பன்** பட்டணத்திலிருந்து அவர்கள் அனுப்பிய விலை முறியில் கையொப்பம் வைத்து, அதை அந்தப் பெரியவரிடத்துக்குத் திருப்பி அனுப்பினேன். அவர் முன்பு நான் கூறியிருந்தபடி தோட்டக் கணக்கில் வாழ்நாள் முழுதும் ஆண்டுதோறும் நூற்று முப்பத்தைந்து பவுன் தமக்கும், அதன்மேல் வாழ்நாள் முழுதும் ஆண்டுதோறும் அறுபத்தேழு பவுன் பத்து ஷில்லிங் தம்முடைய மைந்தனுக்கும் கொடுத்து வருவதாக வணிகர்மீது கணக்குவைத்துக்கொண்டு, எனக்குத் தோட்டத்தின் விலை என்று ஏழாயிரத்து இருநூற்றிருபத்திரண்டு பவுன் பத்து ஷில்லிங்குக்கு உண்டி அனுப்பினர்.

## செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்

என்னுடைய வரலாறு பலவித இன்னல்களையும், நான் அச்சமின்றித் துணிந்து செய்த முயற்சி வரலாறுகளையும் விளக்கியது. அஃது இறைவன் அருளால் ஏற்படுத்தப்பட்ட பல நிறமுள்ள வேலைப்பாட்டிற்கு ஒப்பானது என்று சொல்லத்தகும். என் வரலாற்றில் விளங்கிய பலவிதச் செய்திகள் இந்நிலவுலகில் எவர் வரலாற்றிலும் இல்லை. அறிவு கெட்டுத் தாய் தந்தையருடைய வீட்டை விட்டு, நாடு கடந்துபோய், மேலும் மேலும் துன்ப நிலை அடைந்து வருந்திய நான் கனவிலும் நினைக்காதிருக்கும் வேளையில் திரண்ட செல்வமுள்ள பெரும் பணக்காரன் ஆனேன். இப்படிப்பட்ட வியத்தகு வரலாற்றின் முதற் பகுதியை இவ்வாறு சொல்லி முடித்தேன்.

பல துறையினின்று வந்து ஒன்றாகத் திரண்ட செல்வம் பெற்றிருந்ததனால், இனி அறிவு கெட்டு எவ்வகைத் துன்பச் சூழலிலும் தலையிடேன் என்று என் வரலாற்றைப் படிக்கும் யாவரும் நினைப்பர். அவர்கள் நினைப்பது இயற்கைதான். மற்றச் செயல்களும் ஒத்திருந்தால், ஐயத்திற்கிடமான தவறான முயற்சிகளில் நான் ஒரு பொழுதும் தலையிடேன். ஆயினும் ஒன்றை நினைக்கவேண்டும். நான் நாடோடியாய்த் திரிந்து பழக்கப்பட்டவன். எனக்கு மனைவி மக்கள் இல்லை. சுற்றத்தார் பலர் இல்லை. செல்வம் எவ்வளவு சேர்ந்திருந்தாலும், நான் பலருடன் பழகி அறிமுகம் பெறவில்லை. பிரேஜில் நாட்டில் உள்ள என் நிலங்களை விற்ற பிறகும்கூட அந்நாட்டைப்பற்றிய நினைவை மறந்து விடுவதற்கு என்னால் முடியவில்லை. மீண்டும் அவ்விடத்திற்குப் பறந்து ஓடுவதற்கு எனக்கு அவா பெருகிற்று. முதன்மையாய் எனக்குத் தீவைப் போய்ப்பார்க்கவும், துணையற்ற ஸ்பானியர் அங்கு இருக்கின்றார்களா இல்லையா என்பதை அறிதற்கும், நான் அவ்விடத்தில் குடியிருத்திவிட்டு வந்த கொடியோர் அவர்களுக்குச் செய்த நன்மை தீமைகளை அறிதற்கும், எனக்கு அடங்காத விருப்பம் உண்டாயிற்று. என்னை உயிர்போல் பாதுகாத்து வந்த அக்கிழவி

இவ்விருப்பத்தின்படி செல்லவேண்டா என்று பலவாறு காரணம் எடுத்துக்காட்டி, என் மனத்தைத் திருப்பி, ஏறத் தாழ ஏழாண்டுகள் வரையில் என்னைக் கடற்பயணம் போகாதபடி தடுத்து வந்தாள். அக்காலத்தில் என் உடன் பிறந்தான் ஒருவனுடைய பிள்ளைகள் இருவரை என் பொறுப்பில் ஏற்று, ஆதரித்துக்கொண்டு வந்தேன். அவர்களில் மூத்தவனிடம் சிறிது பொருள் இருந்ததனால், நாகரிகம் உள்ள பெருமகன் ஆகுமாறு நான் அவனுக்கு நற்பழக்கம் பயிற்றி என் பொருளில் ஒரு பகுதியை அவன் பொருளுடன் சேர்த்துக்கொள்ளும்படி இறுதி முறி எழுதி வைத்தேன். இளையவனைக் கடலோடும் தொழில் பயிற்றும்படி கப்பல் மாலுமி ஒருவரிடத்தில் ஒப்புவித்தேன். ஐந்து ஆண்டுகள் சென்ற பின் அவன் அறிவும், துணிவும், திறமையும் உள்ள இளைஞன் என அறிந்து, நல்லமரக்கலம் ஒன்றில் அவனை வேலைக்கு அமர்த்துவித்துக் கடல் ஓடுதற்கு அனுப்பினேன். பிறகு இவ்விளைஞன் நாடுகள் பல சுற்றித்திரிந்து கிழவனாகிய என்னையும் கடற்பயணம் செய்யும்படி திருப்பி அழைத்துக்கொண்டான்.

**என்னுடைய திருமணம்**

இதற்கிடையில் நான் இங்கிலாந்தில் ஒருவாறு குடித்தனம் செய்துகொண்டு வந்தேன். முதலில் ஒரு பெண்ணை மணம் செய்துகொண்டேன். எங்களுக்குப் பிறந்த பிள்ளைகள் மூன்று—மைந்தர் இருவர்; மகள் ஒருத்தி. இத்திருமணத்தால் எனக்குப் பொருட் கேடும் இல்லை. மனக்குறையும் இல்லை. பிறகு என் மனைவி இறந்துபோனாள். அதன் பிறகு **ஸ்பெயினுக்குக்** கடற்பயணம் சென்றிருந்த என் தம்பி மகன் மிகுந்த பொருள் ஊதியம் பெற்றுத் திரும்பி வந்தான். நாடுகள் பலவற்றைக் காண எனக்கு விருப்பம் உண்டாகியிருந்ததனாலும், அவன் வருந்தி வேண்டிக் கொண்டதனாலும், அவன் பணிபுரிந்த கப்பலில் வணிகப் பொருள் ஏற்றிக்கொண்டு கிழக்கிந்தியாவிற்குப் போக உடன்பட்டேன். நான் இக்கடற் பயணம் செய்த ஆண்டு 1694-ஆகும்.

என்னுடைய தீவில் என்ன நடந்தது?

இந்தப் பயணத்தில் நான் புதிதாய்க் குடியேறிய தீவைப் போய்ப் பார்த்தேன். எனக்குப் பின் அத்தீவில் குடியேறிய ஸ்பானியரைக் கண்டேன். அவர்கள் வரலாறு களையும், நான் அவ்விடத்தில் குடியேற்றிவந்த கொடியவர் களின் வரலாறுகளையும் முதலிலிருந்து முடிவுவரை சொல் லக்கேட்டேன். அக்கொடியோர் மாறி மாறி அவர்களுடன் இணங்கியதும், பிணங்கியதும், இரண்டறக் கலந்து வாழ்ந் ததும், சண்டையிட்டுப் பிரிந்ததும், முடிவில் ஸ்பானியர் அவர்களைக் கட்டாயப்படுத்தி நடத்தியதும், அக்கொடி யோர் ஸ்பானியருக்கு அடங்கியதும், ஸ்பானியர் அவர் களைப் புகழ்ந்து பாராட்டி நடத்தியதும் ஆகிய இவைகளை எல்லாம் கேட்டு அறிந்தேன். அத்தீவில் அடுத்தடுத்துப் பல முறை இறங்கிய கரிபியருடன் அவர்கள் போர்புரிந்த னர். அத்தீவில் அவர்கள் பற்பல சீர்திருத்தங்கள் செய்து வைத்திருந்தனர். ஐந்து பேர் அடுத்த நாட்டுக் குத் துணிந்து சென்று ஆடவர் பதினொருவரையும், பெண்கள் ஐந்து பேரையும் சிறை பிடித்துக்கொண்டு வந்து குடியேற்றினர். நான் அவ்விடத்திற் போனபொழுது ஏறத்தாழ இருபது குழந்தைகள் வரையில் பிறந்திருந்தன. இன்னும் இவைபோற் பல நிகழ்ந்திருந்தன. இவை எல்லா வற்றையும் எழுதத்தொடங்கினால் படிப்பவர்களுக்கு இனி மையான வரலாற்று நூல் ஆகும்.

இத்தீவில் நான் இருபது நாள் வரையில் தங்கினேன். அவர்களுக்கு மிகவும் இன்றியமையாத பலவித உணவுப் பொருள்களும், இங்கிலாந்தினின்று நான் ஏற்றிக்கொண்டு போன படைக்கலம், மருந்து, குண்டு ஆடைகள், தொழிற் கருவி முதலியவைகளும் கொடுத்தேன். இங்கிலாந்தி லிருந்து அழைத்துச் சென்றிருந்த மரத்தச்சன் ஒருவனை யும், கருமான் ஒருவனையும் அவர்களிடத்தில் ஒப்பு வித்தேன்.

அன்றியும் அத்தீவின் நிலம் முழுமையும் என் உடைமை ஆகும்படி செய்து, நிலத்தைப் பங்கு பங்காகப் பிரித்து, அவர்களுக்கு விருப்பமான அளவு ஒதுக்கிக் கொடுத்து, எல்லாச் செயல்களையும் வரையறை செய்து, அத்தீவை விட்டு விலகுவது இல்லை என்று, அவர்களிடத்தில் வாக்குறுதி பெற்ற பின் அவ்விடத்தினின்று நீங்கினேன்.

**என் தீவுக்கு நான் அனுப்பியவை**

அங்கிருந்து புறப்பட்டு, பிரேஜில் நாட்டுக்குப்போய் இறங்கி, மரக்கலம் ஒன்று விலைக்கு வாங்கி, அத்தீவிற் குடியேறுவதற்குப் பின்னும் மிகுதியான மக்களைச் சேர்த்து, அதில் ஏற்றி அனுப்பினேன். மேலும் வேலை செய்வதற்கும் தாம் விரும்பியவர்க்கு மனைவியராதற்கும் ஏற்ற பெண்கள் ஏழு பேரையும், வேறு உணவுப் பொருள் முதலியவற்றையும் ஏற்றி அனுப்பினேன். ஆங்கிலேயருக்கு இங்கிலாந்தினின்று சில பெண்களையும், அவர்கள் தோட்டம் வளர்க்க முயல்வார்களானால், தேவைப்படும் விதை வகை, தொழிற் கருவி முதலியவைகளையும் அனுப்புவதாக உறுதிமொழி கூறினேன். பிறகு என் வார்த்தை தவறாமல் நிறைவேற்றினேன். அத்தீவிற் குடியேறிய மக்கள், நான் அவ்விடத்திற்போய், நானே அத்தீவின் உரிமையாளன் என்று வெளியிட்டு, அவர்களைப் பயிரிடும் குடிகளாகக் கருதி, நிலங்களைப் பங்கிட்டுக் கொடுத்த பின், மிகுந்த ஒழுங்கும் முயற்சியுடையவர்களாகவும் நடந்தார்கள். அன்றியும் பிரேஜில் நாட்டினின்று நான் அவர்களுக்கு ஐந்து பசுக்களும், ஐந்து செம்மறியாடுகளும் சில பன்றிகளும் அனுப்பினேன். பசுக்கள் ஐந்தில் மூன்று சினைப்பசுக்கள். மறு தடவை அத்தீவிற்கு நான் சென்றிருந்தபொழுது இவ்விலங்குகள் எண்ணிக்கையில் பெருகியிருந்தன.

இந்த வரலாறுகள் அனைத்தையும், கரிபியர் முந்நூறு பேர் அவ்விடத்திற்போய் இறங்கி, அவர்கள் தோட்டங்களைப் பாழாக்கியதும், குடிகள் அத்தனை பேருடன்

இரண்டு முறை நெருங்கிப் போர்புரிந்து, முதலில் தோல்வி யுற்று மூன்று பேர் கொல்லப்பட்டதும், இறுதியில் புயல் அடித்தபொழுது, பகைவர் ஓடங்கள் பழுதாகிப் போனதனுல், குடிகள் இறவாதிருந்த பகைவரைப் பட்டினியால் மெலிவித்தும், படைக்கலங்களால் கொன்றும், வெற்றி பெற்றதையும் பின்பு தங்கள் தோட்டத்தை உரிமையாக்கிக்கொண்டு நாளிதுவரையில் அத்தீவில் வாழ்வதும், ஆகிய எல்லாச் செய்திகளையும், அதன் பிறகு பத்து ஆண்டுவரையில் நான்செய்த புதிய பயணங்களில் நிகழ்ந்த வியத்தகு வரலாறுகளையும் இனி ஒரு வேளை இதற்குத் துணை நூலாய் எழுதுவேன்.

**இராபின்சன் குரூசோ வரலாறு**

**முற்றியது.**

